VIDHYA VINODHINI SERIES.

உ

சிவமயம்.

# தாயுமானசுவாமிகள்பாடல்.

இஃது,

சிலவித்வான்களைக்கொண்டு

எழுதுவித்தவுரையுடன்

தி - சம்பந்தமுதலியாரால்

மறைமலையடிகள் நூல்நிலையம்
MARAIMALAI ADIGAL
LIBRARY
MADRAS
சென்னை

சென்னை :

அமெரிக்கன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1891

Copy-right Reserved.

Title Page alone Printed at the Vaijayanti Press, Madras.—19—3—1904.

# விளம்பரம்.

அடியிற்குறித்த புத்தகங்கள் சென்னபட்டணம் பெத்துநாய்க்கன் பேட்டை, கொண்டலையர் வீதி 15-வது கதவிலக்கமுள்ள வீட்டில் இருக்கும் ப-வாசுதேவ முதலியார் மனைவியிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| தாயுமானசுவாமிகள் பாடலுரை ... ... ... | 3 | 4 | 0 |
| பட்டணத்துப்பிள்ளையார் பாடலுரை ... ... | 1 | 12 | 0 |
| தனிப்பாடலுரை முதற்பாகம் ... ... ... | 1 | 8 | 0 |
| பிள்ளைப்பெருமாளையங்கார் அஷ்டபிரபந்தவுரை ... | 1 | 4 | 0 |
| ஷை ஷை கிளேஸ்காகிதம் ... ... | 1 | 8 | 0 |
| கந்தரலங்காரவுரை ... ... ... | 0 | 3 | 0 |
| கயிலைபாதி காளத்திபாதி திருவந்தாதியுரை ... ... | 0 | 3 | 0 |
| திருக்கருவைக் கலித்துறையந்தாதியுரை ... ... | 0 | 3 | 0 |
| திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதியுரை ... ... | 0 | 3 | 0 |
| திருக்கருவை வெண்பாவந்தாதியுரை ... ... | 0 | 3 | 0 |
| ப. வாசுதேவ முதலியார் இலக்கணம் ... ... | 0 | 4 | 0 |
| ஷை நன்னூல் ... ... ... | 0 | 12 | 0 |

கடவுள் துணை.

# தாயுமானசுவாமிகளது

# சரித்திரம்.

புண்ணிய பூமியாகிய இப்பரத கண்டத்திலே, தென்னாடுகள் பலவற்றினுஞ் சிறந்து திவ்விய க்ஷேத்திரங்கள் நிறைந்து விளங்குவதாகிய சோழமண்டலத்திலே, வேதாரணியமென்னும் வடமொழிப் பெயரையுடைய திருமறைக்காடாகிய சிவஸ்தலத்திலே, சற்றேறக்குறைய-உ௦௦-வருஷங்களுக்கு முன் வேளாண் குலத்திலே, குருலிங்க சங்கம பத்தியிலே சிறந்தவராய், கேடிலியப்பிள்ளை யென்பவர் ஒருவர் இருந்தார். அவராலே அந்தச் சிவஸ்தலவிசாரணை நடத்தப்பட்டு வந்தது. அக்காலத்திலே திரிசிரபுரத்திலே செங்கோல் நடாத்திய விஜய ரகுநாத சொக்கலிங்க நாயகர் என்பவர் கேடிலியப்பப் பிள்ளையினுடைய நற்குணங்களையும் கணக்குவல்லமையையும் கேள்விப்பட்டு, அவரை வரவழைத்துப் பரீக்ஷித்து அவருக்குத் தம தரண்மனையில் பெரியசம்பிரதி யுத்தியோகம் கொடுத்தனர். அக்கேடிலியப்பப் பிள்ளையானவர் சந்ததி யில்லாதவராயிருந்த தமையனுருக்குத் தம்முடைய ஒரே புத்திரனாகிய சிவசிதம்பரப் பிள்ளையென்னும் குமாரனைக் கொடுத்துவிட் டிருந்ததினால் தமக்குச் சந்ததி யுண்டாக அருள் செய்யும்படிக்கு அந்தத் திரிசிரபுரத்தில் எழுந்தருளி யிராநின்ற தாயுமானேசுரரைத் தெரிசித்துக்கொண்டு வந்தனர். அக்கடவுளின் திருவருளினாலே ஓ ராண் பிள்ளை பிறந்தது. அதுகண்டு தந்தை மகிழ்ந்து, அக்கடவுளுக்குக் காணிக்கைமுதலானவை செலுத்தி, குமாரனுக்குத் தாயுமானவர் என்கின்ற அக்கடவுளது திருநாமத்தையே கொடுத்தனர். அந்தத்தாயுமானவர் தம் தகப்பன் மிகவும் மகிழும் வண்ணம் அவர் செய்யு முயற்சியளவிற்கு அதிகமாகக் கீர்வாணம் தமிழ், முதலிய கல்விப் பயிற்சியிலே சிறந்தவரானார். உண்மை, அன்பு, பொறுமை, அடக்கம், இரக்கம் இவை முதலிய நற்குணங்களெல்லாம் அவரோடு கூடவே வளர்ந்தன. ஓர் அஞ்ஞானியினது மனமானது நிலையில்லாத செல்வப்பொருளை எப்படி விரும்புமோ அப்படியே இவரது மனமானது தத்துவப் பொருளையே விரும்பிநின்றது. அப்படி யிருக்கையில் திருமூலநாயனார் மரபிலே எழுந்தருளிய மௌனதேசிகர் தாயுமானவரைச் சந்தித்து, அவரது அதிதீவிர பக்குவத்தைக்கண்டு, வேதாகமங்களின் முடிவான தத்துவப்பொருளை உபதேசித்தருளினார். அதுமுதலாகத் தாயுமானவர் தமது ஞானாசாரியரிடத்தே மிகுந்த பத்தியுடையவராய் அவ் வுபதேசப்

பொருளைச் சிந்தித்துத் தெளிந்து தினந்தோறும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே நிஷ்டை செய்துகொண்டு வந்தனர். சிலகாலஞ் சென்றபின்பு கேடிலியப்பப்பிள்ளை தேகவியோக மடைந்தனர். அதனாலே தாயுமானவர் தந்தையினது லௌகிகத்தொழிலை தாம் பார்க்க அதில் விருப்பமில்லாதவராக இருந்தும் அரசனது வேண்டுகோளால் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. அரசன் அவரை ஞானவானென்று முதலிலே யறிந்திலனாயினும் கேடிலியப்பப் பிள்ளையினும் இவர் யோக்கியரென்று நன்குமதித்து மிகவுஞ் சிறப்புச்செய்து வைத்திருந்தனன். ஆயினும் கழைக் கூத்தனுடைய கருத்து உடற்காப்பிலும் அவனது செய்கை கூத்திலும் எப்படி வைக்கப்பட்டிருக்குமோ அப்படியே தாயுமானவரது கருத்துச் சிவத்திலும் அவரது செய்கை லௌகிகத்திலும் வைக்கப்பட் டிருந்தன. இப்படியே சிலநாட்கள் கழிந்தன. மேல் விவேகியாகிய அரசன் அவரிடத்தே விளங்கிய அபூர்வமான சில செய்கைகளைக் கண்டவுடனே அச்சமும் அன்பும் உடையவனாய், அவரை அழைப்பித்து உயர்ந்ததோர் ஆசனத்தின்மேல் இருந்தருளச்செய்து, "சுவாமி! அடியேன் இதுவரையினும் உமது மகிமையைக் கண்டறிய மாட்டாதவனாய் உமக்கு ஊழியம் செய்யத்தக்கவனாகிய நான் உம்மை ஒன்றுக்கும் பற்றாத எனது ஊழியத்திலே வைத்திருந்த பெருங் குற்றத்தைக் கிருபா மூர்த்தியாகிய தேவரீர் பொறுத்தருளி, இன்றுமுதலாக அடியேனால் ஆகவேண்டியவற்றைச் செய்வித்துக்கொண்டு நிஷ்டைக்குக் குறைவுபடாம லிருந்தருளலாம்" என்று வேண்டிக்கொண்டனன். அதுகேட்டுத் திருவுள மகிழ்ந்து தாயுமானவர் அன்று முதலாக அலைவற்ற ஞான யோகத்திலே அறிவைச் செலுத்திச் சிவபெருமானையும் ஞானாசிரியரையும் அற்புத சின்மய மதுரமான தமிழ்ச் செம்பாடல்களைப் பாடித் துதிசெய்து வந்தனர். இப்படி யிருக்கையில் அரசன் சிவபதமடைந்தனன். அவ்வரசன் மனைவி தாயுமானவரது திருமேனியின் பொலிவைப் பலரால் பலமுறை கேள்விப்பட்டு, அவரை அழைப்பித்துக் கண் களிகூர நோக்கி, கேள்விப்பட்ட வளவினும் அதிகமாய் விளங்கக் கண்டு உளமருண்டு, அவரைத் தன்னரசாட்சிக்குத் தலைவராக்கவும், தன்னால் விரும்பப்பட்ட தகாச் செய்கைக்கு உடன்படுத்தவும், தான்கொண்ட கருத்தை அவருக்குக் குறிப்பித்தாள். அக்கருத்தை யறிந்த தாயுமானவர் உடனே ஓருபாய வழியினாலே அங்கிருந்து தம்மை விடுவித்துக்கொண்டு, அவள் அரசாட்சியி னெல்லையைக் கடந்து, இராமநாதபுரத்துக் கெழுந்தருளினர். இது செய்தி சிவசிதம்பரப்பிள்ளையின் செவியை அடைந்ததனாலே அவரும் தன் சிறியதாய் குமாரராகிய அருளையப்பிள்ளையும் தேடிக்கண்டுபிடித்துச் சந்ததி விளங்கவேண்டு மென்னும் கருத்துக்கொண்டு திருக்கலியாணஞ் செய்யும்படி முயற்சி செய்தார்கள். தாயுமானசுவாமிகளுக்கு அது காரியத்திலே சிறிதும் திருவுளமில்லா திருந்தும் தமையனாரது வேண்டுத

வின் மிகுதியினாலே உடன் பட்டனர். உடனே பத்தினியார் ஓராண்பிள்ளையைப்பெற்று வைத்துச் சிவபதம் அடைந்தார். அந்தப்பிள்ளைக்குக் கனகசபாபதிப் பிள்ளையென்று பெயரிடப்பட்டது. அது முதலாகத் தாயுமானசுவாமிகள் கௌபீனத்தோடு பரிசுத்த சிவஸ்தலந்தோறும் சஞ்சரித்துக்கொண்டு, இவ்வுலகத்திலுள்ள மனிதர்களெல்லாம் மெய்ஞ்ஞான ஒளியைப்பெற்று அஞ்ஞான விருளினின்று நீங்கி உய்யும்பொருட்டுப் பலவகைப்பட்ட அற்புதமான பாடல்களைத் திருவாய் மலர்ந்தருளினார். அருளையரென்பவரும் அவரிடத்தே தத்துவோபதேசம் பெற்று அவரைவிட்டு நீங்காமல் பணிவிடை செய்துகொண்டு வந்தனர்.

தாயுமான சுவாமிகள் அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபமாகிய சிவத்திலே கலந்தபின்பு அருளையசுவாமிகள் அகவற்பாவினாலே குருவைத் துதித்துச் சிவயோகத்திலே யிருந்து தமக்குப்பின் பக்குவப்பட்டு வரும் அடியார்களுக்கு அனுக்கிரகஞ் செய்யும்விதம் மேற்படி கனகசபாபதிப் பிள்ளைக்கு அபிஷேகம் செய்தருளினார்.

இக்குரு பரம்பரையில் தஞ்சைமாநகரத்துக்குக் கீழ்பால் அன்னப்பன்பேட்டையிலுள்ள மடத்திலிருந்த அம்பலவாண சுவாமிகளுடைய அடியார் கூட்டத்திலே ஒருவராகியும் அந்த ஆதீனத்துக்கு உரியவராகியும் உள்ள எடுத்துக்கட்டி அருணசல சுவாமிக ளிடத்திலிருந்த ஆதீனபுஸ்தகத்தையும் மற்றும் சில புஸ்தகங்களையும் அழைப்பித்து ஒப்பிட்டு இப்புத்தகத்திலுள்ள பாடல்கள் ஆதியில் அச்சிடப்பட்டனவாய்த் தெரியவருகின்றது.

தாயுமானசுவாமிகள் சரித்திரம்

முற்றிற்று.

சிவமயம்.

# நூலினுட்பிரிவு.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

தாயுமான சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு

மூலமும் உரையும்.

---

## திருவருள்விலாசப் பரசிவவணக்கம்.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

---

1. அங்கிங் கெனாதபடி யெங்கும்ப்ர காசமா
   யானந்த பூர்த்தியாகி
   அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
   யகிலாண்ட கோடியெல்லாம்
   தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
   தழைத்ததெது மனவாக்கினில்
   தட்டாம லின்றதெது சமயகோ டிகளெலாந்
   தந்தெய்வ மெந்தெய்வமென்
   றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
   வெங்கணும் பெருவழக்காய்
   யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
   யென்றைக்கு முள்ளதெதுமேல்
   கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
   கருத்திற் கிசைந்ததுவே
   கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
   கருதியஞ் சலிசெய்குவாம்.

**இதன்பொருள்:** அங்கு இங்கு என்றாதபடி - அவ்விடத்துள்ளது இவ்விடத்துள்ளது என்று சுட்டிச்சொல்லாதவண்ணம், எங்கும் ப்ரகாசமாய்-எவ்விடத்தும் விளங்குகின்றதாகி, ஆனந்தபூர்த்தியாகி-சுகநிறையுள்ளதாகி, அருளொடு நிறைந்தது எது - திருவருட் சத்தியோடு வியாபித்திருப்பது எந்த வஸ்து, தன் அருள் வெளிக்குள்ளே-தனது கருணைவடிவாகிய ஆகாயத்திலே,

அகிலாண்டகோடி - அனைத்துலகும், எல்லாம் - அவற்றிலுள்ள சராசரங்களும், தங்கும்படிக்கு-நிலைத்திருக்கும்படி, இச்சைவைத்து - விருப்பம் வைத்து, உயிர்க்கு உயிராய் தழைத்தது எது - உயிருக் குயிராய்ச் செழித்திருப்பது எந்த வஸ்து, மன வாக்கினில் தட்டாமல் நின்றது எது - மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாமல் நின்றது எந்த வஸ்து, சமய கோடிகள் எல்லாம் - சமயத்தொகுதிகள் யாவும், தம்தெய்வம் எம்தெய்வம் என்று - தங்கள் தெய்வம் எங்கள் தெய்வம் என்று வேதாகம புராணங்களைப் பிரமாணங்களாக எடுத்துக்காட்டி, எங்கும் தொடர்ந்து - எவ்விடத்தும் விடாதுபற்றி, எதிர் வழக்கு இடவும் - ஒன்றுக்கொன்று நேர்நின்று வாதிக்கவும், நின்றது எது - இடமாய்நின்றது எந்தவஸ்து, எங்கணும் பெருவழக்காய் - எவ்விடத்தும் அறுதியிடக் கூடாத பெருவழக்காகி, யாதினும் வல்ல ஒரு சித்து ஆகி - எதினும் வலிய ஒப்பற்ற ஞானவடிவாகி, இன்பம் ஆய் - சுகவடிவாகி, என்றைக்கும் உள்ளது எது - எந்நாளும் ஒரு தன்மையாய் உள்ளதாகிய சத்து எந்தவஸ்து, மேல் - பின்னும், கங்குல் பகல் அற நின்ற - இராப்பகல் இல்லாது நின்ற, எல்லை உள்ளது எது - இடத்திலுள்ளது எந்த வஸ்து, அது - அந்த வஸ்துவே, கருத்திற்கு இசைந்தது - எமது கருத்திக் கிணங்கினது, (ஆதலால்) அதுவே - அந்த வஸ்துவையே, கண்டன எல்லாம் (ஆகவும்) - பார்த்த பொருள்களெல்லாமாகவும், மோன வுருவெளியதாகவும் - மோன வுருவெளிப்பாடாகவும், கருதி - நினைத்து, அஞ்சலி செய்குவாம் - (யாம்) கை கூப்பி வணங்குவோம் என்றவாறு.

சச்சிதானந்தஇலக்கணமுடைய இறைவனை யாம் வணங்குவோமென்பது கருத்து. இதில் அங்கிங்கெனாதபடி என்று சத்தினையும், எங்கும்ப்ரகாசமாய் என்று சித்தினையும், ஆநந்த பூர்த்தியாகி என்று ஆநந்தத்தையும் கூறி, அந்தச் சச்சிதாநந்த சொரூபமுடைய பரம்பொருளே தமக்கு எவ்விடத்தும் இடையூறின்றித் தோன்றுதலால், ஒரு சித்தாகி இன்பமாய் என்றைக்கு முள்ளது என அநுவதித்தார். அநுவதித்தல் - முற்கூறிய ஒன்றைப் பயன்தருதல் கருதிப் பின்னுஞ்சொல்லல்.

மனம் வாக்கு என்பன சடமாதலால் அவை சித்தாகிய சிவத்தையறியா என்பதுகருதி, 'மனவாக்கினிற்றட்டாமனின்றதெது' என்றார். இதுகருதியே 'மனுதிதனக்கெய்தாதவொருவ னெங்கு நிறையிறைவன்' என்றார், பிறரும்.

இறைவன் சச்சிதானந்த இலக்கண முடைமையை, "பூவண்ணம் பூவின்மணம்போல" என்னும் திருவிளையாடற்புராணச்செய்யுளில் 'மெய்ப்போதவின்பமாவண்ண மெய்கொண்டவன்' என்பதனாலும் அறிக. அருள் என்றது சத்தியை. இக்கருத்தேபற்றி 'அருளது சத்தியாகும் அரன்றனக் கருளையின்றித் தெருள்சிவமில்லை யந்தச் சிவமின்றிச் சத்தியில்லை' என்றார் பிறரும். சத்தென்றது உண்மை, சித்தென்றது அறிவு, ஆனந்தமென்றது

சுகம். கங்குல்பக லறநின்ற வெல்லையுள தென்பதனை 'இராப்பக லற்றவிடத்தேயிருக்கை யெளிதல்ல' என்பதனுற்காண்க. இராப்பகலற்றவிடத்தினை, வடநூலார் சதோதயமென்பார். இராப்பகலென்றது சகல கேவலங்களை. சகலம் நினைப்பு, கேவலம் மறப்பு. கண்டனவெலா மோனவுரு வெளி என்றது 'பார்த்த விடமெல்லாம் பரமன்காண்' எனவும், 'எங்குஞ் சிவமொழிய இல்லை' எனவும் கூறுவதனுற்காண்க. மோன வுருவெளியதாகவுமென்றது கருவிகள் முப்பத்தாறனையுங் கடந்து நின்ற தோர் நிலைமையை. இதனை 'சும்மாவிரு சொல்லறவென்றலுமே, அம்மாபொருளொன்று மறிந்திலனே' எனவும், 'சும்மாவிருக்கச் சுகமுதயமாகுமே' எனவும் கூறிய திருவாக்குகளானுமுணர்க.

**2.** ஊரனந் தம்பெற்ற பேரனந்தஞ் சுற்று
முறவனந் தம்வினையினல்
உடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
தோவனந் தம்பெற்றபேர்
சீரனந் தஞ்சொர்க்க நரகமு மனந்தநற்
றெய்வமு மனந்தபேதம்
திகழ்கின்ற சமயமு மனந்தமத ஞன்ஞான
சிற்சத்தி யாலுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலைநங்
கடவுளைத் துரியவடிவைப்
பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பைப்
பேசருமனந்தபத ஞானவா னந்தமாம்
பெரியபொருளைப்பணிகுவாம்.

(இ-ள்.) ஊர் அநந்தம் - (பிறந்த) ஊர்களநேகம், பெற்றபேர் அநந்தம் - அவ்வப் பிறவிகளிலடைந்த நாமங்க ளநேகம், சுற்றும் உறவு அநந்தம் - சூழ்ந்துவருகின்ற உறவு அநேகம், வினையினல் - (தத்தம்) இருவினை வேறுபாட்டால் (உண்டாகிற), உடல் அநந்தம் - சரீரங்க ளநேகம், செய்யும் வினை அநந்தம் - செய்தொழில்க ளநேகம், கருத்தோ அநந்தம் - நினைப்போ அநேகம், பெற்ற பேர் சீர் அநந்தம் - அடைந்த பெருஞ் சிறப்புகள் அநேகம், சொர்க்க நரகமும் அநந்தம் - சொர்க்க நரகங்களு மநேகம், நல் தெய்வமும் அநந்தபேதம்-சிறந்த தெய்வங்களும் அநேகவகை, திகழ்கின்ற சமயமும் அநந்தம் - விளங்காநின்ற சமயங்களும் அநேகம், அதனல் - ஆதலால், ஞான சிற்சத்தியால் உணர்ந்து - ஞான சிற்சத்தியின் அருளா லறிந்துகொண்டு, அநந்தங்கோடி கார் வருஷித்தது என - அநேக கோடி மேகங்கள் ஒருசேர

மழையைப் பொழிந்ததுபோல, அன்பர் கண்ணும் விண்ணும் தேக்க - அடியார்களுடைய கண்ணும் இதயாகாயமும் நிறையும்படி, கருது அரிய - நினைத்தல் அருமையாகிய, ஆநந்த மழைபொழியும் முகிலை - இன்ப மழையைப் பொழிகின்ற மேகத்தை, நம் கடவுளை - நமது தெய்வத்தை, துரிய வடிவை - துரியருபத்தை, மறை - வேதங்கள், அநந்தம் பேர் பேசி சொல்லும்-அநேகம்பேர்களைச் சொல்லிப் புகழ்கின்ற, பெரிய மௌனத்தின்வைப்பை - பெரிதாகிய மௌனநிலையென்னும் அஞ்சனத்தால் வெளிப்படுகின்ற புதையலை, பேசு அரும்-சொல்லுதற்கரிய, அநந்த பதம் - முடிவற்றபதமாகிய, ஞான ஆநந்தம் ஆம் - ஞானாநந்தமயமாகிய, பெரியபொருளை - பெரியவஸ்துவை, பணிகுவாம் - (யாம்) வணங்குவோம், எ - று.

விண் என்பது பரவெளியெனினுமாம். ஒருவன் அஞ்சனத்தால் மறைந்துகிடக்கும் நிதியை யறிவதுபோல, மோனநிலையைக்கொண்டு உணரப்படுதலால், பெரிய மௌனத்தின் வைப்பை என்றார். காரணந்தங்கோடி வருவித்தது என்பது பன்மையி னொருமை வந்த பால் வழுவமைதி; இரண்டு கண்ணுஞ் சிவந்தது என்புழிப்போல. ஞானசிற்சத்தியா லுணர்ந்து என்றார்; 'தாயினைச்சென்று பின்தாதையைக்கூடி' எனப் பிறருங் கூறுதலானென்க. வினைப் போகமே ஒரு தேகமென்றாராகலின் வினையாற் பல வுடலெடுத்தலும், அவ்வுட லெடுத்தற் கிடமும், அவ்வுடற்குப் பெயரும் பலவாகலும்; அவ்வுடம்பினை நோக்கி வந்தியையும் சுற்றமும் வந்து சேர்வது பிராரத்த வினையினால் ஆதலின், ஊரனந்தம் பெற்ற பேரனந்தஞ்சுற்று முறவனந்தமென்றும்; அவ்வுடம்பொடு கூடி நின்றவிடத்துச் செய்யும் வினைகள் பலவாதலால், 'செயும் வினை யனந்தமென்றும்; அவ்வினை செய்யக் கருத்துகளும் பலவாதலின் கருத்தோ வனந்தம் என்றும்; அவ்வுடலெடுக்குந்தோறும் பெறும் புகழ்களும் பலவாதலால் பெற்றபேர் சீரனந்தமென்றும்; அவர்செய்யு மிருவினைக் கீடாய்வருஞ் சொர்க்க நரக விசேடங்கள் பலவாதலின் சொர்க்க நரகமு மனந்தமென்றும்; அவர்கருதி வழிபடுந் தெய்வம் பலவாதலின் நற்றெய்வமு மனந்த பேதமென்றும்; அத்தெய்வங்களைப்பற்றிய சமயமும் பலவாதலின் திகழ்கின்ற சமயமு மனந்தமென்றும் கூறினார். இவைகளையும் இறைவனது திருவருட் சத்தியாலுணரவேண்டு மென்பார், ஞான சிற்சத்தியா லுணர்ந்து என்றார். சமயங்களனேகம் என்றது அகச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், புறப்புறச்சமயமென்பனவாம். சொர்க்க நரகபேதம் பல என்பதனைச் சிவதருமோத்தரத்தில் சொர்க்க நரக விசேட வியலிற்காண்க. வேதம் பலப்படப் பக்குவத்திற்கிணங்கக் கடவுணிலை கூறுதலினால் பேரனந்தம்பேசி மறையனந்தஞ் சொலும் பெரிய மௌனத்தின் வைப்பென்றார். துரியமென்றது தியானத்தசைவற நிற்பதாகிய சிவயோக சமாதியை.

3. அத்துவித வத்துவைச் சொப்ரகா சத்தனியை
அருமறைகண் முரசறையவே
அறிவினுக் கறிவாகி யானந்த மயமான
ஆதியை யநாதியேக
தத்துவ சொரூபத்தை மதசம் மதம்பெருச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வ்யோமநிலையை
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்தமான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலிசெய்வாம்.

இ-ள். அத்துவித வத்துவை - இரண்டற்றபொருளை, சொப்ரகாசத் தனியை - தானேயாய்ப் பிரகாசித்தலையுடைய தனிமைப்பொருளை, அருமறைகள் முரசு அறைய - அருமையாகிய வேதங்கள் முரசறைந்து நிற்க, அறிவினுக்கு அறிவு ஆகி - உணர்வுக்குணர்வாகி, ஆநந்தமயமான - ஆநந்தரூபமான, ஆதியை - முதற்பொருளை, அநாதி - பழையதாகிய, ஏகதத்துவ சொரூபத்தை - ஒரு பொருட்டன்மையையுடைய வடிவை, மத சம்மதம் பெரு - மதசம்மத மடையாமல், சாலம்ப ரகிதமான - சாலம்ப நீக்கமான, சாசுவத புட்கல நிராலம்ப ஆலம்ப சாந்தபத வ்யோம நிலையை - சாசுவதம், புட்கலம், நிராலம்பம், ஆலம்பம், சாந்தபதம் என்னும் பெயர்களுக்குரிய பரம வ்யோம நிலையை, நித்த நிர்மல சகித - அழியாத மல நீக்கங்களோடு கூடிய, நிஷ்ப்ரபஞ்சப்பொருளை - நிஷ்ப்ரபஞ்ச வஸ்துவை, நிர்விஷய சுத்தமான - விஷயரகிதமாகிய சுத்தமமைந்த, நிர்விகாரத்தை - விகார மின்மையை, தடத்தம் ஆய் நின்று ஒளிர் - நேராகி நிலைபெற்று விளங்குகின்ற, நிரஞ்சன நிராமயத்தை - நிரஞ்சன நிராமயங்கள் உடையதை, சித்தம் அறியாதபடி - கருத்தறியாதவகை, சித்தத்தில் நின்று இலகு - கருத்தில் நின்று பிரகாசிக்கின்ற, திவ்ய தேசோமயத்தை - தெய்விகமான தேஜோராசியை, சிற்பர வெளிக்குள் வளர் - மேலான சிதாகாயத்தில் விருத்தியடைகின்ற, தற்பரமதான - தனக்குப் பரமாகிய, பர தேவதையை - மேலான தெய்வத்தை, அஞ்சலி செய்வாம் - (யாம்) கைகூப்பி வணங்குவோம். எ-று.

அத்துவிதம் - இரண்டன்மை. இரண்டின்மை என்பாருமுளர். சாலம்பம் - பற்றுக்கோடு, சாசுவதம் - கேடின்மை, புஷ்கலம் - நிறைவு, நிராலம்பம் - ஆதாரமின்மை, ஆலம்பம் - ஆதாரம், சாந்தபதம் - ஒடுக்கநிலை, வியோமம் - ஆகாயம், நிஷ்ப்ரபஞ்சம் - பிரபஞ்ச நீக்கம், நிரஞ்சனம்-தோஷமின்மை, நிராமயம் - நோயின்மை, தற்பரமென்பதில் தன் என்றது ஆன்மாவை, சாலம்ப வாலம்ப முதலியன சிவயோகமுறை.

"ஆரணங்கள் முடிந்தபதத் தானந்த வெளி" என்பவாகலின், சிற்பர வெளிக்குள்வளர் தேவதையை எனக் கூறினர்; உமை இறைவனோடு அபேதமாய் நீக்கமின்றி நிற்றனோக்கி என்க. இறைவன் காட்டுஞ் சித்தும், ஆன்மா காணுஞ் சித்துமாதலால் 'அறிவினுக் கறிவாகி' என்றார். இதனை 'அறிவினுலறிந்து' என்றதனு லுணர்க.

அத்து விதவஸ்துவென்றது - அருமறைகளொன்றென்னுது' அத்துவிதமென்றதுநோக்கி. சிவஞானமுனிவரும் 'அது, வேதங்கள் ஏகமென்னுது பிரமம் அத்துவிதமென்றது பிரமம் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்குமென்னும் பொருட்டாதலால், அஃது ஏகமென்பதனோடு முரணுமாறில்லை' யென்பர்.

## பரிபூரணானந்தம்.

4\. வாசாக யிங்கரிய மன்றியொரு சாதன
மனோவாயு நிற்கும்வண்ணம்
வாலாய மாகவும் பழகியறி யேன்றுறவு
மார்க்கத்தி னிச்சைபோல
நேசானு சாரியாய் விவகரிப் பேனந்த
நினைவையு மறந்தபோது
சித்திரைகொள் வேன்றேக நீங்குமென வெண்ணிலோ
நெஞ்சந் துடித்தயருவேன்
பேசாத வானந்த நிட்டைக்கு மறிவிலாப்
பேதைக்கும் வெகுதூரமே
பேய்க்குண மறிந்திந்த நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்ப நிட்டையருள்வாய்
பாசா டவிக்குளே செல்லா தவர்க்கருள்
பழுத்தொழுகு தேவதருவே
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

இ-ள். வாசாகயிங்கரியம் அன்றி - வாசிகமாகிய கயிங்கரியத்தில் அல்லது, மனோவாயுநிற்கும் வண்ணம்-மனமும் வாயுவும் அலைவறநிற்கும் வகை,

ஒருசாதநம் - ஒரு பழக்கத்தை, வாலாயமாகவும் பழகி அறியேன் - தடையறப்பயின்று மறியேன், துறவுமார்க்கத்தின் இச்சைபோல - துறவுநெறிக்கண் விருப்பமுடைமைபோல, நேசாநுசாரியாய் விவகரிப்பேன் - அடியார்க் கநுசரணையுடையானுய் விவகரித்து நிற்பேன், அந்த நினைவையும் மறந்தபோது-அந்த நினைப்பையும் மறந்தகாலத்தில், நித்திரைகொள்வேன்-தூங்குவேன், தேகம் நீங்கும் என எண்ணிலோ - சரீரம் நீங்குமென்று நினைத்தாலோ, நெஞ்சம் துடித்து அயருவேன் - மனம் பதைத்து வாடுவேன், பேசாத ஆநந்தம் - சொல்லக் கூடாத இன்பத்தைத் தருகின்ற, நிட்டைக்கும் - நிஷ்டைக்கும், அறிவு இல்லா பேதைக்கும் - சேதனப் பொருளிது அசேதனப் பொருளிது என்னும் விவேகமில்லாத பேதையேற்கும், வெகுதூரமே - நெடுந்தூரமே, (ஆயினும்) பேய் குணம் அறிந்து - பேதைமைக் குணத்தை யறிந்து, இந்த நாய்க்கும் - இந்த நாயினேனுக்கும், ஒருவழி - ஒப்பற்ற நெறியாகிய, பெரிய பேரின்ப நிட்டை யருள்வாய் - மிகப் பெரிய ஆநந்தத்தைத் தருதற்குரிய சகச நிஷ்டையை அருள் செய்வாய், பாசாடவிக்குளே செல்லாதவர்க்கு - ஆசையாகிய காட்டில் பிரவேசியாதவர்க்கு, அருள் பழுத்து ஒழுகு - அருட்கனி பழுத்து (ஆநந்தத்தேன்) ஒழுகப்பெற்ற, தேவதருவே - கற்பகத்தருவே, பார்க்கும் இடம் எங்கும் - நோக்கு மிடந்தோறும், ஒரு நீக்கம் அற நிறைகின்ற - சிறிதும் நீக்கமில்லாமல் நிறைந்து நிற்கின்ற, பரிபூரணனந்தமே - பரிபூரண சுகமே. எ-று.

வாசிக கைங்கர்யம் - சொன்மாலை சூட்டல். மநோ வாயு நிற்கும் வண்ணம் ஒரு சாதனம் என்றது - இயமம், நியமம், ஆதநம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எண்வகை யுறுப்புகளோடு கூடிய யோகாப்யாசத்தை. இதன் விரிவெல்லாம் யோகநூல்களில் காண்க. இவ்வாறே 'சார்புணர்ந்துசார்புகெட ஒழுகின்' என்னும் குறளுக்குப் பரிமேலழகர் கூறுவதனுலு முணர்க. பழுத்து என்றமையால் அருள்கனியாக்கி யுரைக்கப்பட்டது. ஒழுகு என்றமையால் அவ்வொழுக்குக்கு வினைமுதலாகிய தேன்வருவித் துரைக்கப்பட்டது. மனோவாயுவென்றது 'மனமனமெங்குண்டு வாயுவங்குண்டு' என்பவாதலினென்க. காற்றினமிசமே மனமாகலின் மனோவாயுவென்றார். துறவென்பது புறமாகிய செல்வத்தின்கண்ணும், அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாயபற்றினை அவற்றது நிலையாமை நோக்கிவிடுதலே. இதனையே கருதி 'நிலையாமை நோய் மூப்புச்சாக்காடென்றெண்ணித் - தலையாயர் தங்கருமஞ் செய்வார்' என்றார் பிறரும்.

5. தெரிவாக வூர்வன நடப்பன பறப்பன
செயற்கொண் டிருப்பனமுதல்
தேகங்க ளத்தனையு மோகங்கொள் பௌதிகஞ்
சென்மித்த வாங்கிறக்கும்

விரிவாய பூதங்க ளொன்ருெடொன் ருயழியு
 மேற்கொண்ட சேடமதுவே
வெறுவெளி நிராலம்ப நிறைசூன்ய முபசாந்த
 வேதவே தாந்தஞானம்
பிரியாத பேரொளி பிறக்கின்ற வருளருட்
 பெற்ருேர்கள் பெற்றபெருமை
பிறவாமை யென்றைக்கு மிறவாமை யாய்வந்து
 பேசாமை யாகுமெனவே
பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
 பரிபாக காலமலவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணனந்தமே.

இ-ள். தெரிவாக-தெளிவோடுகூடி, ஊர்வன-ஊர்வனவும், நடப்பன-நடப்பனவும், பறப்பன-பறப்பனவும், செயல்கொண்டு இருப்பன-செய்கையைக்கொண்டிருப்பனவும், முதல்-முதலாகிய, தேகங்கள் அத்தனையும்-எல்லாச்சரீரங்களும், மோகங்கொள் பௌதிகம்-மயக்கத்தைச் செய்விக்கின்ற பௌதிகமென்றுசொல்லப்பட்டு,செனமித்தஆங்குஇறக்கும்-உற்பத்தியானதுபோலவே நாசத்தையடையும், விரிவாய பூதங்கள்-பரவியிருக்கிற ஐம்பெரும் பூதங்கள், ஒன்ருெடு ஒன்ருய் அழியும்-ஒன்றுக்குள் ஒன்ருய் ஒடுங்கும், மேற்கொண்ட சேடம் அதுவே-அவற்றுக்கு மேற்பட்டிருக்கிற அந்தவஸ்துவே, வெறுவெளி (என)-வெட்டவெளி யெனவும், நிராலம்பம் (என)-ஆதாரமற்றதெனவும், நிறை சூன்யம் (என)-பெரும்பாழெனவும், உபசாந்தம்-உபசாந்தத்தை யுண்டாக்குகிற, வேதவேதாந்த ஞானம் (என)-வேதவேதாந்தங்கள் துணிந்து சொல்லும் ஞானமெனவும், பிரியாதபேரொளி பிறக்கின்ற அருள் (என)-நீங்காதபெருஞ்சோதியில் உதிக்கின்ற அருளெனவும், அருள் பெற்ருேர்கள் பெற்ற பெருமை (என) அருளைப்பெற்ருேர்கள்பெற்ற பெருமையெனவும், பிறவாமை என்றைக்கும் இறவாமையாய் வந்து பேசாமை ஆகும் என-பிறப்பின்மையும் என்றும் இறப்பின்மையுமாய் வந்து மோந நிலையுமாகுமெனவும், எனக்கு-அடியேனுக்கு, அறிவிக்க-அறிவுறுத்தற்பொருட்டு, நீ பரிவாய் வந்தது-நீ அன்பாக எழுந்தருளியதற்குக்காரணம், பரிபாக காலம் அலவோ-என் பரிபக்குவகால மல்லவோ, பார்க்குமிடம். எ-று.

ஊர்வன-எறும்பு முதலியன. நடப்பன-விலங்குமுதலியன. பறப்பன-கருடன் முதலியன. இருப்பன-மரமுதலியன. இவற்றிற்குக் காற்றினுல் அசைதல் முதலியவை செயலாதலால், செயற்கொண்டிருப்பன என்ருர். பௌதிகம் பூதங்களாலாக்கப்பட்டது.

தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன செயற்கொண் டிருப்பனமுதற் றேகங்கள் என்றது வினைவயத்தாற் பிறக்கும் பிறப்பேழென விளக்கற் பொருட் டென்க. இதனை 'ஊர்வ பதினொன்று மொன்பது மானுடம், நீர் பறவை நாற்கா லோர்பப்பத்தாம் - சீரிய, பந்தமாந்தேவர் பதினாலயன் படைத்த, அந்தமில் சீர்த்தாவரநாலைந்து' என்னுஞ் செய்யுளானுமுணர்க.

தோன்றி நின்றழியும் எப்பொருளும் பூதபௌதிகமாதலானும் அவை தோன்றியவழியே மீட்டு மொடுங்கலானும் 'தெரிவாக வூர்வன நடப்பன பறப்பன செயற்கொண்டிருப்பனமுதற் றேகங்க ளத்தனையு மோகங்கொள் பௌதிகஞ் சென்மித்த வாங்கிறக்கும்' என்றும், அங்ஙனந் தோன்றி நின்றழியும் பூதங்களைக் காரியப்படுத்துமவன் கருத்தா ஒருவனாதலின் 'மேற்கொண்ட சேடமதுவே' என்றும்,அவனையறிவது திருவருண்ஞானத்தாலாவதே என அதன் இலக்கணந்தோன்ற, 'வெறுவெளி நிராலம்ப நிறைசூன்ய மூபசாந்த வேதவேதாந்தஞானம்' என்றும், அதுவும் அவனருளாற் பெறுவதாதலின் 'பிரியாத பேரருள்' என்றும், அதைப் பெற்றோர் இரும்புண்ட நீரிற் றிரும்பாத முத்தியடைவாராதலின் 'பெற்றோர்கள் பெற்றபெருமை பிறவாமை' என்றும், அது மானைக்காட்டி மான் பிடிப்பார்போல் மான் இடனாக வடிவுகொள்ளாது மானிடனாக வடிவங் கொண்டுவந்து காட்டியது என்பரிபாக நோக்கி என்பார் 'எனக்கு நீ யறிவிக்கவந்ததே பரிபாக காலமலவோ' என்றுங் கூறினார். பேசாமையென்றது அனுபூதிநிலையை. அற்றாகலின் 'பேசாவனுபூதி பிறந்ததுவே' என்றார் பிறரும்.

6. ஆராயும் வேளையிற் பிரமாதி யானாலு
   மையவொரு செயலுமில்லை
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
   ராமென விருந்தபேரும்
நேராக வொருகோப மொருவேளை வரவந்த
   நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்வசன
   நிர்வாக ரென்றபேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
   புலம்புவார் சிவராத்திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரு மறிதுயிற்
   போலே யிருந்துதுயில்வார்
பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே
   பார்க்கினின் செயலல்லவோ

பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

இ - ள். ஆராயும் வேளையில் - ஆராய்ந்து பார்க்கும் சமயத்தில், பிரமாதி ஆனாலும் - பிரமன் முதலானவர்களுக்காயினும், ஐய - ஐயனே, ஒரு செயலும் இல்லை - ஒருசெய்கையும் இல்லை, அமைதியொடு - நிறைவொடு பேசாத பெருமைபெறு - பேசாமையாகிய பெருமையை யடைந்த, குணசந்த்ரர் ஆம் என இருந்தபேரும் - குணத்தில் சந்திரனை ஒத்தவர் இவரென்று பிறர் சொல்லும்படியாய் இருந்தவர்களும், நேராக - செவ்வையாக, ஒரு வேளை - ஒரு சமயத்தில், ஒரு கோபம் வர - ஒரு கோபம் வந்தால், அந்த நிறைவு ஒன்றும் இல்லாமலே - அந்த அமைவு சிறிது மின்றியே, நெட்டுயிர்த்து - பெருமூச்செறிந்து, தட்டு அழிந்து உளறுவார் - தடைகெட்டுக் குழறுவார்கள், வசன நிர்வாகர் என்றபேரும் - வார்த்தை சொல்வதில் நிர்வாகராகிச் சமர்த்தர்கள் என்று சொல்லப்பட்டவர்களும், பூராயமாய் - ஆத்யந்தமாய், ஒன்று பேசுமிடம்-ஒரு விஷயத்தைப் பேசுமிடத்தில், ஒன்றை புலம்புவார்-வேறொருவிஷயத்தைப் புலம்பா நிற்பர்,சிவராத்திரிபோது-சிவராத்திரி காலத்தில், துயிலோம் என்ற விரதியரும் - உறங்கோம் என்று சொல்லுகிற சிவராத்திரி விரதம் பூண்டவரும், அறிதுயில்போல இருந்து துயில்வார் - அறிவோடுகூடிய நித்திரைபோல இருந்து உறங்குவார்கள், (ஆதலால்) பாராதி தனில் உள்ள செயல் எல்லாம் - பூமி முதலான இடங்களிலுள்ள செய்கைகளெல்லாம், முடிவிலே பார்க்கின் - முடிவிலே ஆலோசித்துப் பார்த்தால், நின்செயல் அல்லவோ - உன் செய்கையாய் இருக்கின்றதல்லவோ, பார்க்குமிடம்—எ-று.

குணம் தட்பத்தால் சந்த்ரனுக்கு உவமைப் பொருளாயிற்று. எப்பொருளையும் அசைப்பிப்பவ னிறைவனாகலின் 'பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே பார்க்கி னின்செயலல்லவோ' என்றார்.

பிரமாதியானாலும் எனச் சிருஷ்டியைக் கூறினமையால் ஸ்திதி சங்காரங்களும் அமையும். ஒருகோபம் ஒருவேளை வர என்றது, அவர்கொண்ட கோபம் ஒவ்வோர் காலத்தில் சிறிதுபோதே நிகழும் என்றற்கு. "குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி-கணமேயுங் காத்தலரிது" என்பதனானும், அவர் வெகுளி சிறிதுபோதே நிகழுமென்ப தறிக. "மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய - பிறத்த லதனான் வரும்" என்பவாகலின், நெட்டுயிர்த்துத் தட்டழிந்துளறுவார் என்றும், கணனடங்கக் கற்றானு மில்லையாதலால் ஒன்று பேசுமிட மொன்றைப் புலம்புவார் என்றுங் கூறினார். அறிதுயில்போலே யிருந்து துயில்வார் என்றது விழித் திருப்பதுபோல் பாவனைகாட்டி அந்தக்கரணங்கள் சோர்வடைய உறங்குதலை. கணன் - குற்றம்.

7. அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே
யம்மாயை யில்லாமையே
ஆமெனவு மறிவுமுண் டப்பாலு மறிகின்ற
வறிவினை யறிந்துபார்க்கின்
எண்டிசை விளக்குமொரு தெய்வவரு ளல்லாம
லில்லையெனு நினைவுமுண்டிங்
கியானென தறத்துரிய நிறைவாகி நிற்பதே
யின்பமெனு மன்புமுண்டு
கண்டன வெலாமல்ல வென்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்களோயக்
கண்மூடி யொருகண மிருக்கவென் றாற்பாழ்த்த
கர்மங்கள் போராடுதே
பண்டையுள கர்மமே கர்த்தா வெனும்பெயர்ப்
பக்ஷநா னிச்சிப்பனே
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

இ - ள். அண்டபகி ரண்டமும்-அண்டபகிரண்டங்களும், மாயாவிகாரமே-மாயா விகாரத்தின் வடிவேயாகும், அம்மாயை - அந்தமாயையென்னும் பொருளானது, இல்லாமையே ஆம் எனவும் - பொய்யேயாகு மென்றும், அறிவும் உண்டு - உணர்ச்சியும் உண்டு, அப்பாலும் - அதற்குமேலும், அறிகின்ற - உணர்கின்ற, அறிவினை-உணர்ச்சியை, அறிந்து பார்க்கின் - உணர்ந்து பார்க்குமிடத்து, எண்டிசைவிளக்கும் - அஷ்டதிசைகளையும் விளங்கச் செய்கின்ற, ஒரு தெய்வ அருள் அல்லாமல் - ஒரு கடவுளின்கிருபை யல்லாமல், இல்லை என்னும் - இல்லையென்கின்ற, நினைவும் உண்டு - நினைப்பும் உண்டு, இங்கு - இப்படியே, யான் எனது அற - யான் என்னும் அகங்காரமும் எனது என்னும் மமகாரமும் இல்லாமல் நீங்கும்படி, துரியம் நிறைவு ஆகி நிற்பதே - துரியபதத்தில் நிறைந்துநிற்பதே, இன்பம் என்னும் அன்பும் உண்டு - சுகம் என்கிற விருப்பமும் உண்டு, கண்டன எலாம் - பார்க்கப்பட்டன யாவும், அல்ல என்று-உண்மைப்பொருள் அல்லவென்று, கண்டனை செய்து - கண்டித்து, கருவி கரணங்க ளோய - கருவிகளும் கரணங்களும் அடங்கும்படி, ஒருகணம் - ஒரு க்ஷண காலம், கண்மூடி இருக்க என்றால் - கண்ணிதழ்களை மூடிக்கொண்டு (நிஷ்டையில்) இருப்போமென்றால், பாழ்த்த கர்மங்கள் போராடுதே - பாழான கர்மங்கள் போராடுகின்றனவே, (அவை யாவையெனின்) பண்டை உள்ள கர்மமே - பூர்வமே அமைந்துள்ளனவாகிய கர்மமே, கர்த்தாவெனும் பெயர் பக்ஷம் - கர்த்தா என்கிற பெயரினது பக்ஷமாக, நான் இச்சிப்பனே - நான் விரும்புவேனோ, பார்க்குமிடம் — எ-று.

அண்டம் - துருவசக்கரத்துக் குட்பட்டது. பகிரண்டம் - வெளி அண்டம். அது துருவசக்கரத்துக்கு வெளிப்பட்டது. துரியம் - சீவன்முத்தர்க்குரிய பதம். கண்டன எல்லாம் அல்ல என்று கண்டனை செய்தலாவது நேதிவாக்கியத்தாற் களைதல். அது "அல்லையீ தல்லை யீதென மறைகளு மன்மைச் சொல்லினாற் றுதித்திளைக்கும்" என்பதனானு முணர்க. கருவி - அகக்கருவி புறக்கருவிகள். கரணங்கள் - மனம் முதலிய அந்தக்கரணங்கள். தனுகரணபுவனபோகங்கள் மாயாகாரியமாகலின் 'அண்ட பகிரண்டமும் மாயாவிகாரமே' என்றார்.

காணப்பட்ட பௌதிகங்கள் அத்தனையும் அழியும் இயல்பின ஆயினும் காண்கின்றமையால் மெய்யேஎன்பாரை மறுக்க, கண்டனவெல்லாம் அல்லவென்று கண்டனைசெய்து என்றார். கருவி கரணங்கள் ஓய்வதற்குக் கண்மூடியிருத்தல் ஓர் காரணமாதலால் 'கண்மூடி' யென்றும், அவ்வாறுநிற்கினும் கருவிகரணங்கள் ஓய்தல் அருமை நோக்கி 'ஒருகண மிருக்க' வென்றால் என்றும், அவ்வாறு நில்லாமைக்குக் காரணம் ஊழ்வினையென்பார் 'பாழ்த்த கர்மங்கள் போராடுதே' என்றும் கூறினார்.

8. சந்ததமு மெனதுசெய னினதுசெய லியானெனுந்
தன்மைநினை யன்றியில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவமிதுவே
இந்தநிலை தெளியநா னெக்குருகி வாடிய
வியற்கைதிரு வுளமறியுமே
இந்நிலையி லேசற் றிருக்கவென் றூன்மடமை
யிதசத்ரு வாகவந்து
சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
திரும்புமோ தொடுவழக்காய்ச்
சென்மம்வரு மோவெனவும் யோசிக்கு தேமனஞ்
சிரத்தையெனும் வாளுமுதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய்குவாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

இ-ள். சந்ததமும் - சதாகாலமும், எனதுசெயல் - என்செய்கை, நினதுசெயல் - உன்செய்கையே, யான் என்னும் தன்மை - நான் என்கிற தன்மை, நின்னை அன்றி இல்லாத் தன்மையால் - உன்னையன்றி இல்லாத தன்மையினால், வேறு அல்லேன் - நான் உன்னினின்றும் வேறல்லாதவனாய் இருக்கிறேன், இதுவே - இந்தநிலையே, வேதாந்த சித்தாந்த சமரச சுபாவம் -

வேதாந்த சித்தாந்த சமரச இயற்கை ஆகும், இந்தநிலே தெளிய - இந்த நிலே யை அறிய, நான் நெக்கு உருகி வாடிய இயற்கை - நான் மனம் நெகிழ்ந்து உருகிவாடின தன்மையை, திரு உளம் அறியுமே - தேவரீரது திருவுளம் அறிந்திருக்குமே, இந்நிலேயிலே - இந்தநிலேயிற்ருனே, சற்று இருக்கவென் ருல் - சிறிதுநேரம் இருக்கவேண்டுமென்ருல், மடமை - அறியாமையா னது, இதசத்ருவாகவந்து - இதத்தைச் செய்கின்ற பகைவனேப்போல வந்து, சிந்தைகுடி கொள்ளுதே - என் மனத்தில் குடிகொள்ளா நின்ற தே, மலம் மாயை கன்மம் - மலமாயாகன்மங்கள், திரும்புமோ எனவும் - மீட்டும் வருமோவென்றும், தொடுவழக்காய் - தொடர்வழக்காகி, சென்மம் வருமோ எனவும் - பிறவி உண்டாமோ என்றும், மனது யோசிக்குதே - என் மனமானது ஆலோசிக்கின்றதே, (ஆதலால்) சிரத்தை என்னும் - சிர த்தை யென்று சொல்லப்பட்ட, வாளும் உதவி - வாளேயும்கொடுத்து, பந் தம் அற - பிறவிக்கட்டு ஒழிய, மெய்ஞ்ஞானதீரமும் தந்து - மெய்ஞ்ஞான தைரியத்தையும் கொடுத்து, என்னேப் பாதுகாத்து அருள் செய்குவாய் - என்னே இரக்ஷித்தருள்வாய், பார்க்குமிடம்—எ-று.

எல்லாம் இறைவன்செய்விக்கச் செய்வதனுல் சந்ததமு மெனது செய லின்று செயலென்றும், அவன் பரிபூரணவியாபகத்தில் உயிர்கள் வியாப் பியமாகலின், யானெனுந்தன்மை நினேயன்றி யில்லாத் தன்மையால் வேற லேன் என்றும், இதுவே வேதாகமங்களின் துணிபாதலால் வேதாந்த சித்தாந்த சமரச சுபாவ மிதுவே என்றும், இந்நிலேயைக்கேட்டுச் சிந்தித்துத் தெளியப்பழகியது திருவருள்துணேயா லாதலின் இந்த நிலேதெளிய நா னெக்குருகிவாடிய வியற்கை திருவுள மறியுமே என்றும், இந்நிலேயிலே பழகிவருகையில் பழையவாசனேப் பழக்கத்தால் அறியாமைவந்து தாக்கலின் இந்நிலேயிலே சற்றிருக்கவென்ருல் மடமை இதசத்ருவாக வந்து சிந்தை குடிகொள்ளுதே என்றும், அறியாமை காரணமாக மலமாயா கன்மங்கள் அடர்தலின் மலமாயா கன்மந் திரும்புமோ தொடு வழக்காய் என்றும், மாயை காரணமாகப் பிறவி தோன்றுதலின் சன்மம் வருமோ வென்றும், யோசிக்குதே என்றும், அது கேள்விச் செல்வத்தாலாகிய சிரத்தை யென் னும் வாளினுலல்லது களேயப்படாதென்பார் சிரத்தையெனும் வாளுமுதவி ப் பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனேப் பாதுகாத் தருள்செய்குவாய் என்றும் கூறினுர்.

மல மாயை கன்ம மென்பன மூவகைப் பாச விசேடங்களே. இவ்வாறு கூறுது ஐவகையென்பாருமுளர். வாளிருப்பினும் தீர மில்லாதவர்க்கு அது பயன்படா தாதலால் சிரத்தையெனும் வாளுமுதவிப் பந்தமற மெய்ஞ் ஞான தீரமுந் தந்து என்ருர். இதசத்ரு - புறத்தில் நட்புள்ளவன்போல் நடித்து அகத்தில் விரோதமுள்ள பகைவன். தொடுவழக்கு - தீராவழக்கு.

சிரத்தை - சமாதி ஷட்க சம்பத்தி லொன்று. (அது சாஸ்திரார்த்தங்களைக் கேட்பதில் மிகு விருப்பம்) "என்செய லென்ப தியாதொன்று மில்லை யினித் தெய்வமே - உன்செயலேயென் றுணரப்பெற்றேன்" என மேலோர் கூறினமையால் எனதுசெயல் நினதுசெயல் என்றார். வேதாந்த சித்தாந்த சமரசசுபாவம் - வேதாந்த சித்தாந்தங்களை ஒரு நிகரனவாகக் கொள்ளுமியற்கை.

**9.** பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்
 பொறிபுல னடங்குமிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம்
 போனவிட மென்பர்சிலபேர்
நாதவடி வென்பர்சிலர் விந்துமய மென்பர்சிலர்
 நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலருருவ மாமென்பர் சிலர்கருதி
 நாடிலரு வென்பர்சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர்
 பேசினரு ளென்பர்சிலபேர்
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
 பிறவுமே மொழிவரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
 பரமசுக நிஷ்டைபெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணானந்தமே.

இ-ள். சிலர் - சிலபேர், பூதலயம் ஆகின்ற-பூதவொடுக்கமுண்டாவதற் கிடமாகிய, மாயை - மாயையே, முதல் என்பர் - முதற்பொருளென்பார்கள், சிலர் - சிலபேர், பொறிபுலன் அடங்கும் இடமே பொருள் என்பர்-ஐம்பொறிகளும் அவற்றின் விஷயங்களும் ஒடுங்கு மிடமே பொருளென்பார்கள், சிலர் கரண முடிவு என்பர் - சிலபேர் அந்தக்கரண நாசமே (பொருள்) என்பார்கள், சிலபேர் - சிலபேர், குணம்போன இடம் என்பர் - முக்குணங்களும் நசித்த இடமே பொருளென்பார்கள், சிலர் நாதவடிவு என்பர் - சிலபேர் நாதரூபமே பொருளென்பார்கள், சிலர் விந்துமயம் என்பர் - சிலபேர் விந்துரூபமே பொருளென்பார்கள், சிலர் நட்டநடுவே இருந்த நாம் என்பர் - சிலபேர் நடு மையத்திலிருந்த (ஆன்ம வஸ்துவாகிய) நாமே பொருளென்பார்கள், சிலர் உருவம் ஆம் என்பர் - சிலபேர் உருவமே பொருளென்பார்கள், சிலர்பேர் கருதி நாடில் அருவு என்பர் - சிலபேர் நன்றாக ஆலோசிக்குமிடத்தில் அருவமே பொருளென்பார்கள், சிலர் பேதம் அற உயிர்கெட்ட நிலயம் என்றிடுவர் - சிலர் வேற்றுமை கெடும்படி சீவபோதம் நசித்த இடமே பொருளென்பார்கள், சிலபேர் பேசின் அருள்

என்பர் - சிலபேர் சொல்லுமிடத்துத் திருவருளே பொருளென்பார்கள், சிலர் பின்னு முன்னும்கெட்ட சூனியம் என்பர் - சிலபேர் அந்தமும் ஆதியு மில்லாத பாழே பொருளென்பார்கள், (சிலர்) பிறவும் மொழிவர் - சிலர் வேறுநிலைகளையும் பொருளென்பார்கள், இவையால் - இவைகளால், மனது பாதரசமாய் சஞ்சலப்படுமெலால் - மனமானது பாதரசம்போலச் சலித்தலை யடையுமேயன்றி, பரமசுக நிஷ்டை பெறுமோ - மேலான ஆநந்த நிஷ்டையை அடையுமோ, பார்க்குமிடம்—எ-று.

பொறி: மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. புலன்: ஸ்பரிசம், ரசம், ரூபம், கந்தம், சப்தம் என்பன. கரணம்: மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. முக்குணம்: ராஜசம், தாமஸம், சாத்துவிகம் என்பன. பாதரசம் - சூதம்.

**10.** அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலென்
 னறிவைச் சுருக்கினவரார்
அவ்வறிவு தானுமே பற்றினது பற்றா
 யழுந்தவுந் தலைமீதிலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
 சுகநிஷ்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
 தூங்கவைத் தவரார்கொலோ
தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந்
 தனைத்தந்த தெனதாசையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ
 தற்கால மதைநோவனோ
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ
 பரமார்த்த மேதுமறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணானந்தமே.

இ-ள். அந்தகாரத்தை - அஞ்ஞானமாகிய இருளை, ஒரு அகம் ஆக்கி - ஒரு இருப்பிடமாக்கி, மின்போல் - மின்னலைப்போல, என் அறிவை சுருக்கினவர் ஆர் - என்னறிவைச் சுருங்கச்செய்து அதனிடத்து வைத்தவர் யார், அவ்வறிவுதானும் - அந்த அறிவும், பற்றினது பற்றாய் அழுந்தவும் - தான் பிடித்ததையே ஆதாரமாய்க்கொண்டு அதில் மூழ்கவும், தலைமீதிலே - என்சிரத்தின்மீது, சொந்தமாய் எழுத - சுவதந்திரமாய் எழுதிவைப்பதற்கு, படித்தது ஆர் - கற்றது யார், மெய்ஞ்ஞான சுகநிஷ்டை சேராமல் - உண்மையாகிய ஞானானந்தங்களுக் கேதுவாகிய நிஷ்டையைப் பொருந்தாமல், சோற்றுத்துருத்தியை - சோற்றுத் துருத்தியாகிய சரீரத்தை, சதம் என

வும் - நிலையென்று நினைத்தும், உண்டு உண்டு - பலகாலுண்டு, தூங்கவைத் தவர் ஆர் - உறங்குவித்தவர் யார், தந்தை தாய் முதலான - தகப்பன் தாய் முதலாகிய, அகிலப்ரபஞ்சம்தனை - பிரபஞ்சமுழுவதையும், தந்தது - உண்டாக்கினதற்குக்காரணம், எனது ஆசையோ - என் விருப்பமோ, தன்னையே நோவனோ - என்னை நானே நொந்துகொள்வேனோ, பிறரையே நோவனோ - அன்னியரையே நொந்துகொள்வேனோ, தற்காலமதைநோவனோ - (இவைகளெல்லாம் நிகழ்தற்கிடமாகிய) தற்காலத்தை நொந்துகொள்வேனோ, பந்தமானதுதந்த வினையையே நோவனோ - பிறவித்தளையை யுண்டாக்கின பூர்வ கன்மங்களைத் தான் நொந்துகொள்வேனோ, பரமார்த்தம் ஏதும் அறியேன் - மேலான அர்த்தம் சிறிதும் உணர்ந்திலேன், பார்க்குமிடம்—எ-று.

உடையானை உணரவொட்டாமல் உயிரை மறைத்து நிற்றலின் அஞ்ஞானத்தை யறிவுக் கிடமாக்கி 'அந்தகாரத்தை யோரகமாக்கி, மின்போல் என்னறிவைச் சுருக்கினவர் யார் என்றும், அவ்வறிவுதானுமே அவ்வஞ்ஞானத்தையே ஆதரவாகப்பற்றி உடையானை மறக்கச் செய்ததென்பார் அவ்வறிவுதானுமே பற்றினது பற்றற யழுந்தவுந் தலைமீதிலே சொந்தமா யெழுதப் படித்ததார் என்றும், அவ்வஞ்ஞானத்தைக் கெடுக்க ஞானசமாதி கூடாமல் உடம்பைப் பாதுகாத்தலிலேயே காலங் கழித்தேன் என்பார் மெய்ஞ்ஞான சுகநிஷ்டை சேராமலே சோற்றுத்துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு தூங்கவைத்தவரார் என்றுங் கூறினர். "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றும் - தவாஅப் பிறப் பீனும் வித்து" என்றபடி அவாவின் காரணமாகத் தந்தை தாயர் முதலிய சகல பிரபஞ்சங்களும் தோன்றலின் தந்தை தாய் முதலான வகில ப்ரபஞ்சந் தனைத்தந்த தெனதாசையோ என்றும், இவ்வாறு அவாவினால் இடர்ப்படுகின்றவர் அநுதாபத்தால் தான், பிறர், காலம், வினையாகிய இவற்றுள் யாரைநோவேனென்பார் தன்னையேநோவனோ பிறரையேநோவனோ முதலியனவாகப் பலபடக்கூறினர்.

**11.** வாராத தெலாமொழிய வருவன வெலாமெய்த
மனதுசாட் சியதாகவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாயுணர வூகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன்றெனப்
போதநெறி தந்ததுஞ் சாசுவத வானந்த
போகமே வீடென்னவே
நீராள மாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதரு ளின்னுமின்னும்

நின்னையே துணையென்ற வென்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்கவருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணா னந்தமே.

இ-ள். வாராதெலாம் ஒழிய - வாராதவை யெல்லாம் வாராமலே யொழிக, வருவன எல்லாம் எய்த - வருவன எல்லாம் வந்தே தீர்க, -(என்று) மனது சாட்சியதாக மருவ - மனமானது நடுவுநிலைமையான சாட்சி யாய் நிற்கப் பொருந்தும்படி, நிலை தந்ததும் - உண்மை) நிலையைக் கொடு த்ததும், வேதாந்த சித்தாந்த மரபு சமரசமாக - வேதாந்தமரபு சித்தாந்த மரபு என்பன சமரசமா யிருக்கிறதாக, பூராயமா யுணர - ஆத்யந்தமா யறி யும்படி, ஊகமது தந்ததும் - ஊகத்தைக் கொடுத்ததும், பொய் உடலை நிலை அன்று என - பொய்யாகிய சரீரத்தைச் சாசுவதமல்லவென்று தீர்மானிக்க, போத நெறி தந்ததும் - ஞான மார்க்கத்தைக் கொடுத்ததும், சாசுவத ஆந ந்த போகமே வீடு என்ன - நித்தியாநந்தாநுபவமே முத்தியென்று, நீராள மாய் உருக - நீரின்தன்மையா யுருகும்படி, உள்ளன்பு தந்ததும் - உள்ளன் பைக் கொடுத்ததும், நின்னது அருள் - உனது திருவருளே, இன்னும் இன் னும் - மேலுமேலும், நின்னையே துணை என்ற - உன்னையே துணையாக ப்பற்றின, என்னையே காக்க - என்னையே பாதுகாத்தற்கு, ஒருநினைவு - ஒப்பற்ற திருவுளம், சற்று உண்டாகிலோ - சிறிது உண்டானால், பாராதி அறியாத மோனமே - நிலமுதல் நாத மிறுதியாகக் கிடந்த தத்துவங்களால் அறியப்படாத மௌனநிலையே, இடைவிடா பற்று ஆக நிற்க - இடை யறாத பற்றுக்கோடாகக்கொண்டு நான் அந்த நிலையில் நழுவாது நிற்கும் படி, அருள்வாய் - கிருபைபுரிவாய், பார்க்குமிடம்—எ-று.

"வருந்தி யழைத்தாலும் வாராத வாரா, பொருந்துவன போமினென் ன்றாற் போகா" என்றா ராகலின், வாராதெலாமொழிய வருவனவெலா மெய்த என்றும், இத்தனையும் துணிவதற்கு மன மிடமாதலின் மனது சாக்ஷியதாகவே என்றும், என்றும் தான் பெறவேண்டுவது சிவானுபவச் செல்வமாதலின் மருவநிலைதந்ததும் என்றும், அவ்வுண்மைநிலை வேதாந்த சித்தாந்த சமரசமாகலின், வேதாந்தசித்தாந்தமரபு சமரசமாகவே என்றும், அது மெய்யுணர்வாற் பெறப்படுவதாதலின் பூராயமாயுணர வூகமது தந்தது மென்றும், அவ்வுண்மைநிலைதோன்றியகாலத்தில் யாக்கைநிலையாமையென் பது பெறப்படலான் பொய்யுடலை மெய்யன்றெனப் போதநெறி தந்ததும் என்றும், தேகாதிப் பிரபஞ்சம் நிலையாமை யெனத் தோன்றியவிடத்து முத்தி கைவருதலான் சாசுவத ஆனந்தபோகமே வீடென்ன என்றும், அது

கை வரலால் மெய்யன்பே யுருவமாகக் கரைதலின், நீராளமாயுருக வுள்ளன்பு தந்ததும் என்றும், இத்தனையும் இறைவனது திருவருட்பிரேரகமாதலின் நின்னதருளென்றும், இன்னும் என்னைப் பிறவி வாராமற் காக்கவேண்டுமானால் தத்துவாதீதமான மௌனநிலை வாய்க்கவேண்டு மென்பார் பாராதியறியாதமோனமே யிடைவிடாப் பற்றாக நிற்க வருள்வாய் என்றுங் கூறினார். ஊகம்-யுக்தி, நீராளமாய் - நீரின் றன்மைபோல.

**12.** ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
    ஆலமமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ
    வந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ மேருவுந்
    தனுவாக வளையவிலையோ
சப்தமே கங்களும் வச்ரதர னாணையிற்
    சஞ்சரித் திடவில்லையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
    மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
    மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
    பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
    பரிபூரண னந்தமே.

இ - ள். ஆழ் ஆழி கரையின்றி நிற்க இல்லையோ - ஆழ்ந்தகடலானது கரையில்லாமலே தன்னெல்லைகடவாது அடங்கி நிற்கவில்லையோ, கொடிய ஆலம் அமுது ஆக இல்லையோ - கொடிய விஷமானது (சிவபெருமானுக்கு) உணவாகியமையவில்லையோ, அக்கடலின்மீது-அந்தக்கடலின் நடுவில், வடவனல் நிற்க இல்லையோ - வடவைத்தீயானது அவியாமல் நிலைபெற்றிருக்கவில்லையோ, அந்தரத்து - ஆகாயத்தில், அகில கோடி - அண்டகோடிகள், தாழாமல் நிலைநிற்க இல்லையோ - கவிழாமல் நிலைபெற்றிருக்க வில்லையோ, மேருவும் தனு ஆக வளைய இல்லையோ-மேருமலையும் சிவபெருமானால் வில்லாக வளைக்கப்பட வில்லையோ, சப்த மேகங்களும் - மேகங்களேழும், வச்ரதரன் ஆணையில் - வச்சிராயுதத்தைத் தரித்த இந்திரனது ஆக்கினையிலடங்கி, சஞ்சரித்திட இல்லையோ-வசிக்கவில்லையோ, வாழாதுவாழ - வாழாமல் வாழும்படி, இராமன் அடியால் - ஸ்ரீராமனது பாதரேணுவால், சிலையும் - கல்லும், மடமங்கை ஆக இல்லையோ - இளம் பெண்ணாகிய அகலிகை

யாகவில்லையோ, மணிமந்த்ரம் ஆதியால் - மணிமந்த்ரம் முதலானவைக ளால், வேண்டு சித்திகள் - அவரவர் விரும்பின சித்திகள், உலக மார்க்கத் தில் வைக்க இல்லையோ - லௌகிகநெறியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கவில்லை யோ, பாழ் ஆன என் மனம் குவிய - பாழாகிய என்மனது அந்தர்முக மாய்க் குவியும்படி, ஒரு தந்திரம் பண்ணுவது - ஒரு உபாயஞ் செய்வது உனக்கு அருமையோ - மேற்குறித்த எல்லாவற்றிற்கும் தலைவனாகிய உனக்கு அருமையாகுமோ, பார்க்குமிடம்—எ-று.

ஆலம் அமுதானது - பாற்கடலிற் றோன்றிய நஞ்சு தேவர்கள் பிரார் த்தனையால் சிவபிரானுக்கு அமுதுபோல நல்லுணவானது. வடவை-பெட் டைக் குதிரையின் வடிவாய்க் கடவுளால் படைக்கப்பட்டுக் கடலி னடுவில் நீரானது தன்னெல்லைகடவா தமைந்துநிற்கும்படி யமைத்துவைக்கப்பட்ட தோர் நெருப்பு. மேரு தனுவாகவளைந்தது - சிவபெருமானால் திரிபுரதகனஞ் செய்யப்பட்டகாலத்தில். சப்தமேகங்கள் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலா வர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. இவை முறையே மணியையும், நீரையும், பொன்னையும், பூவையும், மண்ணையும், கல்லையும், நெருப்பையும் பொழிவனவாம். வாழாது வாழ்தலாவது - பூத வுடம்பு நசித்தும் புகழுடம்பு நசியாதிருத்தல். மணி - குளிகை.

'அலையுமனத்தை யகத்தடக்கு மவனே சரிதைகடந்தோனும் - அலையு மனத்தை யகத்தடக்கு மவனே கிரியை முடிந்தோனும் - அலையு மனத்தை யகத்தடக்கு மவனே யோகதற்பரனும் - அலையுமனத்தை யகத்தடக்கு மவ னே ஞானி யதிசூரன்' என்று பெரியோர் கூறுதலான், அம்மன மொடுங்கா மையான், அதைப் பலபட ஆழாழி கரையின்றி நிற்கவில்லையோ என்பது முதலியவாக விதந்தும், அது ஒடுங்கினாலல்லது முத்தி யின்பம் பெறுவதற் கரிதென்பார் பாழான வென்மனங் குவியவொருதந்திரம் பண்ணுவ துனக் கருமையோ என்றும் கூறினர்.

**13.** ஆசைக்கொ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன்மீதிலே
ஆணைசெல வேநினைவ ரளகேசனிகராக
வம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக்க லைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணுவரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
உறங்குவது மாகமுடியும்

உள்ளதே போதுநா னெனக் குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற
பரிசுத்த நிலையையருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரண னந்தமே.

இ-ள். ஆசைக்கு ஒர் அளவு இல்லை - ஆசைக்கு ஒரு வரம்பு இல்லை, (ஏனெனின்) அகிலம் எல்லாம் - உலகங்கள் எல்லாம், கட்டி ஆளினும் - (ஒருவர்) கட்டி ஆண்டாலும், கடல்மீதில் ஆணை செல்ல நினைவர் - கடல்மீதும் தமது ஆக்கினை செல்லும்படியாக விரும்புவார்கள், அளகேசன் நிகர் ஆக - குபேரனுக்குச் சமமாக, மிக அம் பொன் வைத்தபேரும் - மிகுதியாகச் சிறந்த பொன்னைத் தம்மிடத்தில் வைத்திருக்கிறவர்களும், ரசவாதவித்தைக்கு நேசித்து அலைந்திடுவர் - ரசவாத வித்தையை விரும்பித் திரிவார், நெடுநாள் இருந்தபேரும்-(இவ்வுலகத்தில்) நெடுங்காலம் இகலோக சுகத்தை அநுபவித்து வெறுக்கத்தக்க தசையை யடைந்தபேர்களும், இன்னும் நிலையாக - மேலும் (இவ்வுடம்பு) நிலைத்திருக்கும்படி, காயகற்பம் தேடி - காயசித்திக்குரிய கற்ப முறைகளைத் தேடி, (அவை கிடைக்கப் பெருமையால்) நெஞ்சு புண் ஆவர் - மனம் புண்படுவார்கள், எல்லாம்-இவைகளையெல்லாம், யோசிக்கும்வேளையில் - ஆலோசிக்குங் காலத்தில், பசிதீர உண்பதும் - பசி அடங்கப் புசிப்பதும், உறங்குவதும் ஆக - தூங்குவதுமாகவே, முடியும்-முடிவுபெறும், (ஆதலால்) உள்ளதேபோதும்-(எனக்குத்தற்காலம்) உள்ளதே அமையும், நான் நான் என குளறி - நான் நான் என்று அகங்கரித்துப் புலம்பி, ஒன்றைவிட்டு ஒன்று பற்றி - ஒன்றைவிட்டு ஒன்றைத் தொட்டு, பாசக்கடற்குளே - ஆசையாகிய கடலில், வீழாமல் - வீழ்ந்தழுந்தாமல், மனது அற்ற - மன'மிறந்த, பரிசுத்த நிலையை - பரிசுத்தமாகிய மௌன நிலையாகிய (மரக்கலத்தை), அருள்வாய் - கிருபை செய்வாய், பார்க்குமிடம்—எ-று.

கட்டி-கைக்கொண்டு, கடல்மீதில் ஆணைசெலுத்தினது ஸ்ரீராமபிரான் முதலியவரிடத்துக்காண்க.

அவாவே பிறவிக்குக் காரணமாகலானும் உயிர்க் குணமாகலானும் ஆசைக்கொரளவில்லைஎன்றும், நிலம் பொன் பெண் என்னு மாசை மூன்றனுள் ஒருவன் ஒரு குடைநிழலில் உலகமுழுதுமாண்டாலும் பின்னு மாளக் கருதுவானாகலின் அகில மெல்லாங் கட்டி யாளினுங் கடன்மீதிலே யாணை செலவே நினைவரென்றும், பொற்குவியலை யிருநிதிக்கிழவனாகப் பெற்றுளாரும் இன்னும் பெற விழைதலின் அம்பொன்மிக வைத்தபேரும் நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர் என்றும், அவாவைக்கொண் டுழலும்

தேகம் நிலையாக விருக்க வருந்தி முயல்வாரென்பார், நெடுநாளிருந்தபேரும் காயகற்பந்தேடி நெஞ்சு புண்ணுவரென்றும், எல்லாம் முடிவாக யோசிக்கும் போது உண்பது முறங்குவதுமாக முடிதலான், பசிதீர உண்பது முறங்குவது மாக முடியுமென்றும், கிடைத்தவரையிலும் திருப்தியடைய வேண்டுமென் பார் உள்ளதேபோதுமென்றும், ஆங்காரமேலீட்டால் ஒன்றைவிட்டொன் றை நாடிப் பாசத்திலாழாது தன்னையும் இறைவனையும் காணுஞ் செல்வம் வேண்டுமென்பார், பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற பரிசுத்த நிலையை யருள்வாயென்றும் கூறினர்.

---

## பொருள்வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

1. நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
 நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
 சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
 மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளி[யைச்
 சிந்தை செய்வாம்.

இ-ள். நித்தியமாய் - சாசுவதமாகி, நிர்மலமாய் - மலரஹிதமாகி, நிஷ்களமாய் - உருவற்றதாகி, நிராமயமாய் - நோயற்றதாகி, நிறைவாய் - நிறைவாகி, நீங்கா சுத்தமுமாய் - இறையளுத பரிசுத்தமுடையதாகி, தூர மும் ஆய் - தூரமும் ஆகி, சமீபமும் ஆய் - சமீபமும் ஆகி, துரிய நிறை சுடர் ஆய் - துரியபதத்தில் நிறைந்திருக்கின்ற சோதியாகி, எல்லாம் வைத் திருந்த தாரகம் ஆய் - எல்லாப்பொருளையும் தன்னிடத்தில் அடக்கியிருந்த ஆதாரப்பொருளாகி, ஆநந்த மயம் ஆகி - சுகரூபமாகி, மனவாக்கு எட்டா சித்து உருவாய் - மனோவாக்குகளால் எட்டப்படாத ஞானரூபமாகி, நின்ற, (என்றும் நாசரகிதமாய்) நிலைபெற்றிருந்த, ஒன்றை - ஒப்பற்ற பொருளை- சுகாரம்பப் பெருவெளியை - ஆநந்தத் தொடக்கத்தையுடைய பேராகாய த்தை, சிந்தைசெய்வாம் - சிந்திப்போம் (யாம்)—எ-று.

மெய்யுணர்வாற் காணப்படுவதாகலின் நித்தியமா யென்றும், அநாதி யே மலநீக்கமுடையதாதலின் நிர்மலமாயென்றும், மலநீக்கமுடையாராற் காணப்படுவதாகலின் நிட்களமாயென்றும், ஜராமரணங்களற்ற தாகலின் நிராமயமாய் என்றும், யாண்டும் பரிபூரணமாதலின் நிறைவாய் என்றும், என்றுந் தூய்மை யுடையதாதலின் நீங்காச் சுத்தமுமா யென்றும், மெய்

யன்பிலார்க் கெட்டாததாகலின் தூரமுமாயென்றும், மெய்யன் புடையார்க்குக் கிட்டப்படுவதாதலின் சமீபமுமா யென்றும், துரியநிலையில் விளங்குவதாதலின் துரியநிறை சுடராயென்றும், சகல சேதனுசேதனங்கட்குமிடமாதலின் எல்லாம் வைத்திருந்த தாரகமாய் என்றும், அடைந்தார்க்குச் சுகரூபமாய்த் தோன்றுதலின் ஆநந்தமயமாகி என்றும், அது மனவாக்கிறந்ததாகலின் மனவாக் கெட்டா என்றும், அறிவே வடிவாதலின் சித்துருவா யென்றும், அதனை இன்னதென்று சுட்டப்படாமையின் ஒன்றை என்றும், அது இன்பப்பெருவெளியாகலின் சுகாரம்பப் பெருவெளியென்றும், அதனைச் சிந்தித்தாலல்லது பேறெய்த லரிதாகலின் சிந்தை செய்வாமென்றுங் கூறினர். சுகாரம்பம் - சுகோதயம்.

2. யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி
யாதின் பாலும்
பேதமற நின்றுயிருக் குயிராகி யன்பருக்கே
பேரா னந்தக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்னைக்
கொடுத்துக் காட்டும்
தீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம்.

இ - ள். மனம் யாது நினையும் - மனமானது எந்தவஸ்துவை நினைக்குமோ, அந்த நினைவுக்கு நினைவு ஆகி - அந்த எண்ணத்துக்கு எண்ணமாகி, யாதின்பாலும் - எந்தப் பொருளினிடத்தும், பேதம் அற நின்று - வேறுபாடு இல்லாமல் ஒன்றி நின்று, உயிருக்கு உயிராகி - ஜீவான்மாவுக்கு உள்ளீடாகிய பரமாத்மாவாகி, அன்பருக்கு - தன்னிடத்தில் அன்பையுடைய அடியார்களுக்கு, கோது இல்-குற்றமில்லாத, பேராநந்த அமுது - பேரின்பத்தைத் தருகின்ற அமிர்தமானது, ஊற்று அரும்பி - ஊற்றுகச் சுரந்து, குணம் குறி ஒன்று அற - குணம் குறிகள் சிறிதும் இல்லா தொழிய, தன்னைக் கொடுத்துக்காட்டும் - அறப் பெரும் பொருளாகிய தன்னை அளித்து அகக்கண்ணுக்குப் புலப்படும்படி காட்டாநிற்கிற, தீது இல் - தீது இல்லாத, பராபரம் ஆன - பராபரமாகிய, சித்தாந்தப்பேரொளியை - (வேதவேதாந்தங்களால் பூர்வபட்சத்தைக் கண்டித்து இதுவே பரம்பொருளென்று) சித்தாந்தப் படுத்தப்பட்ட பெருஞ் சோதியை, சிந்தை செய்வாம் - சிந்திப்போம் (யாம்)—எ-று.

அன்பருக்கே பேரானந்தக் கோதிலமு தூற்றரும்பி என்றதனுல் பிறர்க்குத் தூக்கஹேதுவா யிருப்பதென்பது கருத்து.

மன மெதனையும் நினைக்குங் கருவியாகலின் அதனை நினைப்பிப்பவன் இறைவனே என்பார் யாது மன நினையு மந்த நினைவுக்குநினைவாகிஎன்றும்,

யாண்டும் அவன் பரிபூரணனாகலின் அவ்வவ்வுயிரையு மியக்குவிப்பவ னவனே யென்பார் யாதின்பாலும் பேதமறநின்று உயிருக்கு உயிராகி என்றும், இவ்வாறிருக்கு மிறைவன் தன்னை வழிபடு மெய்யன்பினரைக் கவர்ந்து தன்னைக் காட்டிக்கொண்டு நிற்றலின் அன்பருக்கே பேரானந்தக் கோதி லமுதூற்றரும்பிக் குணங்குறி யொன்றறத் தன்னைக் கொடுத்துக் காட்டும் என்றும், இவ்வகை விளங்கிநிற்பான் வேதசிவாகமங்களி னுச்சியிற் கிடந்த சிவபரஞ்சுடரேயாகலின் தீதில் பராபரமான சித்தாந்தப் பேரொளி யென்றும், அவனது திருவடி தொழுவதே பெரும் பேறாகலின் சிந்தை செய்வாமென்றுங் கூறினார்.

**3.** பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவு மன்பரைக்கோத் தறவிழுங்கிக்
கொண்டப் பாலும் யாந்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொருளினை
சிந்தை செய்வாம்.

இ-ள். பெருவெளியாய் - பெரிய ஆகாயமாகி, ஐம்பூதம் பிறப்பு இடமாய் - பஞ்ச மஹாபூதங்களுக்கும் பிறப்பிடமாகி, பேசாத பெரியமோனம் வரும் இடமாய் - சொல்லுதற்கரிய பெரிதான மௌனநிலை யுண்டாதற்குரிய இடமாகி, மனமாதிக்கு எட்டாத - மனாதிகளுக்கு எட்டாத, பேரின்பமாய் - பேரானந்தவடிவாகி, ஞானகுரு - ஞானாசாரியர், அருளால் காட்டிடவும் - தமது பெருங்கருணையாற் காட்டிடவும், அன்பரை கோத்து - தன்னிடத் தன்பு செய்வோரை மூடி, அற - அவர்களுடைய சீவபோதங் கெடும்படி, விழுங்கிக்கொண்டு - விழுங்கிக்கொண்டு, அப்பாலும் - அதன் மேலும், தெரிவு அரிது ஆய் கலந்தது - அறிதற்கரிதாகிக் கலந்து நின்றது, எந்தப்பொருள் - எந்தவஸ்து, அந்தப் பொருளினை - அந்தவஸ்துவை, யாம் சிந்தை செய்வாம் - நாம் மனனம்பண்ணுவோம்—எ - று.

> "குட்டித் திரட்கரடி யாமெருழுகக் கோன்குதித்துக்
> கட்டிப் புதைந்த கதையாகும்—துட்டமலப்
> பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப்
> புத்திபோற் காட்டும் பொருள்."—என்பவாகலின், ஞான குரு

அருளால் காட்டிடவும் என்றார்.

பரமாகாச சொரூபி யாதலின் பெருவெளியாயென்றும், நீல நீர் தீ கால் வெளியென்னு மைம்பூதங்கட் கிடமாகலின் ஐம்பூதம் பிறப்பிடமா யென்றும், சிவானுபூதிச் செல்வர் பெறும்பேராகி மோனநிலையே தோன்று

மிடமாதலின்' பேசாத பெரிய மோனம் வருமிடமாயென்றும், அது மன வாக்கிறந்த தாதலின் மனமாதிக்கெட்டாத பேரின்ப மயமா யென்றும், அது ஞானுசிரியர் திருவருளாற் காட்டப்பட்டும் அவரையுந் தான் விழுங்கி நிற்பதாகலின் ஞானக் குருவருளாற் காட்டிடவு மன்பரைக் கோத்தற விழுங்கிக்கொண் டப்பாலுந் தெரிவரிதாய்க் கலந்ததென்றும், அப்பொருளே பரம்பொரு ளாகலின் அதனைச் சிந்தித்தாலல்லது இறுதியில் வீடு கிட்டுவ தரிதாகலின் அது துணிதற்பொருட்டு எந்தப்பொரு ளந்தப்பொருளினை யாஞ் சிந்தைசெய்வாமென்று கடாவிடைகளானுங் கூறினர்.

4. இகபரமு முயிர்க்குயிரை யானெனதற் றவருறவை
யெந்த நாளும்
சுகபரிபூரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை
அகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை
யமிர்தை நாடி
மொகுமொகென விருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கண்
முகிழ்த்து நிற்பாம்.

இ-ள். இகபரமும் - இகத்திலும் பரத்திலுமுள்ள, உயிர்க்கு உயிரை - உயிர்களுக் குயிரா யிருப்பதை, யான் எனது அற்றவர் உறவை - அகங்கார மமகாரங்களை யொழித்தவர்களுக்கு உறவாயிருப்பதை, எந்நாளும் - எக்காலமும், சுக பரிபூரணமான - இன்பநிறைவாகிய, நிராலம்பகோசரத்தை - பற்றுக்கோ டில்லாததாய்த் தோன்றுவதை, துரிய வாழ்வை - துரியபதத்தில் வாழ்வதை, அகம் மகிழ வரும் தேனை - மன மகிழும்படி வருகின்ற தேனை, முக்கனியை - முக்கனிபோன் றினித்திருப்பதை, கற்கண்டை - கற்கண்டுபோலச் சுவையுடைப்பொருளை, அமிர்தை - அமிர்தத்தை, நாடி - மனத்தினல் தியானித்து, இருவிழி - இரண்டுகண்களும், மொகு மொகு என - மொகுமொகென்று, நீர்முத்து இறைப்ப - நீர்த்துளிகளாகிய முத்துகளையுதிர்க்க, கரமலர்கள் முகிழ்த்து நிற்பாம் - கைம்மலர்களைக் குவித்து நிற்போம் (யாம்)—எ - று.

இகபரமும் உயிர்க்கு உயிரை என்பதற்கு இகத்தினும் பரத்தினும் எனதுயிர்க் குயிராயிருக்கும் பொருளையெனினு மமையும். நிராலம்பா கோசரத்தை எனப் படமோதி, பற்றுக்கோடில்லாததாகவும் முக்கரணங்களாலுமறியப்படாததாயு மிருப்பதை எனப் பொரு ளுரைப்பாரு முளர். நாவிற்குச் சுவை பயக்குந் தேனை யொழித்தற்கு அகமகிழ வருந்தேனை என்றார். முக்கனி - வாழை, மா, பலா என்பன. அமிர்து - இறத்தலையொழிப்பது. எனவே இறவாது ஒருதன்மையாய் நீடு வாழ்விப்பதென்றாயிற்று. மொகுமொகு - ஒலிக்குறிப்பு. இத்தன்மைத்தாகிய பொருளைக்குறித்து முகிழ்க்கப்படுதலால் தம் கைகளைக் கரமலர்கள் என்றார்.

இம்மையினும் மறுமையினும் உயிர்க்குயிராய் யாவும் இயக்கலின், 'இகபரமுமுயிர்க்குயிரை' யென்றும், அங்ஙனங் கண்டார்க்குச் சுகபரிபூரண மாகவிளங்கலின் 'சுகபரிபூரணமான நிராலம்ப கோசரத்தை' யென்றும், அது துரிய நிலையதாகலின் 'துரிய வாழ்வை' யென்றும், அது கண்டார்க்கு என்று மினிப்பதாய் உவட்டாத சுகப்பேறாக நிகழ்தலின் அதனைப் பலபட வியந்து 'அகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை யமிர்தை' யென்றும், அவர்கள் சுகப்பேற்றைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் வார மெய்ம் மயிர் சிலிர்ப்ப இரு கைகளையும் குவித்து வணங்கலின் 'நாடி மொகுமொ கென விருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கண் முகிழ்த்து நிற்பாம்' என்றுங் கூறினர்.

**5.** சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
 தன்மை நாமம்
ஏதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
 றியக்கஞ் செய்யும்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
 துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
 சிந்தை செய்வாம்.

இ - ள். சாதி - சாதியும், குலம் - குலமும், பிறப்பு இறப்பு-உற்பத்தி நாசங்களும், பந்தம் முத்தி - பந்தமோக்ஷங்களும், அரு உருவத்தன்மை - அருவமாந்தன்மை உருவமாந் தன்மைகளும், நாமம்-பேரும், (ஆகிய) ஏதும் இன்றி - எதுவுமில்லாமல், எப்பொருட்கும் - எந்தப்பொருளுக்கும், எவ்விடத்தும் - எவ்விடத்திலும், பிரிவு அற நின்று - நீக்கமின்றி நிலைபெற்று, இயக்கம் செய்யும் - இயங்குவிக்கின்ற, சோதியை - தேஜோராசியை, மா தூவெளியை - மிகவும் பரிசுத்தமான ஆகாயத்தை, மனது அவிழ நிறைவு ஆன துரியவாழ்வை - அன்பருடைய மனக்கமலம் விரியும்படி நிறைந்த துரிய வாழ்வினை, தீது இல் பரம் ஆம் பொருளை - குற்றமற்ற மேலாகிய வஸ்துவை, திருவருளே நினைவு ஆக - திருவருளையே நினைத்தற்குக் கருவி யாகக் கொண்டு, சிந்தை செய்வாம் - சிந்தனை பண்ணுவோம்.—எ-று.

சாதி குலம் பிறப்பிறப்புப் பந்த முத்தி யருவுருவமுதலிய எவற்றையும் நாடாது யாண்டு மெப்போதும் பிரிவற வத்துவிதமாய் நிற்றலின், பரஞ்சுடர்த் தனிமுதல் 'சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்தன்மை நாம மேதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின் றியக்கஞ்செய்யுஞ் சோதியை' என்றும், அது பரமாகாய சொரூபமாதலின் 'தூவெளியை' என்றும், அது அகத்தும் புறத்தும் பரிபூரணமாய் நிறைந்த துரியங்கடந்த தனி முதலாதலின், அதனைப் பலபட வியந்து 'மனதவிழ நிறைவான

துரியவாழ்வை' யென்றும், அது நிர்த்தோஷமாய் மேம்படுபொருளாதலின் 'தீதில் பரமாம்பொருளை' யென்றும், அது திருவருளே துணையாகப் பெற வேண்டுதலின் 'திருவருளே நினைவாகச் சிந்தை செய்வாம்' என்றுங் கூறினர்.

6. இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக வென்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யநுதினமும்
வழுத்தல் செய்வாம்.

இ - ள். உலகம் - இவ்வுலகமானது, இந்திரசாலம் (என) - இந்திர சாலம் போலவும், கனவு (என)-கனவு போலவும், கானலின் நீர் என-கானற் சலத்தைப்போலவும், எமக்குத் தோன்ற - எமக்குத் தோன்றும்படியாக, சந்ததமும் - சதாகாலமும், சிற்பரத்தால் - ஞானபக்ஷத்தினல், அழியாத தற்பரத்தை - நாசரகிதமான தற்பர வஸ்துவை, சார்ந்து வாழ்க - பொருந்தி வாழக்கடவை, புந்தி மகிழுற - மனமகிழுமாறு, நாளும் - நாள்தோறும், தடை அற - தடையில்லாமல், ஆநந்த வெள்ளம் பொலிக என்று - இன்பப் பெருக்கானது பெருகுகவென்று, வந்தருளும் - என்னை யொரு பொருளாக மதித்து நானிருக்கு மிடந்தேடி வந்து கிருபை செய்கின்ற, குருமௌனி - மௌனகுருவினது, மலர் தாளை - தாமரை மலர்போன்ற திருவடிகளை, அநுதினமும் - நாள்தோறும், வழுத்தல் செய்வாம் - துதிசெய்வோம் (யாம்).

உலகம் மாயாகாரியமாதலானும் மாயையின் காரியமாகிய அது இல் பொருள் என்பது தோன்ற 'இந்திரசாலங் கனவு கானலினீரென வுலக மெமக்குத் தோன்ற' என்றும், சிவத்தையடையும் பெருவாழ்வினும் பேறின் மைகலின் 'சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச் சார்ந்து வாழ்க' என்றும், அச்சிவத்தை யடைவதனல் ஆனந்த வுதிப்பும், ஆனந்தாதீதமும் கைவரலான் 'புந்தி மகிழுற நாளுந் தடை யற வானந்தவெள்ளம் பொலிக' வென்றும், இத்தனையும் அடையப்பெற்றது குருவருளாளுதலின் 'வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யநுதினமும் வழுத்தல்செய்வாம்' என்றுங் கூறினர். இந்திரஜாலம் - அற்புதங்களைக்காட்டும் வித்தை.

7. பொருளாகக் கண்டபொரு ளெவைக்குமுதற் பொருளாகிப்
போத மாகித்
தெருளாகிக் கருதுமன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே ளுகி

அருளானோர்க் ககம்புறமென் றுன்னுத பூரணவா
னந்த மாகி
இருடீர விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையா
மிறைஞ்சி நிற்பாம்.

இ - ள். பொருளாகக் கண்டபொருள் எவைக்கும் - வஸ்துக்களாகக் காணப்பட்ட வஸ்துக்களெல்லாவற்றுக்கும், முதற்பொருள் ஆகி - முதன்மையான வஸ்துவாகி, போதம் ஆகி - அறிவாகி, தெருள் ஆகி - (அவ்வறிவினல் தெளிவிக்கப்பட்ட) சாரமாகி, கருதும் அன்பர் மிடிதீர பருகவந்த - நினைக்கின்ற அன்பரது வறுமை நீங்க அனுபவிக்கவந்த, செழுந்தேன் ஆகி- செழுமையான தேனுகி, அருள் ஆனோர்க்கு-தன் அருள்பெற்ற அன்பருக்கு, அகம் புறம் என்று உன்னுத - உள்ளென்றும் வெளியென்றும் நினையாமைக்குக் காரணமாகிய, பூரண ஆநந்தம் ஆகி - நிறைவாகிய சுகரூபமாகி, இருள் தீர - அஞ்ஞான இருள் நீங்கும்படி, விளங்கு பொருள் யாது - பிரகாசிக்கின்ற பொருள் எது, அந்தப்பொருளினை-அந்தப் பொருளை, யாம் இறைஞ்சி நிற்பாம் - நாம் வணங்கி நிற்போம்.—எ-று.

முதற்பொருளாகி என்றதனுல் சத்தினிலக்கணத்தையும், போதமாகி என்றதனுல் சித்தினிலக்கணத்தையும்,ஆநந்தமாகி என்றதனுல் ஆநந்தத்தின் இலக்கணத்தையு முடைய பரம்பொருள் வணக்கங் கூறினமையால் இது சொரூப வணக்கம் என்றறிக. இங்கு மிடி என்றது அவன் அருட் செல்வம் பெருதகாலத்தை.

8. அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர்மா முனிவர் [சித்த
ராதி யானோர்
தெரிவரிய பூரணமாய்க் காரணங்கற் பனைகடந்த
செல்வ மாகிக்
கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடனுயிர்போ [ற்
கலந்தெந் நாளும்
துரியநடு வூடிருந்த பெரியபொரு ளியாததனைத்
தொழுதல் செய்வாம்.

இ - ள். அருமறையின் சிரப்பொருளாய் - அரிய வேதத்தின் முடிமீது விளங்கும் பொருளாகி, விண்ணவர் மாமுனிவர் சித்தர் ஆதி ஆனோர் - தேவர்கள் பெருமை பொருந்திய முனிவர்கள் சித்தர்கள் முதலானவர்களால், தெரிவு அரிய பூரணம் ஆய் - தெரிந்துகொள்ளுதல் அருமையாகிய நிறைவாகி, காரணம் கற்பனை கடந்த செல்வம் ஆகி - தனக்கு ஆதியாகிய வஸ்துவையும் கற்பனையையுங் கடந்து நின்ற ஐசுவரியமாகி, கருது அரிய - நினைத்தற் கரிய, மலரின் மணம் (போல்) - மலரின் மணம்போலவும், எள்

ளில் எண்ணெய்(போல்)-எள்ளில் எண்ணெய்போலவும்,உடல் உயிர்போல்-உடலில் உயிர்போலவும், கலந்து-கலந்து நின்று, எந்நாளும்-எக்காலத்திலும், துரிய நடுவூடு இருந்த - துரியபதத்தின் இடையி லிருக்கின்ற, பெரிய பொருள் யாது - பெரியவஸ்து எது, அதனை - அந்த வஸ்துவை, தொழுதல் செய்வாம் - வணங்குவோம் (யாம்).—எ-று.

வேதத்திற் கூறப்படும் முடிந்த பொருள் பரம் பொருளே யாகலின் 'அருமறையின் சிரப்பொருளாய்' என்றார். முனிவர் - கடவுளை மனனஞ் செய்வோர். சித்தர் - அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசிதை, வசிதை என்னும் அட்டசித்திகளும் கைவந்த பெரியோர். இனி யோகாப்பியாச முடையவர் என்னலுமாம். தனக்கு முதலும் உவமிக்கப்படும் பொருளும் இல்லாததென்பார் 'காரணம் கற்பனை கடந்த செல்வமாகி' என்றும், கட்புலனுக்குத் தோன்றாது இடையீடு இன்றிச் சர்வத்திலும் வியாபகமாய் உள்ளது என்பார் 'மலரின் மணம் எள்ளிலெண்ணெய் உடலுயிர்போற் கலந்து' என்றுங் கூறினர். காரணம் - ஆதி. கற்பனை - இல்லாததை யுண்டாக்குதல்.

9. விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்தி லடக்கிவெறு
 வெளியாய் ஞானக்
கண்ணாரக் கண்டவன்பர் கண்ணூடே யானந்தக்
 கடலாய் வேறொன்
றெண்ணாத படிக்கிரங்கித் தானகச்செய்தருளு
 மிறையே யுன்றன்
தண்ணாருஞ் சாந்தவரு ளைநினைந்து கரமலர்க
 டலைமேற் கொள்வாம்.

இ - ள். விண்ணாதி பூதம் எல்லாம் - ஆகாயம் முதலான பூதங்களையெல்லாம், தன் அகத்தில் அடக்கி - தனக்குள்ளே யொடுக்கி, வெறுவெளி ஆய் - வெட்டவெளியாகி, ஞானக்கண் ஆர - ஞானக்கண் நிறையும்படி, கண்ட அன்பர் - தரிசித்த அன்பர்களுடைய, கண்ணூடு - (அந்த) ஞானக் கண்ணினிடத்து, ஆநந்தக்கடலாய்-இன்பசாகரமாகி, வேறு ஒன்று எண்ணாத படிக்கு இரங்கி - (அந்த அன்பர்கள்) மற்றொன்றையும் நினையாத வண்ணம் (அவர்களிடத்தில்) மனமிரங்கி, தானகச் செய்தருளும் இறையே - தானாகச் செய்தருளாநின்ற தலைவனே, உன்றன் - உனது, தண் ஆரும் - குளிர்ச்சி நிறைந்த, சாந்த அருள்தனை நினைந்து - சாந்த ரூபமான கருணையை யெண்ணி, கரமலர்கள் - கைம்மலர்களை, தலைமேல்கொள்வாம் - சிரத்தின் மீது கொள்வோம் (யாம்). எ-று.

விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்திலடக்கி என்றது மூலப் பிரகிருதியி லடக்கி யென்றபடி. தனக்குக் காரணம் ஒன்று மின்றிச் சுயம்புவாய்த்

தன்னிடத்தே விண்முதலிய எல்லாப் பூதங்களையும் அடக்கி யுள்ளது என்பார் 'விண்ணாதி பூதமெல்லாம் தன்னகத்திலடக்கி வெறுவெளியாய்' என்றார். பூதங்கள் அடங்குதற்கு இடம் தானாகலின் அவைகளின் தோற்றத்திற்கும் இடம் தானே என்றுணர்க. மாயா பாசத்தில் கட்டுண்டு வருந்தும் ஆன்மகோடிகளுக்கு இறைவன் பரிபாக காலமறிந்து தானாகவந்து அருள் செய்யுமென்பார் 'வேறொன் றெண்ணாதபடிக் கிரங்கித் தானாகச் செய்தருளு மிறையே' என்றார். இறை - எல்லாப்பொருளுக்குந் தலைவன்.

**10.** விண்ணிறைந்த வெளியாமென் மனவெளியிற் கலந்தறி
 வெளியி னாடும் [வாம்
 தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
 தகையே நின்பால்
 உண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி மொழிகுழறி
 யுவகை யாகிக்
 கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப நின்னருளைக்
 கருத்தில் வைப்பாம்.

இ - ள். விண் நிறைந்த வெளி ஆய் - பூதாகாயம் நிறைதற்குரிய பரமாகாயமாகி, என்மன வெளியில் கலந்து-எனது இதயாகாயத்திற் சேர்ந்து, அறிவு ஆம் வெளியினூடும்-ஞானாகாயத்திலும், தண் நிறைந்த பேரமுதாய்-குளிர்ச்சி மிகுந்த பெரிய அமிர்தமாகி, சதாநந்தமான பெருந்தகையே - இடையறாத இன்பமயமான பெருமை யுடையோனே, நின்பால் - உன்னிடத்தில், உள் நிறைந்த பேரன்பால் - தனக்குள்ளே நிறைந்த பேரன்பினால், உள் உருகி - மனங்கரைந்து, மொழிகுழறி - சொல் தடுமாறி, உவகை ஆகி - சந்தோஷமடைந்து, கண் - விழிகள், நிறைந்த புனல் உகுப்ப - தம்மிடத்து நிறைந்த நீரைச்சிந்த, கரம் முகிழ்ப்ப - கைகள் குவிய, நின் அருளை கருத்தில் வைப்பாம் - உன் கருணையை எமது கருத்திலிருத்துவோம் (யாம்). எ - று.

பரமாகாயமாகிய இறைவன் ஆன்மகோடிகளின் அந்தக் கரணங்களிற் கலந்து சதாநந்தமயமாய் இருக்கின்றான் என்பார் 'விண் ணிறைந்த வெளியாய் என்மனவெளியிற் கலந்து அறிவாம் வெளியினூடும் தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதாநந்தமான பெருந்தகையே' என்றார். அவ்வாறு ஞானாகாயத்தினும் குளிர்ச்சி நிறைந்த அமுதம்போ லினிமையாய் விளங்கும் சதாநந்தப் பரம்பொருளை மனம், மொழி, மெய்களால் வணங்க அவ்விறைவனது திருவருளை நாடுவேன் என்பது கருத்து.

மொழிகுழறி என்றது உவகையால் மனம் விழுங்கப்பட்டு மொழி தழுதழுத்தல்.

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**11.** ஆதியந்தங் காட்டாத முதலா யெம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னை போல
நீதிபெறுங் குருவாகி மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமல மாகி
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியையென் னுயிர்த்துணையை நாடிக் கண்ணீர்
சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம்.

இ - ள். ஆதி அந்தம் காட்டாத முதல் ஆய் - தோற்றக் கேடுகளை யுடையதல்லாத முதற்பொருளாகி, எம்மை - எங்களை, அடிமைக்கா - தனது திருத்தொண்டுக்காக, வளர்த்தெடுத்த அன்னைபோல - வளர்த்தெடுத்த தாய் போல, நீதி பெறுங் குரு ஆகி - நீதியையுடைய ஆசாரியனாகி, மனவாக்கு எட்டா - மனோவாக்குகளுக்குத் தட்டுப்படாத, நிச்சயம் ஆய் - சாசுவதப் பொருளாகி, சொச்சமது ஆய் - களங்கரஹிதமாகி, நிமலம் ஆகி - மலரஹித மாகி, வாதம் இடும் - தர்க்கவாதஞ் செய்கின்ற, சமயநெறிக்கு அரியதாகி - சமயமார்க்கங்களுக்கு அறிவரிதாகி, மௌனத்தோர்பால் - மௌனநிலையை யுடையோரிடத்து, வெளி ஆய் வயங்காநின்ற - வெளிப்பட்டு விளங்கு கின்ற, சோதியை - தேஜோராசியை, என் உயிர்த்துணையை - என்னுயிர்க் குதவியாயிருப்பதை, நாடி - குறித்து, கண் நீர் சொரிய - கண்கள் நீரைச் சிந்த, இருகரம் குவித்து - இரு கைகளையுங் குவித்து, தொழுதல் செய் வாம் - வணங்குவோம் யாம்.—எ - று.

பிறப்பும் இறப்பும் இல்லாத முதற்பொருளாகிய பரம் பொருள் ஆத்ம கோடிகளை அடிமைகொள்ளவென்றே உயிர்களுக்குத் தாய்போல் அன்பு மிகுந்து சற்குருவடிவங் கொண்டுவந்து சமயாதீதப்பட்ட மௌனநிலையுடைய ஞானியர்பால் விளங்கும் என்பது கருத்து. நீதி பெறுங் குரு - சதா சாரியன்.

**12.** அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல தாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம்.

இ-ள். அகர உயிர்-அகரவுயிரானது, எழுத்து அனைத்தும் ஆகி-எல்லா வெழுத்துக்களுந் தானேயாகி, வேறு ஆய் அமர்ந்தது என - அவற்றிற்கு வேருகி யமைந்து நிற்பதுபோல, அகிலாண்டம் அனைத்தும் ஆகி - சகலாண்ட சராசரங்களும் தானே ஆகி, பகர்வன எல்லாம் ஆகி - சொல்லப்படுவனவாகிய பொருள்களெல்லா மாகி, அல்லது ஆகி - அவை யல்லாததாகி, பரம் ஆகி - எல்லாப் பொருள்களுக்கும் மேலான பொருளாகி, சொல் அரிய யான்மை ஆகி - சொல்லுதற்கரிய தன்மையதாகி, துகள் அறு சங்கற்ப விகற்பங்கள் எல்லாம் - குற்றமற்ற சங்கற்பமும் விகற்பமுமாகிய எல்லாவற்றிலும், தோயாத அறிவு ஆகி - படியாத ஞானவடிவாகி, சுத்தம் ஆகி - புனிதமாகி, நிகர் இல் பசு பதி ஆன பொருளை - ஒப்பற்ற ஆன்மாக்களுக்கு இறைவனுகிய வஸ்துவை, நாடி - உத்தேசித்து, நெட்டுயிர்த்து - பெருமூச்செறிந்து, பேரன்பால் - பெரிதான அன்போடு, நினைதல் செய்வாம் - தியானிப்போம் (யாம்). எ - று.

நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறக்கும் அகரவொலி எழுத்துக்கள் அனைத்தினுங் கலந்தும், வேருய்த் தனித்தும் நிற்பதுபோல், பரம்பொருள் அண்ட சமூகங்களும், அவ்வண்ட சமூகங்களிலுள்ள ஒவ்வொரு தனிப் பொருளும் தானே யென்று சொல்லவும் ஆம் என்பார் 'அகரவுயி ரெழுத் தனைத்துமாகி' முதலியவாகக் கூறினர். பிரபஞ்சத் தோற்றக் கேடுகளில் தனக்கு விருப்பும் வெறுப்பும் இல்லை என்பார் 'துகளறு சங்கற்ப விகற்பங்களெல்லாந் தோயாத அறிவாகி' என்ருர்.

துகளறுசங்கற்பம் - சுத்தசங்கற்பம். விகற்பம் - வேறுபாடு. 'அகர வுயிர் போலறிவாகி யெங்கும் - நிகரி லிறைநிற்கு நிறைந்து' என்ருர் பிறரும்.

---

## சின்மயானந்தகுரு.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

1. அங்கைகொடு மலர்தூவி யங்கமது புளகிப்ப
 வன்பினு ளுருகிவிழிநீர்
 ஆருக வாராத முத்தியின தாவேச
 வாசைக் கடற்குண்மூழ்கிச்
 சங்கர சுயம்புவே சம்புவே யெனவுமொழி
 தழுதழுத் திடவணங்கும்
 சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
 தண்ணருள் கொடுத்தாள்வையோ
 துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்கள்
 தொழுதருகில் வீற்றிருப்பச்

சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபானு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ-ள். அம் கைகொடு மலர்தூவி-அழகிய கைகளால் மலர்களைச்சொரிந்து, அங்கமது புளகிப்ப - சரீரமானது புளகங்கொள்ள, அன்பினால் உருகி-. அன்பினால் மனங்கரைந்து, விழிநீர் ஆறு ஆக - கண்ணீர் ஆறாகிப் பெருக, ஆராத - தெவிட்டாத, முத்தியினது ஆவேச ஆசை கடற்குள் மூழ்கி - மோக்ஷாவேசத்தோடு கூடிய ஆசையாகிய சமுத்திரத்தில் முழுகி, சங்கர - சங்கரனே, சுயம்புவே - சுயம்புவாயிருப்பவனே, சம்புவே - சம்புவாயிருப்பவனே, எனவும் - என்று துதித்தும், மொழி தழுதழுத்திட - மொழி குழறும்படி, வணங்கும் - தொழுகின்ற, சன்மார்க்க நெறி இல்லா - நன்னெறி யொழுக்கமில்லாத, துன்மார்க்கனேனையும் - துன்மார்க்கனாகிய என்னையும், தண் அருள் கொடுத்து ஆள்வையோ - குளிர்ச்சியாகிய கருணை செய்து ஆண்டருள்வாயோ, துங்கம் மிகு பக்குவம் - பரிசுத்தமிகுந்த பக்குவத்தையுடைய, சனகன்முதல் முனிவோர்கள்-சனகன்முதலாகிய முனிவர்கள் நால்வரும், தொழுது அருகில் வீற்றிருப்ப - வணங்கிச் சமீபத்தில் வீற்றிருக்க, சொல் அரிய நெறியை - சொல்லுதல் அருமையாகிய ஒப்பற்ற ஞானமார்க்கத்தை, ஒரு சொல்லால் உணர்த்தி - ஒருமொழியால் அறிவுறுத்தி, சொரூபானுபூதி காட்டி - சொரூபானுபவத்தைக் காட்டி, செங்கமல பீடம் மேல் - செவ்விய பத்மாசனத்தின் மீது, கல்லால் அடிக்குள்வளர் - கல்லாலின்கீழ் எழுந்தருளியிருக்கின்ற, சித்தாந்தம் முத்தி முதலே - முடிவு செய்யப்பட்ட மோட்சப்ரதமான முதற்பொருளே, சிரகிரி விளங்கவரு - சிரகிரியின்கண் ஆன்மாக்கள் பிரகாசிக்க எழுந்தருளிய, தக்ஷிணமூர்த்தியே - தக்ஷிணமூர்த்தியே, சின்மயம் ஆநந்தம் குருவே - ஞானானந்தங்களைக் கொடுக்கிற சதாசாரியனே. எ - று.

மலர்தூவப் பெற்றமையால் அங்கையென்றார். இவ்வாறன்றி அகங்கை என்பது அங்கை என நின்றது என்றலுமொன்று. ஆவேசம் - முத்தியில் விரைவு. சங்கரன் - சுகத்தைக் கொடுப்போன். சுயம்பு - தானேயுண்டானவன், சம்பு - சுகமுண்டாதற் கிடமாயிருப்பவன், ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும் தாபத்ரயத்தால் தபிக்கப்பட்டவராதலால், அந்தத் தாபந் தணியத் தண்ணிய அருள் வேண்டு மென்பார் 'தண்ணருள் கொடுத் தாள்வையோ' என்றார். 'தவ்வனமூன் றடைந்து வெய்யில் சகித்திடாப் புழுப்போல் வெம்பி' என்றார் பிறரும். துங்க

மிகுபக்குவம் என்றது மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்னும் பக்குவம் நான்கனுள் தீவிரதரத்தை. சனகன்முதல் முனிவோர்கள் நால்வராவார்:—சனகன், சனந்தனன், சனற்குமாரன், சனத்ஸுஜாதன் என்பவர்; இந்நால்வரும் பிரமபுத்திரர். ஒருசொல் என்பது குருமுகத்தா லறியத்தகுவ தாதலால் அதின் விவரம் இவ்விடத்துக் காட்டப்படவில்லை. 'சிரகிரி விளங்கவரு' என்பதற்குச் சிரகிரியானது பிரகாசிக்கும்படி எழுந்தருளிய என்றுரைத்தலு மொன்று. சிரகிரி - சிராமலை. அது பூர்வத்தில் திரிசிரனால் ஆளப்பட்டது. பதுமாசனமாவது இருதொடைமேலும் இரண்டுள்ளங்காலையும் மாறித் தோன்றவைத்தல். பக்குவ நான்கனுள் தீவிரதர பக்குவமுடைய ராதலால் 'துங்கமிகுபக்குவம்' என்றும், அவர் இன்னாரென்பதுபட 'சனகன்முதல் முனிவோர்கள்' என்றும், அவர்கள் வணங்கி நிற்பக் குருமொழி வைத்தானென்பார் 'தொழுதருகில் வீற்றிருப்ப ஒரு சொல்லாலுணர்த்தி' என்றும், அந்நெறி பிறரடைவதற் கரிதாகலின் 'சொல்லரிய நெறியை' என்றும், அந்நெறி யடைந்தார் பெறும்பேற்றை 'சொரூபானுபூதிகாட்டி' என்றும், அதனை இறைவன் பதுமாசனத்தி லிருந்துகொண்டு கல்லாலின்கீழிருந் துபதேசித்தமையான் 'செங்கமலபீடமேற் கல்லாலடிக்குள் வளர்' என்றும், அவன் சைவசித்தாந்தத்திற் கூறும் பரமுத்திச் செல்வந்தரு மிறைவனென்பது தோன்ற 'சித்தாந்த முத்திமுதலே' என்றுங் கூறினர்.

2. ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்ற பாவிநா
 னத்துவித வாஞ்சையாதல்
அரியகொம் பிற்றேனை முடவனிச் சித்தபடி
 யாகுமறி வின்பம்
தாக்கும்வகை யேதிநாட் சரியைகிரி யாயோக
 சாதனம்வி டுத்ததெல்லாம்
சன்மார்க்க மல்லவிவை நிற்கவென் மார்க்கங்கள்
 சாராத பேரறிவதாய்
வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து
 வாய்க்கும் படிக்குபாயம்
வருவித் துவட்டாத பேரின்ப மானசுக
 வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
 சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
 சின்மயா னந்தகுருவே.

இ-ள். ஆக்கையென்னும் இடிகரையை-சரீரமென்கிற இடிகரையை, மெய்யென்ற பாவிநான் - உண்மையென் றெண்ணி யிருக்கிற பாவியாகிய நான், அத்துவித வாஞ்சை ஆதல் - அத்துவிதப் பொருளின்மேல் இச்சை வைத்தல், அரியகொம்பில் தேனை - எட்டுதற்கரிய கொம்பிற் கட்டப்பட் டிருக்கின்ற தேனை (உண்ண), மூடவன் இச்சித்தபடி ஆகும் - மூடவன் விரும்பினவிதமாகும், (இவ்வாறானபின்) அறிவு அவிழ - (எனது) அறிவானது விகசிக்கும்படி, இன்பம் தாக்கும் வகை ஏது - சுகமுண்டாகும் வகை யாது, இந்நாள் - இந்நாளளவும், சரியை கிரியா யோகசாதநம் விடுத்தது எல்லாம் - சரியை கிரியை யோகம் என்பவற்றின் பழக்கத்தை விட்டு விட்டதெல்லாம், சன்மார்க்கம் அல்ல - நல்லநெறியன்று, இவைநிற்க - இவைநிற்கட்டும், என்மார்க்கங்கள் சாராத பேரறிவ்தாய் - எத்தன்மையாகிய மார்க்கங்களும் அணுகாத பெரிய அறிவுருவாகி, வாக்குமனம் அணுகாத - வாக்கும் மனமும் பொருந்தாத, பூரணப்பொருள் - பூரணவஸ்துவானது, வந்து வாய்க்கும்படிக்கு - வந்துகிடைக்கும்படிக்கு, உபாயம் வருவித்து - உபாயத்தையுண்டாக்கி, உவட்டாத-தெவிட்டாத, பேரின்பமான - பேரானந்தமான, சுகவாரியினை - இன்பசாகரத்தை, வாய்மடுத்து - வாய்வைத்து, தேக்கித்திளைக்க - நிறைய அநுபவிக்க, நீ முன் நிற்பது என்று - நீ எனக்குப் பிரத்தியக்ஷமாவது எக்காலம், சித்தாந்த முத்தி முதலே—எ - று.

இடிகரை-ஆற்றோரத்தில் வெள்ளத்தால் கீழறுக்கப்பட்டு நின்ற கரை. பொய்யாகிய உடலை மெய் என்பது மங்கலவழக்கு. இதுகாறும் தேகாதிப் பிரபஞ்சமே மெய்யென்றெண்ணி யிருந்தேனாதலால் 'ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்றபாவி நான்' என்றும், நான் ஒன்றிரண்டென்னாத வுண்மைநெறியை விரும்பியது மூடவன் கொம்புத்தேனுக் கிச்சித்தபடியாமென்பார் 'அரியகொம்பிற்றேனை மூடவனிச்சித்தபடி யாகும்' என்றும், அஃதிவ்வாறெனின் இன்பநிலை கிடைப்ப தெவ்வாறென்பார் 'அறிவவிழவின்பந் தாக்கும்வகையேது' என்றும், அது கைவரச் சரியை கிரியா யோகங்களைச் செய்துவந்தும் கிட்டாமையால் 'சரியை கிரியா யோக சாதனம் விடுத்ததெல்லாம் சன்மார்க்கமல்ல' என்றும், அச்சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாய அந்தமிலின்பத்தழிவில் வீடுபேற்றை அருள்செய்ய வேண்டும் என்பார் 'நீ முன்னிற்பதென்று காண்' என்றுங் கூறினார்.

3. ஒளவிய மிருக்கநா னென்கின்ற வாணவ
மடைந்திட் டிருக்கலோபம்
அருளின்மை கூடக்க லந்துள் ளிருக்கமே
லாசாபி சாசமுதலாம்
வெவ்விய குணம்பல விருக்குமென் னறிவூடு
மெய்யனீ வீற்றிருக்க

விதியில்லை யென்னிலோ பூரணனெ னும்பெயர்
விரிக்கி லுரை வேறுமுளதோ
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினாற்
கட்டுண்ட வுயிர்கண்மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
கதியான பூமிநடுவுள்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ-ள். ஔவியம் இருக்க - பொறாமையானது இருக்கவும், நான் என்கின்ற ஆணவம் - நான் என்கிற ஆணவமானது, அடைந்திட்டிருக்க - சேர்ந்திருக்கவும், லோபம் - லோபகுணமும், அருள் இன்மை கூட - அருளில்லாமையும், கலந்து உள் இருக்க - கலந்து உள்ளே இருக்கவும், மேல்-பின்னும், ஆசாபிசாசம் முதல் ஆம்-ஆசையென்னும் பேய்முதலாகிய, வெவ்வியகுணம்-கொடியகுணங்கள், பல இருக்கும் - அனேகம் தங்கியிருக்கின்ற, என் அறிவூடு-என் னறிவினிடத்தில், மெய்யன்-மெய்யனாகிய, நீ வீற்றிருக்க - நீ எழுந்தருளியிருக்க, விதியில்லை என்னில் - விதியில்லையென்று சொல்வாயாயின், பூரணன் என்னும் பெயர் - பூரணன் என்கிற (உன்) திருநாமத்தை, விரிக்கில் - விரித்தால், உரை - அதின்பொருளானது, வேறும் உளதோ - வேறும் இருக்குமோ, கவ்வும் மலம் ஆகின்ற - பற்றுகின்ற மும்மலமாகிய, நாகபாசத்தினால் - நாகபாசத்தால், கட்டு உண்ட - பிணிப்புண்ட, உயிர்கள் - உயிர்களுடைய, மூர்ச்சை - மூர்ச்சித்துக்கிடக்கிற நிலை, கடிது அகல - விரைவாக நீங்கும்படி, வலியவரும் - பிரார்த்தியாமலே வந்த, ஞான சஞ்சீவியே - ஞானசஞ்சீவினியே, கதி ஆன பூமி நடு உள் - மோக்ஷ மென்கிற நிலத்தினிடையில், செவ்விதின் வளர்ந்து ஓங்கு - செவ்வையாக வளர்ந்துயர்ந்த, திவ்யம் - தெய்விகமான, குணமேருவே - குணமலையே, சித்தாந்த முத்தி முதலே—எ - று.

ஔவிய முதலான தீக்குணத் தொகுதியோடு மெய்யனாகிய நீ வீற்றிருப்பது தகுதியன்றாயினும் பூரணநாமப் பொருள் விரிக்குமிடத்து நீ வீற்றிருந்தே தீரவேண்டு மென்றாயிற்று. சலித்தலின்மையால் குணமேரு என்றார். "குணமென்னுங் குன்று" என்றார் பிறரும். ஆன்மாக்கள் மும்மலங்களால் அறிவிழந்து கட்டுண்டிருத்தலால் அதனை உருவகப்படுத்தி 'கவ்வுமலமாகின்ற நாகபாசத்தினாற் கட்டுண்ட வுயிர்கள்' என்றும், அந்நாகபாசம் சஞ்சீவியாலல்லது நீங்காதென்பார். அம்மலமாயா கன்மங்களை நீக்கும் இறைவனை 'கடிதகல வலியவரு ஞானசஞ்சீவி' என்றுங் கூறினார்.

**4.** ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேதமான

யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும்வகுத்துச்

சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்தமோன

சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்கவிலையோ

பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவில்

போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே

தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்திமுதலே

சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ-ள். ஐவகையெனும் - ஐந்துவகையென்று சொல்லப்படுகிற, பூதம் ஆதியை வகுத்து - பூதங்கள் முதலான பிரபஞ்சத்தைப் படைத்து, அதனுள் - அதனிடத்தில், அசரம் சரம் பேதம் ஆன - அசரம் சரம் என்று வேறுபட்டிருக்கிற, யாவையும் வகுத்து - உயிர்களெல்லாவற்றையும் படைத்து, நல்அறிவையும் வகுத்து - (அவைகளுக்கு) நல் உணர்வையும் படைத்து, மறை ஆதி நூலையும் வகுத்து - வேதம் முதலான நூல்களையும் படைத்து, சைவம் முதல்ஆம் - சைவம் முதலாகிய, அளவு இல் சமயமும் வகுத்து - அளவில்லாத சமயங்களையும் படைத்து, மேல் - அதற்குமேல், சமயம் கடந்த - சமயாதீதமான, மோன சமரசம் வகுத்த நீ - மோனமாகிய சமரச நிலையைப் படைத்த நீ, உன்னை நான்அணுகவும் - உன்னையான்அடையவும், தண்அருள் வகுக்க இலையோ-குளிர்ந்த கிருபையைப் படைக்கவில்லையோ, பொய்வளரும் நெஞ்சினர்கள் - பொய்யானது விருத்தியடைகின்ற மனத்தை யுடையவர்களாகிய அஞ்ஞானிகள், காணாத காட்சியே - காணக்கூடாத காட்சியே, பொய் இல்லா மெய்யர் அறிவில் - பொய்யில்லாத மெய்யரது அறிவினிடத்து, போதபரி பூரண அகண்டித ஆகாரமாய் - ஞான பரிபூரண அகண்டித ரூபமாகி, போக்கு வரவு அற்ற பொருளே - போக்கு வரவுகள் இல்லாதிருக்கிற வஸ்துவே, தெய்வமறை முடிவு ஆன - தெய்விகமான வேதத்தின் முடிவாகிய, பிரணவ சொரூபியே - ஓங்கார சொரூபனே, சித்தாந்த முத்திமுதலே—எ-று.

பஞ்சபூதாதிகளை வகுத்த நீ, உன்னைநான் அணுகுமாறு வகுத்திலை யாதலால் உனது சர்வ சக்திக்குப் பங்கம் நேரிடுமென் றையுற் றிரங்கா நின்றே னென்பது கருத்து.

பிரபஞ்சமே மாயாகாரிய மாகலின் 'ஐவகையெனும் பூதமாதியை வகுத்து' என்றும், அப்பஞ்சபூதங்களிலும் சரம் அசரமாகிய யாவுந் தோன்ற லின் 'அதனு ளசரசர பேதமான யாவையும் வகுத்து' என்றும், அவ்வாறு வகுத்து நல்லுணர்வு கைகூடாதவிடத்துப் பதிஞானந் தோன்றா தாகலின் 'நல்லறிவையும் வகுத்து' என்றும், அவ்வறி கருவியாக வேதாகம முதலியன பயிலவேண்டலின் 'மறையாதிநூலையும் வகுத்து' என்றும், அம்மறையாதி கலைகளால் அவரவர் பக்குவத்துக் கீடாகப் பேதவாதமுதல் பாடாண சைவ மீறாகச் சமயநூல்களைக் கற்று அவற்றையே மெய்யெனத்துணிதலின் 'சைவ முதலா மளவில் சமயமும் வகுத்து' என்றும், திருவருளே துணையாக அவை மெய்யன்றெனக் கடப்பதோர் நெறி யெய்தலின் அவைகளைக் கடந்த துணையானே சுத்தாத்துவித வைதிக சைவநெறியிற் செல்ல வகுத்த மையான் அவ்விறைவனை 'மேற்சமயங் கடந்த மோன சமரசம் வகுத்த நீ' என்றும், தேவரீரை யானடையத் திருவருளேதாரகமாகச் செய்யாதிருத்தல் நன்றன்றென்பார் 'உன்னை நானணுகவுந் தண்ணருள் வகுக்க விலையோ' என்றும், தன்னை யடையாதார்க்கு எளிய னன்றென்பார் 'பொய்வளரு நெஞ்சினர்கள் காணுதகாட்சியே' என்றும், தன்னையடைந்தார்க் கெளிய னென்பார் 'பொய்யிலா மெய்யரறிவிற் போதபரிபூரண வகண்டிதாகார மாய்ப்போக்குவரவற்றபொருளே' என்றும், அவனின்னனென்பார் 'தெய்வ மறைமுடிவான பிரணவ சொரூபியே' என்றுங் கூறினார். போத பரிபூரண வகண்டிதாகாரம் - ஞானத்தினால் நிறைவுடையதாகியும் குறைவற்றதாகியு முள்ள ரூபம். போக்குவரவற்ற பொருள் - நித்தியமாயும் நிச்சலமாயும் நிர் விகாரமாயுமுள்ள பிரமப்பொருள்.

5\. ஐந்துவகை யாகின்ற பூதமே தத்தினா
லாகின்ற வாக்கைநீர்மேல்
அமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநா
னறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி யென்றிருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தவிவை
போனவழி தெரியவில்லை
எந்தநிலை பேசினு மிணங்கவிலை யல்லா
லிறப்பொடு பிறப்பையுள்ளே

எண்ணினுநெஞ்சது பகீரெனுந் துயிலுரு
திருவிழியு மிரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கமிவை யென்கொலோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ - ள். ஐந்து வகை ஆகின்ற - ஐந்துவகையாயிருக்கிற, பூதபேதத்தினால் - பூதங்களின் வேறுபாட்டால், ஆகின்ற ஆக்கை - உண்டாக்கப்படுகிற சரீரமானது, நீர்மேல் அமர்கின்ற - நீரின்மீது அமைந்த, குமிழி என - மொக்குள்போல, நிற்கின்றது என்ன - நிற்கிறதென்று, நான் அறியாத காலமெல்லாம் - நான் உணராத காலமுழுதும், புந்தி மகிழ் உற - மனமகிழ்ச்சி மிகும்படி, உண்டு உடுத்து இன்பம் ஆவதே - உண்டு உடுத்து இன்பம் அநுபவிப்பதே, போந்த நெறி என்று இருந்தேன் - கைவந்த நல்ல மார்க்கமென்று நினைந்திருந்தேன், நினது அருள் வந்து - உன் திருவருள் வந்து, பூராயமாக உணர்த்த - ஆத்யந்தமாக அறிவிக்க, இவை - இவைகள், போனவழி தெரிய இல்லை - போனவழி தோற்ற வில்லை, எந்த நிலை பேசினும் - எந்தநிலையை எடுத்துப்பேசினாலும், இணங்க இல்லை - சம்மதிக்க இல்லை, அல்லால் - அல்லாமலும், இறப்பொடு பிறப்பை - மரணத்தோடு ஜனனத்தையும், உள்ளே எண்ணினால் - மனத்தில் நினைத்தால், நெஞ்சது - மனமானது, பகீர் என்னும் - பகீரென்கின்றது, இருவிழியும் - இரண்டு கண்களும், துயில் உறாது - நித்திரை செய்யாது, அங்கம் - சரீரமானது, இரவுபகலாய் - இரவுபகலாக, செந்தழலில் - செந்தீயில் இட்ட, மெழுகு ஆனது - மெழுகா யுருகின்றது, இவை என் - இத்தன்மைகள் என்னிடத்துண்டாவதற்குக் காரணம் யாது, சித்தாந்த முத்தி முதலே—எ-று.

ஐந்துவகையாகின்ற பூத பேதத்தினா லாகின்ற ஆக்கை என்றது பூத பஞ்சீகரணத்தா லாக்கப்படுகின்ற சரீரமென்றபடி.

சரீரமானது நிலமுதலிய பஞ்சபூத பரிணாமமாகையால் 'ஐந்துவகையாகின்ற பூதபேதத்தினா லாகின்ற வாக்கை' என்றும், அது நிலையின்மை யென்பதனைப் பெரியோர்சொல்லக்கேளாமற் காலங்கழித்தேனென்பார் 'நீர்மேலமர்கின்ற குமிழியென நிற்கின்றதென்ன நானறியாத காலமெல்லாம் புந்திமகிழுற வுண் டுடுத்தின்பமாவதே போந்தநெறியென்றிருந்தேன்' என்றும், இவ்வாறாகக் காலங்கழித்தவெனக்குச் சத்திநிபாதம்வருவித்து என்னையும் உன்னையும் உணர்த்த அம்மலமாயா கன்மங்களினியல்பும் என்னியல்பும் உன் னியல்பு முணர்ந்த காலத்தில் மலவாசனை யொழிந்தது தெரியாதென்பார் 'நினதருள்வந்துணர்த்தவிவைபோனவழி தெரியவில்லை' என்றும், இனிப் பிறப் பிறப்புக்களான் வருந் துன்பங்கள் இல்லையாதலால் அவற்றை

நோக்கின் நெஞ்சந் துணுக்குறலால் 'இறப்பொடு பிறப்பையுள்ளே எண்ணி ஞல் நெஞ்சது பகீரெ ன்னும் துயிலுறு திருவிழியும்' என்றும் இதனுல் உடல் குழம்ப வருந்துகின்றேன் அதற்குக் காரணமென்னவென்பார் 'செந்தழலின் மெழுகான தங்கமிவையென்' என்றும் கூறினர்.

6. காரிட்ட வாணவக் கருவறையி லறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போல்
கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை யமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பி னமனைவிட்
டிடருற வுறுக்கியிடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி
லிசைந்துதுயில் கொண்மினென்று
சீரிட்ட வுலகன்னை வடிவான வெந்தையே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ - ள். கார் இட்ட-கருமையாகிய, ஆணவக் கரு அறையில் - ஆணவ மலத்தால் உளதாகின்ற கருவாகிய சிறுவீட்டில், அறிவு அற்ற - உணர்ச்சியில்லாத, கண் இல்லா - கண்ணற்ற, குழவியைப்போல் - குழந்தையைப் போல, கட்டுண்டு இருந்த எம்மை - கட்டுப்பட்டிருந்த எங்களை, வெளியில் விட்டு - வெளியில் வரச் செய்து, அல்லல் ஆம் காப்பு இட்டு - துன்பமாகிய காவலை அமைத்து, அதற்கு இசைந்த பேர் இட்டு - அதற்குப் பொருத்தமான பெயரமைத்து, மெய்யென்றுபேசு - உண்மையென்று பேசப்படுகின்ற, பாழ் பொய் உடல் - பாழாகிய நிலையற்ற சரீரமானது, பெலக்க - வலிமை பெறும்படி, விளை அமுதம் ஊட்டி - விளைகின்ற (பலவகை) உணவுகளை உண்பித்து, பெரிய புவனத்தினிடை - பெரிதாகிய உலகத்தின்கண், போக்குவரவு உறுகின்ற - இறப்புப் பிறப்புகளாகப் பொருந்துகின்ற, பெரிய விளையாட்டு அமைத்திட்டு - பெரிதாகிய லீலையை அமைத்துவைத்து, ஏர் இட்ட - அழகுபொருந்திய, தன் மொழி - தன் சொல்லாகிய, சுருதி - வேத மார்க்கத்தில், தப்பில் - தவறினல், (அப்படித் தவறின வுயிர்களை) நமனை விட்டு - யமனை அனுப்பி, இடர் உற உறுக்கி - துன்பம் மிகும்படி தண்டித்து, இடர் தீர்த்து - அத்துன்பத்தையும் நீக்கி, இரவு பகல் இல்லாத -

மறைமலையடிகள் நூல்நிலையம் MARAIMALAI ADIGAL LIBRARY MADRAS-1

இராப்பகல்கள் அற்ற, பேரின்ப வீட்டினில் இசைந்து - பேரானந்தவீட்டில் பொருந்தி, துயில்கொண்மின் என்று - தூங்குங்கள் என்று, சீரிட்ட - (எங்களுக்கு எல்லாச்சிறப்புக்களையும்) அமைத்துவைத்த, உலகு அன்னை வடிவு ஆன எந்தையே - லோகமாதாவின் ரூபமான எமது தந்தையே, சித்தாந்த முத்தி முதலே—எ-று.

இரவுபகலில்லாத பேரின்பவீடு என்றது இருளொளிகளின்றி எப்பொழுதும் தேஜோராசியாய் விளங்கு மோர் ஒளிப்பிழம்பு. இதனைச் சுயஞ்சோதி யென்பர். "இராப்பக லற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே" என்றார் பிறரும்.

இறைவனை உலகன்னையைப்போ லுருவகஞ் செய் ததற்கேற்ப அநாதியிலேயே ஆணவமலத்திலே கட்டுப்பட்டிருந்த உயிர்களுக்குத் தனுகரண புவனபோகங்களைக் கொடுத்தானென்பார் 'காரிட்டவாணவக் கருவறையி லறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்தவெமை வெளியில் விட்டு' என்றும், பின்பு வாலைப்பருவத்தி லறியாமை முதலியவற்றாலும், ஏனைப்பருவத்தும் அவ்வப்பருவத்தும் நிகழுமவற்றாலும் துன்பங்களாகையால் அவற்றையே 'காப்பிட்டு' என்றும், அவற்றிற்குப் பொருந்த அவ்வான்மாக்களுக்குச் சீவனென்று 'பேரிட்டு' என்றும், பின்னர் அவன் எடுத்துக்கொண்ட சரீரத்தைப் பாதுகாப்பது கருதி அது பெலக்கப் போகங்களைக் கொடுத்தான் என்பார் 'பெலக்கவிளை யமுதமூட்டி' என்றும், இவ்வாறாகக் காக்கப்பட்ட உயிரைப் பிறப்பிறப்புக்களால் பொருந்தச் செய்தலின் 'போக்குவரவுறுகின்ற பெரியவிளையாட் டமைத்திட்டு' என்றும், அவ்வுயிர் தன் ஞானை கடவாதிருக்க வேத முதலிய கலைகளை அனுட்டியாமையான் நமனைவிட்டு வருத்துதலின் 'ஏரிட்டதன் சுருதிமொழிதப்பின் நமனைவிட்டடருற வுறுக்கியிடர்தீர்த்து' என்றும், அவ்வாறு செல்லாமல் வேதத்திற் கூறிய அறத்தின் வழி நடந்தாரைச் சகல கேவல மில்லாத தனிவீட்டில் சும்மா விருந்து ஆனந்த நித்திரை செய்வித்தலின் 'இரவுபக லில்லாத பேரின்ப வீட்டினிலிருந்து துயில்கொண்மின்' என்றும் கூறினார்.

7. கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
 களிம்புதோய் செம்பனையயான்
 காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே
 கனிவுபெற வுள்ளுருக்கிப்
 பருவமறிந்துநின் னருளான குளிகைகொடு
 பரிசித்து வேதிசெய்து
 பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
 பக்ஷத்தை யென்சொல்லுவேன்

அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்தமீதும்
அத்துவித நிலையரா யென்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவினூடும்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ-ள். கருமருவு குகை அனைய - கருப்பையிற் பொருந்திய குகையை யொத்த, காயத்தின் நடு உள் - சரீரத்தினிடையில், களிம்புதோய் செம்பு அனைய - களிம்புபற்றிய தாமிரத்தையொத்த, யான் - நான், காண் தக இருக்க - காணலாம்படி இருக்க, நீ ஞான அனல் மூட்டி - நீ ஞான நெருப்பை மூள்வித்து, கனிவுபெற - இளகும்படி, உள் உருக்கி - உள்ளே தானே உருகப்பண்ணி, பருவமது அறிந்து - பக்குவ முணர்ந்து, நின் அருள் ஆன - உன் திருவருளாகிய, குளிகைகொடு பரிசித்து - குளிகையினால் தீண்டி, வேதிசெய்து - வேதித்து, பத்துமாற்றுத் தங்கம் ஆக்கி - பத்துமாற்றுப் பசும்பொன்னாகச்செய்து, பணிகொண்ட - (என்னை) அடிமைகொண்ட, பட்சத்தை - உனது பெருங் கருணையை, என்சொல்லுவேன் - என்னசொல்வேன், அருமைபெறு - அருமையைக்கொண்ட, புகழ்பெற்ற - கீர்த்தியையடைந்த, வேதாந்த சித்தாந்தம் - வேதாந்த சித்தாந்தங்களாகிய, ஆதியாம் அந்தமீதும் - ஆத்யந்தங்களின்மேலும், அத்துவித நிலையராய் - அத்துவித நிலையை யுடையராகி, என்னை ஆண்டு - என்னை ஆட்கொண்டு, உன் அடிமை ஆனவர்கள் - உனக்கு அடிமைப்பட்டவர்களுடைய, அறிவின் ஊடும் - அறிவினிடத்தும், திருமருவு - அழகுபொருந்திய, கல்லால் அடிக்கீழும் - கல்லாலமரத்தின் அடியிலும், வளர்கின்ற - விருத்தியடையாநிற்கிற, சித்தாந்த முத்தி முதலே—எ-று.

தான் மாயாசம்பந்தப்பட்டு இருந்தமையால், தன்னைக் களிம்பொடு கூடிய செம்பாக வுவமித்தும், அவ்வாறாகிய தன்னைக் களிம்பை நெருப்பிலிடுவதுபோல ஞானாக்கினியில் தகிப்பித்தா னென்பார் 'நீ ஞான வனன் மூட்டியே கனிவுபெற வுள்ளுருக்கி' என்றும், பின்பு அச்செம்பினைப் பக்குவமறிந்து குளிகையால் வேதிப்பதுபோல, அருளான குளிகையாற் பரிசித்து வேதிசெய்தலால் 'அருளான குளிகைகொடு பரிசித்து வேதிசெய்து' என்றும், பின்பு அது பத்துமாற்றுப் பசும்பொன்னாவதுபோல, மலகேவலியாக்கி யாண்டமுறைமைநோக்கி 'பத்துமாற்றுத் தங்கமாக்கியே பணிகொண்ட பட்சத்தை யென்சொல்லுவேன்' என்றும், வேத முடிவாகிய உபநிடதப்பொருளும் ஆகமாந்தமாகிய சித்தாந்தப் பொருளுமே யவ்விறைவ

னிட மென்பார், 'வேதாந்த சித்தாந்தமாதியா மந்தமீதும்' என்றும், அவன் மெய்யுணர்ந்தா ருள்ளத்தும் கல்லாலடியினு மிருந்தானெனன்பார் 'அத்து வித நிலையரா யென்னையாண் டென்னடிமை யானவர்க ளறிவினூடும் திரு மருவு கல்லாலடிக்கீழும் வளர்கின்ற' என்றும் இவ்வாறு தன்னை யடிமை கொண்ட முறைமையைக் கூறியவாறென்க. இனி வேதாந்த சித்தாந்த மாதியா மந்தமீது மென்பதற்கு வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போ தாந்தம், யோகாந்தம், கலாந்தம் என்னும் சடந்தங்களினிடத்துமென் றுரை ப்பினு மமையும். இதனை 'வீறிய வேதாந்தமுதன் மிக்க கலாந்தவரை யாறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தென்னாளோ' என் றிவ்வாசிரியர் கூறுவதனானு முணர்க.

தங்கம் ஆக்குதல் பணி செய்தற்காதலால் தங்கமாக்கிப் பணிகொண்ட என வேறுமொருபொருள் தோன்றுமாறு கூறினர்.

**8.** கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்றுவிந்து
நாதமற் றைவகைப் பூதமே தமுமற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்ட வசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ-ள். கூடுதலுடன் பிரிதல் அற்று - கூடுதலோடு பிரிதலும் இல்லாத தாகி, நிர்த்தொந்தம் ஆய் - தொந்தமில்லாததாகி, குவிதலுடன் விரிதல் அற்று - கூம்புதலும் மலர்தலும் இல்லாததாகி, குணம் அற்று - குணரகித மாகி, வரவினொடு போக்கு அற்று - வருதலும் போகுதலும் இல்லாததாகி, நிலையான குறி அற்று - நிலையாகிய அடையாளம் இல்லாததாகி, மலமும் அற்று - மலரகிதமாகி, நாடுதலும் அற்று - நினைத்தலும் இல்லாததாகி, மேல் கீழ் நடு பக்கம் என - மேல் கீழ் நடு பக்கமென்று, நண்ணுதலும் அற்று - சொல்லப் பொருந்துதலும் இல்லாததாகி, விந்து நாதம் அற்று - விந்து

நாதங்கள் இல்லாததாகி, ஐவகை பூத பேதமும் அற்று - பஞ்ச பூத வேறு பாடுகளும் இல்லாததாகி, ஞாதுருவின் - ஞாதுருவோடு, ஞானம் அற்று - ஞானமும் இல்லாததாகி, வாடுதலும் அற்று - வாட்ட மடைதலும் இல்லாத தாகி, மேல் - மேலும், ஒன்று அற்று - ஒன்றுந்தன்மை இல்லாததாகி, இரண்டு அற்று - இரண்டாந்தன்மை இல்லாததாகி, வாக்கு அற்று - வார்த்தை யில்லாததாகி, மனமும் அற்று - மனமும் இல்லாததாகி, மன்னு - நிலை பெற்ற, பரிபூரணம் - பரிபூரணமாகிய, சுகவாரி தன்னில் - இன்பசாகரத்தில், வாய்மடுத்து உண்டு - வாய்மடுத்தருந்தி, அவசமாய் - பரவசமாகி, தேடுதலும் அற்ற இடம் - தேடுதலும் இல்லாத இடம், நிலை என்ற - உண்மைநிலையென்று உபதேசித்த, மௌனியே - மௌனகுருவே, சித்தாந்த முத்தி முதலே.—எ - று. ஞாதுரு - காண்பவன், ஞானம் - காணும் கருவியாகிய அறிவு.

'கூடுதலுடன் பிரிதலற்று' என்றது எல்லாப் பொருள்களிலும் ஒட்டியும் ஒட்டா திருத்தலை. 'நிர்த்தொந்தமாய்' என்றது சுக துக்கங்களில்லாமையை. 'குவிதலுடன் விரிதலற்று' என்றது விருத்தி க்ஷயமில்லாமையை. 'வரவினொடு போக்கற்று' என்றது பிறப்பிறப் பின்மையை. 'நிலையான குறியற்று' என்றது நாமரூப மின்மையை. 'விந்து நாதமற்று' என்றது சுத்தமாயையின் நீக்கத்தை. இதை 'நாதவிந்து களாதீத நமோநம' என்றதனு மறிக. 'சுகவாரி' என்றது நிரதிசய சுகரூபியாகிய கடவுளை. "ஆநந்தமாக்கடல்" என்றார் மேலோரும். 'வாக்கற்று மனமுமற்று' என்பதை "வாசகாதீத மனோலயபஞ்சரன்" என்றதனு மறிக.

**9.** தாராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்
தாயனைய கருணைகாட்டித்
தாளிணையென் முடிசூட்டி யறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ரதாயம்
ஓராமன் மந்திரமு முன்னுமன் முத்திநிலை
யொன்றோ டிரண்டெனமல்
ஒளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா
மொலியெனவு முணர்வுறாமல்
பாராது பார்ப்பதே யேதுசா தனமற்ற
பரமவனு பூதிவாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராம லந்நிலை
பதிந்தநின் பழவடியர்தம்

சீரா யிருக்கநினை தருள்வேண்டு மையனே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ-ள். தாராத அருள் எல்லாம் - தரக்கூடாத உனது திருவருள் முழுதும், தந்து அருள - தந்தருளும்படி, மௌனி ஆய் - மௌனகுருவாகி, தாய் அனைய - தாயையொத்த, கருணைகாட்டி - கிருபை செய்து, தாள் இணை - இரண்டு திருவடிகளை, என் முடி சூட்டி - என் சிரசில் தரித்து, அறிவில் சமாதியே - அறிவினிடத்துக் கூடும் நிஷ்டையே, சாசுவத சம்ப்ர தாயம் (என்று) - நிலையாகிய சம்ப்ரதாய மென்றும், ஓராமல் - பகுத்துணரா மலும், மந்திரமும் உன்னாமல் - மந்திரத்தை நினைக்காமலும், முத்திநிலை - மோக்ஷ நிலையானது, ஒன்றோடு இரண்டு என்னாமல் - ஒன்று இரண்டு என்று சொல்லாமலும், ஒளி எனவும் - ஒளியென்றும், வெளி எனவும் - வெளியென்றும், உரு எனவும் - உரு என்றும், நாதம் ஆம் ஒலியெனவும் - நாதமாகிய ஒலியென்றும், உணர்வு உறாமல் - அறியாமல், பாராதுபார்ப்ப தே - காணாமற் காண்பதே, ஏது சாதனம் அற்ற - எவ்வகைப்பட்ட சாத னங்களும் இல்லாத, பரம அநுபூதி வாய்க்கும் பண்பு என்று - மேலான அநுபூதிகிடைத்தற்குரிய உபாயமென்றும், உணர்த்தியது நீ - அறிவுறுத்தி னதை, பாராமல் - பகுத்தறியாமல், அ நிலை பதிந்த - அந்த நிலையிற்றங்கிய, நின் பழ அடியர் தம் - உனது பழைய அடியார்களுடைய, சீர் ஆய் இருக்க - சிறப்பை யடைந்திருக்க, நினது அருள் வேண்டும் - உன் திருவருள் வேண் டும், ஐயனே - கடவுளே, சித்தாந்த முத்தி முதலே—எ-று.

பாராது பார்ப்பது - தற்போதத்தை முன்னிட்டுப்பாராமல் திருவருளை முன்னிட்டுப் பார்ப்பது. "வாலே முகமாய் மதயானை யேறினேன், போலே யுன் போதமோ போய்த்தீண்டும்" என்றார் பிறரும்.

நின் திருவருள் ஞானம்பெற, மானைக்காட்டி மானைப் பிடிப்பார்போல் மௌன குருவாகிய திருவுருவங்கொண் டெழுந்தருளி வந்தாய் என்பார் 'தாராதவருளெலாந் தந்தருள மௌனியாய்த் தாயனைய கருணை காட்டி' என்றும், அங்ஙனம் காட்டியதுமன்றித் திருவடி தீக்ஷை செய்தாயெனன்பதுந் தோன்ற 'தாளிணை யென்முடிசூட்டி' என்றும், அறிவிடத்துக் கூடும் சமாதி யே வேண்டுமென்பதை யறியாமலிருந்தேன் என்பார் 'அறிவில் சமாதியே சாசுவதசம்ப்ரதாயம்' என்றும், அதன்றி மந்திரமுன்னாமலும், முத்திநிலையை ஒன்றென்றும் இரண்டென்றும் சொல்லாமலும் இன்னம் பலபடக்கொள் ளாமலும் பாராமற் பார்க்குநெறியே சிவானுபூதிச் செல்வ மென்பார் 'ஏது சாதனமற்ற பரமவனுபூதி வாய்க்கும் பண்பென்று' என அறிவுறுத்தியும்

தனக்கு அவனருள் வேண்டும் என்பார் 'உனதருள்வேண்டும்' என்றுங் கூறினர்.

**10.** போதமா யாதிநடு வந்தமு மிலாததாய்ப்
புனிதமா யவிகாரமாய்ப்
போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
ஆதரவு வையாம லறிவினை மறைப்பதுநி
னருள்பின்னு மறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பதுநி னருளாகி லெளியனேற்
கறிவாவ தேதறிவிலா
ஏதம்வரு வகையேது வினையேது வினைதனக்
கீடான காயமேதென்
இச்சாசு தந்தரஞ் சிறிதுமிலை யிகபர
மிரண்டினுண் மலைவுதீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ-ள். போதமாய் - ஞானவடிவாகி, ஆதி நடு அந்தமும் இல்லாதது ஆய் - ஆதிமத்யாந்த ரகிதமாகி, புனிதமாய் - பரிசுத்தமாகி, அவிகாரம் ஆய் - நிர்விகாரமாகி, போக்கு வரவு இல்லாத இன்பம் ஆய் - போக்கு வரவற்ற சுகவடிவாகி, நின்ற - நிலைபெற்ற, நின்பூரணம் - உன்னுடைய பரிபூர்ண நிலையையே, புகல் இடமது ஆ - அடைக்கலத் தானமாகக்கொண்டு, ஆதரவு வையாமல் - அதனிடத்து விருப்பம் வைக்காதவகை, அறிவினை மறைப்பதும் - என்னறிவைத் தடுப்பதும், நின் அருள் - உன் திருவருளே, பின்னும் - மேலும், அறிவு இன்மை தீர்த்து - அறியாமையை நீக்கி, அறிவித்து நிற்பதும் - (என்னுள்ளிருந்து) உணர்த்தி நிற்பதும், நின் அருள் - உன் திருவருளே, ஆகில் - ஆனால், எளியனேற்கு - எளியேனுக்கு, அறிவு ஆவது ஏது - அறிவாவது யாது, அறிவு இலா ஏதம் வரு வகை ஏது - அறிவில்லாத குற்றம் உண்டாகும்வகை யாது, வினை ஏது - (அறி வறியாமைகட்குக் காரணமான) வினை யாது, வினைதனக்கு ஈடான காயம் ஏது - வினைக்கு இடமான சரீரம் யாது, என் இச்சாசுதந்தரம் - என்னுடைய இச்சாசுதந் தரங்கள், சிறிதும் இல்லை - கொஞ்சமும் இல்லை, இகபரம் இரண்டினுள் - இகபரம் என்னும் இரண்டிடத்தும், மலைவு தீர - எனது பிராந்தி நீங்கும் படியாக, தீது இல் அருள் கொண்டு - குற்றமற்ற திருவருளைக்கொண்டு, இனி உணர்த்தி - இனியேனும் அறிவுறுத்தி, என்னை ஆள்வையோ - என்னை அடிமைகொள்வையோ, சித்தாந்த முத்தி முதலே—எ - று.

திரோபவாநுக்ரஹ காரணன் நீயேயென்பார் 'அறிவினை மறைப்பது நின்னருள், அறிவின்மை தீர்த்தறிவித்து நிற்பது நின்னருள்' என்றார்.

இறைவனது பூரணநிலையி னிலக்கணம் ஞானசொரூபமே யென்பார் 'போதமாய்' என்றும், அதற் கடி நடு முடி யென்பன வொன்றுமில்லை யென்பார் 'ஆதிநடு வந்தமு மிலாததாய்' என்றும், அது தூயதென்பார் 'புனிதமாய்' என்றும், நிர்விகாரத்ததென்பார் 'அவிகாரமாய்' என்றும், இவ்வகை இலக்கணமுடையதனைச்சிறிதேனும் புகலிடமாகக்கொள்ளாவகை, அறிவை மறைப்பதும் அறிவை விளக்குவதும் நின் திருவருளே யென்பார் 'ஆதரவு வையாம லறிவினை மறைப்பது நினருள் பின்னும் அறிவின்மை தீர்த்து அறிவித்து நிற்பதும் நினருள்' என்றும், அஃதாயின், யான் சுதந்தர ஹீனனாதலால் எனக்கெனச் சுதந்தர வறிவில்லை யென்பார் 'எளியனேற் கறிவாவதேது' என்றும், அவ்வறிவின்மையால் 'ஏதம்வரு வகை யேது' அவ்வறிவறியாமைகட்குக் காரணமான 'வினையேது' அவ்வினைப் போகமாகிய 'காயமேது' என்றும், எனக்கெனச் செயலொன் றில்லையாதலால் 'என் னிச்சா சுதந்தரஞ் சிறிதுமில' என்றும், எல்லாம் உன் திருவருட் பார மென்பார் 'தீதிலருள்கொண் டினி யுணர்த்தியெனை யாள்வையோ' என்றுங் கூறினர்.

**11.** பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்
பரவையிடை மூழ்கியு நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா
ளத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்து
மவுனத் திருந்துமுயர் மலைநுழை தனிற்புக்கு
மன்னுதச நாடிமுற்றும்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட் டத்தடைத்தும்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
ளோறுநிலை நிற்கவீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இ - ள். பத்தி நெறி நிலைநின்றும் - பத்தி மார்க்கத்தில் நிலையாய் நின்றும், நவகண்ட பூமிப்பரப்பை - ஒன்பது கண்டங்களோடு கூடிய பூமியின் விஸ்தீர்ணத்தை, வலமாக வந்தும் - பிரதக்ஷிணமாய் வந்தும், பரவை இடை

மூழ்கியும் - கடலில் ஸ்நாநம் பண்ணியும், நதிகள் இடை மூழ்கியும் - நதிகளில் ஸ்நாநம் பண்ணியும், பசி தாகம் இன்றி - பசிதாகங்களில்லாமல், எழுநா மத்தி யிடை நின்றும் - நெருப்பின் நடுவினின்றும், உதிர்சருகு - உதிர்கின்ற சருகுகளையும், புனல்வாயுவினை - ஜலத்தையும் வாயுவையும்- வன்பசி தனக்கடைத்து - வலியபசிக்கு நிரப்பி, மவுனத்து இருந்தும், மௌனநிலையில் இருந்தும், உயர் மலைநுழை தனில்புக்கும் - உயர்ந்த மலைக் குகைகளில் பிரவேசித்தும், மன்னு - நிலைபெற்ற, தசநாடிமுற்றும் - தசநாடி முழுதையும், சுத்தி செய்தும் - சுத்தப்படுத்தியும், மூலப்ராணனோடு - மூலாதாரத்திலுள்ள ப்ராணவாயுவுடன், அங்கியை - அக்கினியை, சோமவட்டத்து அடைத்தும் - சந்திரமண்டலத்தில் சேர்த்தும், சொல் அரிய - சொல்லுதற்கரிதாகிய, அமுது உண்டும்-அமிர்தத்தைப் புசித்தும், அற்ப உடல் - அற்ப சரீரம், கற்பங்கள் தோறும் நிலைநிற்க - ஊழிகள்தோறும் நிலைநிற்கும்படி, வீறு - மேலான, சித்திசெய்தும் - சித்தியையடைந்தும், ஞானம் அலது - ஞானமுண்டானாலல்லது, கதி கூடுமோ - மோக்ஷம் சித்திக்குமோ, சித்தாந்த முத்தி முதலே—எ - று.

முத்தடைதீர்ந்த ஞான முதிப்பின்ன்றி ஒருவற்கு முத்திசித்தியாதென்பது இதனாற் கூறப்பட்டது. முத்தடை - அஞ்ஞான சந்தேக விபரீதங்கள்.

நவகண்டங்களாவன :— கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம் என்பன. தசநாடிகளாவன :— சுழுமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குரு, சங்கினி என்பன. தீக்கடவுளுக்கு நாக்க ளேழாதலால், தீ எழு நாவெனப்பட்டது. தசநாடி சுத்திசெய்தலாவது - கற்பங்களுண்டு நாடிகளின் மலிந மகற்றல்.

"ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம் நல்ல வாகமஞ் சொல்லவல்லவாம்" என்றபடி, ஞானம் வாயிலாக முத்தி யெய்தற்பாலதாகலான் பூப்பிரதக்கணம் செய்தும், தீர்த்த ஸ்நாநஞ் செய்தும், பஞ்சாக்கினி மத்தியில் நின்றும், சருகருந்தியும், சலபக்ஷணம் வாயுபக்ஷணம் செய்தும், எண்வகை யோகவுறுப்பினைப் பயின்றும், மதி யமுதமுண்டும், எண்வகைச் சித்திபெற்றும் முத்தியில்லையென்பார் 'ஞானமலது கதிகூடுமோ' என்றார். 'மூலப்ராணனோ டங்கியைச் சோமவட்டத் தடைத்தும்' என்பதை "மூல நிலத்தி லதோமுகமாய் முகிழ்த்து விழி யின்பொடுதுயிலு - மூரிப்பாம்பைக் காலனலை மூட்டி யெழுப்பி நிலமாறும் - சிலமொடும் போய்த் தெரிசித்துச் செழுமாமதியி னமுதகடல் தேக்கித்திளைத்து" என்பதனானறிக.

## மௌனகுரு வணக்கம்.

1. ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
யாங்கார முளையையெற்றி
அத்துவித மதமாகி மதமாறு மாறுக
வங்கையின் விலாழியாக்கிப்
பாசவிரு டன்னிழ லெனச்சுளித் தார்த்துமேற்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயைநூறித்
தேசுபெற நீவைத்த சின்முத் திராங்குசச்
செங்கைக்கு ளேயடங்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
றிருவருட் பூர்த்தியான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகஜ மெனவளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இ-ள். ஆசைநிகளத்தினை - ஆசையாகிய விலங்கை, நிர்த்தூளிபட உதறி - நிர்த்தூளியாம்படி உதறி, ஆங்கார முளையை யெற்றி - ஆங்காரமாகிய முளையைப் பிடுங்கி யெறிந்து, அத்துவித மதம் ஆகி - அத்துவிதமென்கிற மதத்தைக்கொண்டு, மதம் ஆறும் - ஆறுமதங்களும், ஆறு ஆக - நதிகளாக, அங்கையின் விலாழியாக்கி - துதிக்கையின் விலாழியாகச் செய்து, பாச இருள் - பாசமாகிய இருளை, தன் நிழல் என - தன் நிழலென்று நினைத்து, சுளித்து - கோபித்து, ஆர்த்து - ஆரவாரித்து, மேல் - மேலே, பார்த்து பரந்த - நோக்கிப்பரவிய, மனதை - மனத்தை, பாரித்த கவளமாய் - பெருங்கவளமாய், பூரிக்க உண்டு - நிறைய உண்டு, முகபடாம் அன்ன - நெற்றிப்பட்டத்தையொத்த, மாயை நூறி - மாயையை அரைத்து, தேசுபெற - ஒளிபெற, நீவைத்த - நீ அமைத்த, சின்முத்திராங்குசம் - சின்முத்திரையாகிய அங்குசத்தைத் தரித்த, செங்கைக்குள்ளே அடங்கி - செங்கையில் அடங்கி, சின்மயானந்த சுக வெள்ளம்படிந்து - ஞானமயமாகிய பேரானந்த வெள்ளத்தில் முழுகி, நின் திரு அருள் பூர்த்தியான - உனது திருவருளின் நிறைவாகிய, வாசம் உறு சற்சாரம் மீது - வசித்தல் பொருந்திய கூடத்தில், என்னை - அடியேனை, ஒரு ஞான மத்தகஜம் என வளர்த்தாய் - ஞான மதத்தையுடைய யானைபோல வளர்த்தனை, மந்த்ர குருவே-மந்த்ராசாரியனே, யோகதந்த்ரகுருவே - யோக தந்த்ராசாரியனே,

மூலன் மரபில்வரும் - திருமூலரது மரபில்வந்த, மௌனகுருவே - மௌன குருவே—எ - று.

யோகதந்த்ரம் - யோகநூல். திருமூலர் பூர்வம் சித்தராயிருந்து, பிறகு அணிமா முதலிய அஷ்டசித்திகளு முடையராய், மூவாயிரவருடம் நிஷ்டைகூடி, அந்த நிஷ்டாநுபவத்தை மூவாயிரம் பாடலாகத் திருமந்திரம் என்றொரு நூல் செய்தவர். ஆசையை விலங்கெனக் கூறினமையை "ஆசாநிகளந் துகளாயினபின்" என்பதனானறிக.

தன்னை யானையாக வுருவகஞ் செய்தற்கேற்பப் பிறவிக்கு இடமாக்கும் ஆசையைச் சங்கிலியாகவும், தன்னைத் தருக்கிக்கெடுப்பதாகிய ஆங்காரத்தை முளையாகவும், ஒன்றிரண்டென்னு நிலையையே மதமாகவும், ஏனைச் சமயங்களை விலாழியாகவும், பாசவிருளைச் சுளிப்பதையே தன்னிழலைச் சுளிப்பதாகவும், மனத்தையே கவளமாகவும், மாயையையே முகபடாமாகவும், சின்முத்திரையாகிய ஞான முத்திரையையே அங்குசமாகவும் இவை புருவகமென்னு மணிநலம்படக் கூறியவாறென்க.

இங்கு மதம் ஆறு என்றது புறச்சமயங்களாகிய உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டசாரியம் என்பன. விலாழி - குதிரை தன் வாயாலும், யானை தன் துதிக்கையாலும் உட்கொண்டு உமிழும் நீர். அது இங்கு அறுமதங்களின் கருத்துணர்ந்து நிராகரித்தலுக்கு உவமையாயிற்று.

2. ஐந்துவகை யாகின்ற பூதமுத லாதமு
 மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவாக
 னறிவாக நின்றநிலையில்
சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
 சின்மயா னந்தவெள்ளம்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ
 செய்சித்ர மிகநன்றுகாண்
சந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு
 ளியநந்தி மரபுவாழ்க
என்றடியர் மனமகிழ வேதாக மத்துணி
 பிரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
 மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
 மரபில்வரு மௌனகுருவே.

இ - ள். ஐந்துவகை ஆகின்ற - ஐவகையாகிய, பூதம் முதல் - பூதங்கள்முதலாக, நாதமும் அடங்க - நாததத்துவமும் ஆகிய முழுதும், வெளியாக வெளிசெய்து - பஹிரங்கமாக வெளிப்படுத்தி, அறியாமை அறிவு ஆதி - அறியாமை அறிவுமுதலியவைகளை, பிரிவு ஆக அறிவார்கள் - வேறு பிரித்தறியவல்லார், அறிவாக நின்ற நிலையில் - அறிவுருவாக நின்ற நிலையின் கண், சிந்தை அற நில் என்று - மனமற நிற்பாயென்று, சும்மா இருத்தி - சும்மா இருக்கும்படிசெய்து, மேல் - அதன்மேலும், சின்மயானந்தவெள்ளம் - ஞானரூபமாகிய ஆநந்தப் பிரவாகத்தில், தேக்கி திளைத்து - நிறைய அநுபவித்து, நான் அது ஆய் இருக்க - நான் அதுவா யிருக்கும்படி, நீ செய் சித்ரம் - நீ செய்த விசித்திரம், மிக நன்று - மிகவும் நன்று, எந்தை - எமது தந்தையாகிய, வடவால் - வடவானிழற்கீ ழெழுந்தருளிய, பரமகுருவாழ்க - பரமாசாரியர் வாழ்க, வாழ அருளிய - அப்படி வாழும்படி அருளிச்செய்த, நந்தி மரபு வாழ்க என்று - நந்திமரபு வாழ்கவென்று, அடியர் - அன்பர்கள், மனம் மகிழ - மனமகிழும்படி, வேதாமத் துணிபு - வேதாகம நிச்சயம், இரண்டு இல்லை - இரண்டாயிருக்கவில்லை, ஒன்று என்னவே - ஒன்றென்று அருளிச் செய்தற்காகவே, வந்த குருவே - வந்த ஆசாரியனே, வீறு - விஞ்சிய, சிவஞானசித்திநெறி - சிவஞான சித்தியடைதற்குரியநெறியையுடைய, மௌனோபதேச குருவே - மௌனோபதேசம் பண்ணவந்த ஆசாரியனே, மந்த்ரகுருவே—எ - று.

பூதமுத லாதம் என்றது ப்ருதிவ்யாதி நாதாந்தமான முப்பத்தாறு தத்துவத்தை. "ஆறாறையுநீத் ததன்மே னிலையை" என்றார் பிறரும். அவை ஆன்ம தத்துவம் இருபத்துநான்கு, வித்யாதத்துவம் ஏழு, சிவதத்துவம் ஐந்து என்பனவாம்.

நிலமுதல் நாத மிறுதியாகக்கிடந்த தத்துவ முப்பத்தாறையுங் கடந்த பகுத்தறிவுடைய பெரியோர் தன்னையுந் தலைவனையுங் காண்டற் கருகராதலின், அவர் தம் சிந்தையிலே சும்மாவிருந்து அறியும் வண்ணம் 'ஐந்துவகையாகின்ற பூதமுதல் நாதமு மடங்கவெளியாக வெளிசெய்து - அறியாமை அறிவாதி பிரிவாக வறிவார்கள் அறிவாக நின்றநிலையில் - சிந்தையற நில்லென்று சும்மாவிருத்தி' என்றும், அங்ஙனம் சும்மாவிருந்தறியுங்காலத்தில் தோன்றும் சுகாநந்தவெள்ளத்தில் மூழ்கி நான் அதுவாயிருக்க நீ கருணைசெய்வதோ சொல்லுந்தரமல்ல வென்பார் 'மேல்சின்மயானந்த வெள்ளந் தேக்கித் திளைத்து நானதுவாயிருக்க நீ செய்சித்ர மிகநன்றுகாண்' என்றும் கூறினர்.

3. ஆதிக்க நல்கினவ ராரிந்த மாயைக்கெ
னறிவன்றி யிடமில்லையோ

அந்தரப் புஷ்பமுங் கானலின் னீருமோ
ரவசரத் துபயோகமோ
போதித்த நிலையையு மயக்குதே யபயநான்
புக்கவரு டோற்றிடாமல்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்கு ளிந்த்ரசாலம்
சாதிக்குதே யிதனை வெல்லவு முபாயநீ
தந்தருள்வ தென்றுபுகல்வாய்
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பரப்பெலா மறியவே
வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இ - ள். இந்த மாயைக்கு - (ஜந்ம பரம்பரையை விருத்தி செய்கிற) இந்த மாயைக்கு, ஆதிக்கம் நல்கினவர் ஆர் - (இத்தனை) ஏற்றம் கொடுத்தவர் யார், என் அறிவு அன்றி இடம் இல்லையோ - (இதற்கு) என்னறிவல்லது வேறிடமில்லையோ, அந்தரப்புஷ்பமும் - ஆகாயத்தாமரையும், கானலின் நீரும் - கானற்சலமும், ஓர் அவசரத்து உபயோகமோ - ஒரு அவசர காரியத்துக்கு உபயோகமாமோ, போதித்த நிலையையும் - நீ எனக்குப்போதித்த நிலையையும், மயக்குதே - மயங்கப் பண்ணுகின்றதே, நான் அபயம் புக்க - நான் அபயமாக அடைந்த, அருள் தோற்றிடாமல் - திருவருள் சிறிதுந் தோற்றுவகை, பொய்யான உலகத்தை - பொய்யாகிய பிரபஞ்சத்தை, மெய்யாநிறுத்தி - உண்மையாக ஸ்தாபித்து, என் புந்திக்குள் - என் அறிவினிடத்தில், இந்த்ரசாலம் - இந்திரஜாலத்தை, சாதிக்குதே - விளையாடிக்காட்டுகின்றதே, இதனை வெல்லவும் - இதை வெல்லுதற்காகவும், உபாயம் - (ஒரு) உபாயத்தை, நீ தந்தருள்வது - நீ போதித்தருள்வது, என்று - எந்நாள், புகல்வாய் - சொல்வாய், சண்மதஸ்தாபனமும் - ஆறு மதங்களையும் நிலைப்படுத்தும் பாண்டித்ய வகையையும், வேதாந்த சித்தாந்த சமரசநிர்வாக நிலையும் - வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாக நிர்வஹிக்கத்தக்க அநுபூதி நிலையையும், மா திக்கொடு - பெரிய திசைகளுடன் கூடிய, அண்டப்பரப்பு எல்லாம் - லோக விஸ்தீர்ணமெல்லாம், அறிய - அறியும்படி, வந்தருளும் - வந்து அடியேனுக்கு அருளிச்செய்த, ஞான குருவே - ஞானாசாரியனே, மந்த்ரகுருவே—எ - று.

பொய்யை மெய்யாக்கிக் காட்டுதல் மாயையின் தொழிலாதலால் 'பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தி யென் புந்திக்கு ளிந்த்ரசாலம்

சாதிக்குதே' என்றார். இங்குச் சண்மதம் என்றது வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்னும் அகச்சமயங்களே.

மாயை யாவரையும் மயக்குதலால் மிக்க வல்லமை யுடையதாதலின் அதற் கென் நெஞ்சிடந் தந்தார் யார் என்பார் 'ஆதிக்க நல்கினவரா ரிந்த மாயைக் கென் னறிவன்றி யிட மில்லையோ' என்றும், அம்மாயா காரிய மாகிய உலகம் பொய்யாயிருக்க அதை மெய்யாக எண்ணிக் காலங் கழிக்க அமையுமோ என்பார் உவமைமுகத்தால் 'அந்தரப் புட்பமுங் கானலின் னீரு மோரவசரத் துபயோகமோ' என்றும், அம்மாயையின் வசப்பட்டழியும் அடியேனுக்கு உண்மை ஞானம்பெற வுபாயந்தரவேண்டுமென்பார் 'இதனை வெல்லவு முபாயம் நீ தந்தருள்வ தென்று புகல்வாய்' என்றும் கூறினர்.

4. மின்னனைய பொய்யுடலை நிலையென்று மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டும்
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றியிப்
பொய்வேட மிகுதிகாட்டிப்
பொறையறிவு துறவீத லாதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இ-ள். மின் அனைய - (தோற்ற வொடுக்கங்களால்) மின்னலை ஒத்த, பொய் உடலை - பொய்யாகிய உடம்பை, நிலையென்றும் - நிலையுள்ள தென்றும், மை இலகு விழி கொண்டு - அஞ்சனந் தீட்டப்பெற்று விளங்குகின்ற கண்களைக்கொண்டு, மையல்பூட்டும் - காமமயக்கமாகிய விலங்கை இடுகின்ற, மின்னார்கள் இன்பமே - மாதர்சுகமே, மெய் யென்றும் - உண்மை யென்றும், வளர்மாடம் - உயர்ந்த மாளிகைகளின், மேல்வீடு - மேலுப்பரிகைகள், சொர்க்கம் என்றும் - சொர்க்கலோகம் என்றும், பொன்னை - சுவர்ணத்தை, அழியாது வளர்பொருள் என்று - அழியாமல் வளர்

கின்ற பொருளென்றும், போற்றி-விரும்பி, இப்பொய்வேட மிகுதி காட்டி-இந்தப் பொய் வேஷத்தின் பெருமையை வெளிப்படுத்தி, பொறை-பொறுமை, அறிவு - ஞானம், துறவு-இருவகைப்பற்றையுந் துறத்தல், ஈதல் - கொடை,ஆதி-முதலாகிய, நல்குணம் எல்லாம் - நற்குணங்களெல்லாவற்றையும், போக்கிலே போகவிட்டு-(அவை) செல்லும் வழியில் செல்லவிட்டு, தன் நிகர் இல் - தனக்கொப்பில்லாத, லோபாதி - உலோபகுணம் முதலாகிய, பாழ் பேய் பிடித்திட - பாழாகிய பிசாசம் பற்றிக்கொள்ள, தரணிமிசை - உலகில், லோகாயதன் - லோகாயதனது, சமயநடை சாராமல் - சமயவொழுக்கத்தைப் பொருந்தாமல், வேதாந்த சித்தாந்த சமரச சிவாநுபூதி மன்ன - வேதாந்த சித்தாந்த சமரச சிவாநுபூதியைப் பொருந்தும்படி, ஒருசொல் கொண்டு என்னைத் தடுத்து ஆண்டு - ஒருமொழியால் என்னைத் தடுத்தாட் கொண்டு, அன்பின் வாழ்வித்த - அன்பினால் வாழச் செய்தருளின, ஞான குருவே - ஞானாசாரியனே, மந்த்ரகுருவே—எ - று.

"காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து - வீசின போது" எனப் பிறர் கூறுதலான், இவரும் 'விழிகொண்டு மையல் பூட்டும்' என்றார். தன்னை உலோகாயத மதஞ் சாரா வண்ணம் சிவானுபூதிப் பெருஞ் செல்வம் வேண்டி யிரப்பவராதலின், மின்தோன்றி நின்றழிவது போன்ற தேகம் நிலையாமையினை நோக்கி நிற்பதனால் 'மின்னனைய பொய்யுடலை நிலையென்றும்' என்றும், அவர்கள் மாதர் போகமே முத்தி யென்பாராகலின் 'மையிலகு விழிகொண்டு மையல் பூட்டும் மின்னார்கள் இன்பமே மெய்யென்றும்' என்றும், அவர் கலவி செய்தற் கிடமாகிய மாட மாளிகையையே சொர்க்க லோகமாகக் கருதுவதனால் 'வளர் மாட மேல்வீடு சொர்க்கமென்றும்' என்றும், அப்போகத்துக்கு வேண்டும் உபகரணம் பொன்னாதலால் 'பொன்னை யழியாது வளர் பொருளென்றும்' என்றும், அதனையே போற்றி நின்று பொய் வேடங் காட்டி யொழிதலின் 'போற்றி இப்பொய்வேட மிகுதிகாட்டி' என்றும், அச்செய்கையால் பொறையுடைமை, மெய்யுணர்ச்சி, துறவு, ஈகையுடைமை முதலிய நற்குணமெல்லாம் போக்கலின் 'பொறை யறிவு துற வீதலாதி நற் குணமெலாம் போக்கிலே போக விட்டு' என்றும், இத்துணைக் கொடுமை செய்ய வல்ல உலோகாயத மதத்திற் சேர்வது பிறவிநோய்க் கிடமாகலின் 'தன்னிகரிலோபாதி பாழ்ம் பேய் பிடித்திடத் தரணிமிசை லோகாயதன் சமயநடை சாராமல்' என்றும், யான் வேதாந்தம் ஆகமாந்தமாகிய சமரச நிலைபெற வேண்டுகின்றேன், அது ஒரு மொழியாகிய உபதேச வகையால் அன்றிக் கிட்டாதாகலான் 'வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி - மன்ன வொருசொற்கொண்டு' என்றும், இறைவ னல்லது என்னைத் தடுத்தாண்டு அன்பான் வாழ்விப்பவர் பிறரில்லையாதலால் 'எனைத் தடுத்தாண்டன்பின் வாழ்வித்த ஞானகுருவே' என்றும்

கூறினர். உலோகாயதன் தேகமே யான்மா, போகமே முத்தி என்பதனைச் சித்தியாருள் பரபக்கத்து உலோகாயத மதத்துள்

"வாசமார் குழலி னார்கண் மணியல்குற் றடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வா யமுதினை நிறைய வுண்டு
தேசுலா மணிமென் றோண்மேற் சேர்ந்துவீற் றிருந்திடாதே
மாசுலா மனத்தோ ரெல்லா மறுமைகொண் டழிவர் மன்னோ"

"மதிநிலா நுதலா ரோடு மணிநிலா முன்றி லேறி
முதிர்நிலா வெறிப்பச் செவ்வா யிளநிலா முகிழ்ப்ப மொய்த்த
கதிர்நிலா வடங்கொள் கொங்கைக் கண்கண்மார் பகலமூழ்கும்
புதுநிலா வியநன் போகம் விடுவர்புன் சமயத்தோரே."

"ஊடுவ துணர்வ துற்ற கலவிமங் கையரை யுள்கி
வாடுவ தடியில் வீழ்ந்து வருந்துவ தருந்த வம்பின்
கூடுவ துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கை யேயாய்
நீடுவ தின்ப முத்தி யித்தினின் றார்கள் முத்தர்."

என்று கூறியவாற்றானு மறிக.

**5.** போனக மிருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்குமதுபோல்
புருஷர்பெறு தர்மாதி வேதமுட னாகமம்
புகலுமதி னாலாம்பயன்
ஞானநெறி முக்கியநெறி காட்டியனு மானமுத
லானவிதங்க டோர்ந்து
நானு னெனக்குழறு படைபுடை பெயர்த்திடவு
நான்குசா தனமுமோர்ந்திட்
டானநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற்
றணுபக்ஷ சம்புபக்ஷம்
ஆமிரு விகற்பமு மாயாதி சேவையு
மறிந்திரண் டொன்றென்னுமோர்
மானத விகற்பமற வென்றுநிற் பதுநமது
மரபென்ற பரமகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இ - ள். போனகம் இருக்கின்ற சாலை யிடை - அன்ன சத்திரத்தில், புசித்தற்கு வேண்டுவ - உண்ணுதற்கு வேண்டிய பொருள்களெல்லாம், இருக்குமதுபோல் - இருத்தல்போல, புருஷர்பெறு - புருஷரால் அர்த்திக்க

ப்படுகின்ற, தர்மாதி - அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்த நான்கும், வேதமுடன் ஆகமம் - வேதத்துடன் ஆகமங்களும், புகலும் அதி னுல் ஆம்பயன் - சொல்லுகின்ற அதனு லுண்டாகும் பயனும், ஞானநெறி முக்யநெறி-ஞானநெறியாகிய முக்கிய நெறியும், காட்சி அனுமானம் - காட்சி அனுமானம் என்கிற பிரமாணங்களும், முதல் - முதலாகிய, நானுவிதங்கள் தேர்ந்து - பல வகைகளையு மாராய்ந்து, நான் நான் என-நான் நான் என்ற, குழறுபடை - குழறுபாட்டை, புடைபெயர்த்திடவும் - நிர்த்தூளி யாக்கவும், நான்கு சாதனமும் ஓர்ந்திட்டு - சாதந சதுஷ்டயத்தையும் விசாரித்துணர் ந்து, ஆனநெறிஆம் சரியைஆதி சோபானம் உற்று-நல்லநெறியாகிய சரியை முதலாகிய சௌபானங்களை யடைந்து, அணுபக்ஷ சம்புபக்ஷம் ஆம் இரு விகற்பமும் - அணுபக்ஷம் சம்புபக்ஷம் என்கிற இரண்டு வேறுபாடுகளையும், மாயாதி சேவையும் - மாயாதிகளுடைய தரிசநத்தையும், அறிந்து - ஐயந் திரிபற வுணர்ந்து, இரண்டு ஒன்று என்னும் - இரண்டு ஒன்று என்கின்ற, ஓர் - ஒப்பற்ற, மானத விகற்பம் அற - மனோவிகற்பம் அற்றொழிய, வெ ன்று நிற்பது - ஜயித்து நிற்பதே, நமது மரபு என்ற - நமது மரபென் றுரை த்தருளிய, பரமகுருவே - பரமாசாரியனே, மந்த்ரகுருவே—எ - று.

சாதன சதுஷ்டயமாவன :— நித்யாநித்ய வஸ்து விவேகம், இகமுத்த ரார்த்த பலபோக விராகம், சமாதிஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்வம் என்னும் நான்குமாம்.

சோபானம் - மேலிடத்தேற அமைத்தபடி. அணுபக்ஷம் - ஆன்மாக்கள் தாமே பக்குவப்பட்டடையும் நெறி. சம்புபக்ஷம்-இறைவன் திருத்தப் பக்குவ ப்பட் டடையும் நெறி. இனி அணுபக்ஷ மென்பதற்குப் பிரேரகப்படுபவை யென்றும் அபர மென்றும், சம்புபக்ஷ மென்பதற்குப் பிரேரகக் கருவி யென்றும் பர மென்றும் கூறினு மிழுக்காது.

மடைப்பள்ளியில் உண்டிக்குரிய பொருளனைத்து மொருங்கிருப்பது போல, வேதாகமங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றை அவ் வவ்வதிகாரிகள் அநுட்டித்து நடக்கக்கூறலின் 'போனக மிருக்கின்ற சாலை யிடை வேண்டுவ புசித்தற் கிருக்கு மதுபோல் 'புருடர்பெறு தர்மாதி வேத முடனுகமம் புகலும்' என்றும், இதனைக் காட்சி, அனுமானம், உவமானம் முதலிய அளவைகளால் நன்குதேறவேண்டுதலின் 'காட்சியனுமான முதல் நானுவிதங்கடேர்ந்து' என்றும், அந்த ஞானம் பெறுதற்கு ஆங்கார மூளையை யறக்களைந்துவிட்டுச் சோபானங்களாகிய சரியை கிரியா யோகங்களை யனு ட்டிக்கவேண்டு மென்பார் 'நானு னெனக்குழறு படைபுடை பெயர்த்திடவு நான்கு சாதனமு மோர்ந்திட்டு' என்றும், அங்கே அணுபக்ஷ சம்பு பக்ஷங் களை யறிந்து மாயாதி சேவை செய்து இரண் டொன் றென்னுத சிவானு

பூதிப் பெருஞ் செல்வ மெய்தவேண்டுதலின் 'அனுபக்ஷ சம்புபக்ஷமா மிரு விகற்பமு மாயாதி சேவையு மறிந்திரண் டொன் றென்னு மோர் மானத விகற்பமற' என்றும், இவ்வாறு பெற்று நிற்பதே நமது குருமரபு என்பார் 'வென்று நிற்பது நமது மரபு' என்றுங் கூறினர்.

ஞானம் பெறுதற்குச் சரியை கிரியா யோகங்கள் சோபான மென்ப தனை "விரும்புஞ் சரியை முதல் மெய்ஞ்ஞான நான்கும் - அரும்புமலர் காய்கனிபோ லன்றே" என் றிவ்வாசியர் கூறியவாற்றானு முணர்க. காட்சி யனுமானமுத லென்றமையை "அளவை காண்டல் கருத லுரை யபாவம் பொருளொப்பா றென்பர், அளவைமேலு மொழி புண்மை யைதிகத்தோ டியல்பென நான், களவை காண்ப ரவையிற்றின்மேலு மறைவ ரவையெல் லாம், அளவை காண்டல் கருதலுரையென் றிம்மூன்றி னடங்கிடுமே." என்ற சுபக்கத்தளவைச் சூத்திரத்தானு மறிக.

**6.** கல்லாத வறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாக்
காதலித் திடுநெஞ்சமும்
பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேதுமறியேன்
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்த மேதுமில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ண முய்வண்ணமோ
இருளையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறு
மெனக்குநின் னருடாரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தேயிந்த
வஞ்சகனை யாளநினையாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

**இ-ள்.** கல்லாத அறிவும் - கல்லாமல் உண்டாகின்ற ஞானமும், மேல் - அதற்குமேல், கேளாத கேள்வியும் - சிரவணம் செய்யாத கேள்வியும், சிறிது ஏதும் கருணை இல்லா காட்சியும் - மிகச் சிறிதும் தயையில்லாத அறிவும், கொலைகளவு கள்காமம் - கொல்லுதல் திருடுதல் கள்ளுண்டல் பிறர்மனை நயத்தல் ஆகிய இவைகளை, மாட்சி ஆ - மேலான பொருள்களாகக் கொண்டு, காதலித்திடும் - அவற்றின்கண் விருப்பத்தைச் செய்கின்ற, நெஞ்சமும் - மனமும், பொல்லாத பொய் மொழியும் - முழுப் பொய்வார்த் தையும், அல்லாது - அல்லது, நன்மைகள் பொருந்து குணம் - நன்மை

பொருந்திய குணங்கள், ஏதும் அறியேன் - சிறிதும் உணர்ந்திலேன், புருஷர் வடிவு ஆனதே அல்லாது - புருஷ ரூபம் கொண்டதேயன்றி, கனவிலும் - கனவிலும், புருஷார்த்தம் ஏதும் இல்லேன் - புருஷார்த்தம் சிறிதும் உடையனல்லேன், எல்லாம் அறிந்த நீ அறியாதது அன்று - (இது) சர்வ ஜ்ஞனை நீ அறியாதது அல்ல, எனக்கு - அடியேனுக்கு, எவ்வண்ணம் உய்வண்ணமோ - எந்தவகை உய்யும்வகையோ (அறிகிலேன்), இருளை இருள் என்றவர்க்கு - இருளை இருளென்று கொண்டவர்களுக்கு, ஒளி தாரகம் - ஒளியானது ஆதாரமா யிருக்கும், (அதுபோல) பெறும் எனக்கு- (உன்னை) யடைந்த எனக்கு, நின் அருள் தாரகம் - உன் திருவருளே ஆதாரம் ஆகும், வல்லான் என்னும் பெயர் - சர்வசக்தன் என்னும் பெயரானது, உனக்கே உள்ளது - உனக்கே உண்டாயிருக்கின்றது, (ஆதலால்) இந்த வஞ்சகனை ஆள நினையாய் - இந்த வஞ்சகனை ஆண்டருள நினைவாயாக, மந்த்ரகுருவே—எ - று.

புருஷார்த்தம் - புருஷனால் அர்த்திக்கப்படுவது. அர்த்தித்தல் - வேண்டுதல். அப்புருஷார்த்தம் - தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என நால்வகைப்படும். இதனைப் புருஷார்த்த சதுஷ்டயம் என்பர்.

நூல்களைக் கல்லாதவரது ஞானம் ஞான மன்றென்பார் 'கல்லாதவறிவும்' என்றும், அவ்வாறே அறிஞர்பாற் சென்று கேளாத தோர் கேள்வி கேள்வியெனப்படுவ தன்றென்பார் 'மேற் கேளாத கேள்வியும்' என்றும், தயாமூல தன்மமே பெற்றிருப்பது அறிஞர்கள் தன்மையாதலின் அது பெற்றிராமையைக் 'கருணை சிறி தேது மில்லாக் காட்சியும்' என்றும், கொல்லாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறன்மனை நயவாமை என்பனவாகிய இவைகளை மேற்கொண் டொழுகாமல், இவற்றின் மறுதலைகளை மேற்கொண் டொழுகினேனென்பார் 'கொலை களவு கட் காம மாட்சியாக் காதலித்திடு நெஞ்சமும்' என்றும், பொய்ம்மையே யெப்பெருந் தீமைக்கு மீட்டாகலின் 'பொல்லாத பொய்ம்மொழியும்' என்றும், இவை யல்லது வேறு நன்மையை விரும்புந் தன்மையே னல்லே னென்பார் 'அல்லாமல் நன்மைகள் பொருந்துகுண மேது மறியேன்' என்றும், மானிடங் கொண்டதன்றிப் புருடார்த்த மென்பது சிறிது மில்லே னென்பார் 'கனவினும் புருடார்த்த மேதுமில்லேன்' என்றும், எல்லாமறிந்த நீ யறியாத தொன்று மில்லை என்பார் 'எல்லா மறிந்தநீ யறியாத தன்று' என்றும், நீயே யுய்வித்தாலன்றி யுய்கிலேன் என்பார் 'எனக் கெவ்வண்ண முய்வண்ணமோ' என்றும் கூறினர்.

7. கானக மிலங்குபுலி பசுவொடு குலாவுநின்
கண்காண மதயானைநீ

கைகாட்ட வுங்கையா னெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக வேந்திவருமே
போனக மமைந்ததென வக்காம தேனுநின்
பொன்னடியி னின்றுசொலுமே
புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப்
போற்றிஜய போற்றியென்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களுமுன்
நட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதன்
ஞானிகளு முனைமெச்சுவார்
வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்லவெளிதோ
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இ - ள். கானகம் இலங்கு புலி - காட்டில் சஞ்சரிக்கின்ற புலியானது, பசுவொடு குலாவும் - பசுவோடு கூடி விளையாடும், நின் கண் காண - உன் கண் காணும்படி, மதயானை - மதயானையானது, நீ கைகாட்டவும் - நீ கை காட்டின அளவில், கையால் - துதிக்கையினால், நெகிடிக்கு என - நெகிடிக்காக, பெரிய கட்டை - பெருங் கட்டைகளை, மிக ஏந்தி வரும் - மிகவும் சுமந்துவரும், அக்காமதேனு - அந்தக் காமதேனு வானது, நின் பொன் அடியில் நின்று - உன் திருவடியின்கீழ் நின்று, போனகம் அமைந்தது என சொல்லும் - உணவு சித்தமா யிருக்கிறது என்று சொல்லா நிற்கும், புவிராஜர் - பூலோகத்தரசரும், கவிராஜர் - வித்துவான்களும், உன்னை - நின்னை, தவராஜன் என்று - தபோநிதியென்று, போற்றி - நமஸ்காரம், ஜய-ஜயவிஜயீபவ, போற்றி - நமஸ்காரம், என்பார்-என்று புகழ்ந்துரைப்பார்கள், ஞான கருணாகர முகம் - ஞானத்துக்கும் கருணைக்கும் பிறப்பிடமாயிருக்கிற (உனது) திருமுகத்தை, கண்டபோதிலே - கண்டபொழுதிற்றானே, நவநாத சித்தர்களும் - சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்களும், உன் நட்பினை விரும்புவார் - உனது சினேகத்தை யிச்சிப்பார்கள், சுகர் வாமதேவர் முதல் ஞானிகளும் - சுகர் வாமதேவர்முதலாகிய ஞானவான்களும், உன்னை மெச்சுவார் - உன்னைக் கொண்டாடுவார்கள், வானகமும் மண்ணகமும் வந்து - விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் வந்து, எதிர் வணங்கிடும்-எதிரே நின்று தொழுகின்ற, உன் மகிமையது - உன் பெருமையாகிய அதனை, சொல்ல எளிதோ - புகழ்ந்து சொல்லுதற்கு எளிதாகுமோ, மந்த்ர குருவே—எ - று.

கானக மிலங்கு என்பதை, கால் நகம் இலங்கு எனப் பிரித்துக் காலில் நகங்கள் விளங்குகின்ற எனப் பொருளுரைத்தலும் ஒன்று. நெகிடி - தீமூட்டம்.

ஆசாரியன் சந்நிதானத்தினது பெருமை இன்னதென்று சொல்லவந்தவர் 'கானகமிலங்குபுலி பசுவொடு குலாவும்' என்றும், நெகிடியைக் கண்டஞ்சும் யானையும் அந்நெகிடிக்காகக் கட்டையை யேந்தி வருமென்பார் 'மதயானை நீ கை காட்டவுங் கையால் நெகிடிக்கெனப் பெரிய கட்டைமிக வேந்திவரும்' என்றும், உனக்கு எப்பொருளும் அமைந்து நடக்குமென்பார் 'போனக மமைந்ததென வக்காமதேனு நின்பொன்னடியி னின்று சொலும்' என்றும், அரசச் செல்வமும் கல்விச் செல்வமும் உடையாரும் உன் தவச் செல்வத்தின் பெருமையைக் கண்டு வணங்குவா ரென்பார் 'புவிராசர் கவிராசர் தவராசனென் றுனைப் போற்றி ஜயபோற்றி யென்பார்' என்றும், உன் திருமுகங் கண்டமாத்திரையே சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்களும் உன் நட்பினை வேண்டுவார் என்பார் 'ஞான கருணாகர முகங்கண்ட போதிலே நவநாத சித்தர்களு முன்னட்பினைவிரும்புவார்' என்றும், மெய்ஞ்ஞானிகளும் மகிழ்வா ரென்பார் 'சுகர் வாமதேவர் முதல் ஞானிகளு முனை மெச்சுவார்' என்றும், ஆதலால் வானும் வையமு முனைவந்து தாள்பணிவது சொல்லவேண்டுமோ வென்பார், 'வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடு முன்மகிமையது சொல்லவெளிதோ' என்றுங்கூறினார். வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கு மென்பதை "வானும் வையமும் வந்து தாள் வணங்கும்" என்றும், "ஞால முண்டவன் றலைமிசைச்சுப்பன் மெய்ஞ்ஞானி வேண்டுவவெல்லாம் ஆலமுண்டவ னவன்பினேதிரிகுவன்" என்றுங் கூறியதனுலு மறிக.

8. சருகுசல பக்ஷணிக ளொருகோடி யல்லாற்
சகோர பக்ஷிகள்போலவே
தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத
தன்மையர னந்தகோடி
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
வேகாந்த மோனஞான
இன்பநிஷ் டையர்கோடி மணிமந்த்ர சித்திநிலை
யெய்தினர்கள் கோடிசூழக்
குருமணி யிழைத்திட்ட சிங்கா தனத்தின்மிசை
கொலுவீற் றிருக்குநின்னைக்
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும்வண்ணம்

மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்பதெந்நாள்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இ - ள். சருகு சல பக்ஷணிகள் ஒருகோடி - உலர்ந்த இலைகளையும் நீரையும் உண்டு உயிர்வாழ்வோர் ஒருகோடிபேர்களும், அல்லால் - அல்லாமல், சகோர பட்சிகள்போல - சகோரப் பறவைகள்போல, தவள நிலவு ஒழுகு - வெண்மையாகிய சந்திரிகையோடு ஒழுகாநின்ற, அமிர்த தாரை உண்டு - அமிர்த வருஷதாரைகளைப்புசித்து, அழியாத தன்மையர்-இறவாத தன்மையை யுடையவர்கள், அனந்தகோடி - அனேக கோடிபேர்களும், இருவினைகள் அற்று - இருவினைகள் நீங்கி, இரவுபகல் என்பது அறியாத - இராப்பகல் என்பதை உணராத, ஏகாந்த மோன ஞானம் - தனிமையும் மௌனமும் ஞானமும்ஆகிய இவைகளையுடைய, இன்பநிஷ்டையர் கோடி - சுகநிஷ்டையை யுடையவர்கள் கோடிபேர்களும், மணிமந்த்ர சித்திநிலை எய்தினர்கள் கோடி - மணிமந்த்ர சித்திநிலைகளை அடைந்தவர்கள் கோடி பேர்களும், சூழ - சுற்றிநிற்க, குருமணி இழைத்திட்ட - நிறமுள்ள ரத்நங்களைச் செதுக்கிய, சிங்காதனத்தின்மிசை - சிம்ஹாசனத்தின்மீது, கொலுவீற்றிருக்கும் நின்னை - திருவோலக்கமாக எழுந்தருளியிருக்கின்ற உன்னை, கும்பிட்டு - கைகுவித்து, அனந்தமுறை தெண்டனிட்டு - அநேகந்தரம் நமஸ்காரம்பண்ணி, என் மனக்குறையெல்லாம் - என் மனத்தின்கண்ணவாகிய குறைகளெல்லாம், தீரும்வண்ணம் - நீங்கும்படி, மருமலர் எடுத்து - வாசனைபொருந்திய மலர்களை (விதிப்படி) எடுத்து, உன் இருதாளை அர்ச்சிக்க - உன் இரண்டு திருவடிகளையும் அருச்சனை செய்யும்பொருட்டு, என்னை வாஎன்று அழைப்பது - என்னை வாவென்று தேவரீர் அழைத்தருளுவது, எந்நாள் - எந்தக்காலம், மந்த்ரகுருவே—எ - று.

சகோர பக்ஷி - சந்திரகிரணத்தையுண்டு ஆகாயத்திற்றனே சஞ்சரிப்பதோர் பறவை. மருமலர் - மொட்டு. "மொட்டறுமலர் பறித்திறைஞ்சி" என்றார் பிறரும். விரிந்தபிறகு மணமிராதாதலால், மருமலர் என்றதற் கிவ்வாறு பொருள் கூறலாயிற்று. குருமணி - மாணிக்கமெனினுமாம்.

சருகு சல முண்டாலும் தேகம் பாதுகாக்க வியலுமாகலின் அச் சருகு சலபக்ஷணஞ்செய் துயிர்காத்துத் தவஞ் செய்வாரை முன்னும், அதனினும் மதியி னமுதுண்டு சுகிப்பாரை 'சகோரபக்ஷிகள்போலவே தவள நிலவொழுகமிர்த தாரையுண் டழியாத தன்மைய ரனந்தகோடி' என அதன் பின்னும், இவர்கள் தேகவாஞ்சை யுடையராதலின் அவ்வாஞ்சையற்றவரை 'இருவினைகளற் றிரவுபகலென்ப தறியாத வேகாந்த மோனஞானவின்ப நிஷ்டையர் கோடி' என்று அதன்பின்னும், அதனினும் எண்வகைச்

சித்திபெற்றோர் சிலராதலின் 'மணிமந்த்ர சித்திநிலையெய்தினர்கள் கோடி' என்றதன்பின்னும், இவ்வாறு அவர்கள்சூழக் கொலுவீற்றிருக்கும் உன்னை யருச்சிக்க என்குறையெலாந் தீரு மாதலின் வாவென் றென்னை யழைப்ப தென்றோ என்பார் 'கும்பிட்டனர்தமுறை தெண்டனிட் டென்மனக் குறை யெலாந் தீரும் வண்ணம் மருமல ரெடுத் துனிரு தாளை யர்ச்சிக்க வெனை வாவென் றழைப்ப தெந்நாள்' என்றுங் கூறினர். இருவினை யென்றது நல் வினை தீவினைகளை. இரவுபகல் என்றது கேவலசகலங்களை.

9. ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
 வாணவத் தினும்வலிதுகாண்
அறிவினை மயக்கிடு நடுவறிய வொட்டாதி
 யாதொன் று தொடினுமதுவாய்த்
தாங்காது மொழிபேசு மரிகரப் பிரமாதி
 தம்மொடு சமானமென் னும்
தடையற்ற தேரிலச் சுருவாணி போலவே
 தன்னிலசை யாதுநிற்கும்
ஈங்கா ரெனக்குநிக ரென்னப்ர தாபித்
 திராவணா காரமாகி
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
 திருக்குமித னொடெந்நேரமும்
வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ
 மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
 மரபில்வரு மௌனகுருவே.

இ-ள். ஆங்காரம் ஆன - ஆங்காரமாகிய, குல வேட வெம்பேய் - குல வேடரையொத்த வெவ்விய பேயானது, பாழ்த்த ஆணவத்தினும் வலிது - பாழாகிய ஆணவப்பேயினும் வலியது, (அது) அறிவினை மயக்கிடும் - என் னறிவை மயக்கிவிடும், நடு அறிய வொட்டாது - நடுவு நிலைமையை அறிய வொட்டாது, யாதொன்றுதொடினும் - ஏதொருபொருளைப்பற்றினும், அது ஆய் - அது தானேயாகி நின்று, தாங்காது மொழி பேசும் - சகிக்காமல் வார்த்தைசொல்லும், அரி அர பிரமாதி தம்மொடு சமானம் என்னும் - ஹரி ஹர ப்ரஹ்மாதிகளோடு நான் சமமாவேனென்றுசொல்லும், தடை அற்ற தேரில் - தடையறச் செலுத்துகின்ற தேரினிடத்து, அச்சுரு ஆணிபோல - அச்சாணிபோல, தன்னில் அசையாது நிற்கும் - தன்னிடத் தசைவில்லாம லிருக்கும், ஈங்கு - இவ்வுலகத்தில், எனக்கு நிகர் ஆர் என்னப் பிரதாபித்து - எனக்கொப்பு யாவரென்று ப்ரஸ்தாபித்து, இராவணாகாரம் ஆகி - இராவணா ரூபங்கொண்டு, இதயவெளி எங்கணும் - இதயாகாசமெல்லாம், தன்னரசு

நாடு செய்து இருக்கும் - தன்னரசு நாடாகச் செய்துகொண்டிருக்கும், இத னொடு - இதனுடன், எந்நேரமும் - எப்போதும், வாங்கா நில்லாது - நீங்கி நில்லாமல், அடிமை - உனதடிமையாகிய நான், போராட முடியுமோ - போர்செய்ய முடியுமோ, மௌனோபதேசகுருவே - மௌன நிலையை உப தேசித்தருளுகின்ற ஆசாரியனே, மந்த்ரகுருவே—எ-று.

வாங்கா நில்லா வடிமையென்று பாடமோதி வாங்காது நின்று என்று பொருள் கூறலுமாம். வாங்கா விலாவென்றும் பாடமுண்டு. இதற்குப் பொருள் நீங்காத வில்லை யுடையனாய் என்பது. இராவணாகாரமாகி - இரு ளுருவாகி. அவனது நிறம் கருமையாதலால் இவ்வாறு கூறப்பட்டது. இது தமோகுணப் பெருமையை வெளியிடுகின்றது. முடியுமோஎன்னும் ஓகாரம் எதிர்மறை.

ஆங்காரங் கெட்டவிடத்தே தற்போத வொழிவாகலால் 'ஆங்கார மானகுல வேடவெம்பேய்பாழ்த்த வாணவத்தினும் வலிதுகாண்' என்றும், அது இருக்குந்துணையும் மெய்யுணர்ச்சி தோன்றாமையின் 'அறிவினை மயக் கிடும் நடு வறியவொட்டாது' என்றும், எதைக்குறித்துப்பேசினும் அதுதானே யாகித் தருக்கலான் 'அதுவாய்த் தாங்காது மொழிபேசும்' என்றும், இதுமட்டோ, சிருட்டி திதி சங்கார கர்த்தாக்களையும் ஒரு அணுவாகக் கருத ச்செய்யு மென்பார் 'அரிகரப்பிரமாதி தம்மொடு சமானமென்னும்' என் றும், இதுவுமன்றி அஞ்சுருவாணி அசையாது நின்று தேரைச் செலுத்து வதுபோல, தான் சலியாமல் நின்று பொறிமுதலிய வியக்கலான் 'தடை யற்றதேரி லஞ்சரு வாணிபோலவே தன்னி லசையாது நிற்கும்' என்றும், தன்னறிவு முழுதும் குறையாடி இதயவெளி யெங்கும் தன் வயப்படுத்து தலின் 'இராவணாகாரமாகி யிதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய் திருக்கும்' என்றும், இதனொடெந்நேரமும் போராட முடியா தென்பார் 'எந்நேரமும் வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ' என்றுங் கூறினார். ஆங்கார மொடுங்கினாலன்றி மெய்யுணர்ச்சி தோன்றாதென்பதனை "ஆங்கா ரமு மடங்கா ரொடுங்கார் பரமானந்தத்தே - தேங்கார் நினைப்பு மறப்பு மறார்" என்பதனானறிக.

**10.** பற்றுவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி யேன்றவிதமோ
சிற்றறிவ தன்றியு மெவரேனு மொருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தைசெவி யாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்ச மளவளாவ
உற்றுணர வுணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
வுளறுவேன் முத்திமார்க்கம்

உணர்வதெப் படியின்ப துன்பஞ்ச மானமா
யுறுவதெப் படியாயினும்
மற்றெனக் கையநீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இ-ள். பற்று - பற்றுதற்குரிய இடம், வெகுவிதம் ஆகி - அநேகவித ங்களாகக்கொண்டு, ஒன்றைவிட்டு ஒன்றனைப்பற்றி - ஒன்றைவிட்டு ஒன் றைப்பிடித்து, உழல் - சுழல்கின்ற, கிருமிபோல - புழுவைப்போல, பாழ் சிந்தை பெற்ற நான் - கொடுமையாகிய மனத்தைப்படைத்த நான், வெளி யாக - வெளிப்படையாக, நின் அருள் - உன் திருவருளை, பகர்ந்தும் அறி யேன் - புகழ்ந்து மறியேன், துவிதமோ சிற்றறிவு - துவிதநிலையென்றாலோ அது சிற்றறிவாய் முடியும், அது அன்றியும் - அதையல்லாமலும், எவர் எனும் - யாவராயினும், ஒருமொழி - ஒரு சொல்லை, திடுக்கென்று உரை த்தபோது - திடுக்கென்று சொன்னகாலத்தில், செவியே சிந்தையாக - காதே மனமாக, பறை அறைய - பறையறையவும், வெம் - வெவ்விதாகிய, உதரத்தீ - உதராக்கினியானது, நெஞ்சம் அளவளாவ - மனத்தைக் கலக்கும் படி, உற்று - பொருந்துவதனால், உணர உணர்வு அற்று - அறிதற்குரிய அறிவும் அற்று, உன்மத்த வெறியினர்போல - உன்மத்தங்கொண்ட வெறி யாளரைப்போல், உளறுவேன் - குழறுவேன், (இப்படிப்பட்ட நான்) முத்தி மார்க்கம் உணர்வது எப்படி - முத்தி நெறியை அறிவது எவ்வாறு, இன்ப துன்பம் - சுகதுக்கங்கள், சமானமாய் உறுவது எப்படி - சமானமாகப் பொரு ந்துவது எவ்வாறு, ஆயினும் - ஆனாலும், ஐய - ஐயனே, நீ எனக்கு சொ ன்ன - நீ யெனக்குச் சொல்லியருளிய, ஒரு வார்த்தையினை - ஒரு சொ ல்லை, மலை இலக்கு என நம்பினேன் - மலையைக் குறியாகக்கொண்டாற் போல நம்பியிருக்கின்றேன், மந்த்ரகுருவே—எ-று.

கிருமி யோரிடத்தே நில்லாது பல விடங்களைப் பற்றுதலான் அதை மனத்துக்கு உவமையாகக்கொண்டு 'பற்று வெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப் பற்றி யுழல் கிருமிபோலப் பாழ்ஞ்சிந்தைபெற்றநான்' என் றும், அவ்வாறு பெற்ற நான் திருவருள் ஞானத்தால் வீடுபேறென் றறியா திருந்தேனென்பார் 'வெளியாக நின்னருள் பகர்ந்து மறியேன்' என்றும், துவிதஞானமானது அத்துவிதமாகிய இரண்டன்மைபோலச் சிறந்ததன்றெ ன்பார் 'துவிதமோ சிற்றறிவது' என்றும், யாதேனும் ஒருமொழி சொன்ன விடத்துச் சிந்தை செவியாய்ப் பறையறைய உதராக்கினி நெஞ்சங் கலக்க உணர்வற்று உன்மத்தனைப்போல உளறுவேன் என்பார் 'சிந்தை செவி யாகவே பறையறைய வுதரவெந் தீநெஞ்ச மளவளாவ உற்றுணர வுணர்

வற் றுன்மத்தவெறி யினர்போல வுளறுவேன்' என்றும், இருவினையொப்பு உணதாயினன்றி முத்திநெறி யமையாதென்பார் 'இன்ப துன்பஞ் சமானமா யுறுவதெப்படி' என்றும், நீ சொன்ன உபதேசமொழியையன்றி வேறொன் றையுங் கருதே னென்பார் 'ஐய நீ சொன்ன வொரு வார்த்தையினை மலை யிலக்கென நம்பினேன்' என்றுங் கூறினார்.

---

## கருணாகரக்கடவுள்.

1 நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்யமா
நிஷ்கள வசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்தமுக்த
தற்பரவிஸ் வாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞானபகவ
சம்புசிவ சங்கர சர்வேச வென்றுநான்
சர்வகாலமு நினைவனே
அற்புதவ கோசர நிவர்த்திபெறு மன்பருக்
கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
வனுபூதி யனுக்ரகமுங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

இ-ள். நிர்க்குண - குணரகிதனே, நிராமய - நோயற்றவனே, நிரஞ்சன - களங்கரகிதனே, நிராலம்ப - பற்றுக்கோடில்லாதவனே, நிர்விஷய - விஷயரகிதனே, கைவல்யமாம் நிஷ்கள - மோக்ஷரூபமான கலாசூந்யனே, அசங்க - சங்கரஹிதனே, சஞ்சலரகித - சஞ்சலமற்றவனே, நிர்வசந வசந ரஹிதனே, நிர்த்தொந்த - தொடக்கற்றவனே, நித்த - சாசுவதனே, முக்த - பாச விமுக்தனே, தற்பர - தற்பரனே, விஸ்வாதீத - லோகாதீதனே, வ்யோம பரிபூரண - பரமாகாசத்தில் நிறைந்திருப்பவனே, சதானந்த - சதா நந்தத்தை யுடையவனே, ஞான - ஞானத்தை யுடையவனே, பகவ - பகவ ச்சப்தத்தின் பொருளா யிருப்பவனே, சம்பு - சம்புவே, சிவ - சிவனே, சங்கர - சங்கரனே, சர்வேச - சர்வேச்சுரனே, என்று - என்று சொல்லி, நான் சர்வகாலமு நினைவனே - நான் சதாகாலமும் உன்னை த்யானிப்பேனே, அற்புத - ஆச்சர்யபூதனே, அகோசர - யாவராலும் அறியப்படாதவனே, நிவர்த்திபெறும் அன்பருக்கு - நிவ்ருத்தி மார்க்கத்தை யடைந்த அடியார்

களுக்கு, ஆனந்தபூர்த்தியான - சுகநிறைவாகிய, அத்துவித நிச்சய - அத்துவித நிலையாகிய உண்மையை யுடையவனே, சொரூப சாக்ஷாத்கார அநுபூதி அநுசூதமும் - பரப்பிரம சொரூபத்தையும் அதன் பிரத்தியக்ஷத்தையும் அதனது அநுபவ சித்தியையும், கற்பனை அற - யதார்த்தமாக, காண - முகக்கண்ணால் சேவிக்கும்படி, முக்கண்ணுடன் - மூன்றுகண்களோடு, வடநிழற் கண்ணூடு இருந்த - கல்லாலினிழலி லெழுந்தருளியிருந்த, குருவே - ஞானாசிரியனே, கருது அரிய - நினைத்தற்கும் அரிதாகிய, சிற்சபையில் - சிற்றம்பலத்தில், ஆனந்த நிர்த்தம் இடு - ஆனந்தக் கூத்தாடுகின்ற, கருணாகரக் கடவுளே - கருணைக்குப் பிறப்பிடமாயிருக்கிற கடவுளே—எ - று.

பகவன் என்பதற்கு ஆறு மங்கள குணங்களையுடையவன் என்பது பொருள். அவையாவன - சர்வஜ்ஞத்வம், சர்வேச்சுவரத்வம், சர்வநியந்த்ருத்வம், சர்வாந்தர்யாமித்வம், சர்வகற்பிதத்வம், சர்வசக்தித்வம் என்பன. இவ்வாறன்றி ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னு மிவற்றைக் கூறுவதுமுண்டு. அநுஸ்யூதம் என்னும் வடமொழி அநுசூதமென நின்றது. கடவுள் என்பதற்கு ப்ருதிவ்யாதி நாதாந்தமாயுள்ள தத்துவங்களைக் கடந்து நின்றவன் என்பது பொருள். தற்பரன் - ஆன்மாக்களிடத்தில் பிரியமுள்ளவன். முக்ததற்பரன் என ஒரு தொடராக்கி, முக்தர்களிடத்தில் பற்றுள்ளவன் என்னலுமாம். சம்பு-சுகத்தையுண்டாக்குவோன், அன்றிச் சுகரூபியா யிருப்பவன். சிவன் - மங்களத்தோடு கூடி யிருப்பவன் எனவும், சுபங்களைக் கொடுப்போன் எனவும், ஆநந்தரூபியும் நிர்விகாரியுமா யிருப்பவனாதலால் சமித்திருப்பவன் எனவும், சாதுக்களுடைய மனம் தன்னிடத்தில் நிலைக்கப்பெற்றவன் எனவும், சாதுக்களுடைய மனத்தில் சயனித்திருப்பவன் எனவும் பொருள்படும். சங்கரன் - சுகத்தைச்செய்கிறவன். நிவ்ருத்திமார்க்கம் - மோக்ஷ நெறி. வடநிழற் கண்ணூடு என்பதற்கு ஆலநிழலாகிய இடத்தில் என்றுரைப்பினுமாம். இது அடியார்க் கெளியனாதலை யுணர்த்துகின்றது.

2. மண்ணாதி யைந்தொடு புறத்திலுள கருவியும்
வாக்காதி சுரோத்ராதியும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னுசுத் தாதியுடனே
தொண்ணூற்றொ டாறுமற் றுள்ளனவு மௌனியாய்ச்
சொன்னவொரு சொற்கொண்டதே
தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல்லுவேன்
பண்ணாரு மிசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்றுதவமுப்

பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகைகூப்பிக்
கண்ணாறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

இ - ள். மண் ஆதி ஐந்தொடு - மண்முதலாகிய பஞ்சபூதங்களுடன், புறத்தில் உள்ள கருவியும்-புறக்கருவிகளும், வாக்கு ஆதி சுரோத்ராதியும்-வாக்குமுதலான கர்மேந்திரிய மைந்தும், சுரோத்திரம் முதலான ஞானேந்திரியமைந்தும், வளர்கின்ற சப்தாதி - வ்ருத்தியடையாநின்ற சப்தமுதலான விஷய மைந்தும், மனம் ஆதி - மனம் முதலான அந்தக்கரணம் நான்கும், கலை ஆதி - கலைமுதலான வித்தியாதத்துவங்களேழும், மன்னு சத்தாதியுடனே - நிலை பெற்ற சுத்த தத்துவத்துடனே, தொண்ணூற்றொடு ஆறும் - தொண்ணூற்றாறும், மற்று உள்ளனவும் - வேறுள்ளவைகளும், மௌநி ஆய்-மௌனகுருவாகி, (வந்து) சொன்ன-நீ சொன்ன, ஒரு சொல் கொண்டதே-ஒரு மொழியை உட்கொண்டவளவிலே, தூ வெளியதாய் - பரிசுத்தமான ஆகாயமாகி, அகண்ட ஆநந்த சுகவாரி - இடையறாத இன்ப சுக சாகரம், தோற்றுமதை என் சொல்லுவேன் - காணப்படுவதை யென்னென்று சொல்லுகேன், பண் ஆரும் இசையினொடு பாடி - பண்ணிறைந்த இராகத்தோடு பாடி, படித்து - படித்து, அருள்பான்மை நெறிநின்று - திருவருட்பான்மை வழிநின்று, தவறா - பிழையாத, பக்குவ விசேஷர் ஆய் - தீவிரதர பக்குவத்தை யுடையவர்களாய், நெக்கு நெக்கு உருகி - நெகிழ்ந்து நெகிழ்ந் துருகி, பணிந்து எழுந்து - தொழுதெழுந்து, இருகை கூப்பி - இரண்டு கைகளைக் குவித்து, கண் ஆறு கரைபுரள நின்ற - கண்ணீராலாகிய நதியானது கரை புரண்டோட நின்ற, அன்பரை எல்லாம் - அடியார்களையெல்லாம், கைவிடா காட்சி உற - கைவிடாத சேவையை யடையும்படி, கருது அரிய சிற்சபையில்—எ-று.

திருவரு ணெறிநின்ற அன்பர்கள் சேவிக்கச் சிற்சபையில் நடிக்கின்ற நீ என்னளவில் அகண்டாநந்த சுகவாரி தோற்றும்படி கிருபை புரிந்ததைக் குறித்து என்னசொல்லிப் புகழ்வேன் என்பது கருத்து.

மண்ணாதி ஐந்தென்றது பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய மென்பவைகளை. வாக்காதி என்றது வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்பவைகளை, இவற்றைக் கன்மேந்திரிய மென்பர். சுரோத்திராதி யென்பது சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்பனவாம், இவற்றை ஞானேந்திரிய மென்பர். சப்தாதி யென்றது சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தமென்பவைகளை, இவற்றை ஐம்புலனென்பர். மன

மாதியென்றது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவைகளே, இவற்றை அந்தக்கரணமென்பர். கலையாதி என்றது காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்பவைகளே, இவற்றை வித்தியாதத்துவமென்பர். சுத்தாதி என்பது சுத்தவித்தை, ஈசர், சதாசிவம், சத்தி, சிவம் என்பவைகளே, இவற்றைச் சுத்த தத்துவ மென்பர். இன்னும் விரிக்கிற் பெருகுமாகலின் 'தொண்ணூற்றெரு டாறுமற் றுள்ளனவும்' என்று கூறினர். இவற்றை விரிந்தநூலிற் கண்டுகொள்க.

**3.** எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடையசெயலே
யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேதமெல்லாம்
சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவருள்விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானுமிவையே
அல்லாம லில்லையென நன்ரு வறிந்தே
னறிந்தபடி நின்றுசுகநான்
ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினே
னதுவுநின தருளென்னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேதுபுகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணை கரக்கடவுளே.

இ - ள். எல்லாம் உன் அடிமையே - எல்லாரும் உன்னடிமைகளே, எல்லாம் உன் உடைமையே - எல்லா வஸ்துக்களும் உன் பொருள்களே, எல்லாம் உன்னுடைய செயலே - எல்லாச் செயல்களும் உன் செயல்களே, எங்கணும் வியாபி நீ - எவ்விடத்தும் வியாபித்திருப்பவன் நீயே, என்று சொல்லும் இயல்பு என்று - என்றுகூறு மியல்பையுடையதென்று, இருக்கு ஆதிவேதம் எல்லாம் - இருக்கு முதலான வேதங்கள் முழுதும், சொல்லால் முழக்கியது - சொல்லினல் உத்கோஷித்தது, சொல்லிறந்தவரும்-பேச்சிறந்தவர்களாகிய ஞானிகளும், மிக்க உபகாரம் ஆ - மிகுந்த வுபகாரமாயெண்ணி, விண்டு சொன்னவையும் இவை - விவரித்துச் சொன்னவைகளுமிவைகளே, நல்ல குருவான பேரும் - சதாசாரியரானபேரும், தொகுத்த நெறிதானும் இவையே அல்லாமல் - தொகுத்துரைத்தமார்க்கங்களும் இவைகளேயன்றி, இல்லையென - வேறில்லையென்று, நன்ரு அறிந்தேன் - நன்குணர்ந்தேன், அறிந்தபடி நின்று - உணர்ந்தவண்ணம் நின்று, நான் சுகம் ஆகாதவண்ணம் -

நான் இன்புறாமல், இவ்வண்ணம் ஆயினேன் - இப்படியானேன், அதுவும் - அது தானும், நினது அருள் என்ன - உன் திருவருளே யென்று, கல்லாத வறிஞனுக்கு உள்ளே உணர்த்தினை - கல்லாதவறியேனுக் குள்ளே யறிவித்தாய், கதிக்குவகை ஏது புகலாய் - மோக்ஷ கதிக்கு வழி யாதுசொல்லாய், கருதரிய சிற்சபையில்—எ-று.

எப்பொருட்கு மிறைவனாகலின் 'எல்லாமுனடிமையே' என்றும், எல்லாமுடையானாகலின் 'எல்லாமுனுடைமையே' என்றும், அவனசையாது அணு வசையாதென்றலின் 'எல்லா முனுடைய செயலே' என்றும், எங்கும் பரிபூரணனாகலின் 'எங்குணும் வியாபி நீ' என்றும் இவ்வாறு வேதமுதலிய ஆப்தகலைகள் கூறியதல்லது மெய்யுணர்ச்சியுடையா ரனுபவமு மிதுவே என்பது நோக்கி 'இருக்காதி வேதமெல்லாம் சொல்லான் முழக்கியது மிக்க வுபகாரமாச் சொல்லிறந்தவரும் விண்டு சொன்னவையு மிவை' என்றும், ஞானாசாரியரெல்லாரும் ஆசிரிய பரம்பரையாக உபதேசித்த நெறி யிதுவே யென்பதுபற்றி 'நல்ல குருவானபேருந் தொகுத்த நெறிதானு மிவையே யல்லாமலில்லை' என்றும், இதனை நன்குக வாராய்ந்து அறிந்தும் அவ்வாறு சுகாரம்பநிலை பெறாது பாழிற் காலஞ் செலுத்தினேன் என்பது பற்றி 'நன்று வறிந்தே னறிந்தபடி நின்று சுக நானாகாத வண்ணமே யிவ்வண்ண மாயினேன்' என்றும், அதுவு நின்னருளல்ல தில்லையென் றெனக் குணர்த்தினை யென்பது கருதி 'அதுவு நினதருளென்னவே கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை' என்றும் எனக்கு நின்னை யல்லது பேரின்ப வீடெய்த வழிப் பாரெவர் என்பார் 'கதிக்கு வகை யேது புகலாய்' என்றுங் கூறினார். எல்லா முனுடைய செயலே என்றது 'சிவன் செயலாலே யாதும் வருமெனத் தேறேன்' என் றிவ்வாசிரியர் கூறுவதனாலு முணர்க. சொல்லிறந்தவர் மௌனநிலையுடையோர்.

4. பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனதுபக்ஷம்
பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை குலையாது
பரமவெளி யாகவொருசொற்
றிட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவுஞ்
சேராம லாராகநான்
சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாகவுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவேமுளைத்த மனதைக்

கட்டவறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித்தாவனோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே.

இ - ள். பட்டப்பகற்பொழுதை - கடும்பகற்காலத்தை, இருள் என்ற - இருட்கால மென்கிற, மருளர்தம் பக்ஷமோ எனது பக்ஷம் - மிலேச்சர்து பக்ஷந்தானோ எனது பக்ஷம், பார்த்த இடம் எங்கணும் - கண்ட இடங்களெல்லாம், கோத்தநிலை குலையாது - என்னை விழுங்கின நிலை கெடாமல், பரமவெளி ஆக - பரமாகாயமாக, ஒருசொல் - ஒருமொழியை, மௌநி ஆய் - மௌநியாகி, திட்டமுடன் அருள்செய் திருக்கவும் - திருத்தமா யருள்செய் திருந்தும், சேராமல் - அதையடையாமல், நான் ஆர் ஆக - நான் யாராக வெண்ணி, சிறுவீடு கட்டி - சிறிய மணல்வீடு கட்டி, அதின் அடுசோற்றை உண்டு உண்டு - அதில் சமைத்த மணற்சோற்றைப் பலகாலுண்டாற்போல நடித்து, தேக்கு சிறியார்கள்போல - தேக்கெறிகின்ற சிறுர்கள்போல, நட்டணையதாக் கற்ற - நடுவுநிலைமையாகக் கற்றுக்கொண்ட, கல்வியும் - கல்வியையும், விவேகமும் - கேள்வியறிவையும், நல்நிலயமாகவுன்னி - நல்லநிலையிடமாக நினைத்து, நான் என்று நீ என்று - நானென்றும் நீயென்றும், இரண்டு இல்லையென்ன - இரண்டில்லையென்று துணிந்து, நடுவே முளைத்த மனதை - நடுவிலுண்டான மனத்தை, கட்ட அறியாமல் - தடைப்படுத்த வறியாமல், வாடினேன் - மெலிந்தேன், எப்போதுகருணைக்கு உரித்தாவனோ - எக்காலத்தில் உன்கருணைக்குப் பாத்ரமாவேனோ, கருதரியசிற்சபையில்—

தேக்கெறிதல் - ஏப்பமிடுதல், மனத்தைக் கட்ட வறிந்தால் கருணைக் குரித்தாதல் திண்ணம். அதைக் கட்டவறியாமையால், எப்போது கருணைக் குரித்தாவனோ என்றார். இது. "வெள்ளத்து ளாவற்றியாங் குன் கருணைக் கடலினுள்ளம் விள்ளக்கிலேனை" என்றாற்போல்வது.

கடும்பகற் காலத்தை யிருளென்பார் மதம் தான்கொண்ட மதமல்ல வென்பதனால் 'பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம் பக்ஷமோ வெனது பக்ஷம்' என்றும், இறைவன் பரைவியாபகப்பட்டு யாண்டும் பரிபூரணமாகிய நிலையைக் குருமௌனியாகவந் துபதேசித்திருக்கவும், தான் உண்டுடுத்துக் காலங் கழிக்குஞ் சிறியார்போன்று கல்வியும் கேள்வியுமாகக் கலக்குற்றமையால் 'பார்த்தவிட மெங்கணும் கோத்தநிலை குலையாது பரம வெளியாக வொருசொல் - திட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவுஞ் சேராம லாராகநான் - சிறுவீடு கட்டியதி னடுசோற்றை யுண்டுண்டு தேக்குசிறியார்கள்போல - நட்டணையதாக் கற்ற கல்வியும் விவேகமு நன்னிலயமாக வுன்னி' என்றும், நான் நீ யென நின்ற பேதங்க ளொழித்து நடுவே தோன்றிய மனத்தை என் வயப்படுத்தாமல் வருந்தினேன் என்

பது கருதி 'நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே நடுவே முளைத்த மனதைக் கட்டவறியாமலே வாடினேன்' என்றும், அப்படிப்பட்ட நான் உனது திருவருளைப்பெறுவது என்னாளோ வென்பது கருதி 'எப்போது கருணைக்குரித்தாவனே' என்றுங் கூறினர். மனத்தைக் கட்டினாலன்றி ஆனந்தாதீதமாகிய முத்தி கைவராது ஆதலால் 'மனத்தைக் கட்டவறியாமலே வாடினேன்' என்றது 'கருத்தடங்கின் முத்தியது கையகலிற்கட்டாகும்' என்று தேவிகாலோத்தரம் கூறியதனுலு மறிக.

**5.** மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்துநீ
மெய்யான மெய்மையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய்யிதற்கையமிலை
மெய்யேது மறியாவெறும்
பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யையெல்லாம்
பொய்யெனு வண்ணமே புகலவைத் தாயெனிற்
புன்மையே னென்செய்குவேன்
மைவிடா தெழுநீல கண்டகுரு வேவிஷ்ணு
வடிவான ஞானகுருவே
மலர்மேவி மறையோது நான்முகக்குருவே
மதங்கமொடா று நின்றகுருவே
கைவிடா தேயென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்தூ டுணர்த்துகுருவே
கருதரிய நிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணு கரக்கடவுளே.

இ - ள். மெய்விடா நா உள்ள - மெய்யை நீங்காத நாவினையுடைய, மெய்யர் உள் நீ இருந்து - மெய்யினரிடத்தில் நீ சந்நிதிசெய்திருந்து, மெய் ஆனமெய்மை எல்லாம் - உண்மையான உண்மைப் பொருள்களையெல்லாம், மெய் என உணர்த்தியது மெய் - உண்மையாக விளக்கிக்காட்டினது சத்தியமே, இதற்கு ஐயம் இல்லை - இதற்குச் சந்தேகமே யில்லை, மெய் ஏதும் அறியா - உண்மையைச் சிறிதுமுணராத, வெறும் பொய்விடா - வெறும் பொய்யை நீங்காத, பொய்யினேன் - பொய்யினை யுடையவனாகிய எனது, உள்ளத்து இருந்து - மனத்தின்கணிருந்து, பொய்யான பொய்யை எல்லாம் - பொய்யாகிய பொய்ப்பொருள்களை யெல்லாம், பொய் எனு வண்ணம் - பொய்யென்று சொல்லாதபடி, புகலவைத்தாய் எனின் - (மெய்யென்று) சொல்லும்படி (என்னை நியமித்து) வைத்தனையாயின், புன்மையேன் என்செய்குவேன் - அற்பனாகிய நான் என்செய்ய வல்லேன், மைவிடாது எழும் நீலகண்ட குருவே - கருமை நீங்காது வளர்கின்ற நீலகண்ட

ரூபமாகிய ஆசிரியனே, விஷ்ணு வடிவு ஆன ஞான குருவே - திருமாலுருவாகிய ஞானாசிரியனே, மலர்மேவி-தாமரைமலரை (இடமாகப்) பொருந்தி, மறை ஓதும் - வேதாத்யயநம் பண்ணுகிற, நான்முகக் குருவே - பிரமனுருவாகிய ஆசிரியனே, மதங்கள்தோறும் நின்ற குருவே - எல்லாச் சமயங்களிலும் (அவரவர் கருதியபடி) நின்ற ஆசிரியனே, கை விடாதே என்ற அன்பருக்கு - கைவிட வேண்டாமென்று ப்ரார்த்தித்த அன்பர்கட்கு, அன்பு ஆய் - அன்புருவாகி, கருத்தூடு - (அவரது) கருத்தினுள், (இருந்து) உணர்த்து குருவே - (அறியவேண்டுவன யாவும்) அறிவித்த ஆசிரியனே, கருதரிய —எ-று.

மெய்விடா நா உள்ளம் மெய்யருள் எனப் பதம் பிரித்து, மெய்நீங்காத நாவினையும் உள்ளத்தினையு முடைய மெய்யரிடத்து என்றலு மொன்று. மெய்யான மெய் - பொய்கலவாத மெய், பொய்யான பொய் - மெய் கலவாத பொய். இதனால் ஆசிரியனே முத்தொழில் நடாத்து முதல்வரா யிருப்பவனென்பதுகூறப்பட்டது. "நரன்சுரன் ஞானியாமென்பது நன்றல, பிரமமே ஞானியாம் பேதமின்றென்பது" என்றார் பிறரும்.

மெய்ம்மையாளர் நெஞ்சினின்று மெய்ம்மையை யுணர்த்தியது மெய் யென்பதுகருதி 'மெய்விடாநாவுள்ள மெய்யரு ளிருந்து நீ மெய்யானமெய்யை யெல்லாம் மெய்யென உணர்த்தியது மெய்' என்றும், இதற் கோரையமு மில்லை யென்பது நோக்கி 'இதற்கைய மில்லை' என்றும், பொய்பொதிந்த என்மனத்தினின்றும் பொய்யென்பதே யறிவிப்பாயெனின் யான் செயக்கடவ தென்னையென்பது நோக்கி 'மெய்யேதுமறியா வெறும் பொய்விடாப் பொய்யினே னுள்ளத்திருந்துதான் பொய்யான பொய்யையெல்லாம் பொய்யென வண்ணமே புகலவைத்தாய்' என்றும், ஆதலால் யான் செயக்கடவது யாதென்பதுபற்றி 'புன்மையே னென்செய்குவேன்' என்றும், குருவே சிவபரம்பொருளும், திருமாலும், நான்முகனுமென்பது பற்றி 'மைவிடா தெழு நீலகண்ட குருவே விஷ்ணு வடிவான ஞான குருவே மலர் மேவி மறை யோது நான்முகக் குருவே' என்றும், எம்மதப் பொருளுமாயிருப்பதுபற்றி 'மதங்கடொறு நின்ற குருவே' என்றும், நீ மெய்யன்பராவார்க் குள்ளத்தி னுணர்த்தி நிற்கின்றனையென்பது பற்றிக் 'கைவிடாதே யென்ற வன்பருக் கன்பாய்க் கருத்தூ டுணர்த்து குருவே' என்றுங் கூறினர்.

**6.** பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித்திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்கமனமும்

நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனின்
  நாணுமென் னுளநிற்றிநீ
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலா
  லுன்பூசை செய்யன் முறையோ
விண்ணே விண்ணாதியாம் பூதமே நாதமே
  வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
  வித்தே யவித்தின் முளையே
கண்ணே கருத்தேயெ னெண்ணே யெழுத்தே
  கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
  கருணா கரக்கடவுளே.

இ - ள். உனக்கு ஆன பூசைபண்ணேன் - உனக்கபிமதமான பூசனையைச் செய்யேன், ஒருவடிவிலே பாவித்து இறைஞ்ச - ஒருருவத்தில் (நீயிருப்பதாக) பாவனைசெய்துவணங்க, ஆங்கே - அதற்காகவே, பார்க்கின்ற மலரூடும் - பார்க்கிற மலர்களெல்லாவற்றுள்ளும், நீயேஇருத்தி - நீயே நீக்கமின்றி நிறைந்திருக்கிறாய், (ஆதலால்) அப்பனிமலர் எடுக்க மனமும் நண்ணேன் - அந்தக்குளிர்ச்சியாகிய மலர்களைப்பறிக்கவும் மனம் பொருந்தேன், அல்லாமல் - அன்றியும், இருகைகுவிக்க எனின் - இருகைகூப்புகவெனின், நீ என் உள்ளம் நிற்றி - நீ யென்மனத்திலிருக்கிறாய், (ஆதலால்) நாணும் - என்மனம் நாணுநின்றது, (அப்படி மனவொருப்பாடின்றி) நான் கும்பிடும் போது - நான் நமஸ்கரிக்கும்போது, அரைக்கும்பிடு ஆதலால்-(அது) அரைநமஸ்காரமாகையால், நான் பூசை செய்யல் முறையோ - நான் பூசனை புரிதல் கிரமமாகுமோ, விண்ணே - பரமாகாயமே, விண் ஆதி ஆம் பூதமே - விண்முதலாகிய பஞ்சபூதமே, நாதமே - நாததத்துவமே, வேதமே-மறையே, வேதாந்தமே - மறைமுடிவே, மேதக்க கேள்வியே - மேன்மை பொருந்திய கேள்வியே, கேள்வி ஆம்பூமிக்குள் வித்தே - கேள்வியாகிய நிலத்தில் முளைக்கின்ற பீஜமே, அவ்வித்தின் முளையே - அந்தப் பீஜத்தினின்று முண்டாகிற அங்குரமே, கண்ணே - கண்களே, கருத்தே - மனமே, என்எண்ணே - என்தருக்கமே, எழுத்தே - இலக்கணமே, கதிக்கு ஆன மோனவடிவே - மோக்ஷத்திற் கேதுவாகிய மௌநரூபமே, கருதரிய—எ - று.

ஒருவடிவு - கல், மரம், செம்பு, மண் முதலியவற்றாற் செய்யப்பட்ட விக்ரஹங்களில் ஒன்று. பூதமே நாதமே என்றாரேனும் ப்ருதிவ்யாதி நாதாந்தமாகிய தத்துவத் தொகுதியா யிருப்பவனே யென்றதாகக் கொள்க. கண் என்றார் பதார்த்த தரிசனத்துக் கேதுவாய் நன்மை தீமைகளைப் பகுத்துணர்த்

தலின். கருத்து என்றார், தீமைகளையொழித்து நன்மைகளை எண்ணுதற்குக் கருவியா யிருத்தலின்.

சிவாகம முறைப்படி செய்யும் பூசனை நான் செய்ய அறியேன் என்பார் 'பண்ணேனுனக்கான பூசை' என்றும், அப்படிச் செய்வதும் பரமசிவனது நவந்தருபேதங்களுள் ஒரு மூர்த்தியினுருவைப் பாவித்துப் பூசிக்கவேண்டுமென்பார் 'ஒருவடிவிலே பாவித்திறைஞ்ச' என்றும், அவன் சர்வபரிபூரணனாகலின் யான் அருச்சிக்கு மலரிலும் இருக்கின்றான் என்பார் 'ஆங்கே பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தி' என்றும், ஆதலால் அம்மலரினைக் கொண்டு அர்ச்சிப்ப தெவ்வாறென்பார் 'அப்பனிமலரெடுக்க மனமு நண்ணேன்' என்றும், புறத்தேயிருப்பதன்றி அகத்து மிருத்தலின் அவனை வணங்குவ தெவ்வாறென்பார் 'நான் கும்பிடும்போ தரைக்கும்பிடாதலால் நான் பூசை செய்தல் முறையோ' என்றும் கூறினார். நவந்தருபேத மென்றது பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன், நாதம், விந்து, சத்தி, சிவமென்பவற்றை. கண்ணே கருத்தே என்றது கட்புலனுக்குத் தோன்றும் பொருள்களிலும், மனத்திற்கு விஷயமாகும் பொருள்களிலும் இருப்பதுபற்றி. 'எண்ணே யெழுத்தே' என்றது வேதங்களிற் கூறப்படும் எல்லாப் பொருள்களையும் ஒருவனுணர்தற்குத் தருக்கமும், இலக்கணமுமாகிய கருவியன்றி யுணரப்படாமையின். நாதமெனல் சத்தப்பிரமத்தை.

7. சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
 தான்வந்து முற்றுமெனலால்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
 சதாநிஷ்டர் நினைவதில்லை
சிந்தையறி யார்க்கீது போதிப்ப தல்லவே
 செப்பினும் வெகுதர்க்கமாம்
திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள்
 சித்தாந்த நித்யரலரோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுள
 ரிருக்காதி வேதமுனிவர்
எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்க
 ளிரவிமதி யாதியோர்கள்
கந்தருவர் கின்னரர்கண் மற்றையர்க ளியாவரும்
 கைகுவித் திடுதெய்வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
 கருணா கரக்கடவுளே.

இ-ள். வேதமொழி - வேதவாக்கியமானது, சந்ததமும் - சதா காலமும், யாதொன்று பற்றின் - யாதொன்றையாயினும் மனத்திறுற்பற்றினல், அது தான் வந்து முற்றும் எனலால் - அதுவாகவே வந்து முடிவுபெறுமென்று சொல்லுதலால், சகமீது இருந்தாலும் - உலகத்தி லிருப்பினும், மரணம் உண்டு என்பது - மரணமுளதென்பதை, சதாநிஷ்டர் நினைவது இல்லை - ஸஹஜ நிஷ்டாபரர் நினைப்பதேயில்லை, ஈது - இது, சிந்தை அறியார்க்கு - கருத்தறியாதவர்க்கு, போதிப்பது அல்ல - அறிவுறுத்துவதன்று, செப்பினும் - அறிவுறுத்தினும், வெகுதர்க்கம் ஆம் - அநேகமாகிய வாதுகள் விளையும், திவ்யகுணம் - தெய்விகமான குணத்தையுடைய, மார்க்கண்டர் - மார்க்கண்டரும், சுகர் ஆதி முனிவோர்கள் - சுகர் முதலாகிய முனிவர்களும், சித்தாந்த நித்யர் அல்லரோ - முடிவு செய்யப்பட்ட நித்யாத்மாக்களல்லரோ, இந்த்ராதி தேவதைகள் - இந்திரன் முதலான சாமாந்ய தேவர்களும், பிரமாதி கடவுளர் - பிரமன் முதலான விசேஷ தேவர்களும், இருக்கு ஆதி வேதம் முனிவர் - இருக்கு முதலிய வேதங்களை ஐயந்திரிபறவுணர்ந்த முனிவர்களும், எண் அரிய கணநாதர் - எண்ணுத லருமையாகிய கணாதிபதிகளும், நவநாத சித்தர்கள் - சத்தியநாதர் முதலிய ஒன்பது சித்தர்களும், இரவிமதி ஆதியோர்கள் - சூரியன் சந்திரன் முதலானவர்களும், கந்தருவர் - கந்தருவரும், கிந்நரர்கள் - கிந்நரரும், மற்றையர்கள் யாவரும் - வேறுளோரெல்லாரும், கைகுவித்திடு தெய்வமே - கைகூப்பித் தொழுதற்குரிய தெய்வமே, கருதரிய—எ-று.

ஜகம் - தோன்றி யழிதன் மாலையவாகிய வுலகங்கள். யாரொருவர் எப்பொருளை யிடைவிடாது மநநம்பண்ணுகிறார்களோ, அவ ரப்பொருளாகவே முடிவ ரென்பது வேதநூற் றுணிபாதலாலும், மரணமுண் டென்னு நினைப்பே மரணத்தை யுண்டாக்கு மாதலானும், சுகர் முதலானோர் பூததேஹத்தோடு சிதாகாயத்தை யடைந்ததனுனும், குமாரதேவர் முதலானோர் சுத்தசாதகம் முதலிய நூல்களில் இவ்வாறு கூறுதலானும் மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லையென்றார்.

நான்குவேத மகாவாக்கியங்களில் எந்த வேதமகாவாக்கியத்தை யனுசந்திக்கினும் அதுவாகவே முடிவுபெறலால் 'சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றி னது தான்வந்து முற்றுமெனலால்' என்றும், அது பற்றி யுலகின்கண் உடம்பொடு கூடியிருக்கினும் சீவன் முத்திபெற்று மரணமுண்டென்ப தறியாராகலின் 'சகமீ திருந்தாலும் மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லை' என்றும், பிறர்க்குப் போதிப்பினும் தர்க்கிக்க விடந் தரலால் 'சிந்தையறியார்க் கீதுபோதிப்பதல்லவே செப்பினும் வெகுதர்க்கமாம்' என்றும், இந்நெறி கைவந்தார் மார்க்கண்டேயர் சுகர் முதலிய முற்றத்

துறந்த முனிவராதலின் 'திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள் சித்தாந்த நித்ய ரலரோ' என்றுங் கூறினர்.

8. துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துஷ்டதே வதைகளில்லை
துரியநிறை சாந்ததே வதையா முனக்கே
தொழும்பனன் பபிஷேகநீர்
உள்ளுறையி லென்னாவி நைவேத்தி யம்ப்ராண
னோங்குமதி தூபதீபம்
ஒருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித் தேன்கருணைகூர்
தெள்ளிமறை வடியிட்ட வமுதப் பிழம்பே
தெளிந்ததே னேசீனியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே
தெவிட்டாத வானந்தமே
கள்ளனறி வூடுமே மௌனமௌ வெளியாய்க்
கலக்கவரு நல்லவுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

இ-ள். அறியாமனது - சாராசாரங்களைப் பகுத்தறியாத மனமானது, துள்ளும் - துள்ளா நிற்கும், பலிகொடுத்தேன் - (ஆதலால் அதனைப்) பலியிட்டேன், கர்மதுஷ்ட தேவதைகள் இல்லை - பாபரூபமாகிய துஷ்டதேவதைகள் (இனி யென்னை வருத்த) உளவாவன அல்ல, துரியம் நிறை - துரியபதத்தில் நிறைந்த, சாந்த தேவதை ஆம் உனக்கே - சாந்ததேவதையாகிய உனக்கே, தொழும்பன் அன்பு - உன் தொண்டனாகிய அடியேனது அன்பானது, அபிஷேக நீர் - திருவபிஷேக தீர்த்தமாகும், உள் உறையில் - தேவரீர் என்மனத்திற்றங்கினால், என் ஆவி - என்னுயிரானது, நைவேத்தியம் - நைவேத்யமாகும், ப்ராணன் - ப்ராணவாயுவும், ஓங்கும்மதி - உயர்ந்த அறிவும், தூபதீபம் - தூபதீபங்களாகும், இது - இவ்வாறு அடியேன் பூசனை புரிவதாகிய இது, ஒருகாலம் அன்று - ஒருபொழுதில் மாத்திரமேயல்ல, சதாகால பூசைஆ ஒப்புவித்தேன் - சதாகால பூசனையா யொப்புவித்தேன், (ஆதலால்) கருணைகூர் - மிகுந்த கிருபையைப்பண்ணு, மறைதெள்ளிவடியிட்ட - வேதங்களால் தெளிவித்து வடிக்கப்பட்ட, அமுதப்பிழம்பே - அமிர்தத்தொகுதியே, தெளிந்த தேனே - தெளிந்ததேனே, சீனியே - சீனிச்சர்க்கரையே, திவ்ய ரசம் யாவும் - தெய்விகமான சுவைகளெல்லாம், திரண்டு ஒழுகுபாகே - ஒருசேரக்கூடி யொழுகா நின்றபாகே, தெவிட்டாத ஆநந்தமே - வெறுக்கப்படாத இன்பமே, கள்ளன் அறிவூடும் - கள்வனாகிய என்

னறிவினிடத்தும், மெள்ள மெள்ள-பையப்பைய, வெளியாய்க்கலக்கவரும்-வெளிப்படக் கலக்கவருகின்ற, நல்லவுறவே - நன்மைபயக்குஞ் சுற்றமே, கருதரிய—எ-று.

ப்ராணவாயு புகை யுரு வாதலால் அதனைத் தூபமாகவும், மதி ஒளியுருவாதலால் அதனைத் தீபமாகவுங் கூறினர். கள்ளனறிவூடும் என்னும் உம்மை இறந்ததுதழீஇயது, கள்ளமற்றவர் அறிவூடு கலத்தலேயன்றி யெனப் பொருள் தருதலால். மனது பலிகொடுத்தல் - மனதை நசிப்பித்தல்.

"சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந் தானேயெய்தும்
அங்குற்ற மனமிறக்கிற் சனனமர ணங்களெனு மரமுமாயும் [ஞ்சம்
இங்கிப்பா லெனைத்திருடுங் கள்ளனைக்கண்டேன்கண்டேனிவர்பேர் நெ
பொங்குற்ற விவனாலே நெடுநாளுணர்ந்தே னின்று பொன்று விப்பேன்."
என்றார் பிறரும்.

பிறவுயிர்களைக் கொன்று பலியிடல் துர்த்தேவதைகட்காதலால் இறைவன் மெய்யுணர்ந்தா ருள்ளத்தே தோன்றுகின்றவ னாதலின் மனத்தைப் பலியிட்டதாக 'துள்ளு மறியா மனது பலிகொடுத்தேன்' என்றும், ஆதலால் இனி என்னைத் துர்த்தேவதைகள் வருத்தா வென்பது பற்றிக் 'கர்ம துஷ்ட தேவதைக ளில்லை' என்றும், முன்னமே மனத்தைப் பலியிடும் பொருளாக உருவகஞ்செய்ததற் கேற்ப அபிடேகஞ் செய்வதற்குத் துணிந்தவர் அன்பே யபிடேக நீராகக் கொண்டாரென்பார் 'துரியநிறை சாந்த தேவதையா முனக்கே தொழும்ப னன்பபிஷேகநீர்' என்றும், அதற்கு நைவேத்தியமாக 'உள்ளுறையு மென்னுவி நைவேத்தியம்' என்றும், தூபதீபம் வேண்டலின் 'பிராண னொங்கு மதி தூப தீபம்' என்றும், இது சதாகால பூசையாகச் செய்துவருகின்றேன் என்பார் 'ஒருகாலமன் றிது சதாகால பூசையா வொப்புவித்தேன்' என்றும், ஆதலால் நீ யருள்செய்யவேண்டு மென்பார் 'கருணை கூர்' என்றுங் கூறினர்.

**9.** உடல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்க
ளூற்றென வெதும்பியூற்ற
லூசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
யோருறவு முன்னியுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
பாடியா டிக்குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பியார்த் தார்த்தெழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித் துக்கூப்பி
வானேய வானிலின்ப

மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தியேத்தும்
கடன்மடை திறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ்ச னுக்கெளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணு கரக்கடவுளே.

இ-ள். உடல் குழைய - சரீரம் வாடவும், என்பு எல்லாம் நெக்கு உருக - எலும்புகளெல்லாம் நெகிழ்ந்துருகவும், விழிநீர்கள் ஊற்று என வெதும்பி ஊற்ற - கண்ணீர் மணற்கேணி யென்னலாம்படி கொதித்தொழுகாநிற்கவும், ஊசிகாந்தத்தினைக் கண்டு அணுகல்போல - இருப்பூசியானது காந்தக்கல்லினைக்கண்டு (அதனிடத்துச்சென்று) பொருந்துதல்போல, ஓர் உறவும் உன்னி உன்னி - ஒப்பற்ற (ஆத்ம) பந்துவாகிய வுன்னையும் நினைத்து நினைத்து, நெஞ்சம் படபடென பதைத்து - மனம் படபடெனத் துடித்து, உள் நடுக்குற - உள்ளே நடுக்க மடையவும், பாடி ஆடி குதித்து - பாடி ஆடித் துள்ளி, பனி மதி முகத்திலே நிலவு அனைய - குளிர்ச்சியை யுடைய சந்திரனிடத்தி லுண்டாகும் சந்திரிகையை யொத்த, புன்னகை பரப்பி - புன் சிரிப்பை விரித்து, ஆர்த்து ஆர்த்து எழுந்து - பலகா லாரவாரித் தெழுந்து, மடல் அவிழும் மலர் அனைய கை - இதழ்கள் விரியா நின்ற தாமரை மலரை யொத்தகைகளை, விரித்து கூப்பி - விரித்துங் குவித்தும், வானே - சிதாகாயமே, அவ்வானில் இன்ப மழையே - அவ்வாகாயத்தி னின்றும் பொழிகின்ற ஆநந்த வருஷமே, மழை தாரை வெள்ளமே - அந்த மழைத் தாரைகளா லுண்டாகும் பெருக்கே, நீடூழி வாழி யென வாழ்த்தி யேத்தும் - நீடூழிகாலம் வாழ்க வென்று திருப்பல்லாண்டு பாடித் துதிக்கின்ற, கடல் மடை திறந்தனைய - கடலானது மடை திறந்தாற்போன்ற, அன்பர் அன்புக்கு எளியை - அன்பரது அன்புக்கு எளியையா யிருக்கிறாய், கல்நெஞ்சனுக்கு எளியையோ - இக்கல் மனத்தினேற்கு எளியையா யிருப்பாயோ, கருதரிய—எ-று.

என்பெலாம் நெக்குருக என்றமையால், என் புருகுதற்குக் காரணம் இவரது அன்பென்றவாறாயிற்று. ஊற்று என வெதும்பி என்றதனால் ஊற்று நீரும் கண்ணீரும் வெதும்புத லியற்கை யென்பதாயிற்று. மதி முகத்துக்கும் நிலவு புன்னகைக்கும் உவமை. ஒருவரால் காரியங் கொள்வோர் அவரை வாழ்த்துதல் பெரு வழக்காதலால், தமக் கெளியனுக்குகைக்கு நீடூழி வாழி யென வாழ்த்துவா ராயினர். இதனை 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மன நின்பால் - தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டி' என்பதனானு மறிக.

மெய்யன்பர் அன்புருவமாய்க் கரைந்து விரைந்து நிற்பவ ராதலின் அவரது நிலைமையைக் கூறவந்தவர், அவர்களுக்கு 'உடல் குழைந்து என்பு

நெக்குருகி யானந்தக் கண்ணீர் பொழிவது நோக்கி 'உடல் குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்கள் ஊற்றெனவெதும்பியூற்ற' என்றும், ஊசி காந்தத்தினைக் கண்டாற்போல இறைவனை நெஞ்சமுருகப் பாடியாடி நிற்பாராதலின் 'ஊசி காந்தத்தினைக் கண்டணுகல் போலவே யோருறவு முன்னியுன்னிப் - படபடென நெஞ்சம் பதைத் துண் ணடுக்குறப் பாடி யாடிக் குதித்து' என்றும், அவர்கள் முகத்தில் புன்னகை பரப்பி யாரவாரித்து எழுந்து மலர்க்கை கூப்பி நிற்பாராதலின் 'பனி மதி முகத்திலே நிலவனைய புன்னகை பரப்பி யார்த்தார்த் தெழுந்து மடலவிழ மலரனைய கைவிரித்துக் கூப்பி' என்றும், அவர்கள் இறைவனைப் பலபடக்கூறி வாழ்த்துவாராதலால் அவரை 'வானே யவானி லின்பமழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி வாழி யென வாழ்த்தி யேத்தும் கடன் மடை திறந்தனைய வன்பர்' என்றும், அவர்க் கெளியையாயினை என்பார் 'அன்ப ரன்புக் கெளியை' என்றும், அவ்வகைப்பட்ட நீ யெனக் கிரங்குவையோ என்பார் 'கன்னெஞ்சனுக் கெளியையோ' என்றுங் கூறினர்.

**10.** இங்கற்ற படியங்கு மெனவறியு நல்லறிஞ
      ரெக்கால முமுதவுவார்
இன்சொறவ றார்பொய்ம்மை யாமிழுக் குரையா
      ரிரங்குவார் கொலைகள்பயிலார்
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்திலுறை
      சாக்ஷிநீ யிகபரத்தும்
சந்தான கற்பகத் தேவா யிருந்தே
      சமஸ்தவின் பமுமுதவுவாய்
சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு வினையினைச்
      சேதிக்க வருசிம்புளே
சிந்தாகு லத்திமிர மகலவரு பானுவே
      தீனனேன் கரையேறவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட்
      ககனவட்டக் கப்பலே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
      கருணா கரக்கடவுளே.

**இ-ள்.** இங்கு அற்றபடி - இம்மையில் அற்றுத் தீர்ந்த வண்ணம், அங்கும் என அறியும் - மறுமையினு மாமென் றறிகின்ற, நல் அறிஞர் - பேரறிவினர், எக்காலமும் உதவுவார் - எக்காலத்திலும் பிறருக்கு உதவிசெய்வார்கள், இன்சொல் தவறார் - மதுரமொழி வழுவார்கள், பொய்ம்மை ஆம் இழுக்கு உரையார் - பொய்யாகிய வழூஉச் சொற்களை வழங்கார், இரங்குவார் - ஜீவர்கள்மேல் இரக்கஞ் செய்வார்கள், கொலைகள் பயிலார் - ஜீவஹிம்சை

யில் பழகமாட்டார்கள், சங்கற்ப சித்தர் - சங்கல்ப சித்தத்தை யுடையவ ராகிய, அவர் - அவரது, உள்ளக் கருத்தில் - மனக்கருத்தில், உறை - வாசம் பண்ணுகிற, சாக்ஷிநீ - சாக்ஷி பூதனாகியநீ, இகபரத்தும் - இம்மை மறுமை களிலும், சந்தானம் கற்பகம் தேவு ஆய் இருந்து - சந்தான விருக்ஷம்போல வும் கற்பக விருக்ஷம்போலவும் உள்ள தெய்வமாயிருந்து, சமஸ்த இன்பமும் உதவுவாய் - எல்லாச் சுகங்களையும் கொடுப்பாய், சிங்கத்தை ஒத்து - சிங்க த்தை நிகர்த்து, எனை பாய வருவினையினை - என்னைப் பாய வருகின்ற வினை களை, சேதிக்க வரு சிம்புளே - கிழித்தெறிதற்காக வருகிற சரபமே, சிந்தா ஆகுலம் திமிரம் அகலவரு - மனக் கிலேசங்களாகிய இருள் நீங்க வருகின்ற, பானுவே - சூரியனே, தீனனேன் - எளியேனாகிய நான், கரைஏற-(பிறவி க்கடலைக் கடந்து முக்தியாகிய) கரையில் ஏறும்படி, கங்கு அற்ற - வரம்பு கடந்த, பேராசை வெள்ளத்தின் வளர் - எனது பேரன்பாகிய பிரவாகத்தில் சஞ்சரிக்கிற, அருள் ககனம் வட்டம் - கிருபையுடைய ஆகாய வட்டத்தில் (உலாவுகிற), கப்பலே - மரக்கலமே, கருதரிய—எ - று.

சங்கற்ப சித்தர் என்றது - இங்கற்றபடி அங்கும் என அறிதலும் உதவுத லும் இன்சொல் தவறாமையும் பொய்யுரையாமையும் உயிர்கட் கிரங்குத லும் கொலைகள் பயிலாமையும் ஆகிய ஏற்பாட்டை மனத்தில் அமைத்துங் கோடலை யுடையாரை. சந்தானம் கற்பகம் என்பன பஞ்சதருக்களில் இர ண்டு. அவை அவ்விடத்துச் சென்றவர்க்கே எல்லா இன்பங்களையும் உதவு தற்கு உரியனவே யன்றி, கடவுள்போல இகத்தும் பரத்தும் எல்லா இன்பங் களையும் உதவுதற் குரியனவாகா என்பது தோன்ற 'இக பரத்தும் சமஸ்த இன்பமும் உதவுவாய்' என்றார். சரபம் என்பது எட்டுக் கால்களையுடைய ஒரு பட்சி. அது சிங்கத்தை மிகவும் எளிதாகக் கவர்ந்துசென்று தன் குஞ்சு களுக்கு உண்பிப்பது. ஆகாய வட்டம் - ஆகாய மண்டலம், பூமண்டலம் என்பதுபோல.

இம்மை மறுமை யின்ப நுகர்ச்சியை யுவர்த்த மெய்யுணர்ச்சி யுடையோர் ஈகை, இன்சொல், பொய்யாமை, சீவகருணை, கொல்லாமை முதலிய நற் குணங்கள் கூடிவாழ விளங்குபவராதலின் 'இங்கற்றபடி யங்குமெனவறிபு நல்லறிஞரெக்காலமும் முதவுவார் இன்சொறவறார் பொய்ம்மையா மிழுக் குரையார் இரங்குவார் கொலைகள் பயிலார்' என்றும், அவர்கள் இக்குணங் களையே சங்கற்பமாக வுடையராகலின் 'சங்கற்ப சித்தர்' என்றும், அவ ருள்ளத்தில் அவர் நினைத்த வடிவொடுஞ் சென் றெய்தலின் 'அவருள்ளக் கருத்திலுறை சாக்ஷி நீ' என்றும், அவர் வேண்டிய வேண்டியாங் கெய்த வுதவுகின்றனை யென்பார் 'சந்தான கற்பகத் தேவா யிருந்தே சமஸ்த வின்பமு முதவுவாய்' என்றும், அப்படிப்பட்ட நீ யென் வினையை நீக்க வேண்டு மென்பதற் குருவகமாக்கி 'சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு

வினையினைச் சேதிக்க வரு சிம்புளே' என்றும், மனக் கவலையை யகற்ற வேண்டும் என்பார் 'சிந்தா குலத்திமிர மகலவரு பானுவே' என்றும், யான் பிறவிக்கடல் கடப்பதற்கோர் புணையாயினை என்பார் 'தீனனேன் கரை யேறவே கங்கற்ற பே[illegible]சை வெள்ளத்தின் வளரருட் ககனவட்டக்கப்பலே' என்றுங் கூறினர்.

---

## சித்தர்கணம்.

1. திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
 சென்றோடி யாடிவருவீர்
செம்பொன்மக மேருவொடு குணமேரு வென்னவே
 திகழ்துருவ மளவளாவி
யுக்ரமிகு சக்ரதர னென்னநிற் பீர்கையி
 லுழுந்தமிழு மாசமனமா
வோரேழு கடலையும் பருகவல் லீரிந்த்ர
 னுலகுமயி ராவதமுமே
கைக்கெளிய பந்தா வெடுத்துவிளை யாடுவீர்
 ககனவட்டத்தை யெல்லாம்
கடுகிடை யிருத்தியே யஷ்டகுல வெற்பையுங்
 காட்டுவீர் மேலுமேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
 விளங்கவரு சித்தியிலிரோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
 வித்தகச் சித்தர்கணமே.

இ-ள். திக்கொடு திக் அந்தமும் - திக்குகளிலும் திக்குகளின் முடிவிலும், மனவேகம் என்ன - மனோவேகம்போல, சென்று - விரைந்துசென்று, ஓடி ஆடி வருவீர் - ஓடியும் விளையாடியும் வருவீர்கள், செம்பொன் மக மேருவொடு - செம்பொன் மயமான மகம்மேரு மலையோடு, குணமேரு என்ன - நற்குணமாகிய மேருமலைபோல, திகழ் - விளங்குகின்ற, துருவம் அளவு அளாவி - துருவமண்டலத்தின் அளவும்போய், உக்ரமிகு - வேகம் மிகுந்த, சக்ரதரன் என்ன - சக்கராயுதத்தை ஏந்திய திரிவிக்கிரமன்போல, நிற்பீர் - நிலைத்திருப்பீர், கையில் உழுந்து - கையில் உள்ள உழுந்தினளவாக, அமிழும் ஒரேழு கடலையும் - ஆழ்ந்த சப்த சமுத்திரங்களையும், ஆசமனமா பருகவல்லீர் - ஆசமனநீராகக் குடிக்கவல்லீர்கள், இந்த்ரன் உலகும் ஐராவதமும் - இந்திரலோகத்தையும் அதிலுள்ள ஐராவதமென்னும் யானையையும், கைக்கு எளிய பந்தா எடுத்து - கைக்கு இலேசான பந்துபோல எடுத்து, விளையாடுவீர் - விளையாட்டுச்செய்வீர்கள், ககனவட்டத்தை எல்லாம்-

ஆகாய மண்டலங்களை யெல்லாம், கடுகிடை இருத்தி - கடுகைத்தொளைத்து (அதில்) புகட்டி, அஷ்டகுலவெற்பையும் - அஷ்டகுலகிரிகளையும், காட்டுவீர் - காண்பிப்பீர்கள், மேலுமேலும் - மேன்மேலும் மிக்கசித்திகளெலாம்- மிகுந்த சித்திகளை யெல்லாம், வல்லநீர் - செய்துகாட்ட வல்ல நீங்கள், அடிமைமுன் விளங்கவரு சித்தியிலிரோ - உங்கள் அடிமையாகிய எனக்கு எதிரில் பலருமறிய வராநின்ற சித்தியையுடையீர் அல்லீரோ, வேதாந்த சித்தாந்த சமரச நல்நிலைபெற்ற - வேதாந்தசித்தாந்தங்களைச் சமரசமாகப் பாவித்தலாகிய சிறந்த நிலையை யடைந்ததனால் உண்டாகிய, வித்தகம் - ஞானத்தையுடைய, சித்தர்கணமே - சித்தர் கூட்டமே—எ - று.

சக்ரதரன் எனப் பொதுப்படக் கூறினும் துருவம் அளவளாவி என்றதனால் திரிவிக்கிரமனை உணர்த்தி நின்றது. ஆசமனம் - சந்த்யாவந்தன காலத்தில் மூன்றுதரம் அள்ளிக்குடிப்பதாகிய நீர். இதை முக்குடி நீர் என்பர். ககனவட்டத்தை யெல்லாம் கடுகிடை யிருத்தி அஷ்டகுல வெற்பையுங் காட்டுவீர் என்றதனால் அண்டத்தை அணுவாகவும் அணுவை அண்டமாகவும் செய்யவல்லவர் என்றதாயிற்று.

இவ்வாசிரியர்க்குப் பரமாசிரியராகிய திருமூலர், சித்தர் மரபினராதலால் இதனால் அச்சித்தர்பெருமை கூறினர்.

துருவமண்டலத்தின் செய்தி:—உத்தானபாதனென்னு மரசன் சுநீதியென்பவளை மணந்து பெற்ற துருவனென்பவன், தன் தந்தை மடிமீதேறித் தன் சுருதியென்னும் சிற்றன்னையின் மடிமீதேற, அவள் என் வயிற்றிற் பிறக்கும் பாக்கியம் பெறாது என் மாற்றவளுக்கு மகனாயினை, என்மகனாதற்குத் தவஞ்செய்து என் வயிற்றிற் பிறக்கவில்லையென்று சொல்லக் கேட்டுப் பொறாது தன் தாயிடம் சென்று சொல்லி, தவஞ் செய்தற்குச் செல்கின்றேனென்று விடைபெற்றுப் போகையில், நாரதமுனிவரைக் கண்டு அவரிடம் மந்திரோபதேசம் பெற்று, தவஞ்செய்து யாவரும் பெறுதற்கரிய துருவ பதம் பெற்றா னென்பது. அது : "உகாரொரு ஞான்றும் வண்ணத் தோங்கிய பதங்கடம்மை, நகாவொளி கிளைத்துநின்ற நனந்தலை யுலகுக்கெல்லாம், சிகாமணி யென்னச் சேணிற் சேயுயர் பதம்" என்று கூறியதனானு முணர்க.

எழுகடல்-உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பனவாம். ஐராவதம் - பாற்கடலில் அமுதொடு பிறந்த வெள்ளையானை. இது கீழ்த்திசைக் களிறெனவும்படும். அட்டகுலவெற்பு - கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், எமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்பனவாம். வேதாந்த சித்தாந்த சமரசநிலையாவது - வேதாந்தத்தின் கருத்தையும் சித்தாந்தத்தின் கருத்தையும் ஒரு நிகரனவாகக் கருதுதல். மிக்க சித்திகளென்றது அணிமாமுதலிய எட்டுச் சித்திகளையும்.

2. பாட்டளி துதைந்துவளர் கற்பகந னீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி யிருபாரி சத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போல்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப் பீர்பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர்
ஓட்டினை யெடுத்தாயி ரத்தெட்டு மாற்றுக
வொளிவிடும் பொன்னாக்குவீர்
உரகனு மிளைப்பாற யோகதண் டத்திலே
யுலகுசுமை யாகவருளால்
மீட்டிடவும் வல்லநீ ரென்மனக் கல்லையனல்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ - ள். பாட்டு அளி துதைந்து வளர்-இசைப்பாட்டையுடைய வண்டுகள் நெருங்கி வளர்கின்ற, கற்பக நல் நீழலை - கற்பக விருக்ஷத்தின் நல்ல நிழலை, பாரின் இடை வரவழைப்பீர் - உலகத்தில் வரும்படி செய்வீர்கள், பத்மநிதி சங்கநிதி - பத்மநிதியும் சங்கநிதியும், இருபாரிசத்திலும் - இரண்டு பக்கத்திலும், பணிசெயும் தொழிலாளர்போல் - வேலைசெய்கின்ற அடிமையாட்கள்போல, கேட்டது கொடுத்துவர - கேட்டவஸ்துக்களைக் கொடுத்துக்கொண்டு வருதற்காக, நிற்க வைப்பீர் - நிற்கும்படி செய்வீர்கள், பிச்சை கேட்டுப் பிழைப்போரையும் - பிச்சைகேட் டுண்டு உயிர் வாழ்வோரையும், கிரீடபதி ஆக்குவீர் - முடிமன்னராகச்செய்வீர்கள், கற்பாந்தவெள்ளம் - கற்பமுடிவில் உண்டாகிற பிரவாகத்தை, ஒரு கேணியிடை குறுக வைப்பீர் - ஒரு கிணற்றினிடத்துச் சுருங்கி நிற்கவைப்பீர்கள், ஓட்டினை எடுத்து - மட்கலம் சிதைந்த ஓட்டை எடுத்து, ஆயிரத்தெட்டு மாற்றுக ஒளிவிடும் - ஆயிரத்தெட்டு மாற்றுள்ளதாகப் பிரகாசிக்கிற, பொன் ஆக்குவீர் - சுவர்ணமாக்குவீர்கள், உரகனும் இளைப்பாற - ஆதிசேஷனும் இளைப்பாறும்படி, உலகு - உலகத்தை, யோகதண்டத்திலே சுமையாக - யோகதண்டத்தில் சுமையாய் நிற்க, அருளால் மீட்டிடவும் வல்ல நீர் - கிருபையினால் மீட்கவும் வல்லீராகிய நீங்கள், என் மனக்கல்லை - என் மனமாகிய கற்பாறையை, அனல்மெழுகு ஆக்கி வைப்பது அரிதோ - நெருப்பிலிட்ட மெழுகுபோல் உருகும்படி செய்துவைப்பதாகிய இது உங்களுக்கு அரிதாமோ, வேதாந்த —எ - று.

பத்ம நிதி - தாமரைவடிவினதாகிய நிதி. சங்க நிதி - சங்கின்வடிவினதாகிய நிதி. கற்பக நிழலைப் பாரினிடை வரவழைத்தல் முதலிய செயற்கரிய செயல்களைச் செய்யவல்ல வுங்களுக்கு என்மனம் குழையும்படி செய்தல் அருமையோ என்பதாம்.

3. பாரொடுநன் னீராதி யொன்றொடொன் றாகவே
பற்றிலய மாம்போதினில்
பரவெளியின் மருவுவீர் கற்பாந்த வெள்ளம்
பரந்திடி னதற்குமீதே
நீரி லுறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
நிற்பீர் விகற்பமாகி
நெடியமுகி லேழும் பரந்துவரு ஷிக்கிலோ
நிலவுமதி மண்டலமதே
ஊரென விளங்குவீர் பிரமாதி முடிவில்விடை
யூர்தியரு ளா லுலவுவீர்
உலகங்கள் கீழ்மேல வாகப் பெருங்காற்
றுலாவினற் றாரணையினால்
மேருவென வசையாம னிற்கவல் லீருமது
மேதக்க சித்தியெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ - ள். பாரொடு நல் நீர் ஆதி - பூமியோடு நீர்முதலியவைகளும், ஒன்றொடொன்றாகவே பற்றி - ஒன்றொடொன்றாகத் தொடர்ந்து, லயம் ஆம்போதினில் - ஒடுங்குகிற காலத்தில், பரவெளியில் மருவுவீர் - பரமாகாயத்தில் பொருந்தியிருப்பீர்கள், கற்பாந்த வெள்ளம்பரந்திடின் - யுகாந்த காலப்பிரளயம் பரவினால், அதற்குமீது - அதற்குமேல், நீரில் உறை - நீரில் வாசம்பண்ணுகிற, வண்டு ஆய் துவண்டு - வண்டுபோலச் சுழன்று, சிவயோக நிலைநிற்பீர் - சிவயோகநிலையில் நிற்பீர்கள், நெடிய முகில் ஏழும் - பெரிதான மேகங்கள் ஏழும், விகற்ப மாகி - வேறுபட்டு, பரந்து - பரவி, வருஷிக்கில் - பெய்தால், நிலவு - சந்திரிகையையுடைய, மதிமண்டலமதே - சந்திரமண்டலமே, ஊர் என விளங்குவீர் - ஊராகக்கொண்டு பிரகாசிப்பீர்கள், பிரமாதி முடிவில் - பிரமன் முதலானோருடைய முடிவுக்காலத்தில், விடையூர்தி அருளால் - ரிஷபவாஹனனாகிய பரமசிவனது கருணையால், உலவுவீர் - சஞ்சரிப்பீர்கள், உலகங்கள் - உலகங்களெல்லாம், கீழ்மேலவாக - கீழ்மேலாகும்படி, பெருங்காற்று உலாவின் - பிரசண்ட மாருதம் வீசினால், நல்தாரணையினால் - நல்ல தாரணை யோகத்தினால், மேருவென அசையாமல் நிற்கவல்லீர் - மேருமலைபோலச் சலிக்காமல் நிற்கவல்லீர், உமது - உம்

முடைய, மேதக்க - மேன்மை பொருந்திய, சித்தி-சித்தியானது, எளிதோ-சொல்லுதற் கெளிதாமோ, வேதாந்த—எ - று.

'பாரொடு நன்னீராதி யொன்றொடொன்றாகவே பற்றி லயமாம்போது' என்றது கற்பாந்தகாலத்தை. பார் நீரினும், நீர் அனலினும், அனல் காற்றினும், காற்று ஆகாயத்தினும் ஒடுங்கு முறைமை கற்பாந்த காலத்திலென்க. பிரமாதி முடிவில் என்பது பிரமன்முதலான தேவர்கள் முடியும் காலத்தை. இதனை "நூறுகோடிபிரமருநொங்கினர்" என்ற திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தானு மறிக. தாரணை - எண்வகை யோக வுறுப்பினுள் ஒன்று. பிருதிவி ஆதி ஐம்பெரும் பூதங்களும் ஒன்றிலொன்று ஒடுங்குங் காலத்துக் கற்பாந்த வெள்ளத்தின்மீது வண்டாய் உலவுதல் முதலிய சித்திகளைச் செய்யவல்ல வுமது பெருமையை யெம்மாற் சொல்லமுடியுமோ என்பது கருத்து.

4\. எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா
ணியாதினும் மரிதரிதுகாண்
இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
வேதுவருமோ வறிகிலேன்
கண்ணகல் நிலத்துநா னுள்ளபொழு தேயருட்
ககனவட் டத்தினின்று
காலூன்றி மழைபொழியு மானந்த முகிலொடு
கலந்துமதி யவசமுறவே
பண்ணுவது நன்மையிந் நிலைபதிய மட்டுமே
பதியாயிருந்த தேகப்
பவுரிகுலை யாமலே கவுரிகுண் டலியாயி
பண்ணவித னருளினுலே
விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே
வேண்டுவே னுமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ - ள். எண்ணரிய பிறவிதனில் - எண்ணுதற்கரிதாகிய பிறவிகளுள், மானிடப்பிறவி - மனிதப்பிறப்பு, யாதினும் - எல்லாப் பிறவிகளினும், அரிது அரிது - மிகவும் அரியது, இப்பிறவி தப்பினுல் - இந்த ஜன்மந்தவறினுல், எப்பிறவி வாய்க்குமோ - எந்தஜன்மம் கிடைக்குமோ, ஏதுவருமோ-என்ன அநர்த்தங்களுண்டாகுமோ, அறிகிலேன் - தெரிகிலேன், (ஆதலால்) கண்ணகல் நிலத்து - இடமகன்ற பூமியில், நான் உள்ளபொழுதே - நான் இருக்கும்பொழுதே, அருள் ககனவட்டத்தில் நின்று - திருவருளாகிய ஆகாய மண்டலத்தில் நின்றும், காலூன்றி ஆனந்த மழை பொழியும் -

நிலத்து நின்று இன்ப மழையைப் பொழியாநின்ற, முகிலொடு - மேகத்துடன், கலந்து - சேர்ந்து, மதி அவசம் உற பண்ணுவது நன்மை - என் அறிவானது பரவசப்படும்படி செய்வது நன்மையாகும், இந்நிலை பதியும் மட்டும் - இந்நிலையில் அழுந்துகிறவரைக்கும், பதியாய் இருந்த - எனக்கு இடமாயிருந்த, தேகப் பவுரிகுலையாமல் - தேகமாகிய பவுரிக்கூத்துக் கலையாமல், கவுரி - கௌரியாகிய, குண்டலி ஆயி - குண்டலி சத்தி என்கிற, பண்ணவிதன் அருளினாலே-தேவியினது கிருபையினால், விண் நிலவும் மதி அமுதம் - சிதாகாசத்தில் நிலைபெற்றிருக்கிற சந்திரனிடத்துள்ள அமிர்தமானது, ஒழியாது பொழிய - இடையறாது பெய்ய, உமது அடிமை நான் வேண்டுவேன் - உமதடிமையாகிய நான் விரும்புவேன், வேதாந்த—எ-று.

"எறியுங் கடலின் நுகத்துளையி னியாமைக் கழுத்துப் புகுவதுபோல் பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகி யெனப்பிறந்து" எனவும், "தடுத்துமேனு மிவ்வுருவ மாயினும்பெறல் சற்றல" எனவும் கூறப்படுதலின், 'எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா னியாதினும் அரிதரிது' என்றார். குண்டலி சத்தி - மூலாதாரத்தில் பாம்புருவமாய் இருப்பதாகிய ஓர் சத்தி. பவுரி - ஓர்வகைக் கூத்து.

நால்வகை யோனி யெழுவகைத் தோற்றம் எண்பத்துநான் கிலட்சம் சீவபேதத்தும் பிறந்திறந்தெய்த்து, புண்ணிய மிகுதியால் மானிடப்பிறவி வாய்த்தமையால் 'எண்ணரிய பிறவிதனின் மானிடப்பிறவிதா னியாதினும் மரிதரிதுகாண்' என்றும், இப்பிறவி யொழியின் இன்னபிறவி வருமென்று துணியப்படாமையால் 'இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ வேது வருமோ வறிகிலேன்' என்றும், ஆகையால் இவ்வுடலொடுகூடி யிருக்கையிலேயே இரண்டறக்கலக்கும் சிவானுபூதிவாய்க்க வருளவேண்டலின் 'கண்ணக னிலத்து நானுள்ளபொழுதே யருட்ககனவட்டத்தினின்று காலூன்றி மழைபொழியு மானந்த முகிலொடு கலந்து மதி யவசமுறவே பண்ணுவது நன்மை' என்றும், அவ்வனுபூதி வாய்ப்பதற்குமுன் இத்தேகம் நீங்கிவிடின் அது பெறுதற் கரிதாதலின் 'இந்நிலை பதியுமட்டுமே பதியாயிருந்த தேகப் பவுரிகுலையாமலே கவுரிகுண்டலியாயி பண்ணவித னருளினாலே விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே வேண்டுவே னுமதடிமை நான்' என்றும் கூறினார். தேக நீங்கின் முத்தி கிட்டா தென்னும் ஒரு சாரார் மதம்பற்றி 'தேகப் பவுரி குலையாமலே கவுரி குண்டலியாயி பண்ணவித னருளினால்' என்றதனைக் குமாரதேவர் அருளிச்செய்த சுத்த சாதகத்தும் பரக்கக் காண்க.

**5.** பொய்திகழு முலகநடை யென்சொல்கே னென்சொல்கேன்
பொழுதுபோக்கே தென்னிலோ

பொய்யுட னிமித்தம் புசிப்புக்க லேந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
கைதவம லாமலிது செய்தவம தல்லவே
கண்கெட்ட பேர்க்கும்வெளியாய்க்
கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ வதையறிகிலேன்
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினொடு செம்பொன்மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்
வரைந்துசய விருதுகாட்டி
மெய்திகழு மஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே குணசாந்தரே
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ-ள். பொய் திகழும் உலக நடை - பொய்யே மிகுந்து விளங்குகின்ற உலக வொழுக்கத்தைப்பற்றி, என்சொல்கேன் என்சொல்கேன் - என்ன சொல்லுவேன் என்னசொல்லுவேன், (ஆயினும் ஒருவாறு சுருக்கிச்சொல்லுகின்றேன்) பொழுது போக்கு ஏது என்னிலோ - (இவ்வுலகத்தார்) காலங் கழித்தல் எப்படியென்றாலோ, பொய் உடல் நிமித்தம் புசிப்புக்கு அலைந் திடல் - பொய்யுடம்பினைப் பாதுகாத்தற்பொருட்டு உணவுக்காகத் திரிதல், புசித்தபின் கண்ணுறங்கல் - உண்டபின் நித்திரைபோதல், (ஆகிய இவைகளாலேயே) இது கைதவமலாமல் - இது பொய்யொழுக்கமேயன்றி, செய் தவம் அதல்லவே - செய்தற்குரித்தாய் (உயிர்க்குறுதி தருவதாகிய) தவமல்லவே, கண்கெட்டபேர்க்கும் - குருடருக்கும், வெளியாய் கண்டது இது - வெளிப்படையாய்க் காணப்பட்டது இவ்வொழுக்கம், இதை கண்டித்து விண்டு நிற்றல் எந்தக்காலமோ - இக்குருட் டொழுக்கத்தைக் கண்டித்து விட்டு நிற்றல் எந்தக்காலமோ, அதை அறிகிலேன் - அதனை யுணருமாற்றலில்லேன், மை திகழும் முகிலினம் குடைநிழற்றிட - கருமைவிளங்குகின்ற மேகக்கூட்டம் குடைபோல் நிழலைச்செய்ய, அட்டவரையினொடு - அஷ்ட குலாசலங்களோடு செம்பொன் மேரு மால்வரையின் முதுகூடும் - செம்பொன் மேருவாகிய பெரிய மலையின் புறத்தும், யோகதண்டக்கோல் வரைந்து - யோகதண்டமாகிய கோலை யெழுதி, ஜயவிருதுகாட்டி - வெற்றி விருதாகக்காட்டி, மெய்திகழும் - உண்மை விளங்குகின்ற, அஷ்டாங்க யோகபூமிக்குள்வளர் - அஷ்டாங்கங்களையுடைய யோகநிலத்தில் விருத்தியடையாநின்ற, வேந்தரே - அரசரே, குணசாந்தரே - சாந்தகுண சீலரே, வேதாந்த—எ-று.

என்சொல்லுகேன் என்சொல்லுகேன் என்ற அடுக்கு இரக்கப்பொருளது. அஷ்டகுல கிரிகள் மீதும் மேருவின் மீதும் யோக தண்டக்கோல் வரைந்து ஜயவிருதுகாட்டி என்றது அவ்விடங்களிலெல்லாம் யோகம்பயின்றன ரென்பதை யுணர்த்தியது.

அஷ்டாங்க யோகங்களையே பூமியாக வுருவகஞ் செய்ததற் கேற்ப இவர்களை அவ்வரசாண்டுவரும் வேந்தரென்றமையான், அரசன் வெண் கொற்றக் குடைநிழலி னிருக்கவேண்டு மாகலின் 'மைதிகழு முகிலினம் குடைநிழற்றிட' என்றும், அவன் ஆணையை மேருவிற் பொறித்து விருது மேற்கொண்டிருக்குமாகலின் 'அட்ட வரையினொடு செம்பொன்மேரு மால் வரையின் முதுகூடும் யோகதண்டக்கோல் வரைந்து சயவிருதுகாட்டி' என்றும் கூறினர். அஷ்டாங்கயோகங்களை முன்னரே யெடுத்துக்காட்டினோம், அவ்விடத்துக் காண்க.

**6.** கெசதுரக முதலான சதுரங்க மனமாதி
கேள்வியி னிசைந்துநிற்பக்
கெடிகொண்ட தலமாறு மும்மண்ட லத்திலுங்
கிள்ளாக்குச் செல்லமிக்க
தெசவிதம தாய்நின்ற நாதங்க ளோலிடச்
சிங்காச னாதிபர்களாய்த்
திக்குத் திகந்தமும் பூரண மதிக்குடை
திகழ்ந்திட வசந்தகாலம்
இசையமலர் மீதுறை மணம்போல வானந்த
மிதயமேற் கொள்ளும்வண்ணம்
என்றைக்கு மழியாத சிவராச யோகரா
யிந்த்ராதி தேவர்களெலாம்
விஜயஜய ஜயவென்ன வாசிசொல வேகொலு
விருக்குநும் பெருமையெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

**இ-ள்.** கெசதுரக முதலான - யானை குதிரை முதலான, சதுரங்கம் - சதுரங்கங்களாக, மனமாதி - மன முதலிய அந்தக்கரண நான்கும், கேள்வியின் இசைந்து நிற்ப - பணிவிடைக்கு இணங்கி நிற்கவும், கெடிகொண்ட தலமாறும் - ஊரின் றன்மை யமைந்த ஆறு ஆதாரங்களினும், மும்மண்டலத்தினும்-மூன்று மண்டலங்களிலும், கிள்ளாக்கு செல்ல-கிள்ளாக்குச் செல்லவும், மிக்க தெச விதமதாய் நின்ற நாதங்கள் ஒலிட - மேலாகிய பத்துவகைப்பட்டு நின்ற நாதங்கள் முழங்கவும், சிங்காசனாதிபர்களாய் - சிங்காசனாதிபதிகளாய், திக்கு திகந்தமும் - திக்குகளிலும் திக்குகளின் முடிவரையி

லும், பூரணமதிக்குடை நிகழ்ந்திட - பூர்ணசந்திரனாகிய குடையானது பிரகாசிக்கவும், வசந்த காலம் இசைய - வசந்தகாலம் வர, மலர் மீது உறை மணம்போல - மலரிலிருக்கிற பரிமளம்போல, ஆநந்தம் இதயமேற் கொள்ளும்வண்ணம் - இன்பமானது இதயத்தில் குடிகொள்ளும்வகை, என்றைக்கும் அழியாத - எப்போதுங்கெடாத, சிவராஜயோகராய் - சிவராஜயோகத்தையுடையராகி, இந்த்ராதி தேவர்களெலாம் - இந்திரன் முதலான தேவர்களெல்லாம், விஜயஜய ஜய என்ன ஆசிசொல்ல - விஜயஜய ஜயவென்று மங்களாசாசனம் பண்ணவும், கொலு இருக்கும் - கொலுவீற்றிருக்கின்ற, நும்பெருமை எளிதோ - உமது பெருமையானது சொல்லுதற்கு எளிதாகுமோ, வேதாந்த—எ-று.

ராஜயோகத்திற் பிறந்தவனுக்கு யானைமுதலிய சதுரங்கங்களும் பணிகேட்டல், சுவர்க்க முதலிய மூன்றுலகங்களினும் கிள்ளாக்குச் செல்லுதல், பேரி காகளமுதலான பத்து வாத்தியங்களும் முழங்குதல், சிங்காசனாதிபர்களாதல், திசையின் முடிவுவரையில் தன் பூர்ணசந்திரன்போன்ற வெண்கொற்றக் குடைநிழற்றல், ஆநந்தம் நிறைந்த இருதயத்தை யுடையராதல், இந்த்ராதியர் ஆசி கூறல் ஆகிய இவைகள் அமைந்திருத்தல்போல, நீங்களும் சிவராஜ யோகிகளாதலால் மனமாதிகள் சதுரங்கங்களாகவும், ஆறுதாரங்களும் மும்மண்டலங்களும் கிள்ளாக்குச் செல்லும் இடங்களாகவும் சிரத்திற்றோன்றும் தசவிதநாதங்கள் வாத்யங்கள் ஆகவும், மதிமண்டலமே வெண்கொற்றக் குடையாகவும் கொண்டு ஆனந்த நிறைந்த ஹ்ருதயராய், என்றைக்கும் அழியாது இந்த்ராதி தேவர்களெலாம் விசயசய சயவென்ன ஆசிசொல்ல, கொலு இருக்கின்றீர்கள் என்றாராயிற்று. மனமாதிகள் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. மும்மண்டலங்கள் - சந்த்ர மண்டலம், சூர்யமண்டலம், அக்நிமண்டலம் என்பன. தசவித நாதங்கள் கிணிநாதம், கிணிகிணி நாதம், கண்டா நாதம், சங்க நாதம், வீணா நாதம், தாள நாதம், முரளீ நாதம், பேரீ நாதம், மிருதங்க நாதம், மேகநாதம் என்பனவாம். பூர்ணமதி - நிறைந்த அறிவு என்னலுமாம். கொடிகொண்ட தலம் என்பது ராஜபரமாம்போது அவர்க்குக் காவலாயுள்ள படை குடி கூழமைச்சு நட்பரணைறையு மென்று கொள்க; அவை யவனாணை செல்லுமிடமாதலால். என்றைக்கும் அழியாமை - எக்காலத்தும் தோற்றக்கேடுகளில்லாமல் ஒருதன்மையாய் வாழ்தல். கிள்ளாக்கு - கிள்ளிலே, அதாவது பூர்வகாலத்தில் கல்வி கற்கும் இளஞ்சிறார் தம்வீடுகளில் இரவிற் படித்ததற் கறிகுறியாக அவர்களுடைய தாய் தந்தையர் கிள்ளிக் கொடுத்த வெற்றிலே. ஆக்கு - இலே. இது ஆந்திரபதம்.

7. ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள்ளதோ

ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் றிருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடுமூச்சைக்
கட்டிக்க லாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்பநினைவும்
பூணிலே னிற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக னாயினே னாயினுங் கடையான
புன்மையே னின்னமின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ-ள். ஆணிலே பெண்ணிலே - ஆண் பெண் இரண்டனுள்ளும், என்போல ஒரு பேதை - என்னைப்போல ஒரு அறிவில்லாதவன், அகிலத்தின் மிசை உள்ளதோ - உலகத்திலுண்டோ, ஆடியகறங்குபோல் - சுழலாநின்ற காற்றாடிபோல், ஓடி உழல் சிந்தையை - (விஷயங்களின்மேல்) விரைந்து போய்வீழ்ந்து (அவற்றினின்றும் மீளமாட்டாது அவற்றின்கண்ணே) சுழலாநின்ற மனத்தை, அடக்கி (அவ்வாறு செல்லாது) தடுத்து, திருவருளை ஒருகணமேனும் யான் காணிலேன் - திருவருளை ஒருகணப்பொழுதாயினும் யான் கண்டிலேன், அல்லாது-அன்றி, மௌனியாய் - மௌனநிலையை யுடையேனாகி, கண்மூடி - கண்ணிதழ்களைக்குவித்து, ஓடும் மூச்சைகட்டி - ஓடும் இயற்கையுள்ள ப்ராணவாயுவைத் தடுத்து, கலாமதியை முட்ட - கலைகள் நிறைந்த சந்திரனைத்தொடும்படி, மூலவெம் கனலினை எழுப்ப - மூலாக்கினியை எழுப்புதற்குரிய, நினைவும் பூணிலேன்-கருத்தும் கொண்டிலேன், இற்றை நாள் - இத்தனைநாள் வரைக்கும், கற்றதும் கேட்டதும் - நான் கற்ற கல்வியையும் கேட்ட கேள்வியையும், போக்கிலே போகவிட்டு - அவை செல்லும் வழியிற் செல்ல விட்டு, பொய் உலகன் ஆயினேன் - பொய்யுலக வாழ்க்கையன் ஆயினேன், நாயினும் கடையான புன்மையேன் - நாயினும் இழிந்த அற்பத்தன்மையை யுடையவனாகிய நான், இன்னம் இன்னம்-மேன் மேலும், வீணிலே அலையாமல் - வீண் காரியங்களிற் பிரவேசித்துத் திரியாமல், மலை இலக்கு ஆக - மலைக்குறிபோல, நீர் - நீங்கள், வெளிப்பட தோற்றல் வேண்டும் - பகிரங்கமாகக் காட்சி கொடுத்தருள வேண்டும், வேதாந்த—எ-று.

கறங்கு-ஓலைச்சுருளென்றலுமாம். இதனைக் 'கறங்கோலை போல்வது' என்ற திருவாசகத்தானு மறிக. போக்கிலே போகவிட்டு என்றது மறந்தென்றபடி. உலகத்திலுள்ள ஆண் பெண் என்னும் இருபகுப்பினுள் என்போல ஒரு அவிவேகியுண்டோ? சுழலாநின்ற காற்றாடிபோல அலைகின்ற மனத்தை யடக்கித் திருவருளை ஒருக்ஷண காலமாயினும் கண்டிலேன்; அன்றியும் மௌனியாகிக் கண்மூடி அலைகின்ற வாயுவைத் தடுத்து, சந்திரமண்டலத்தை முட்ட, மூலாக்நியை யெழுப்புங் கருத்து மில்லேன். இதுவரையிற் கற்ற கல்வியையும் கேட்ட கேள்வியையும் மறந்து அசத்தியமாகிய உலக வாழ்வை யுடையேனாயினேன். நாயினுங் கடையேனாகிய நான் மேலு மேலும் பயனற்ற காரியங்களில் பிரவேசியாமல் மலையிலக்குப்போல நீயெனக்குப் பிரத்தியக்ஷமாகவேண்டும் என்பதாம்.

சிந்தையை யடக்கினா லன்றித் திருவருள் கிட்டாதாகலின் 'ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை யடக்கி யொரு கணமேனுநீ யான் காணிலேன் றிருவருளை' என்றார். கற்றதும்கேட்டதும்ஆசிரியர் கைகாட்டிய இன்ப நிட்டை பெறாதவிடத்துப் பயனின்மையாய்ப் போதலின், 'கற்றதுங் கேட்டதும் போக்கிலே போகவிட்டு' என்றதென்க. இதனைக் 'கற்றதுங் கேட்டதுந் தானே யேதுக்காகக் கடபடமென் றுருட்டுதற்கோ' என் றிவ்வாசிரியர் கூறலானுமறிக. "கற்றதனாற் றொல்லைவினை கட்டறுமோ" எனப் பிறருங் கூறுதலானு மறிக.

8. கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாயூறு
கண்டெனவு மடியெடுத்து
கடவுளர் கடந்ததலை வழுதழுது பேய்போற்
கருத்திலெழு கின்றதெல்லாம்
என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா
லீட்டுதமி ழென்றமிழினுக்
கின்னல்பக ராதுலக மாராமை மேலிட்
டிருத்தலா லித்தமிழையே
சொன்னவணி யாவனவன் முத்திசித் திகளெலாந்
தோய்ந்தநெறி யேபடித்திர்
சொல்லுமென வவர்நீங்கள் சொன்னவவை யிற்சிறிது
தோய்ந்தகுண சாந்தனென்னவே
மின்னல்பெற வேசொல்ல வச்சொல்கேட் டடிமைமனம்
விகசிப்ப தெந்தநாளோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ-ள். கன்னல் அமுது எனவும் - கருப்பஞ்சாற்றின் சுவைபோலவும், முக்கனியெனவும் - முக்கனிகளின் சுவைபோலவும், வாய் ஊறு கண்டு

எனவும் - நா ஊறுதற்குக் காரணமான கற்கண்டுபோலவும், அடி - (சுவை புள்ள) அடியானது, கடவுளர்கள் எடுத்துத் தந்தது அல்ல - கடவுளரால் எடுத்துக் கொடுக்கப்பட்ட தல்ல, பேய்போல் அழுது அழுது - பேய்போல பலகால் அழுது, கருத்தில் எழுகின்றது எல்லாம் - என் மனத்தில் உண்டா வதாகிய எல்லாம், என்னது அறியாமை அறிவு என்னும் - எனது உணர் வின்மை உணர்வு என்கிற, இருபகுதியால் - இரண்டு பகுப்பினால், ஈட்டு தமிழ் - சொல்லிய தமிழ்மாலையாகும், என் தமிழினுக்கு - அப்படி என்றுச் சொல்லப்பட்ட தமிழ்மாலைக்கு, ஆராமை மேலிட்டிருத்தலால் - பேரன்பு அதிகப்பட்டிருத்தலால், உலகம் இன்னல் பகராது - உலகமானது குற்றங் கூறாது, (அதுநிற்க) முத்திசித்திகளெலாம் தோய்ந்த - முத்திசித்திகளெல் லாம் அமைந்த, நெறியே - மார்க்கத்தையே, படித்தீர் - படித்தவர்களே, இத்தமிழையே - இந்தத் தமிழ்மாலையையே, சொன்னவன் அவன் யாவன்- சொல்லினவனாகிய அவன் எவனென்று, அவர் - அவ்வுலகத்தார், சொல் லும் என - சொல்லுங்களென்று வினவ, நீங்கள் சொன்ன அவையில் - நீங் கள் மறுமொழியாகச் சொன்ன அவ்வார்த்தைகளினால், சிறிது தோய்ந்த குண சாந்தன் என - சாந்தகுணம் சிறிது அமைந்தவன் என்று, மின்னல் பெற சொல்ல - பிரகாசம் உண்டாகப் புகழ, அடிமை - அடியேன், அச் சொல் கேட்டு - அந்த வார்த்தையைக்கேட்டு, மனம் விகசிப்பது - மனமகிழ் ச்சியடைவது, எந்தநாளோ - எந்தக்காலமோ, வேதாந்த—எ-று.

கடவுளர்கள் அடியெடுத்துத் தந்தன: 'உலகெலாமுணர்ந் தோதற்கரி யவன்' என இறைவனு லடியெடுத்துக் கொடுக்கப்பட்ட பெரியபுராண முத லாயின. சித்தர்களே என் தமிழ்ப்பாடலின் வரலாற்றை உலகத்தார் உங்க ளை வினவ, நீங்கள் சொல்லக்கேட்டு உலகத்தார் என்னைப்புகழ, அச்சொல்லை அடியேன் கேட்டு மனமகிழ்வது எந்தக்காலமோ என்பதாம்.

9. பொற்பினொடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலாற்
 போர்த்திடை யொடுக்குறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே யருள்கொண்டு
 பூரித்த வெண்ணீர்மையால்
எற்பட விளங்குகக னத்திலிமை யாவிழி
 யிசைந்துமே னோக்குறலால்
இரவுபக லிருளான கனதந்தி படநூறி
 யிதயங் களித்திடுதலால்
பற்பல விதங்கொண்ட புலிகலைபி னுரியது
 படைத்துப்ர தாபமுறலால்
பனிவெயில்கள் புகுதாம னெடியவான் றொடர்நெடிய
 பருமர வனங்களாரும்

வெற்பினிடை யுறைதலாற் றவராஜ சிங்கமென
மிக்கோ ருமைப்புகழ்வர்காண்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ-ள். பொற்பினொடு - அழகோடுகூடிய, கைகாலில் - கைகால்களில், வள் உகிர்படைத்தலால் - கூர்மையாகிய நகங்களைப்படைத்தலாலும், இடை போந்து ஒடுக்கம் உறலால் - இடையானது சுருங்கி வந்து இருத்தலாலும்; பொலிவு ஆன வெண்ணீறு பூசி - பிரகாசமுள்ள திருவெண்ணீற்றைப் பூசி, அருள்கொண்டு பூரித்த - திருவருள்பெற்று இறுமாந்த, எண் நீர்மையால் - மதிக்கத்தக்க குணத்தினாலும், எல்படு விளங்கு ககனத்தில் - பிரகாசம் உண்டாக விளங்குகின்ற சிதாகாயத்தில், இமையாவிழி இசைந்து - இமையாமல் கண்கள் பொருந்தி, மேல்நோக்கம் உறலால் - ஊர்த்வ த்ருஷ்டியைப் பொருந்துதலாலும், இரவுபகல் - இரவினும் பகலினும், இருள் ஆன - அஞ்ஞானந்தகாரமாகிய, கனதந்தி படநூறி - பெரிய யானையானது இறக்கும்படி அரைத்து, இதயம் களித்திடுதலால் - மனம் செருக்கடைந் திருத்தலாலும், பற்பல விதம்கொண்ட - பற்பலவிதமான, புலிகலையின் உரிபடைத்து - புலித்தோலையும் மான்தோலையும் ஆசனங்களாகப் படைத்து, ப்ரதாபம் உறலால் - மனோபல வைபவத்தைப் பெற்றிருத்தலாலும், பனி வெயில்கள் புகுதாமல் - பனிவெயில் முதலியவைகள் நுழையப்பெறாமல், நெடிய வான் தொடர் - விசாலமான ஆகாயத்தை அளாவிய, நெடிய - உயரமான, பரு மரவனங்கள் ஆரும் - பருத்த மரங்கள் அடையப்பெற்ற காடுநிறைந்த, வெற்பின் இடை உறைதலால் - மலையினிடத்து வசித்தலாலும், தவராஜ சிங்கம் என - தவராச சிங்கம் என்று, மிக்கோர் - மேலோர்கள், உம்மை புகழ்வர் - உம்மைக் கொண்டாடுவார்கள், வேதாந்த—எ-று.

இதில் சிங்கத்துக்கும் தவசிகட்கும் உவமை கூறப்பட்டிருத்தலால், மேல் தவசிகட்குக் கூறிய குணங்களெல்லாம் சிங்கத்துக்கும் பொருந்தக் கூறிக்கொள்க. எப்படியெனின், ஆகாயத்திற் பொருந்தும்படியானது மேற்பார்வையை யுடையதாதலும், அல்லும் பகலும் இருள் நிறமுள்ள மேகம் போன்றயானை யிறக்கும்படி அதனைக் குமைத்தலும், அதனை யழித்த வெற்றியால் மனங்களித்தலும் ஆகிய இக்குணங்கள் சிங்கத்துக்கு வேறுயுள்ளன; கை காலில் வள்ளுகிர் படைத்தல் முதலிய மற்றைக் குணங்கள் சித்தர்கட்கும் சிங்கத்துக்கும் சமமாயுள்ளன.

**10.** கல்லாத பேர்களே நல்லவர்க ணல்லவர்கள்
கற்றுமறி வில்லாதவென்
கர்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லுகேன்
கைவல்ய ஞானநீதி

நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன் கர்மமொருவன்
நாட்டினு லோபழய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

இ-ள். கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் - கல்வியைக் கல்லாதவர்களே நல்லவர்கள் நல்லவர்கள், கற்றும் - கல்விகற்றும், அறிவு இல்லாத - ஞானமில்லாத, என் கர்மத்தை என் சொல்கேன் - என் கன்ம பலத்தை என்ன சொல்லுவேன், மதியையென்சொல்லுகேன் - (மந்த) புத்தியை யென்ன சொல்லுவேன், கைவல்ய ஞான நீதி - கைவல்ய பதவியைக் கொடுக்கின்ற ஞானநீதியை, நல்லோர் உரைக்கில் - நல்லோர்கள் சொன்னால், கர்மம் முக்கியம் என்று நாட்டுவேன் - கர்மமே முதன்மையானதென்று கல்வி வலியால் நிலைநிறுத்துவேன், ஒருவன் கர்மம் நாட்டினால் - ஒருவன் கர்மத்தை நிலைநிறுத்தினால், பழயஞானம் முக்கியம் என்று நவிலுவேன் - முன் சொல்லிய ஞானமே முதன்மையானதென்று சாதித் துரைப்பேன், வடமொழியிலே வல்லான் ஒருத்தன் வரவும் - வடமொழியில் வல்லவனாகிய வொருவன் வரினும், த்ராவிடத்திலே வந்ததா விவகரிப்பேன் - தமிழ்ப் பாஷையில் கைவந்தவன்போல விவகரித்துப் பேசுவேன், வல்ல தமிழ் அறிஞர்வரின் - தமிழ் வல்லவராகிய அறிஞர் வந்தால், அங்ஙனே - தமிழ் வசனங்கள் சொன்னது போலவே, வட மொழியின் வசனங்கள் சிறிது புகல்வேன் - வடமொழி வாக்கியங்கள் சிலவற்றை யெடுத்துப் பேசுவேன், வெல்லாமல் - நியாயமாய் வெல்லாமல், எவரையும் மருட்டிவிட வகைவந்த - யாவரையும் மருளும்படி செய்ய வகை யேற்பட்டதற்குக் காரணமான, வித்தை - வித்தையானது, என் - என்ன பயன்தரும், முத்திதருமோ - முத்தியைக்கொடுக்குமோ, வேதாந்த—எ - று.

கல்லாதபேர்களே என்னும் ஏகாரம் பிரிநிலை. கற்றும் அறிவில்லாத என்றமையால் கல்வி அறிவை யுண்டாக்குமென்றதாயிற்று. சிறிது - சில.

கல்லாதவர்களே நல்லவர்கள்; ஏனெனின், கற்றும் கற்றதற்குப் டய னடையாமல் ஞானநீதி நன்றென்பவர்களைக் கர்மம் நன்றென்று மருட்டலும், கர்மம் நன்றென்பவர்களை ஞானம் நன்றென்று மருட்டலும், தமிழ்வல்லார் வரின், அவர்களை வட மொழியால் மருட்டலும், வட நூல் வல்லார் வரின், அவர்களைத் தமிழ் மொழியால் மருட்டலும் ஆகிய இச்செய்கைகளை மேற்கொண் டொழுகுதலாகிய இவ்வித்தை முத்தியைக் கொடுக்குமோ என்பதாம்.

---

## ஆனந்தமானபரம்.

1. கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்குமக்
 குணமொன்று மொன்றிலேன்பால்
கோரமெத் தனைபக்ஷ பாதமெத் தனைவன்
 குணங்களெத் தனைகொடியபாழ்ங்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
 கள்ளமெத் தனையுள்ளசற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
 சுதிக்கென் றமைத்தவருளில்
செல்லாமை யெத்தனை வீர்தாகோஷ்டி யென்னிலோ
 செல்வமெத் தனைமுயற்சி
சிந்தையெத் தனைசலன மிந்த்ரஜா லம்போன்ற
 தேகத்தில் வாஞ்சைமுதலா
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
 யானே னிவைக்குமாளோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
 யானந்த மானபரமே.

இ - ள். கொல்லாமை - கொல்லாமையாகிய குணம், எத்தனை குணக்கேட்டை நீக்கும் - எத்தனை துர்க்குணங்களைப் போக்கும், அக்குணம் ஒன்றும் ஒன்றிலேன்பால் - அக்குண மொன்றையும் பொருந்தாதவனாகிய என்னிடத்தில், கோரம் எத்தனை (அமைத்தனை) - கோரமான நடக்கைகளெத்தனை யமைத்தாய், பக்ஷபாதம் எத்தனை (அமைத்தனை) - பக்ஷபாதங்கள் எத்தனை யமைத்தாய், வன்குணங்கள் எத்தனை (அமைத்தனை) - வலியகுணங்கள் எத்தனை யமைத்தாய், கொடிய பாழ் கல்லாமை எத்தனை (அமைத்தனை) - கொடியனவும் பாழ்படுதற்குக் காரணமானவுமாகிய கல்லாமைக் குணங்கள் எத்தனை யமைத்தாய், அகந்தை எத்தனை (அமைத்தனை) - அகங்காரகுணங்கள் எத்தனை யமைத்தாய், மனக்கள்ளம் எத்தனை (அமைத்தனை) - மனக்குற்றங்கள் எத்தனை யமைத்தாய், உள்ள சற்காரியம் சொல்லி

டினும் அறியாமை எத்தனை (அமைத்தனை) - உளதாகிய சற்காரியத்தைச் சொன்னாலும் அதை யறிந்துகொள்ளாமையாகிய துர்க்குணங்கள் எத்தனை யமைத்தாய், கதிக்கென்றமைத்த அருளில் செல்லாமை எத்தனை (அமைத்தனை) - மோக்ஷத்துக் கென்றமைக்கப்பட்ட அருட்குணங்களில் பிரவேசி யாமையாகிய குணங்கள் எத்தனை யமைத்தாய், விருதாகோஷ்டி என்னில் செல்வது எத்தனை (அமைத்தனை) - பயனற்ற கூட்டமென்றால் அதில் பிரவேசித்தற்குக் காரணமாகிய கரணங்கள் எத்தனை யமைத்தாய், மூயற்சி சிந்தை எத்தனை (அமைத்தனை) - பயனில்லாத முயற்சியிற் செல்லுஞ் சிந்தைகள் எத்தனை யமைத்தாய், சலநம் இந்த்ரசாலம்போன்ற தேகத்தில்- கெடும் இயற்கையில் இந்த்ரஜாலத்தையொத்த சரீரத்தில், வாஞ்சைமுதலா அல்லாமை எத்தனை (அமைத்தனை) - விருப்பம் முதலியனவாகத் தகாமையாகிய குணங்கள் எத்தனை யமைத்தாய், உனக்கு அடிமை ஆனேன் - தேவரீருக் கடிமையாயினேன், இவைக்கும் ஆளோ - (கோரம் முதலிய) இத்தீக் குணங்களுக்கும் நாளாகவோ, அண்ட பகிரண்டமும் - இவ் வண்டங்களும் இவற்றின் புறத்திலுள்ள அண்டங்களும், அடங்க - குறுகி யுள்ளடங்கும்படி, ஒரு நிறைவு ஆகி - ஒரு பரிபூர்ணமாகி, ஆநந்தம் ஆன பரமே - சுகரூபமான பரம்பொருளே—எ - று.

கோரம் - கொடுமை, பக்ஷபாதம் - ஒருபாற் பற்றுடைமை. கொல்லாமை ஒன்று இருப்பின் எல்லா நன்மைகளையுங் கொடுக்கும். அது இல்லாமையால் உண்டான கோரம் முதலான தீங்குகள் எத்தனை யென்பேன்? உனக்கடிமையான நான் இவைகட்கும் அடிமையோ என்பதாம்.

**2.** தெருளாகி மருளாகி யுழலுமன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகியச்
சித்தெல்லாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்ரமாய்த்
திரமாகி நாளுவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
புலனுமா யைம்பூதமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
இருளாகி யொளியாகி நன்மைதீ மையுமாகி
யின்றாகி நாளையாகி
என்றுமா யொன்றுமாய்ப் பலவுமா யாவுமா
யிவையல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவ
ரறிவதற் கெளிதாகுமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ-ள். தெருள் ஆகி - தெளிவாகி, மருள் ஆகி - மயக்கமாகி, உழலும் மனம் ஆய் - சுழலாநின்ற மனமாகி, மனம் சேர்ந்து வளர் சித்து ஆகி - மனமானது சேர்ந்து வளர்தற் கிடமாகிய அறிவாகி, அச்சித்தெல்லாம் சூழ்ந்த சிவசித்தாய் - அந்தச் சித்தெல்லாஞ் சூழப்பெற்ற சிவஞானமாகி, விசித்திரமாய் - ஆச்சர்யகரமாகி, திரமாகி - உறுதியாகி, நானாவிதப்பொருள் ஆகி - பலவகைப்பொருள்களாகி, அப்பொருளை அறிபொறியும் ஆகி - அப்பொருள்களை யறிகின்ற ஐம்பொறிகளுமாகி, ஐம்புலனும் ஆய் - (அவற்றுக்கு விடயங்களாகிய) ஐம்புலன்களுமாகி, ஐம்பூதம் ஆய் - பஞ்சபூதங்களாகி, புறமும் ஆய் - வெளியுமாகி, அகமும் ஆய் - உள்ளுமாகி, தூரம் சமீபம் ஆய் - சேய்மை யண்மைகளாகி, போக்கொடு வரத்தும் ஆகி - செலவொடு வரவுமாகி, இருள் ஆகி - அந்தகாரமாகி, ஒளி ஆகி - தேஜஸ்லாகி, நன்மை தீமைகளுமாகி - நன்மை தீமைகளுமாகி, இன்றாகி - இன்றாகி, நாளை ஆகி - நாளையாகி, என்றும் ஆய் - என்றுமாகி, ஒன்றும் ஆய் - ஒன்றுமாகி, பலவும் ஆய் - பலவுமாகி, யாவும் ஆய் - எல்லாமாகி, இவை அல்ல ஆய நின்னை - இவைக ளல்லாதனவுமாகிய உன்னை, அருளாகி நின்றவர்கள் - உன் திருவருளுக் கிலக்காகி நின்ற அறிஞர்கள், அறிவது அல்லால் - அறிவதேயன்றி, ஒருவர் - வேறொருவர், அறிவதற்கு - உணர்வதற்கு, எளிது ஆகுமோ - (அவ்வுணர்ச்சி) எளிதாகுமோ, அண்டபகி—எ-று.

சிவசித்து - சிவஞானம். ஒகாரம் எதிர்மறை. தெருள் மருள் முதலியனவாகியும் அவை யல்லனவாகியும் நிற்கின்ற உன்னை, உன் திருவருள் பெற்ற அறிஞரன்றி மற்றையர் உணர்தல் கூடுமோ என்பதாம்.

3. மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதுழல
மாலாகி நிற்கவறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வாரொன்றை
மெணமெண்ணன் றகம்வேறதாம்
வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோன்
மெய்ந்நூல் விரிக்கவறிவார்
சிறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு மூளறவறிவார்
ஆறுசம யங்களொடு வேறுவே றாகிவிளை
யாடுமுனை யாவரறிவார்

அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ-ள். மாறுபடு தர்க்கம் தொடுக்க அறிவார் - மாறுபடுதற்குரிய தர்க்கந் தொடுக்க அறிவார்கள், சாண் வயிற்றின் பொருட்டதாக - சாண் வயிற்றின் நிமித்தமாக, மண்தலமும் விண்தலமும் ஒன்று ஆகி மனது உழல - மண்ணுலகமும் விண்ணுலகமும் ஒன்ருகப் பாவித்து மனஞ் சுழலாநிற்க, மால் ஆகி நிற்க அறிவார் - பேராசை கொண்டுநிற்க அறிவார்கள், வேறுபடு வேடங்கள் கொள்ள அறிவார் - வெவ்வேறு வகைப்பட்டவேஷங்கள் பூண அறிவார்கள், ஒன்றை மெண மெண என்று - ஒருமந்திரத்தை மெணமெண என்று நாவினுல் உச்சரியாநின்றே, அகம் வேறு ஆம் - மனம் வேருதற்குரிய, வித்தை அறிவார் - வித்தையை யறிவார்கள், எம்மைப்போலவே - எங்களைப்போலவே, சந்தைபோல் - சந்தையில் பல பொருள்களைப் பரப்பி வைப்பதுபோல், மெய்நூல் விரிக்க அறிவார் - உண்மை நூற்பொருள்களைப் பரப்ப அறிவார்கள், சீறு புலிபோல் சீறி - கோபிக்கின்ற புலியைப்போலச் சீறி, மூச்சைப் பிடித்து - மூச்சைத்தடுத்து, விழி செக்கச் சிவக்க அறிவார் - கண்கள் மிகவுஞ் சிவக்க அறிவார்கள், தம் தம் மதத்தையே திரமென்று - தங்கள் தங்கள் மதத்தையே திடமென்று, தாமதச் செய்கை கொடும் உளற அறிவார் - தாமசத்தொழிலை மேற்கொண்டு உளற அறிவார்கள், ஆறுசமயங்கள் தொறும் - ஆறு சமயங்களுள்ளும், வேறு வேறு ஆகி - வெவ்வேறுருக்கொண்டு, விளையாடும் உன்னை - விளையாடாநின்ற வுன்னை, யாவர் அறிவார் - யாவர் அறியவல்லார், அண்டபகி—எ-று.

சீறுதற்கும் விழி சிவத்தற்கும் காரணம் மூச்சடக்கலாதலால், 'சீறு புலிபோற் சீறி மூச்சைப்பிடித்து விழி செக்கச்சிவக்க அறிவார்' என்ருர். தர்க்கம்பேசல், வயிறுவளர்க்க அலேதல் முதலியவை செய்ய அறிவார்களேயன்றி, ஆறு சமயங்களிலும் வெவ்வேறு வடிவுகொண்டு விளையாடும் உன்னை யறிபவர்கள் யாவர் என்பதாம். ஆறுசமயங்களென்றது வைரவம் முதலிய அகச்சமயங்களை.

4. காயிலே புதிர்ந்தகனி சருகுபுனல் மண்டிய
கடும்பசி தனக்கடைத்தும்
கார்வரையின் முழையிற் கருங்கல்போ லசையாது
கண்மூடி நெடிதிருந்தும்
தீயினிடை வைகியுந் தோயமதின் மூழ்கியுந்
தேகங்க ளென்பெலும்பாய்த்
தெரியநின் றுஞ்சென்னி மயிர்கள்கூ டாக்குருவி
தெற்றவெயி லூடிருந்தும்

வாயுவை யடக்கியு மனதினை யடக்கியு
மௌனத்தி லேயிருந்தும்
மதிமண்ட லத்திலே கனல்செல்ல வமுதுண்டு
வனமூடிருந்து மறிஞர்
ஆயுமறை முடிவான வருளுடை னாரடிமை
யகிலத்தை நாடன்முறையோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ-ள். உதிர்ந்த காய் இலை கனி சருகு புனல் - உதிர்ந்த காயையும் இலையையும் கனியையும் சருகையும் நீரையும், மண்டிய கடும்பசி தனக்கு அடைத்தும் - மிகுந்த கடும்பசிக்கு உண்பித்தும், கார்வரையின் முழையில் - கருமையாகிய மலைக்குகையில், கருங்கல்போல் அசையாது - கருங்கல்லைப் போல அசையாமல், நெடிது கண்மூடி இருந்தும் - நெடுங் காலம் கண்மூடியிருந்தும், தீயினிடை வைகியும் - பஞ்சாக்கி மத்தியிற்றங்கியும், தோயமதில் மூழ்கியும் - புண்ய தீர்த்தங்களில் ஸ்நாநம் பண்ணியும், தேகங்கள் - சரீரங்கள், என்பு எலும்பு ஆய்த் தெரிய நின்றும் - எலும்பெலும்பாய்த் தெரியத் தவநிலையில் நின்றும், சென்னி மயிர்கள் கூடு ஆ - தலைமயிர்களைக் கூடாகக் கொண்டு, குருவி தெற்ற - குருவிகளலைக்க, வெயிலூடு இருந்தும் - வெயிலினிடத் திருந்தும், வாயுவை அடக்கியும் - வாயுவைத் தடுத்தும், மனதினை அடக்கியும் - மனத்தைத் தடுத்தும், மௌனத்திலே இருந்தும் - மௌன நிலையி லிருந்தும், கனல் செல்ல மதி மண்டலத்திலே அமுது உண்டு வனமூடு இருந்தும் - முத்தாபந் தணியும்படி சந்திரமண்டலத்திலுள்ள அமிர்தத்தையுண்டு காட்டிற்றங்கியும், அறிஞர் - ஞானியர்கள், ஆயும் - ஆராயப்பட்ட, மறைமுடிவான பொருள் நாடினார் - வேதாந்தப் பொருளை விரும்பித் தேடினார்கள், அடிமை - அடிமை யொருவனும், அகிலத்தை நாடல் முறையோ - உலகவாழ்வை விரும்புதல் முறைமை யாமோ, அண்டபகி—எ-று.

உதிராத காய் முதலியவற்றை யுதிர்த்தல் தவத்தினை மேற்கொண்டார்க்கு அருளுடைமையன்றாய் முடியுமாதலால், 'காயிலை யுதிர்ந்த கனி சருகு புனல்' என்றார். அறிஞர் காயிலை யுதிர்ந்த சருகு புனல் மண்டிய கடும்பசி தனக்கடைத்தல் முதலிய அருஞ் செயல்களைச்செய்து உன்திருவருள் பெற்றார்களாக, உன்னடியனான நான் ஒருவனும் பொய்யாகிய வுலகவாழ்வைநம்பி நசித்தல் அழகாமோ என்பதாம்.

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்னும் நான்கு திசையினும் வளர்க்கப்பட்ட நெருப்போடு சூரிய கிரணாக்நியையுஞ் சேர்த்துப் பஞ்சாக்நியென்பர். குருவி யலைத்தல் என்பது காலாவிடறன் முதலியன. முத்தாபம் - ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பன; இவை முறையே தன்னாலும் பிறவுயிர்களாலும் தெய்வத்தாலும் உளவாந் துன்பங்கள். மதிமண்டலம் சிரசிலுள்ள மும்மண்டலங்களுள் ஒன்று. மதிமண்டலத் தமுதுண்டார்க்குப் பிறவியில்லையாதலும் அஃதின்றாகவே பிறவித்துன்பங்களென்று சொல்லப்படுவனவாகிய தாபத்திரயங்க ளில்லையாதலும் காண்க.

**5.** சுத்தமு மசுத்தமுந் துக்கசுக பேதமுந்
தொந்தமுட னிர்த்தொந்தமும்
ஸ்தூலமொடு சூக்ஷ்மமு மாசையு நிராசையுஞ்
சொல்லுமொரு சொல்லின்முடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமொ டபாவமும்
பேதமொ டபேதநிலையும்
பெருமையொடு சிறுமையு மருமையுட னெளிமையும்
பெண்ணினுட னாணுமற்றும்
நித்தமு மநித்தமு மஞ்சன நிரஞ்சனமு
நிஷ்களமு நிகழ்சகளமும்
நீதியு மநீதியு மாதியொ டனாதியும்
நிர்விஷய விஷயவடிவும்
அத்தனையு நீயலதெ ளத்தனையு மில்லையெனின்
யாங்களுனை யன்றியுண்டோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ-ள். சுத்தமும் அசுத்தமும் - சுத்தாசுத்தங்களும், துக்கசுக பேதமும் - துக்க சுக பேதங்களும், தொந்தமுடன் நிர்த்தொந்தமும் - சம்பந்தாசம்பந்தங்களும், ஸ்தூலமொடு சூக்ஷ்மமும் - ஸ்தூல சூக்ஷ்மங்களும், ஆசையும் நிராசையும் - ஆசையும் ஆசையின்மையும், சொல்லும் ஒரு சொல்லின்முடிவும் - வேதமும் வேதமுடிவும், பெத்தமொடு முத்தியும் - பந்தமோக்ஷங்களும், பாவமொடு அபாவமும் - நினைத்தலும் நினையாமையும், பேதமொடு அபேதநிலையும் - பேதாபேத நிலைகளும், பெருமையொடு சிறுமையும் - பெருமை சிறுமைகளும், அருமையுடன் எளிமையும் - அருமை எளிமைகளும், பெண்ணினுடன் ஆணும் - பெண்மை யாண்மைகளும், மற்றும் - மேலும், நித்தமும் அநித்தமும் - நித்யாநித்யங்களும், அஞ்சன நிரஞ்சனமும் - தோஷமும் தோஷமின்மையும், நிஷ்களமும் - கலைகளுக்கு மேற்பட்டதும், நிகழ் சகளமும் - கலைகளோடு கூடினதும், நீதியும் அநீதியும் - நீதி யநீதிகளும், ஆதி

யொடு அநாதியும் - ஆதி அநாதிகளும், நிர்விஷய விஷயவடிவும் - ஒருவர்க்கு விஷயமாகாமையும் ஆதலுமாகிய ரூபங்களும், அத்தனையும் - (ஆகிய) எல்லா மும், நீ அல்லது - நீ யன்றி, எள் அத்தனையும் இல்லையெனின் - எள்ளளவும் (வேறு நீ யில்லாப்பொருள்) இல்லையாயின், யாங்கள் உன்னை அன்றி உண்டோ - நாங்கள் உன்னையன்றி உளமாவோமோ, அண்டபகி—எ-று.

பந்தமென்பது பெத்தமென மருவிக்கிடக்கிறது. பேதம் - வேறுபாடு. சுத்தாசுத்தம் முதலிய எல்லாம் நீ யன்றி இல்லனவாயின், நாங்கள்மாத்திரம் உன்னையன்றி வேருவோமோ என்பதாம்.

> "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
> புலனுய மைந்தனே டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
> உலகே ழெனத்திசைபத் தெனத்தா னொருவனுமே
> பலவாகி நின்றவா தோணேக்க மாடாமோ"

என்றார் திருவாதவூரடிகளும். பாவமும் அபாவமும் என்பதற்கு உண்மையின் மைகளும் எனப்பொருள் கூறினுமாம். தொந்தம் இரட்டைப் பொருள்கள் எனினு மமையும். அவை சீதோஷ்ணங்கள், சுகதுக்கங்கள் என்றற்றொடக் கத்தன.

சாக்கரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் என்னு நான்கும் ஒவ்வொன் றும் நந்நான்காகப் பிரிக்கப்பட்டுப் பதினறுஆம். இவைகளைக் கலைகளென்று கூறுவர். அவை:—சாக்கர சாக்கரம், சாக்கரசொப்பனம், சாக்கர சுழுத்தி, சாக்கர துரியம், சொப்பன சாக்கரம், சொப்பன சொப்பனம், சொப்பன சுழு த்தி, சொப்பனதுரியம், சுழுத்தி சாக்கரம், சுழுத்தி சொப்பனம், சுழுத்தி சுழு த்தி, சுழுத்தி துரியம், துரிய சாக்கரம், துரிய சொப்பனம், துரிய சுழுத்தி, துரியதுரியம் என்பன. ஓங்காரம் - பிரதிபாதகம், பிரம்மம் - பிரதிபாத்யம். இந்தப்பிரணவம் அகாரம், உகாரம், மகாரம், அர்த்தமாத்ருகை என நான் காகி, ஒவ்வொன்றும் நந்நான்காகப் பிரிக்கப்பட்டு பதினறும்; இவைகளும் கலைகளென்று சொல்லப்படும். ஸ்தூலம், சூக்ஷ்மம், காரணம், மகாகாரணம் இந்த நான்கு சரீரங்களும் அவ்வாறே நந்நான்காகப் பிரிக்கப்பட்டுப் பதினறாகிக் கலைகளெனப்படும். இந்தக் கலைகளுக்கு மேற்பட்டதாகிய பரப்பிரம வஸ்து அவித்யா பாதம், வித்யா பாதம், ஆநந்த பாதம், துரிய பாதம் என நான்கு பாதங்களை யுடையது. இப்பாதம் நான்கும் பசுவின் கால்போல்வ தன்று. பொன் வெள்ளி நாணயங்களின் கால்பாகம் போல்வது, கண்டங்க ளென்றபடி.

கலை - கண்டம். இவற்றின் விரிவெல்லாம் யாம் எவ்வளவு விசதப்படு த்தினும் விளங்க லருமை நோக்கிச் சுருக்கினே மாதலால் வல்லார்வாய்க் கேட்டுணர்க. கலா என்னும் வடமொழி கலையென்றாயது. இது களையென வும்படும். இதனை "ளயோரபேதம்" என்பர் வடநூலார்.

6. காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னும்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்திமேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரமென்றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ-ள். கார் ஆரும் ஆணவக் காட்டைக் களைந்து - இருள் நிறைந்த ஆணவக் காட்டை வேரறப் பறித்து, அறக்கண்டு - வெட்டவெளியாக்கி, அகங்காரம் என்னும் கல்லைப் பிளந்து - அகங்காரமென்கிற கல்லைப் பிளந்தெறிந்து, நெஞ்சகமான பூமிவெளிகாண திருத்தி - மனமாகிய நிலமானது வெளியாய்த் தோன்றும்படி திருத்தி, மேன்மேல் - மேலு மேலும், பாராதி அறியாத மோனம் ஆம் வித்தை பதித்து - பூலோகத்தார் முதலானவர்கள் அறியாத மோகநிலை யென்கிற விதையை ஊன்றி, அன்பு நீராக பாய்ச்சி - அன்பாகிய நீரைப் பாயவிட்டு, அது பயிர் ஆகு மட்டும் - அது பயிராகு மள வும், மாமாயை வன் பறவை அணுகாத வண்ணம் - பெரிய மாயையாகிய வலிய பறவை சேர்ந்து அழிக்காதவகை, நேராக நின்று - தமது முயற்சியி னளவிற் குறையாமல் செவ்வே நின்று அப்பயிரைக் காத்து, விளைபோகம் புசித்து உய்ந்த - விளைந்த சிவபோகத்தை யநுபவித்து உஜ்ஜீவித்த, நின் அன்பர் கூட்டம் எய்த - உன்னடியார் கூட்டத்தை நானடையும்படி, நினை வின்படிக்கு - என் எண்ணத்தின்படி, நீ முன்னின்றுகாப்பது - நீ எனக்குப் பிரத்யக்ஷமாகி நின்று காப்பாற்றுவது, நின் அருட்பாரம் - உன் திருவருட் குரிய கடமையாம், என்றும்-எப்பொழுதும், ஆராரும் அறியாத - எவ்வகைப் பட்ட மேலோரும் உணராத, சூது ஆன வெளியில் - ரஹஸ்யமான சிதாகாய த்தில், வெளி ஆகின்ற துரிய மயமே - வெளிப்படத் தோற்றுகின்ற துரிய வடிவே, அண்டபகி—எ - று.

உலகவின்பம் புசித்தற்கு நிலந் திருத்தும் பத்தாத்மாக்கள்போலச் சிவ போகம் புசித்தற்கு முத்தாத்மாக்களும் தம்மன நிலந் திருத்தவேண்டுதலாத லால் இவ்வாறு கூறப்பட்டது. துரியம் - சீவன் முத்தர்க்குரிய பூமி. அது ஸ்தூல சூக்ஷம காரண மகாகாரணங்களாகிய நான்கு சரீரங்களென்னுங் காரணத்தின் காரியமாகிய சாக்கிர சொப்பன சுழுத்தி துரியங்களென்னு நான்கனுள் இறுதியிலுள்ளது.

7. வானாதி பூதமா யகிலாண்ட கோடியாய்
மலையாகி வளைகட லுமாய்
மதியாகி யிரவியாய் மற்றுள வெலாமாகி
வான்கருணை வெள்ளமாகி
நானாகி நின்றவனு நீயாகி நின்றிடவு
நானென்ப தற்றிடாதே
நானா னெனக்குளறி நானாவி காரியாய்
நானறிந் தறியாமையாய்ப்
போனா லதிட்டவலி வெல்லவெளி தோபகற்
பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள் வான்றனை யெழுப்பவச மோகினிப்
போதிப்ப தெந்தநெறியை
ஆனாலு மென்கொடுமை யநியாய மநியாய
மார்பா லெடுத்துமொழிவேன்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ - ள். வானாதி பூதமாய் - ஆகாயமுதலிய பஞ்சபூதங்களாகி, அகில அண்ட கோடியாய் - சமஸ்தமான அண்டகோடிகளாகி, மலை ஆகி - மலைக ளாகி, வளைகடலுமாய் - (உலகத்தைச்) சூழ்ந்த கடல்களுமாகி, மதி ஆகி - சந்திரனாகி, இரவியாய் - சூரியனாகி, மற்று உள்ள எல்லாம் ஆகி - வேறுள்ள பொருள்களெல்லாமாகி, வான்கருணை வெள்ளமாகி - மேலான கருணைப்ர வாஹமாகி, நான் ஆகி நின்றவனும் - நானாகிநின்றவனும், நீ ஆகி நின்றிட வும் - நீயாகி நிற்கச் செய்தேயும், நான் என்பது அற்றிடாதே - நானென் பதை யொழியாமலே, நான் நான் என குளறி - நான் நான் என்று குளறி, நானா விகாரி ஆய் - பலவகை விகாரமுள்ளவனாகி, நான் அறிந்து அறியாமை ஆய் - நானறிந்தும் அறியாமை யுள்ளவனாகி, போனால் - (மனம் போன போக்கில்) போனால், (அது) அதிட்டவலி - எனது அத்ருஷ்டபலமேயாகும், (அதனை) வெல்ல எளிதோ - வெல்லுதற்கு எளிதாகுமோ, பகற்பொழுது புகுமுன் - பகற்காலம் அஸ்தமிக்கு முன்னமே, கண்மூடி - கண்மூடிக் கொண்டு, பொய் துயில் கொள்வான்தனை - பொய்த்தூக்கந் தூங்குமவனை,

எழுப்பவசமோ - துயிலொழிக்க (ஒருவர்க்கு) வசமாகுமோ, இனி போதிப்பது எந்தநெறியை - இனிப் போதிப்பது எந்தமார்க்கத்தை, ஆனாலும் - ஆயினும், என்கொடுமை - என்கொடுமையைப் பிறர்கேட்கச் சொல்லின்,(அது) அநியாயம் அநியாயம் - அநியாயமே அநியாயமே, (அங்ஙனமாதலால்) ஆர்பால் எடுத்து மொழிவேன் - யாவரிடத்தில் எடுத்துச் சொல்லுவேன் (சொல்லேன்), அண்டபகி—எ - று.

என்கொடுமை என்னை இவ்வாறுக்கினதைக்கண்டு வைத்தும் பிறர்க்கெடுத்துரைத்து அவரையும் இவ்வாறுக்குதல் பாவமென்றஞ்சி ஆர்பாலெடுத்துமொழிவேன் என்றார்போலும். பொய்த்துயில் கொள்வானறனை யெழுப்பவசமோ என்றது, நானறிந்தறியாமையாய் என்றத்தைப் பற்ற. வானாதி பூதமாயகிலாண்டகோடியாய் என்றதனை "ஒன்று யுலகனைத்துமானார்தாமே" என்ற திருவாக்கானு முணர்க.

8. பொய்யினேன் புலையினேன் கொலையினே னின்னருள்
புலப்பட வறிந்துநிலையாய்
புன்மையேன் கல்லாத தன்மையே னன்மைபோற்
பொருளலாப் பொருளைநாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென்னைநீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேதுபுகலாய்
தூய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன்றிலாத்
துரியனே துரியமுங் காணு வதீதனே
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே யப்பனே யெனுமறிஞ ரறிவைவிட்
டகலாத கருணைவடிவே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ - ள். பொய்யினேன் - பொய்யினையுடையேன், புலையினேன் - புலாலுண்டலை யுடையேன், கொலையினேன் - கொல்லுந் தொழிலை யுடையேன், நின் அருள் புலப்பட அறிந்தும் - உன் திருவருளின் தன்மையை வெளிப்பட வுணர்ந்தும், நிலையா - நிலைத்திராத, புன்மையேன் - புல்லிய தன்மையை யுடையேன், கல்லாத தன்மையேன் - கல்லாத தன்மையை யுடையேன், பொருள் அல்லா பொருளை - பொருட்டன்மையுடையதல்லாத பொய்ப்பொருளை, நன்மைபோல்நாடும் - நன்மையாயெண்ணிவிரும்புகின்ற,

வெய்யனேன் - வெஃவியகுணமுடையேன், வெகுளியேன் - கோபமுடையேன், வெறியனேன் - பைத்தியகுணமுடையேன், சிறியனேன் - சிறுமையையுடையேன், வினையினேன் என்று - தீவினையை யுடையேன் என்று, என்னை நீ விட்டுவிட நினைவையேல் - என்னை நீ கைவிட நினைப்பாயானால், தட்டழிவது அல்லாது - தடுமாறுவதே யன்றி, வேறுகதி யேது - வேறுகதி (எனக்கு) யாது, புகலாய் - (நீயே) சொல்வாய், துய்யனே - பரிசுத்தனே, மெய்யனே - மெய்யானவனே, உயிர்க்கு உயிர் ஆன துணைவனே - உயிர்க்குயிராகிய சஹாயபூதனே, இணை ஒன்று இல்லா துரியனே-சமானமொன்றுமில்லாத துரிய ஸ்வரூபனே, துரியமும் காணு அதீதனே - துரியநிலையும் காணக்கூடாத அதீதனே, சுருதிமுடி மீது இருந்த ஐயனே-வேதத்துச்சியிலிருந்த இறைவனே, அப்பனே - உபகாரகனே, என்னும் - என்றிப்படி பலவகையாய்த் துதிக்கின்ற, அறிஞர் - அறிவுடையோரது, அறிவை - அறிவாகிய இடத்தை, விட்டு அகலாத - விட்டுநீங்காத, கருணைவடிவே - கருணைரூபியே, அண்டபகி—எ - று.

ஐயனே என்பதற்கு அழகனே என்றுரைப்பினு மமையும்.

9. எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமென்
   னிதயமு மொடுங்கவில்லை
யானெனு மகந்தைதா னெள்ளளவு மாறவிலை
   யாதினும் யபிமானமென்
சித்தமிசை குடிகொண்ட தீமையோ டிரக்கமென்
   சென்மத்து நானறிகிலேன்
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுந்
   தெரிசனஞ் செய்துமறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
   புகன்றிடேன் பிறர்கேட்கவே
போதிப்ப தல்லாது சும்மாவிருந்தருள்
   பொருந்திடாப் பேதைநானே
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
   அவனிமிசை யுண்டோசொலாய்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
   யானந்த மானபரமே.

இ - ள். எத்தனைவிதங்கள் கற்கினும் கேட்கினும் - எத்தனை விதங்களாகக் கற்றாலும் கேட்டாலும், என் இதயமும் ஒடுங்கவில்லை - என் மனமுமடங்கவில்லை, யான் என்னும் அகந்தை எள்ளளவும் மாற வில்லை - யானென்கிற அகங்காரமானது எள்ளளவாயினும் நீங்கவில்லை, யாதினும் அபிமானம் - எல்லாப் பொருள்களின்மேலும் அபிமானமானது, என் சித்த

மிசை குடிகொண்டது - என் மனத்திற் குடிகொண்டிருக்கின்றது, ஈகை யொடு இரக்கம் - கொடையோடு இரக்க மென்பதை, என் சென்மத்தும் நான் அறிகிலேன் - என் ஜன்மகாலந்தொடங்கி இதுவரையிலும் நானறிந்தி லேன், சீலமொடு தவ விரதம் - ஆசாரத்தோடு தவ விரதங்களை, ஒரு கன வில் ஆயினும் - ஒரு ஸ்வப்நத்திலானாலும், தெரிசநம் செய்தும் அறியேன் - சேவித்து மறியேன், பொய்த்த மொழி அல்லால் - பொய்வார்த்தை பேசுவ தன்றி, மருந்துக்கும் - மருந்துக்கெனினும், மெய் மொழி புகன்றிடேன் - மெய்யாகிய வார்த்தையைப் பேசமாட்டேன், பிறர் கேட்க - பிறர் கேட்கும் படி, போதிப்பது அல்லாது - போதிப்பதன்றி, சும்மா இருந்து - சும்மாவிரு ந்து, அருள் பொருந்திடா பேதை நானே - உன் திருவருளைப் பெறாத அறி விலி நானே, அத்தனை குணக் கேடர் - (என்னைப்போன்ற) அவ்வளவு குணஹீநர்களை, அவனிமிசை கண்டதா கேட்டதா - உலகத்தின்மேல் கண்டதாகவாயினும் (இருக்கிறார்களென்று) கேள்விப்பட்டதாகவாயினும், உண்டோ - ஒரு பிரஸ்தாபம் உளதோ, சொலாய் - சொல்வாயாக, அண்ட பகி—எ - று.

சும்மாவிருத்தல் - த்ரிகரணங்களும் அசைவறத் தூங்காத தீபச்சுடர் போலவும் அலையற்ற கடல்போலவும் நிற்றல். "சும்மாவிருக்கச் சுகமுதய மாகுமே" என ஆசிரியரும், "சும்மா விரு சொல்லற" எனவுப் பிறரு மிவ்வாறு கூறுதல் காண்க.

**10.** எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
வேழைநீ யென்றிருந்திட்
டெனதாவி யுடல்பொருளு மௌனியாய் வந்துகை
யேற்றுநம தென்றவன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
பொய்யுடலை மெய்யென்னலும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
பொய்யினும் பொய்யாகையான்
மைக்கா லிருட்டனைய விருளில்லை யிருவினைகள்
வந்தேற வழியுமில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
வரவில்லை போக்குமில்லை
அக்கால மிக்கால மென்பதிலை யெல்லா
மதீதமய மானதன்றோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

இ - ள். மௌநியாய் வந்து - மௌந குருவாகி வந்து, எக்காலமும் - எக்காலத்திலும், நீ தனக்கென்ன ஒரு செயல் இல்லா ஏழையென்று - நீ சுதந்தரமாக ஒரு செய்கையில்லாத அறிவிலியென்று போதித்து, இருந்திட்டு - எழுந்தருளியிருந்து, எனது ஆவி உடல் பொருளும் - என்னுடைய ப்ராணன் தேஹம் பொருள் ஆகிய மூன்றையும், கையேற்று - கையினுலேற்றுக்கொண்டு, நமது என்ற அன்றே - நமது என்று தேவரீர் அருளிச்செய்த அப்பொழுதே, பொய்க் கால தேசமும் - பொய்யாகிய காலமும் பொய்யாகிய தேசமும், பொய்ப்பொருளில் வாஞ்சையும் - பொய்ப்பொருளில் விருப்பமும், பொய் உடலை மெய் என்னலும் - பொய்யாகிய வுடம்பை மெய்யென்று கொள்ளுதலும், பொய் உறவு பற்றலும் - பொய்யுறவினரை (மெய் யுறவினராக மதித்து) பற்றுதலும், பொய் ஆகும் - பொய்யாய் முடியும், நான் என்னல் - நான் என்பது, பொய்யினும் பொய் ஆகையால் - பொய்யி னுள்ளும் பெரும் பொய்யாய் விடுதலால், மைக்கால் இருட்டு அனைய - மழைக்கால விருட்டையொத்த, இருள் இல்லை - அஞ்ஞானமாகிய இருளில்லை, இருவினைகள் வந்து ஏற வழியும் இல்லை - இருவினைகள் வந்து தொடர மார்க்கமுமில்லை, மனம் இல்லை - மனமென்பதில்லை, அம்மனத்து இனம் இல்லை - அந்தமனத்தின் இனமானது மில்லை, வேறும் ஒரு வரவு இல்லை போக்கும் இல்லை - வேறுமொரு வரவு இல்லை செலவும் இல்லை, அக்காலம் இக்காலம் என்பது இல்லை - அந்தக்காலம் இந்தக்காலம் என்பது மில்லை, எல்லாம் - சர்வமும், அதீதமயம் ஆனது அன்றோ - இல்லாமைவடிவாயிற் றல்லவா, அண்டபகி—எ-று.

உபதேசகாலத்தில் உடல் பொருள் ஆவிகளைச் சீடன் சமர்ப்பித்தலும், அவைகளை யேற்றுக்கொண்டு ஆசிரியன் உபதேசித்தலும் முறைமையாதலால், 'எனதாவி யுடல் பொருளு மௌநியாய் வந்து கை யேற்று' என்றார். "அன்றேயென்ற னுவியுமுடலும் உடைமையெல்லாமும் - குன்றேயனையா யென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ" என்ற திருவாக்கானுங் காண்க. பொய்யினும் பொய் என்றது இப்பொய்யை நோக்குங்கால் முற் பொய்யானது மெய்யென்று தோற்றுவதை. இறைவன் மௌநியாய் வந்து என் உடல் பொரு ளாவி மூன்றனையுங் கைக்கொண்ட அப்பொழுதே அஞ்ஞான விருள்முதலியன அற்றொழிந்தன வென்பதாம்.

---

சுகவாரி.

1\. இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதே
னெனருசித் திடவலியவந்
தின்பங் கொடுத்தநினை யென்னே ர நின்னன்ப
ரிடையறு துருகிநாடி

உன்னிய கருத்தவிழ வுரைகுளறி யுடலெங்கு
மோய்ந்தயர்ந் தவசமாகி
உணர்வரிய பேரின்ப வநுபூதி யுணர்விலே
யுணர்வார்க ளுள்ளபடிகாண்
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
கைக்கொள்வள் பக்குவத்தில்
கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
கருதிநகை யாவளதுபோல்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்பமாம்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். இன் அமுது (என)-இனிய அமிர்தம் போலவும், கனி(என)-முக்கனிகள் போலவும், பாகு (என) - சர்க்கரைப் பாகுபோலவும், கற்கண்டு (என) - கற்கண்டுபோலவும், சீனி (என) - சீனி போலவும், தேன்(என)-தேன்போலவும், ருசித்திட - ருசிக்கும்படி, வலிய வந்து இன்பங்கொடுத்த நின்னை - வலியவந்து சுகங் கொடுத்த வுன்னை, நின் அன்பர் - உன் அன்பர்கள், எந்நேரம் இடையறாது உருகி நாடி - சதாகாலமும் இடையறாமல் நாடியுருகி, உன்னிய கருத்து அவிழ - நினைத்த மனமும் நெகிழ்தலால், உரைகுளறி - மொழிகுளறி, உடல் எங்கும் ஓய்ந்து - உடம்பெல்லாம் எய்த்து, அயர்ந்து-அயர்வை யடைந்து, அவசம் ஆகி - பரவசமாகி, உணர்வரிய - அறிதற்கரிய, பேரின்ப அநுபூதி யுணர்விலே - பேரின்ப அநுபவ வுணர்ச்சியால், உணர்வார்கள் - அறிந்தநுபவிப்பார்கள், உள்ளபடி - (இது) யதார்த்தம், கன்னிகை ஒருத்தி - ஒரு கன்னிகையானவள், சிற்றின்பம் - சிற்றின்பமானது, வேம்பு என்னினும் - வேம்பென்று சொல்வாளாயினும், பக்குவத்தில் கைக்கொள்வள் - பருவ காலத்தில் (அச் சிற்றின்பத்தையே பேரின்பமாக எண்ணி) கைக்கொள்வாள், கணவன் அருள் பெறின்-கணவனருளைப் பெற்று வாழ்வளாயின், முன்னே சொன்னவாறு என் என - முன்னே சொன்னவழி யாதாய் முடிந்ததென்று வினவ, கருதி - (அதை) நினைத்து, நகையாவள் - நகைப்பாள், அதுபோல் - அதுபோலவே, சொன்னபடி கேட்கும் - சொன்னபடி கேட்கின்ற, இப்பேதைக்கு - இவ்வறிவிலேற்கு, நின் கருணை தோற்றின் - உன் கருணை யுளதாயின், சுகாரம்பம் ஆம் - சுகோதயமாகும், சுத்த நிர்க்குணமான பரதெய்வமே - சுத்தநிர்க்குணமாகிய மேலான தெய்வமே, பரஞ்சோதியே - மேலான தேஜஸ்வே. சுகவாரியே - இன்பசாகரமே—எ-று.

கன்னிகை - சிறுபெண். சிற்றின்பம் - அற்பசுகம். கணவனருள் பெறுதல் - கணவனது விருப்பத்திற்குப் பாத்ரபூதையாகி அவனோ டின் புற்று வாழ்தல். கன்னிகைக்குச் சிற்றின்பங் கைத்தலும் பருவம் பெற்ற பெண்ணுக்கு இரதித்தலும் இயற்கை யாதல்போல, உன் னருள் பெறாத எனக்கு உன் சுகானுபவம் கைப்பாகவும், பெற்ற அறிஞர்க்கு இனிப்பாகவு மிருக்கும் என்பதாம். நிர்க்குணன் - குணங்கடந்தவன்.

2. அன்பின்வழி யறியாத வென்னைத் தொடர்ந்தென்னை
யறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநா
னற்றே னலந்தேனென
என்புலன்ம யங்கவே பித்தேற்றி விட்டா
யிரங்கியொரு வழியாயினும்
இன்பவெள மாகவந் துள்ளங் களிக்கவே
யெனைநீ கலந்ததுண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்குமுண்டோ
தமியனேற் கிவ்வண்ணந் திருவுள மிரங்காத
தன்மையாற் றனியிருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்குமுறையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். அன்பின்வழி அறியாத - அன்பின் மார்க்கத்தை யுணராத, என்னை - அடியேனை, தொடர்ந்து - பற்றி, என்னை அறியாதபக்குவத்தே - என்னை உணராத பருவத்திற்றானே, ஆசைப்பெருக்கைப் பெருக்கிக் கொடுத்து - ஆசைவெள்ளத்தைப் பெருகப் பண்ணி, நான் அற்றேன் அலந்தேன் என - நான் கெட்டேன் வாடினேன் என்று சொல்லும் வண்ணம், என் புலன் மயங்க பித்து எற்றிவிட்டாய் - என்னறிவு மயங்கும்படி பித்தேற்றி விட்டனை, நீ - (இப்படிசெய்த) நீ, ஒருவழியாயினும் இரங்கி - ஒருதரமாயினு மிரங்கி, இன்ப வெள்ளமாக வந்து - ஆநந்த வெள்ளமாக வந்து, உள்ளம் களிக்க - மனங் களிக்கும்படி, என்னை கலந்தது உண்டோ - என்னைச் சேர்ந்தது உண்டோ - தன்பருவ மலருக்கு - தன் பருவகால மலருக்கு, மணம் உண்டு - வாசனையுண்டு, வண்டு உண்டு - வண்டு மொய்த்தலுண்டு, தண் முகை தனக்கும் உண்டோ - (அவைகள்) குளிர்ச்சியாகிய அரும்புகளுக்கும் உண்டாமோ, தமியனேற்கு-தனியேனுக்கு,இவ்வண்ணம்-

இந்த ப்ரகாரம், திருவுளம் இரங்காத தன்மையால் - தேவரீர் திருவுளங் கனியாத தன்மையால், தனி இருந்து துன்பம் உறின் - தனியா யிருந்து துன்பப்பட்டால், அழியாத நின் அன்பர் சுகம் - நசிக்காத உன்னன்பர்க் குரிய சுகமானது, எங்ஙன் வந்து வாய்க்கும் - எப்படி வந்து கிடைக்கும், உரையாய் - சொல்லாய், சுத்தநிர்க்குணமான—எ - று.

அன்பின்வழி - அன்பு செய்ய வேண்டிய வழி. தன் பருவமலர் தனக் குரிய பருவத்துண்டாகிய மலர். மண முண்டாயி னன்றே வண்டு மொய்ப் பது; அதைநோக்கி மணமுண்டு வண்டுண்டு என்றார். என்னைப்பார்த்த பிறர் உன் விஷயமாய் நான் வாடினேன் அயர்ந்தேன் என்று சொல்லும் வகை. என்னறிவு மயங்கப் பித்தேற்றிவிட்ட நீ ஒருகாலாயினும் சுகத்தைக் கொடுத் தாயில்லையே; அப்படி உன் கருணைக்குரிய னாகாத எனக்கு என்ன சுக முண்டு. பருவகாலமலருக்கு மணமும் வண்டுமுண்டு, அல்லாத மலருக்கு ஒன்றுமில்லை யென்பதாம். இறைவனை வண்டாகவும், அறிஞரைப் பருவ கால மலராகவும் கொள்க.

3. கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
  கன்னெஞ்ச முருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
  கற்பிக்க வொருகடவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
  வழக்குக் கிழுக்குமுண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிறங்கியெனை
  வாழ்விப்ப துன்பரங்காண்
பொல்லாத சேயெனிற் றாய்தள்ள னீதமோ
  புகலிடம் பிறிதுமுண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயனுமாய்ப்
  புன்மையே னுவனந்தோ
சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
  சும்மாவிருக்க வருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
  சோதியே சுகவாரியே.

இ - ள். ஐய - ஐயனே, கல்லேனும் ஒருகாலத்தில் உருகும் - கல்லா யினும் ஒருகால விசேடத்தில் உருகாநிற்கும், என் கல்நெஞ்சம் உருக இல் லையே - என்கல்மன முருகவில்லையே, (என்ன ஆச்சரியம்) நான்முகன் - பிர மன், கருணைக்கு இணங்காத வன்மையையும் கற்பிக்க - திருவருட் கிணங்கி

யிராத மன வன்மையையும் சிருட்டிக்க, ஒருகடவுளோ - ஒப்பற்ற தெய்வமோ, வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்னும் - வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்கிற, பெருவழக்குக்கு - பெருவழக்கத்துக்கு, இழுக்கும்உண்டோ - குற்றமுமுண்டாகுமோ, வானமாய்நின்று - பரமாகாயமாய் நின்று, இன்ப மழையாய் இறங்கி - ஆனந்த வர்ஷமாயிறங்கி, என்னை வாழ்விப்பது - என்னை (நித்ய பதவியில்) வாழச்செய்வது, உன்பரம் - உன் பாரமாகும், பொல்லாத சேய் எனில் - பொல்லாத குழந்தையா யிருந்தால், (அதனை) தாய் தள்ளல் நீதமோ - தாயானவள் தள்ளிவிடுதல் நீதியாகுமோ, (அவ்வாறு தள்ளிவிட்டால்) புகல் இடம் பிறிதும் உண்டோ - (அக்குழந்தைக்கு) அடைக்கலஸ்தானம் வேறும் உண்டோ, பொய்வார்த்தை சொல்லில் - பொய்மொழி பேசவேண்டினால், திருவருட்கு அயலும் ஆய் - திருவருளுக்குப் புறமுமாகி, புன்மையேன் ஆவன் - அற்பனுமாவேன், அந்தோ - ஐயோ, சொல்லால் முழக்கில் - சொல்லான் முழக்குதல் செய்தால், சுகம் இல்லை - இன்பமில்லை, மௌனி ஆய் - மௌனியாகி, சும்மா இருக்க அருளாய் - சும்மா இருக்கும்படி க்ருபை பண்ணுவாய், சுத்தநிர்க்குணமான—எ - று.

ஒரு பொருட் குணம் அதற் கினமான பொருளினு மிராவிடின் அஃதொரு வியப்பன்றே? ஆதலால், 'கல்லேனும் உருகும் என் கல்நெஞ்சம் உருகவில்லையே' என்றார். கருணைக்கிணங்காத வன்மையைக் கற்பிக்க நான்முகன் ஒரு கடவு ளல்லனுயினும் வல்லான் ஆதலால் அதனையும் கற்பித்தான் என்றற்கு 'கருணைக்கிணங்காத வன்மையையும் நான்முகன் கற்பிக்கவொருகடவுளோ - வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும் பெரு வழக்குக் கிழுக்குமுண்டோ' என்றார்.

4. என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
 விளகமன தழலின்மெழுகாய்
இடையறு தருகவரு மழைபோ லிரங்கியே
 இருவிழிக ணீரிறைப்ப
அன்பினான் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
 அமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை யுள்ளன்பி லாதவெனை
 ஆர்க்காக வடிமைகொண்டாய்
புன்புலால் மயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு
 புலைக்குடிலி லருவருப்புப்
பொய்யல்ல வேயிதனை மெய்யென்று நம்பியென்
 புந்திசெலு மோபாழிலே

துன்பமா யலையவோ வுலகநடை யையவொரு
சொப்பனத் தினும்வேண்டிலேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். என்பெலாம் நெக்கு உடைய - எலும்புகளெல்லாம் நெகிழ்ந்து உடையவும், ரோமம் சிலிர்ப்ப - உரோமஞ் சிலிர்க்கவும், உடல் இளக- உடம்பு குழையவும், மனது - மனமானது, இடையறாது - இடையறாமல், அழலின் மெழுகாய் உருக - அக்கினியிலிட்ட மெழுகுபோ லுருகவும், இரு விழிகள் - இரண்டு கண்களும், வரும் மழைபோல் இரங்கி நீர் இறைப்ப - வருகின்ற மழையைப்போல இரங்கி நீரைச்சொரியவும், அன்பினால் மூர்ச்சித்த அன்பருக்கு - அன்பினால் மூர்ச்சை யடைந்த அன்பர்களுக்கு, அங்ஙனே - அவ்விடத்தே, அமிர்த சஞ்சீவிபோல்வந்து - அமிர்தசஞ்சீவிமருந்து போல எழுந்தருளி, ஆநந்த மழை பொழிவை - இன்ப மழையைப் பொழிவாய், என்னை ஆர்க்காக அடிமைகொண்டாய் - என்னை யாவர்பொருட்டு அடிமை கொண்டனை, புன்புலால் மயிர் தோல் நரம்பு என்பு மொய்த்திடு - இழிவாகிய மாமிசம் ரோமம் தோல் நரம்பு எலும்பு ஆகிய இவைகள் நெருங்கியிருக்கிற, புலைக்குடிலில் - புலால்நாற்றம் பொருந்திய குடிசையில், அருவருப்பு - அருவருப்பேயுள்ளது, பொய்யல்லவே - இது பொய்யாகாதே, என் புந்தி - என் புத்தியானது, இதனை மெய்யென்று நம்பி - இதை மெய்யென்று நம்பி, பாழிலே செல்லுமோ - பாழ்வழியிற் செல்லுமோ, துன்பமாய் அலையவோ - (அப்படி செல்வதனால்) துன்பங் கொண்டு திரியவோ, ஐய - ஐயனே, உலகநடை - உலகநடையை, ஒருசொப்பனத்தினும் வேண்டிலேன் - ஒரு கனவினும் விரும்பேன், சுத்தநிர்க்குண—எ - று.

மனது உருக என இயையும். அமிர்த சஞ்சீவி - மரணத்தைப்போக்கி வாழ்விப்பதாகிய சாவா மருந்து. என்பு நெக்குடைதல் முதலிய குணங்களுள்ள அன்பர்கட்கு நீ இரங்குத லியற்கையே; அவை யொன்றுமில்லாத என்னை யாா்பொருட்டு அடிமைகொண்டாய் என்பதாம்.

5. வெந்நீர் பொருதெனுடல் காலின்முட் டைக்கவும்
வெடுக்கென் றசைத்தெடுத்தால்
விழியிமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்
வேறொன்றை யொருவர்சொல்லின்
அந்நேர மையோவென் முகம்வாடி நிற்பதுவும்
ஐயநின் னருளறியுமே
ஆனாலு மெத்தப் பயந்தவ னியானென்னை
யாண்டநீ கைவிடாதே

இந்நேர மென்றிலை யுடற்சுமைய தாகவும்
எடுத்தா லிறக்கவென்றே
எங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினும்
இறைஞ்சுசுக ராதியான
தொன்னீர்மை யாளர்க்கு மானிடம் வகுத்தவருள்
துணையென்று நம்புகின்றேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். என் உடல் - என்னுடம்பானது, வெந்நீர் பொறுது - வெந்நீரைப் பொறுக்கமாட்டாது, காலில் முள்தைக்கவும் - காலில் முள்ளானது தைத்துக்கொள்ளவும், வெடுக்கென்று அசைத்து எடுத்தால் - வெடுக்கென்றசைத்துப் பிடுங்கினுல், (அதற்குச் சகிக்காமல்) அங்ஙனே - அப்பொழுதே விழி இமைத்து - கண்ணிமைத்து, தண் அருளை நாடுவேன் - தண்ணிய திருவருளைச் சிந்திப்பேன், ஒருவர் வேறொன்றை கொல்லின் - ஒருவர் வேறொரு ஜீவனைக்கொன்ருல், அந்நேரம் - அப்பொழுது, ஐயோ-அந்தோ, என் முகம் வாடி நிற்பதுவும் - என் முகம் வாடி நான் நிற்கு நிலையையும், நின் அருள் அறியுமே - உன் திருவருளறியுமே, ஐய - ஐயனே, ஆனுலும் - ஆயினும், யான் மெத்தப் பயந்தவன் - நான் மிகப் பயந்தவன், (ஆதலால்) என்னை ஆண்ட நீ கைவிடாதே - என்னை யாட்கொண்ட நீ கைநெகிழ விடாதே, உடல் சுமை - உடற்பாரம், இந்நேரம் என்றில்லை - இன்ன காலத்தில் விழுமென்னும் நியதியில்லை, அது ஆகவும் - அது அங்ஙனமாகவும், எடுத்தால் இறக்க என்றே - உடலெடுத்தால் இறக்க என்றே, எங்கெங்கும் - எவ்விடத்தும், ஒரு தீர்வை ஆயம் உண்டு - ஒரு தீர்ப்பும் ஆயமும் உண்டு, ஆயினும் - ஆனுலும், இறைஞ்சு - வணங்காநின்ற, சுகர் ஆதி ஆன - சுகர் முதலான, தொல் நீர்மை யாளர்க்கு - பழமையாகிய குணவான்களுக்கு, மானுடம் வகுத்த அருள் - மநுஷ்ய சரீரத்தை வகுத்த திருவருளை, துணையென்று நம்புகின்றேன் - சஹாயமென்று நம்புகிறேன், சுத்தநிர்க்குணமான —எ - று.

தன்னை வருத்திடின் வருந்துவது உயிருக் கியற்கையாயிருக்க, இவர், 'வேறொன்றை யொருவர் கொல்லின் அந்நேர மையோ வென் முகம்வாடி நிற்பதுவும்' என்ருர். இது இவரது பேரருளுடைமையை விளக்காநின்றது. சுகர் முதலானோர்க்குத் தீர்க்காயுள் வகுத்ததுபோல் தமக்கும் வகுப்பித்துக் கொள்ளவேண்டி, சுகராதியான 'தொன்னீர்மையாளர்க்கு மானிடம் வகுத்த வருள் துணையென்று நம்புகின்றேன்' என்ருர்.

தீர்வை - தீர்மானம். ஆயம் - அத்தீர்மானத்தின்படி உடலைக்கொடுத்தலாகிய கடன்மை. தீர்வையாகிய ஆயம் என்றுரைப்பினு மமையும்.

**6.** பற்றுவன வற்றிடு நிராசையென் றொருபூமி
பற்றிப்பிடிக்கு மியோகப்
பாங்கிற் பிராணலய மென்னுமொரு பூமியிவை
பற்றின்மன மறுமென்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
கனிவிக்கவந்த கனிபோல்
கண்டதிந் நெறியெனத் திருவுளக் கனிவினொடு
கனிவாய் திறந்துமொன்றைப்
பெற்றவனு மல்லேன் பெருதவனு மல்லேன்
பெருக்கத் தவித்துளறியே
பெண்ணீர்மை யென்னவிரு கண்ணீ ரிறைத்துநான்
பேய்போ லிருக்கவுலகஞ்
சுற்றிநகை செய்யவே யுலைவிட் டாயெனிற்
சொல்லவினி வாயுமுண்டோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். பற்றுவன - ஐம்பொறிகளாற் பற்றப்படுகிற விடயங்கள் யாவும், அற்றிடும் - அற்றொழிகைக்குக் காரணமாகிய, நிராசை யென்று - அவாவின்மை யென்று சொல்லப்பட்டு, ஒரு பூமி - ஒரு பூமியுண்டு, பற்றிப் பிடிக்கும் - (பொறிகளை விடயங்களிற் செல்லாது தடைப்படுத்த மனம் வசப்படுதற்கு அதற்கு நட்பாகிய பிராணவாயுவைத்) தொடர்ந்து பிடித்து நிறுத்துகின்ற, யோகபாங்கின் - யோகாப்பியாசத்தாற் கைவருகின்ற, பிராணலயம் என்னும் - வாயு நிக்ரஹம் என்கிற, ஒரு பூமி - ஒரு பூமி யுண்டு, இவை பற்றின் - இவற்றை ஆதாரமாகப் பிடித்தால், மனம் அறும் என்ன - மன மிறக்குமென்று, கற்றை அம் சடை - திரட்சியாகிய அழகிய சடையை யுடைய, மௌனி - மௌனகுரு, தானே - தானாகவே, கனிந்தகனி - முதிர்ந்த காயை, கனிவிக்க - பழுப்பிக்க, வந்த கனிபோல் - உண்டாகிய பழம் போல, (ஸஜாதியனாகவந்து) கண்டது - கண்கூடாகக் கண்டது, இ நெறி என - இந்த மார்க்க மென்று, திருவுளக் கனிவினொடு - மனவிரக்கத்துடன், கனிவாய் திறந்தும் - கனிவாய் திறந்தாயினும், ஒன்றை - ஒரு மொழியை, பெற்றவனும் அல்லேன் - சொல்லப் பெற்றேனு மல்லேன், பெருதவனும் அல்லேன் - பெருதேனு மல்லேன், பெருக்கத் தவித்து உளறி - மிகவும் இளைத்தரற்றி, பெண் நீர்மை என்ன - பெண்மைக் குணம்போல, இரு கண்ணீர் இறைத்து - இரண்டு கண்களினின்றும் நீரைச் சிந்தி, நான் பேய்

போல் இருக்க - நான் பேய்போல அலங்கோலமாயிருக்க, (அந்த நிலையைக் கண்டு) உலகம் - உலகமானது, சுற்றி நகைசெய்ய - சூழ்ந்து நகை செய்யும் படி, உலைய விட்டாய் என்னில் - அலைய விட்டனையாயின், இனி சொல்ல வாயும் உண்டோ - இனிச் சொல்லுதற்கு (எனக்கு) வாயுமுளதோ, சுத்த நிர்க்குணமான—எ-று.

கனி - வாழைக்கனி. அது ஒரு குலையில் தன்னினமாய் முற்றி நின்ற காய்களைக் கனிவித்தற்கு ஒன்று முந்திக் கனிவதுபோல, மௌனகுருவான வர், தம்மினமாய்ப் பக்குவப்பட்டுநின்ற என்னை யளித்தற்கு மானிடச் சட்டைசாத்தி யெழுந்தருளினு ரென்பதாம். நிராசையும் வாயு நிரோதநமும் மன நாசத்துக்குக் காரணமென்று இதனுற் கூறப்பட்டது.

7. அரும்பொனே மணியே யென்ன்பே யென்ன்பான
அறிவேயெ னறிவி லூறும்
ஆநந்த வெள்ளமே யென்றென்று பாடினே
னுடினே னுடிநாடி
விரும்பியே கூவினே னுலறினே னலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு னுலுமுனை
யிடைவிட்டு நின்றதுண்டோ
என் றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியாவெறுந்
துரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். அரும்பொன்னே - அருமையாகிய சுவர்ணமே, மணியே - மாணிக்கமே, என் அன்பே - என் அன்புருவமே, என் அன்பு ஆன அறிவே - என் அன்பின் கண் உண்டான அறிவே, என் அறிவில் ஊறும் ஆனந்த வெள்ளமே - என் அறிவினிடத்துச் சுரக்கின்ற ஆனந்தப் பெருக்கே, என்று என்று பாடினேன் - என்று பலகாற் சொல்லிப் பாடினேன், ஆடினேன் - கூத்தாடினேன், நாடி நாடி - தேடித்தேடி, விரும்பி - அபேட்சித்து, கூவி னேன் - அழைத்தேன், உலறினேன் - (நீ வராமையால்) சினந்தேன், அலறி னேன் (அக்கோபம் மாறி) வாய்விட்டரற்றினேன், மெய் சிலிர்த்து - உடல் சிலிர்த்து, இருகை கூப்பி - இரண்டு கைகளைக் குவித்து, விண்மாரி யென - மேகத்தில் நின்றும் வீழ்கிற மழையைப்போல, என் இருகண்மாரி பொழிய-

என் இரண்டு கண்கள் வருஷத்தைப் பொழியாநிற்க, யான் வேசற்று அயர்ந்தேன் - நான் மனம் நொந்து வாடினேன், இரும்பு நேர் - இரும்புக்குச் சமானமான, நெஞ்சகம் - (கடின) மனத்தையுடைய, கள்வன் ஆனாலும் - சோரனாயினும், உனை இடைவிட்டு நின்றது உண்டோ - உன்னை மறந்திருந்தது உண்டோ, நீ என்று - நீ எப்பொழுது (இருந்தாய்), அன்று நான் - அன்று நானும் இருந்தேன், (ஆதலால் நான்) உன் அடிமை அல்லவோ - நான் உன் தொண்டன் அல்லவோ, யாதேனும் அறியா - யாதொரு நற்காரியத்தையும் அறியாத, வெறும் துரும்பனேன் என்னினும் - நிஷ்பிரயோசனமான துரும்பை ஒத்தவனாயினும், கைவிடுதல் - என்னைக் கைவிட்டு விடுதல், நீதியோ - உனக்கு நியாயமாமோ, தொண்டரொடு கூட்டு - உன்னடியாரோடு சேர்த்துவிடு, சுத்த நிர்க்குணமான—எ-று.

கிடைத்த லருமையும் இருமை யின்பம் பயத்தற்கீசிறப்பும் நோக்கி, அரும் பொன்னே என்றார். பொன்னுக்கும் மணிக்கும் பொருத்த முண்மையின் பொன்னே மணியே என அடுத்துக் கூறப்பட்டது. வஸ்துவைப் போல ஆன்மாவும் நித்தியம் என்பவாகையால், என்று நீ யன்று நான் உன்னடிமை யல்லவோ என்றார். பொன் இருமை யின்பம் பயக்குமென்பதை, "முனிவரு மன்னரு முன்னுவ பொன்னான் முடியும்" எனவும், பொன்னுக்கும் மணிக்கும் பொருத்த முண்மையை, "பொன்னிற வல்குலுக் காமோ மணி நிறப் பூந்தழையே" எனவுங் கூறிய திருவாதவூரடிகள் திருவாக்கானு முணர்க. ஈண்டுக் கூறிய பொன் முதலியன ஒன்றி னொன்றுயர் பொருள்கள். பிறிதின் கிழமைப் பொருளினும் தற்கிழமைப் பொருள் சிறந்தமையால், பொன்மணிகளாகிய பிறிதின் கிழமைப் பொருள்களை முற்கூறி அன்பு முதலிய தற்கிழமைப் பொருள்களைப் பிற்கூறினர். இரும்பினும் நெஞ்சு வலிதென்பது தோன்ற, இரும்பு என்பதை எழுவாயாகக்கொண்டுரைப்பினுமாம். அது "தெவ்வரை மெய்யெரி காய்சிலை யாண்டென்னை யாண்டுகொண்ட செவ்வரை மேனியன்" எனவும், "கல்லை மென்கனியாக்கும் விச்சைகொண் டென்னைநின் கழற்கன்ப னாக்கினாய்" எனவும் திருக்கோவையாரினும் திருவாசகத்தினும் கூறப்படுதலானு முணர்க. என்று நீ யன்று நான் என்பதனை "எஞ்ஞான் றனைநீ யஞ்ஞான் றியாமே" எனப் பிறருங் கூறுவதனானு மறிக.

**8.** பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற
பரவெளியி னுண்மை காட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிச்சிந்தை காட்டிச்
சதாகால நிஷ்டையெனவே

சகசநிலை காட்டினை சுகாதீத நிலயந்
 தனைக்காட்ட நாள்செல்லுமோ
காரார வெண்ணரு மனந்தகோ டிகணின்று
 காலூன்றி மழைபொழிதல்போற்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
 கம்மியா நந்தவெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
 தொண்டரைக் கூவுமுகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
 சோதியே சுகவாரியே.

இ - ள். பார் ஆதி அண்டங்கள் அத்தனையும் - நிலவுலகம் முதலாகிய அண்டங்கள் எல்லாவற்றையும், வைக்கின்ற - எழுதிவைத்தற்குரிய, பரவெளியின் உண்மைகாட்டி - பரமாகாயத்தின் உண்மையைக் காட்டி, பற்றும் - அதைத் தொடர்கின்ற, மனவெளிகாட்டி - மன ஆகாயத்தைக் காட்டி, மனவெளியினில் தோய்ந்த - மன ஆகாயத்தில் பதிந்த, பாவியேன் பரிசுகாட்டி - பாவியேனது தன்மையைக் காட்டி, தாராளமாய் நிற்க - தாராளமாய் நிலைத்திருக்க, நிச்சிந்தை காட்டி - மனம் இறத்தலையும் காட்டி, சதாகால நிஷ்டை என்ன - சதாகால நிஷ்டை யென்று, சகசநிலை காட்டினை - சகசநிலையையும் காட்டி யருளினாய், சுகாதீத நிலயம் தன்னைக் காட்ட-ஆனந்தாதீதமாகிய நிலையைக் காட்டுதற்கு, நாள் செல்லுமோ-காலஞ் செல்லுமோ, எண் அரும் - எண்ணுதற்கரிய, அனந்த கோடிகள் - முடிவற்ற கோடிகளாகிய, கார் - மேகங்கள், ஆர நின்று - நிறைந்து நின்று, கால் ஊன்றி மழைபொழிதல்போல்-காலூன்றி மழையைச் சொரிதல்போல, கால் வீசி - காற்று வீசி, மின்னி - மின்னுதல் செய்து, படர்ந்து - பரவி, பரவெளி எலாம் கம்மி - பரமாகாச மெங்கும் மூடிக்கொண்டு, ஆனந்த வெள்ளம் - ஆனந்தப் பெருக்கை, சோராது பொழியவே - இடையறாது பொழிதற்காக, கருணையின் முழங்கி - கருணையோடு சத்தித்து, தொண்டரை - அடியார்களை, கூவும் - அழைக்கின்ற, முகிலே - மேகமே, சுத்த நிர்க்குணமான—எ-று.

கால் வீசி என்பதற்குக் கால்களை விரித்து என்றலுமாம். 'பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற பரவெளி' என்றது "உலகமெனு மோவியங்க டிகழ்த்து மொருபடமாகி" என்றத்தைப் பற்ற. சுகாதீத நிலயம் - மேலான சுகமுதிக்கு மிடம்.

9. பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று
 பேசாது துறவாகியே
பேசாத பெரியோர்க ணிருவிகற் பத்தினாற்

பேசார்கள் பரமகுருவாய்ப்
போதிக்கு மூக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறிவிலே
போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவரையனே
சாதித்த சாதனமு மியோகியர்க ணமதென்று
சங்கிப்ப ராதலாலே
தன்னிலே தானு யயர்ந்துவிடு வோமெனத்
தனியிருந் திடினங்ஙனே
சோதிக்க மனமாயை தனையேவி னலடிமை
சுகமாவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். பேதித்த சமயமோ - ஒன்றற்கொன்று வேறுபட்ட சமய நூல்களோ, ஒன்றுசொன்னபடி ஒன்று பேசாது - ஒன்று சொன்னபடி ஒன்று சொல்லாது, (ஆகையால்) துறவாகி - துறவடைந்து, பேசாத பெரியோர்கள் - மௌநநிலையிலுள்ள மேலோர்கள், நிருவிகற்பத்தினுல் பேசார்கள் - நிருவிகற்ப சமாதி யநுபவத்தினுற் பேசாதமைந்திருப்பார்கள், போதிக்கும் மூக்கண் இறை - போதித்தற்குரிய மூன்று கண்களையுடைய இறைவன், பரம குரு ஆய் - பரமகுருவாகி வந்து, நேர்மை ஆ கைக்கொண்டு - செவ்வனே யென்னைத் தன் வயப்படுத்தி, அறிவில் போதிப்பது ஆச்சு - சின்முத்திரையாற் போதித்தற் குரியதாயிற்று, போக்கு வரவு அற - போதலும் வருதலு மில்லையாகவும், இன்பம் நீக்கம் அற - ஆனந்தம் இடையறு துண்டாகவும், எவர் - யாவர், வசனம் ஆ போதிப்பது - சொல்லாகப் போதித்தற் குரியதிது, ஐயனே - கடவுளே, சாதித்த சாதனமும் - அப்பியாசித்த அப்பியாசங்களையும், யோகியர்கள் - யோகப் பயிற்சியுள்ளோர், நமது என்று சங்கிப்பர் - (இச்சாதனம்) எம்மதென்று ஆக்ஷேபிப்பர்கள், ஆதலாலே - ஆகையாலே, தன்னிலே தானுய் அயர்ந்துவிடுவோம் என - தன்னிற் றானு யயர்ந் தடங்குவோமென்று, தனி இருந்திடின் - தனித்திருந்தால், அங்ஙனே - அவ்விடத்திலே, சோதிக்க - எனது மனநிலையைச் சோதனை செய்யும்பொருட்டு, மன மாயைதனை ஏவினல் - மனத்தின் கண் உண்டாவதாகிய மாயையை ஏவிவிட்டால், அடிமை - உன்னடிமையாகிய நான், சுகம் ஆவது - ஆனந்த ரூபமாவது, எப்படி - எவ்வாறு, சொலாய் - நீயே சொல்வாயாக, சுத்த நிர்க்குணமான—எ - று.

சமய நூல்களெல்லாம், எக்காலத்தும் ஒன்றற் கொன்று தவிரா விரோதமுடையன வாதலால் பேதித்தசமயம் எனவும், அங்ஙனமாக ஒன்று

சொன்னபடி மற்றொன்று சொல்லாதென்பது திண்ணமாதலால், ஒன்று சொன்னபடி ஒன்றுபேசாது எனவுங் கூறினர். "தவிராவிரோத சமயநூல்" என்றார் பிறரும். போக்குவரவு - சாதல் பிறப்புக்கள்.

**10.** அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
அலரிமண் டலநடுவிலோ
அனனடுவி லோவமிர்த மதிநடுவி லோவன்பர்
அகமுருகி மலர்கடூவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளியிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
கண்டசூ னியமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
தொழும்பனேற் குளவுபுகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இ - ள். அண்டமுடி தன்னிலோ - அண்டகடாகத்தின் முகட்டிலோ, பகிரண்ட மதனிலோ - வெளியண்டத்திலோ, அலரிமண்டல நடுவிலோ - சூரியமண்டலத்தின் நடுவிலோ, அனல் நடுவிலோ - அக்நிமண்டலத்தின் நடுவிலோ, அமிர்தமதி நடுவிலோ - அமிர்தத்தையுடைய சந்த்ரமண்டலத்தின் நடுவிலோ, அன்பர் - அன்பர்கள், அகம் உருகி - மனமுருகி, மலர்கள் தூவி - மலர்களைச்சொரிந்து, தெண்டமிட வரும் - நமஸ்கரிக்க வெழுந்தருளிய, மூர்த்தி நிலையிலோ - அர்ச்சை நிலையிலோ, திக்குத் திகந்தத்திலோ - திக்கினும் திக்கின்முடிவிலுமோ, வெளியிலோ - பரவெளியிலோ, திகழ் - விளங்காநின்ற, விந்து நாத நிலைதன்னிலோ - விந்து நாதங்களின் நிலையிலோ, வேதாந்த சித்தாந்த நிலைதன்னிலோ - வேதாந்த சித்தாந்த நிலைகளிலோ, கண்டபல பொருளிலோ - காணப்பட்ட பல பொருள்களிலோ, காணாத நிலையெனக்கண்ட - காணப்படாத நிலையெனத் துணியப்பட்ட, சூனிய மதனிலோ - பாழிலோ, காலம் ஒரு மூன்றிலோ - முக்காலத்திலோ, பிறவிநிலை தன்னிலோ - ஜன்ம நிலையிலோ, கருவி கரணங்கள் ஓய்ந்த - கருவி கரணங்கள் மெலிந்தொடுங்கப்பெற்ற, தொண்டர்களிடத்திலோ - அடியார்களிடத்திலோ, நீ வீற்றிருப்பது - நீ வீற்றிருந்தருள்வது, தொழும்பனேற்கு - உன் தொண்டனாகிய எனக்கு, உளவு புகலாய் - யதார்த்தத்தைச் சொல்வாயாக, சுத்தநிர்க்குணமான—எ - று.

மண்டலம் - அனலுக்கும் மதிக்கும் கூட்டியுரைக்கப்பட்டது. அர்ச்சை - கல் மரம் மண் முதலியவற்ருற்செய்யப்பட்ட விக்ரஹங்கள். அண்டமுடி முதலிய பலவிடங்களில் நீ வீற்றிருப்பது எவ்விடத்திலோ, அதனை நீயே யருளிச்செயல்வேண்டும்.

**11.** எந்தநாள் கருணைக் குரித்தாகு நாளென்வு
　　மென்னிதய மென்னைவாட்டுதே
ஏதென்று சொல்லுவேன் முன்னெடுபின் மலைவறவு
　　மிற்றைவரை யாதுபெற்றேன்
பந்தமா னதிலிட்ட மெழுகாகி யுள்ளம்
　　பதைத்துப் பதைத்துருகவோ
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
　　பலகாலு மூர்ச்சிப்பதோ
சிந்தையா னதுமறிமை யென்னறிவி லறிவான
　　தெய்வநீ யன்றியுளதோ
தேகநிலை யல்லவே யுடைகப்பல் கப்பலாய்த்
　　திரையாழி யூடுசெலுமோ
சொந்தமா யாண்டநீ யறியார்கள் போலவே
　　துன்பத்தி லாழ்த்தன்முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
　　சோதியே சுகவாரியே.

இ - ள். கருணைக்குரித்து ஆகும் நாள் - உன் கருணைக்கிலக்காதற்குரிய நாள், எந்த நாள் எனவும் - எந்த நாளோவெனவும், என் இதயம் என்னை வாட்டுதே - என் ஹ்ருதயமானது என்னை வாட்டாநின்றதே, ஏதென்று சொல்லுவேன் - யாதொன்று சொல்லமாட்டுவேன், முன்னொடு பின் மலைவு அறவும் - முன்னுக்கும் பின்னுக்கும் விரோதம் நேரிடாதிருக்கவும், இற்றைவரை யாது பெற்றேன் - இந்நாளளவும் எந்த நிலையை யடைந்தேன், பந்தமானதில் இட்ட - பந்தத்தில் வைத்த, மெழுகு ஆகி - மெழுகு போலுருகி, உள்ளம் பதைத்து பதைத்து உருகவோ - மனம் பதைத்துப் பதைத்துருகினுலோ, பரமசுகம் ஆவது - பேரானந்தமுண்டாவது, (அன்றி) பொறுப்பரிய துயரமாய் - பொறுத்தற்கரிய துன்ப முற்று, பலகாலு மூர்ச்சிப்பதோ - பலதரமும் மூர்ச்சித்துக் கிடப்பதோ (அந்தப் பரமசுகத்துக்கு ஹேது), சிந்தையானதும் அறிமை - என் கருத்தையுமறிவாய், என் அறிவில் அறிவான தெய்வம் - என்னறிவி லறிவாயிருக்கிற தெய்வம், நீ அன்றி உள்ளதோ - நீயல்லது வேறொன்றுண்டோ, தேகம் நிலை அல்லவே - சரீரம் ஸ்திரமல்லவே, உடை கப்பல் - உடைந்த கப்பலானது, கப்பல் ஆய் - நல்ல

கப்பலாகி, திரை - அலைகளையுடைய, ஆழி யூடு செலுமோ - கடலில் நடக்குமோ, சொந்தமாய் ஆண்ட நீ - சுதந்தரமாக வந்து என்னை யாண்டருளின நீ, அறியார்கள் போலவே - தெரியாதவர்கள்போலவே, துன்பத்தில் ஆழ்த்தல் முறையோ - துக்கசாகரத்தில் அமிழ்த்துதல் உனக்கு முறைமையாகுமோ, சுத்தநிர்க்குணமான—எ - று.

நெருப்பினும் பந்தம் உஷ்ணத்திற் சிறந்ததாகையால் 'பந்தமா னதிவிட்ட மெழுகாகி' என்றார். சர்வஜ்ஞனான நீ யிப்படி செய்தல் தகுதியன்றென்பார் 'அறியார்கள் போலவே துன்பத்தி லாழ்த்தல் முறையோ' என்றார்.

**12.** எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ
  லிருக்கவிலை யோமனமெனும்
இயானுமென் னட்பாம் பிராணனு மெமைச் சடம
  தென் றுனைச் சித்தென் றுமே
அந்நாளி லெவனோ பிரித்தா னதைக்கேட்ட
  வன் றுமுத லின் றுவரையும்
அநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
  யடர்ந்தரசு பண்ணியெங்கண்
முன்னாக நீயென்ன கோட்டைகொண் டாயென்று
  மூடமன மிகவுமேசு
மூண்டெரியு மனவிட்ட மெழுகா யுளங்கருகன்
  முறைமையோ பதிலுயிரஞ்
சொன்னாலு நின்னரு ளிரங்கவிலை யேயினிச்
  சுகம்வருவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
  சோதியே சுகவாரியே.

இ - ள். எந்நாளும் - எக்காலத்திலும், உடலிலே உயிர் ஆம் உனைப்போல் - உடம்பினுள் உயிராயிருக்கிற உன்னைப்போல, மனம் என்னும் யானும் - மனமென்கிற நானும், என் நட்பு ஆம் பிராணனும் - என் நண்பனாகிய ப்ராணனும், இருக்கவிலையோ - சரீரத்தி லிருக்கவில்லையோ, (அப்படியிருக்க) எம்மை சடமதென்று - எங்களைச் சடமென்றும், உன்னைச் சித்து என்றும் - உன்னைச் சித்தென்றும், அந்நாளில் எவனோ பிரித்தான் - அக்காலத்தில் எவனோ வகுத்துவைத்தான், அதைக்கேட்ட அன்று முதல் இன்றுவரையும் - அதைக் கேள்விப்பட்ட அன்று முதல் இன்றுவரைக்கும், அநியாயமாய் எமை அடக்கி - அநியாயமா யெங்களை யொடுக்கி, குறுக்கே அடர்ந்து அரசுபண்ணி - குறுக்கேவந்து நெருங்கி அரசாட்சிசெய்து, எம் கண் முன்னாக - எங்கள் கண்ணுக்கெதிரில், நீ என்ன கோட்டைகொண்

டாய் என்று - நீ எந்தக் கோட்டையைப் பிடித்தாயென்று, மூட மனம் மிகவும் ஏச - மூடமனமானது மிகவும் வைதலால், மூண்டு எரியும் அனல் இட்ட மெழுகு ஆய் - மூண்டெரியா நின்ற நெருப்பிலிட்ட மெழுகுபோல வுருகி, உள்ளம் கருகல் முறைமையோ - நான் உள்ளுக்குள்ளே புழுங்குதல் முறைமையாமோ, பதினாயிரம் சொன்னாலும் - பதினாயிரந்தரம் விண்ணப்பஞ் செய்துகொண்டாலும், நின் அருள் இரங்க இலையே - உன் திருவருளிரங்க விலேயே, இனி சுகம் வருவது எப்படி - இனி யெனக்கு இன்பமுண்டாவது எப்படி, சொல்லாய் - கூறாய், சுத்தநிர்க்குணமான—எ-று.

சித்து - அறிவு. மனமானது என்னை யெதிரிட்டுநின்று, ஓ ஆன்மாவே, எக்காலத்தும் உடலிலே உயிராயிருக்கின்ற உன்னைப் போல, மனம் என்கிற நானும் எனக்கு நட்பாகிய பிராணவாயுவும் இருக்கவில்லையோ? அப்படியிருக்க, முற்காலத்தில், எங்களைச் சடப்பொருள்களென்றும், உன்னைச் சித்துப் பொருளென்றும், எவனோ பிரித்துவிட்டான், அதைக்கேட்ட நீ, அன்றுமுதல் இன்றளவும் எங்களை யடக்கி யாண்டதனால், எந்தக் கோட்டையைக் கைப்பற்றினையென்று வையக் கேட்டுப் பொறாமல் நான் உள்ளே தானே புழுங்கிக்கொண்டிருத்தல் முறைமையாகுமோ என்று ஆன்மா கடவுளைப் பிரார்த்தித்ததாக இச்செய்யுள் கூறப்பட்டது. இங்கு உயிர் என்றது ஆன்மாவை.

---

## எங்குநிறைகின்றபொருள்.

**1.** அவனன்றி யோரணுவு மசையா தெனும்பெரிய
வாப்தர்மொழி யொன்றுகண்டால்
அறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்களார்
மௌனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்களெவிடம்
பொய்மெய் இதமகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். அவன் அன்றி - அந்தக் கடவு ளசைப்பித்தா லன்றி, ஓரணுவும் அசையாது என்னும் - ஓர் அணுவேனும் அசையாதென்று சொல்லுகிற, பெரிய ஆப்தர் மொழி ஒன்று கண்டால் - பெரியோர்களாகிய ஆப்தரது வாக்ய மொன்றன் சாரத்தை யாராய்ந்து பார்த்தால், அறிவு ஆவது ஏது - அறிவாவது ஏது, சில அறியாமை ஏது - சில அறியாமையாவது யாது, இவை - இவைகளை, அறிந்தார்கள் அறியார்கள் யார் - அறிந்தவரும் அறியாதவரும் யாவர், மௌனமொடு இருந்தது ஆர் - மௌனநிலையோ டிருந்தவர் யாவர், என்போல் - என்னைப்போல, உடம்பெலாம் வாய் ஆய் - சரீரமெல்லாம் வாயாகக் கொண்டு, பிதற்றுமவர் ஆர் - பிதற்றுவோர் யாவர், மனது எனவும் ஒரு மாயை எங்கேயிருந்து வரும் - மனமென்னும் ஒரு மாயையானது எவ்விடத்தினின்று உண்டாகும், வன்மையொடு இரக்கம் எங்கே - கடிநத்வத்துடன் ம்ருதுத்வ மெங்கே, புவனம் படைப்பது என் - லோகங்களைப் படைப்பதாவது யாது, கர்த்தவியம் எவ்விடம் - கர்த்தவ்யம் எவ்விடத்தினின் றுண்டாவது, பூதபேதங்கள் எவ்விடம் - பூதவேறுபாடுகள் எவ்விடத்தி லுண்டாவது, பொய் மெய் - அசத்யாசத்யங்களும், இதம் அகிதம் - அநுகூல ப்ரதிகூலங்களும், மேல் - மேலும், வரும்-உளவாகின்ற, நன்மைதீமையொடு-நன்மை தீமைகளுடன், பொறை பொறுமையும் எவ்விடம்- பொறுமை பொறுமைகளும் எவ்விடத்தி லுளவாவன, எவர் சிறியர் - எவர் சிறியார், எவர் பெரியர் - எவர் பெரியார், எவர் உறவர் - எவர் உறவினர், எவர் பகைஞர் - எவர் பகைவர், யாதும் உன்னை யன்றி உண்டோ - எல்லாம் உன்னை யன்றி யுண்டாகுமோ, இகபரம் இரண்டினிலும் - இம்மை மறுமை என்னும் இரண்டிடத்தும், உயிரினுக்கு உயிர் ஆகி - உயிர்க்குயிராகி, எங்கும் நிறைகின்ற பொருளே - எவ்விடத்தும் வியாபித்திருக்கின்ற வஸ்துவே—எ-று.

ஆப்தர் - கடவுளருட்குரியவர். கர்த்தவியம் - செய்கை. "உள்ளந் தானின் றுச்சியளவு நெஞ்சாய்" எனவும், "உடம்பெலாங் கண்ணாய்" எனவும் திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளினமையால், இவரும் 'உடம்பெலாம் வாயாய்' என்றார். உயிருக்குயிராகி என்றது ஆத்மாவுக் கந்தராத்மாவா யிருத்தலை. "அவனன்றி யோரணுவு மசையாது" என்று பெரியோர் வாக்கியம் உண்மையால் யாவும் அவன் செயலே என்பது கருத்து.

2\. அன்னே யனேயெனுஞ் சிலசமய நின்னையே
ஐயாவை யாவென்னவே
அலறிடுஞ் சிலசமய மல்லாது பேய்போல
வலறியே யொன்றுமிலவாய்ப்

பின்னேது மறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமயமேல்
பேசரிய வொளியென்றும் வெளியென்று நாதாதி
பிறவுமே நிலயமென்றும்
தன்னே ரிலாததோ ரணுவென்று மூவிதத்
தன்மையாங் காலமென்றும்
சாற்றிடுஞ் சிலசமய மிவையாகி வேறதாய்ச்
சதாஞான வாநந்தமாய்
என்னேயெ னேகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகலவெளிதோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். சில சமயம் - சில சமயங்கள், அன்னே அன்னே யென்னும்- தாயே தாயே என்னும், நின்னையே - உன்னையே, சில சமயம் - சில சமயங்கள், ஐயா ஐயா என்ன - தந்தையே தந்தையே என்று, அலறிடும் - அலறாநிற்கும், அல்லாது - அவ்வா றன்றி, சில சமயம் - சில சமயங்கள், பேய்போல அலறி - பிசாசம்போலக் கதறி, ஒன்றும் இலவாய் - சிறிதும் பயனற்றனவாய், பின் ஏதும் அறியாமல் - பின் விளைவதொன்றையு முணராமல், ஒன்றைவிட்டு ஒன்றைப் பிதற்றிடும் - ஒன்றைவிட்டு ஒன்றைப் பிதற்றாநிற்கும், சில சமயம் - சில சமயங்கள், மேல் - மேலும், பேசு அரிய ஒளி என்றும் - சொல்லுதற்கரிய வொளி யென்றும், வெளி என்றும் - ஆகாயமென்றும், நாதாதி பிறவுமே நிலயம் என்றும் - நாதம் முதலான பிறவற்றையே நிலைக ளென்றும், தன் நேர் இலாதது ஓர் அணு என்றும் - (நுட்பத்தால்) தனக்குச் சமானமில்லாததாகிய ஒரு அணுவென்றும், மூவித த் தன்மை ஆம் காலம் என்றும் - முக்கால மென்றும், சாற்றிடும் - சொல்லாநிற்கும், இவை ஆகி - இவைகளாகி, வேறது ஆய் - (இவற்றின்) வேறாகி, சதாஞான ஆனந்தமாய் - சதாஞான வின்பமாகி, கருணைவிளையாட்டு இருந்தவாறு - திருவருள் விளையாடல் இருந்தவண்ணம், என்னே என்னே - என்ன ஆச்சரியம் என்ன ஆச்சரியம், எம்மனோர் புகல எளிதோ - எம்மை யொத்தவர் சொல்ல எளிதாகுமோ, இகபர மிரண்டினிலும்—எ-று.

சமயகோடிகள் இவ்வாறு புலம்பாநிற்கும், உன் திருவருள் விளையாடல் இருந்தவண்ணம் எங்களையொத்தவர் சொல்ல எளிதாமோ என்பது கருத்து.

**3.** வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக வத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா யெடுத்துரைக்கும்

ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
 யுண்டுபண் ணுஞானமாகும்
ஊகமனு பவம்வசன மூன்றுக்கு மொவ்வுமீ
 துபயவா திகள்சம்மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போது
 மியாதொன்று பாவிக்கநான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி
 னத்துவித மார்க்கமுறலாம்
ஏதுபா வித்திடினு மதுவாகி வந்தருள்செ
 யெந்தைநீ குறையுமுண்டோ
இகபர மிரண்டினினு முயிரினுக் குயிராகி
 யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். வேதமுடன் - வேதங்களோடு, ஆகம புராணம் இதிகாச முதல் - ஆகம புராண இதிகாசம் முதலாக, வேறும் உள்ள கலைகள் எல்லாம் - மற்றுமுள்ள நூல்கள் யாவும், மிக்காக - மிகுதியாக, அத்துவித துவிதமார்க்கத்தையே - அத்வைத த்வைத மார்க்கங்களையே, விரிவு ஆ எடுத்து உரைக்கும் - விஸ்தாரமா யெடுத்துச் சொல்லா நிற்கும், ஓது அரிய - சொல்லற்கரிய, துவிதமே - த்வைதஞானமே, அத்துவிதஞானத்தை - அத்வைதஞானத்தை, உண்டுபண்ணும் ஞானம் ஆகும் - உண்டாக்குகின்ற ஞானமாகும், ஈது - இந்தவார்த்தை, ஊகம் - யுக்தி, அநுபவம் - சுவாநுபவம், வசனம் - சுருதி, (ஆகிய) மூன்றுக்கும் ஒவ்வும் - மூன்றற்கும் ஒத்திருக்கும், (அன்றியும்) உபயவாதிகள் சம்மதம் ஆதலின் - இருதிறத்தார்க்கும் சம்மதமாகையால், இனி எனக்கு - இனிமேல் எனக்கு, சரியை ஆதிகள் போதும் - சரியாபாத முதலியவைகளே யமையும், நான் யாதொன்று பாவிக்க - நான் யாதொரு பொருளைப் பாவிக்கவும், அது ஆதலால் - அப்பொருள் மயமே யாய்விடுதலால், உன்னை நான் என்று பாவிக்கின் - உன்னை நானென்று பாவனை பண்ணினுல், அத்துவிதமார்க்கம் உறலாம் - அத்துவித நெறியை யடையலாம், நீ - நீ, ஏது பாவித்திடினும் - எப்பொருளாகப் பாவித்தாலும், அது ஆகி வந்து - அப்பொருளாகி வந்து, அருள்செய் - அருள் செய்கின்ற, எந்தை - எந்தை யாதலால், குறையும் உண்டோ - உன்னை யடைந்த எனக்கு ஓர் குறைபாடு முளதோ, இகபர மிரண்டினிலும்—எ-று.

வேதம் - இருக்கு முதலியன. ஆகமம் - காமிகம் முதலியன. புராணம் - மச்சியம் முதலியன. இதிகாசம் - பாரதம், இராமாயணம் என்பன. வேறுமுள கலைகள் - ஸ்மிருதி முதலியன. ஊகம் அநுபவம் வசனம் இம்மூன்றும் சுருதி யுக்தி அநுபவம் என்றிருத்தல் வேண்டியது; இவ்விடத்தில் கிடக்கைமுறை பிறழ்ந்து கிடக்கின்றது. சுருதி குரு சுவாநுபவம்

என்றுஞ் சிலர் கூற லுண்டு. உபயவாதிகள் அத்துவித துவித நெறியாளர். சரியையாதிகள் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. "சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் சடத்தின் முயல்வாற் சடமாகும்" என மேலோர் பணித்தமைபற்றியும், அநுபவம் பற்றியும் யாதொன்று பாவிக்க நானது வாதலால் என்றார்.

4. சொல்லா னதிற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டியாட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப மொன்றில்
தொடுக்குந் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை யெனுஞ்சப்த பூமியிடை
போந்துதலை சுற்றியாடும்
புருஷனி லடங்காத பூவைபோற் றானே
புறம்போந்து சஞ்சரிக்கும்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடும்
காணாது கேட்டவெல்லாம்
கண்டதாக் காட்டியே யணுவாச் சுருக்கிடுங்
கபடநாடக சாலமோ
எல்லாமும் வலதிந்த மலமாயை யேழையா
மென்ன லடக்கவசமோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். சொல்லானதில்-சொல்லினால், சற்றும் வாராத பிள்ளையை - சிறிதும் இணங்கி வாராத குழந்தையை, (தாயானவள்) தொட்டில் வைத்து ஆட்டி ஆட்டி - தொட்டிலில் வைத்து அசைத்தசைத்து, தொடையினைக் கிள்ளல்போல்-தொடையைக் கிள்ளுதல்போல, ஒன்றில் சங்கற்பம் தொடுக்கும் - ஒன்றில் நினைப்பையுண்டாக்கும், தொடுத்து அழிக்கும் - உண்டாக்கி யழிக்கும், பொல்லாத வாதனை என்னும் - பொல்லாத வாசனை யென்று சொல்லப்படுகிற, சப்த பூமியிடை போந்து - அஞ்ஞான பூமிக ளேழனுள் வந்து, தலைசுற்றி ஆடும் - தலைசுழற்றி யாடாநிற்கும், புருஷனில் அடங்காத பூவைபோல் - கணவனிடத் தடங்கியிராத பெண்போல, தானே புறம் போந்து சஞ்சரிக்கும்-தானே வெளிவந்து சஞ்சரியாநிற்கும், கல்லோடு இரு ம்புக்கு மிக வன்மை காட்டிடும் - கல்லுக்கும் இரும்புக்கும் மிக்க வன்மை யைக் கற்பிக்கும், காணாது கேட்ட எல்லாம் - காணாமல் கேட்டவற்றை எல் லாம், கண்டதாகக்காட்டி-தான் கண்டதாகக் காட்டி, அணுவாச் சுருக்கிடும்- அணுவாகச் சுருக்கிவிடும், கபடநாடக சாலம் எல்லாமும் வல்லது - கபட நாடக ஜாலங்க ளெல்லா வற்றையும் செய்ய வல்லதாகிய, இந்த மலமாயை

யை - இந்த மனமாயையானது, ஏழை ஆம் என்றால் - எளியனாகிய என்னால், அடக்க-வென்றடக்க, வசமோ - வசமாகுமோ, இகபரமிரண்டினிலும் —எ - று.

அஞ்ஞான பூமிகளேழாவன:—வித்துசாக்கிரம், மேற்சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்பனம், சொப்பனம், சொப்பன சாக்கிரம், சுழுத்தி என்பன. பூவை உவமையாகுபெயர். இது மொழியாற் பூவை போல்வாளென்னும் பொருளுள்ளது. பூவை - நாகணவாய்ப்புள். கல் இரும்புகளுக்குக் கடினத்வம் இயற்கையாகவும், மிக வன்மைகாட்டிடும் என்றார், அவற்றினும் வலியதென்றற்கு. மனமாயையானது ஒன்றைப் பற்றுதல் விடுதல் முதலிய எல்லாவற்றையுஞ் செய்ய வல்லதென்பதாம்.

5. கண்ணார நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
 கள்ளனே னானுமோ
 கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
 கண்பனித் தாரைகாட்டி
 அண்ணா பரஞ்சோதி யப்பா வுனக்கடிமை
 யானெனவு மேலெழுந்த
 அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
 யகிலமுஞ் சிறிதறியுமேல்
 தண்ணாரு நின்னதரு ளறியாத தல்லவே
 சற்றேனு மினிதிரங்கிச்
 சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
 சகசநிலை தந்துவேறொன்
 றெண்ணாம லுள்ளபடி சுகமா யிருக்கவே
 யேழையேற் கருள்செய்கண்டாய்
 இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
 யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். கண் ஆர நீர் மல்கி - கண்கள் நிறைய நீர் ததும்பி, உள்ளம் நெக்கு உருகாத - மனநெகிழ்ந் துருகாத, கள்ளனேன் ஆனாலும் - திருடனானாலும், கை குவித்து - கைகூப்பி, ஆடியும் பாடியும் - ஆடுதல் பாடுதல்களைச்செய்தும், விடாமல் - இடையறாமல், கண் பனித் தாரை காட்டி - கண்களில் குளிர்ச்சியாகிய நீரொழுக்கை யுண்டாக்கி, அண்ணா - அண்ணா, பரஞ்சோதி - பரஞ்சோதி, அப்பா - அப்பனே, யான் உனக்கு அடிமையெனவும் - நான் உனக்கு அடிமை யென்றும், மேல் எழுந்த அன்பாகி - அதிகப்பட்ட அன்பையுடையவனாகி, நாடகம் நடித்ததோ குறைவு இல்லை - கூத்தாடினதோ குறைவில்லை, (அதனை) அகிலமும் சிறிது அறியும் ஏல் - உலகமுஞ் சற்று அறியும் ஆயின், தண் ஆரும் நின்னது அருள் அறியாதது

அல்லவே - குளிர்ச்சி பொருந்திய உன் திருவருள் உணராததல்லவே, சற்றேனும் - கொஞ்சமாயினும், இனிது இரங்கி - இனிதாயிரங்கி, சாசுவத முத்தி நிலை ஈது என்று உணர்த்தி - அழியாத முத்தி நிலை யிது வென்று தெரிவித்து, சகசநிலை தந்து - சகச நிலையைக் கொடுத்து, வேறு ஒன்று எண்ணாமல் - வேறொன்றை நினையாமல், உள்ளபடி - யதார்த்தமாய், சுகமாய் இருக்க - ஆனந்தமாயிருக்கும் வகை, ஏழையேற்கு அருள்செய் - ஏழையாகிய அடியேனுக் கருள் புரிவாய், இகபரமிரண்டினிலும்—எ-று.

யதார்த்தமாகக் கண்ணார நீர்மல்கி உள்ளம் நெக்கு உருகா விடினும் புறத்துக்காயினும் கைகுவித்தாடல் பாடல் முதலியவை செய்தே னன்றே; அதற்காக வாயினும் சுகமாயிருக்க அருள்செய்ய வேண்டுமென்றாராயிற்று. ஏழையாதலால் யதார்த்தமான அன்பு செய்தில னென்பது பொருள். ஏழை-அறிவிலி.

6. காகமா னவைகோடி கூடிநின் றாலுமொரு
கல்லின்முன் னெதிர்நிற்குமோ
கர்மமா னவைகோடி முன்னேசெய் தாலுநின்
கருணைப்ர வாகவருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவோ
தமியனேற் கருட்டாகமோ
சற்றுமிலை யென்பதுவும் வெளியாச்சு வினையெலாம்
சங்கேத மாய்க்கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
சேராம வியோகமார்க்க
சித்தியோ வரவில்லை சகசநிஷ் டைக்குமென்
சிந்தைக்கும் வெகுதூரநான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்நா
ளிந்நாளின் முற்றுறாதோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

இ-ள். கோடி காகமானவை கூடி நின்றாலும் - கோடி காகங்கள் சேர்ந்து திரண்டாலும், ஒரு கல்லின்முன் எதிர் நிற்குமோ - ஒரு கல்லுக்கு முன்னே எதிர்த்து நிற்க வல்லவை யாமோ, (ஆகா, அதுபோல) முன்னே கோடி கர்மம் ஆனவை செய்தாலும் - பூர்வத்தில் கோடி தீவினைகளைச் செய்திருந்தாலும், (அவை) நின் கருணை ப்ரவாக அருளை - உன் கிருபா வெள்ள ரூபமான திருவருளை, தாகமாய் நாடினரை - மோக்ஷ தாஹத்தோடு விரும்பினவர்களை, வாதிக்க வல்லவோ - வருத்த வல்லனவோ, தமியனேற்கு - தனியேனுக்கு, அருள் தாகம் - அருள்மேல் விருப்பம், சற்றும் இல்லை என்

பதுவும் - சிறிதுமில்லை யென்னுஞ் செய்தியும், வெளி ஆச்சு - வெளியாய் விட்டது, வினை எல்லாம் சங்கேதமாய் கூடி - வினைகளெல்லாம் கட்டுப் பாடாகத் திரண்டுவந்து, தேகமானதை மிகவும் வாட்டுதே - சரீரத்தை மிக வும் வருத்துகின்றதே, துன்பங்கள் சேராமல் - துக்கங்கள் வந்து பொருந் தாமல், யோக மார்க்க சித்தியோ வரவில்லை - யோகநெறிச் சித்தியோ கை கூடவில்லை, சகச நிஷ்டைக்கும் என் சிந்தைக்கும் வெகுதூரம் - சகச நிஷ்டைக்கும் என் மனத்துக்கும் நெடுந்தூரம், நான் - அடியேன், நின் னோடு ஏகமாய் இருக்கும் நாள் - உன்னோடு கூடிக்கலந்திருக்கு நாள், எந்த நாள் - எந்தக்காலமோ, (அது) இந்நாளில் முற்றுறாதோ - இந்தக் காலத்தில் முடிவு பெறாதோ - இகபர மிரண்டினிலும்—எ-று.

தாகம் - மிகுவிருப்பம். சங்கேதம் - குழூக்குறி. துன்பங்கள் சேராமல் யோகமார்க்க சித்தியோ வரவில்லை யென்றதனால், துன்பங்க ளணுகாமை க்குக் காரணம் யோகமார்க்க சித்தி யென்றதாயிற்று. சகசநிஷ்டை - சதா நிஷ்டை. நின்னோடேகமாயிருக்குநாள் என்பதனை 'நானு நீயுமாய் நீயு நானு மாய்' என்பதனானுமறிக.

7\. ஒருமைமன தாகியே யல்லலற நின்னருளி
   லொருவனான் வந்திருக்கின்
உலகம் பொறாததோ மாயா விசித்ரமென
   வோயுமோ விடமில்லையோ
அருளுடைய நின்னன்பர் சங்கைசெய் திடுவரோ
   வலதுகிர்த் தியகர்த்தராய்
அகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சில
   ரடாதென்ப ரோவகன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள்
   பேய்க்கோல மாய்விதண்டை
பேசுமோ வலதுதான் பரிபாக காலம்
   பிறக்கவிலை யோதொல்லையாம்
இருமைசெறி சடவினை யெதிர்த்துவாய் பேசுமோ
   வேதுளவு சிறிதுபுகலாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக்குயிராகி
   யெங்குநிறை கின்றபொருளே.

இ-ள். நான் ஒருவன் - நானொருவனும், அல்லல் அற - துன்பமொழி யும்படி, ஒருமை மனது ஆகி - ஒருமைப்பட்ட மனமுடையவனாய், நின் அருளில் வந்திருக்கின் - உன் திருவருள் வெளிக்குள் வந்திருந்தால், (அவ் விருத்தல்) உலகம் பொறாததோ - உயர்ந்தோராற் பொறுக்கப் படாததோ, மாயாவிசித்ரம் - மாயா விசித்ரமானது, என்ன் ஓயுமோ - என்ன ஒய்ந்து

போமோ, இடம் இல்லையோ - (அதற்கு என்னையன்றி) வேறு இடமில்லையோ, அருள் உடைய நின் அன்பர் - உன் திருவருள் பெற்ற உன் அன்பர்கள், சங்கை செய்திடுவரோ - ஆக்ஷேபிப்பரோ, அலது - அன்றி, கிர்த்திய கர்த்தராய் - முத்தொழிற் கிறைவராகி, அகிலம் படைத்து - உலகத்தைப் படைத்து, எம்மை ஆள்கின்றபேர் சிலர் - எம்மைக் காப்பவராகிய சிலபேர், அடாது என்பரோ - தகாதென்பார்களோ, அகன்ற பெருமை பெறு பூரணம் குறையுமோ - விசாலித்த பெருமையைக் கொண்ட உன் பரிபூரணநிலையானது குறைந்துபோமோ, பூதங்கள் பேய் கோலம் ஆய் - பூதங்கள் பேய் வடிவுகொண்டு, விதண்டை பேசுமோ - விதண்டாவாதம் பேசுமோ, அலதுதான் பரிபாககாலம் பிறக்க இல்லையோ - அன்றிப் பரிபக்குவ காலமானது எனக்கு உண்டாகவில்லையோ, தொல்லை ஆம் - பழமையாகிய, இருமை செறி - இரண்டென்னு மிலக்கத்தைப் பொருந்திய, சட வினை - அறிவில்லாத இருவினைகள், எதிர்த்து வாய் பேசுமோ - எதிரிட்டு வாய் பேசாநிற்குமோ, உளவு எது - யதார்த்த மேது, சிறிது புகலாய் - சற்றுக் கூறுவாய், இகபர மிரண்டினிலும்—எ - று.

கிர்த்திய கர்த்தர் - பிரமாதிகள். விதண்டை - தர்க்க பேதத்துள் ஒன்று. அது, தருக்க சங்கிரகத்தில் "வாதசெற்ப விதண்டைகளும், சலம் சாதிகளும்" என்னும் மொழித்தொடராலுணர்க. என்னை உன் திருவருளுக் கிலக்காக்கினல், அபக்குவியாகிய என்னிலையைப்பற்றி உன்னன்பர் முதலாயினோர் ஆக்ஷேபிப்பார்களோ, யாதுக்கு நீ யென்னை யாண்டருளாதிருக்கின்றனை யென்பது கருத்து.

**8.** நில்லாது தேகமெனு நினைவுண்டு தேகநிலை
நின்றிடவு மௌனியாகி
நேரே யுபாயமொன் றருளினையை யோவிதனை
நின்றனுட் டிக்கவென்றால்
கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக்
காணவிலை யாகையாலே
கையேற்று ணும்புசிப் பொவ்வாதெ நாளுமுன்
காட்சியி லிருந்துகொண்டு
வல்லாள ராயியம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல்செய்து
மனதின் படிக்கெலாஞ் சித்திபெறலா ஞானம்
வாய்க்குமொரு மனுவெனக்கிங்

கில்லாமை யொன்றினையு மில்லாமை யாக்கவே
 யிப்போ திரங்குகண்டாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
 யெங்குநிறை கின்றபொருளே.

இ-ள். தேகம் நில்லாது என்னும் நினைவு உண்டு - சரீரம் நிலைத் திராது என்கிற எண்ண முண்டு, தேகம் நிலை நின்றிடவும் - (அப்படிப் பட்ட) சரீரம் நிலைத்திருக்கும்படியாகவும், மௌனி ஆகி - மௌனகுரு வாகிவந்து, நேர் உபாயம் ஒன்று அருளினை - நேரான உபாய மொன்றை யருள்செய்தாய், ஐயோ - அந்தோ, இதனை - இவ்வுபாயத்தை, நின்று அநுட்டிக்க என்றால் - நிலை நின்று அநுஷ்டிக்கலாமென்றால், கல்லாத மனமோ ஒடுங்கி உபரதி பெறக் காண வில்லை - கல்வி கல்லாத மனமோ ஒடுங்கி உபரதியை யடையப்பார்க்கவில்லை, ஆகையாலே - ஆதலாலே, கை யேற்று உண்ணும் புசிப்பு ஒவ்வாது - கையாலேற் றுண்ணு முணவு ஒத் திராது, எந்நாளும் - எக்காலத்திலும், உன் காட்சியில் இருந்துகொண்டு - உன் சந்நிதியி லிருந்துகொண்டு, வல்லாளராய் - மநோதைரிய முள்ளவர்க ளாய், இயமநியமாதிமேற்கொண்ட - இயம நியமமாதிகளைச் செய்யத்தொட ங்கின, மாதவர்க்கு - பெரிய தவசிகட்கு, ஏவல் செய்து - பணிவிடை செய்து, மனதின் படிக்கு எல்லாம் - எண்ணத்தின்படிக்கெல்லாம், சித்தி பெறலாம் - சித்தியை யடையலாம், ஞானம் வாய்க்கும் - ஞானமும் உண் டாகும், (ஆனால்) ஒரு மனு - ஒரு விண்ணப்ப முண்டு, (கேட்டருளவேண் டும், என்னெனின்) எனக்கு - அடியேனுக்கு, இங்கு - இவ்விடத்தில், இல்லாமை ஒன்றினையும் - உன் திருவருள் பெறாமையாகிய வறுமையொன் றைமாத்திரம், இல்லாமை ஆக்க - வறுமை யாக்குதற்காக, இப்போது இர ங்கு - இப்பொழுது இரங்கி யருளவேண்டும், இகபரமிரண்டினிலும்—எ-று.

உபரதி-பிரபஞ்சத்தில் வெறுப்பு. இயமநியமமாதிகள்-இயமம், நியமம், ஆதநம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம்,சமாதிஎன்னும் எண்வகை யோக வுறுப்புகள். இவற்றின் விரிவெல்லாம் யோக நூல்களிற் காண்க. 'ஞானம் வாய்க்கும் ஒருமனு எனக்கு இங்கு இல்லாமை ஒன்றினை யும் இல்லாமை ஆக்க' என்பதற்கு, ஞானமுதித்தற்கேதுவாகிய ஒருமொழி கிடைக்கப்பெறாமையாகிய வறுமையைப் போக்குக என உரைக்கினுமாம்.

9. மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்துமுதிர்
 வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்துமன லெவயிலாதி மழையால்
 வருந்தியும் மூலவனலைச்
சிரமௗ வெழுப்பியு நீரினிடை மூழ்கியுந்
 தேகநம தல்லவென்று

சிற்சுக வபேக்ஷையாய் நின்னன்பர் யோகஞ்
செலுத்தின ரியாம்பாவியேம்
விரவுமறு சுவையினொடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ வெலாமுடுத்து
மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே
வேறொரு வருத்தமின்றி
இரவுபக லேழையர்கள் சையோக மாயினோ
மெப்படி பிழைப்பதுரையாய்
இகபர மிரண்டினினு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். மரவுரி உடுத்தும் - மரநார்ச் சீலையை யுடுத்தும், மலைவன நெல் கொறித்தும் - மலை நெல்லையும் வன நெல்லையுங் கொறித்தும், உதிர் வனசருகுவாயில் வந்தால் - உதிர்வனவாகிய சருகுகள் தாமிருக்கும் இடத்தின் முற்றத்தில் வந்து விழுந்தால், (அவற்றையுண்டு) வன் பசி தவிர்த்தும் - மிக்க பசியை நீக்கியும், அனல் வெயிலாதியால் - அக்கினி வெயில்முதலானவைகளாலும், மழையால் - மழையாலும், வருந்தியும் - துன்பப்பட்டும், மூல அனலை - மூலாதாரத்திலுள்ள மூலாக்கினியை, சிரமளவு எழுப்பியும் - சிரத்தளவாக எழுப்பியும், நீரினிடை மூழ்கியும் - புண்ணிய தீர்த்த ஸ்நாநம் பண்ணியும், தேகம் நமது அல்ல என்று - சரீரம் நமதன்றென்று நிச்சயித்து, சிற்சுக அபேக்ஷையாய் - ஞான சுகத்தை யடைய விருப்பமுடையவராய், நின் அன்பர் - உன் அன்பர், யோகம் செலுத்தினர் - யோகத்தை நடத்திவந்தார்கள், யாம் பாவியேம் - பாவிகளாகிய நாங்கள், விரவும் அறுசுவையினொடு - கலந்த ஆறு சுவைகளுடன், வேண்டுவ புசித்து - வேண்டு முணவுகளையுண்டு, அரையில் - இடையில், வேண்டுவ எல்லாம் உடுத்து - வேண்டும் ஆடைகளெல்லாவற்றையும் தரித்து, மேடை மாளிகை ஆதி - மேடைமாளிகை முதலியவாகச் சொல்லப்பட்ட, வீட்டினிடை வைகி - வீடுகளில் தங்கி, வேறு ஒருவருத்தம் இன்றி - வேறொரு துன்பமில்லாமல், இரவுபகல் - இரவும் பகலும், ஏழையர்கள் - மாதர்களுடைய, சையோகம் ஆயினோம் - கலவி செய்யா நின்றோம், எப்படி பிழைப்பது - எப்படி உய்வது, உரையாய் - சொல்வாய், இகபரமிரண்டினிலும்—எ - று.

மரவுரி - நாரினாற் செய்த சீரை. கொறித்தல் - நெல் முதலியவற்றை ஒவ்வொன்றாகப் பல்லினாற் கறித்தல். அறுசுவை - கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பன. உன்னடியார்கள் ஞானானந்தமாகிய பேரின்பத்தையடைய விரும்பி மரவுரியுடுத்தல் முதலிய துன்பச் செய்கைகளைச் செய்து உய்ந்தார்கள்; மாதரது சிற்றின்பத்தை விரும்பி

வேண்டுமுணவுகளை யுண்டும், வேண்டும் வஸ்திராதிகளைத் தரித்தும் சிறி தேனும் வருந்தாதிருக்கிறோம்; நாங்கள் எப்படி உய்வோமென்பது கருத்து.

**10.** முத்தனைய மூரலும் பவளவா யின்சொலு
முகத்திலகு பசுமஞ்சளும்
மூர்ச்சிக்க விரகசந் தனமேற்ற விருகும்ப
முலையின்மணி மாலைநால
வைத்தெமை மயக்கியிரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக
வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னாட்டும் வந்ததென்றால்
போராட்ட மல்லவோ பேரின்ப முத்தியிப்
பூமியி லிருந்துகாண
எத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி
யிவ்வுலக மறியாததோ
இகபர மிரண்டினு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். முத்து அனைய மூரலும் - முத்தையொத்த பற்களும், பவள வாய் இன்சொல்லும் - பவளத்தையொத்த வாயிலுள்ள இனிய சொற்க ளும், முகத்து இலகு பசுமஞ்சளும் - முகத்தில் விளங்குகின்ற பசிய மஞ்ச ளும், மூர்ச்சிக்க - மூர்ச்சிக்கும்படி, விரகசந்தனம் ஏற்ற - விரஹ சந்தனத்தை யெழுப்ப, இருகும்ப முலையில் - இரண்டு குடங்களை யொத்த ஸ்தனங் களின்மேல், மணிமாலை நால - ரத்ந ஆரங்கள் தொங்க, வைத்து - எங்களை சடப்பொருள்போ லிருக்கும்படி ஸ்வாதீனமாக்கி, எம்மை மயக்கி - எங்களை மயங்கப்பண்ணி, இருகண் வலையை வீசி - இரண்டு கண்களாகிய வலையை யெறிந்து, மாயா விலாச மோக வாரிதியில் ஆழ்த்திடும் - மாயையின் விளை யாட்டாகிய மோக சமுத்திரத்தில் அழுந்தப்பண்ணுகிற, பாழ் ஆன - பாழா கிய, சிறு இடை மடந்தையர்கள் - சிற்றிடையையுடைய மாதர்களது, சிற் றின்பமோ - சிற்றின்பமென்றாலோ, புத்தமிர்த போகம் புசித்து - புதிய அமிர்தத்தை உண்ணுதலாகிய அநுபவத்தை யநுபவித்து, விழி இமையாத - கண்ணிமைக்காத, பொன்னாட்டும் வந்தது என்றால் - பொன்னுலகத்தினும் வந்தானால், போராட்ட மல்லவோ - போராட்டமாய் முடியு மல்லவா, பேரின்பமுத்தி - பேரானந்தத்தைத் தருகின்ற மோக்ஷத்தை, இப்பூமியில் இருந்துகாண - இவ்வுலகிலிருந்துகொண்டே அடைவதற்கு, எத்தனை விகா தம் வரும் என்று - எத்தனை தடைகளுண்டாகுமென்று, சுகர்சென்றநெறி -

சுகமுனிவர் போனமார்க்கம், இவ்வுலகம் அறியாததோ - இவ்வுலகத்தாரால் அறியப்படாததோ, இகபரமிரண்டினிலும்—எ-று.

சந்நதம் - ஆவேசம். கண்களை வலையாகக் கூறுதல் ஆடவரை யகப் படுத்துந் திறத்தில் வலைபோன் றிருத்தலால் ஒக்கும். அது "காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து வீசினபோது" என்னுந் திருக்கோவையார் திருப்பாட்டானு முணர்க.

சுகமுனிவர் மாதர் சிற்றின்பம் முத்திக்குத் தடையாகப் பொன்னுட் டினும் வந்து வருத்துவதா யிருத்தலால், நான் இவ்வுலகத்தி லிருந்துகொ ண்டு அதனை வென்று முத்தியடைத லருமையாகுமென்று நிச்சயித்து, பிற ந்தவுடனே துறந்துசென்று நிடதமலைமே லேறின செய்தியை இவ்வுலகத் தார் அறியார்களோ? ஆதலால் நாமும் அவ்வாறு துறந்து சென்றாலொழிய முத்தியை யடையமாட்டோ மென்பது கருத்து.

**11.** உன்னிலையு மென்னிலையு மொருநிலை யெனக்கிடந்
துளறிடு மவத்தை யாகி
உருவுதான் காட்டாத வாணவமு மொளிகண்
டொளிக்கின்ற விருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்கவிரு வினையினாற்
றாவுசுக துக்கவேலை
தட்டழிய முற்றுமில் லாமாயை யதனாற்
றடித்தகில பேதமான
முன்னிலை யொழிந்திட வகண்டிதா காரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பினொடு கீழ்மே னடுப்பக்க மென்னுமன்
முற்றுமா னந்தநிறைவே
என்னிலைமை யாய்நிற்க வியல்புகூ ரருள்வடிவ
மெந்நாளும் வாழிவாழி
இகபர மிரண்டினினு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

இ - ள். உன் நிலையும் என் நிலையும் - உனது நிலையும் எனது நிலையும், ஒரு நிலையெனக்கிடந்து உளறிடும் அவத்தையாகி - ஒரே நிலையென்று கொண்டு உளறிடும்படியான அவஸ்தையை யடைந்து, உருவுதான் காட் டாத ஆணவமும் - தன் வடிவைப் புலப்படுத்தாத அகங்காரமும், ஒளி கண்டு ஒளிக் கின்ற இருள் என்ன - ஒளியைப்பார்த்து மறைகின்ற இருளை ப்போல, தன்னிலைமை காட்டாது ஒருங்க - தனது நிலைமையைப் புலப்படு த்தாமல் அடங்க, இருவினையினால் - இருவினைகளாகிய (அலைகளோடு), தாவு - தாவுகின்ற, சுக துக்க வேலை - சுக துக்கங்களாகிய சமுத்திரங்கள்,

தட்டு அழிய - தடமொழ, முற்றும் இல்லா மாயையதனால் - முழுதுமில்லா மையாகிய மாயையினால், தடித்து - உருக்கொண்டு, அகில பேதமான - அனேக வேறுபாடாகிய, முன்னிலை ஒழிந்திட - முன்னிலைச் சுட்டொழிய, அகண்டிதாகாரமாய் - பிரிக்கப்படாத வடிவையுடையதாய், மூதறிவு-பேரறிவானது, மேல் உதிப்ப - மேலுமேலு முண்டாக, முன்பின்னொடு - முன் பின்னோடு, கீழ்மேல் நடுப்பக்கம் என்னமல் - கீழ் மேல் நடுப் பக்கம் என்று சொல்லாதவகை, முற்றும் - முடிவு பெறுகின்ற, ஆநந்த நிறைவே - இன்ப நிறைவே, என் நிலைமையாய் நிற்க - எனது நிலைமையாகக்கொண்டு அதில் நிலைத்துநிற்கும்படி, இயல்பு கூர் - எனக்கு நல்லியல்பருளிய, அருள் வடிவம் - அருளுருவமானது, எந்நாளும் வாழி வாழி - எக்காலத்தும் வாழக்கடவது வாழக்கடவது, இகபர மிரண்டினிலும்—எ-று.

மாயையை முற்றும் விசாரிக்குமிடத்தில் பொய்யாய்ப் போதலால் முற்றுமில்லா மாயையென்றார். அருள்வடிவம் என்றது குருமூர்த்தத்தை. இறைவனாகிய உனது நிலையையும் அடிமையாகிய எனது நிலையையும் அறியாது ஒரு நிலையென்று உளறச்செய்கின்ற ஆணவமும் தன்னுருக் காட்டாது ஒடுங்கவும், முற்றும் பொய்யாகிய மாயை காரணமாக வுண்டான உலக வேறுபாடுகளாகிய முன்னிலை யொழியவும், அகண்டா காரமாய்ப் பேரறிவுதோன்ற அதனால் பேரானந்தமே எனது நிலைமையாகக்கொண்டு அதில் நிலைத்துநிற்கும்படி எனக்கு நல்லியற்கை யருளிய குருமூர்த்தமானது எக்காலத்தும் வாழக்கடவது என்பது கருத்து.

---

## சச்சிதாநந்தசிவம்.

1. பாராதி ககனப் பரப்புமுண் டோவென்று
   படர்வெளிய தாகியெழுநாப்
   பரிதிமதி காணுச் சுயஞ்சோதி யாயண்ட
   பகிரண்ட வுயிரெவைக்கும்
   நேராக வறிவா யகண்டமா யேகமாய்
   நித்தமாய் நிர்த்தொந்தமாய்
   நிர்க்குண விலாசமாய் வாக்குமன மணுகாத
   நிர்மலா னந்தமயமாய்ப்
   பேராது நிற்றிநீ சும்மா விருந்துதான்
   பேரின்ப மெய்திடாமல்
   பேய்மனதை யண்டியே தாயிலாப் பிள்ளைபோற்
   பித்தாக வோமனதைநான்

சாராத படியறிவி னிருவிகற் பாங்கமாஞ்
சாசுவத நிஷ்டையருளாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

இ-ள். பார் ஆதி - பிருதிவி முதலான, ககனப்பரப்பும் - ஆகாயப் பரப்பும், உண்டோவென்று - உளதோவென்று (சொல்லும்படி), படர் வெளியதாகி - வியாபிக்கின்ற பரமாகாசமாகி, எழுநா - அக்கியும், பரிதி - சூரியனும், மதி - சந்திரனும், காணு - காணக்கூடாத, சுயஞ்சோதியாய் - சுயம்பிரகாசமாகி, அகண்ட பகிரண்ட உயிர் எவைக்கும் - அண்ட பகிரண்டங்களி லுள்ள வுயிர்களெல்லாவற்றுக்கும், நேராக அறிவாய் - செவ்வையாக அறிவுருவாய், அகண்டமாய் - கண்டிக்கப்படாததாய், ஏகமாய் - ஒன்றாகி, நித்தமாய் - அழிவற்றதாய், நிர்த்தொந்தமாய் - தொடர்பற்றதாய், நிர்க்குண விலாசமாய் - குணங்கடந்த லீலையாகி, வாக்குமனம் அணுகாத - வாக்கு மனங்கள் பொருந்தாத, நிர்மலாநந்த மயமாய் - நிர்மல சுகரூபமாகி, நீ பேராது நிற்றி - நீ அசையாது நிற்கிறாய், சும்மா இருந்து பேரின்பம் எய்திடாமல் - சும்மா இருந்து பேராநந்தத்தைப் பெறாமல், பேய் மனதை அண்டி - பேய்மனத்தைச் சார்ந்து, தாய் இல்லா பிள்ளை போல் - தாயற்ற குழந்தைபோல், பித்தாகவோ - பித்தேறவோ, மனதை நான் சாராதபடி - மனத்தை நான் அணுகாதபடி, அறிவின் - அறிவோடு கூடிய, நிருவிகற்ப அங்கம் ஆம் - நிர் விகற்பமென்னும் உறுப்பையுடைய, சாசுவத நிஷ்டை அருளாய் - அழியாத சகசநிஷ்டையைக் கொடுத்தருள வேண்டும், சர்வபரிபூரண - சகலபதார்த்தங்களிலும் பரிபூர்ணமான, அகண்ட தத்துவம் ஆன - அகண்ட வஸ்துவாகிய, சச்சிதாநந்தசிவமே - தத்துவத்திரய ரூபமாகிய மங்களவஸ்துவே—எ-று.

பூதாகாயமுதலியன சிதாகாயத்தில் ஓர் துகள் போலக் காணப்படுமாதலால் 'பாராதிககனப் பரப்புமுண்டோவென்று படர் வெளியதாகி' என்றும், சூரியன் சந்திரன் அக்கினி என்னும் ஒளி உடைப் பொருள்களுக்கும் ஒளியைத் தந்து தானே பிரகாசித்தலால், 'எழுநாப்பரிதிமதி காணுச் சுயஞ்சோதியாய்' என்றும், உயிர்களெல்லாவற்றுக்கும் அறிவுருவாகி யுள்ளே விளங்குதலால் 'அண்டபகிரண்ட வுயிரெவைக்கும் நேராகவறியாய்' என்றும், எங்கும் பிரிவற வியாபித்திருத்தலால் 'அகண்டமாய்' என்றும், அவ்வாறு எங்கும் வியாபித்திருத்தற்குப் பல வுருவுடையதோ வென்னும் ஐயமறுத்தற்கு 'ஏகமாய்' என்றும், அழிவற்றதாதலால் 'நித்தமாய்' என்றும், எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருந்தும் அவற்றோடு சம்பந்த மற்றிருத்தலால் 'நிர்த்தொந்தமாய்' என்றும், குணாதீத மாதலால் 'நிர்க்குணவிலாசமாய்' என்

றும், வாக்குமனங்களுக் கெட்டாத களங்கமற்ற பொருளாதலால், 'வாக்கு மனமணுகாத நிர்மலாநந்தமாய்' என்றும் கூறினர்.

2. குடக்கொடு குணக்காதி திக்கினை யுழக்கூடு
கொள்ளல்போ லைந்துபூதம்
கூடுஞ் சருங்கிலைச் சாலேகமொன்பது
குலாவுநடை மனையைநாறும்
வடக்கயிறு வெண்ணரம் பாவென்பு தசையினால்
மதவேள் விழாநடத்தி
வைக்கின்ற கைத்தேரை வெண்ணீர்செ நீர்கணீர்
மலநீர்பு ணீரிறைக்கும்
விடக்குத் துருத்தியைக் கருமருந் துக்கூட்டை
வெட்டவெட் டத்தளிர்க்கும்
வேட்கைமர முறுகின்ற சுடுகாட்டை முடிவிலே
மெய்போ லிருந்துபொய்யாம்
சடக்கைச் சடக்கெனச் சதமென்று சின்மயந்
தானாகி நிற்பதென்றோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

இ - ள். குடக்கொடு குணக்காதி திக்கினை - மேற்கோடு கிழக்கு முதலிய திக்குகளை, உழக்கூடு கொள்ளல்போல் - உழக்கினிடத்திற் கொள்ளுதல்போல, ஐந்துபூதம் கூடும் சுருங்கு இல்லை - பஞ்ச பூதங்கள் சேர்கின்ற சிறுகுடிலை, சாலேகம் ஒன்பது குலாவும் - ஒன்பது பலகணிகள் விளங்குகின்ற, நடை மனையை - நடைவீட்டை, நாறும் - காணப்படுகின்ற, வடக்கயிறு - வடக்கயிறு, வெள் நரம்பு ஆ - வெண்ணரம்பாக, என்பு தசையினால் - எலும்பு மாமிசங்களால், மதவேள் - மன்மதனானவன், விழாநடத்தி வைக்கின்ற - திருவிழாநடத்திவைக்கின்ற, கைத்தேரை - சிறுதேரை, வெள்நீர் - வெண்ணீரும், செந்நீர் - செந்நீரும், கண்ணீர் - கண்ணீரும், மலநீர் - மலநீரும், புண்ணீர் - புண்ணீரும், (ஆகிய இவற்றை) இறைக்கும் - இறைக்கின்ற, விடக்கு துருத்தியை - மாமிசத் துருத்தியை, கரு மருந்து கூட்டை - ஜன்மமாகிய மருந்துவிளைகின்ற கூட்டினை, வெட்ட வெட்டதளிர்க்கும் - வெட்ட வெட்டத்தளிர்க்கின்ற, வேட்கைமரம் உறுகின்ற - ஆசையாகிய மரங்கள்மிகாநின்ற, சுடுகாட்டை - மயானத்தை, முடிவிலே - முடிவில், மெய்போலிருந்து - உண்மைபோலவிருந்து, பொய் ஆம் - பொய்யாய் விடுகின்ற, சடக்கை - சரீரத்தை, சடக்கு என - பொய்யென்று, சின்மயம் சதமென்று - ஞானரூபமே மெய்யென்று, தானாகி நிற்பது என்றோ - தானாகி நிற்பது எந்தக்காலமோ, சர்வ -

வெண்ணீர் - கோழை, செந்நீர் - உதிரம், மலநீர் - மூத்திரம், புண்ணீர் - மாமிசநீர், ஐம்பூதம் கூடுஞ் சிறுவீடு, நவத்துவாரங்களையுடைய நடைவீடு முதலியவாகச் சொல்லப்பட்ட பொய்யுடலைப் பொய் யென்றறிந்து, சின்மயமே மெய்யென்று துணிந்து அதின் மயமாய் நிற்பது எக்காலமோ என்பதாம்.

**3.** பாகத்தி னாற்கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி யில்லைவேத
பாராய ணப்பனுவன் மூவர்செய் பனுவலது
பகரவோ விசையுமில்லை
யோகத்தி லேசிறிது முயலவென் றாற்றேக
மொவ்வாதி வூண்வெறுத்தால்
உயிர்வெறுத் திடலொக்கு மல்லாது கிரியைக
ளுபாயத்தி னாற்செய்யவோ
மோகத்தி லேசிறிது மொழியவிலை மெய்ஞ்ஞான
மோனத்தி னிற்கவென்றால்
முற்றாது பரிபாக சத்திக ளனேகநின்
மூதறிவி லேயெழுந்த
தாகத்தி லேவாய்க்கு மமிர்தப்ர வாகமே
தன்னந் தனிப்பெருமையே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

**இ-ள்.** பாகத்தினால் - பாகமாக, கவிதை பாடி படிக்கவோ - கவிகளைப் பாடிப் படிக்கவென்றாலோ, பத்திநெறி இல்லை - பக்திமார்க்க மில்லை, வேத பாராயணப் பனுவல் - தமிழ்வேதமாகிய பாராயணத்துக்குரிய (திருவாசக மென்னும்) நூலையும், மூவர் செய் பனுவல் - மூவரருளிச்செய்த (அடங்கல் முறையாகிய) நூலையும், பகரவோ - பாடுவோ மென்றாலோ, இசையும் இல்லை - இசையுணர்ச்சியு மில்லை, யோகத்திலே சிறிது முயல என்றால் - யோகமார்க்கத்தில் கொஞ்சம் முயல்வோ மென்றால், தேகம் ஒவ்வாது - சரீரம் இணங்காது, இவ்வூண் வெறுத்தால் - இந்த வுணவை வெறுத்தால், உயிர் வெறுத்திடல் ஒக்கும் - உயிரை வெறுத்தாற்போன்றிருக்கும், அல்லாது - அன்றி, கிரியைகள் - கிரியைகளை, உபாயத்தினால் செய்யவோ - உபாயமாகச் செய்யவென்றாலோ, மோகத்திலே சிறிதும் ஒழிய இல்லை - மோகத்தில் கொஞ்சமாயினும் நீங்கவில்லை, மெய் ஞான மோனத்தில் நிற்க என்றால் - மெய்ஞ்ஞான வரம்பாகிய மோன நிலையிற் நிற்கவென்றால், முற்றாது - முடிவு பெறாது, (அதற்குக் காரணம்) பரிபாக சத்திகள் அநேகம் - என்னைத் தடைசெய்யப் பக்குவப்பட்டுள்ள பரிபக்குவ சத்திகள் அநேகங்க

ளாயுள்ளன, நின் மூதறிவிலே எழுந்த - உன் விஷயமான பேரறிவினிடத் துண்டாகிய, தாகத்திலே வாய்க்கும் - மோக்ஷ தாகத்தில் கிடைக்கப் பெறு கின்ற, அமிர்தப்ரவாகமே - அமுதப்பெருக்கே, தன்னந் தனிப்பெருமையே - ஏகாந்தமாகிய பெருமையே, சர்வபரிபூரண —எ-று.

மூவர்செய்பனுவல் - தேவாரத்தடங்கன்முறை. அது திருநாவுக்கரசு நாயனூர், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனூர், சுந்தரமூர்த்தி நாயனூர் என் னும் இம்மூவரால் அருளிச் செய்யப்பட்டது. இசை - இராகம். மோன நிலையே ஞானத்துக் கெல்லை யென்பதை, "மோனமென்பது ஞான வர ம்பு" என்னும் ஔவை வாக்கானு முணர்க. சத்திகள் தடை செய்யும் என்பதை,

"தெய்வ மென்பதோர் சித்த முண்டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைக டொடங்கின"

என்னுந் திருவாதவூரடிகள் திருவாக்கானு முணர்க.

**4.** இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு
மிவ்வுலக மெவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கு மாதர்சிற் றின்பமோ
வென்னின்மக மேருவாக்கிச்
சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கிநாளும்
துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்த்ரஜாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
யம்மம்ம வெல்லவெளிதோ
அருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ
தருளோவ லாதுமருளோ
சமயநெறி காணுத சாக்ஷிநீ சூக்ஷ்மமாத்
தமியனேற் குளவுபுகலாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

இ-ள். மன மாயை - மன மாயையானது, இமையளவு போதை - இமைகொட்டு மளவினதாகிய காலத்தை, ஒரு கற்பகாலம் பண்ணும் - ஒரு கற்பகால மாக்கும், இவ்வுலகம் எவ்வுலகமோ என்ற எண்ணம் வருவிக் கும் - இவ்வுலகமானது 'எவ்வுலகமோ வென்கிற எண்ணத்தை யுண்டாக் கும், மாதர் சிற்றின்பமோ என்னின் - மகளிர் சிற்றின்பமோ வென்றால்,

மகமேரு ஆக்கி - மகமேருவாகச்செய்து, சுமை எடுமின் என்று - சுமையெடுங்களென்று, எமை - எங்களை, சும்மாடும் ஆய் - சும்மாடாகவுஞ் செய்து, சுமை ஆளும் ஆக்கி - சுமையாளாகவுஞ் செய்து, நாளும் - நாள்தோறும், துர்ப்புத்திபண்ணி - துர்ப்புத்தியை யுண்டாக்கி, உள்ள - உண்டாயிருக்கிற, நற்புத்தி யாவையும் - நல்லபுத்திகளெல்லாவற்றையும், சூறையிட்டு - சூறையாடி, இந்த்ரஜாலம் அமைய - இந்த்ரசாலம்பொருந்த, ஒரு கூத்தும் சமைந்து ஆடும் - ஒரு நாடகமும் அமைந்து நடிக்கும், அம்மம்ம - ஆச்சரிய மாச்சரியம், வெல்ல எளிதோ - (இதனை) வெல்லுதற்கு எளிதாகுமோ, அருள் பெற்ற பேர்க்கு எல்லாம் - உன் திருவருளைப் பெற்ற பேர்கட் கெல்லாம், ஒளிபெற்று நிற்கும் ஈது - ஒளிவிளங்க நிற்கின்ற இது, அருளோ - அருட்டன்மையோ, அல்லாது மருளோ - அல்லது மருட்டன்மையோ, சமயநெறி காணாத - சமயமார்க்கங்களால் காணப்படாத, சாக்ஷி நீ - சாட்சிபூதனாகிய நீ, சூக்ஷ்மம் ஆ - நுட்பமாக, தமியனேற்கு - தனியேனாகிய எனக்கு, உளவு புகலாய் - உளவு சொல்லாய், சர்வபரிபூரண—எ - று.

இமைப்பொழுதைக் கற்பகாலமாகச் செய்தலும், இவ்வுலகம் எவ்வுலகமோ என்ற எண்ணத்தை யுண்டாக்கலும் முதலிய செய்யவல்ல மனமாயையானது என்னால் வெல்ல வொண்ணுமோ? உன் திருவருள் பெற்றோர்க் கெல்லாம் ஒளியுருவாய் நிற்கின்ற இது அருளோ அல்லது மருளோ எனக்கு உளவு சொல்லாய் என்பது கருத்து.

5. இனியே தெமக்குனருள் வருமோ வெனக்கருதி
　　யேங்குதே நெஞ்சமையோ
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
　　றெண்ணவோ திடமில்லையே
அநியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு
　　மந்தகற் காளாகவோ
ஆடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டது
　　மவலமாய்ப் போதனன்றோ
கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு
　　கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
　　கண்மூடி மௌனியாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினே னெண்ணமிது
　　சாமிநீ யறியாததோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
　　சச்சிதா னந்தசிவமே.

இ-ள். எமக்கு - எங்களுக்கு, இனி உன் அருள் ஏது - இனி உன் கிருபை கிடைப்பதேது, வருமோ - ஒருக்கால் உண்டாகுமோ, எனக்கருதி - என்று நினைத்து, நெஞ்சம் ஏங்குதே - மனமானது ஏக்கங் கொள்ளாநின்ற தே, ஐயோ - அந்தோ, இன்றைக்கு இருந்தாரை - இன்று உயிர் வாழ்ந் திருந்தவரை, நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ - நாளைக்கு இருப்பார்க ளென்று நினைக்கவோ, திடம் இல்லையே - ஸ்திரமில்லையே, அநியாயமாய் - அநியாயமாய், இந்த வுடலை - இந்தச்சரீரத்தைக்குறித்து, நான் என்றுவரும் - நானென்று அகங்கரித்துக் கொண்டு வருகின்ற அந்தகற்கு ஆளாகவோ - யமனுக்கு அடிமையாகவோ, நான் ஆடித்திரிந்து - நான் ஆடி உழன்று, கற்ற தும் கேட்டதும் - கற்ற கல்வியும் கேட்ட கேள்வியும், அவலமாய் போதல் நன்றே - நிஷ்பலமாய்ப் போவது நன்மையோ, கனி எனும் - கனியை யாயினும், உறிய செங்காய் எனும் - வெறுமையான செங்காய்களையாயினும், உதிர் சருகு கந்த மூலங்களேனும் - உதிர்ந்த சருகு கந்த மூலங்கள் இவற் றுள் ஒன்றையாயினும், கனல்வாதை வந்து எய்தின் - உதராக்நியின் உபத்ர வம் வந்து பொருந்தினல், அள்ளிப்புசித்து - வாரியுண்டு, நான் - அடியேன், கண்மூடி - கண்களை மூடிக்கொண்டு, மௌனியாகி - மௌனநிலையை யுடை யேனாகி, தனியே இருப்பதற்கு எண்ணினேன் - தனியாயிருக்க நினைத் தேன், இது எண்ணம் - இந்த எண்ணமானது, சாமி நீ அறியாததோ - சர்வ ஸ்வாமியாகிய நீ யறியாததோ, சர்வபரிபூரண—எ - று.

இனி உன் திருவருள் எனக்கு வாய்க்குமோவென்று நினைத்து என் மனமிரங்கா நின்றதே; இன்றிருந்தவர் நாளைக்கு இருப்பர் என்று எண்ண வோ திடமில்லையே; அநியாயமாய் அகங்கரித்து வரும் யமனுக்கு ஆளாக வோ? நான் அலைந்து வருந்திக் கற்ற கல்வியும் கேட்ட கேள்வியும் வீணாய்ப் போதல் நன்மையோ? பசிக்குக் காய் கனி கிழங்குகளையுண்டு மௌனியாகித் தனியே யிருத்தற்கு எண்ணி யிருக்கிறேன்; இவ்வெண்ணம் நீ யறியாத தல்லவே என்பது கருத்து. கந்த மூலங்கள் - வேர் கிழங்குகள்.

6. மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதியகடுதோய்
மாடகூடச்சிகர மொய்த்தசந் திரகாந்த
மணிமேடை யுச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்குலாவி
மோகத் திருந்துமென் யோகத்தி னிலைநின்று
மூச்சைப் பிடித்தடைத்துக்
கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடிநுழை நூழைகொண்ட

கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்
கரதலா மலகமென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுய்வர்காண்
சனகாதி துணிவிதன்றோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

இ-ள். மத்தம் - உன்மத்தங் கொண்ட, மதகரி - மதயானைகள், முகில் குலம் என்ன - மேகக்கூட்டம்போல, நின்று இலகு - நின்று விளங்குகின்ற, வாயிலுடன் - முற்றத்தோடுகூடிய, மதி அகடு தோய் - சந்திரனது நடுப் பக்கத்தைத் தொடுக்கின்ற, மாட கூடச் சிகரம் மொய்த்த - மாளிகைகள் வீடுகளின் சிகரங்கள் இவைகள் நெருங்கிய, சந்திரகாந்த மணிமேடை உச்சி மீது - சந்த்ரகாந்தக் கல்லினுற் சமைத்த ரத்ந கசிதமான மேடையின் உச்சியில், முத்தமிழ் முழக்கமுடன் - முத்தமிழ் முழக்கத்தோடு, முத்தநகையார்களொடு - முத்தையொத்த பற்களையுடைய மாதர்களோடு, முத்து முத்தாய் குலாவி - பிரியமாய் விளையாடி, மோகத்து இருந்தும் என் - மோகசாகரத்தில் முழுகிக் கிடந்தாலென்ன நஷ்டம், யோகத்தின் நிலை நின்று - யோக நிலையினின்று, மூச்சை பிடித்து அடைத்து - வாயுவைத் தடுத்து, கைத்தலம் - கைகளில், நகப்படைவிரித்த - நகமாகிய ஆயுதங்களை விரித்த, புலி சிங்கமொடு கரடிநுழை - புலி சிங்கங்களுடன் கரடிகள் நுழையப் பெற்ற, நூழை கொண்ட - அடர்ச்சியைக்கொண்ட, கானம் - கானகத்திலும், மலை உச்சியில் - மலையுச்சியிலும், குகையூடு - குகைகளிலும், இருந்தும் என் - இருந்தாலும் என்னலாபம், கரதலம் - கையிலுள்ள, ஆமலகம் என்ன - நெல்லிக்கனிபோல, (விசதமாய்) சத்தம் அற - ஆரவாரங்களடங்க, மோநநிலை பெற்றவர்கள் - மௌநநிலையைப் பெற்றவர்கள், உய்வர் - உஜ்ஜீவிப்பார்கள், சநகாதி துணிவு இது அன்றோ - சநகாதிகளுடைய நிச்சயம் இதுவல்லவா, சர்வபரிபூரண—எ-று.

இல்லறம் துறவறமென்னு மிரண்டனுள் எதிலிருப்பினும் நஷ்டலாபங்களில்லை, மௌநநிலையைப் பெற்றவர்கள் உய்வார்கள் என்பதாயிற்று. நெல்லிக்கனியை உள்ளங்கையில் வைத்து உற்று நோக்கினுல் உள்ளேயிருக்கிற வரைகளெல்லாம் எண்ணலாம்படி விளங்கித் தோன்றுமாதலால் 'கரதலாமலகம் என்ன' என்றார்.

7. கைத்தலம் விளங்குமொரா[illegible]லியங் கனியெனக்
கண்டவே தாகமத
காட்சிபுரு ஷார்த்தமதி[illegible] [illegible]சிபெறு முத்தியது
கருதினனு மானமாதி

உத்திபல வாநிரு விகற்பமே லில்லையா
லொன்றோ டிரண்டென்னவோ
உரையுமிலை நீயுமிலை நானுமிலை யென்பது
முபாயநீ யுண்டுநானும்
சித்தமுள னில்லை யெனும்வசன நீயறிவை
தெரியார்க டெரியவசமோ
செப்புகே வலநீதி யொப்புவமை யல்லவே
சின்முத்தி ராங்கமரபில்
சத்தமற வெனையாண்ட குருமௌனி கையினாற்
றமியனேற் குதவுபொருளே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

இ - ள். கைத்தலம் விளங்கும் - உள்ளங் கையினிடத்து விளங்கா நின்ற, ஒரு நெல்லிக்கனியென - ஒரு நெல்லிப்பழம்போல, கண்ட - காணப்பட்ட, வேதாகமத்தின் காட்சி - வேதாகமத்திற் கண்டபொருள், புருஷார்த்தம் - சதுர்வித புருஷார்த்தமாம், அதில் - அந்தப் புருஷார்த்த சதுஷ்டயத்துள், முத்தி - வீடு எனப்படுவது, மாட்சிபெறும் - மேன்மையையடையும், அது - அந்த வீட்டை, கருதின் - நினைத்தால், அனுமானம் ஆதி யுத்தி பல ஆம் - அநுமானம் முதலிய ப்ரமாணங்களால் உளவாகின்ற யுக்திகள் அநேகமாகும், நிருவிகற்பமேல் இல்லை ஆல் - நிருவிகற்ப சமாதியநுபவத்தின்கண் இந்த யுக்திகள் பயன்படா தொழியுமாதலால், ஒன்றோடு இரண்டு என்னவோ - ஒன்றுடன் இரண்டு என்று சொல்வோமென்றாலோ, உரையும் இல்லை - சொல்லுமில்லை, நீயும் இல்லை - நீயென்பதும் இல்லை, நானும் இல்லை - நான் என்பதுமில்லை, என்பதும் - என்றுசொல்லுவதும், உபாயம் - தந்திரமே, (ஏனெனின்) நீ உண்டு - நீ யென்பதும் உண்டு, நானும் - அடியேனும், சித்தம் உளன் - சித்தமாயிருக்கிறேன், (அப்படியிருக்க) நான் இல்லை என்னும் வசனம் - நானென்பதொரு பொருள் இல்லை என்னுஞ் சொற்பொருளை, நீ அறிவை - நீயறிவாய், தெரியார்கள் - அறியாதவர்கள், தெரிய வசமோ - அறியவொண்ணுமோ, செப்பு - (வேதாகமங்களாற்) சொல்லப்பட்ட, கேவலம் நீதி - முத்தி நெறியின் ஒழுங்குக்கு, ஒப்பு உவமை அல்லவே - (வேறுபொருள்) ஒத்துக்கொள்ளத்தக்க உவமைப்பொருளாகாதே, சின்முத்திராங்க மரபின் - ஞான முத்திரையை யங்கமாகவுடைய மேலான மரபினால், சத்தம் அற - சொல்லடங்க, என்னை ஆண்ட - என்னை யாண்டரு குருமௌனி கையினால் - மௌனகுருவின் திருக்கரங்கொண்டு, தமி றகு உதவு பொருளே - தனியேனை எனக்குக் கொடுக்கப்பட்ட வஸ்துவே—எ - று.

உள்ளங்கை நெல்லிப்பழம்போல விளங்கித் தோற்றுகின்ற வேதம் ஆகமம் என்பவற்றின் அர்த்தசாரமெல்லாம் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகையான புருஷார்த்தங்களே. அவற்றுள் வீடு சிறந்தது; அதை நினைக்குமிடத்து, அதற்கு அனுமானம் முதலிய பிரமாண யுக்திகள் பலவுள. அந்த யுக்திகளோ நிருவிகற்ப சமாதி அநுபவத்தில் இல்லையாகும்; ஆதலால், அந்த முத்திநிலையானது ஒன்றெனவும் இரண்டெனவும் கூறுதற்குச் சொல்லில்லை. நீயும் இல்லை, நானும் இல்லை என்பதும் உபாயமேயாம். ஏனென்றால், நீயும் உண்டு நானும் உளேன் ஆனல், நான் இல்லை யென்னுஞ் சொல்லின் பொருளை நீ உணர்வாய். மோக்ஷ மார்க்கத்துக்கு ஒப்பாக வேறு மொருபொருளுண்டோ? சின்முத்திரையைக் காட்டிச் சொல்லிறக்க என்னை யாண்டருளின மௌந தேசிகனது கையினால் எனக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட பொருளே என்பது கருத்து. வேதம் அறியப்படுவது என்னும் பொருளது. ஆகமம் பதி பசு பாசம் என்னும் முப்பொருளையும் விளக்கிக்காட்டுவது என்னும் பொருளது. ஆ - பசு. கம் - பதி. மம் - பாசம்.

**8.** காயாத மரமீது கல்லேறு செல்லுமோ
 கடவுணீ யாங்களடியேம்
கர்மபந் தத்தினாற் சன்மபந் தம்பெறக்
 கற்பித்த துன்னதருளே
வாயார வுண்டபேர் வாழ்த்துவது நொந்தபேர்
 வைவதுவு மெங்களுலக
வாய்பாடு நிற்கநின் வைதிக வொழுங்குநினை
 வாழ்த்தினாற் பெறுபேறுதான்
ஓயாது பெறுவரென முறையிட்ட தாற்பின்ன
 ருளறுவது கருமமன்றும்
உபயநெறி யீதென்னி னுசிதநெறி யெந்தநெறி
 யுலகிலே பிழைபொறுக்கும்
தாயான கருணையு முனக்குண் டெனக்கினிச்
 சஞ்சலங் கெடவருள்செய்வாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
 சச்சிதா னந்தசிவமே.

இ - ள். காயாத மரமீது - காயாத மரத்தின்மேல், கல் எறு செல்லுமோ - கல்லெறிதல் செல்லுமோ, நீ கடவுள் - நீ கடவுள், யாங்கள் அடியேம் - நாங்கள் அடிமைகள், கர்மபந்தத்தினால் - கர்மப் பிணிப்பினால், சன்மபந்தம்பெற - பிறவிப் பிணிப்பை யடையும்படி, கற்பித்தது - கற்

பித்துவைத்தது, உன்னது அருளே - உன் கருணையே, வாயார வுண்ட பேர் வாழ்த்துவதும் - வாயார வுண்டவர்கள் மங்களாசாசநம்பண்ணுவதும், நொந்தபேர் வைவதுவும் - நொந்தவர்கள் நிந்திப்பதும், எங்கள் - எங்களு டைய, உலக வாய்பாடு - உலகவழக்கம், நிற்க - இது நிற்க, நின் வைதிக ஒழுங்கு - உனது வைதிக வொழுக்க நூல்கள், நின்னை வாழ்த்திறல் - உன்னை மங்களாசாசநம் பண்ணிறல், பெறு பேறு - பெறுதற்குரிய மோக்ஷ லாபத்தை, ஓயாது பெறுவர் என - தவருமலடைவரென்று, முறையிட்ட தால் - முழங்குவதனால், பின்னர் - அதற்குமேல், உளறுவது கருமம் அன்று ஆம் - உளறுதல் நற்கருமம் அன்ருகும், உபயநெறி ஈது என்னின் - இரண்டு மார்க்கங்கள் வைவதும் வாழ்த்துவதுமாயின், உசித நெறி எந்த நெறி - அநுகூல மார்க்கம் எந்த மார்க்கம், உலகிலே பிழை பொறுக்கும் - உலகத்தில் குற்றத்தைப் பொறுத்தருள்கின்ற, தாயான கருணையும் - தாயின் கருணைபோன்ற கருணையும், உனக்கு உண்டு - உனக்குள்ளது, இனி - இனி, எனக்கு - அடியேனுக்கு, சஞ்சலங்கெட - மநோதுக்கம் அறும்படி, அருள்செய்வாய் - கிருபைசெய்வாய், சர்வபரிபூரண—எ - று.

வைதிகம் - வேதசம்பந்தம். பேறு எனப் பொதுப்படக் கூறினும் நின்னை வாழ்த்திறற் பெறு பேறு என்றமையால் மோக்ஷலாபம் என்றுரை க்கப்பட்டது.

9. இன்னம் பிறப்பதற் கிடமென்னி லிவ்வுடல
 மிறவா திருப்பமூலத்
தெழுமங்கி யமிர்தொழுகு மதிமண்ட லத்திலுற
 வென்னம்மை குண்டலினிபால்
பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப்
 பேயேனை நல்கவேண்டும்
பிறவாத நெறியெனக் குண்டென்னி னிம்மையே
 பேசுகர்ப் பூரதீபம்
மின்னும் படிக்ககண் டாகார வன்னைபால்
 வினையேனை யொப்புவித்து
வீட்டுநெறி கூட்டிடுதன் மிகவுநன் றிவையன்றி
 விவகார முண்டென்னிலோ
தன்னந் தனிச்சிறிய னுற்றிலேன் போற்றிவளர்
 சன்மார்க்க முத்திமுதலே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
 சச்சிதா னந்தசிவமே.

இ - ள். இன்னம் பிறப்பதற்கு இடம் என்னின் - இன்னமும் ஜந்ம த்துக்கிட முண்டென்ருல், இவ் வுடலம் இறவா திருப்ப - இந்தச் சரீரம்

இறவாதிருக்கும்படி, மூலத்து எழும் அங்கி - மூலாதாரத்தில் உண்டாகிற அக்கியானது, அமிர்து ஒழுகும் - அமிர்த மொழுகாகின்ற, மதிமண்டலத்தில் உற - சந்த்ரமண்டலத்திற் பொருந்தும்படி, என் அம்மை - என் தாயாகிய, குண்டலினிபால் - குண்டலி சத்தியினிடத்தில், பின்னம் பிறக்காது - பழுதுண்டாகாதபடி, சேய் என வளர்த்திட - குழந்தைபோல வளர்த்தற் பொருட்டு, பேயேனை நல்க வேண்டும் - பேயையொத்த அடியேனைக் கொடுத்தல் வேண்டும், பிறவாத நெறி எனக்கு உண்டு என்னின் - பிறவாவழியெனக்குளதாயின், இம்மையே - இம்மையிற்றானே, பேசு - சொல்லப்பட்ட, கர்ப்பூரதீபம் - கர்ப்பூர தீபம்போல, மின்னும்படிக்கு - ஒளிவிடும்படிக்கு, அகண்டாகார அன்னைபால் - அகண்டரூப மென்கிற தாயினிடத்தில், வினையேனை ஒப்புவித்து - தீவினையேனாகிய என்னை யொப்புவித்து, வீட்டு நெறி கூட்டிடுதல் - மோக்ஷ மார்க்கத்தில் சேர்த்திடுதல், மிகவும் நன்று - மிகவும் நன்மை, இவையன்றி - இவற்றையன்றி, விவகாரம் உண்டு என்னிலோ - வழக்கு இருக்கிற தென்றாலோ, தன்னந்தனி சிறியன் - தனியேனாகிய சிறியேன், ஆற்றிலேன் - பொறுத்திலேன், போற்றி - நமஸ்காரம், வளர் - விருத்தியடையாநிற்கிற, சந்மார்க்கம் - நன்னெறியையுடைய, முத்தி முதலே - முத்திக்கு முதல்வனே, சர்வபரிபூரண. எ - று.

அகண்டம் - கண்டிக்கப்படாதது. அகண்டாகாரம் - அகண்ட ரூபம். முத்தி முதல் - ஒரு சொல்.

இனிமேலும் எனக்குப் பிறவி யுண்டெனின், எடுத்த இத்தேகமே நிலைத்திருக்கும்படி வளர்க்கக் குண்டலிசத்தியாகிய தாயினிடத்தில் என்னைக் கொடுத்தல் வேண்டும், பிறவி யில்லையெனின், இம்மையிற்றானே கர்ப்பூர தீபம்போல விளங்கும்படிக்கு அகண்ட ரூபமென்கிற தாயின் கையில் என்னை யொப்புவித்து மோக்ஷநெறியில் சேர்த்தல் வேண்டும், இவ்விரண்டு வழியுமின்றி வேறு வழக்குண்டென்றால் துணையிலாச் சிறியேன் பொறுத்திலேன் என்பதாம்.

**10.** வேதாவை யிவ்வணம் விதித்ததே தென்னினுன்
 வினைப்பகுதி யென்பனந்த
வினைபேச வறியாது நிற்கவிவை மனதால்
 விளைந்ததான் மனதைநாடில்
போதமே நிற்குமப் போதத்தை நாடிலோ
 போதமு நிஞல்விளக்கம்
பொய்யன்று தெய்வமறை யாவுமே நீயென்று
 போக்குவர வறநிகழ்த்தும்
ஆதார வாதேய முழுதுநீ யாதலா
 லகிலமீ தென்னையாட்டி

ஆடல்கண் டவனுநீ யாடுகின் றவனுநீ
யருளுநீ மௌனஞான
தாதாவு நீபெற்ற தாய்தந்தை தாமுநீ
தமருநீ யாவுநீகாண்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

இ - ள். வேதாவை - பிரமனைநோக்கி, இவ்வண்ணம் விதித்தது ஏது என்னின் - இந்தப்ரகாரம் விதித்தது யாதினுக்கு என்று வினவினால், உன் வினைப்பகுதி என்பன் - உன் வினையின் கூறுபாடு என்று சொல்லு வான், அந்த வினை பேச அறியாது - அந்த வினையானது பேச அறியாது, நிற்க - அது நிற்க, இவை மனதால் விளைந்ததால் - இவைகள் மனத்தினால் விளைந்ததனால், மனதை நாடில் - மனத்தை நாடுமிடத்தில், போதமே நிற் கும் - அறிவே நிற்கின்றது, அப்போதத்தை நாடிலோ - அவ்வறிவை நாடி னாலோ, போதமும் - அவ்வறிவும், நின்னால் விளக்கம் - உன்னால் விளக்கப் படுவது, பொய் அன்று - இது பொய்யல்ல, தெய்வமறை - தைவிகமான வேதங்கள், யாவுமே நீ யென்று - எல்லாம் நீயே யென்று, போக்குவரவு அறநிகழ்த்தும்-போக்கு வரவொழியச் சொல்லாநிற்கும், ஆதார ஆதேயம் முழுதும்நீ ஆதலால் - ஆதார ஆதேயங்களாகிய முழுமையும் நீ யாகையால், அகிலமீது - உலகின்மேல், என்னை ஆட்டி - என்னையாடும்படி பண்ணி, ஆடல்கண்டவனும் நீ - அவ்வாடலைப் பார்த்தவனும் நீ, ஆடுகின்றவனும் நீ- ஆடுவோனும் நீ, அருளும் நீ-திருவருளும் நீ, மௌன ஞான தாதாவும் நீ- மௌனஞானக் கொடையாளனும் நீ, பெற்ற தாய்தந்தை தாமும் நீ - பெற்ற தாய் தந்தைகளும் நீ, தமரும் நீ - உறவினரும் நீ, யாவும் நீ - மற்றும் எனக்கிதமான பொருள்களெல்லாம் நீயே, சர்வபரிபூரண. எ - று.

ஆதாரம் - இடம். ஆதேயம் - இடத்து நிகழ்பொருள். வினைசட மாதலால் பேசவறியாது என்றார்.

பிரமனை நோக்கி, இவ்வாறு வகுத்தது யாதுக்கென்று வினவினால், உன் கர்மப்பாகுபாடு என்பன், அந்தக் கர்மம் சடமாதலால் பேச அறிந்தி லது, இது நிற்க, இந்தக் கர்மப்பாகுபாடுகள் மனத்தினால் உண்டானவை யாதலால் மனத்தை நோக்குமிடத்து அதுவும் அறிவுருவாய் நிற்கும், அவ் வறிவும் உன்னால் விளக்கப்படுவது, இது பொய்யல்ல, தெய்விகமான வே தங்கள் எல்லாம், எல்லாப்பொருள்களும் நீ யென்று சொல்லும். உலகமும், உலகப்பொருள்களும் நீ யாகையால், உலகத்தில் என்னை நடிப்பிப்பவன் முதல் எல்லாம் நீயேயென்பது கருத்து.

11. கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகினுங்
குளிர்தீம் புனற்கையள்ளிக்
கொள்ளுகினு மந்நீ ரிடைத்திளைத் தாடினுங்
குளிர்சந்த வாடைமடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை யுலவவே
வசதிபெறு போதும் வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும் வேலையமுதம்
விந்தைபெற வறுசுவையில் வந்ததென வமுதுண்ணும்
வேளையிலு மாலைகந்தம்
வெள்ளிலை யடைக்காய் விரும்பிவேண் டியவண்ணம்
விளையாடி விழிதுயிலினும்
சந்ததமு நின்னருளை மறவா வரந்தந்து
தமியேனை ரக்ஷைபுரிவாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

இ - ள். கொந்து அவிழ் - பூங்கொத்துகள் விரிகின்ற, மலர்ச்சோலை - பூஞ்சோலைகளின், நல்நீழல்வைகினும் - நல்ல நிழலிற்றங்கி யிருந்தாலும், குளிர் - குளிர்ந்த, தீ புனல் கை அள்ளி கொள்ளுகினும் - மதுரமாகிய நீரைக் கையினாலள்ளி உட்கொண்டாலும், அந்நீரிடை - அந்நீரினிடத்தில், திளைத்து ஆடினும் - மூழ்கி விளையாடினாலும், குளிர் சந்தவாடை - குளிர்ந்த சந்தமணமுள்ளகாற்று, மடவார் - மாதர்கள், வந்துலவுகின்றது என- வந்துலாவுகிறதுபோல, முன்றிலிடை உலவ - முற்றத்தின்கண் உலாவும்படி, வசதிபெறுபோதும் - (விசாலமான) வீடுகளை யுடையனாகுங்காலத்திலும், வெள்ளை - வெண்மையாகிய, வட்டம் - வட்டவடிவுள்ள, மதி - சந்திரன், பட்டப்பகல்போல - பட்டப்பகலைப்போல, நிலவுதர - சந்திரிகையை வீசலால், மகிழ்போதும் - மகிழுங்காலத்தும், வேலை அமுதம் - கடலமுதமானது, விந்தைபெற - ஆச்சரியமடைய, அறுசுவையில் - அறுசுவைப் பதார்த்தங்களில், வந்தது என - வந்ததென்னும்படி, அமுது உண்ணும் வேளையிலும் - உணவை யுண்ணுகிறகாலத்திலும், மாலைகந்தம் - பூமாலை சந்தனம், வெள்ளிலை அடைக்காய் - வெற்றிலைப்பாக்கு, (இவைகளை) விரும்பி - அபேக்ஷித்து உண்டு, வேண்டிய வண்ணம் விளையாடி - வேண்டியபடி விளையாடி, விழிதுயிலினும் - கண்ணுறங்கினாலும், சந்ததமும் - சதாகாலமும், நின் அருளை மறவாவரம்தந்து - உன்னருளை மறவாத வரத்தைக் கொடுத்து, தமியேனை ரக்ஷைபுரிவாய் - தனியேனைக் காத்தருள்வாய், சர்வபரிபூரண, எ - று.

கொத்து கொந்து என மெலித்தல் பெற்றது. சந்தவாடை - தென்றல். எத்தன்மையவாகிய போக போக்கியங்களை யநுபவிக்குங் காலத்தினும் உன் திருவருளை யான் மறவாதிருக்கக் கிருபை செய்ய வேண்டும் என்பது கருத்து.

---

## தேஜோமயானந்தம்.

1. மருமலர்ச் சோலைசெறி நன்னிழன் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்
மந்த்ரமா லிகைசொல்லு மியமநிய மாதியா
மார்க்கத்தி னின்றுகொண்டு
கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலாச நாதிசேர்த்துக்
காலைப் பிடித்தனலை யம்மைகுண் டலியடிக்
கலைமதியி னூடுதாக்கி
உருகிவரு மமிர்தத்தை யுண்டுண் டுறங்காம
லுணர்வான விழியைநாடி
ஒன்றோ டிரண்டெனாச் சமரச சொரூபசுக
முற்றிடவென் மனதின்வண்ணம்
திருவருண் முடிக்கவித் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

இ - ள். மருமலர்சோலை செறி - பரிமளப் பூஞ்சோலைகள் நெருங்கிய, நிழல் - நல்ல நிழலையுடைய, மலையாதி மன்னும் - மலை முதலான இடங்களில் நிலை பெற்றிருக்கிற, முனிவர்க்கு - முனிவரர்க்கு, ஏவலாய் - அடிமையாய், மந்த்ரமாலிகை சொல்லும் - மந்த்ரமாலிகையிற் சொல்லப்படுகிற, இயமநியமாதியாம் - இயம நியமாதிகளாகிற, மார்க்கத்தில் நின்றுகொண்டு - நெறியிலிருந்துகொண்டு, கருமருவு காயத்தை - கர்ப்பவேதனையை யநுபவித்த சரீரத்தை, நிர்மலம் ஆக - பரிசுத்தமாம்படி, கமலாசநாதி சேர்த்து - பத்மாசந முதலான ஆசந பேதங்களில் அமைத்து, காலைப்பிடித்து-ப்ராண வாயுவைத் தடுத்து, அனலை - மூலாக்கினியை, அம்மை குண்டலி அடி - தாயாகிய குண்டலி சத்தியின் திருவடியாகிய, கலைமதியி னூடுதாக்கி - கலைகள் நிறைந்த சந்த்ரனிடத்தில் தாக்கவிட்டு, உருகிவரும் - (அதினின்றும்) உருகி யொழுகாநின்ற, அமிர்தத்தை உண்டு உண்டு - அமுதத்தை யிடையறாதருந்தி, உறங்காமல் - கேவல நித்ரை செய்யாமல், உணர்வான விழியினாடி - ஞானக் கண்ணினாற் பார்த்து, ஒன்றோடு இரண்டு எனா - ஒன்றிரண்டென்று சொல்லப்படாத, சமரச சொரூபசுகம் - சமரசஸ்வ

ரூபானந்தத்தை, உற்றிட - அடையும்படி, என்மனதின் வண்ணம் - என் கருத்தின் பிரகாரம், திருவருள் முடிக்க - திருவருளானது முடித்துக் கொடுக்க, இத்தேகமொடு காண்பனோ - இந்தச் சரீரத்துட னிருக்கும் போதே காணப்பெறுவேனோ, தேட அரிய - தேடுத லரிதான, சத்து ஆகி - உண்மையாகி, என் சித்தமிசை குடிகொண்ட - என் மனத்திற் குடிகொண் டிருக்கிற, அறிவு ஆன தெய்வமே - ஞான ரூபமாகிய கடவுளே, தேஜோ மய ஆநந்தமே - தேஜோராசியாகிய இன்பமே. எ - று.

மந்த்ரமாலிகை - யோகநூல்களி லொன்று. கர்ப்பவேதனை ஐந்து வகைப்படும். அவை, கருப்பாசயத்திற் கட்டுப்பட்டிருத்தல், சலத்திலமிழ்ந் திருத்தல், உதராக்கினியாற் சுடப்படுதல், பிரசூதவாயுவினாற் றள்ளப்படுதல், யோநித்வார நெருக்குண்டல் என்பன.

மலைமுதலான இடங்களில் வசிக்கும் முனிவர்களுக் கடிமைப்பட்டு, இயம நியமாதி மார்க்கத்தை யநுசரித்து, அவைகட்குரிய பதுமாசநம் முத லானவைகளில் இத்தேகத்தைச்சேர்த்து, வாயுவை வசப்படுத்தி, மூலாக் கினியை யெழுப்பிச் சந்திரமண்டலத்தில் தாக்கவிட்டு, அதினின்று மொழு காநின்ற அமிர்தத்தைப் பருகி, ஞானக் கண்ணினால் பார்த்து, ஒன்றிரண் டென்று சொல்லப்படாத சமரச சொரூபாநந்தத்தை இத்தேகத்தோடு கூடி யிருக்கும்பொழுதே என் எண்ணப்படி திருவருள் முடித்துக்கொடுக் கப் பார்ப்பேனோ என்பதாம்.

2. இப்பிறவி யென்னுமோ ரிருட்கடலின் மூழ்கிநா
 னென்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினை யெனுந்திரையி னெற்றுண்டு புற்புத
 மெனக்கொங்கை வரிசைகாட்டுந்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
 சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத வாசையாங் கானாறு வானதி
 சுரந்ததென மேலுமார்ப்பக்
கைப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங்
 கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
 கண்ணருவி காட்டுமெளியேன்
செப்பரிய முத்தியாங் கரைசேர வுங்கருணை
 செய்வையோ சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
 தேசோ மயானந்தமே.

இ - ள். இப்பிறவி யென்னும் - இந்தப் பிறப்பென்கிற, ஒரு இருள் கடலில் மூழ்கி - ஒரு கருங்கடலில் முழுகி, நான் என்னும் - நானென்கிற, ஒரு மகரவாய் பட்டு - ஒரு முதலைவாயிலகப்பட்டு, இருவினை யென்னும் - இருவினைகளென்கிற, திரையின் - அலைகளால், எற்றுண்டு - எறியப்பட்டு, புற்புதம் என - நீர்க்குமிழிபோல, கொங்கைவரிசை காட்டும் - கொங்கைகளின் ஒழுங்கைக்காட்டுகின்ற, துப்பு இதழ் - பவளத்துண்டுபோன்ற அதரத்தையுடைய, மடந்தையர் - மாதர்களுடைய, மயல் - காமமயக்கமாகிய, சண்டமாருதச்சுழல் - சுழற்சியையுடைய பெருங்காற்றானது, வந்து வந்து அடிப்ப - பலகாலும் வந்து தாக்க, சோராத ஆசை ஆம் கான் ஆறு - குறையாத ஆசையாகிய காட்டாறு, வான் நதி சுரந்தது என - ஆகாயகங்கை பெருகினாற்போல, மேலும் ஆர்ப்ப - மேலுமேலும் வந்துமோத, கைப் பரிசுகாரர்போல் - கைப்புணைக்காரர்போல, அறிவான வங்கமும் கைவிட்டு - ஞானமாகிய மரக்கலத்தையுங் கைவிட்டு, மதிமயங்கி - புத்திகலங்கி, கள்ள வங்கம்காலர் - திருட்டுக் கப்பலையொத்த யமபடர், வருவர் என்று அஞ்சி - வருவார்களென்று பயந்து, கண் அருவி காட்டும் எளியேன் - கண்ணீரருவியைக் காட்டுகின்ற எளியேன், செப்பு அரிய - சொல்லுதற் கரிய, முத்தி ஆம் கரைசேரவும் - முத்தி என்கிற கரையை யடையவும், கருணைசெய்வையோ - கிருபை செய்வையோ, சத்தாகி என் சித்தமிசை. எ - று.

கள்ள அங்கம் காலர் எனப்பிரித்து கரிய சரீரத்தையுடைய யமபடர் எனினுமாம். பரிசு - மூங்கிலினால் கூடைபோல வட்டமாகப் பின்னி மேற்புறத்தில் தோலால் மூடப்பட் டிருப்பதாகிய ஒருவகைத் தெப்பம். இது இக்காலத்துந் தென்னாட்டில் காவேரிமுதலிய நதிகளிலுண்டு.

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின்வாய்ப் பட்டு."—என்று இவ்வாறு பிறவிமுதலியவற்றைக் கடல் முதலியவாக மேலோர் கூறுதலுங் காண்க.

இந்தப் பிறவியாகிய கடலில் முழுகி, அகங்காரமாகிய முதலைவாயிற் சிக்கி, இருவினைகளாகிய அலைகளால் எறியப்பட்டு, மாதர்களுடைய காமமயக்கமாகிய சுழற்காற்றடிக்க, ஆசையாகிய காட்டாறு மேன்மேலும் வந்து மோத, சிறு தோணிக்காரர்போல, ஞானமாகிய மரக்கலத்தையும் கைசோரவிட்டு, மதிமயங்கி, திருட்டுக் கப்பல்போன்ற யமதூதர் வருவரோ யென்று அஞ்சி அருவியாறுபோலக் கண்ணீரைப்பெருக்கி நிற்கும் எளியேன் மோக்ஷமாகிய கரையைச் சேரும்படிக்குக் கருணை செய்வாயோ என்பதாம்.

3. தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரஜா லக்கோலம்
வஞ்சனை பொறாமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனை யிலாதகனவே
யெந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
யிரவுபக லில்லாவிடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைதான் றெளியாது சுழலும்வகை யென்கொலோ.
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

இ - ள். தந்தை - தகப்பன், தாய் - மாதா, தமர்-உறவோர், தாரம்-மனைவி, மகவு - குழந்தை, என்னும் - என்று சொல்லப்படுகிற, இவையெல்லாம் - இப்பொருள்களெல்லாம், சந்தையில் கூட்டம் - சந்தையில் கூடுங் கூட்டத்தையொக்கும், இதிலோ சந்தேகம் இல்லை - இதனிடத்திலோ ஐயமில்லை, மணிமாடம் - ரத்நகசிதமான வீடுகள், மாளிகை - மாளிகைகள், மேடை - மேடைகள், சதுரங்க சேனையுடனே - சதுரங்க சேனைகள் ஆகிய இவற்றோடு, வந்தது - உண்டானதாகிய, ஓர் வாழ்வும் - ஒப்பற்ற வாழ்க்கையும், ஓர் இந்த்ரஜாலக்கோலம் - ஓர் இந்த்ரஜாலத்தி னழகையொக்கும், வஞ்சனை - வஞ்சகம், பொறாமை - பொறாமைக்குணம், லோபம் - உலோப குணம், (ஆகிய இவைகள்) வைத்த - தன்னிடத்து வைக்கப்பட்ட, மனம் ஆம் கிருமி சேர்ந்த - மனமாகிய புழுச்சேர்ந்த, மலபாண்டமோ - மலபாண்டமாகிய தேகமோ, வாஞ்சனையிலாத கனவே - விருப்பஞ் செய்யப்படாத சொப்பனமே, (இவ்விஷயங்களை) எந்தநாளும் - (பெருக்கம் சுருக்கம் என்கிற) எக்காலமும், சரியெனத் தேர்ந்து தேர்ந்து - சரியென்றாய்ந்து தெளிந்து, இரவு பகல் இல்லாவிடத்து - இராப்பகலற்ற விடத்தில், ஏகமாய் நின்ற - ஒன்றாகிநின்ற, நின் அருள் வெள்ளமீதில் - உன் திருவருள் வெள்ளத்தில், யான் என்பது அறவும் மூழ்கி - யானென்னுஞ் செருக்கற்றொழிய மூழ்கி, சிந்தை - மனமானது, தெளியாது-தெளியாமல், சுழலும்வகை என் கொல் - சுழலும்விதம் யாது, தேடரிய சத்தாகி. எ-று.

மலபாண்டம் - மலம் பொதிந்த பாத்திரம். ஒருகாலத்தில் ராஜாதிகாரத்தால் பலபொருள்களும் ஓரிடத்தில் வந்துசேர்தற்குரிய சந்தையில் கொள்வோர் பலர்வந்து நெருங்குதல்போல, வினைவயத்தால் வந்து ஒரு குடும்பத்திற் கூடுவோராதலால், தந்தை தாய் தமர் தார மக வென்னுமிவை யெலாஞ் சந்தையிற் கூட்டமென்றார். சதுரங்கம் - அரசர்க்குரிய நால் வகைப்படை. அவை, தேர், யானை, குதிரை, காலாள் என்பன.

தாய்தந்தை முதலானோர் சந்தையிற் கூடிய கூட்டம் போல்வார், மாடமாளிகை சதுரங்கசேனை என்பவற்றோடு கூடிய வாழ்வு இந்திரஜாலம்போல்வது, வஞ்சனை முதலானவைகளுக் கிடமாகிய சரீரமோ சொப்பனம்போல்வது, இவைகளை எக்காலத்தும் உயர்வுதாழ்வு கருதாது ஒரு நிகரனவாகத் தெளிந்து, என்மனமானது ஒருநிலையில் நில்லாமல் சுழலுதற்குக் காரணம் யாது என்பதாம்.

4. ஆடாம லோய்ந்திட்ட பம்பரம் போல்விசை
யடங்கிமனம் வீழநேரே
யறியாமை யாகின்ற விருளகல விருளொளியு
மல்லா திருந்தவெளிபோற்
கோடா தெனைக்கண் டெனக்குணிறை சாந்தவெளி
கூடியின் பாதீதமுங்
கூடினே ஞெசரியை கிரியையின் முயன்றுநெறி
கூடினே ஞேவல்லனியா
னீடாக வேயாறு வீட்டினி னிரம்பியே
யிலகிவளர் பிராணனென்னு
மிருநிதி யினைக்கட்டி யோகபர னுகாம
லேழைக் குடும்பனாகித்
தேடா தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

இ - ள். ஆடாமல் ஓய்ந்திட்ட பம்பரம்போல் - ஆடாமல் நின்றுவிட்ட பம்பரம்போல, மனம் விசை அடங்கி வீழ - மனமானது விசையொடுங்கி விழவும், நேரே - நேராக, அறியாமையாகின்ற, அஞ்ஞானமாகிய, இருள் அகல - இருள் நீங்கவும், இருள் ஒளியும் - இருள் ஒளிக ளிரண்டும், அல்லாதிருந்த - அல்லாமலிருந்த, வெளிபோல் - பரமாகாயம் போல, கோடாது என்னைக்கண்டு - பிசகாமல் என்னைப்பார்த்து, எனக்குள் நிறை - என்னுள்ளே நிறைந்த, சாந்தவெளி கூடி - உபசாந்தமென்னும் ஆகாயத்திற்சேர்ந்து, இன்ப அதீதமும் கூடினேனோ - சுகாதீத நில

யத்தையு மடைந்தேனே, சரியை கிரியையில் முயன்று - சரியை கிரியை யில் முயற்சிசெய்து, நெறி - சன்மார்க்கத்தை, கூடினேனே - சேர்ந்தேனே, அல்லன் யான் - அப்படி யல்லாதவனாகிய நான், ஈடாக - பெருமையாக, ஆறு வீட்டினில் நிரம்பி - (ஆறாதாரங்களாகிய) ஆறு வீடுகளில் நிறைந்து, இலகி வளர் - பிரகாசித்து வளர்கின்ற, பிராணன் என்னும் - பிராணவாயு வென்கிற, இருநிதியினைக் கட்டி - பெரிய திரவியத்தைக் கட்டி, யோக பரன் ஆகாமல் - யோகவானாகாமல், ஏழை குடும்பன் ஆகி - ஏழைக்குடி யாகி, தேடாது அழிக்க - தேடாமல் செலவுசெய்ய, ஒரு மதிவந்தது - ஒரு புத்தி யுண்டாயிற்று, என் - (இதற்குக் காரணம்) யாது, தேடரிய சத்தாகி —எ - று.

இரு ளொளியு மல்லா திருந்த வெளி - சதோதயமாய் விளங்கும் பர மாகாசம். யோகபரன் - யோகநிலை கைவந்தவனும் அத்ருஷ்டவானும். ஆடிக்கொண்டிருந்த பம்பரமானது ஆட்டந் தவிர்ந்து விழுந்து அசைவறக் கிடந்தாற்போல, மனம் புலன் வழியிற் சென்றலையாமல் அசைவற் றிருக் கும்படி அஞ்ஞானம் நீங்க, சதோதயமாய் விளங்கும் பரமாகாயத்தை அடைந்து சுகாதிசயத்தையு மடைந்தே னல்லன், சரியையாதி பாதங்களும் கைவரப் பெற்றேனல்லன்; ஆறாதாரங்களிலும் வியாபித்து விளங்குகின்ற பிராணவாயு வென்கிற பெருஞ்செல்வத்தைக் கட்டிவைத்து யோகபரன் ஆகாமல் ஏழையாகி, தேடாமல் செலவு செய்ய ஒரு புத்தி எனக்குண்டா யிற்று. இதற்குக் காரணம் என்னே என்பது கருத்து.

**5.** பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
அருசபதி சொல்லனிவனைப்
பார்மினோ பார்மினோ வென்றுசபை கூடவும்
பரமார்த்த மிதுவென்னவே
ஆடாது மாடிநெஞ் சுருகிநெக் காடவே
யமலமே யேகமேயெம்
ஆதியே சோதியே யெங்குநிறை கடவுளே
யரசே யெனக்கூவிநான்
வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு
வாடா வெனக்கருணை நீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாவிந்த
வன்மையை வளர்ப்பித்ததார்
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.
20

இ - ள். பாடாது பாடி படித்து - பாடாததெல்லாம் பாடிப் படித்து, அளவு இல் - அளவற்ற, சமயமும் - சமயங்களும், பஞ்சுபடு சொல்லன் இவனை-பஞ்சுபோலப் பறக்கும் நொய்மையான சொற்களையுடைய இவனை, பார்மின் பார்மின் என்று-பாருங்கள் பாருங்கள் என்று சொல்லிக்கொண்டு, சபை கூடவும் - சபை சேரவும், இது பரமார்த்தம் என்ன - இது மேலான பொருளென்று, ஆடாதும் ஆடி - ஆடாத வகையாய்க் கூத்தாடி, நெஞ்சு உருகி நெக்கு ஆட-மனமுருகி நெகிழ்ந்தாட, அமலமே-பரிசுத்த வஸ்துவே, ஏகமே - ஒன்றே, எம் ஆதியே - எமக்குக் காரண பூதனே, சோதியே - ஒளியே, எங்கும் நிறை கடவுளே - எவ்விடத்தும் நிறைந்திருக்குங் கடவுளே, அரசே - அரசனே, எனக் கூவி - என்று பலவகையாக அழைத்து, நான் வாடாது வாடும் - நான் (ஒருவரும்) வாடாத வகையாய் வாடுகின்ற, என் முகவாட்டமும் கண்டு - என் முகவாட்டத்தையும் பார்த்து, வாடா என - வாடா வென்று, நீ கருணை வைத்திடாவண்ணம் - நீகருணை செய்யாதவகை, சங்கேதமா - நியமமாக, இந்த வன்மையை வளர்ப்பித்தது ஆர் - இந்தக் கடினத் தன்மையை விருத்தி யடைவித்தது யார், தேடாது தேடுவார் - தேடாது தேடுவோராகிய அறிஞர்க்கும், தேட்டு அற்ற தேட்டமே - தேடுதலில்லாத திரவியமே, தேட்ரிய சத்தாகி—எ-று.

தேடாது தேடுவோர் - தற்போதத்தை முன்னிடாது திருவருளை முன்னிட்டுத் தேடுவோர். அளவற்ற சமயத்தார் என்னை நோக்கி, இவன் பஞ்சுபோல மிகவும் நொய்தாய்ப் பறக்கும் சொற்களையுடைய ஏழை; இவனைப் பாருங்களென்று சபை கூடவும், அதைச் சகியாமல் நான் வாடும் வாட்டத்தைக் கண்டும் இரங்காத மன வன்மையை உனக்கு உற்பித்தது யார் என்பது கருத்து.

**6.** பிறியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையை யளித்தனையென் மனநறப்
பேரம் பலக்கடவுளாய்
அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டியே
யமிர்தப்ர வாகசித்தி
அருளினை யலாதுதிரு வம்பலமு மாகியெனை
யாண்டனைபி னெய்திநெறியாய்க்
குறிதா னளித்தனைநன் மரவுரிகொளந்தணக்
கோலமா யசபாநலம்
கூறினபின் மௌனியாய்ச் சும்மாவிருக்கநெறி
கூட்டினை யெலாமிருக்கச்

சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ
 தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
 தேசோ மயானந்தமே.

இ - ள். பிறியாத - நீங்காத, தண் அருள் - தண்ணிய அருளையுடைய, சிவஞானியாய் வந்து - சிவஞானியாகி வந்து, பேசு அரிய வாசியால் - சொல்லுதற்கரிய வாயுதாரணையினுல், பேரின்ப வுண்மையை - பேராநந்த வுண்மையை, அளித்தனை - கிருபை செய்தாய், என் மனது அற - என் மனமிறக்க, பேரம்பலக் கடவுளாய் - பேரம்பலக் கடவுளாகி, அறிவா யிருந்திடும் - அறிவுருவா யிருக்கின்ற, நாதவொலி காட்டி - நாத வோசையைக் காட்டி, அமிர்த ப்ரவாக சித்தி - அமிர்தப் பெருக்கின் பேற்றை, அருளினை - அருள் செய்தாய், அலாது - அன்றியும், திருவம்பலமும் ஆகி - திருவம்பல ரூபமுமாகி, என்னை யாண்டனை - என்னை யாட்கொண்டாய், பின் எய்தி - பிறகு வந்து, நெறி ஆய் - முறைமையாய், குறிதான் அளித்தனை - இலக்கையு மருள்செய்தாய், நல் மரவுரிகொள் - சிறந்த மரவுரியைத் தரித்த, அந்தணக் கோலமாய் - அந்தண வடிவமாகி, அசபாநலம் கூறினபின் - அஜபாக்கினியை எனக் குபதேசித்த பிறகு, மௌனி ஆய் சும்மா இருக்க - மௌனியாகிச் சும்மா விருக்கும்படி, நெறி கூட்டினை - நன்னெறிக்கட் சேர்த்தாய், எல்லாம் இருக்க - இவைகளெல்லா மிருக்க, சிறியேன் - சிறியேனுகிய நான், மயங்கி - மயக்கங்கொண்டு, மிக அறிவின்மை யாவனோ - மிகுதியும் அஞ்ஞானியாய் விடுவேனோ, தேடரிய சத்தாகி—எ-று.

வாசி - குதிரை. அது இவ்விடத்துக் காற்றை யுணர்த்தி நின்றது. உண்மை - உளதாந் தன்மை. பேரம்பலம் - சிற்சபை. அஜபம் - செபியாது செபித்தல். வினைகளை நீறுபடுத்தலால் அஜபத்தை அக்கினி யென்றூர். இது "பொன் னம்பலத்தாடியை யைந்தெழுத்தாற் செவியாது நீ செவித்தாற் பிறவாமுத்தி சித்திக்குமே" என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கானு முணர்க. சிவஞானி முதலாகிய பல வுருவங்களாய் வந்து நீ உபகரித்திருந்தும், சிறியேன் மயங்கி அஞ்ஞானியாய் விடவோ என்பது கருத்து.

7. ஆரா ரெனக்கென்ன போதித்து மென்னவென்
 னறிவினை மயக்க வசமோ
அண்டகோ டிகளெலாங் கருப்பவறை போலவு
 மடுக்கடுக் காவமைத்துப்
பேராம லின்றபர வெளியிலே மனவெளி
 பிறங்குவத லாதொன்றினும்

பின்னமுற மருவாது நன்னயத் தாலினிப்
பேரின்ப முத்திநிலையும்
தாராது தள்ளவும் போகாது ஞலது
தள்ளினும் போகேனியான்
நடையேது மில்லையாண் டவனடிமை யென்னுமிரு
தன்மையினு மென்வழக்குத்
தீராது விடுவதில்லை நடுவான கடவுளே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

இ - ள். எனக்கு - அடியேனுக்கு, ஆர் ஆர் - எவ்வெவரும், என்ன போதித்தும் - எதைப் போதிப்பினும், என்ன - என்ன லாபம், என் அறிவினை மயக்க வசமோ - என் புத்தியைப் பேதிக்க வசமாகுமோ, அண்டகோடிகள் எல்லாம் - அண்டகோடிகளை யெல்லாம், கருப்ப அறைபோலவும் - கர்ப்பவீடுபோலவும், அடுக்கு அடுக்கா அமைத்து - வரிசை வரிசையாயமைத்து, பேராமல் நின்ற - நிலைபெறுது நின்ற, பரவெளியிலே - பரமாகாயத்தில், மனவெளி பிறங்குவது அல்லாது - மனுகாயம் பிரகாசிப்பதன்றி, ஒன்றினும் - மற்றென்றினும், பின்னம் உற மருவாது - அழியும்படி பொருந்தாது, நல் நயத்தால் - நல்ல விருப்பத்தால், இனி - இனி, பேரின்ப முத்திநிலையும் - பேரானந்த ஹேதுவான மோக்ஷநிலையையும், தாராது - கொடாமல், தள்ளவும் போகாது - தள்ளவும்படாது, உன்னுல் அது தள்ளினும் - உன் நியமனத்தால் அது தள்ளினுலும், யான் போகேன் - நான் போகமாட்டேன், தடை யேதும் இல்லை - தடை சிறிது மில்லை, ஆண்டவன் அடிமை யென்னும் - ஆண்டான் அடிமை யென்கிற, இருதன்மையிலும் - இரு தன்மையினுலும், என் வழக்கு தீராது - என் விவகாரம் தீர்ந்தொழியாது, (ஒழியாவிடினும்) விடுவது இல்லை - நானே விடுதல் இல்லை, நடுவான கடவுளே - நடுவு நிலைமையுள்ள கடவுளே, தேடரிய சத்தாகி—எ-று.

நடுவாதல் - பஞ்சகிருத்தியங்களுக்கும் பொதுவாதல். பஞ்சகிருத்தியங்களாவன: சிருட்டி, 'திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. யாரென்ன சொன்னுலும் என் புத்தியை மயக்க வசமாகுமோ? பரவெளியில் என் மனம் பொருந்துவதன்றி வேறென்றிற் பொருந்தாது. இனி முத்தியைத் தராமல் தள்ளினுலும் நான் போகமாட்டேன். நீயும் நானும் ஆண்டான் அடிமை என்கிற வழக்கும் ஒழியாது, ஆதலால் உன்னை விடமாட்டேன் என்பதாம்.

8. கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
 கரடிவெம் புலிவாயையும்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
 கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
 வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாம லுலகத் துலாவலாம்
 விண்ணவரை யேவல்கொளலாம்
சந்ததமு மிளமையொ டிருக்கலா மற்றொரு
 சரீரத்தி னும்புகுதலாம்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
 தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
 திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
 தேசோ மயானந்தமே.

இ-ள். கந்துக மதக்கரியை வசமா நடத்தல் ஆம் - குதிரைகளையும் மதயானைகளையும் வசப்படுத்தி நடத்தல் கூடும், கரடி வெம் புலிவாயையும் கட்டலாம் - கரடி வாயையும் வெம்புலி வாயையும் கட்டுதல் கூடும், ஒரு சிங்கம் முதுகின்மேற் கொள்ளலாம் - ஒப்பற்ற சிங்கத்தின் முதுகிலேறி உட்கார்ந்திருத்தல் கூடும், கட்செவி எடுத்து ஆட்டலாம் - பாம்புகளைப் புற்றினின்றும் வெளிப்படுத்தி யாட்டுதல் கூடும், வெம் தழலின் - வெவ்விய நெருப்பில், இரதம் வைத்து - பாதரசத்தை யிட்டு, ஐந்துலோகத்தையும் - பஞ்ச லோஹங்களையும், வேதித்து - ஸ்பரிசவேதி செய்து, விற்று - விக்ரயித்து, உண்ணலாம் - (அப்பொருளைக்கொண்டு) உண்டு பிழைக்கலாம் வேறொருவர் காணாமல் - வேறொருவர் பாராதிருக்க, உலகத்து உலாவலாம் - உலகின்கண் சஞ்சரிக்கலாம், விண்ணவரை ஏவல் கொளலாம் - தேவர்களை ஏவல் கேட்கப் பண்ணலாம், சந்ததமும் - சதாகாலமும், இளமையொடு இருக்கலாம் - இளமைப்பருவத்துட னிருக்கலாம், மற்றொரு சரீரத்தினும் புகுதலாம் - வேறொரு சரீரத்தினும் பிரவேசிக்கலாம், சலமேல் நடக்கலாம் - நீரின்மேல் நடக்கலாம், கனல்மேல் இருக்கலாம் - நெருப்பின்மேல் தங்கி யிருக்கலாம், தன் நிகர் இல் சித்தி பெறலாம் - தனக்குச் சமான மில்லாத (பிற) சித்திகளையும் பெறலாம், சிந்தையை அடக்கி - மனத்தை யடக்கி, சும்மா இருக்கின்ற திறம் அரிது - சும்மா விருக்கும்வகை யருமையாகும், சத்தாகியென் சித்தமிசை—எ-று.

கந்துகம் - குறுநிலமன்னர் குதிரை. பஞ்ச லோஹங்கள் - பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்பன. ஸ்பரிசவேதி செய்தல் - பொன்னாக்குதல். மற்றொரு சரீரத்திற் புகுதலைப் பரகாய ப்ரவேச மென்பர் வடநூலார். சலமேல் நடத்தலையும் கனன்மே லிருத்தலையும் முறையே ஜலஸ்தம்பனமெனவும் அக்நிஸ்தம்பனமெனவுங் கூறுவர். மிருகங்களுள் தனக்குச் சமானமற்ற தாதலால், சிங்கத்தை ஒரு சிங்கமென்றார். மதயானை சிங்கம் முதலியவற்றை அடக்கி யாளலாம், மனத்தை யடக்கிச் சும்மா விருத்தல் அரிது என்பதாம்.

9. எல்லா மறிந்தவரு மேதுமறி யாதவரு
 மில்லையெனு மிவ்வுலகமீ
 தேதுமறி யாதவ னெனப்பெயர் தரித்துமிக
 வேழைக்கு ளேழையாகிக்
 கல்லாத வறிவிற் கடைப்பட்ட நானன்று
 கையினு லுண்மைஞானம்
 கற்பித்த நின்னருளி னுக்கென்ன கைம்மாறு
 காட்டுவேன் குற்றேவனான்
 அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற்
 றுபாச வடிவமான
 வந்தகா நீயொரு பகட்டாற் பகட்டுவ
 தடாதடா காசுநம்பால்
 செல்லாத டாவென்று பேசவா யதுதந்த
 செல்வமே சத்தாகியென்
 சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
 தேசோ மயானந்தமே.

இ - ள். எல்லாம் அறிந்தவரும் - எல்லாம் தெரிந்தவர்களும், ஏதும் அறியாதவரும் - ஒன்றுந் தெரியாதவர்களும், இல்லை என்னும் - இல்லையென்று சொல்லுதற்குரிய, இவ்வுலகமீது - இந்த வுலகத்தில், ஏதும் அறியாதவன் என - ஒன்று மறியாதவ னென்று, பெயர் தரித்து - பெயர்படைத்து, மிக ஏழைக்குள் ஏழையாகி - மிகவும் அறிவில்லாதவர்களுக்குள் அறிவில்லாதவனாய், கல்லாத அறிவின் - (கற்கவேண்டுமவற்றைக்) கல்லாத புல்லறிவினால், கடைப்பட்ட நான் - கடையாகிய நான், அன்று - அக்காலத்தில், கையினால் - கையமைப்பால், உண்மை ஞானம் கற்பித்த - மெய்ஞ்ஞானத்தைக் கற்பித்த, நின் - உனது, அருளினுக்கு - திருவருளுக்கு, குற்றேவல் நான் - குற்றேவற்குரிய அடியனேன், என்ன கைம்மாறு காட்டுவேன் - என்ன பிரதியுபகாரம் செய்யவல்லேன், அல் ஆர்ந்த மேனியொடு - இருள் நிறைந்த வுடம்போடு, குண்டுகண் - ஆழ்ந்த கண்களையும், பிறை எயிறும் -

பிறைபோன்ற கோரதந்தங்களையுமுடைய, ஆபாசவடிவமான - பார்த்தோர் அஞ்சத்தக்க பயங்கரமான ரூபத்தோடு கூடிய, அந்தகா - யமனே, நீ ஒரு பகட்டால் பகட்டுவது - நீயொரு கடாவைக்கொண்டு மயக்குதல் அடாதடா - தகாதடா, காசு நம்பால் செல்லாதடா - உன் காசு நம்மிடத்தில் செல்லா தடா, என்றுபேச - என்று உரப்பிப் பேசுதற்கு, வாய் தந்த - வாக்குக்கொடுத்த, செல்வமே - எனது நிதியே, சத்தாகியென் சித்தமிசை—எ-று.

செய்தற் கிசையாவிடினும் என்பார் 'என்ன கைம்மாறு காட்டுவேன்' என்றார். கடவுளருள் பெற்றோர் இவ்வாறு கூறுதல் "பட்டிக்கடாவில் வரு மந்தகா வுனைப் பாரறிய - வெட்டிப் புறங்கண்டலாதுவிடேன் வெய்ய சூரனைப்போய் - முட்டிப்பொருத செவ்வேற் பெருமாடிரு முன்பு நின்றேன் - கட்டிப் புறப்படடா சத்திவாளென்றன் கையதுவே" என்றற் றொடக்கத் தனவற்றிற் காண்க.

**10.** மின்போலு மிடையொடியு மொடியுமென மொழிதல்போன்
மென்சிலம் பொலிகளார்ப்ப
வீங்கிப் புடைத்துவிழு சுமையன்ன கொங்கைமட
மின்னார்கள் பின்னுவலால்
என்போ லலைந்தவர்கள் கற்றார்கள் கல்லார்க
ளிருவர்களி லொருவருண்டோ
என்செய்கே னம்மம்ம வென்பாவ மென்கொடுமை
யேதென் றெடுத்துமொழிவேன்
அன்பால் வியந்துருகி யடியற்ற மரமென்ன
வடியிலே வீழ்ந்துவீழ்ந்தெம்
அடிகளே யுமதடிமை யாங்களெனு நால்வருக்
கறமாதி பொருளுரைப்பத்
தென்பாலின் முகமாகி வடவா லிருக்கின்ற
செல்வமே சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

இ - ள். மின்போலும் இடை - மின்னற் கொடியை யொத்த இடையானது, ஒடியும் ஒடியும் என மொழிதல் போல் - ஒடியு ஒடியுமென்று சொல்லுதல்போல, மென் சிலம்பு ஒலிகள் ஆர்ப்ப - மெல்லிய காற்சிலம் போசைகள் ஆரவாரிக்க, வீங்கி - பருத்து, புடைத்து - புடைகொண்டு, விழு - (சிலநாளில்) தளர்ந்தொழியாநின்ற, சுமை அன்ன - பெரும்பாரத்தை யொத்த, கொங்கை - ஸ்தனங்களையுடைய, மடமின்னார்கள்பின் - இளமைபொருந்திய மாதர்களின்பின், ஆவலால் - (அவர்கள்மேல் வைத்த) விருப்பத்தால், என்போல் அலைந்தவர்கள் - என்னைப்போலத் திரிந்தவர்கள் கற்

ரூர்கள் கல்லார்கள் - கற்றவர்கள் கல்லாதவர்கள் என்கிற, இருவர்களில் - இருதிறத்தாருள், ஒருவர் உண்டோ - ஒருவராயினு முளரோ, என்செய்கேன் - என்ன செய்வேன், என்பாவம் - என் பாவத்தையும், என்கொடுமை - என் கொடுமைகளையும், ஏதென்று எடுத்து மொழிவேன் - என்னென்றெடுத்துச் சொல்வேன், அன்பால் வியந்து உருகி - அன்பினால் துதித்து மனங்கரைந்து, அடி அற்ற மரம் என்ன - வேரற்றமரம்போல, அடியிலே வீழ்ந்து வீழ்ந்து - உனது திருவடியில் விழுந்து விழுந்து, எம் அடிகளே - எமது கடவுளே, யாங்கள் உமது அடிமை என்னும் - நாங்கள் உமது அடிமைகள் என்று ப்ரார்த்தித்த, நால்வருக்கு - சநகாதிகளாகிய நால்வருக்கும், அறமாதி பொருள் உரைப்ப - தர்மாதிகளாகிய பொருள்களை உபதேசித்தற்காக, தென்பாலின் முகமாகி - தெற்குத் திசையின் முகமாகி, வடவால் இருக்கின்ற - கல்லாலின் நிழலில் எழுந்தருளி யிருக்கின்ற, செல்வமே - (எமது) நிதியே, சத்தாகி யென்சித்தமிசை—எ-று.

அம்மம்ம என்பது உரையசை யடுக்கு. அறமாதிபொருள் - தர்மார்த்த காம மோக்ஷங்கள். மடமின்னார்கள்பின் னேவலாய் என்றும் பாடம்.

**11.** புத்தமிர்த போகமும் கற்பகநன் னீழலிற்
பொலிவுற விருக்குமியல்பும்
பொன்னுலகி லயிரா வதத்தேறு வரிசையும்
பூமண்ட லாதிக்கமும்
மத்தவெறி யினர்வேண்டு மாலென்று தள்ளவுமே
மானுமொரு சுட்டுமறவே
வைக்கின்ற வைப்பாளன் மௌனதே சிகனென்ன
வந்தநின் னருள்வாழிகாண்
சுத்தபரி பூரண வகண்டமே யேகமே
சுருதிமுடி வானபொருளே
சொல்லரிய வுயிரினிடை யங்கங்கு நின்றருள்
சுரந்துபொழி கருணைமுகிலே
சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

இ - ள். புத்தமிர்த போகமும் - நூதந மாகிய அமிர்தாநுபவமும், கற்பக நல் நீழலில் - கற்பக விருக்ஷத்தின் நல்ல நிழலில், பொலிவுற இருக்கும் இயல்பும் - ப்ரகாசமாக வீற்றிருக்குந் தன்மையும், பொன்னுலகில் - ஸ்வர்க்க லோகத்திலுள்ள, அயிராவதத்து ஏறு - ஐராவதமென்னும் யானையின்மே லேறுகின்ற, வரிசையும் - சிறப்பும், பூமண்டல ஆதிக்கமும் -

பூமண்டலத்தில் ஏற்றமும், மத்த வெறியினர் வேண்டும் - பிரபஞ்ச மாயை யாகிய உன்மத்தங்கொண்ட வெறியாளரால் விரும்பப்படுகின்ற, மால் - ஆசையின் விவகாரம், என்று - என்று துணிந்து, தள்ளவும் - நீக்கவும், எம் மாலும் - எங்களாலும், ஒரு சுட்டு அறவும் - ஒரு சுட்டுதல் அற்றொழியவும், வைக்கின்ற வைப்பாளன் - எம்மை (மௌன நிலையில்) வைக்கின்ற பெரு மையாளன், மௌனதேசிகன் என்ன - மௌன குருவென்று சொல்லும் படி, வந்த - எனக்குக்கிடைத்த, நின் அருள்வாழி - உன் திருவருள்வாழ்க, சுத்தபரிபூரண அகண்டமே - சுத்தமும் மிகு பூர்த்தியுமுள்ள அகண்ட ரூப மே, ஏகமே - தனிப்பொருளே, சுருதி முடிவு ஆனபொருளே - வேதாந்த மாகிய வஸ்துவே, சொல் அரிய - அளவிட்டுச் சொல்லுதற்கரிய, உயிரி னிடை - சீவர்களிடத்து, அங்கு அங்குநின்று - அவ்வவ்விடங்களில் வியா பித்துநின்று, அருள் சுரந்து பொழி - அருள் மழையைச் சுரந்து பொழியா நின்ற, கருணைமுகிலே - கருணையாகிய மேகமே, சித்திநிலை - சித்திநிலை, முத்திநிலை - முத்திநிலைகளாகிய பயிர்கள், விளைகின்ற பூமியே - விளைகின்ற நன்னிலமே, தேடரிய சத்தாகி யென்சித்தமிசை—எ-று.

சுத்தபரிபூரணத்வம் முதலிய குணகண விபூஷிதனே, அமிர்தானுபவம் முதலாகிய இந்திரபோகமும் பூமண்டலபோகமும் பித்தர் வேண்டுவனஎன்று அவற்றினியல்புகளை யறிவுறுத்தொழித்து, சுட்டற, மௌனநிலையில் என்னை நிறுத்தற் பொருட்டு மௌன தேசிக ரூபமாகி வந்த உன் பெருங் கருணை வாழக்கடவது என்பதாம்.

---

## சிற்சுகோதயவிலாசம்.

பதினன்குசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

1. காகமோடுகழு கலகை நாய்நரிகள்
 சுற்றுசோறிடு துருத்தியைக்
 காலிரண்டுநவ வாசல் பெற்றுவளர்
 காமவேட்டன சாலையை
 மோகவாசைமுறி யிட்டபெட்டியைமு
 மலமிகுந்தொழுகு கேணியை
 மொய்த்துவெங்கிருமி தத்துகும்பியை
 முடங்கலார்கிடை சரக்கினை
 மாகவிந்த்ரதனு மின்னையொத்திலக
 வேதமோதிய குலாலனார்
 வனையவெய்யதடி காரனாயமன்
 வந்தடிக்குமொரு மட்கலத்

தேக மானபொயை மெய்யெ னக்கருதி
ஐயய வையமிசை வாடவோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

இ - ள். காகமோடு - காகங்களுடன், கழுகு கழுகுகளும், அலகை - பேய்களும், நாய் - நாய்களும், நரிகள் - நரிகளும், சுற்று - சுற்றுதற்கேது வாகிய, சோறு இடு துருத்தியை - சோற்றைத் திணித்த தோற்பையை, இரண்டுகால் - இரண்டுகால்களையும், நவவாசல் - ஒன்பது வாயில்களையும், பெற்றுவளர் - பெற்று விருத்தியடையாநிற்கிற, காமவேள் நடன சாலையை - மன்மதனது நாட்டிய சாலையை, மோகம்ஆசை முறி இட்ட பெட்டியை - மோகம்ஆசை என்னு மிவற்றை யெழுதிய முறிச்சீட்டைச் சேமித்து வைத்திருக்கிற பெட்டியை; மும்மலம் மிகுந்து ஒழுகு கேணியை - மும்மலங்கள் அதிகரித் தொழுகாநின்ற கிணற்றை, வெங்கிருமி - வெவ்விய புழுக்கள், மொய்த்து - நெருங்கி, தத்து - நெளியாநின்ற, கும்பியை - நரகத்தை, முடங்கல் ஆர் - குற்றம் நிறைந்த, கிடைசரக்கினை - கிடைச்சரக்கை, மாகம் - ஆகாயத்தில் காணப்படுகிற, இந்த்ர தநு - இந்திரவில்லையும், மின்னை - மின்னலையும், ஒத்து - நிகர்த்து, இலக - விளங்கும்படி, வேதம் ஓதிய குலாலனுர் - வேதங்களைப் படித்த குயவர், வினைய - உண்டாக்க, யமன்ஆன - யமனாகிய, வெய்யதடிகாரன் - வெவ்விய தடிகாரன், வந்து அடிக்கும் - வந்துஉடைக்கின்ற, ஒரு மட்கலம் - ஒருமட்கலம்போன்ற, தேகமான - உடம்பாகிய, பொய்யை - பொய்ப்பொருளை, மெய் எனகருதி - மெய்ப்பொருளென்று நினைத்து, ஐய - ஐயனே, வையமிசை வாடவோ - உலகின்மேல் வாடிநிற்கவோ, தெரிவதற்குஅரிய - அறிதற்கரியதாகிய, பிரமமே - பிரமப்பொருளே, அமலம் - பரிசுத்தமாகிய, சிற்சுகோதயவிலாசமே - ஞானசுகோதய லீலையே—எ - று.

மும்மலங்க ளாவன: ஆணவம், மாயை, காமியம் என்பன. வேதமோதிய குலாலனுர் பிரமன், கிடைச்சரக்கு விலைப்படாத சரக்கு.

ஐயனே, காகம் முதலியவைகளுக்கு விருந்தாயும், இருகாலும் ஒன்பது வாயிலு மமைந்த மன்மத னுட்டிய சாலையாயும், பிறவாயுமுள்ள தேகமாகிய பொய்ப்பொருளை மெய்ப்பொருளாயெண்ணி இவ்வுலகத்தில் வாட்டமடைந்து திரியவோ என்பதாம்.

2. குறிக ளோடுகுண மேது மின்றியன
லொழுக நின்றிடு மிரும்பனல்
கூட லின்றியது வாயி ருந்தபடி
கொடிய வாணவ வறைக்குளே

அறிவ தேதுமற வறிவி லாமைமய
மாயி ருக்குமெனை யருளினல்
அளவி லாததநு கரண மாதியை
யளித்த போதுனை யறிந்துநான்
பிறிவி லாதவண நின்றி டாதபடி
பல நிறங்கவரு முபலமாய்ப்
பெரிய மாயையி லழுந்தி நின்னது
ப்ரசாத நல்லருண் மறந்திடும்
சிறிய னேனுமுனை வந்த ணைந்துசுக
மாயி ருப்பதினி யென்றுகாண்
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

இ - ள். குறிகளோடு - அடையாளங்களுடன், குணம் ஏதும் இன்றி- குணம் சிறிதுமில்லாமல், அனல் ஒழுக நின்றிடும் இரும்பு - நெருப் புதிர நின்ற இரும்பானது, அனல்கூடலின்றி - நெருப்போடு சேராமல், அதுவா யிருந்தபடி - அவ்விரும்பாகவே இருந்தவண்ணம், கொடிய - கொடிதாகிய, ஆணவ அறைக்குள்ளே - ஆணவமாகிய வீட்டுக்குள்ளே, அறிவது ஏதும் அற - அறிதற்றன்மை சிறிதுமில்லாமல், அறிவிலாமைமயமாய் இருக்கும் - அறிவின்மையே உருவாயிருக்கிற, என்னை - அடியேனை, அருளினல் - கிருபையினல், அளவு இல்லாத - எண்ணற்ற, தநுகரணமாதியை - தநுகர ணாதிகளை, அளித்தபோது - பிரசாதித்தபோது, உன்னை அறிந்து - உன் னைத் தெரிந்துகொண்டு, நான் - அடியேன், பிறிவு இல்லாத வண்ணம் - பிரியாதவகை, நின்றிடாதபடி - நிலைத்திராமல், பல நிறம் கவரும் உபல மாய் - பல நிறங்களைக் கவரு மியறகையதாகிய பளிங்குக் கல்லை யொத்து, பெரிய மாயையில் அழுந்தி - பெரிய மாயா சமுத்திரத்திலாழ்ந்து, நின்னது ப்ரசாதம் - உனது அநுக்கிரகமாகிய, நல்லருள் மறந்திடும் - சிறந்த அருளை மறந்துவிடுகின்ற, சிறியனேனும்-அற்பனுகிய நானும், உன்னை வந்து அணை ந்து - உன்னை வந்து சேர்ந்து, சுகமாயிருப்பது - இன்ப ரூபமாயிருக்கிறது, இனி என்று - இனி எக்காலம், தெரிவதற்கரிய—எ - று.

தநுகரணமாதி: தநு, கரணம், புவனம், போகம் என்பன. உபலம் கல், அது பலநிறம் கவரும் என்ற விசேஷணத்தால் பளிங்குக்கல்லையுணர்த் திற்று.

குறிகுணங்களற்று, நெருப்புச் சிந்த நின் றடிபட்ட இரும்பு, நெருப் பின் சம்பந்தத்தால் செம்மைநிறமடைந் தொழிந்ததேயன்றி நெருப்பாகாத வாறுபோல, ஆணவமயமா யிருந்ததேயன்றி ஆணவமாகிய அஞ்ஞானமாகி யே ஒழியாத என்னை யருள் செய்து, தநு கரண புவந போகங்களைக்

கொடுத்துநின்றபோதும் உன்னைப்புணர்ந்து உன்னிலையிற் பிறிவறநில்லாது, அடுத்தது காட்டும்பளிங்குபோல், அடுத்த விடயங்களின் மயமாய்ப் பெரிய மாயைக் கடலிலழுந்தி, உனது பேருளாகிய பிரசாதத்தை மறந்த சிறியேனும், உன்னை வந்துபொருந்திச் சுகமாயிருக்கும் நாள் இனி யெந்நாள் என்பதாம்.

3. ஐந்து பூதமொரு கான னீரென
　　　வடங்க வந்தபெரு வானமே
ஆதி யந்தநடு வேது மின்றியரு
　　　ளாய்நி றைந்திலகு சோதியே
தொந்த ரூபமுட னருப மாதிகுறி
　　　குணமி றந்துவளர் வஸ்துவே
துரிய மேதுரிய வுயிரி னுக்குணர்வு
　　　தோன்ற நின்றருள்சு பாவமே
எந்த நாளுநடு வாகி நின்றொளிரு
　　　மாதியே கருணை நீதியே
எந்தை யேயென விடைந்தி டைந்துருகு
　　　மெளிய னேன்கவலை தீரவும்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
　　　செய்ய நாளுமினி யுய்வனோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
　　　சிற்சு கோதய விலாசமே.

இ - ள். ஐந்துபூதம் - பஞ்ச மஹாபூதங்களும், ஒரு கானல் நீர் என அடங்க - ஒரு கானல் நீர்போல அடங்கும்படி, வந்த - உண்டாகிய, பெரு வானமே - பெரிய ஆகாயமே, ஆதி அந்தம் நடு ஏதும் இன்றி - முத லிடை கடைக ளொன்று மில்லாமல், அருளாய் நிறைந்து இலகு சோதியே - அருளாய்நிறைந்து விளங்காநின்ற ஒளியே, தொந்த ரூபமுடன் - த்வந்த்வ ரூபத்துடன், அருபமாதி - அருவம் முதலாகிய, குறி குணம் இறந்து - அடையாளம்குணம் இவற்றைக்கடந்து, வளர் - வளர்கின்ற, வஸ்துவே - பொருளே, துரியமே - துரியபதமே, துரியம் - துரியமாகிய, உயிரினுக்கு - உயிருக்கு, உணர்வுதோன்ற - அறிவுதிக்கும்படி, நின்றுஅருள் - நின்றருள்கின்ற, சுபாவமே-ஸ்வாபாவிகமே, எந்தநாளும் - எக்காலமும், நடுவாகிநின்று - நடுவுநிலைமையாய்நின்று, ஒளிரும் - விளங்குகின்ற, ஆதியே - முதலே, கருணை - கருணையோடுகூடிய, நீதியே - நியாயசாத்திரமே, எந்தையே - எமதுதந்தையே, என - என்று, இடைந்துஇடைந்து உருகும்-நெகிழ்ந்து நெகிழ்ந்துருகாநின்ற, எளியனேன் கவலைதீரவும் - எளியேனது கிலேசம் நீங்கவும், சிந்தையானதை அறிந்து - என் மனக்கருத்தை யுணர்ந்து, நீ உன் அருள்செய்ய -

நீ உன்னருளைப்புரிய, (அதைப் பெற்று) நானும் இனி உய்வனோ - நானும் இனி உஜ்ஜீவிப்பனோ, தெரிவதற்கரிய—எ - று.

தொந்தம் - பற்று. ஒறுக்குங்காலத்து மிக்க முண்டென்பார் கருணை நீதி யென்றார். வானமே, சோதியே, தொந்த ரூப முதலிய கடந்து வளர்கின்ற வஸ்துவே, சுபாவமே, நீதியே என்று பல படியாகப் புகழ்ந்து, மனம் நைந்து வருந்துகின்ற எளியேனது கவலை நீங்க, என் கருத்தறிந்து நீயருள் செய்ய நானும் உய்வேனோ என்பதாம்.

**4.** ஐவ ரென்றபுல வேடர் கொட்டம
  தடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவி நின்றுமலை யருகி னின்றுசரு
  காதி தின்றுபனி வெயிலினால்
மெய்வ ருந்துதவ மில்லை நற்சரியை
  கிரியை யோகமெனு மூன்றதாய்
மேவு கின்றசவு பாந நன்னெறி
  விரும்ப வில்லையுல கத்திலே
பொய்மு டங்குதொழில் யாத தற்குநல
  சார தித்தொழி னடத்திடும்
புத்தி யூகமறி வற்ற மூகமினை
  பொருளெ னக்கருது மருளன்யான்
தெய்வ நல்லருள் படைத்த வன்பரொடு
  சேர வுங்கருணை கூர்வையோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
  சிற்சு கோதய விலாசமே.

இ - ள். ஐவர் என்ற - ஐவரென்று சொல்லப்படுகிற, புலம் - புலன்களாகிய, வேடர் - வேடர்களுடைய, கொட்டம் அடங்க - ஒழுங்கற்ற நடை யடங்க, மர்க்கடவன் முட்டியாய் - குரங்கினது வலிய பிடியைப் போன்ற பிடிப்பை யுடையேனாய், அடவி நின்று - காட்டில் தங்கியும், மலை அருகில் நின்று - மலையருகில் இருந்தும், சருகு ஆதி தின்று - சருகு முதலியவற்றை யுண்டும், பனி வெயிலினால் - பனி வெயில்களால், மெய் வருந்து - உடல் வருந்துதற்குரிய, தவம் இல்லை - தவஞ் செய்தல் இல்லை, நல் - சிறந்த, சரியை கிரியை யோகம் என்னும் - சரியை கிரியை யோகமென்கிற, மூன்றதாய் மேவுகின்ற - மூன்றாகப் பொருந்திய, சவுபானம் - படிகளாகிய, நல் நெறி - நன்மார்க்கத்தை, விரும்பவில்லை - அபேக்ஷிக்கவில்லை, உலகத்திலே - உலகின்கண், பொய் முடங்கு தொழில்யாது - பொய்யாகியதொழில் யாதோ, அதற்கு அத்தொழிலுக்கு, நல்ல சாரதித்தொழில் நடத்திடும் புத்தி - நல்ல சாரதித்தொழிலை நடத்துகின்ற புத்தியும், யூகம் -

யுக்தியும், அறிவு அற்ற மூகம் - அறிவில்லாத மூகத்தன்மையுமாகிய இவை களையே, பொருள் எனக் கருதும் - மெய்ப் பொருள்களென்று நினைக்கின்ற, மருளன் யான் - மருளனாகிய நான், தெய்வம் - தைவிகமான, நல் அருள் படைத்த - நல்ல அருளைப்பெற்ற, அன்பரொடு சேரவும் - உன் அன்பருடன் சேர்ந்து வாழவும், கருணை கூர்வையோ - கருணை புரிவையோ, தெரிவதற்கரிய—எ - று.

கொட்டம் - கொடுமை. மருளன் - பிறழவுணர்ந்தோன். ஐம்புல வேடராணவ மடங்கும்படியாக, மர்க்கடப்பிடியாக உறுதிப் பிடி பிடித்து, காட்டில் மலையில் தவம் புரிந்து சரீரம் வருந்துதற் கேதுவாகிய தவமும் செய்த தில்லை, சரியையாதி சவுபான மார்க்கங்களையும் இச்சிக்கவில்லை, உலகத்தில் பொய்த் தொழில்களுக்கே யுரியேனாய், அதற்குரிய புத்தியாதிகளை நற் பொருள்களா யெண்ணுகிற பித்தனாகிய நான், உன் திருவருள் பெற்ற அன்பருடன் சேரும்படி எனக்குக் கிருபை செய்வையோ என்பதாம்.

5. ஏக மானவுரு வான நீயருளி
னால னேகவுரு வாகியே
எந்த நாளகில கோடி சிர்ஷ்டிசெய
விசையு நாள்வரைய நாண்முத
லாக நாளது வரைக்கு முன்னடிமை
கூட வேசநந மானதோ
அநந்த முண்டுநல சநந மீதிதனு
ளறிய வேண்டுவன வறியலாம்
மோக மாதிதரு பாசமானதை
யறிந்து விட்டுனையு மெனையுமே
முழுது ணர்ந்துபர மான வின்பவௌ
மூழ்க வேண்டுமிது வின்றியே
தேக மோநழுவி நானு மோநழுவின்
பின்னை யுய்யும்வகை யுள்ளதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

இ - ள். ஏகமான உருவான நீ - ஏக ரூபமாயிருந்த நீ, அருளினால் - கருணையினால், அநேக வுருவாகி - அநேக ரூபங்களாகி, அகிலகோடி - அண்டகோடிகளை, சிர்ஷ்டிசெய - சிருஷ்டிபண்ண, இசையும் நாள்வரை - இசைந்த நாளெல்லை, எந்தநாள் - எந்தநாளோ, அந்தநாள்முதலாக - அந்த நாள் முதலாக, நாளது வரைக்கும் - நாளதுவரையிலும், உன் அடிமை-உன் தொண்டனாகிய நான், கூடவே சநநமானதோ - கூடவே பிறந்த பிறவியோ, அநந்தம் உண்டு - முடிவற்றனவாக வுள்ளது, (ஆயினும்) நல்ல சநநம்

ஈது - நல்ல பிறவி யிது, இதனுள் அறியவேண்டுவன அறியலாம் - இதில் அறியவேண்டும் புருஷார்த்தங்களை யறியலாம், மோகமாதிதரு - மோகாதிகளைக் கொடுக்கிற, பாசமானதை - பாசத்தை, அறிந்து - உள்ளவாறு உணர்ந்து, விட்டு - கைவிட்டு, உன்னையும் என்னையும்-ஆண்டானாகிய உன்னையும் அடிமையாகிய என்னையும், முழுது உணர்ந்து - முற்று முணர்ந்து, பரம்ஆன - மேலான, இன்ப வெள்ளம் - ஆனந்த வெள்ளத்தில், மூழ்க வேண்டும் - முழுகவேண்டும், இது இன்றியே - இது செய்த லில்லாமலே, தேகம் நழுவி - தேகம் என்னைவிட்டு நழுவி, நானும் நழுவின் - நானும் அதனைவிட்டு நழுவுவேனாயின், பின்னை - பிறகு, உய்யும்வகை யுள்ளதோ - உஜ்ஜீவிக்கும் வகையும் எனக்குண்டோ, தெரிவதற்கரிய—எ-று.

புருஷனுக்குத் தர்மார்த்த காமமோக்ஷங்களை யன்றி வேறு பரமலாபமாக விரும்பப் படுவதொன்றின்மையால், அறியவேண்டுவன என்றதற்கு அவை பொருளாக வுரைக்கப்பட்டன.

ஒரு பொருளாயிருந்த நீ, உயிர்த்தொகுதிமேல்வைத்த பெருங்கருணையால் அநேக வுருவம் படைத்து, சிர்ஷ்டி செய்யத் தொடங்கிய நாள்முதல் இன்றளவும் நான் எடுத்த பிறவிக ளநேகம்; அவற்றுள், இந்தச் சநநம் நற்சநநம்; இதில் அறியவேண்டும் புருஷார்த்தங்களை யறியலாம்; ஆதலால், மோகம் முதலியவற்றை யுண்டாக்குகிற பாசத்தைவிட்டு, உன்னையும் என்னையும் பாகுபடுத்துணர்ந்து, மேலாகிய சுகக்கடலில் முழுகவேண்டும்; இந்த எண்ணம் நிறைவேறுதற்கு முன்னே, நான் இத்தேகத்தைவிட்டு நீங்கினால், அதன்பிறகு எனக்குப் பிழைக்கும் வழியுண்டோ என்பதாம்.

**6.** நியம லக்ஷணமு மியம லக்ஷணமு
மாச நாதிவித பேதமும்
நெடிது ணர்ந்திதய பத்ம பீடமிசை
நின்றி லங்குமஜ பாநலத்
தியல றிந்துவளர் மூல குண்டலியை
யினிதி றைஞ்சியவ ளருளினால்
எல்லை யற்றுவளர் சோதி மூலவன
லெங்கண் மோநமது முறையிலே
வயமி குந்துவரு மமிர்த மண்டல
மதிக்கு ளேமதியை வைத்துநான்
வாய்ம டுத்தமிர்த வாரி யைப்பருகி
மன்னு மாரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்று ஞானநெறி யடைவனோ.

தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

இ-ள். நியமலக்ஷணமும் - நியமத்தி னிலக்கணத்தையும், இயமலக்ஷணமும் - இயமத்தி னிலக்கணத்தையும், ஆசநாதிவித பேதமும் - ஆசநம் முதலான வகைகளின் வேறுபாடுகளையும், நெடிது உணர்ந்து - நன்றுயுணர்ந்து, இதய பத்ம பீடமிசை நின்று இலங்கும் - இருதய கமலமாகிய பீடத்தின்மேல் நிலை பெற்று விளங்குகிற, அஜபாநலத்து இயல் அறிந்து - அஜபாக்நியின் இலக்கணத்தையு மறிந்து, வளர் மூல குண்டலியை - வளர்கின்ற மூல குண்டலி சத்தியை, இனிது இறைஞ்சி - இனிதாக வணங்கி, அவள் அருளினால் - அவளது கருணையால், எல்லை அற்றுவளர் - வரம்பற்று வளர்கின்ற, ஜோதி - தேஜஸ்ஸையுடைய, மூல அனல் - மூலாக்நியோடு, எங்கள் மோந மநு முறையிலே - எங்களுடைய மௌந மந்திரக் கிரமத்தினால், வயம் மிகுந்து வரும் - வெற்றி மிகுந்து வரும், அமிர்தமண்டல மதிக்குளே - அமிர்தத்தை யுடைய சந்த்ர மண்டலத்துக்குள்ளே, மதியை வைத்து - அறிவைச் செலுத்தி, நான் வாய்மடுத்து - நான் வாய் வைத்து, அமிர்தவாரியை பருகி - அமிர்த ப்ரவாஹத்தை யுண்டு, மன்னும் ஆர் அமிர்த வடிவம் ஆய் - நிலைபெற்ற அரிய அமிர்த ரூபமாய், ஜெயம் மிகுந்து வரு - வெற்றி மிகுந்து வருகின்ற, சித்தயோக நிலைபெற்று - சித்தர்களுடைய யோக நிலையை யடைந்து, ஞான நெறி யடைவனோ - ஞான மார்க்கத்தை யடைவனோ, தெரிவதற்கரிய—எ - று.

நியம லக்ஷணமாவது :—தவம், தூய்மை, சத்துவநூலோர்தல், மனம் உவந்திருத்தல், தெய்வம் வழிபடல். இயமலக்ஷணமாவது :—கொல்லாமை, மெய்ம்மை கூறல், கள்ளாமை, பிறர்பொரு ளிச்சியாமை, இந்திரிய மடக்குதல்.

ஆசநாதி விதபேதமும் என்றது :—ஆசநம் முதலாக ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், த்யாநம், தாரணை, சமாதி என்பவைகளை. அஜபம் என்றது ஜபியாது ஜபித்தலை. "செவியாமனீசெவித்தாற் பிறவாமுத்தி சித்திக்குமே" என்றார் பிறரும். வினைகளை நீறுபடுத்தலால் 'அஜபாநலம்' என்றார்.

நியம விலக்கண முதலியவற்றை யறிந்து, அசபையினியலறிந்து, குண்டலி சத்தியை வணங்கி, அவளருளினால் சந்திரமண்டலத்தி னமிர்தத்தைப் பருகி, அமிர்த வுருவாகி, ஜெயம் மிகுத்தோங்கும் யோகநிலையை யடைந்து, அதன் வழியாய் ஞானமார்க்கத்தையு மடைவேனோ என்பதாம்.

7. எறிதி ரைக்கட லிகர்த்த செல்வமிக
வல்ல லென்றொருவர் பின்செலா

தில்லை யென்னுமுரை பேசி டாதுலகி
லெவரு மாமென மதிக்கவே
நெறியின் வைகிவளர் செல்வ மும்முதவி
நோய்க ளற்றசுக வாழ்க்கையாய்
நியம மாதிநிலை நின்று ஞானநெறி
நிஷ்டை கூடவுமெந் நாளுமே
அறிவி னின்றுகுரு வாயு ணர்த்தியது
மன்றி மோனகுருவாகியே
அகில மீதுவர வந்த சீரருளை
யைய வையவினி யென்சொல்கேன்
சிறிய னேழைநம தடிமை யென்றுனது
திருவுளத்தினி லிருந்ததோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

இ - ள். எறிகடல் திரை நிகர்த்த - வீசுகின்ற கடலின் அலைகளையொத்த, செல்வம் - செல்வமானது, மிக அல்லல் என்று - மிகவுந் துன்பத்தைத் தருவதென்று, ஒருவர்பின் செல்லாது - ஒருவர்பின் செல்லாமலும், இல்லை யென்னும் உரைபேசிடாது - இரப்போர்களுக்கு இல்லையென்கிற சொல்லைச் சொல்லாமலும், உலகில் எவரும் - உலகிலுள்ள யாவரும், ஆம் எனமதிக்க - ஆமென்று மதிக்கும்படி, நெறியின்வைகி - நன்மார்க்கத்தில் தங்கி, வளர் - விருத்தியடையற் கேதுவாகிய, செல்வமும் உதவி - பாக்கியத்தையுங் கொடுத்து, நோய்கள் அற்ற சுக வாழ்க்கையாய் - பிணிகளில்லாத சுகவாழ்க்கையை யுடையேமாகி, நியமமாதி நிலைநின்று - நியமம் முதலாகிய நிலைகளில் நின்று, ஞானநெறி - ஞானமார்க்கத்தை யடைந்து, நிஷ்டைகூடவும் - நிஷ்டைகூடிச் சுவாநுபூதியைப் பெறவும், எந்நாளும் - எக்காலத்தும், அறிவில் நின்று - என்னறிவினிடத்து நின்று, குருவாய் - குருமூர்த்தமாகி, உணர்த்தியதுமன்றி - அறிவுறுத்தினது மல்லாமல், மோனகுருவாகி-மௌனகுருவாகி, அகிலமீதுவர - உலகின்மேல் வரும்படியாக, வந்த - இறங்கின, சீர் அருளை - சிறந்த உன் திருவருளின் தன்மையை, ஐய ஐய இனி என் சொல்கேன் - ஐயனே ஐயனே இனி யென்னென்று புகழ்ந் துரைக்கேன், சிறியன் ஏழை - சிறியவனாகிய இந்த ஏழை, நமது அடிமையென்று - நமது தொண்டனென்று, உனது திருவுளத்தினி லிருந்ததோ - உன் திருவுளத்திற் கிடந்ததோ, தெரிவதற்கரிய—எ-று.

அறிவில் நின்று குருவாய் உணர்த்தியது அருவசாக்ஷாத்காரம். மோனகுருவாகி யென்றது உருவசாக்ஷாத்காரம். செல்வத்தை அலைகளுக்கு நிகராகக்

கூறுதல் "நிறைசெல்வம் நிரிற் சுருட்டு நெடுந்திரைகள்" என்றற்றொடக்கத்தனவற்றுற் காண்க.

உலகத்தின் செல்வமுதலியவை நிலையில்லனவென்றறிவுறுத்தி, மோக்ஷ மார்க்கத்துக் கேதுவாகிய நிய மாதிகளின் நிலையில் நின்று ஞான நிஷ்டை கூடும்படி, எப்போதும் என் னறிவில் நின்றுணர்த்தியதுமன்றி, கட்புலனும் படி, மோன குருவாகி உலகின்மீதுவந்த உன் பெருங் கருணையை யென் சொல்லிப் புகழ்வேன்? இவன் சிறியன், அறிவிலி ஆயினும், நமது அடிமை தானே யென்று உன் திருவுள்ளத்தின்கட் கிடந்ததோ என்பதாம்.

**8.** எவ்வு யிர்த்திரளு முலகி லென்னுயி
ரெனக்கு ழைந்துருகி நன்மையாய்
இதமு ரைப்பவென தென்றயாவையு
மெடுத்தெ றிந்துமத யானைபோல்
கவ்வை யற்றநடை பயில வன்பரடி
கண்டதே யருளின் வடிவமாக்
கண்ட யாவையு மகண்ட மென்னவிரு
கைகுவித்து மலர்தூவியே
பவ்வ வெண்டிரை கொழித்த தண்டரளம்
விழியுதிர்ப்ப மொழிகுளறியே
பாடி யாடியு ளுடைந்து டைந்தெழுது
பாவையொத் தசைதலின்றியே
திவ்ய வன்புருவ மாகி யன்பரொடு
மின்பவீட்டினி லிருப்பனோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சுகோ தயவிலாசமே.

இ - ள். உலகில் - உலகத்திலுள்ள, எவ்வுயிர்த்திரளும் - எவ்வகைப் பட்ட ஜீவராசிகளும், என் உயிர் என - என்னுயிர் என்று பாவித்து, குழைந்து உருகி - (அவைகட்கு ஒருவிபத்து நேரிட்டால் அதைக்குறித்து) மனங் குழைந்துருகி, நன்மை ஆம் இதம் உரைப்ப - நன்மையாகிய ஹிதங்களைச் சொல்லவும், எனது என்ற யாவையும் - எனதென்று சொல்லப்படுகிற எல்லாப் பொருள்களையும், மதயானைபோல் எடுத்தெறிந்து - மதயானை யெடுத்தெறிவதுபோல எடுத்தெறிந்து, கவ்வை அற்ற நடைபயில - துன்பமறுகைக்குக் காரணமான நன்னடையைப் பயிலவும், அன்பர் அடிகண்டதே அருளின் வடிவம் ஆ - அன்பரது திருவடியைக் கண்டதே திருவருளைக் கண்டதாகப் பாவித்து, கண்ட யாவையும் - பார்த்த எல்லாப்பொருள்களையும், அகண்டம் என்ன - அகண்ட ரூபமென்று நிச்சயித்து, இரு கைகுவித்து - இரு கரங்கூப்பி, மலர்தூவி - மலர்களைச்சிந்தி, பவ்வம் - கடலினது, வெள்திரை -

வெள்ளிய அலைகளால், கொடுத்த - எடுத்தெறியப்பட்ட, தண்தரளம் - குளிர்ந்த முத்துப்போன்ற நீர்த்துளிகளை, விழி உதிர்ப்ப - கண்கள் உதிர்க்க வும், மொழி குளறி - வார்த்தை தடுமாறி, பாடி ஆடி - பாடியும் ஆடியும், உள் உடைந்து உடைந்து - உள் நெகிழ்ந்து நெகிழ்ந்து, எழுது பாவை ஒத்து - எழுதிய சித்திர ப்ரதிமையை யொத்து, அசைதல் இன்றி - அசை வில்லாமல், திவ்வியம் - தெய்விகமான, அன்பு உருவமாகி - அன்புருவாகி, அன்பரொடும் - உன் அன்பர்களுடன், இன்ப வீட்டினில் இருப்பனோ - ஆநந்த ஹேதுவான மோக்ஷத்திலிருக்கப் பெறுவேனோ, தெரிவதற்கரிய —எ-று.

இதில் 'எவ்வுயிர்த்திரளும் என்னுயிர் என' என்றதனால், ஜீவகாருண் யமும், 'அன்பர் அடிகண்டதே அருளின்வடிவமா' என்றதனால் ஈச்சுர பக்தியும், 'எனது என்ற யாவையும் மதயானைபோல் எடுத்தெறிந்து' என்ற தனால் பாசவைராக்யமும், 'அன்புருவமாகி இன்பவீட்டினி லிருப்பனோ' என்றதனால் ப்ரஹ்மஜ்ஞானமும், அதன் பேறுங் கூறப்பட்டன.

எவ்வகைப்பட்ட உயிர்களும் என்னுயிர்களேயெனக் குழைந் துருகல் முதலியவற்றை யுடையோராகிய உன் அன்பரொடுகூடி இன்பவீட்டினில் இருக்கப்பெறுவேனோ என்பதாம்.

**9.** மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்து நின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நம்பு மென்னையொரு
மைய றந்தகில மாயையைப்
பாரு பாரென நடத்த வந்ததென
பார தத்தினுமி துள்ளதோ
சுத்த நித்தவியல் பாகு மோவுனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேண்டும்வகை நல்ல காதிகதை
சொல்லு மாயையினு மில்லையென்
சித்த மிப்படி மயங்கு மோவருளை
நம்பி னோர்கள்பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

இ - ள். மத்தர்பேயரொடு பாலர் தன்மையது மருவி - மத்தர் பேயர் பாலர் இவர்களுடைய குணத்தைப் பொருந்தி, துரியவடிவம் ஆய் - துரிய ரூபமாகி, மன்னு - நிலைபெற்ற, தேசமொடு காலமாதியை மறந்து - தேச

காலாதிகளை மறந்து, நின் அடியர் அடியிலே - உன் னடியார்களுடைய திருவடிகளில், பத்தி ஆய் - பத்தி யுள்ளவனாய், நெடிது நம்பும் என்னை - மிகுதியும் நம்புகின்ற என்னை, ஒரு மையல் தந்து - ஒப்பற்ற மயக்கத்தைக் கொடுத்து, அகிலம் மாயையை - உலகமாயையை, பாருபார் என - பார் பார் என்று, நடத்த வந்தது என - நடத்தவந்ததுயாது, இது பாரதத்திலும் உள்ளதோ - இது பாரதத்தினுமுண்டோ, சுத்த நித்த இயல்பாகுமோ - இது உனது சுத்த நித்த இயற்கையாமோ, உனது விசுவமாயை நடுவாக - உன் லோக மாயையின் இடையில், வகை சொல்லவேண்டும் - வழிசொல்ல வேண்டும், நல்ல காதி கதை சொல்லும் - நன்மையாகிய காதி கதையில் சொல்லப்படுகிற, மாயையிலும் - மாயையின் வைபவத்திலும், இல்லை - இவ் வாறில்லையே, என் சித்தம் இப்படி மயங்குமோ - என்மனமானது இப்படி மயங்கலாமோ, அருளை நம்பினோர்கள் - உன் திருவருளை நம்பினவர்கள், பெறு பேறு இதோ - பெறுவதாகிய லாபம் இதுதானோ, தெரியதற்கரிய—

மத்தர் முதலியோரது குணத்தைப்பொருந்தி, துரியவடிவாகி, தேச வர்த்தமானங்களை மறந்து, உன் னன்பரது திருவடியை மிகவும் நம்புகின்ற என்னை, ஒரு மயக்கமூட்டி, பிரபஞ்சமாயையைப் பார்பார் என்று என்னைத் தூண்டினது என்ன? இம்மாயையின் விரிவைப் பேசினாலோ மஹா பாரதத்தினும் பெரிதாமே; இப்படி யென்னை வருத்துதல் உன் சுத்த சாசுவத இயற்கைக்குப் பொருந்துமோ? காதிகதையில் சொல்லப்படுகிற மாயாவிலாசமும் இதற்குப் பின்னிடுமே; என் மனம் இப்படி மயங்கலாமோ? உன் திருவருளை நம்பினவர்கள் அடையும் லாபம் இது தானோ என்பதாம்.

மத்தர் - பிறழவுணர்ந்தோர். பேயர் - பேய்க்கோட்பட்டார். தேசம் - தேசவியற்கை. காலம் - காலவியற்கை. காதி - ஓர் பிராமணன். இவன் சரித்திரம் வருமாறு:—

பூலோகத்தில் கோசலதேசத்தில் இருந்த காதி என்னும் பெயருள்ள ஒரு பிராமணன், ஒருகாரியத்தை மனத்தில் நினைத்து, உறவின்முறைவிட்டு நீங்கி, வனத்திற்குச் சென்று ஒரு தடாகநீரின் நடுவில், கழுத்தளவு முழுக நின்று, மேலாகிய தவத்தைச்செய்து எட்டுமாதங்கள் கழிந்தபோது, விஷ்ணுமூர்த்தி, அவனுக்குப் பிரத்தியக்ஷமாகி, உன் கருத்தென்ன? தெரிவித்தால் அதனைக் கொடுப்போமென்று சொன்னவுடனே, அந்தப் பிராமணன், கரையேறி வந்து, திருமாலைக் கைகுவித்து வணங்கி, "சுவாமீ! உமது மாயா சொரூபத்தைத் தரிசிக்க விரும்புகின்றேன்" என்றான். அதைக் கேட்ட பகவான், அப்படியே யென் மாயாசொரூபத்தைக் காணக்கடவை; கண்டபிறகு அதனை நீக்கக்கடவை யென்று அநுக்கிரகித்து மறைந்தவுடன், பகவானைச் சேவித்த சந்தோஷத்தையுடைய அவ்வேதியன், அந்த வனத்தில் சில நாள் தவஞ் செய்துகொண் டிருந்து, ஒரு நாள், முன்னே திருமால்

அருளிச்செய்த வாக்கியத்தைச் சிந்தித்துக்கொண்டே ஒரு தாமரைத் தடாகத்தில் முழுகினவுடன், செய்யவேண்டிய வேதமந்திர படனம், தியானம் முதலியவற்றை மறந்துவிட்டு, உறவினரிருக்கிற தன் வீட்டில், தான் வியாதியினால் இறந்தவனாகத் தன்னைக் கண்டான்; மேலும் உறவினர், தன்மனைவி, தன் தாய் முதலியோர் தன்மேல் விழுந்து கட்டிக்கொண்டு கதறவும் பார்த்தான்; இதற்குமேல் தன்னை மயானத்திற் கொண்டுபோய்ச் சுட்டுச் சாம்பலாக்கவும் பார்த்தான்; அந்த நீரின் நடுவிலிருக்கிற அந்தணன், பின்னும் ஊணதேசத்தின் ஒரு நகர முடிவில் இருக்கிற நீசர் குலத்தில், ஒரு பெண்ணின் வயிற்றில் வெந்த கரிக் கட்டைபோல ஆண் மகனாய்ப் பிறந்து, அந்தக் குலத்துப் பெண்ணொருத்தியை மணம் புணர்ந்து, அவளோடு மலைகளிலும், வனங்களிலும் மனமும் பிராண வாயுவும்போல வொற்றுமையாய்க் கலந்து வாழும் நாளில், தன் குலம் விளங்கச் சில புத்திரரைப் பெற்றான். சில நாளில் மூப்பு வந்தடையவே தன் சேரிக்குக் கொஞ்ச தூரத்தில் ஒரு சிறு தழைக்குடில் கட்டி அதில் வசித்துக்கொண்டிருக்கும்போது, தன் மக்களுக்கும் மூப்பு வந்தடைந்தது. தன் மனைவி மக்களுக்கும் தனக்கும் ஒரு மிக்க வார்த்திக்கியம் வந்ததைப் பார்த்து வருந்துங்காலத்தில், தன்னையொழிய மற்றவரையெல்லாம் காலன் கொண்டுபோய்விட, தான் தனியேயிருந்து வாய்விட்டரற்றி, சகிக்கமாட்டாமல், மனங் கலங்கி, நிராசையுள்ளவனாய், அநேக நாடுகளில் வெகுகாலம் திரிகின்றவன், ஒருநாள் கீரநாட்டின் ராஜதானியில் புகுந்து, சொர்க்கலோகத்தில் பொன்மயமா யிருக்கிற வீதியைப்போன்ற ஒரு வீதியிற் போம்போது, அந்நகரத்தரசன் மாண்டனன்; பூமியைக் காக்க வேறொரு அரசனைத் தெரிந்தெடுத்துக்கொண்டு வா வெனச் சொல்லி யனுப்பப்பட்ட பட்டத்து யானையானது, எதிரே வரக்கண்ட இவனைத் துதிக்கையா லெடுத்துத் தன் பிடரி லேற்றிக்கொண்டு போயிற்று. அப் பட்டத்து யானையால் கொண்டுவரப்பட்ட இவனை, மாதர்கள் அலங்கரித்தார்கள்; பழைய மந்திரிமார்கள் சேனாதிபதி முதலானோர்கள் இவனை அரசனாக முடி சூட்டி, இவனது ஆக்ஞையைச் சிரசாக வகித்து நடத்தி வந்தார்கள்; இவனும் கவலன் என்கிற பெயர் பெற்றுக் கீரதேசத்தில் நீதியாகச் செங்கோல் செலுத்தி, சிங்காதனத்தின்மேல் பொலிவாக வீற்றிருந்தான். இப்படி எட்டு வருடம் கழியவே, ஒருநாள் தனியனாய், காலால் நடந்து, தன் அரண்மனையின் தெருப்புறத்தில், நீசவேடத்தோடு உலாவுஞ் சமயத்து, அவ்விடத்தில் முன் சொன்ன சண்டாளர் சிலர் வந்தார்கள். அவர்களுள் ஒரு முதியோன் வந்து இவனைப் பார்த்தவுடன், ஆசையோடு தழுவி, முன் பெயரைச் சொல்லி, எங்களுக்குப் பழைய சுற்றத்தானாகிய நீ, எம்மைவிட்டு எங்கேபோனாய்? இப்போதுஎவ்விடத்திலிருக்கின்றாய்? என்று இவனது பழைய வரலாற்றை உள்ளபடி சொல்லி விசாரித்தான். அதைக்

கேட்ட இவன், இங்குள்ள யாராயினும் இதனைக் கேட்பராயின் நமக்குப் பழியாய் முடியு மென்று, அச் சண்டாள முதியோனை, உரத்த சத்தத்தோடு அதட்டித் துரத்திவிட்டு, விரைவாகத் தனது அந்தப்புரத்திற் பிரவேசித்த தும், இவற்றை யெல்லாம், சாளரவாயிலில் நின்று கண்டுங் கேட்டுமிருந்த ராஜஸ்திரீகள் மந்திரிமார்கள் முதலான பேர்களுக்கு அறிவிக்க, அவர்களும் இவன் பூர்வத்தில் சண்டாளன்போலு மென்று ஊகித் தறிந்துகொண்டு, மிகவும் மனவருத்த மடைந்தார்கள். இவன் மாத்திரம் மனங் கலங்காமல், அவைகளை அறியாதவன்போலப் பழையபடியே சிங்காதனத் திருந்தான். இவனை மாதர்கள் மந்திரியர் முதலானோர்கள் தீண்டுதற்கு அஞ்சினவராய், பிரேதத்தை அருவருத்தல்போல அருவருத் திருந்தார்கள். இவன் அங்கு கல்வி செல்வங்க ளிரண்டு மில்லாத பிரயாணிகன் போன்றிருந்தான். அந்த நகர மாந்த ரெல்லாரும், இவனுடைய சம்பந்தத்தால் நாமெல்லாரும் பதித ராேனும், இனி ஒரு பிராயச் சித்தத்தாலும் பரிசுத்தராகமாட்டோம், நாம் பரிசுத்தர் ஆதற்பொருட்டுத் தீப்பாய்வோமென்று நிச்சயித்து, நெருப்பை வளர்த்து அதில் எல்லாரும் விழுந்து மடிந்தார்கள். இவன் அவர்கள் மடி ந்ததைக் கண்டு, நமது தொடர்பா லல்லவோ இத்தனைபேரும் நாசமடைந் தார்கள்? இனி நாமும் மாண்டு போவதே தக்க காரிய மென்று நெருப்பு மூட்டி, அதில் விழுந்தபோது, அந்தத் தீயானது இளந்தளிரை யெரிப்பது போல இவன் சரீரத்தை யெரிக்க, நீரில் மூழ்கியிருந்த காதி யென்னும் வேதியன் சரீரம் பதைத்தது. உடனே நீரைவிட்டு மேலெழுந்த காதியான வன் மஹா மாயையினின்று நீங்கி ஈசுவரனது சர்வ சக்தியைக் குறித்துப் புகழ்ந்து மனங் களித்திருந்தான்.

இக்கதை மேலும் போம். இவ்விடத்திற்கு வேண்டியது இவ்வளவே யாதலால் இம்மட்டில் நிறுத்தப்பட்டது; கதை முழுதும் அறிய விரும்புவோர் ஞானவாசிட்டம் உரு-வது கதையில் பரக்கக் காணலாம்.

**10.** பன்மு கச்சமய நெறிப டைத்தவரு
மியாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் வாத தர்க்கமிடு
படி றருந்தலை வணங்கிடத்
தன்மு கத்திலுயிர் வரவ ழைக்குமெம
தருமனும்பகடு மேய்க்கியாய்த்
தனியி ருப்பவட நீழ லூடுவளர்
சநக னாதிமுநி வோர்கடம்
சொன்ம யக்கமது தீர வங்கைகொடு
மோந ஞாநம துணர்த்தியே
சுத்த நித்தவரு ளியல்ப தாகவுள
சோம சேகர கிர்பாளுவாய்த்

தென் முகத்தின்முக மாயி ருந்தகொலு
வெம்மு கத்தினும்வ ணங்குவேன்
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

இ-ள். பல்முகம் - பல துறைகளையுடைய, சமயநெறி படைத்தவரும் - சமயமார்க்கங்களைப் படைத்தவர்களும், யாங்களே கடவுள் என்றிடும் பாதகத்தவரும் - நாங்களே தெய்வமென்கிற பாவிகளும், வாததர்க்கமிடு படிறரும் - தர்க்கவாதம் பண்ணுகிற வஞ்சகரும், தலைவணங்கிட - தலைவணங்கித் தொழவும், தன் முகத்தில் - தன்னிடத்தில், உயிர் - ஜீவராசிகளை, வர அழைக்கும் - வர அழைக்கின்ற, எமதருமனும் - யமதர்மராஜனும், பகடு மேய்க்கியாய் - எருமை மேய்ப்பவனாய், தனியிருப்ப - தனியே யிருக்கவும், வட நீழலூடுவளர் - கல்லாலி னிழலில் விருத்தி யடையா நிற்கிற, சநகனாதி முனிவோர்கள் - சநகாதி முனிவர்களுடைய, சொல் மயக்கம் தீர - வார்த்தையினுண்டான மயக்கமானது நீங்கும் வகை, அங்கைகொடு - அழகிய கைகளைக் கொண்டு, மோந ஞாநம் உணர்த்தி - மோந நிலையாகிய ஞாநத்தை அறிவுறுத்தி, சுத்த நித்த அருள் - சுத்த நித்த அருளானது, இயல்பாகவுள - இயற்கையாக வுள்ள, சோமசேகரன் - சோமசேகரன் என்கிற, கிர்பாநுவாய் - கருணாநிதியாகி, தென்முகத்தில் - தென்திசையில், முகமாயிருந்த கொலு - அபிமுகமா யிருந்த கொலுவினை, எம் முகத்திலும் வணங்குவேன் - எத்திசையிலும் தொழுவேன், தெரிவதற்கரிய—எ-று.

சோமசேகரன் - சந்திரனைச் சிரத்தி லணிந்தவன். நித்தம் - சாசுவதம். பல சமயிகள் முதலானவர்கள் பயனற்றவர்களா யொழிய, சனகாதியர்க்கு நீ தென்முகமாய் வடநிழலில் வீற்றிருந்து மோன ஞானத்தை யறிவுறுத்தருளிய திருக்கோலத்தை எக்காலத்தும் வணங்கா நின்றேன் என்பதாம்.

## ஆகாரபுவனம்.

## சிதம்பரரகசியம்.

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

1. ஆகார புவனமின் பாகார மாக
வங்ஙனே யொருமொழியா லகண்டா கார
யோகாநு பூதிபெற்ற வன்ப ராவிக்
குறுதுணையே யென்னளவு முகந்த நட்பே
வாகாரும் படிக்கிசைகிண் கிணிவா யென்ன
மலர்ந்தமல ரிடைவாசம் வயங்கு மாபோல்
தேகாதி யுலகமெங்குங் கலந்து தானே
திகழனந்தா னந்தமயத் தெய்வக் குன்றே.

இ-ள். ஆகாரம் - உருவமாத்திரமாய்க் காணப்படுகிற, புவனம் - உலகமானது, இன்ப ஆகாரமாக - சுகவடிவமாக, அங்ஙனே - அவ்வாறே, ஒரு மொழியால் - ஒரு சொல்லால், அகண்ட ஆகார யோகாநுபூதி பெற்ற - அகண்ட ரூபமான யோகாநுபவம் பெற்ற, அன்பர் - அன்பரது, ஆவிக்கு - உயிருக்கு, உறுதுணையே - மிக்க துணையே, என் அளவும் - என்னளவிலும், உகந்த - விருப்பம் வைத்த, நட்பே - சிநேகமே, வாகு ஆரும்படிக்கு - அழகு பொருந்தும்படிக்கு, இசை - ஒலிக்கின்ற, கிண்கிணிவாய் என்ன - கிண்கிணிவாய் போல, மலர்ந்த - விரிந்த, மலரிடை - மலரினிடத்தில், வாசம் வயங்குமாபோல் - பரிமளம் வீசுவதுபோல, தேகாதி உலகம் எங்கும் கலந்து - தநு முதலாகிய உலகமெல்லாங் கலந்து, தானே திகழ் - தானேயாகி விளங்குகின்ற, அநந்தம் - முடிவற்ற, ஆனந்தமயம் - ஆனந்தரூபமான, தெய்வக் குன்றே - தெய்வத்தன்மையுள்ள மலையே—எ - று.

ஆகார புவனம் - உருவமாத்திரை யாய்க் காணப்படுவதன்றி உள்ளபடி விசாரித்தால் இல்லையாய் விடுமென்பது போதரநின்றது. அறப்பெரியராகிய யோகாநுபூதி பெற்ற அன்பராவிக் குறுதுணையாதலன்றி யென்பது படநின்றமையான், என்னளவும் என்னும்மை இழிவு சிறப்பு. அன்பராவிக்கு உறுதுணை, என்னளவு முகந்தநட்பு என்றமையால், சமரசமாகிய க்ருபாத்ருஷ்டி யுடையானென்பது விளங்கும். கிண்கிணிவாய் என்ன மலர்தலாவது கிண்கிணியின் இடை வெளிபோல இதழ்கள் முறுக்கவிழ்ந்து மலர்தல். "கிண்கிணிவாய்ச் செய்தலர்ந்த தாமரைப் பூப்போல" என்றார் பிறரும்.

உருவ மாத்திரமாய் விளங்கும் பிரபஞ்சம் இன்ப ரூபமாகத் தோன்றுமாறு, ஒரு மொழியால், சிவயோகாநுபவம் பெற்ற அன்பரது உயிர்த்துணையே, அம்மட்டி லமையாதே என்னளவினும் உள்ள முவந்தருளிய நட்பே, தேகாதி யுருவமான பிரபஞ்ச மெல்லாவற்றினுங் கலந்து பிரகாசிக்கிற முடிவில்லாத சுக ரூபமாகிய தெய்வமலையே என்பதாம்.

2. அனந்தபத வுயிர்களொடு முயிரா யென்று
மானந்த நிலையாகி யளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டாச்
சதசத்தா யருட்கோயிற் றழைத்த தேவே
இனம்பிரிந்த மான்போனு னிடையா வண்ண
மின்பமுற வன்பர்பக்க லிருத்தி வைத்துக்
கனந்தருமா கனமேதண் ணருளிற் றானே
கனிபலித்த வானந்தக் கட்டிப் பேறே.

இ - ள். அநந்த பதம் - முடிவற்ற குறிகளை யுடைய, உயிர்கள் தொறும் - உயிர்கள்தோறும், உயிராய் - உயிராகி, என்றும் ஆநந்த நிலை ஆகி

எக்காலத்தும் சுகநிலயமாகி, அளவைக்கு எட்டா - காட்சி முதலிய பிரமா ணங்கட்கு மெட்டாத, தன்னந்தனி - மிகத்தனிமையான, சிந்மாத்திர மாய் - சிற்சொரூபமாத்ரமாகி, கீழ்மேல் காட்டா - கீழெல்லை மேலெல்லை களைக் காட்டாத, சதசத்தாய் - சத்தும் அசத்துமாகி, அருள்கோயில் - திருவருளாகிய கோயிலில், தழைத்த - செழித்த, தேவே - தெய்வமே, நான் - அடியேன், இனம் பிரிந்த மான்போல் இடையாவண்ணம் - தன் கூட்டத்தை விட்டு நீங்கின மானைப்போல வருந்தாதவகை, இன்பம் உற - சுகவாழ்வையடைய, அன்பர் பக்கல் - உன் தொண்டரிடத்து, இருத்திவை த்து - இருக்கச்செய்து, கனம் தரும் - சிறப்பைத் தருகின்ற, மா கனமே - பெருஞ் சிறப்பமைந்த வஸ்துவே, தண் அருளிற்றுனே - குளிர்ச்சி பொருந் திய அருளாகிய மரத்திற்றுனே, கனிபலித்த - கனியாகப்பழுத்த, ஆநந்தக் கட்டி - இன்பமாகிய சர்க்கரைக் கட்டியென்று சொல்லப்படுகிற, பேறே - பரமலாபமே—எ - று.

"சீவபேதங்களளவிலை" என்ற மேலோர் வாக்கியத்துக் கிணங்க, இவ ரும் 'அநந்தபதவுயிர்கள்' என்றார். ஒருவர்க்குச் சிறப்பைத் தருபவர் தாம் பெருஞ் சிறப்பினரா யிருந்தாலன்றிக் கூடாதாகையால், 'கனந்தருமாகன மே' என்றார்.

'அருட்கோயில் தழைத்த தேவே, மாகனமே, ஆநந்தக் கட்டிப்பேறே' என்பனவிளிகள். 'இனம் பிரிந்த மான்போல நான் வருந்தாவண்ணம், இன்ப மநுபவிக்க, அன்பரிடத் திருத்திவைத்து' என்றும் இவைகளி னீடுபாட்டி ஞல் விண்ணப்பிக்க வேண்டியவற்றை மறந்தனர்போலும்.

**3** பேறனைத்து மணுவெனவே யுதறித் தள்ளப்
பேரின்ப மாகவந்த பெருக்கே பேசா
வீறனைத்து மிந்நெறிக்கே யென்ன வென்னை
மேவென்ற வரத்தேபாழ் வெய்ய மாயைக்
கூறனைத்துங் கடந்தவெல்லைச் சேட மாகிக்
குறைவறநின் றிடுநிறைவே குலவா நின்ற
ஆறனைத்தும் புகுங்கடல்போற் சமய கோடி
யத்தனையுந் தொடர்ந்துபுகு மாதி நட்பே.

இ - ள். பேறு அனைத்தும் - எல்லாப் பேறுகளையும், அணு என உதறித்தள்ள - அணுவாக வுதறித் தள்ளும்படியாக, பேரின்பம் ஆக வந்த பெருக்கே - பேராநந்தமாக வந்தருளிய வெள்ளமே, பேசாவீறு அனைத்தும் - பேசாத (மௌனநிலையாகிய) பெருமை யெல்லாம், இந்நெறிக்கே என்ன - இந்த நெறியின் பொருட்டே யென்று, என்னை - அடியேனை நோக்கி, மேவு என்ற - இந்நெறியிற் பொருந்துவாய் என்று நியமித்த, வரத்தே - அழிவற்ற ஊதியமே, பாழ் - சூனியமாகிய, வெய்ய மாயைக்கூறு அனைத்

தும் - கொடியதாகிய மாயாபாகங்க ளெல்லாவற்றையும், கடந்த - தாண்டிய, எல்லை - எல்லையாகிய, சேடமாகி - சேஷமாகி, குறைவு அறநின்றிடும் - குறைவில்லாமல் நிலைபெற்றிருக்கின்ற, நிறைவே - பரிபூரணமே, குலவாநின்ற - விளங்காநின்ற, ஆறு அனைத்தும் - நதிகளெல்லாம், புகும் - புகப்பெறுகின்ற, கடல்போல் - சமுத்திரம்போல, சமயம் கோடி அத்தனையும் - சமயகோடிகளெல்லாம், தொடர்ந்துபுகும் - தொடர்ந்து புகுதற்கிடமாகிய, ஆதிநட்பே - முதன்மையாகிய உறவே—எ - று.

'பேரின்பமாகவந்த பெருக்கே' என்பதனை "ஆற்றின்ப வெள்ளமே" என்னும் திருவாதவூரடிகள் திருவாக்கானு முணர்க. பேரின்பமாக வந்த பெருக்கை நோக்க, மற்றெல்லாப் பேறுகளும் அணுவா யொழியு மாதலால் 'அணுவெனவே யுதறித்தள்ள' என்றார். பேசாவீறு - மௌனநிலை. வரத்து - வரவு. நதிக ளெல்லாவற்றுக்கும் புகுமிடம் கடலாதல்போல, சமயகோடிக ளெல்லாவற்றுக்கும் புகுமிடம் பிரமம் என்றாயிற்று. பெருக்கே, வரத்தே, நிறைவே, நட்பே என்பதாம். இதுவும் மேலையது போன்றது.

4. ஆதியந்த மெனுமெழுவா யீறற் றோங்கி
யருமறையின் னமுங்காணு தாற்ற நாணு
பேதமதங் களுமலைய மலைபோல வாதப்
பெற்றியரும் வாய்வாதப் பேயராகச்
சாதகமோ னத்திலென்ன வடவா னீழல்
தன்னருட்சந் திரமௌலி தடக்கைக் கேற்க
வேதகசின் மாத்திரமா யெம்ம னோர்க்கும்
வெளியாக வந்தவொன்றே விமல வாழ்வே.

இ - ள். ஆதி அந்தம் என்னும் - அடிமுடிக ளென்று சொல்லப்படுகிற, எழுவாய் ஈறு அற்று ஓங்கி - உத்பத்தி நாசங்க ளில்லாதுயர்ந்து, அருமறை - அருமையாகிய வேதங்கள், இன்னமும் காணாது அரற்ற - இன்னமும் காணப்பெருமையால் அலறாநிற்க, நானு பேதம் மதங்களும் - பலவகைப்பட்ட வேறுபாடுள்ள மதங்களும், மலைய - ஒன்றுட னொன்று போர் செய்ய, மலைபோல் - (சலியாமையால்) மலையை நிகர்க்கின்ற, வாதப்பெற்றியரும் - வாதிக்குந் தன்மையுள்ளவரும், வாய்வாதப் பேயர் ஆக - வாக் வாதத்தையுடைய பேயராயொழிய, சாதகம் மோனத்தில் என்ன - முத்தி யடைதற்குரிய பழக்கம் மௌனநிலையி லுண்டென்று எமக்கு வெளியிட்டருளும் பொருட்டு, வடவால் நீழல் - கல்லாலின் நீழலில் எழுந்தருளிய, தண் அருள் - தண்ணிய அருளையுடைய, சந்திர மௌலி - சந்திர சேகரனே, தடம் கைக்கு ஏற்க - விசாலமாகிய சின்முத்திரைக்கைகளுக் கிணங்க, வேதக சின்மாத்திரமாய் - எமது தன்மையை வேறுபடுக்கு மியல்பமைந்த சித்ரூபமாத்திரமேயாகி, எம்

அன்னோர்க்கும் - எங்களை யொத்தவர்களுக்கும், வெளியாகவந்த - வெளிப்பட வந்த, ஒன்றே - ஏகவஸ்துவே, விமலவாழ்வே - நிர்மலவாழ்வே—எ-று.

சந்திர மௌலியே, ஒன்றே, விமலவாழ்வே என்பதாம். இதுவும் அது.

5. விமலமுதற் குணமாகி நூற்றெட் டாதி
வேதமெடுத் தெடுத்துரைத்த விருத்திக் கேற்க
அமையுமிலக் கணவடிவா யதுவும் போதா
தப்பாலுக் கப்பாலா யருட்கண் ணாகிச்
சமமுமுடன் கலப்புமவிழ் தலுமியாங் காணத்
தண்ணருடந் தெமைக்காக்குஞ் சாக்ஷிப் பேறே
இமையளவு முபகார மல்லால் வேறொன்
றியக்காநிர்க் குணக்கடலா யிருந்த வொன்றே.

இ - ள். வேதம் - வேதங்கள், நூற்றெட்டு ஆதி - நூற்றெட்டு முதலாக, எடுத்து எடுத்து உரைத்த - எடுத்தெடுத்துச் சொல்லிய, விருத்திக்கு ஏற்க - லக்ஷண விரிவுக்கிணங்க, விமலம் முதல் குணம் ஆகி - நிர்மலம் முதலிய குணங்களை யுடையதாகி, அமையும் - அமைந்திருக்கின்ற, இலக்கண வடிவாய் - லக்ஷண சஹிதமான ரூபமாகி, அதுவும் போதாது - அதுவும் பற்றாமல், அப்பாலுக்கு அப்பால் ஆய் - அப்புறத்துக்கும் அப்புறமாகி, சமமும் - சமானமும், உடன் கலப்பும் - உடன் கூட்டமும், அவிழ்தலும் - பிரிவும், யாம்காண - நாங்கள் காணும்படி, தண் அருள் தந்து - தண்ணிய அருள் புரிந்து, எம்மைக் காக்கும் சாக்ஷிப் பேறே - எங்களை ரக்ஷிக்கின்ற சாக்ஷிபூதமான லாபமே, இமையளவும் - இமைக்கு மளவாயினும், உபகாரம் அல்லால் - பிறர்க்கு ஹிதஞ் செய்தலன்றி, வேறு ஒன்று இயக்கா - வேறொன்றைச் செய்யாத, நிர்க்குணக் கடலாய் இருந்த ஒன்றே-நிர்க்குண சமுத்ரமாயிருந்த ஒப்பற்ற பொருளே—எ-று.

தண்ணருடந்து எமைக் காக்குஞ் சாக்ஷிப்பேறே, உபகார மல்லாமல் வேறொன்றைச் செய்யாத நிர்க்குண சமுத்திரமாயிருந்த வொருபொருளே என்பதாம்.

6. ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
வொளியாகி வெளியாகி யுருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுட னுற்பத்தி நண்ணு தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
வெந்தையே யெம்மானே யென்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந் தருள்கூருங் கருணை விண்ணே.

இ - ள். ஒன்று ஆகி - ஒரு பொருளாகி, பல ஆகி - பல பொருள்களாகி, பலவாக்கண்ட - பலவாகக் காணப்பட்ட, ஒளி ஆகி - ஒளியுடைப் பொருள்களாகி, வெளி ஆகி - அவை இயங்குதற் கிடமாகிய ஆகாயமாகி, உருவும் ஆகி - ரூபமுமாகி, நன்று ஆகி - நன்மை ஆகி, தீது ஆகி - தீமையாகி, மற்றும் ஆகி - வேறுள்ளனவுமாகி, நாசமுடன் உற்பத்தி நண்ணுதாகி - இறப்பும் பிறப்பு மில்லாததாகி, இன்று ஆகி நாளையுமாய் - இன்று ஆகி நாளையுமாகி, மேலுமான - அதன்மேலுள்ள காலமுமான, எந்தையே - எமது தந்தையே, எம்மானே - எம்பெருமானே, என்று என்று - என்று பலகாற் சொல்லி, ஏங்கி - ஏக்கமுற்று, கன்று ஆகி கதறினர்க்கு - கன்று போலக் கதறினவர்களுக்கு, சேதா ஆகி - ஈன்றணிமையுடைய பசுப்போன்று, கடிதினில்வந்து - விரைவில்வந்து, அருள் கூரும் - அருள்புரியாநின்ற, கருணை விண்ணே - கருணைவடிவாகிய ஆகாயமே—எ-று.

'ஏங்கிக் கன்றாகிக் கதறினர்க்குச் சேதாவாகிக் கடிதினில் வந்தருள் கூரும்' என்றமையால், அவ்வாறு ஏங்குதல் முதலாயின செய்யாதார்க்கு அருள் கூர்தலிலன் என்று கூறியவாறாயிற்று. இது "மனைவிலங் கறுமைந்தனே கற்பகமரங் கனல் புனல் மூன்றுந் - தனையடைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும் - அனையவீசனு மடைந்தவர்க் கருள்செய்வான்" என்ற பிறர்கூற்றானும் விசதமாகும். விண்ணே என்பதாம்.

**7.** அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
யாரமிர்தே யென்கண்ணே யரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே புனித வாழ்வே
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக் கருவி யாதி
விரிவினையுங் கூட்டியுயிர்த் திரளை யாட்டும்
விழுப்பொருளே யான்சொலும்விண் ணப்பங்கேளே.

இ - ள். அருள் பழுத்த பழச்சுவையே - அருளுருவாகப் பழுத்த பழத்தின் சுவையே, கரும்பே - கரும்பின் இரசமே, தேனே - தேனே, ஆர் அமிர்தே - அரிய அமிர்தமே, என்கண்ணே - என் விழியே, அரியஆன பொருள் அனைத்தும் - அரியனவாகிய பொருள்களெல்லாவற்றையும், தரும்பொருளே - கொடுக்கிற வஸ்துவே, கருணைநீங்கா-கிருபைநீங்காத, பூரணமாய் நின்றவொன்றே - நிறைவாகிநின்ற வொப்பற்ற வஸ்துவே, புனித வாழ்வே - பரிசுத்தமான வாழ்க்கையே, கருது அரிய - நினைத்த லரிதான, கருத்ததனுள் - நினைப்பினுள், கருத்தாய் - நினைப்பாகி, மேவி - பொருந்தி, காலமும் தேசமும் வகுத்து - காலதேசங்களையு முண்டாக்கி, கருவி ஆதி -

கருவிகள் முதலான, விரிவினையும் கூட்டி - விரிவையுஞ் சேர்த்து, உயிர்த் திரளை ஆட்டும் - உயிர்த் தொகுதியை நடிப்பிக்கின்ற, விழு பொருளே - மேலான பொருளே, யான் சொல்லும் - நான் சொல்லுகின்ற, விண்ணப்பம் கேள் - விண்ணப்பத்தைக் கேட்டருள்வாய்—எ - று.

சுவை மிகுதி பற்றியும் மனத்துக் கினிமையைத் தருதல் பற்றியும் அருள் பழுத்த பழச் சுவையே என முற்கூறி, அம்மட்டில் தமக்குத் திருப்தி பிறவாமையால் நாவிற் கினிமை பயக்கும் கரும்பு தேன் முதலியவைகளைப் பிற் கூறினார். கண் இன்றிப் பதார்த்த தரிசநங் கூடாதாதலால் 'கண்ணே அரியவான பொருளனைத்துந் தரும் பொருளே' என்றார். 'கருவியாதி விரிவினையுங் கூட்டி யுயிர்த்திரளை யாட்டும்' என்றது "இருவினைப் பாசக் கயிற்றின் வழி ஆட்டுவிப்பானும் ஒருவனுண்டே" என்றத்தைப் பற்ற.

பழச்சுவை முதல் விழுப்பொருளே யென்னு மளவாகப் புகழ்ந்து, ஒருவாறு தெளிவடைந்து விண்ணப்பிக்கத் தொடங்கினார் இப்பாட்டில்.

**8.** விண்ணவரிந் திரன்முதலோர் நார தாதி
விளங்குசப்த ருஷிகள்கன வீணைவல் லோர்
எண்ணரிய சித்தர்மநு வாதிவேந்தர்
இருக்காதி மறைமுனிவ ரெல்லா மிந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானே யுள்ளங்
கையினெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றோ
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும்.

இ - ள். விண்ணவர் - சாமாந்ய தேவர்கள், இந்திரன் முதலோர் - இந்திரன் முதலிய விசேஷ தேவர்கள், விளங்கு - விளங்காநின்ற, நாரதாதி - நாரதர் முதலானோர், சப்த ருஷிகள் - இருடியர் எழுவர், கனவீணை வல்லோர் - பெரிய வீணை வல்லோராகிய தும்புரு முதலானோர், எண் அரிய - எண்ணுதற்கரிய, சித்தர் - சித்தர்கள், மநுவாதி வேந்தர் - மநு முதலிய அரசர்கள், இருக்காதி மறை முனிவர் - இருக்கு முதலிய வேதங்களை யோதி அவற்றின் பொருளை யுள்ளவா றுணர்ந்த முனிவர்கள், எல்லாம் - ஆகிய எல்லாரும், இந்த கண் அகல் ஞாலம் மதிக்க - இந்த இடமகன்ற உலகம் மதிக்கும்படியாக, உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல - உள்ளங்கை நெல்லிப் பழம்போல, காட்சி ஆக - ப்ரத்யக்ஷமாக, திண்ணிய - கலங்காத, நல் அறிவால் - சிறந்த ஞானத்தைக்கொண்டு, இச்சமயத்தன்றோ - இச்சமயத்தி லிருந்துகொண் டல்லவா, என்றும் - எக்காலத்தும், செப்பரிய - சொல்லுதற்கரிய, சித்தி முத்தி சேர்ந்தார் - சித்தி முத்திகளை யடைந்தார்கள்—எ - று.

சப்த ரிஷிகளாவார் :—அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், ஜமதக்நி, பரத்வாஜன், வசிட்டன், விசுவாமித்திரன் என்பார். அன்றி, அகத்தியன், ஆங்கீரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்னு மிவர்களைக் கூறுதலு முண்டு. சித்தி - அணிமா முதலியன. முத்தி - மோக்ஷம். விண்ணவ ரிந்திரன் முதலோர் என்பதற்கு தேவர்களாகிய இந்திரன் முதலானோர் என்றுரைப்பினும் அமையும்.

9. செப்பரிய சமயநெறி யெல்லாந் தந்தம்
தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான
அப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பால்
அடுத்தவர்நூல் களும்விரித்தே யநுமா னாதி
ஒப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் யென்ன
ஒன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும்
இப்பரிசாஞ் சமயமுமா யல்ல வாகி
யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி.

இ-ள். செப்பு அரிய - சொல்லுதற்கரிய, சமயநெறி யெல்லாம் - சமய மார்க்கங்களெல்லாம், தம் தம் தெய்வமே தெய்வம் என்னும் - தங்கள் தங்கள் தெய்வங்களையே தெய்வங்களென்று சாதியா நிற்கும், செயற்கை ஆன - அந்தச் செய்கைக்குள்ளான, அப்பரிசாளரும் - அந்தச் சமய நெறியினரும், அஃதே பிடித்து - அதையேபற்றி, ஆலிப்பால் - ஆரவாரத்தால், அடுத்த - தமக் கடுத்தனவாகிய, அந்நூல்களும் விரித்து - அந்தச் சமயநூல்களை விரித்தும், அநுமானாதி ஒப்ப விரித்துரைப்பர் - அநுமான முதலிய பிரமாணங்களுக்கிணங்க விரித்துப் பேசுவார்கள், இங்ஙன் - இப்படி, பொய் மெய் என்ன - ஒன்று பொய் ஒன்று மெய் என்றும், ஒன்று இலை ஒன்று (உண்டு) என - ஒன்று இல்லை ஒன்று உண்டு என்றும், பார்ப்பது - நோக்குவது, ஆர்க்கும் ஒவ்வாது - யார்க்கும் ஒத்திராது, இப்பரிசு ஆம் - இத்தன்மையாகிய, சமயமுமாய் - சமயங்களாகியும், அல்ல ஆகி - அவை யல்லாதனவாகியும், யாது சமயமும் - எந்தச் சமயமும், வணங்கும் - தொழும்படியான, இயல்பது ஆகி - இயற்கை யுடையதாகி—எ - று.

அநுமானம் - எண் வகை அளவைகளுள் ஒன்று ; எண்வகை அளவைகளாவன:—காட்சி, அநுமானம், உவமானம், ஆகமம், அருத்தாபத்தி, அபாவம், ஐதிகம், சம்பவம் என்பன. காணல் - காட்சி, புகையைக்கண்டு நெருப்புண்டெனல் அநுமானம், மரை பசுப்போல்வது என்றல் உவமானம், பெரியோர் வாய்ச்சொல் ஆகமம், பகலுண்ணான் பருத்திருப்பான் என்புழி இரவில் ஒளித்துண்பான் என உணர்தல் அருத்தாபத்தி, முன்னுமில்லை பின்னுமில்லை ஒன்றினி லொன்றில்லை என்று மில்லை யெனல் அபாவம். இம்மரத்தில் பேய் உளது எனல் ஐதிகம். ஆயிரத்தில் நூறு உண்டெனல் சம்பவம்.

**10.** இயல்பென் றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டியன்பா லின்ப மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபாந பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌநமோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராஜாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ மழகிதந்தோ.

இ - ள். என்றும் - எக்காலத்தும், இயல்பு திரியாமல் - தன்னியற்கை கெடாமல், இயமம் ஆதி - இயமம் முதலாகிய, எண் குணமும் காட்டி - எட்டுக் குணங்களையும் காட்டி, அன்பால் - அன்பினால், இன்பம்ஆகி - ஆநந்த மாகி, பயன் அருள - பயன் அளிக்க, பொருள்கள் - பொருள்களும், பரி வாரம் - பரிகரங்களும், ஆகி - ஆகி, பண்பு உறவும் - குணத்தைப் பொருந்தவும், சௌபாந பக்ஷம் காட்டி - சௌபாந பக்ஷத்தைக் காட்டி, மயல் அறு - மயக்கமறுகைக் கேதுவான, மந்திரம் - மந்திரமும், சிக்ஷை - சிக்ஷையும், சோதிடாதி - சோதிடம் முதலாகிய, மற்று - வேறாயுள்ள, அங்க நூல் - உறுப்பு நூல்களும், வணங்க - தொழும்படி, மௌநமோலி - மௌந நிலையாகிய கிரீடத்தை, அயர்வு அற - சோர்வற, சென்னியில் வைத்து - சிரசில் வைத்து, ராஜாங்கத்தில் - ராஜரீகத்தில், அமர்ந்தது - வீற்றிருந்தது, வைதிக சைவம் - வேத சம்பந்தமாகிய சைவ சமயம், அழகிது - இது அழகியது, அந்தோ - அன்றோ—எ - று.

மந்திரம் சிக்ஷை சோதிடாதி என்றது :—மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் வேதாங்கங்களை. மௌநநிலையில் நிற்றலே முத்திநெறி யென்பார் அந்நிலையை முத்தியிற் சேர்க்கும் சைவ சமயத்திற்குக் கிரீடமாக உருவகஞ் செய்தார். சைவ சமயமே பல சமயங்களிலும் சிறந்ததென்பார் சைவம் அழகிது என்றார். வைதிக சைவம் என்றது வேத விருத்தமான உலகாயதம் முதலிய புறச்சமயங்களை நீக்குதற்கு. சௌபாநம் - படிகள். அவை : சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன.

**11.** அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும்
இதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை

சந்தாந கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சந் மார்க்கம்.

இ - ள். அந்தோ - அன்னே, ஈது அதிசயம் - இது ஆச்சரியகரம் - (ஆதலால்) இச்சமயம்போல் இன்று - இந்தச் சமயம்போல் வேறொன்று மில்லை, அறிஞர் எல்லாம் - ஞானிகளெல்லாம், நடு அறிய - நடுவு நிலைமையி லிருந்து உணருமிடத்து, அணிமா ஆதி - அணிமா முதலியவைகள், வந்து - கைகூடி, ஆடி திரிபவர்க்கும் - விளையாடித் திரிபவர்க்கும், பேசாமோனம் வைத்திருந்த - பேசாத மௌந நிலையைத் தமக்குப் பற்றுக்கோடாக வைத் திருந்த, மாதவர்க்கும் - பெரிய தவத்தினை யுடையார்க்கும், மற்றும் மற்றும் - மேலுமேலும், இந்த்ராதி போகநலம் பெற்றபேர்க்கும் - இந்திரன் முதலிய இறையவர் பத சுகங்களை யடைந்தவர்க்கும், இது அன்றி - இதை யல்லது, தாயகம் - மாத்ருஸ்தாநம், வேறு இல்லை இல்லை - மற்றொன்று மில்லை யில்லை, சந்தாந கற்பகம்போல - சந்தாந கற்பக விருக்ஷங்கள்போல, அருளைக்காட்ட - திருவருளைக் காட்டுதற்கு, தக்க நெறி - தகுதியாகிய மார்க்கம், இந்நெறியே - இந்த மார்க்கமே, சந்மார்க்கம் - (இதுவே) சந்மார்க்கமென்று சொல்லப்படும்—எ - று.

சந்தாநம் கற்பகம் என்பன பஞ்ச தருக்களின் வகை. பஞ்ச தருக்களாவன:—அரிசந்தம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன.

**12.** சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளுந் தானொன் றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை
பகர்வரிய தில்லைமன் றுட் பார்த்த போதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியே யென்ன
எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள வெனக்குந் தானே
கண்டவுடனானந்தங் காண்ட லாகும்.

இ-ள். சன்மார்க்க ஞானமதின் பொருளும் - சந்மார்க்கமென்கிற சைவ சமய ஞானப்பொருளும், வீறு - தாம் தாமே மேலானவை யென்று இறுமாந்திருக்கிற, சமயம் - சமயநூல்களால், சங்கேதம் - நிர்ணயிக்கப்பட்ட, பொருளும் - அர்த்தமும், ஒன்று ஆக - ஒன்றுபட்டிருக்க, பன்மார்க்க நெறியினிலும் - பல சமய வழிகளிலும், கண்டது இல்லை - பார்த்ததில்லை, பகர்வு அரிய - சொல்லுதற்கரிய, தில்லை மன்றுள் - தில்லையம்பலத்தில், பார்த்த போது - கண்டபோது, அங்கு - அவ்விடத்தில், என் மார்க்கம் இருக்குது - என்னவழி யிருக்கின்றது, எல்லாம் வெளியே என்ன - யாவும் வெளியே யென்று, எச்சமயத் தவர்களும் - எந்தச் சமயத்தாரும், வந்து இறைஞ்சா

நிற்பர் - வந்து வணங்காநிற்பர், கல் மார்க்க நெஞ்சம் உள்ள - கல்லினதியற்கையுள்ள மனத்தையுடைய, எனக்கும் - அடியேனுக்கும், கண்டவுடன் - பார்த்தவுடன், ஆநந்தம் காண்டல் ஆகும்-இன்பம் காணலாயிருக்கும்--எ-று.

சங்கேதம் - குழூஉக்குறி. தில்லை மன்று சிதாகாயமாகிய வெறுவெளியாதலால் 'தில்லைமன்றுட் பார்த்தபோ தங்கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியே' என்றும், சமயாதீதப் பழம்பொருளைக் கைவந்திடவே மன்றுள் வெளி காட்டுவது சைவசமயமே யாதலால் எவ்வகைச் சமயத்தாரும் வந்து வணங்காநிற்பார் என்பார் 'எச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சா நிற்பர்' என்றும், இதனைக் கண்டால் அறிஞர்க்கு ஆநந்த முண்டாதலே யன்றிக் கன்னெஞ்சர்க்கும் இன்பம் உதிக்குமென்பார் 'கன்மார்க்க நெஞ்சமுளவெனக்குந் தானே கண்டவுட னாநந்தங் காண்டலாகும்' என்றும் கூறினர்.

"வன்னெஞ்சக் கள்வன் மனவலிய னென்னாதே
கன்னெஞ் சுருக்கிக் கருணையினா லாண்டுகொண்ட"

என்றார் திருவாதவூரடிகளும்.

**13.** காண்டல்பெறப் புறத்தினுள்ள படியே யுள்ளும்
காட்சிமெய்ந்நூல் சொலும்பதியாங் கடவு ளேநீ
நீண்டநெடு மையுமகலக் குறுக்குங் காட்டா
நிறைபரிபூ ரணவறிவாய் நித்த மாகி
வேண்டுவிருப் பொடுவெறுப்புச் சமீபந் தூரம்
விலகலணு குதன்முதலாம் விவகா ரங்கள்
பூண்டவள வைகண்மன வாக்காதி யெல்லாம்
பொருந்தாம லகம்புறமும் புணர்க்கை யாகி.

இ - ள். காண்டல் பெற - ப்ரத்யக்ஷமாக, புறத்தின் உள்ளபடியே - புறத்திலுள்ள வண்ணமே, உள்ளும் - உள்ளிடத்துமாமென்று, மெய் - உண்மையாகிய, காட்சிநூல் சொல்லும் - அறிவு நூல்கள் சொல்லாநிற்கும், பதி ஆம் - பதிப்பொருளாகிய, கடவுளே - தெய்வமே, நீ - நீ, நீண்ட நெடுமையும் - நீண்ட நீட்சியும், அகலக்குறுக்கும் - அகலக் குறுக்கங்களும், காட்டா - காட்டாத, நிறைபரிபூரண அறிவாய் - நிறைந்த பரிபூர்ண ஞானமாகி, நித்தம் ஆகி - சாசுவதமாகி, வேண்டு விருப்பொடு - விரும்புகின்ற விருப்பத்துடன், வெறுப்பு - வெறுப்பும், சமீபம் தூரம் - சமீப தூரங்களும், விலகல் அணுகுதல் - நீங்குதல் சேர்தல்களும், முதல் ஆம் விவகாரங்கள் - முதலாகிய விவகாரங்களும், பூண்ட அளவைகள் - பொருந்திய பிரமாணங்கள், மனவாக்காதி எல்லாம் - மனம் வாக்கு முதலாகிய யாவும், பொருந்தாமல் - அணுகப்பெறாமல், அகம்புறமும் புணர்க்கை ஆகி - உள்ளும் புறமும் பொருந்துவதாகி—எ - று.

"மனத்தான் கண்ணி னகத்தான்" எனவும், "உடலும்மென துயிரும் புகுந்தொழியாவண்ண நிறைந்தான்" எனவும் மேலோர் கூறுதலால், புறத்தினுள்ளபடியே யுள்ளும் என்றும், 'விண்ணோர் பெருமானே' என்பதனால் 'பதியாங்கடவுளே' என்றும், நெடுமை குறுமைகளற எங்கு மொருபடித்தாய் வியாபித்தலால், 'நீண்ட நெடுமையு மகலக் குறுக்குங் காட்டா நிறை பரிபூரணவறிவாய்' என்றும், என்றும் அழிவிலதாதலால், 'நித்தமாகி' என்றும், ராக த்வேஷங்களும் அண்மை சேய்மைகளும் பிரிவு பிரியாமைகளும் காட்சி முதலிய அளவைகளும் மனோ வாக்குக் காயங்களும் ஆகிய விவகாரங்கள் என்று மில்லாததாதலால், 'வேண்டு விருப்பொடு வெறுப்புச் சமீபந் தூரம் விலகலணுகுதன் முதலாம் விவகாரங்கள் பூண்ட வளவைகள் மனவாக்காதி யெல்லாம் பொருந்தாமல்' என்றும் கூறினார்.

**14.** ஆகியசற் காரியவூ கத்துக் கேற்ற
வமலமாய் நடுவாகி யனந்த சத்தி
யோகமுறு மானந்த மயம தாகி
யுயிர்க்குயிரா யெந்நாளும் மோங்கா நிற்ப
மோகவிருண் மாயைவினை யுயிர்கட் கெல்லா
மொய்த்த தென்கொ லுபகார முயற்சி யாகப்
பாகமிக வருளவொரு சத்தி வந்து
பதிந்ததென்கொனானெனுமப்பான்மையென்கொல்.

இ - ள். ஆகிய சற்காரிய ஊகத்துக்கு ஏற்ற - உண்டாகிய சத்கிருத்யத்துக் குரிய யுக்திக்கிணங்கின, அமலமாய்-மலவிமுக்தமாய், நடுவாகி - நடுவு நிலையுள்ளதாகி, அநந்த சத்தியோகம் உறும் - முடிவற்ற சக்திகளின் சேர்க்கையைப் பொருந்திய, ஆநந்த மயமதாகி - சுகரூபமாகி, உயிர்க்கு உயிர் ஆய் - உயிர்க்குயிராகி, எந்நாளும் - எக்காலத்தும், ஓங்காநிற்ப - உயராநிற்க, மோக இருள் - அஞ்ஞான இருளும், மாயை - அதற் கடியான மாயையும், வினை - அதனால் நிகழ்விக்கப்படுகிற வினைகளும், உயிர்கட்கு எல்லாம் - எல்லா வுயிர்களுக்கும், மொய்த்தது என் - வந்தடைந்ததற்குக் காரணம் யாது, உபகாரம் முயற்சி ஆக - தன்னால் செய்யப்படும் உபகாரமே உயிர்களின் பிரயத்நமாக, பாகம் - பரிபக்குவத்தை, மிக அருள - மிகவுமளித்தற் பொருட்டு, ஒரு சத்திவந்து பதிந்தது என் - ஒருசத்திவந்து பதிந்ததற்குக் காரணம் யாது, நான் என்னும் அப்பான்மை என் - நான் என்று சொல்லுகின்ற அந்தத் தன்மையுண்டானதற்குக் காரணம் யாது—எ - று.

கிருத்தியம் - தொழில். விமுத்தம் - நீக்கம். சத்தி பதிதலைச் சத்திநிபாதம் என்பர். நானெனு மப்பான்மை அகங்காரம்.

**15.** நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானு வாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லார்
ஊனென்று முடலென்றுங் கரண மென்றும்
உள்ளென்றும் புறமென்று மொழியா நின்ற
வானென்றுங் காலென்றுந் தீநீ ரென்று
மண்ணென்று மலையென்றும் வனம தென்றும்.

இ - ள். நான் என்னும் ஓர் அகந்தை - நானென்கிற ஒரு அகம் பாவமானது, எவர்க்கும் வந்து - யாவரிடத்து முண்டாகி, நலிந்தவுடன் - அவர்களை வருத்தினவுடன், சகமாயை - லோகமாயையானது, நானு ஆகி - பலவகையாகி, வந்து தொடரும் - வந்து பற்றும், இத்தால் வளரும் - இதனுல் விருத்தியடைகின்ற, துன்பசாகரத்தின் பெருமை - துக்க சமுத்திரத்தின் பெருமையை, சாற்றவல்லார் எவர் - எடுத்துச் சொல்லவல்லவர் யாவர், ஊன் என்றும் - மாமிசமென்றும், உடல் என்றும் - அதனுற் செய்யப்பட்டதாகிய உடம்பென்றும், கரணம் என்றும் - அதற்குள் ளிருக்கிற அந்தக் கரணங்க ளென்றும், உள் என்றும் புறம் என்றும் - அகமென்றும் புறமென்றும், ஒழியாநின்ற - ஒழியாதுநின்ற, வான் என்றும் - ஆகாயமென்றும், கால் என்றும் - காற்றென்றும், தீ நீர் என்றும் - அக்நி ஜலங்களென்றும், மண் என்றும் - பிருதிவியென்றும், மலை என்றும் - மலைகளென்றும், வனம தென்றும் - காடென்றும்—எ - று.

பெருமை - விழுந்தோர் நீந்திக் கரையேறக்கூடாத பரப்பு.

**16.** மலைமலையாங் காட்சிகண்கா ணுமை யாதி
மறப்பென்று நினைப்பென்று மாயா வாரி
அலையலையா யடிக்குமின்பத் துன்ப மென்று
மதைவிளைக்கும் வினைகளென்று மதனைத் தீர்க்கத்
தலைபலவாஞ் சமயமென்றுந் தெய்வ மென்றுஞ்
சாதகரென் றும்மதற்குச் சாக்ஷி யாகக்
கலைபலவா நெறியென்றுந் தர்க்க மென்றுங்
கடலுறுநுண் மணலெண்ணிக் காணும் போதும்.

இ - ள். மலை மலை ஆம் காட்சி - மலை மலையாகக் காணப்படுங் காட்சியும், கண்காணுமை ஆதி - கட்புலனுகாமை முதலாகிய, மறப்பு என்றும் - மறதியென்றும், நினைப்பு என்றும் - நினைவு என்றும், மாயாவாரி - மாயைக் கடலுள், அலை அலை ஆய் அடிக்கும் - அலை யலையாய் மோதுகின்ற, இன்பம்

துன்பம் என்றும் - சுக துக்கங்களென்றும், அவை விளைக்கும் - அவற்றை யுண்டாக்குகிற, வினைகள் என்றும் - கர்மங்களென்றும், அவற்றை தீர்க்க - அவற்றை நீக்க, தலை பல ஆம் சமயம் என்றும் - பல காரணங்களா லுண்டாகிய சமயங்க ளென்றும், தெய்வம் என்றும் - அவைகட்கேற்ற தெய்வங்க ளென்றும், சாதகர் என்றும் - அப்பியாசிகளென்றும், அதற்கு சாக்ஷியாக - அந்த அப்பியாசத்துக்குச் சாக்ஷிபூதமாக, பலகலை ஆம் நெறி என்றும் - பல நூல்களா லுரைக்கப்பட்ட மார்க்கங்களென்றும், தர்க்கம் என்றும் - நியாய சாத்திரமென்றும், கடல் உறும் - கடலிற் பொருந்திய, நுண்மணல் - நுண்ணிய மணலை, எண்ணிக் காணும்போதும் - எண்ணிப்பார்த்து அளவு காணுமிடத்தும்—எ - று.

**17.** காணரிய வல்லலெல்லாந் தானே கட்டுக்
 கட்டாக விளையுமதைக் கட்டோ டேதான்
வீணினிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
 விந்தையெனக் காணவொரு விவேகங் காட்ட
ஊணுறக்க மின்பதுன்பம் பேரூ ராதி
 யொவ்விடவு மெனைப்போல வுருவங் காட்டிக்
கோணறவோர் மான்காட்டி மானை யீர்க்குங்
 கொள்கையென வருண்மௌன குருவாய் வந்து.

இ - ள். காண் அரிய - அளவுகாண்டற்கரியவான, அல்லல் எல்லாம் - துன்பங்க ளெல்லாம், கட்டு கட்டு ஆக விளையும் - கூட்டங் கூட்டமாக உளவாகும், அதை - அவ்விளைவை, கட்டோடே - கட்டுடனே, வீணினில் - பயனிலதாக, கர்ப்பூரமலை - கர்ப்பூரமலையானது, படுதீப்பட்ட விந்தையென காண - மிக்க தீப்பட்டழிந்த ஆச்சரியம்போலத் தோன்றும்படி, ஒரு விவேகம்காட்ட - ஒரு ஞானத்தை எனக்கறிவுறுத்தற்காக, ஊண் உறக்கம் - ஆஹாரநித்திரைகளும், இன்பதுன்பம் - சுகதுக்கங்களும், பேர் ஊர் ஆதி - நாமக்ராமாதிகளும், ஒவ்விடவும் - ஒவ்வாநிற்கவும், என்னைப்போல உருவம்காட்டி - என்னைப்போல மானுடச் சட்டைசாத்தி, கோண் அற - களங்கம் நீங்க, ஓர் மான்காட்டி - ஒரு மானைக்காட்டி, மானை ஈர்க்கும் கொள்கை என - மற்றொரு மானைப் பிடிப்பதுபோல, அருள் - அருளையுடைய, மௌனகுருவாய் வந்து - மௌனகுருவாகி எழுந்தருளி—எ - று.

ஈர்த்தல் - இழுத்தல். அது இவ்விடத்துப் பிடித்தலுக்காயிற்று.

**18.** வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
 வசமெனவே யத்துவா மார்க்க நோக்கி

ஐந்துபுல னைம்பூதங் கரண மாதி
யடுத்தகுண மத்தனையு மல்லை யல்லை
இந்தவுட லறிவறியா மையுநீ யல்லை
யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீயுன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்.

இ - ள். வந்து - வந்து, என் உடல் பொருள் ஆவி மூன்றும் - என் உடம்பும் பொருளும் உயிரும் ஆகிய மூன்றும், தன் கை வசம் என - தன் கை வசமானவை யென்று அங்கீகரித்துக்கொண்டு, அத்துவா மார்க்கம் நோக்கி - அத்துவாமார்க்கத்தைப் பார்த்து, ஐந்து புலன் - ஐந்துபுலன்களும், ஐம்பூதம் - பஞ்சபூதங்களும், கரணம் ஆதி - அந்தக்கரணங்கள் முதலாக, அடுத்த குணம் அத்தனையும் - பொருந்திய குணங்களெல்லாம், அல்லை அல்லை - நீயல்லை யல்லை, இந்த உடல் - இந்தவுடம்பும், அறிவு அறியாமையும் - அறிவறியாமைகளும், நீ அல்லை - நீயல்லை, யாதொன்றுபற்றின் - யாதொருபொருளைக் கவரினும், அதன் இயல்பாய் நின்று - அதின் மயமாகி நின்றும், பந்தம் அறும் - அதன் தொடர்பு தனக்கில்லாத, பளிங்கு அனைய - படிகத்தை யொத்த, சித்து நீ - சித்துப்பொருள் நீயா யிருக்கின்றனை, உன் பக்குவம் கண்டு - உன்பருவம் நோக்கி, அறிவிக்கும் பான்மையேம் - அறிவுறுத்தும் தன்மையினையுடையேம், யாம் - நாமாக விருக்கின்றோம்—எ - று.

சீவன், எதிரிட்ட நிறங்களைப்பற்றியும் தன்னியல்புகெடாத பளிங்குக் கல்லைப்போல, எதிரிட்ட விடயங்களின் மயமாய்த் தோன்றுவதே யன்றித் தன்னியல்பு கெடாதென்பார் 'யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று பந்தமறும் பளிங்கனைய சித்து நீ' என்றார். "சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் சடத்தின் முயல்வாற் சடமாகும்" என்றார் மேலோரும்.

**19.** அறிவாகி யானந்த மயமா யென்று
மழியாத நிலையாகி யாதின் பாலும்
பிறியாமற் றண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டின்
நெறியாகக் கூறுவன்கே ளந்த நாளு
நிர்க்குணநிற் குளம்வாய்த்து நீடு வாழ்க
செறிவான வறியாமை யெல்லா நீங்கச்
சிற்சுகம்பெற் றிடுகபந்தந் தீர்க வென்றே.

இ - ள். அறிவாகி - சித்தாகி, ஆநந்தமயமாய் - ஆநந்தவடிவாகி, என்றும் அழியாத நிலையாகி - சத்தாகி, யாதின்பாலும் - எதனிடத்தும், பிறி

யாமல் - நீங்காமல், தண் அருளே கோயில் ஆன - தண்ணிய அருளே கோயிலாகப்பெற்ற, பெரிய பரம்பதியதனை - பெரிய மேலான பதிப் பொருளை, பெறவேவேண்டின் - பெறுதலையே விரும்பினையாயின், நெறியாகக் கூறுவன் - முறையாகச் சொல்வேன், கேள் - கேட்பாயாக, எந்நாளும் - எக்காலத்தும், நிர்க்குணம் - நிர்க்குணப்பொருள், நிற்கு - உனக்கு, உள்ளம் வாய்த்து - மனத்திற் பொருந்தப் பெற்று, நீடு வாழ்க - நெடுங்காலம் வாழக்கடவை, செறிவான - மிகுதியான, அறியாமை யெல்லாம் நீங்க-அஞ்ஞானம் முற்றுமொழிய, சிற்சுகம் பெற்றிடுக - ஞாநாநந்த சுகத்தைப் பெறக் கடவை, பந்தம் தீர்க - பிறவிக்கட்டு நீங்கக்கடவை, என்று - என்று சொல்லி—எ-று.

**20.** பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை யருளியந்தப் பண்புக் கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிறிது மில்லை
சொல்லுமில்லை யிராப்பகலாந் தோற்றமில்லை
அந்தமில்லை யாதியில்லை நடுவு மில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்து மில்லை.

இ - ள். பந்தம் அறும் - பந்தமறுகைக்குக் காரணமான, மெய்ஞ்ஞானமான - உண்மையறிவாகிய, மோனப்பண்பு ஒன்றை அருளி - மோன நிலையாகிய ஒப்பற்ற பொருளை யருளிச்செய்து, அந்த பண்புக்கு - அந்த நிலைக்கு, சிந்தை இல்லை - மனமில்லை, நான் என்னும் பான்மையில்லை - நானென்னுந் தன்மையில்லை, தேசம் இல்லை - தேசமென்பதில்லை, காலம் இல்லை - காலமென்பதில்லை, திக்கும் இல்லை - திசையு மில்லை, தொந்தம் இல்லை - தொடர்பு இல்லை, நீக்கம் இல்லை - பிரிவில்லை, பிறிதும் இல்லை - இவைகட்கயலாந்தன்மையு மில்லை, சொல்லும் இல்லை - வாக்கு மில்லை, இராப் பகல் ஆம் தோற்றம் இல்லை, இராப்பகல்களாகிய காட்சியில்லை, அந்தம் இல்லை - முடிவில்லை, ஆதியில்லை - முதலில்லை, நடுவும் இல்லை - இடையு மில்லை, அகமும் இல்லை - உள்ளுமில்லை, புறமும் இல்லை - வெளியுமில்லை, அனைத்தும் இல்லை - எல்லாம் இல்லை—எ - று.

பண்பு - குணம், அது இவ்விடத்து நிலையை யுணர்த்திற்று.

**21.** இல்லையில்லை யென்னினொன்று மில்லா தல்ல
வியல்பாகி யென்றுமுள்ள வியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்று னென்னத்
தோன்றுமெதல் லாம்விழுங்குஞ் சொரூப மாகி

அல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா
மடையவுண்டு தடையறவுன் னறிவைத் தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தா னாகக்கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளங்குந் தானே.

இ - ள். இல்லை இல்லை என்னின் - இல்லை இல்லை யென்று சொன்னால், ஒன்றும் இல்லாததல்ல - ஒன்றும் இல்லாததல்ல, இயல்பு ஆகி-(செயற்கையாய் - இடையே வந்ததின்றி) இயற்கையதேயாகி, என்றும் உள்ள இயற்கையாகி - (இவ்வியற்கையும்) எக்காலத்தும் உள்ள இயற்கையாகி, சொல்லரிய தன்மையதாய் - சொல்லுதற்கரிய குணத்தையுடையதாய், யான் தான் என்ன தோன்றாது - யான் தான் என்று காணப்படாமல், எல்லாம் விழுங்கும் சொரூபமாகி - எல்லாவற்றையும் உட்கொள்ளுகின்ற பேருருவாகி, அல்லை உண்ட பகல்போல - இருளைக் கெடுக்கும் சூரியன்போல, அவித்தை எல்லாம் - அஞ்ஞானத்தை யெல்லாம், அடைய உண்டு - முழுதுங்கெடுத்து, தடையற - தடைகளற்றுப்போக, உன் அறிவைத்தானே - உன் அறிவை, வெல்ல - வென்று, உண்டு - விழுங்கி, இங்கு - இவ்விடத்து, (விவகரித்தற் கேதுவாகிய) உன்னையும் - தொம்பதப்பொருளாகிய உன்னையும், தானாகக்கொண்டு - தற்பதப்பொருளாகிய தானாகக்கொண்டு, பேசாமை - மோனநிலையானது, வேதகமாய் விளங்கும் - உனது நிலையை வேறுபடுத்துவதாய் உனக்கு விளக்கிக்காட்டும்—எ - று.

தடைகள் - அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என்பன. பிரமபாவனையை மறந்து வேறுபடுவது அஞ்ஞானம்; ஆசிரியன் வார்த்தையைநம்பாமல் கலங்குவது சந்தேகம்; பிரபஞ்சம் உண்மையென்றும் தேகமே நானென்றும் மனத்திலுண்டாகிய மோகம் விபரீதம்.

"பிரமபா வனையைமூடிப் பேதங்காட் டுவதஞ்ஞானம்
குரவன்வாக் கியநம்பாமற் குழம்புவதாஞ்சந்தேகம்
திரமறு சகமெய்யென்றுந் தேகநா னென்றுமுள்ளே
விரவிய மோகந்தானே விபரீத மென்பர்மேலோர்"

என்றார் பிறரும்.

**22.** தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றும்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்

ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்.

இ - ள். தான் ஆன - எல்லாப் பொருள்களுந் தானேயான, தன்மயமே அல்லால் - தன்மயமேயன்றி, ஒன்றை தலையெடுக்க வொட்டாது - வேறொன்றையுந் தலையெடுக்கவிடாது, தலைப்பட்டு ஆங்கே போனாலும் - தலையெடுத்து அவ்விடத்தே சென்றாலும், கர்ப்பூர தீபம்போல - கர்ப்பூர தீபத்தையொத்து, போய் ஒளிப்பது அல்லாது - ஒன்றுபட்டு மறைவதன்றி, புலம் வேறு இன்று ஆம் - (உன்) அறிவு வேறாய் (ஒன்று) இல்லையாகும், (மேலும்) ஞானாகாரத்தினொடு - ஞானரூபத்தோடு, ஞேயம் - ஞேயமும் ஞாதுருவும் - ஞாதுருவும், நழுவாமல் நழுவி நிற்கும் - நீங்காமல் நீங்கி நிற்கும், ஆனாலும் - ஆயினும், இதன் பெருமை - இதன் ஏற்றத்தை, எவர்க்கு ஆர் சொல்வார் - எவர்க்கு எவர் சொல்லவல்லார், அது ஆனால் - அதுவாகி விட்டால், அது ஆவர் - (தாம் முன்னிருந்த தன்மை தோன்றாமல்) அதுவேயாகி விடுவார், அதுவே சொல்லும் - அந்தப்பொருளே (அதினேற்றத்தை) அறிவிக்கும்—எ - று.

ஞானம், ஞேயம், ஞாதுரு என்பவற்றைத் திரிபுடி யென்பர்.

**23.** அதுவென்றா லெதுவெனவொன் றடுக்குஞ் சங்கை
யாதலினா லதுவெனலு மறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சநகனாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவு மென்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமானந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூ ரிந்தக்
கதியன்றி யுறங்கேன்மேற் கருமம் பாரேன்.

இ - ள். அது என்றால் - அதுவென்று சொன்னால், எது என - எதுவென்று, சங்கை ஒன்று அடுக்கும் - ஆசங்கை யொன்றுண்டாகும், ஆதலினால் - ஆகையால், அது எனலும் - அதுவென்பதையும், அறவே விட்டு - முழுதுமே விட்டு, மது உண்ட வண்டு எனவும் - மதுபானம் பண்ணின வண்டுபோலவும், சநகன் ஆதி மன்னவர்கள் - ஜநகன் முதலிய மன்னவர்களும், சுகர் முதலோர் - சுகர் முதலிய மஹரிஷிகளும், வாழ்ந்தார் என்றும் - வாழ்ந்தனர் என்றும், இந்த நிலை - இந்நிலையில், பதி எனவும் - படிந்து நில்லென்று நியமித்தும், என்னை ஆண்ட படிக்கு - என்னை யாண்டருளின படியே, நிருவிகற்பத்தால் - நிர்விகற்ப சமாதியால், பரம ஆநந்த கதி மேலாகிய இன்பகதியை, கண்டு கொள்ளவும் - கண்டுகொள்ளும்படியாகவும், நின் அருள் கூர் - உன் கிருபைகூர்ந் தருளவேண்டும், இந்தக் கதி

அன்றி - இந்தக்கதியை யடைந்தன்றி, உறங்கேன் - தூங்கேன், மேல் கருமம் பாரேன் - மேல் நடக்கவேண்டிய காரியங்களையும் நோக்கேன்.

சநகனுதி மன்னவர்கள் என்றது ஜநகன், சிகித்துவசன், பகீரதன், மாவலி, முதலியோரை. சுகமுனிவர்க்கு அநுபவத்தில் ஐயமறுத்தவர் ஜநக ராஜராகையால் அத்தலைமைபற்றி சநகனுதி மன்னவர்கள் என முற்கூறி, சுகர் முதலோர் எனப் பிற்கூறினுர்.

24. பாராதி விண்ணனைத்து நீயாச் சிந்தை
பரியமட லாவெழுதிப் பார்த்துப் பார்த்து
வாராயோ வென்பிராண நாதா வென்பேன்
வளைத்துவளைத் தெனைநீயா வைத்துக் கொண்டு
பூராய மாமேலொன் றறியா வண்ணம்
புண்ணுளர் போனெஞ்சம் புலம்பி யுள்ளே
நீராள மாயுருகிக் கண்ணீர் சோர
நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையாய் நிற்பேன்.

இ - ள். பார் ஆதி விண் அனைத்தும் - மண்ணுதி விண்ணீருயுள்ள பூதங்களும் அவற்ருனுளவாகிய இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் என்னு மிருவகைப் பௌதிகங்களும், நீ ஆ - நீயாகவே பாவித்து, சிந்தை - என்மனத்தை, பரியமடலா - பெரிய ஏடாகக்கொண்டு, எழுதி - அவ்வேட்டில் இதனையெழுதி, பார்த்து பார்த்து - பலகாலும் நோக்கி, என்பிராண நாதா - என் பிராண நாயகனே, வாராயோ என்பேன் - வந்தருளாயோ என்று சொல்வேன், என்னை வளைத்து வளைத்து - என்னைத் தடுத்துத் தடுத்து, நீ ஆ வைத்துக்கொண்டு - நீயாகவே வைத்துக் கொள்ளுகையால், மேல் ஒன்று - மேல் ஒருகாரியத்தையும், பூராயமா - ஆத்யந்தமாக, அறியாவண்ணம் - உணராதபடி, புண்ணுளர் போல் - புண்ணுளிகள் போல, நெஞ்சம் உள்ளே புலம்பி நீராளமாய் உருகி - மனமானது வருந்தி உள்ளிடத்திற்றனே ஜலப்பிராயமாய் உருகி, கண்ணீர் சோர - கண்ணீராயொழுக, நெட்டுயிர்த்து - பெருமூச்செறிந்து, மெய் மறந்து - சரீரத்தை மறந்து, ஓர் நிலையாய் நிற்பேன் - ஒரு நிலைப்பட்டு நிற்பேன். எ - று.

உயிர்க்குயி ராதலால் என் பிராண நாதா என்முர். இது, "என்னிலும் மினியாளொருவன் னுளன்" என்னும் மேலோர் திருவாக்கானுமுணர்க.

25. ஆயுமறி வாகியுன்னைப் பிரியா வண்ண
மணைந்துசுகம் பெற்றவன் பரையோ வென்னத்
தீயகொலைச் சமயத்துஞ் செல்லச் சிந்தை
தெளிந்திடவுஞ் சமாதானஞ் செய்வேன் வாழ்வான்
காயிலைபுன் சருகாதி யருந்தக் கானம்
கடன் மலையெங் கேயெனவுங் கவலையாவேன்

வாயில் கும்பம் போற்கிடந்து புரள்வேன் வானின்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே.

இ - ள். உன்னை ஆயும் அறிவு ஆகி-உன்னை ஆராய்கின்ற அறிவினை யுடையராகி, பிரியாவண்ணம் அணைந்து - நீங்காதபடி சேர்ந்து, சுகம்பெற்ற அன்பர் - இன்பமுற்ற உன் தொண்டர்கள், ஐயோ என்ன - ஐயோவென் றிரங்க, தீய - கொடிய, கொலை சமயத்தும் சிந்தை செல்ல - கொலைபுரியும் சமய நெறிகளிலும் மனம் செல்ல, தெளிந்திடவும் - (அம்மனம் அச் சமயநெறிகளிற் செல்லாது) தெளிவடையவும், சமாதானம் செய்வேன் - சமாதானம் பண்ணுவேன், வாழ்வான் - உயிர் வாழும்பொருட்டு, காய் இலை புன் சருகாதி அருந்த - காய் இலை அற்பமாகிய சருகு முதலியவற்றை யுண்ணும்பொருட்டு, கானம் - காடும், கடல் - கடலும், மலை - மலையும், எங்கே எனவும் - எங்கே யுள்ளன வென்றும், கவலையாவேன் - கவலைப்படு வேன், வானில் - ஆகாயத்தில், மதி கதிரை - சந்திர சூரியர்களை, முன்னி லையா வைத்து - முன்னிலையாக வைத்துக்கொண்டு, நேரே - அவர்களுக் கெதிரே, வாயில் கும்பம்போல் - வாசலிற் குடம் புரள்வதுபோல, கிடந்து புரள்வேன் - விழுந்து புரள்வேன். எ - று.

முன்னிலை - சாட்சி. சிவேசுவர ஐக்யத்தில் சுகமுண்டா மென்பார், பிரியாவண்ணம் அணைந்து சுகம்பெற்ற என்றார். ஆதிசப்தத்தால் கிழங்கு நீர் முதலியவுங்கொள்க.

26. நேரோதா னிரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வா வுங்களையிந்நிலைக்கே வைத்தார்
ஆரேயங் கவர்பெருமை யென்னே யென்பே
னடிக்கின்ற காற்றேநீ யாரா லேதான்
பேராதே சுழல்கின்று யென்பேன் வந்து
பெய்கின்ற முகில்காளெம் பெருமா னும்போல்
தாராள மாக்கருணை பொழியச் செய்யுஞ்
சாதகமென் னைகருதிச் சாற்று மென்பேன்.

இ - ள். நேரோ - நேராக, இரவு பகல் - இராப்பகல்கள், கோடாவண் ணம் - வழுவாவகை, நித்தம் வர - நாள்தோறும் வரும்படி, உங்களை-சந்திர சூரியர்களாகிய உங்களை, இந்நிலைக்கே வைத்தார் - இந்த நிலையிற்றானே நிலைபெறுத்தி வைத்தவர், ஆர் - யாவர், அங்கு அவர் பெருமை - அவ்வி டத்து அவரது பெருமையை, என் என்பேன் - என்னென்று வியக்கக் கட வேன், அடிக்கின்ற காற்றே - வீசாநின்ற வாயுவே, நீ - நீ, யாரால் - யா வருடைய கட்டளையினால், பேராதே - இடையறாமல், சுழல்கின்றாய் - சுழலாநின்றாய், என்பேன் - என்றுசொல்லுவேன், வந்துபெய்கின்ற முகில் காள் - வந்து மழையைப் பொழிகின்ற மேகங்களே, எம்பெருமான் - எம்

மிறைவன், நும்போல் - உங்களைப்போல, தாராளமா - மிகுதியாக, கருணை பொழிய - அருண்மழையைப் பொழியும்படி, செய்யும் - செய்யவேண்டிய, சாதகம் - அப்பியாசம், என் - யாது, கருதி - நீங்கள் ஆலோசித்து, சாற்றும் என்பேன் - சொல்லுங்கள் என்று கேட்பேன். எ - று.

இராப்பகல்களை யுண்டாக்குவோர் சந்திரசூரியர்களாதலால்," இரவு பகல் கோடாவண்ணம் நித்தம் வர என்றார். இது பற்றியே இவ்விருவருக்கும் முறையே வடநூலார் நிசாகரன், தினகரன் என்று பெயரிட்டு வழங்குவர்.

27. கருதரிய விண்ணேநீ யெங்கு மாகிக்
கலந்தனையே யுன்முடிவின் காட்சியாக
வருபொருளெப் படியிருக்குஞ் சொல்லா யென்பேன்
மண்ணேயுன் முடிவிலெது வயங்கு மாங்கே
துரியவறி வுடைச்சேட னீற்றி னுண்மை
சொல்லானோ சொல்லென்பேன் சுருதி யேநீ
ஒருவரைப்போ லனைவருக்கு முண்மை யாமுன்
னுரையன்றோ வுன்முடிவை யுரைநீ யென்பேன்.

இ - ள். கருது அரிய - நினைத்தற்கருமையான, விண்ணே - ஆகாயமே, நீ - நீ, எங்கும் ஆகி கலந்தனையே - எவ்விடத்தும் பரவிக் கலந்திருக்கின்றனையே, உன் முடிவின் - உன் முடிவாகிய எல்லையில், காட்சி ஆகி வருபொருள் - காணப்படுவதாய் வரும்பொருளானது, எப்படியிருக்கும் - எவ்வாறாகிய லக்ஷணங்களோடு கூடி யிருக்கும், சொல்லாய் - சொல்லுவாய், என்பேன் - என்று சொல்லுவேன், மண்ணே - பூமியே, உன் முடிவில் - உன் முடிவெல்லையில், எது வயங்கும் - எந்தப்பொருள் நின்று பிரகாசிக்கும், ஆங்கு - அவ்விடத்துள்ள, துரிய அறிவு உடை - மேலான அறிவையுடைய, சேடன் - ஆதிசேஷன், ஈற்றின் உண்மை சொல்லானோ - முடிவான பொருளின் உண்மையைச் சொல்லமாட்டானோ, சொல் என்பேன் - சொல்லுவாய் என்று கேட்பேன், சுருதியே - வேதமே, நீ - நீ, ஒருவரைப்போல் - ஒருவர்க்குப்போல, அனைவருக்கும் - எல்லாருக்கும், உண்மை ஆம் - மெய்யாய் விளங்குகின்ற, முன் உரை அன்றோ - முதனூலாயிருக்கின்றாய் அல்லவோ, நீ உன்முடிவை உரை - நீயுன் முடிவான பொருளைச்சொல்லாய், என்பேன் - என்று சொல்லுவேன். எ - று.

அவ்ப்ராஹ்மண க்ரமத்தில் முதற்பூதமாதலாலும், ஏனைய நான்கு பூதங்கட்கும் அவகாசங்கொடுக்கும் பெருமையுடையதாதலாலும் 'கருதரிய விண்' எனவும், சுருதி அநாதியாதலால் 'முன்னுரை' எனவும், எல்லாச் சமயத்தாரும் தத்தமக்குறுதியாகிய பிரமாணமெனக் கோடற்குரிய தென்பார் அனைவருக்கு முண்மையா முன்னுரையெனவுங் கூறினார்.

28. உரையிறந்து பெருமைபெற்றுத் திரைக்கை நீட்டி
யொலிக்கின்ற கடலேயிவ் வுலகஞ் சூழக்
கரையுமின்றி யுன்னைவைத்தா ரியாரோ வென்பேன்
கானகத்திற் பைங்கிளிகாள் கமல மேவும்
வரிசிறைவண் டினங்காளோ திமங்கா ளூது
மார்க்க மன்றோ நீங்களிது வரையி லேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
பேசியதுண் டோவொருகாற் பேசு மென்பேன்.

இ - ள். உரை இறந்து - பேச்சற்று, பெருமைபெற்று - பெருமையை யடைந்து, திரை கைநீட்டி - அலைகளாகிய கைகளை நீட்டி, ஒலிக்கின்ற கடலே - சத்திக்கிற சமுத்திரமே, இவ்வுலகம் சூழ - இவ்வுலகத்தை வளைந்திருக்கும்படி, கரையும் இன்றி - கரையும் இல்லாமல், உன்னை வைத்தார் - உன்னை யமைத்து வைத்தவர், யாரோ என்பேன் - யாவரோ என்று சொல்லுவேன், கானகத்தில் - காட்டிலுள்ள, பைங்கிளிகாள் - பசுமையாகிய கிள்ளைகளே, கமலம் மேவும் - தாமரை மலரிற்பொருந்திய, வரிசிறை - நீண்ட சிறைகளையுடைய, வண்டு இனங்காள் - வண்டுக் கூட்டங்களே, ஓதிமங்காள் - அன்னங்களே, தூது மார்க்கம் அன்றோ - (நீங்கள் காலங் கழிப்பது) தூதுமார்க்கத்திலல்லவா, நீங்கள் இதுவரையிலேயும் - நீங்கள் இதுவரைக்கும், பெரிய பரிபூரணம் ஆம் - பெரிதாகிய பரிபூரண மென்கிற, பொருளை - வஸ்துவை, கண்டு பேசியது உண்டோ - கண்டு வார்த்தை சொன்னதுண்டோ, ஒருகால் - ஒருதரம், பேசும் என்பேன் - பேசுங்கள் என்று சொல்வேன். எ - று.

வண்டு அன்னம் கிளி நாரை நெஞ்சு முதலியவும் தூதுக்குரியனவாதலால் 'தூதுமார்க்கமன்றோ' என்றார். வரிசிறை யென்ற விசேடணம் தூது செல்லுதற் குரிமைதோன்ற நின்றது. இது "அஞ்சிறைய மடநாராய்" என்ற மேலோர் திருவாக்கானு முணர்க.

29. ஒருவனவன் யானைகெடக் குடத்துட் செங்கை
யோட்டுதல்போ லுன்னைப்பேதை யுப்போ டப்பை
மருவவிட் டுங் கர்ப்பூர மதனிற் றீபம்
வயங்கவிட்டு மைக்கியமுன்னி வருந்தி நிற்பேன்
அருளுடைய பரமென்றோ வன்று தானே
யானுளனென் றும்முனக்கே யாணவாதி
பெருகுவினைக் கட்டென்று மென் னுற் கட்டிப்
பேசியதன் றேயருளால் பேசிற் றன்றே.

இ-ள். ஒரு வனவன் - ஒரு வேடனனவன், யானைகெட-எதிர்நின்ற யானையானது மறைய, (அதைத்தேடுதற்பொருட்டு) குடத்துள் - குடத்துக்

குள்ளே, செங்கை ஓட்டுதல்போல் - செவந்த கையையிட்டுத் துழாவுதல் போல, பேதை நான்-அறிவிலியாகிய நான், உப்போடு அப்பை மருவ இட்டும் - உப்புடன் நீரைப் பொருந்தும்படி கலக்கவிட்டும், கர்ப்பூரமதனில் - கர்ப்பூரத்தில், தீபம் - விளக்கை, வயங்க இட்டும் - பிரகாசிக்கச் சேர்த்தும், ஐக்கியம் உன்னி - (இன்னும்) ஒற்றுமையை நினைத்து, வருந்தி நிற்பேன் - துன்பமுற்றுநிற்பேன், அருள் உடைய பரம் என்றோ - திருவருளைத் தனக்குத் துணைக்காரணமாக வுடைய பரம்பொருள் என்றுள்ளதோ, அன்று தானே-அன்றே, யான் உளன் என்றும்-நானும் உளேன் எனவும், எனக்கே-எனக்கே, ஆணவாதி - ஆணவம் முதலியவைகள், பெருகு - அதிகரித்தற் கேதுவாகிய, வினைக்கட்டு என்றும் - வினைப்பிணிப் புள்ளதென்றும், என்றால் கட்டிப்பேசியது அன்று - என்னால் கற்பித்துச் சொல்லப்பட்டதன்று, அன்றே - பூர்வத்திற்றானே, அருள் நூல் - வீட்டு நூல்களால், பேசிற்று - சொல்லப்பட்டதே. எ - று.

உப்பும் அப்பும், கர்ப்பூரமும், தீபமும், ஒன்றோடொன்று சேர்ந்தபோதே ஐக்கிய முண்டாயிருக்க, ஐக்கியமுன்னி வருந்தி நிற்றலால் பேதையென்றார். உப்பும் நீரும், கர்ப்பூரமும் தீபமும்போல நான் உன்னோடு சேர்ந்திருக்கச்செய்தேயும் வேறொரு ஐக்கியமுண்டென்று மயங்காநின்றேன்; என்னிலைமை எதிரில் நின்ற யானைமறைய, அதனைக் காணும்பொருட்டுக் குடத்திற் கையிட்டுத் துழாவுவோனது நிலைமையை நிகர்க்கும் என்பதாம்.

30 அன்றுமுத லின்றைவரைச் சனன கோடி
யடைந்தடைந்திங் கியாதனையா லழிந்த தல்லால்
இன்றைவரை முத்தியின்றே யெடுத்த தேக
மெப்போதோ தெரியாதே யிப்போ தேதான்
றுன்றுமனக் கவலைகெடப் புலைநா யேனைத்
தொழும்புகொளச் சீகாழித் துறையே தூது
சென்றிடவே பொருளைவைத்த நாவ லோய்நஞ்
சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே.

இ - ள். அன்றுமுதல் - படைப்புக் காலந்தொடங்கி, இன்றைவரை - இன்றளவும், சனனகோடி அடைந்து அடைந்து - ஜந்மபரம்பரைகளைப் பலகாலுமடைந்து, இங்கு - இந்தப் பொய்நிகழுமுலகில், யாதனையால் - துன்பத்தினால், அழிந்தது அல்லால் - அழிந்ததேயன்றி, இன்றைவரை - இன்றளவும், முத்தி இன்றே - முத்தியையடைதலின்றி யொழிந்ததே, எடுத்ததேகம் - வினைக்கீடாக எடுக்கப்பட்ட வுடம்பு, எப்போதோ - (விடுப்பது) எந்தப் பொழுதோ, தெரியாதே - அறியப்படாதே, (ஆதலால்) இப்போதே - இன்றே, துன்று - அதிகரித்த, மனக்கவலைகெட - மனக் கிலேசங்க ளொழிய, புலை - நீசத்தன்மையுள்ள, நாயேனை - நாயி

னேனை, தொழும்புகொள - தொண்டுகொள்ள, சீகாழித்துறையே - சீகாழிக்கு நிர்வாஹகனே, தூதுசென்றிட - பரமசிவன் தூதுசெல்ல, பொருளை வைத்த - நிதிக்குவியலையிட்ட, நாவலோய் - திருநாவலூரனே, நம் சிவன் - நமது பரமசிவன், அப்பா என்ற - அப்பா என்றழைத்த, அருள் செல்வம் - திருவருளாகிய செல்வத்தையுடைய, தேவே - தெய்வமே. எ - று.

இங்கு அடைந்து என இயைப்பினும் பொருந்தும். இப்பொழுது, யாதனை என்பது நரகத்திற் கொல்லாது வருத்தும் நோய் எனக்கொள்க. சீகாழித்துறை - திருஞானசம்பந்தர்; திருநாவலூரன் - சுந்தரர்; சிவபெருமான் அப்பாவென் றழைக்கப்பெற்றவர் - வாகீசர்.

31\. தேவர்தொழும் வாதவூர்த் தேவே யென்பேன்
திருமூலத் தேவேயிச் சகத்தோர் முத்திக்
காவலுறச் சிவவென்வாக் குடனே வந்த
வரசேசும் மாவிருந்துன் னருளைச் சாரப்
பூவுலகில் வளரருணை கிரியே மற்றைப்
புண்ணியர்கா ளோவென்பேன் புரையொன் றில்லா
ஓவியம்போ லசைவறவுந் தானே நிற்பே
னோதரிய துயர்கெடவே யுரைக்குமுன்னே.

இ - ள். தேவர்தொழும் - தேவர்கள் வணங்குகின்ற, வாதவூர்த்தேவே - திருவாதவூரடிகளே, என்பேன் - என்று சொல்லுவேன், திருமூலத்தேவே - திருமூலர் என்ற திருப்பெயரையுடைய சுவாமீ, இச் சகத்தோர் - இந்த உலகத்தோர், முத்திக்கு ஆவல் உற - மோக்ஷமடைதற்பொருட்டு ஆசையதிகரிக்க, சிவஎன்வாக்குடனேவந்த - சிவனென்கிற வாக்கியத்தோடு பிறந்த, அரசே - இறைவனே, சும்மாயிருந்து - நீவிர்கள் சும்மா விருந்துகொண்டு, உன் அருளைச்சார - உன்னருளையடைதற்காக, பூவுலகில் - பூலோகத்தில், வளர் - விருத்தியடையாநிற்கிற, அருணகிரியே - அருணகிரிசுவாமீ, மற்றைப்புண்ணியர்காள் - மற்றுமுள்ள புண்ணியவான்களே, ஓ என்பேன் - ஓவென்றுமுறையிடுவேன், புரை ஒன்று இல்லா - குற்றம்சிறிதுமில்லாத, ஓவியம்போல் - சித்திரப்பாவைபோல, அசைவு அறவும் நிற்பேன் - சலநமற்றும் நிற்பேன், ஓது அரிய - சொல்லுதல் அருமையாகிய, துயர்கெட - துயரம்நசிக்கும்படி, உரைக்கும் முன்னே - சொல்லுமுன்னமே. எ - று.

திருவாதவூரடிகள் - மாணிக்கவாசக சுவாமிகள். திருமூலர் - மூவாயிரம் பாடலடங்கிய திருமந்திரம் என்னும் நூல்செய்தவர். சிவ என்வாக்குடனே வந்த அரசு - சிவவாக்கியர். இவர் அவதாரகாலத்தில் சிவ என்னும் வாக்குடனே அவதரித்தமையால் இவர்க்கு இப்பெயருண்டாயிற்று. அருணகிரிநாதர்,

"செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமற்
றம்மா பொருளொன் றுமறிந் திலனே."—என்னுந்திருப்பாடலை யருளிச் செய்தவ ராதலால் அவர்க்கு அதனையே விசேடணமாக, "சும்மா விருந் தன்னருளைச்சாரப் பூவுலகில் ளரருணகிரியே" என்றார். புரை யொன்றில்லா ஓவியம் என்றது நுண்டொழில் முற்றிய ஓவியத்தை.

32. ஓதரிய சுகர்போல வேனே னென்ன
வொருவரிலை யோவெனவு முரைப்பேன் றானே
பேதமபே தங்கெடவு மொருபே சாமை
பிறவாதோ வாலடியிற் பெரிய மோன
நாதனொரு தரமுலகம் பார்க்க விச்சை
நண்ணானோ வென்றென்றே நானா வாகிக்
காதன்மிகு மணியிழையா ரெனவா டுற்றேன்
கருத்தறிந்து புரப்பதுன்மேற் கடன்முக் காலும்.

இ - ள். ஓதரிய - தபோமகிமையை யெடுத்துச் சொல்லுதற்கரிய, சுகர் போல - சுகமுனிவர்போல, ஏன்ஏன் என்ன - ஏன்ஏன் என்று பிரதி த்வநிகொடுக்க, ஒருவர் இல்லையோ எனவும் உரைப்பேன் - ஒருவர் இல்லை யோவென்றுஞ் சொல்லுவேன், தானே - தன்கிடையே, பேதம் அபேதம் கெடவும் - பேதாபேதங்கள் ஒழியவும், ஒரு - ஒப்பற்ற, பேசாமை-மௌந நிலையானது, பிறவாதோ - உண்டாகாதோ, ஆல் அடியில் - வடவிருக்ஷ மூலத்தி லெழுந்தருளிய, பெரிய மோனநாதன் - பெரிய மௌந நிலையை யுடைய இறைவன், ஒருதரம் - ஒரு முறை, உலகம் பார்க்க - உலகத்தைக் கடைக்கணிக்க, இச்சை நண்ணானோ - விருப்பங்கொள்ளானோ, என்று என்று - என்று பலகாற்சொல்லி, நானா ஆகி - பலவகையாய்க்கலங்கி, காதல்மிகும் - (பிரிந்துசென்ற தங்கொழுநர் நியமப்படி வராமையால், அவர் கள்மேல்) ஆசைமிகுந்த, அணியிழையார் என - மாதரைப்போல, வாடுற் றேன் - வாட்டமடைந்தேன், கருத்து அறிந்து - என்கருத்தையுணர்ந்து, புரப்பது - காத்தருள்வது, முக்காலும் - மூன்றுதரமும், உன்மேல்கடன் - உனக்குக்கடன்மை ஆகும். எ - று.

சுகமுனிவர் அவதரித்தவுடன் பிரபஞ்சமாயைக் கஞ்சியோட, அவர் தந்தையாராகிய வேதவியாச பகவானவர் அவரைப் பின்தொடர்ந்து ஓகோ மகனே யென்று அழைத்துக்கொண்டு போனபோது, சுகர் பூதமய ரும் இறைவனைப்போலச் சர்வ வியாபகத்துவமுள்ளவரு மாதலால் அங்கி ருந்த விருக்ஷங்களெல்லாம் பிரதித்வநி செய்தனவென்பது நூற்றுணிபாத லால், "சுகர்போல ஏன்ஏன் என்ன வொருவரிலையோ" என்றார். இதனை

அடியில்வரும் பாகவதபுராணச் சிறப்புப் பாயிரச் செய்யுளானு முணர்க.
* தந்தையார் அழைக்குந்தோறும் பிரதித்வநி கொடுத்த சுகமுனிவர்போல, நான் அழைக்குந்தோறும் பிரதித்வநிகொடுக்க ஒருவருமில்லையோ; எனக்கு மௌனநிலை யுண்டாகாதோ; கல்லாலெம்மான் ஒருதரம் உலகத்தைப் பார்க்க நினையானோ; என்று பலபடியாகச் சொல்லி, கணவர்பிரிவாற்றாது வருந்து மாதரைப்போல வருந்தாநின்றேன், என்கருத்தறிந்து என்னைப் பாதுகாத்தல் உனக்குக் கடன்மையாம் என்பதாம்.

33. காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி
மாலறவுஞ் சைவமுதன் மதங்க ளாகி
மதாதீத மானவருண் மரபு வாழி
சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தவருட் டன்மை வாழி
ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
யகண்டிதா காரவரு ளடியார் வாழி.

(இ - ள். காலமொடு - கால தத்துவத்தோடும், தேச வர்த்த மானம் ஆதி - தேச வர்த்தமா னாதிக ளோடும், கலந்து நின்ற நிலை - பிரிவறக் கலந்துநிற்கும் நிலையுடைப்பொருள், வாழி - வாழ்க, கருணை - (அப்பொருளிற் பிரிவறநின் றியங்கும்) திருவருள், வாழி - வாழ்க, மால் அறவும் - மயக்க மொழியவும், சைவம் முதல் மதங்கள் ஆகி - சைவம் முதலாகிய பல வேறுமதங்களாய் நின்றும், மத அதீதம் ஆன - மதங்களுக்கெட்டாத தான, அருள் மரபு - திருவருள் மரபானது, வாழி - வாழ்க. சாலம் மிகும் - மாயா விகாரம் மிகுந்த, எளியேன் - ஏழையேன், இவ்வழக்குப்பேச - இந்த விவகாரம் பேசும்படி, தயவு வைத்து வளர்த்த - கிருபைவைத்து வளர்த்த, அருள் தன்மை - திருவருட்குணம், வாழி - வாழ்க, ஆல் அடியில் - வடமூலத்திலெழுந்தருளிய, பரமகுரு - பரமாசாரியன், வாழி வாழி - வாழ்க வாழ்க, அகண்டிதம் - சேதிக்கப்படாத, ஆகாரம் - உருவத்தை யுடைய, அருள் - உன் திருவருளுக்கு, அடியார் - தொண்டு பூண்டோர், வாழி - வாழ்க. எ - று.

---

* பிறந்தபொழு தே துறந்து பிறைக்குழவி போனடிப்பப் பின்போய்த் தொன்னூல், அறைந்தபுகழ் வியாதமுனி யாதரத்தான் மதலாயென்றழைப்பச் செவ்வாய், திறந்துநறை பொழியுமலர்ச் செழுந்தருவு மேனென்ன வுயிர்கள் யாவும், நிறைந்துறையுஞ் சுகமுனிவ னிணையிதழ்த்தா மரைத்தாள்க ணினைதல் செய்வாம்.

மால் அறவும் என்பதற்கு இதுவோ அதுவோ வென்னும் மயக்க மிகும்படி யாகவும் எனவுரைத்தலும் ஆம். 'எளியேன்' என்றார் சாலமிகுதற் கிடனாயிருத்தலான். ஆலடியிற் பரமகுரு - தக்ஷிணாமூர்த்தி.

இது சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமனை நோக்கிக்
கூறியதாகக் கூறப்பட்டது.

## தேன்முகம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

1. தேன்முகம் பிலிற்றும் பைந்தாட்
 செய்யபங் கயத்தின் மேவும்
நான்முகத் தேவே நின்னா
 னாட்டிய வகில மாயை
கான்முயற் கொம்பே யென்கோ
 கானலம் புனலே யென்கோ
வான்முக முளரி யென்கோ
 மற்றென்கோ விளம்பல் வேண்டும்.

இ - ள். தேன் - தேனை, முகம் - தன்னிடத்தி னின்றும், பிலிற்றும் - துளிக்கின்ற, பை தாள் - பசிய நாளத்தையுடைய, செய்ய - செவந்த தாகிய, பங்கயத்தில் - தாமரை மலரின்மேல், மேவும் - வீற்றிருக்கின்ற, நான்முகத்தேவே - நான்கு முகங்களையுடைய பிரமதேவனே, நின்னால் நாட்டிய - உன்னால் படைத்து நிலைபெறுத்தப்பட்ட, அகிலம் - பிரபஞ் சத்தைப்பற்றிய, மாயை - மாயையானது, கான் - காட்டில் வாழ்கின்ற, முயல் - முயலினது, கொம்பே என்கோ - கொம்புதா னென்று சொல்லு வேனோ, கானல் புனலே என்கோ-கானல்நீர்தான் என்று சொல்லுவேனோ, வான் முகம் - ஆகாயத்தினிடத்திலுள்ள, முளரி என்கோ - தாமரைமலர் என்று சொல்லுவேனோ, மற்று என்கோ - இவற்றின் வேறாகிய பொருள் என்று சொல்லுவேனோ, விளம்பல் வேண்டும் - (அதை) நீயே சொல்லல் வேண்டும். எ - று.

கான் முயற்கொம்பு முதலிய மூன்றும் இல்பொருளுவமை. மாயை யைச் சுருதி குரு சுவா நுபவங்களா னுற்று நோக்குமிடத்து மித்தையாய்ப் போமென்பார் இவ்வாறு கூறினார். கானலம் என்பதில் அம் சாரியை. முயற்கொம்பும், கான னீரும், ஆகாயத் தாமரையும், தோற்றத்தா லன்றி விசாரத்தாற் காணப்படாத மாயையின் மித்தியாபாவத்தைக் காட்டவந்த இல்பொருளுவமைகள். ஒருபொருளினுண்மையை வேதவேதாந்தங்களை யுணர்ந்தா னொருவன் கூறின், நன்கு விளங்கு மாதலால், விளம்பல் வேண் டும் என்று, சிருஷ்டிகர்த்தாவும் வேதாஞ்சகனுமாகிய பிரமனை நோக்கிக்

கூறினார். "வேத ரஞ்சகன் மால் புரந்தரன்" என்றற் ரொடக்கத்துச்செய் யுள்களானும் இவன் வேதாதிகாரியென்பது விசதம்.

2. வேண்டுவ படைத்தாய் நுந்தை
விதிப்படி புரந்தா னத்தைக்
காண்டக வழித்தான் முக்கட்
கடவுடா னினைய வாற்றால்
ஆண்டவ னெவனோ வென்ன
வறிகிலா தகில நீயே
ஈண்டிய வல்ல றீர
வெம்மனோர்க் கியம்பு கண்டாய்.

(இ - ள்.) வேண்டுவ - உலகத்தாரல் வேண்டப்படுவன வாகிய பொருள்களை, படைத்தாய் - நீ படைத்தனை, நுந்தை - உன் தந்தையாகிய திருமால், விதிப்படி புரந்தான் - காக்கவேண்டிய முறைப்படி காத்தான், அத்தை - அதனை, முக்கண் கடவுள் - மூன்று கண்களையுடைய உருத்திர மூர்த்தி, காண்தக அழித்தான் - யாவருங்காணும்படி அழித்தொழித்தான், இனைய ஆற்றால் - இந்தப் பிரகாரத்தால், ஆண்டவன் எவன் என்ன - இறைவன் யாவனென்று, அகிலம் அறிகிலாது - உலகம் உணரமாட்டாது, (ஆதலால்) ஈண்டிய - மிகுந்த, அல்லல் தீர - சந்தேகம் நீங்க, எம் அன்னோர்க்கு - எம்மை யொத்தவர்களுக்கு, நீயே இயம்பு - நீயே சொல்லாய்.

அத்தையென்றது அவற்றை யென்றபடி. முக்கண் கடவுள் - சோம சூரியாக்கினிகளை மூன்று கண்களாகவுடைய தேவன். கடவுள் - ப்ருதிவி யாதி நாதாந்தமான தத்துவங்களைக் கடந்துநின்றோன். நீயும், உன் தந்தை யும், முக்கட் கடவுளும் முறையே படைத்தல் காத்தல் அழித்தல்களைச் செய்வதனால், நீங்கள் மூவரும் சமமாகவே உலகத்துக்குக் காணப்படுகின் றீர்கள், உங்களுள் இறைவன் இன்னானென்று தெரியாமல் உலகம் மயங்கா நின்றது, ஆதலால், அந்தச் சந்தேகம் நீங்கும்படியாக எம்போல்வார்க்கு நீயே உண்மையை யறிவுறுத்தவேண்டும் என்பதாம்.

3. கண்டன வல்ல வென்றே
கழித்திடு மிறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக்
கோதிலா முத்தி யத்தால்
பண்டையிற் படைப்புங் காப்பும்
பறந்தன மாயை யோடே
வெண்டலை விழிகை காலில்
விளங்கிட நின்றான் யாவன்.

இ - ள். கண்டன - காணப்பட்டன வாகிய பொருள்க ளெல்லாம், அல்ல என்று - பரம்பொரு ளல்லவென்று, கழித்திடும் - நேதி வாக்கியத் தாற் களைந்து செல்லுகின்ற, இறுதிக்கண் - முடிவிடத்தில், கொண்டது - பரம்பொருளென்று கொள்ளப்பட்டது யாது, (அது) பரமா னந்தம் - மேலான சுகத்தைத்தருகின்ற, கோது இல்லா - குற்றமற்ற, முத்தி-மோக்ஷ மாகும், அத்தால் - அதனால், பண்டையின் - முன்னதாகிய, படைப்பும் - சிருட்டியும், காப்பும் - திதியும், மாயையோடே பறந்தன - மாயையோ டொழிந்தன, வெள் தலை விழி - வெண்மையாகிய தலையும் கண்ணும், கை காலில் - முறையே கையினிடத்தும் காலினிடத்து, விளங்கிட - பிரகா சிக்கும்படி, நின்றான் - சர்வ சங்கார காலத்தில் பேரீமத்தாடியாய்ச் சேடி த்து நின்றவன், யாவன் - எவன், எ - று

கண்டன அல்ல வென்று கழித்தலாவது, காணப்பட்ட பொருள்க ளெல்லாவற்றையும் இது பரம்பொருளல்ல, இது பரம்பொருளல்ல என்று பொருள் தோன்றுமளவும் கழித்துக்கொண்டே செல்லுதல். இதுவாழையி னுள்ளீடாகிய தண்டு தோன்றுமளவும் மட்டைகளைக் கழித்துக்கொண்டே செல்வது போல்வது. இதனை நேதி வாக்கியம் என்பர் வடநூலார். ந இதி எனப்பிரியும். இதற்கு, இது அல்ல என்பது பொருள். "அல்லையீதல்லை யீது" எனவும், "இதன்றி தன்றெனச் சேடித்தபின்" எனவும் மேலோர் கூறுவதனுலு மறிக. வெண்டலைவிழி கைகாலில் என்றது நிரனிறை. வெண்டலை கையிலும், விழி காலிலும் விளங்க எனக்கூட்டுக. வெண் டலை - பிரம கபாலம்; விழி - திருமாலின்கண்; "தலைமாலை தனக்கணி ந்து" "பங்கயமாயிரம் பூவினிலோர் பூக்குறையத் - தங்க ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே" இத்தியாதிக ளானும் இது இனிதுவிளங்கும். சர்வசங்காரகாலம் இத்தன்மையதென்று, சங்காரசத்தியின் குணங்களை யுரைக்கின்ற அடியில் காட்டும் ஞானவாசிட்டச் செய்யுட்களால் விசத மாகும்.

## சங்காரசத்தியின் நடனச்சிறப்புரைத்தல்.

படர்பூதந் தொலைத்திரதம் பயில்புவியாம் பானபாத் திரங்கைப் பற்றி
மடல்சூழுற் பலங்கழுநீர் வனசமென வுலகனிரை மாலை சூடி
விடுகோடை யிடிநகைக்கு நரவரியை விளையாட்டு விகங்கமாக
நெடுநீள்வன் புயமாம்பஞ் சரத்தினிடை யேந்துகின்ற நெறிய ளாகி.

இ - ள். மிகுந்த சீவர்களைக்கொன்று, இரசம்பொருந்திய பூமியாகிய மதுபாத்திரத்தைக் கரத்திலேந்தி, மூன்றுலகமென்கின்ற இதழ்களையுடைய நீலோற்பலஞ் செங்கழுநீர் தாமரைமலர் (என்னு மிவைகளாற்றொடுத்த) அலங்கலைப்புனைந்து, எரியாநின்ற கோடை யிடியைப்போல மந்தகாசஞ் செய்கின்ற நரசிங்கத்தை லீலைக்குரிய கிளிப்பிள்ளையாக நீண்ட மிகுந்த

பராக்கிரமத்தையுடைய புஜமாகிய கூட்டில் ஏந்திக்கொண்டிருக்கின்ற தன்மையை யுடையவளாய். எ - று.

ஆகாயம் போன்ற வடிவம் தனக் கவயவ மென்பது தோன்ற, புவியாம் பானபாத்திரங் கைப்பற்றி யுலகக்கிரா மாலேசூடி யென்றும், சகலத்தையுஞ் சங்கரிக்கும் கோரமுள்ள சத்தியென்பது தோனற நரவரியை விளையாட்டு விகங்கமாக வேந்துகின்ற என்றுங் கூறினர்.

மன்னுசரற் ககனம்போன் மாசின்றிச் சுரவீணை மதுரமேவி
முன்னுயர்காலனைக்கேளிஇக் கோகிலக்குஞ்சாய்க்கொண்டு முழுதுமின்மை
யென்னுமடற் சிலைதாங்கி யெழுதுயரா மியகணைக ளேந்தி யெங்குந்
துன்னுநட னம்புரிந்து தன்வசமாய் மிகவிளங்கிச் சுற்று நிற்கும்.

இ - ள். நிலையான சரற்காலத் தாகாயத்தைப்போல சரீரத்திற் களங்கமின்றி சுரவீணை (யினிசையையொத்த) மதுரவசனத்தைப் பொருந்தி (யிருக்கின்ற) பழய மகாகாலனை விளையாட்டின்பொருட்டு குயிற் பார்ப்பாகக்கைக்கொண்டு, சர்வாபாவமென்கிற வெற்றிபொருந்தியவில்லைத்தரித்து, உண்டாகின்ற துன்பங்களாகிய அம்புகளைத் தரித்துக்கொண்டு எவ்விடத்தினும் தனதிச்சைப்படிபொருந்திய நிருத்தஞ்செய்து மிகவும் பிரகாசித்துச் சுழன்றுகொண்டிருக்கிறாள். எ - று.

காளராத்திரி சர்வத்தையுஞ் சங்கரிக்கின்ற மகா காலனையுந் தனது விநோதக்கருவியாய் வைத்திருக்குமென்பதாம்.

பொன்னுலகு தரியணியாம் புணர்பாவ மெனுநுலாற் பூட்டிக் கட்டும்
பன்னரகச் சிலம்புகளைப் பாதலமாம் பதத்தணியும் பானுத்திங்கள்
என்னுமணி சேரிமவா னெனுமெலுப்பு மணிமேரு வென்னும் பொற்பூண்
டன்னிருகா தினுந்தரிக்குஞ் சக்கரவெற் பணிகலையாய்த் தழுவு மன்றே.

இ - ள். சுவர்க்கம் (சிரத்தில்) தரிக்கும் ஆபரணமாம், பொருந்தின தீவினையென்கிற தந்துவினால் கோத்துக் கட்டப்பட்ட பல நரகமென்னு நூபுரங்களைப் பாதாளமென்கிற பாதத்திற் றரிப்பள். சூரிய சந்திரரென்கிற குண்டலாபரணங்களையும் சேர்ந்த இமயமலை யென்கிற அஸ்தியாபரணத்தையும் மகாமேருவென்கிற சொன்னுபரணத்தையும் தனதிரண்டு செவியினும் (கீழணிமேலணியாகத்) தரிப்பள். சக்ரவாளகிரியை (அரையில்) தரிக்கப்பட்ட மேகலையாக்ச் சங்காரசத்தியானவள் தரிப்பள். எ - று.

சங்காரசத்தி, சுவர்க்கமுதல் நரகபரியந்தங்களை விசித்திரமான வாபரணங்களாகத் தரிக்குமென்பதாம்.

பின்னுறத்தாழ்ந் தலைந்திலங்கு முருகன்வா கனமேடம் பீலி சூடு
முன்னயனப் பெருங்குழிகள் பயஞ்செய்யு மதிச்சடைதாழ் முடிகள் பூணும்
கன்னியுமை குழற்கவரி மலைநிகர்பை ரவராடுங் கவந்த மேகம்
பன்னயனக் குழிவிளங்கு மிந்திரன்றன் மேனியெனும் பலியோடேந்தும்.

இ - ள். பின்பக்கத்திற் றாழ்ந்து அசைந்து விளங்காநின்ற சுப்பிரமணியரது வாகனமென்கிற வருடையையும் மயிலையும் தரிப்பள். மூன்று கண்களென்னும் பெரிய பள்ளங்களால் அச்சஞ்செய்யப்பட்ட சந்திரனை (யணிந்த) சடிலநான்ற (உருத்திரர்களின்) சிரசைத்தரிப்பள். கன்னியாகிய பரமேசுவரியினுடைய கூந்த லென்னுஞ் சாமரத்தையும் பருப்பதத்துக் கொப்பான பைரவர்களின் துள்ளுகின்ற கவந்தங்களையும் தரிப்பள். ஆயிரம்கண்களென்கிற பள்ளங்கள் பிரகாசியாநின்ற தேவேந்திரனது சரீரமென்கிற பிக்ஷாபாத்திரத்தைத் தரிப்பள். எ - று.

சங்காரகிருத்தியமுள்ள வுருத்திரரையுஞ் சங்கரிப்பவளென்பார், மதிச்சடை தாழ்முடிகள் பூணுமென்றார். கோரசத்தி உருத்திரன் முதலிய சகலரையுந் தன்வயமாக்கு மென்பதாம்.

மிகவுணங்கு சாரீர கட்வாங்கப் பங்குகளால் விளக்கந் துன்று [மாற்று
மகமுடைத்தாய்த் தனைத்தானே பயஞ்செய்து புவனமெலாந் தொலைத்து
மகிலமுமா மொருவடிவின் முடிவட்ட மெனுங்கமலத் தலங்களோடு
நிகரிணடனம்புரிந்து பெருங்கற்பந் தனில்விளங்காநிற்கு மன்றே.

இ - ள். மிகவும் இளைத்த (சரீர சம்பந்தமான) நரம்புகளாற் கோக்கப்பட்ட சிரக்கபால மாலைகளால் பிரகாசமிருந்த ஆகாயத்தை யுடையவளாய்த் தனக்குத்தானே பயங்கரமாய் உலகங்க ளனைத்தையும் நாசஞ்செய்வள். விசுவரூபங்கொண்ட விஷ்ணுவினது விருத்தமாகிய சிரங்களென்கின்ற தாமரை மலர்களாற் (றொடுத்த) மாலைகளுடன் ஒப்பற்ற நிருத்தஞ்செய்து சர்வசங்கார காலத்தில் பிரகாசித்துக்கொண்டிருப்பள். எ - று.

மாகம் என்பது மகம் எனக்குறுகி நின்றது. முன்கவியில் உருத்திர கபாலமும் பின்னர் விஷ்ணு கபாலமும், சொல்லப்பட்டமையால், கட்வாங்க மென்பது பிரமகபாலமென வமையும். பிரம விஷ்ணுக்களை சங்கரித்தாள் என்பார், கட்வாங்கமென்றும் முடிவட்டமென்றுங் கூறினர்.

சங்காரசத்தி சிருஷ்டி திதி கிருத்தியமுள்ள பிரம விஷ்ணுக்களையுந் தன்வயமாக்கிச் சர்வ சூனிய மயானத்தில் நிருத்தஞ்செய்யும் பரமேசுவரசத்தியாம்.

4. விளங்கவெண் ணீறு பூசி
   விரிசடைக் கங்கை தாங்கித்
துளங்குநன் னுதற்கண் டோன்றச்
   சுழல்வளி நெடுமூச் சாகக்
களங்கமி லுருவங் காமே
   ககனமாய்ப் பொலியப் பூமி
வளர்ந்ததா ளென்ன வுள்ள
   மன்றென மறையொன் றின்றி.

இ-ள், விளங்க - பிரகாசிக்கும்படி, வெண்ணீறு பூசி - திருவெண்ணீற்றை யணிந்து, விரிசடை - பரந்த சடையினிடத்து, கங்கை தாங்கி - கங்கையைச் சுமந்து, துளங்கு - ஒளியைச் செய்கின்ற, நல் - அழகாகிய, நுதற்கண் தோன்ற - நெற்றிக்கண் காணப்படவும், சுழல் வளி - சுழலாநின்ற காற்றானது, நெடுமூச்சு ஆக - பெருமூச்சாகவும், ககனமே - ஆகாயமே, களங்கம் இல் - குற்றமற்ற, உருவமாய்ப்பொலிய - வடிவாகப் பிரகாசிக்கவும், பூமி - பூமியே, வளர்ந்ததாள் என்ன - நீண்ட திருவடியாகவும், மன்று - சிற்சபையானது, உள்ளம் என - இதயமாகவும் (கொண்டு), மறை ஒன்று இன்றி - சிறிதும் இரகசியமில்லாமல். எ - று.

கங்கை யடங்கத்தக்க பெரும்பரப்பான தென்பார் "விரிசடை" யென்றார். "வெள்ளந்தாழ் விரிசடையாய்" என்றார் திருவாதவூரடிகளும். நெற்றியிற் கண்ணிருப்பின் அழகா யிராதென்னும் நினைவொழித்தற்கு "நன்னுதற்கண்" எனக்கூறி, அதுவும் ஓர் அழகுடைத்தென்று வற்புறுத்தினார். இதனை "தில்லையோர் கொண்முக்கண்" என்னுந் திருவாதவூரடிகள் திருவாக்கானு முணர்க. இறைவனுக்குத் தில்லையை இருதய புண்டரிகமாகக் கூறுபவாதலால் 'உள்ளம் மன்றென' எனக் கூறப்பட்டது.

5. மறைமுழக் கொலிப்பத் தாமே
   வரதமோ டபயக் கைகள்
முறைமையி னோங்க நாத
   முரசெனக் கறங்கவெங்கும்
குறைவிலா வண நிறைந்து
   கோதிலா நடனஞ் செய்வான்
இறையவ னெனலா மியார்க்கு
   மிதயசம் மதமீ தல்லால்.

இ-ள். மறை முழக்கு ஒலிப்ப - வேதமுழக்கமானது சத்திக்கவும், வரதமோடு அபயக் கைகள் - வரதா பய ஹஸ்தங்கள், முறைமையின் ஓங்க - முறையாக மிக்கு விளங்கவும், நாதம் - நாதத்துவமானது, முரசு

என கறங்க - பேரிகைபோல வொலிக்கவும், எங்கும் - எவ்விடத்தும், குறைவு இல்லா வண்ணம் - குறைவில்லாதபடி, நிறைந்து-நிரம்பி, கோது இல்லா நடனஞ் செய்வான் - குற்றமற்ற நடனம் பண்ணுவோன் யாவன், (அவன்) இறையவன் - முதல்வன், எனலாம் - என்று சொல்லலாம், யார்க்கும் - எல்லார்க்கும், இதயசம்மதம் - இதயசம்மதமான காரியம், ஈது அல்லால் - இதுவாமன்றி. எ - று.

வரதக்கை - வரங்கொடுக்குங் கை. அபயக்கை - பயமொழிக்குங் கை. கோதிலாத நடநம் என்றது அன்பர் உடலுருக நடித்தலை, அது, "கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுருகக் குனிக்கும் - பாம்பலங்காரப் பரன்" என்னுந் திருக்கோவையார் வாயிலானும் விசதம்.

6. அல்லலாந் தொழில் படைத்தே
　　யடிக்கடி யுரு வெடுத்தே
மல்லன்மா ஞாலங் காக்க
　　வருபவர் கடவு ளென்னில்
தொல்லையாம் பிறவி வேலை
　　தொலைந்திடா திருணீங் காது
நல்லது மாயை தானு
　　நாமென வந்து நிற்கும்.

இ - ள். அல்லல் ஆம் தொழில் படைத்து - துக்கரூபமாகிய தொழிலைப் பெற்று, அடிக்கடி உரு எடுத்து - அடிக்கடி சரீரம் எடுத்து, மல்லல் - வளம்பொருந்திய, மா - பெரிய, ஞாலம் - உலகத்தை, காக்க வருபவர் - ரக்ஷிக்க வருபவர், கடவுள் என்னின் - கடவுள் என்றால், தொல்லை ஆம் - பழமையாகிய, பிறவி வேலை - பிறவிக்கடலானது, தொலைந்திடாது - வற்றாது, இருள் நீங்காது - அஞ்ஞான இருள் விலகாது, நல்லது மாயை தானும் - நன்மையாய்ச் சீவர்களுக்குத் தோன்றுகின்ற மாயையும், நான் என வந்து நிற்கும் - நானென்று வந்து நிற்கும். எ - று.

துக்கரூபமாகிய தொழில்பெற்றுப் பலகாற்பிறந்து உலகைக் காக்க வருபவர் கடவுளென்றால், அவ்வாறு சொல்லுதலால் உண்டாகிற பிறவிக்கடல் வற்றாது, அஞ்ஞானந்தகாரம் தொலையாது, மாயையும் எதிர் வந்து நிற்கும் என்பதாம்.

7. நாமென நிற்கு ஞான
　　ஞானயன் றந்த ஞானம்
மோனமா யிருக்க வொட்டா
　　மோனமின் றாக வேதான்

தேனெனு ருசிக்கு மன்பாற்
சிந்தைநைந் துருகும்வண்ணம்
வானென நிறைந்தா னந்த
மாகடல் வளைவ தின்றே.

இ - ள். நான் என நிற்கும் ஞானம் - நானென்று விவகரிக்க நிற்கிற ஞானமானது, ஞானம் அன்று - ஞானமல்ல, (ஏனெனின்) அந்த ஞானம் - அந்தஞானமானது, மோனமாய் இருக்கவொட்டா - மோனமாயிருக்க வொட்டாது (ஆதலால்), மோநம் இன்றாகவே - மோநமில்லை யாயினபோதே, தேன் என - தேன்போல, ருசிக்கும் அன்பால் - இரதிக்கின்ற அன்பினால், சிந்தை - மனமானது, நைந்து உருகும் வண்ணம் - நைந்து கரையும்படி, ஆனந்தம் - சுகமாகிய, மா - பெரிய, கடல் - கடலானது, வான் என நிறைந்து - மேகங்கள்போல நிறைந்து, வளைவது இன்று - வளைதல் இல்லை.

நான் என நிற்கும் ஞானம் - அகங்காரம். அதுவொன் றுளதாயின் மௌநநிலையும், அதனால் மனமுருகுமாறு விளைகின்ற ஆனந்தப்பெருக்கும் இல்லையென்பதாம்.

8. இன்றென விருப்போ மென்னி
னென்றுஞ்சூ னியமா முத்தி
நன்றொடு தீது மன்றி
நாமுன்னே பெறும வித்தை
நின்றது பெத்தந் தானே
நிரந்தர முத்தி யென்னி
னொன்றொரு வனைநான் கேட்க
வுணர்வில்லை குருவு மில்லை.

இ - ள். இன்று என இருப்போம் என்னின் - இல்லை யென்றிருப்போமென்றால், என்றும் - எக்காலத்தும், முத்தி - முத்தியென்பது, சூனியம் ஆம் - சூனியமாய் முடியும், (அப்போது) நன்றொடு தீதும் அன்றி - நன்மையுடன் தீமையுமல்லாமல், நாம் முன்னே பெறும் அவித்தை நின்றது - நாம் முன்னே யடைந்திருந்த அவிச்சை நிலைபெற்றது, பெத்தம் தானே - அந்த அவிச்சை நிலைபெற்றிருந்த பெத்தநிலையே, நிரந்தரம் - சதாகாலமும், முத்தி என்னின் - முத்தி யென்று சொன்னால், ஒருவனை - ஒருத்தனை, நான் ஒன்றுகேட்க - நானொன்றைக் கேட்பதற்கு, உணர்வு இல்லை - அறிவில்லை, குருவும் இல்லை - ஆசாரியனுமில்லை, எ - று.

அவிச்சை - அஞ்ஞானம். இது உண்மை யறிவைத்தடுப்பது. அறிவிருந்தாலன்றே ஆசாரியவசநம் பயன்படுவது, அவ்வசநத்தை யுட்கொள்ளு

முணர்வில்லை யாகவே ஆசாரிய வசனம் பயன் படா தென்பது தோன்ற 'உணர்வில்லை குருவுமில்லை' என்றார்.

9. இல்லையென் றிடினிப் பூமி
யிருந்தவா றிருப்போ மென்னில்
நல்லவன் சாரு வாக
னன்சொலு நெறிக்கு வீணில்
தொல்லையே னாக மாதி
தொடுப்பதேன் மயக்க மேதிங்
கொல்லைவந் திருமி னென்ன
வுறவுசெய் திடுவ னந்தோ.

இ-ள். இல்லை யென்றிடின் - இல்லை யென்றுசொல்லின், இப்பூமி - இந்த வுலகம், இருந்தவாறு - இருந்த பிரகாரம், இருப்போம் என்னில் - இருப்போ மென்றால், நல்லவன் சாருவாகன் - நல்லவனாகிய சாருவாகன், நான் சொல்லும் நெறிக்கு - நான் சொல்லுகிற மார்க்கத்தை யனுஷ்டிப்பதற்கு, வீணில் - வீணாக, தொல்லை ஏன் - பழமை யாதுக்கு, ஆகமாதி தொடுப்பது என் - ஆகமம் முதலியவைகளைத் தொடங்குவது யாதுக்கு, மயக்கம் ஏது - மயக்கம் யாதுக்கு, இங்கு - இவ்விடத்தில், ஒல்லை - விரைவில், வந்து இருமின் என்ன - வந்து என்னோடு கூடியிருங்களென்று, உறவு செய்திடுவன் - நட்புச்செய்வான்—எ-று.

ஆகமாதி என்றது ஆகமம் முதலிய பிரமாணங்களை. தொடுப்பது என்றது அவற்றைக்கொண்டு தர்க்கந் தொடுத்தலை. இங்குத் தர்க்கம் என்றது வாத செற்ப விதண்டைகளை. சாருவாகன் - நிரீச்சுரவாதி. நல்லன் என்றது இங்குத் தீயோன் என்றபடி. தொல்லை என் என்பதற்கு இந்தத் தொந்தரவுகள் ஏன் ஏன்னலுமாகும்.

10. அந்தணர் நால்வர் காண
வருட்குரு வாகி வந்த
எந்தையே யெல்லாந் தானென்
றியம்பின னெமைப் படைத்த
தந்தைநீ யெம்மைக் காக்குந்
தலைவனே தந்தை யன்றோ
பந்தமில் சித்தி முத்தி
படைக்கநின் னருள்பா லிப்பாய்.

இ-ள். அந்தணர் நால்வர் காண - வேதியர் நால்வர் காணும்படி, அருள் குரு ஆகி வந்த - அருளுருவாகிய ஆசாரிய மூர்த்தமாயெழுந்தருளின, எந்தையே - எமது பரம பிதாவாகிய சிவபெருமானே, எல்லாம் தான்

என்று - எல்லாப் பொருள்களுந் தானே யென்று, இயம்பினன் - சொல்லி ஞன், (ஆயினும்) எம்மைப் படைத்த தந்தை நீ - எங்களைச் சிருட்டித்த பிதா நீ, எம்மை - எங்களை, காக்கும் - ரக்ஷிக்கிற, தலைவன் - முதல்வன், நுந்தை அன்றே - உன் தந்தையாகிய திருமாலல்லவா, பந்தம் இல் - பிணிப் பற்ற, சித்தி முத்திபடைக்க - சித்தி முத்திகளைப் பெற்று வாழ்வதற்கு, நின் அருள் பாலிப்பாய் - உன் கிருபையைத் தந்தருளவேண்டும்—எ-று.

அந்தணர் நால்வர் - சநகாதியர். சித்திமுத்திகள் இம்மையில் அணிமா முதலியவைகளும் மறுமையில் மோக்ஷமும்.

---

## பன்மாலை.

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

**1.** பன்மாலைத் திரளிருக்கத் தமையுணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பக்ஷமென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனே னெந்நாளுந் துதித்து நிற்பேன்
என்மாலை யறிந்திங்கே வாவா வென்றே
யெனைக் கலப்பாய் திருக்கருணை யெம்பிரானே.

இ - ள். பன்மாலை திரள் இருக்க - பலவகையவாகிய பூமாலைத் தொகுதியிருக்கச் செய்தே, (அவற்றில் விருப்பம் வையாது) தம்மை உணர்ந்தோர் - தம்மை யுணர்ந்தோர்களாகிய ஞானிகளுடைய, பாமாலைக்கே - கவிமாலைகளி னிடத்தே, நீ - நீ, பக்ஷம் என்று - விருப்பஞ் செய்வோ னென்று, நல்மாலை ஆ - (பூமாலை பாமாலை யென்னு மிரண்டனுள் பாமாலையே) சிறந்த மாலையாக, எடுத்து - தெரிந்தெடுத்து, நல்லோர் - முமுட்சுக்கள், சொன்னார் - உன் திரு வடியிற் சூட்டினார்கள், நலம் அறிந்து - நன்மையாவ திது வென்று பாகுபடுத்துணர்ந்து, கல்லாத - அந்நன்மையைத்தரும் வீட்டு நூல்களைக் கற்றறியாத, நானும் - அடியேனும், சொன்னேன் - பாமாலை சூட்டினேன், சொல் - சொல்லப்பட்ட, மாலை மாலை ஆ - தாரை தாரையாக, கண்ணீர்சோர - கண்ணீரொழுக, தொண்டனேன் - உன் தொழும்பு பூண்டவனாகிய நான், எந்நாளும் - (இன்று போலவே) எக்காலத்திலும், துதித்து நிற்பேன் - வழுத்தா நிற்பேன், திருக்கருணை எம்பிரானே - சிறந்த கருணையையுடைய எம்மிறைவனே, என் மாலை அறிந்து - என் விருப்பத்தை யுணர்ந்து, இங்கே வா வா என்றே - இங்கே வருவாய் வருவாய் என்று சொல்லிக்கொண்டே, என்னை கலப்பாய் - என்னைச் சேர்வாயாக—எ - று.

பன்மாலை கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நால்வகை மலர்களாற் சமைத்த மாலை. தம்மை யுணர்தல் - தம்மை யிறைவனுக் கடிமை யென்றுணர்தல். நல்லோர் சொன்னதே யன்றியெனப் பொருடரலால் நானும் என்னும் உம்மை இறந்ததுதழீஇயது. வா வா வெனப் பலகாலழைக்கவும் பாசப்பிணிப்பின் திண்மையால் வரேனாயினும் மேல்விழுந்து கலக்க வேண்டு மென்பாராய், வா வா வென்றே யெனைக் கலப்பாய் என்றார். பூமாலை நால்வகையவாகிய பன்மலராற் சமைக்கப் படுமாறு போல, பாமாலையும் நால்வகையவாகிய சொன் மலராற் சமைக்கப்படும். சொன் மலர் - சொல்லாகிய மலர். அவை பெயர், வினை, இடை, உரி என்பன. இது "பழுதகன்ற நால்வகைச் சொன்மலரெடுத்து" எனப் பிறர்கூறுதலானுமுணர்க. பன்மலர் மாலைக்கு மணமறல், வாடல், தேன்பிலிற்றாமை முதலிய குணங்களுண்மையானும், சொன்மலர் மாலைக்கு அவை யின்மையானும் இதைச் சிறந்ததாக நல்லோர் கொண்டாரென்பது. இது "என்றும் புலாரதிபாணர்நாட் செல்லுகினும் - நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்" என்னும் மேலோர் கூற்றானு முணர்க. நல்லோர் சொன்னார் என்பதற்கு நல்லோர் உன் திருவடியிற் சூட்டினார்களென் றுரைத்தது "வெறியார் கழல் வீழ் சடைத் தீவண்ணன்" என மேலோர் கூறுதலையும் சூட்டுதற்கிடம் அதுவாதலையும் பற்றி. மாலை யென்றதனால், சொல்லுதல் ஈண்டுச் சூட்டல் மேலது. வா வா வென்றழைக்கவும் வராத என்னைக் கலத்தற்குக் காரணம் இறைவனது பெருங் கருணை யென்பார் 'வா வா வென்றே யெனைக் கலப்பாய்' என்றதை யடுத்துத் 'திருக் கருணை யெம்பிரான்' என்றார். முற்றறிவற்கு, இவர் என்மாலை யறிந்து, என நியமித்தல் மிகையன்றோவெனின் அன்று; என்னை? தம்பத்திமை மேலீட்டாற் கூறினமையான். முமுட்சுக்கள் - மோக்ஷதாக முள்ளவர்கள்.

2. கருணைமொழி சிறிதில்லை னீத னில்லேன்
 கண்ணீர்கம் பலைபென்றன் கருத்துக் கேற்க
ஒருபொழுதும் பெற்றறியே னென்னை யாளு
 மொருவாவுன் னடிமைநா னொருத்த னுக்கோ
இருவினையு முக்குணமுங் கரண நான்கு
 மிடர்செயுமைம் புலனுங்கா மாதி யாறும்
வரவரவு மேலழைக்கோ ரெட்டதான
 மதத்தொடும்வந் தெதிர்த்தநவ வடிவ மன்றே.

இ - ள். கருணைமொழி சிறிது இல்லேன் - நான் தயையோடு கூடிய மொழி சிறிது மில்லாதவன், ஈதல் இல்லேன் - ஈகை யில்லாதவன், என்றன் கருத்துக்கு ஏற்க - என் கருத்துக் கிணங்க, ஒருபொழுதும் - ஒரு காலத்தும், கண்ணீர் கம்பலை பெற்றறியேன் - கண்ணீர் கம்பலைகளைப் பெற்றறி

யேன், என்னை ஆளும் ஒருவா - என்னை ஆண்டருளாநின்ற ஒப்பற்றவனே, உன் அடிமை நான் ஒருத்தனுக்கோ - உன்னடிமையாகிய என் ஒருவனுக்குத் தானோ, இருவினையும் - இருவினைகளும், முக்குணமும் - முக்குணங்களும், கரணம் நான்கும் - நாற்கரணங்களும், இடர்செய்யும் ஐம்புலனும் - துன்பத்தைச் செய்கின்ற ஐம்புலன்களும், காமாதி ஆறும் - காமம் முதலாகிய அரிஷட்வர்க்கங்களும், வர வரவும் - வர வர, ஏழைக்கு - அறிவிலியாகிய எனக்கு, ஓர் எட்டதான - ஒரு எட்டாகிய, மதத்தொடும் - கர்வங்களுடன், வந்து எதிர்த்த - வந்து சம்பவித்தன, நவவடிவம் - நவந்தரு பேதமாயுள்ள, மன்றே - சிதாகாயமே—எ - று.

கம்பலை - சரீர நடுக்கம். இருவினை - நல்வினை தீவினைகள். முக்குணம் - சாத்விக ராஜச தாமசங்கள். கரணம் நான்கு - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. ஐம்புலன் - சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பன. காமாதி ஆறு - காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாற்சரியம் என்பன. அஷ்டமதங்களாவன:—குலம், ரூபம், யவ்வநம், வித்தை, தநம், பிரபுத்துவம், சகாயம், சஹஜம் என்பவற்றால் உண்டாகுஞ் செருக்கு, சஹஜம் - இயற்கையாகிய செருக்கு.

நவந்தருபேதமாவன:—பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன், சத்தி, சிவம், நாதம், விந்து என்பன.

**3.** வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த
வான்பொருளே யெளியனேன் மனமா மாயைக்
குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மோன
குருவேயென் றெய்வமே கோதி லாத
படியெனக்கா னந்தவெள்ளம் வந்து தேக்கும்
படியெனக்குன் றிருக்கருணை பற்று மாறே
அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்க வேண்டு
மடிமுடி யொன் றில்லாத வகண்ட வாழ்வே.

இ - ள். வடிவு அனைத்தும் தந்த - உருவங்களெல்லாவற்றையும் படைத்த, வடிவு இல்லா - ரூபமில்லாத, சுத்தம் - தூய்மையான, வான் பொருளே - மேலான பொருளே, எளியனேன் - எளியேனது, மனம் ஆம் - மனத்திலுண்டாகிய, மாயை - மாயையின், குடிகெடுக்க - குடியைக் கெடுப்பதற்காக, துசம் கட்டிக்கொண்ட - கொடிகட்டிக்கொண்ட, மோன குருவே - மௌனகுருவே, என் தெய்வமே - என் கடவுளே, எனக்கு அடியேனுக்கு, கோது இல்லாதபடி - குற்றமில்லாதபடி, ஆனந்த வெள்ளம் - சுகவாரியானது, வந்து தேக்கும்படி - வந்து நிறையவும், எனக்கு - அடியேனுக்கு, உன் திருக்கருணை பற்றுமாறு - உன் சிறந்த அருள் பதியவும், இன்னம் - (முன்வைத்ததுபோல) இன்னமும், அடி யெடுத்து - உன் திருவடி

யைத் தூக்கி, என் முடியில் வைக்கவேண்டும் - என் சிரசின்மீது வைத்தருளலே தகுதியாம், அடிமுடி - முதலிறுதிகள், ஒன்று இல்லாத - சிறிதுமில்லாத, அகண்ட வாழ்வே - அழியாத பெருவாழ்வே—எ-று.

கோது - தடையெனினுமாம். அகண்டம் கண்டிக்கப் படாதது. உருவில்லா திருந்தும் உருவங்களைப் படைக்கு மாற்றலுடையானே, எளியேனது மனமாயையை யழித்தற் கென்றே கொடிகட்டிக் கொண்டவனே, மௌனகுருவே, உற்பத்தி நாசங்களில்லாத அகண்ட வாழ்வே, ஆனந்தப் பெருக்கு எனக்குத் தடையற வாய்க்கும்படியாகவும், உன் திருவருள் என்னிடத்துப் பதியும்படியாகவும், உன் திருவடியை இன்னுமொருக்கால் என் சிரமேற் பதிக்கவேண்டும் என்பதாம். அடி முடி யொன்றில்லாத வகண்ட வாழ்வே என்றார்; 'ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ்சோதி' என மேலோர் கூறுதலால்.

**4.** வாழ்வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன் றேர்ந்த
வாறேநா னப்பாலோர் வழிபா ராமல்
தாழ்வுபெற்றிங் கிருந்தேனீ தென்ன மாயந்
தடையுற்றான் மேற்கதியுந் தடைய தாமே
ஊழ்வலியோ வல்லதுன்றன் றிருக்கூத் தோவிங்
கொருதமியேன் மேற்குறையோ வுணர்த்தா யின்னம்
பாழ்வதிப் படவெனக்கு முடியா தெல்லாம்
படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசி னானே.

இ-ள். வாழ்வு அனைத்தும் - பிரபஞ்ச வாழ்வுகளெல்லாம், மயக்கம் என - மயங்குதற் கேதுக்களேயென்று, தேர்ந்தேன் - தெளிந்தேன், தேர்ந்த வாறே - தெளிந்த வண்ணமே, நான் - அடியேன், அப்பால் ஓர் வழி பாராமல் - அப்பா லொரு நல்வழியை நோக்காமல், தாழ்வு பெற்று - தாமதித்து, இங்கு இருந்தேன் - இந்தப் பொய்யுலகிலிருந்தேன், ஈது என்ன மாயம் - இது என்ன மாயாகாரியம், தடை உற்றால் - தடைப்பட்டால், மேல்கதியும் தடை ஆமே - மேலாகிய மோக்ஷகதியும் தடைப்படுமே, (இதற்குக் காரணம்) ஊழ்வலியோ - ஊழினது வலிமையோ, அல்லது - அன்றி, உன்றன் திருக்கூத்தோ - உன் திருவிளையாட்டோ, இங்கு - இவ்விடத்தில், ஒருதமியேன்மேல் குறையோ - தமியேனிடத்துக் குறைபாடோ, (அறிந்திலேன்) உணர்த்தாய் - (அதனை நீயே) அறிவிப்பாய், எல்லாம் - எல்லாப் பொருள்களையும், படைத்து - சிருட்டித்து, அளித்து - காத்து, துடைக்க வல்ல - சங்கரிக்கவல்ல, பரிசினனே - குணத்தை யுடையவனே, இன்னம் - இன்னமும், பாழ் - பாழான, அவதிப்பட - துன்பப்பட, எனக்கு முடியாது - எனக்குக் கூடாது—எ-று.

பிரபஞ்ச வாழ்க்கை மயக்க வேதுவே யென்றறிந்தும், பிழைக்கும் நன்னெறியை நோக்காமல் தாமதித்திருந்தேன். இப்படி யிருந்ததற்குக் காரணம் ஊழ்வலியோ, உன் திருவிளையாட்டோ, என்னிடத்துப் பரிபாக மின்மையாகிய குறைபாடோ அறிந்திலேன். உள்ளவாறு நீயே யறிவுறுத்தல் வேண்டும். இது வரையில் பட்டது அமையும். இனிமேலும் துன்பப்பட என்னாலியலாது என்பதாம், "ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனுய் மாலாய், ஆன்ற வீசனுமாய்" எனவும், "அனைத்துலகும் ஆக்குவாய் காப்பா யழிப்பாய்" எனவும் மேலோர் கூறலால். இவரும் எல்லாம் 'படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசினுனே' என்றார்.

5. நானென்றுங் கெனுமகந்தை யெனக்கேன் வைத்தாய்
நல்வினை தீவினை யெனவே நடுவே நாட்டி
ஊனுரு முடற்சுமையென் மீதேன் வைத்தா
யுயிரெனவு மென்னையொன்று வுள்ளோன் வைத்தாய்
ஆனுமை யாயகில நிகில பேத
மனைத்தி னுள்ளுந் தானுகி யறிவானந்தத்
தேனுகிப் பாலாகிக் கனியாய்க் கன்னற்
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்த வொன்றே.

இ - ள். ஆனுமையாய் - நீங்காமையாகி, அகிலம் - பிரபஞ்சத்திலுள்ள, நிகில பேதம் அனைத்தினுள்ளும் - பேதரூபங்க ளெல்லாவற்றுள்ளும், தான் ஆகி - தானே நிறைந்து, அறிவு ஆனந்தத் தேன் ஆகி - ஞானனந்தத் தேனுகி, பால் ஆகி - பாலாகி, கனி ஆய் - பழமாகி, செழு-செழுமையாகிய, கன்னல் பாகு ஆய் - சர்க்கரைப் பாகாகி, கற்கண்டு ஆய் - கற்கண்டாகி, திகழ்ந்த ஒன்றே - பிரகாசிக்கிற ஒப்பற்ற பொருளே, இங்கு - இவ்விடத்தில், நான் நான் என்னும் அகந்தை - நான் நான் என்கிற அஹங்காரத்தை, எனக்கு ஏன் வைத்தாய் - என்னிடத்தில் ஏன் வைத்தனை, நல்வினை தீவினை என - நல்வினை தீவினை யென்று, நடுவே நாட்டி - இடையில் நிறுத்தி, ஊன் ஆரும் உடல் சுமை - மாமிசம் நிறைந்த உடற்பாரத்தை, என்மீது ஏன் வைத்தாய் - என்மேல் ஏன் வைத்தனை, என்னை - அடியேனை, உயிர் எனவும் - உயிரென்று சொல்லவும், உள்-உடற்குள், ஒன்று ஆ - ஒருபொருளாக, ஏன் வைத்தாய் - ஏன் வைத்தனை—எ-று.

ஆனுமையாய் * * * * * * * திகழ்ந்த வொன்றே; என்னிடத்துப் பெருங்கருணைமா யன்றே நீ யிவ்வாறெனக் கிரகித்தது? அங்ஙனமாக, இவ்வுடற் பொறையை நீக்கி யருளா தொழிவது அழகன்றே யென்பதாம். இறைவனைத் தேன் முதலியவாகக் கூறுதல் மரபென்பதனை "கற

ந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போலச் சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறிநின்ற" "தேனை யானெனைக்கரும்பினிற்றேறலை" "பாலுமமுதமுந் தேனுடனும் பராபரமாய்" "மாற்றே னெனவந்த காலனை யோலமிட வடர்த்த கோற்றேன்" இத்தியாதிகளா னுணர்க.

**6.** ஒன்றியொன்றி நின்றுநின்று மென்னை யென்னை
　　யுன்னி யுன்னும் பொருளலைநீ யுன்பாலன்பால்
நின்றதன்மைக் கிரங்கும்வை ராக்கிய னல்லே
　　னிவிர்த்தியவை வேண்டுமிந்த நீல னுக்கே
என்றுமென்று மிந்நெறியோர் குணமு மில்லை
　　யிடுக்குவார் கைப்பிள்ளை யேதோ வேதோ
கன்றுமனத் துடனாடு தழைதின்றாற் போற்
　　கல்வியுங்கேள் வியுமாகிக் கலக்குற் றேனே.

இ - ள். ஒன்றி ஒன்றி - ஒவ்வொரு விடயத்திலழுந்தியழுந்தி, நின்று நின்றும் - அவ்வவ் விடயங்களிற் சிறிதுநேரம் நிலைத்தும், என்னை - என்ன பயன், நீ - நீ, என்னை உன்னி - என்னை முன்னிட்டு, உன்னும் - நினைக்கப் படுகின்ற, பொருள் அல்லை - பொருளா யிருப்பா யல்லை, (ஆதலால்) உன் பால் அன்பால் நின்ற - உன்னிடத் தன்புபூண்டு நின்ற, தன்மைக்கு-அன்பர் குணத்தைப் பெறும் பொருட்டு, இரங்கு - உன்னை நோக்க யிரங்கும்படியான, வைராக்கியன் அல்லேன் - பிரபஞ்ச மார்க்கத்தில் வெறுப்புடையே னல்லேன், இந்த நீலனுக்கு இந்தப்பொய் நடையை யுடையேனுக்கு, அவை நிவிர்த்தி வேண்டும் - அந்தப் பொய் நெறிகள் ஒழிதல் வேண்டும், என்றும் என்றும் - எக்காலத்தும், இந்நெறி - இந்த நன்னெறியை யடைதற்கு, ஓர் குணமும் இல்லை - சிறிது நற்குணமு மில்லை, (அங்ஙனமாக) இடுக்குவார் கைப்பிள்ளை ஏது ஏதோ - அணைப்பார் கைப்பிள்ளை யாதற்குக் காரணம் யாதோ, கன்றும் மனத்துடன் - வருந்துகின்ற மனத்துடன், ஆடு தழை தின்றாற்போல - ஆடு தழை மேய்ந்தாற்போல, கல்வியும் கேள்வியும் ஆகி - பலவகைக் கல்வி கேள்விகளை யுடையேனாகி, கலக்குற்றேன் - கலங்கலுற்றேன், ஏ - இதென்ன கொடுமை—எ - று.

"சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாம் திருப்பெருந் துறையுறை சிவனே, ஒன்று நீ யல்லை யன்றி யொன்றில்லை யாருன்னை யறிய கிற்பாரே" என்ற மேலோர் கூற்றுக் கிணங்க, "ஒன்றி யொன்றி நின்று நின்று மென்னை யென்னை யுன்னி யுன்னும் பொருளலை நீ" என்றார். 'என்னை யுன்னி யுன்னும் பொருளலைநீ' என்றது தற்போதத்தைமுன்னிட்டுச் சென்றால் பொருந் தோன்றா தென்றற்கு. நீலன் - நீலி யென்னும் பெண் பாற்குரிய ஆண்பாற் பெயர். பாசாங்குக்காரன், பாசாங்குக்காரி என்பன பொருள். நற்குண மிருப்பினன்றே எல்லாரு விருப்பா லெடுத்தணைப்பர்?

அது தன்னிடத் தில்லை யென்பார் 'இந்நெறியோர் குணமுமில்லை யிடுக்கு வார் கைப்பிள்ளை யேதோ யேதோ' என்றார். 'ஆடு தழை தின்றாற்போல்' என்ற வுவமை தகுதியற்ற கல்வி கேள்விகளால் கலங்கினமை யுணர நின்றது.

**7.** உற்றதுணை நீயல்லாற் பற்று வேறொன்
றுன்னேனென் பன்னாளுலகத் தோடி யாடிக்
கற்றதுங்கேட் டதுமிதனுக் கேது வாகுங்
கற்பதுங்கேட் பதுமமையுங் காணு நீத
நற்றுணையே யருட்டாயே யின்ப மான
நாதாந்த பரம்பொருளே நாரணாதி
சுற்றமுமாய் நல்லன்பர் தமைச்சே யாகத்
தொழும்புகொள்ளுங் கனகனமே சோதிக் குன்றே.

இ - ள். உற்றதுணை நீ யல்லால் - பொருந்திய துணை நீயே யன்றி, பற்று - ஆதாரமாக, வேறு ஒன்று உன்னேன் - வேறொன்றையுங் கருதேன், பல்நாள் - பலநாளும், உலகத்து - உலகில், ஓடி ஆடி - ஓடியும் ஆடியும், கற்றதும் கேட்டதும் - கற்ற கல்வியும் கேட்ட கேள்வியும், இதனுக்கு ஏது ஆகும் - இதற்குக் காரணமாகும், கற்பதும் கேட்பதும் - (இனி) கற்கப்படு வதும் கேட்கப்படுவதும், அமையும் - பற்றும், காணு - யாவருங் காணக் கூடாத, நீதம் - நியதமுள்ள, நல்துணையே - சிறந்த துணையே, அருள்தாயே - கிருபையுள்ள அன்னையே, இன்பம் ஆன - ஆநந்த ரூபமான, நாதாந்தம் - நாததத்துவத்தின் முடிவிலுள்ள, பரம் பொருளே - மேலான பொருளே, நாரணாதி - நாரணன் முதலானோர், சுற்றமும் ஆய் - உறவினராகவும், நல் அன்பர் தம்மை - நல்லன்பரை, சேய் ஆக - புதல்வராகவும், தொழும்பு கொள்ளும் - அடிமை கொள்ளுகின்ற, கன கனமே - மிகக் கனத்த பொரு ளே, சோதிக்குன்றே - சுடர் மலையே—எ - று.

நற்றுணையே, அருட்டாயே, பரம்பொருளே, கன கனமே, சோதிக் குன்றே, எனக்கு உற்றதுணை நீ யன்றி வேறொருவருமிலர். ஆதலால் வேறொரு பொருளை நினையேன். இதுவரையும் உலகில் ஓடித்திரிந்து கற்ற தும் கேட்டதும் இந்த நிலை யுண்டாதற்கே; இனிக் கல்வி கேள்விகள் வேண்டா என்பதாம்.

**8.** குன்றாத மூவுருவா யருவாய் ஞானக்
கொழுந்தாகி யறுசமயக் கூத்து மாடி
நின்றாயே மாயையெனுந் திரையை நீக்கி
நின்னையா ரறியவல்லார் நினைப்போர் நெஞ்ச
மன்றாக வின்பக்கூத் தாட வல்ல
மணியேயென் கண்ணேமா மருந்தே நால்வர்க்

கன்றுலின் கீழிருந்து மோன ஞான
மமைத்த சின்முத் திரைக்கடலே யமரரேறே.

இ - ள். குன்றுத - அழியாத, மூவுருவாய் - மூன்றுருவங்களாகி, அருவாய் - அருவமாகி, ஞானக் கொழுந்து ஆகி - ஞான முடிவாகி, அறுசமயக் கூத்தும் ஆடி - அறுசமயக் கூத்தாடியும், நின்றுயே - நின்றனையே, மாயையென்னும் திரையை நீக்கி - மாயை யென்கிற திரையை விலக்கி, நின்னை - உன்னை, அறிய வல்லார் யார் - உணர வல்லார் யாவர், நினைப்போர் நெஞ்சம் - நினைப்பவர்களுடைய மனமே, மன்று ஆக - நடநசபையாகக் கொண்டு, இன்பக் கூத்து ஆடவல்ல - ஆனந்தக் கூத்தாட வல்ல, மணியே - ரத்நமே, என் கண்ணே - என் விழியே, மா - பெரிய, மருந்தே - அமுதமே, நால்வர்க்கு - சனகாதி நால்வருக்கு, அன்று - அக்காலத்தில், ஆலின் கீழ் இருந்து - ஆலமரத்தின் கீழிருந்து, மோந ஞானம் அமைத்த - மௌந ஞானத்தை யுணர்த்தின, சின்முத்திரைக் கடலே - சின் முத்திரா சாகரமே, அமரர் ஏறே - தேவர்களுக்குள் உத்தமனே—எ - று.

"சேணிற்பொலி செம்பொன் மாளிகைத் தில்லைச் சிற்றம்பலத்து மாணிக்கக் கூத்தன்" என்னும் மாணிக்கக் கூத்தரது கூத்துக் களைகளைக் கொண்டு, இவரும் 'இன்பக் கூத்தாட வல்ல மணியே' என்றுர். ஏறு என்பது தனக்குரிய பொருள் தராமல் ஈண்டு உத்தமன் என்னும் பொருடந்து நின்றது. இது வடநூலார் மதம். என்னை? "நரசார்த்தூல" "புருஷவ்யாக்ர" என்பவற்றிற்கு, அவர் நரோத்தமன், புருஷோத்தமன் எனப் பொருள் கோடலா னென்க. உத்தமன் என்பதற்கு, ப்ரக்ருதியாகிய இருளைக்கடந்து நின்றோன் என்பது பொருள். "மலர்மிசை யேகினன்" எனவும், "என் சிந்தை யுள்ளு முறைவான்" எனவும் கூறும் மேலோர் வாக்கியங்களையடியொற்றி, 'நினைப்போர் நெஞ்ச மன்றுக வின்பக் கூத்தாட வல்ல' என்றுர். மாயையை வென்று உன்னைக் காண்பவர் யாவர் என்பதாம்.

**9.** திரையில்லாக் கடல்போலச் சலநந் தீர்ந்து
தெளிந் துருகும் பொன்போலச் செகத்தை யெல்லாம்
கரையவே கனிந்துருக்கு முகத்தி லேநீ
கனிந்தபர மானந்தக் கட்டி யிந்நாள்
வரையிலே வரக்காணே னென்றுற் கட்டி
வார்த்தைசொன்றுற் சுகம்வருமோ வஞ்ச னேனை
இரையிலே யிருத்திநிரு விகற்ப மான
வின்பநிஷ்டை கொடுப்பதையா வெந்த நாளோ.

இ - ள். திரையில்லாக் கடல்போல - அலை அற்ற சமுத்ரம்போல, சலநம் தீர்ந்து - அசைவற்று, தெளிந்து உருகும் பொன்போல - தெளிவாகியுருகுகின்ற சுவர்ணம்போல, செகத்தை யெல்லாம் - பிரபஞ்சத்தை யெல்

லாம், கனிந்து கரைய - இளகிக் கரைய, உருக்கும் முகத்தில் - உருக்கு மிடத்தில், கனிந்த - நன்று யுருகி நின்ற, பரமானந்தக் கட்டி - பரமசுகத்தைக் கொடுப்பதாகிய சுவர்ணக்கட்டி, நீ - நீயாயிருக்கிறாய், (ஆனால்) இந்நாள் வரையில் - இந்நாளளவும், வரக்காணேன் - நீ வரக் கண்டிலேன், என்றால் கட்டி - என்றால் நிர்ப்பந்தித்து, வார்த்தை சொன்னால் - பேசினதனால், சுகம் வருமோ - இன்ப முண்டாகுமோ, வஞ்சனேனை - வஞ்சகனாகிய என்னை, இரையிலே யிருத்தி - சோற்றுத் துருத்தியாகிய உடம்பிலிருக்கச் செய்து, நிருவிகற்பம் ஆன - விகற்பமில்லாத, இன்பம் - சுகத்தைத் தருகின்ற, நிஷ்டை கொடுப்பது - நிஷ்டையை அநுக்ரஹிப்பது, எந்த நாளோ - எந்தக் காலமோ (அறிகிலேன்) ஐயா - ஐயனே—எ - று.

நீயேவந்து இன்பங் கொடுத்தா லன்றி என் வாசா ஞானத்தால் இன்பமுண்டாமோ? இந்த அருவருப்பன வுடம்போ டிருக்கப்பண்ணி நிருவிகற்பமான இன்ப நிஷ்டையைக் கொடுப்பது எந்நாளோ என்பதாம்.

**10.** எந்தநா ளுனக்கடிமை யாகு நாளோ
வெந்நாளோ கதிவருநா ளெளிய னேன்றன்
சிந்தைநா ளதுவரைக்கு மயங்கிற் றல்லால்
தெளிந்ததுண்டோ மௌநியாய்த் தெளிய வோர்சொல்
தந்தநாண் முதலின்பக் கால்சற் றல்லால்
தடையறவா நந்தவெள்ளந் தானே பொங்கி
வந்தநா ளில்லைமெத்த வலைந்தே னுன்னை
மறவாவின் பத்தாலே வாழ்கின் றேனே.

இ - ள். எந்தநாள் - எந்தக்காலம், உனக்கு அடிமையாகும் நாளோ - உனக்கு அடிமைப்படுங் காலமோ, கதிவரும் நாள் - பரகதி யுண்டாகுங் காலம், எந்நாளோ - எந்தக்காலமோ, எளியனேன் தன் - எளியேனது, சிந்தை - மனமானது, நாளதுவரைக்கும் - இதுவரையிலும், மயங்கிற்று அல்லால் - மயங்கினதே யன்றி, தெளிந்தது உண்டோ - தெளிவடைந்ததுண்டோ, (இல்லையே) மௌநியாய் - மௌந குருவாகி வந்து, தெளிய - என் மனந் தெளியும் வண்ணம், ஓர் சொல் தந்த நாள்முதல் - ஒரு மொழியை அநுக்ரஹித்த நாள்முதலாக, இன்பக்கால் சற்று அல்லால் - ஆனந்தக்கால் சிறிது பெருகாநிற்பு தன்றி, தடைஅற - தடை யொழிய, ஆநந்தவெள்ளம் - ஆநந்தக் கடலானது, தானே பொங்கிவந்த நாள் இல்லை - தானே பெருகி வந்தநாள் இன்று, (ஆதலால்) மெத்த அலைந்தேன் - மிக்வும் வருந்தினேன், (அவ்வருத்தத்தால் இறந்துபட்டிருப்பேன்) உன்னை மறவா இன்பத்தால் வாழ்கின்றேன் - உன்னை மறவாமையாகிய ஆனந்தத்தினால் இதுவரையும் உயிர் வாழா நிற்கிறேன்—எ - று.

கதி - மோக்ஷம். கால் - வாய்க்கால். "பொச்சாவக்கருவி" என்பதற்குப் பொச்சாவாமையாகிய கருவி யெனவும், "பொய்யா விளக்கு" என்பதற்குப் பொய்யாமையாகிய விளக்கு எனவும் பொருள் கொண்டாற் போல, 'மறவாவின்பம்' என்பதற்கு 'மறவாமையாகிய வின்பம்' எனப் பொருள் கொள்ளலாயிற்று. மறவாமை - இடையறாது நினைத்தல்.

---

## நினைவொன்று.

### ஞானிகளிடம் பொருளேவல்.

**1.** நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்
நிற்குமிட மேயருளா நிஷ்டையரு ளொட்டும்
தனையென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேல்
தட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
பினையொன்று மிலையந்த வின்பமெனு நிலயம்
பெற்றாரே பிறவாமை பெற்றார்மற் றுந்தான்
மனையென்று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த
வாதனையா மாசையொழி மன்னொருசொற் கொண்டே.

இ - ள். நினைவு ஒன்றும் நினையாமல் நிற்கின் - சிறிதும் எண்ணமற்று நின்றால், அகம் என்பார் - (அப்படி நிற்றலே அழியாத) இடமென்பர் மேலோர், நிற்கும் இடமே - (அவ்வாறு) நிற்கின்ற இடமே, அருளாம் - அருணிலையாம், நிஷ்டை அருள் ஒட்டும் - நிஷ்டையால் உளதாகும் அருளும் சித்திக்கும், தன்னை என்றும் மறந்திருப்ப - தன்னை யெக்காலத்தும் மறந்திருக்கின், அருள் வடிவானது - அருளுருவமானது, மேல் தட்டி எழுந்திருக்கும்-மேலே தட்டிக்கொண்டு எழாநிற்கும், இன்பம் தன்மயமே அது ஆம்-தன் மயமாயிருப்பதே ஆநந்தமாகும், பின்னை ஒன்றும் இல்லை - வேறொன்றுமில்லை, அந்த இன்பம் என்னும் நிலயம் பெற்றோரே - அந்த ஆநந்தமென்னும் நிலையை யடைந்தவர்களே, பிறவாமை பெற்றார் - பிறவாமையாகிய பெருஞ் செல்வத்தை யடைந்தவர்கள், மற்றும் - மீண்டும், மனை என்றும் - வீடென்றும், மகவு என்றும் - புதல்வர்களென்றும், சுற்றம் என்றும் - உறவினரென்றும், (சொல்லப்பட்ட) அசுத்த வாதனை ஆம் ஆசை - அசுத்த வாசனை யென்கிறபற்றை, மன் ஒரு சொல் கொண்டு - ஞானாசிரியரது ஒரு மொழியினால், ஒழி - நீக்கிவிடு—எ-று.

மன் ஒருசொல் - நிலைபெற்ற (ஆசாரியவசனமாகிய) ஒரு மொழியென்னலுமாம். தன்மயம் - அதன்மயம், அந்தப்பொருளின் உருவாயென்றபடி. தற்போத வொழிவில் அருளுருத் தோன்று மென்பார் 'தனையென்று மறந்திருப்ப அருள் வடிவானது மேற்றட்டியெழுந்திருக்கும்' என்றார். எண்ணமற்று நிற்றலும், பிறவாமையும், ஆசாரிய வசனமும் ஆகிய மூன்றும் ஞானிகளுக்கு முறையே இடமும், பொருளும், ஏவலும் ஆம்.

**2.** ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றைமொழி யெல்லாம்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்
கருமொழியிங் குனக்கில்லை மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங்கண் டனைமேல்
தருமொழியிங் குனக்கில்லை யுன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே.

இ - ள். ஒருமொழியே - ஒருசொல்லே, பலமொழிக்கும் இடம்கொடுக்கும் - பல சொற்களுக்கும் இடந் தராநிற்கும், அந்த ஒரு மொழியே-அந்தவொரு சொல்லே, மலம் ஒழிக்கும் ஒழிக்கும் - மலங்களைப் போக்கும் போக்கும், என மொழிந்த - என்று சொன்ன, குருமொழியே - ஆசாரிய வசநமே, மலையிலக்கு - மலைக்குறி போல்வது, மற்றை மொழியெல்லாம் - மற்றைய வசநங்க ளெல்லாம், கோடு இன்றி வட்டாடல் கொள்வது ஒக்கும் - வகுத்த இடமில்லாமல் வட்டாடலையொத்திருப்பன, இங்கு உனக்கு- இவ்வாறாய உனக்கு, கரு மொழி இல்லை - கர்ப்பவாசம் என்கிற சொல்லே யில்லை, மொழிக்கு மொழி ருசிக்கும் - கணுவுக்குக் கணு மதுரிக்கிற, கரும்பு அனைய - கரும்பையொத்த, சொல் கொடு - (மொழிக்கு மொழி மதுரிக்கிற) சொற்களைக்கொண்டு, உன்னைக் காட்டவும் - உன்னைக் காண்பிக்கவும், கண்டனை - நீயும் அபரோக்ஷ சாக்ஷாத்காரமாகக் கண்டாய், இங்கு - இப்படியாயினபின், உனக்கு தரும் மொழி இல்லை - உனக்குப் போதித்தற்குரிய சொற்களில்லை, (ஆதலால் இனி) உன்னைவிட்டு நீங்கா - உன்னை விட்டு நீங்காத, தற்பரமாய் - தற்பரமாகவும், ஆநந்தப் பொற்பொதுவாய் - இன்பப் பொற்சபையாகவும், நில் - நில்லாய்—எ - று.

இலக்கு - லக்ஷ்யம். தற்பரம் - அது என்கிற மேலான பொருள். அது நீ ஆனாய் என்னும் பொருடருவதாகிய தத்துவம் அசி வாக்கிய விவரணம். ஆசாரியாநுக்கிரக மில்லாமல் கதிகூடாதென்பது இதனாற் கூறப்பட்டது. வட்டு - சொக்கட்டான் காய்.

**3.** நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்
நேயவருண் மெய்யன்றோ நிலயமதா நிற்கக்
கல்லாதே யேன்படித்தாய் கற்றதெல்லா மூடம்
கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று
சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி மர்க்கடம்போற் றொட்டதுபற்றாநில்
எல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடிநீ
பிராப்பகவில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே.

இ - ள். நில்லாத ஆக்கை - நிலைத்திராத சரீரம், நிலை அன்று எனவே கண்டாய் - நிலை யன்றென்றே பார்த்தாய், நேயம் அருள் மெய் அன்றோ - (சீவர்கள்மேல்) கிருபையுள்ள திருவருளானது உண்மையல்லவா, அது நிலயம் ஆ நிற்க கல்லாது - அத் திருவருளே யிடமாகக்கொண்டு அதிற் படிந்து நிற்கக் கல்லாமல், ஏன் படித்தாய் - வேறாகிய கல்விகளை யேன் கற்றாய், கற்றது எல்லாம் மூடம் - நீ கற்ற கல்வியெல்லாம் மூடத்தனத்துக் கேதுவே, கற்றதெல்லாம் மூடமென்றே கண்டனையும் அன்று - (ஆனால்) கற்றதெல்லாம் மூடமென்றே கண்டநம் செய்வது மன்று, (மற்றென்னெனின்) சொல்லாலே பயன் இல்லை - சொற்களாலேயே பிரயோசநமில்லை, சொல் முடிவைத்தானே சொற்களின் முடிவையே, தொடர்ந்து பிடி - தொடர்ந்துபற்று, மர்க்கடம்போல் - குரங்குபோல, தொட்டது - பிடித்ததையே, பற்றாநில் - பற்றாகக்கொண்டு நிலைத்திரு, (அதன்பிறகு) இராப் பகல் இல்லா இடமே - இராப்பகல்க ளற்ற இடமே, எமக்கு இடம் என்று அறிந்து - எமக்கிடமாவதென் றுணர்ந்து, எல்லாரும் அறிந்திட - (அவ்வநுபவ விசேடத்தை) யாவரு முணருமாறு, நீ வாய் பறைகொண்டு அடி - நீ வாயாகிய பறையைக்கொண்டு சாற்றி யறிவி—எ - று.

"நீரி லெழுத்தாகும் யாக்கை" என்றது, நில்லாத ஆக்கை யென்றமையான் இதனது நிலையாமையின் மிகுதி தோன்றுகின்றது. 'நில்லாத வாக்கை நிலை யன்றெனவே கண்டாய்' என்றது இதனது நிலையாமையைப் பிரத்தியக்ஷயமாய்ப் பார்த்தாய் என்றற்கு. "நடலை வாழ்வுகண் டென்செய் திர் நாணிலீர்-சுடலை சேர்வது சொற்பிரமாணமே" என்றார் மேலோரும்.

4. இடம்பொருளே வலைக்குறித்து மடம்புகுநா யெனவே
 யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீ வாடா
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை
 மன்னிடமே யிடமந்த மாநிலத்தே பொருளுந்
திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்
 செய்யுமிந்த நிலைநின்றோர் செநகன்முதன் முனிவர்
கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்
 கட்டான நிகளபந்தக் கட்டவிழ்ப் பாரே.

இ - ள். இடம் பொருள் ஏவலைக் குறித்து - இடம் பொருள் ஏவல் களை யடைய விரும்பி, மடம் புகு நாய் என - மடத்திற் பிரவேசிக்கிற நாய்போல, எங்கே நீ அகப்பட்டாய் - எங்கே நீ சிக்கிக்கொண்டாய், நீ இங்கே வாடா - நீ இவ்விடத்திற்கு வாடா, மடம் பெறு - அறியாமையை யுடைய, பாழ் நெஞ்சாலே - பாழ் மனத்தாலே, அஞ்சாதே - பயப்படாதே நிராசை மன் இடமே இடம் - அவாவறுதி நிலைத்த இடமே இடமாவது, அந்த மாநிலத்தே - அந்தப் பெரிய இடத்தின்கண்ணே, பொருளும் (சிவாநு

பூதிச் செல்வமென்கிற) எல்லாப் பொருள்களுமுளவாம், திடம் பெறவே நிற்கின்-(இடமும் பொருளுமாகிய இவைகள்) ஸ்திரமாய் நிற்குமாயின், எல்லா உலகமும் வந்து - எல்லா லோகங்களும் வந்து, ஏவல் செய்யும் - பணி விடைசெய்யும், இந்த நிலை நின்றோர் - இந்நிலையி லூன்றி நின்றவர்கள், செநகன் முதல் முனிவர் - சநகன் முதலான முனிவர்கள், கடம் பெறும் - மதத்தையுடைய, மா - பெரிய, மத யானை யென்னவும் - மதயானைபோல வும், நீ - நீ, பாசக்கட்டு ஆன - பாசப்பிணிப்பாகிய, நிகளபந்தக்கட்டு - விலங்கினையொத்த பந்த ஹேதுவாகிய தளை, அவிழ - தானே யவிழ்ந்தொழியும்படி, பார் - உபாயந்தேடு—எ - று.

இடம் பொருளேவல்கள் கைகூடுதற் குபாயம் நிராசையே யென்பது இதனாற் போந்தபொருள். "ஆசாநிகளந் துகளாயினபின், பேசாவநுபூதி பிறந்ததுவே" எனவும், "நிமலஞானம துற்றால் வானும் வையமும் வந்து தாள் வணங்கும்" எனவும் பிறாண்டு மிவ்வாறு கூறப்படுதல் காண்க. நீ நிராசையாகிய இந்நிலையில் நிற்பின், பந்தப் பிணிப்புத் தானே யவிழ்ந்தொழியுமென்பார். 'நிகளபந்தக் கட்டவிழப்பாரே' என்றார். இவ்வாசிரியர் தாமே 'நிராசை யின்றேற் றெய்வ முண்டோ' என மேற் கூறலுங் காண்க.

5. பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்ற
தாராலு மறியாத சத்தன்றோ வதுவா
யங்கிருநீ யெங்கிருந்து மதுவாவை கண்டாய்
பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே சஞ்சலமாப் புத்தியை நாட்டாதே
ஓராதே யொன்றையுநீ முன்னிலைவை யாதே
யுள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே.

இ - ள். பார் ஆதி அண்டம் எல்லாம் - மண் முதலியவற்றாலாகிய பிரபஞ்சமெல்லாம், படர் - பரவிய, கானல் சலம்போல் - கானல் நீர் போலப் பொய்யாயொழிவதை, பார்த்தனையே - கண்டாயன்றே, முடிவில் நின்று பார் - அந்தத்திலிருந்து நோக்கு, எது தான் நின்றது - அவ்விடத்தில் நின்றது யாது, (அது) ஆராலும் அறியாத சத்து அன்றோ - யாவராலுமுணரப்படாத சத்தல்லவா, நீ அது ஆய் அங்கு இரு - நீ அப்பொருளாகி அவ்விடத்தேயிரு, (அவ்வாறிருப்பாயாயின்) எங்கு இருந்தும் - எவ்விடத்திருப்பினும், அது ஆவை - அப்பொருளேயாவாய், நீ - நீ, பூராயம் ஆகவும் - ஆதி யந்தமாகவும், மற்றொன்றை விரித்துப் புலம்பாதே - வேறொன்றை விஸ்தரித்துப் புலம்ப வேண்டா, மா புத்தியை - பேரறிவை, சஞ்சலம்

நாட்டாதே - சலநத்தில் அழுத்தாதே, நீ ஒன்றையும் ஓராதே - நீ ஒன்றையு மெதிரிட்டுணராதே, (நீ ஒன்றையும்) முன்னிலை வையாதே - நீ ஒன்றையும் சாட்சிவையாதே, எல்லாம் - யாவும், உள்ளபடி முடியும் - உள்ளவாறே முடியும், உள்ளபடி - (இது) யதார்த்தம்—எ - று.

"எங்கே எங்கே மன மோடி யிளையோரென்ன வீழ்ந்தழுந்தும் - அங் கே யங்கே நின்றெழுப்பி யகண்ட வறிவி லடைவிப்பாய்" என்னும் ஆன் றோர் மொழி யென்கின்ற ஆப்தவாக்கியத்துக்கிணங்க, 'எங்கிருந்து மதுவா வை' என்றார். ஒன்றையும் ஓராமை - த்ரிபுடி ராஹித்யம். த்ரிபுடி - காண் பான், காட்சி, காட்சிப்பொருள். ராஹித்யம் - இன்மை. இவற்றை வட நூலார் ஞாதுரு, ஞாநம், ஞேயம் என்பர். உள்ளபடி - மேல்வினைகட் கீடாக த்திரு வருளா னமைந்துகிடந்தபடி.

**6.** உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டாநிஷ் களங்கமதி யாகிக்
கள்ளமனத் துறவைவிட் டெல்லாந்துறந்த துறவோர்
கற்பித்த மொழிப்படியே கங்குல்பக லற்ற
வெள்ளவெளிக் கடன்மூழ்கி யின்பமயப் பொருளாய்
விரவியெடுத் தெடுத்தெடுத்து விள்ளவும்வா யின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையு மாகிக்
கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்ட மடியே.

இ - ள். உள்ளபடி யென்னவும் - உள்ளபடி முடியுமென்று நான் சொல்லவும், (அதை யநாதரித்து) நீ மற்றொன்றை தொடர்ந்திட்டு - நீ வேறொன்றைப் பற்றிக்கொண்டு, உளம் கருதவேண்டா - மனமே நீ அதையே கருதிக் கவலைப்படவேண்டா, நிஷ்களங்க மதி ஆகி - களங்கமற்ற அறிவினை யுடையையாய், கள்ளம் மனம் - வஞ்சகமனத்தோடு கூடிய, துறவைவிட்டு - பொய்த்துறவை யொழித்து, எல்லாம் துறந்த - (மெய்யா கவே) எல்லாவற்றையும் விட்ட, துறவோர் - மெய்த்துறவினர், கற்பித்த மொழிப்படியே - கற்பித்த சொற்படியே, கங்குல் பகல் அற்ற - இராப் பகல்களில்லாத, வெள்ள வெளிக்கடல் மூழ்கி - (சதோதயமாகிய) ஒளிக் கடலில் முழுகி, இன்பமயப் பொருள் ஆய் விரவி - சுகரூபமான பொரு ளாகி அதனோடு வேறுபாடின்றிக் கலந்து, எடுத்து எடுத்து எடுத்து விள் ளவும் - முக்காலும் எடுத்துச் சொல்லுதற்கும், வாய் இன்றி - வாயில்லாமல், கொள்ளைகொண்ட - மிகுதியாகிய, கண்ணீரும் கம்பலையும் ஆகி - கண் ணீரும் சரீர நடுக்கமுங்கொண்டு, கும்பிட்டு - முக்கரணங்களையும் குவித்து, சகம் பொய் என - பிரபஞ்சம் பொய்யென்று, தம்பட்டம் அடி - பறை யறைவாய்—எ - று.

எல்லாம் துறத்தல் - சர்வசங்க பரித்யாகம். அதாவது - அகப்பற்றுப் புறப்பற்றுக்களை ஒருங்கொழித்தல். இதனைத் தமிழ் நூலார் முற்றத் துறத்தல் எனவும், வடநூலார் ஸந்யாஸம் எனவும் கூறுப. ஸம் - முழுதும், ந்யாஸம் - துறத்தல். வெளி யென்பது ஈண் டொளிக் காயிற்று. அதை "இருளினும் வெளியினும்" என் மேலோர் கூறுதலானு முணர்க.

**7.** அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்டா
லத்துவித வாநந்த சித்தமுண்டா நமது
குடிமுழுதும் பிழைக்குமொரு குறையுமில்லை யெடுத்த
கோலமெல்லா நன்றாகும் குறைவுநிறை வறவே
விடியுமுத யம்போல வருளுதயம் பெற்ற
வித்தகரோ டுங்கூடி விளையாட லாகும்
படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலுங் களியாப்
பாலருட னுன்மத்தர் பசாசர்குணம் வருமே.

இ - ள். அடி முடியும் நடுவும் அற்ற - அடி முடிகளும் நடுவுமில்லாத, பரவெளி மேற் கொண்டால் - பரமாகாசத்தை மேற்கொள்ளின், அத்துவிதம் - நிக - ற்ற, ஆநந்தம் - இன்பத்தையுடைய, சித்தம் உண்டாம் - மன முண்டாகும், நமது குடி முழுதும் பிழைக்கும் - நமது குடும்ப மெல்லாம் உஜ்ஜீவிக்கும், ஒரு குறையும் இல்லை - ஒரு தாழ்வு மில்லை, எடுத்த கோலம் எல்லாம் நன்று ஆகும் - கொண்ட கோலமெல்லாம் நன்றாகவே முடியும், குறைவு நிறைவு அற - தாழ்வு மிகுதிகளற, விடியும் உதயம்போல - விடிகிற உதயகாலம்போல, அருள் உதயம் பெற்ற - அருளுதயத்தைத் தம்மிடத்துப் பெற்ற, வித்தகரோடும் - ஞானியரோடும், கூடி விளையாடல் ஆகும் - சேர்ந்து விளையாடல் கூடும், படி முழுதும் - மண்ணுலக முழுதையும், விண் முழுதும் - விண்ணுலக முழுதையும், தந்தாலும் - கொடுத்தாலும், களியா - களிப்படையாத, பாலருடன் - பாலகரோடு, உன்மத்தர் - பிறழவுணர்ந்தார், பசாசர் - பேய்க்கோட்பட்டார், (ஆகிய இவர்களுடைய) குணம் வரும் - குணமுண்டாகும்—எ - று.

கோலம் - கொள்கை.

**8.** வரும்போமென் பனவுமின்றி யென்றுமொரு படித்தாய்
வானுதி தத்துவத்தை வளைந்தருந்தி வெளியாம்
இரும்போகல் லோமரமோ வென்னு நெஞ்சைக் கனன்மே
விட்டமெழு காவுருக்கு மின்பவெள்ள மாகிக்
கரும்போகண் டோசீனிச் சருக்கரையோ தேனோ [வார்
கனியமிர்தோ வென ருசிக்குங் கருத்தவிழ்ந்தோ ருணர்
அரும்போநன் மணங்காட்டுங் காமரசங் கன்னி
யறிவாளோ வபக்குவர்க்கோ வந்நலந்தான் விளங்கும்.

இ - ள். வரும் போம் என்பனவும் இன்றி - வரும் போம் என்பவைகளு மில்லாமல், என்றும் - எக்காலமும், ஒருபடித்தாய் - ஒரு தன்மைத்தாகி, வான் ஆதி - ஆகாய முதலாகிய, தத்துவத்தை - தத்துவத் தொகுதியை, விளைந்து அருந்தி - விளைத்து உட்கொண்டு, வெளி ஆம் - புறப்படும், இரும்போ-(வன்மையால்) இரும்புதானோ, கல்லோ - சிலைதானோ, மரமோ-மரந்தானோ, என்னும் - என்று சொல்லப்படுகிற, நெஞ்சை - மனத்தை, கனல்மேல் இட்ட - நெருப்பின்மேல் வைத்த, மெழுகு ஆ - மெழுகைப் போல, உருக்கும் - உருக்காநிற்கும், இன்ப வெள்ளம் ஆகி - ஆநந்த சாகரமாகி, கரும்போ-(இனிமையால்) கருப்பஞ்சாறோ, கண்டோ-கற்கண்டோ, சீனி சருக்கரையோ - சீனிச்சர்க்கரைதானோ, தேனோ-மதுவோ, கனியோ-முக்கனிகளோ, அமிர்தோ - அம்ருதமோ, என - என்று சொல்லும்படி, ருசிக்கும் - இரதிக்கும், (அதனை) கருத்து அவிழ்ந்தோர் உணர்வார் - மனமலரப் பெற்றவர்கள் அறிவார்கள், அரும்போ - பூ வரும்போ, நல் மணம் காட்டும் - நல்ல மணத்தைக் கொடுக்கும், கன்னி - கன்னிகையானவள், காமரசம் அறிவாளோ - காமச்சுவையை அறிவாளோ, அந்நலம் - அந்தப் பரமாநந்தம், அபக்குவர்க்கோ விளங்கும் - பக்குவரல்லாதார்க்கோ தெரியும்.

அமிர்தத்தைச் சுவை மிகுதிபற்றியும் இறவாமையைத் தருதல் பற்றியும் அச்சிறப்பு நோக்கி யிறுதியில்வைத்தார். முன்னைய வோகாரங்களெட்டும் ஐயம், பின்னைய மூன்றும் எதிர்மறை.

**9.** தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத்
  தன்மையினாற் படைத்தளிக்குந் தலைமையது வான
கோனாக வொருமுதலிங் குண்டெனவும் யூகங்
  கூட்டியதுஞ் சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞான
வானாக வம்முதலே நிற்குநிலை நம்மால்
  மதிப்பரிதா மெனமோனம் வைத்ததுமுன் மனமே
ஆனாலு மனஞ்சடமென் றழுங்காதே யுண்மை
  யறிவித்த விடங்குருவா மருளிலதொன் றிலையே.

இ - ள். தானேயும்-தானாகவேயும், இவ்வுலகம்-இவ்வுலகமானது, ஒரு முதலும் ஆகா தன்மையினால்-ஒருமுதற்பொருளுமாகாததன்மையால், படைத்து அளிக்கும் - இதனைப் படைத்துக் காக்கின்ற, தலைமையது ஆன - தலைமையையுடைத்தான, கோனாக-இறைவனாக, ஒருமுதல்-ஒரு முதற்பொருள், இங்கு உண்டு எனவும் - இவ்விடத் துளதென்றும், யூகம் - யுக்தியை, கூட்டியதும் - உண்டாக்கினதும், சகம்முடிவில் - உலகமுடிவில், குலவுறும் - விளங்காநின்ற, மெய் ஞான வான் ஆக - உண்மையாகிய ஞானாகாயமாக, அம்முதலே - அந்த முதற்பொருளே, நிற்கும்நிலை - நிற்கின்ற நிலையானது,

நம்மால் மதிப்பு அரிது ஆம் என - நம்மால் மதிக்கப்படுவது அரிதாகுமெ ன்று, மோநம்வைத்ததும் - மௌநநிலையை யமைத்ததும், உன் மனமே - உன்மனதே, ஆனாலும் - ஆயினும், மனம் - மனமானது, சடம் என்று அழு ங்காதே - சடமென்று வருந்தாதே, உண்மை அறிவித்த இடம் - மெய்யை யுணர்த்தின இடத்தில், குரு ஆம் - அறிவே ஆசாரியனாகும், அருள் இலது - அருள் இல்லாதது ஆகிய, ஒன்று இல்லை - ஒருபொருளும் இல்லை—எ-று.

---

## பொன்னைமாதரை.

### கலிவிருத்தம்.

**1.** பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய வென்னுயிர் நாதனே
உன்னை நாடுவ னுன்னருட் டூவெளி
தன்னை நாடுவன் றன்னந் தனியனே.

இ-ள். பொன்னை - பொன்னையும், மாதரை - மாதரையும், பூமியை - பூமியையும், நாடிடேன் - விரும்பேன், என்னை நாடிய - என்னை விரும் பிய, என் உயிர் நாதனே - என்னுயிர்த்தலைவனே, உன்னை நாடுவன் - உன்னை விரும்புவேன், உன் அருள் - உன் அருளாகிய, தூவெளிதன்னை நாடுவன் - பரிசுத்தமான வெளியை விரும்புவேன், தன்னந்தனியன் - தனியேனாகிய யான்—எ-று.

"என்னிலும் மினியானொருவனிலை" என்கிறபடியே உயிரினுஞ் சிற ந்தபொருள் உலகத்தில்லை யாதலாலும், அவ்வுயிர்க்கு நாதன் நீயாதலாலும் உன்னைவிட்டு,பொன்னை மாதரைப் பூமியை நாடுவேனோவென்பதுகருத்து.

**2.** தன்ன தென்றுரை சாற்று வனவெலாம்
நின்ன தென்றனை நின்னிடத் தேதந்தேன்
இன்ன மென்னை யிடருறக் கூட்டினால்
பின்னை யுய்கிலன் பேதைய னாவியே.

இ-ள். தன்னது என்று - தனது என்று, உரை சாற்றுவன எல் லாம் - சொல்லாற் சொல்லப்படுவன வெல்லாம், நின்னது என்றனை - உனது என்று சொல்லினை, (ஆதலால்) நின்னிடத்தே தந்தேன் - அவைகளை உன்னிடத்திலே ஒப்புவித்தேன், என்னை - அடியேனை, இன்னம் - இன்ன மும், இடர் உற கூட்டினால் - துக்கம்வந்து பொருந்தும்படி பொருத்திவிட் டால், பின்னை - பிறகு, பேதையன் - அறிவிலியாகிய நான், ஆவி உய்கிலன் - உயிர் பிழைக்கும் ஆற்றலிலேன்—எ-று.

நின்னதென்றனை என்றார்; குருமூர்த்தமா யெழுந்தருளின காலத்தில் உடல் பொருளாவிகளைத் தன்னதென் றேற்றுக்கொண்டமையான். பேதையன் ஆவியே என்பதைப் பேதையே னுயிரே எனப் பொருடரும் விளியாக்கி, உய்கிலன் என முடிப்பினு மமையும்.

3. ஆவி யேயுனை யானறி வாய்நின்று
சேவி யேன்களச் சிந்தை திறைகொடேன்
பாவி யேனுள பான்மையைக் கண்டுநீ
கூவி யாளெனை யாட்கொண்ட கோலமே.

இ - ள். ஆவியே - என்னுயிரே, உன்னை-(அறிவுக்கறிவாய்நிற்கின்ற) உன்னை, யான் அறிவு ஆய் நின்று - நான் அறிவுருவாய் நின்று, சேவியேன் - வணங்கேன், கள்ளச் சிந்தை - வஞ்ச மனத்தை திறை கொடேன் - பகுதியாகக் கொடேன், பாவியேன் - பாவச் செய்கையேனாகிய நான், உள்ள பான்மையைக் கண்டும் - இருக்கிற தன்மையைப் பார்த்தும், நீ கூவி ஆள் - நீயே யழைத்து ஆள்வாய், என்னை ஆட்கொண்ட கோலமே-என்னை யடிமைகொண்ட அருளிறையே—எ - று.

பாவியேன் - நினையேன் எனினுமாம். உயிருருவாய் நிற்றலால் அகக்கண்ணாலன்றி முகக்கண்ணாற் காணக் கூடாமையின், 'ஆவியே யுனை யானறிவாய் நின்று சேவியேன்' என்றார். சிந்தை திறை கொடுத்தலாவது தற்போத மிழத்தல்.

4. கோல மின்றிக் குணமின்றி நின்னருட்
சீல மின்றிச் சிறியன் பிழைப்பனோ
ஆல முண்டு மமிர்துரு வாய்வந்த
கால மெந்தை கதிநிலை காண்பதே.

இ - ள். எந்தை - என் தந்தையே, கோலம் இன்றி - உன்னுடைய சின்னங்க ளில்லாமலும், குணம் இன்றி - அவைகளைத் தரிக்கத்தக்க நற்குண மில்லாமலும், நின் அருள் சீலம் இன்றி - உன் னருளை யடைதற்குரிய நல்லொழுக்க மில்லாமலும், சிறியன் பிழைப்பனோ - சிறியேன் உய்வேனோ, (இவைகளொன்றுமின்றி நான் பிழைக்கவேண்டின்) ஆலம் உண்டும் - விஷயத்தை யுண்ணினும், (அது) அமிர்து உருவாய் வந்த காலம் - அமிர்த ரூபமாய்த் தோன்றின காலத்தில் தான், கதி நிலை காண்பது - உன் சிவகதியினது நிலையை நான் காணப்பெறுவது—எ - று.

சிவவேஷ முதலியன இல்லாமல் அடியேன் உய்வது அருமை; அப்படி யுய்யவேண்டுமாயின், நான் நஞ்சுண்டாலும் அது அமிர்தமாக எனக்கு ருசிக்கும்படியான காலம் நேரிட்டால் உன் சிவகதியை யடைவேன் என்பதாம்.

5. காணுங் கண்ணிற் கலந்தகண் ணேயுனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ
ஆணும் பெண்ணு மதுவெனும் பான்மையும்
பூணுங் கோலம் பொருந்தியு ணிற்கவே.

இ-ள். காணும் - நோக்குதற்குரிய, கண்ணில் - அறிவாகிய கண்ணினிடத்து, கலந்த - பொருந்திய, கண்ணே - பெருமையே, சேணும் பாரும் திரிபவர் - விண்ணிலும் மண்ணிலுந் திரிவோர், உன்னைக் காண்பரோ - உன்னைக் காண்பார்களோ, ஆணும் பெண்ணும் - ஆண்பாலும் பெண்பாலும், அது என்னும் பான்மையும் - அது வென்னும் பகுதியும், (ஆகிய இவைகளை) பூணும் - கொண்ட, கோலம்-உன் திருக்கோலமானது, பொருந்தி உள் நிற்க - பொருந்தி அவர்களுடைய மனத்தின்கண் நிலைபெற்றிருக்கச்செய்தே—எ-று.

நிற்கக் காண்பரோ என வியையும். ஆணும் பெண்ணும் என உயர்திணை யிருபாலையும் அது என அஃறிணை யொருமைப்பாலையுங் குறிக்கவே உயர்திணைப் பலர்பாலும் அஃறிணைப் பலவின்பாலும் அடங்கும். ஆகவே, இவ்விருதிணை யைம்பாற் பொருள்களும் நீ நிறைந்து நிற்பதை ஒருவரு மறியா ரென்றாராயிற்று. இதை "அவனவ ளதுவெனும்" என்னுஞ் சிவ ஞானபோத முதற் சூத்திரத்தானு முணர்க.

6. நிற்கு நன்னிலை நிற்கப்பெற் றாரருள்
வர்க்க மன்றி மனிதரன் றேஐயா
துர்க்கு ணக்கடற் சோங்கன்ன பாவியேற்
கெற்கு ணங்கண் டெனபெயர் சொல்வதே.

இ-ள். நிற்கும் - நிற்றற்குரிய, நல்நிலை - நல்லநிலையாகிய உன் திருவருணிலையில், நிற்கப்பெற்றார் - அமைந்து நிற்கப்பெற்றவர்கள், அருள்வர்க்கம் அன்றி - அருள் வர்க்கமென்று சொல்லப்படுவாரன்றி, மனிதர் அன்றே-(அவர்கள்)மனிதர் என்று சொல்லப்படார்களே, ஐயா - ஐயனே, துர்க்குணக்கடல் - தீக்குணமாகிய கடலிலகப்பட்ட, சோங்கு அன்ன - மரக்கலத்தையொத்த, பாவியேற்கு - பாவியேனுக்கு, என் குணங்கண்டு - என் குணத்தைப் பார்த்து, என்ன பெயர் சொல்வது - என்ன பெயரிட்டழைப்பது—எ-று.

"நரன்சுரன் ஞானியா மென்பது நன்றல, பிரமமே ஞானியாம் பேதமின் றென்றது" என்பதற்கிணங்க, 'நிற்குநன்னிலை நிற்கப்பெற் றாரருள் வர்க்கமன்றி மனிதரன்றே' என்றார்.

**7.** சொல்லை யுன்னித் துடித்தத லாலருள்
எல்லை யுன்னி யெனையங்கு வைத்திலேன்
வல்லை நீயென்னை வாவென் றிடாவிடின்
கல்லை யாமிக் கருமி நடக்கையே.

**இ-ள்.** சொல்லை உன்னி - நீ சொன்ன சொல்லை நினைத்து, துடித்தது அல்லால் - பதைத்ததே யன்றி, அருள் எல்லை உன்னி - அருளி னெல்லையை நினைத்து, என்னை - என்னை, அங்கு - அவ்விடத்தில், வைத்திலேன் - அமைத்திலேன், வல்லை - விரைவில், நீ என்னை வாவென்றிடாவிடின் - நீ யென்னைவாவென் றழையா விட்டால், இக்கருமி நடக்கை - இத்தீவினையேனது ஒழுக்கமானது, கல்லை ஆம் - பொய்யாகும்—எ - று.

சுருதி குரு அநுபவமே யன்றி, சுவாநுபவ மில்லை யென்பார் 'சொல்லையுன்னித் துடித்ததல்லால் அருள் எல்லை யுன்னி யெனை யங்கு வைத்திலேன்' என்றார். கல்லை என்பது கல்ல என்னும் ஆந்திரமொழித் திரிபு.

**8.** கையு மெய்யுங் கருத்துக் கிசையவே
ஐய தந்ததற் கைய மினியுண்டோ
பொய்ய னேன்சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்ய தாமின்ப மென்று விளைவதே.

**இ-ள்.** கையும் - கைகளையும், மெய்யும் - சரீரத்தையும், கருத்துக்கு இசைய - கருத்திற் கிணங்க, ஐய - ஐயனே, தந்ததற்கு - நான் கொடுத்ததற்கு, இனி ஐயம் உண்டோ - இனிச் சந்தேக முண்டோ, பொய்யனேன் - பொய்யினேனது, சிந்தை - மனத்திலுள்ள, பொய்கெட - பொய் யொழிய, பூரணம் - நிறைவாகிய, மெய்யதாம் இன்பம் - உண்மையாகிய சுகம், என்று விளைவது - எக்கால முண்டாவது—எ - று.

கை மெய் கருத்து என்பவற்றை உனக்கே யாக்கியும், பேரின்ப மின்னு முண்டாக வில்லையே; இனி யெக்கால முண்டாகு மென்பது கருத்து. கையு மெய்யுங் கருத்துக் கிசையத் தருதலாவது - கையினால் அஞ்சலி செய்தலும், காயத்தினால் வலம் வருதலும், மனத்தினால் நினைத்தலுமாம். இவற்றை "கைகாள் கூப்பித் தொழீர்" எனவும், "ஆக்கையாற் பயனென் அரன் கோயில் வலம் வந்து" எனவும், "நெஞ்சே நீ நினையாய்" எனவும் மேலோர் கூறுதலானு முணர்க.

**9.** என்று முன்னை யிதய வெளிக்குளே
துன்ற வைத்தன னேயருட் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையாம்
நன்று நீதற வைத்த நடுவதே.

இ-ள். நன்று தீதுஅற - நன்மை தீமைகள் இல்லாதொழிய, வைத்த - என்னை உன் திருவருணிலையில் அமைத்து வைத்த, நடுவதே - பஞ்சகிருத்தியங்களுக்கும் பொதுவாய் நிற்கும்பொருளே, என்றும்-எக்காலமும், உன்னை-உன்னை, இதயம் - இதயமாகிய, வெளிக்குள்ளே துன்ற - ஆகாயத்திற் பொருந்த, வைத்தனனே - வைத்தேனே, (அதற் கிணங்கி) அருள்சோதி-அருளொளியாகிய, நீ நின்ற தன்மை நிலைக்கு-(என்னிதயத்தில்) நீநின்றதன்மையாகிய நிலைமைக்கு, என்னை நேர்மை ஆம் - என்ன ஒப்பாகும்—எ - று.

பஞ்ச க்ருத்யங்களாவன:—சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. அறப் பெரியனாகிய நீ, அறச் சிறியேனாகிய என்னிதயத்தில் உன் பெருமையையும், என் சிறுமையையும் நோக்காமல் எழுந்தருளினதற்கு அடியேன் என்னபிரதிசெய்யக் கடவேன் என்பதாம். "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து மென்சிந்தையுள்ளும் உறைவான்" என்னுந் திருக்கோவையாரானும் பெருமை சிறுமை நோக்காமை யுணர்க.

**10.** வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்த னானருள் பெற்றுந் திடமிலேன்
சித்த மோன சிவசின்ம யானந்தம்
வைத்த வைய வருட்செம்பொற் சோதியே.

இ-ள். சித்தம் - சித்தமான, மோன - மௌனநிலையை யுணர்த்துவோனே, சிவ - மங்களகரனே, சின்மயா நந்தம் வைத்த ஐய - ஞானசுகத்தையெனக்கு அருள்செய்த ஐயனே, அருள் - கிருபையோடு கூடிய, செம்பொன் சோதியே - செம்பொன் னொளியே, வைத்த தேகம் வருந்த - அமைக்கப்பட்ட சரீரம் வருந்துதலால், வருந்திடும் - வருந்துகின்ற, பித்தன்-பித்தனாகிய, நான் - அடியேன், அருள்பெற்றும் - உன் திருவருளைப் பெற்றும், திடம் இலேன் - (அசைவறவிருக்கும்) திடமுடையே னல்லேன்—எ - று.

நீர் அசைய நிழல் அசைதல் போலச் சரீரம் வருந்தச் சரீரியாகிய நானுந் தேகாபிமாணியாய் வருந்துகின்றேன்; இப்படி வருந்துதல் உன் திருவருள் பெற்ற வெனக்கு இயல்பல்ல வென்பது கருத்து. திருவருள் பெற்றுந் திடமின்மையால் பித்த னென்றார். இது "வெள்ளத்துணுவற்றியாங்கு" என்பதனானு முணர்க.

**11.** செம்பொன் மேனிச் செழுஞ்சுட ரேமுழு
வம்ப னேனுனை வாழ்த்து மதியின்றி
இம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம்
நம்பி வாவெனி னானென்கொல் செய்வதே.

இ - ள். செம்பொன் - செம்பொன் போன்ற, மேனி - நிறத்தையுடைய, செழுஞ்சுடரே - செழுமையாகிய வொளியே, முழுவம்பனேன் -

முழு மூடனாகிய நான், உன்னை வாழ்த்தும் - உன்னைத் துதித்தற்குரிய, மதி இன்றி - புத்தியில்லாமல், இம்பர்வாழ்வினுக்கு - இவ்வுலக வாழ்க்கையின் பொருட்டு, மனம் இச்சை வைத்தேன் - மனம் விரும்பினேன், நம்பி - பூர்ணனே, வா எனின் - (என்னை நீயே) வாவென் றழைத்திடில், நான் செய்வது என் - அடியேன் செய்யக்கிடந்தது யாது, (ஒன்றுமில்லை) — எ-று.

நீ பூர்ணனாதலால் என் சுதந்திரத்தைக் கெடுத்து வலிந் தாட்கொள்ளின் உன்னைத் தடுப்பவரில்லை யென்பது கருத்து.

**12.** செய்யுஞ் செய்கையுஞ் சிந்திக்குஞ் சிந்தையும்
ஐய நின்னதென் றெண்ணு மறிவின்றி
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யி லேசுழன் றேனென்ன புன்மையே.

இ - ள். செய்யும் செய்கையும் - செய்யுந் தொழிலும், சிந்திக்கும் சிந்தையும் - நினைக்கின்ற நினைப்பும், ஐய - ஐயனே, நின்னது என்று எண்ணும் - உன்னதென் றெண்ணுகிற, அறிவு இன்றி - ஞான மில்லாமல், வெய்ய - கொடிய, காம வெகுளி மயக்கம் ஆம் - காம வெகுளி மயக்கங்களாகிய, பொய்யிலே - பொய் நடையில், சுழன்றேன் - சுழன்றேன், என்ன புன்மை - இது என்ன இழிவான காரியம் — எ - று.

செய்கையும் செய்யச் சிந்திக்குஞ் சிந்தையு முன்னதே யென்றுணருமுணர்வின்றிக் காமவெகுளி மயக்கங்களாகிய முக்குற்றங்களோடு கூடியுழலா நின்றேன் என்பதாம்.

**13.** புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கு மருவருப் பல்லவோ
என்பொ லாமணி யேயிறை யேயித்தால்
துன்ப மன்றிச் சுகமொன்று மில்லையே.

இ - ள். புல் - இழிவான, புலால் - மாமிசத்தையும், நரம்பு - நரம்பையும், என்பு - எலும்பையும், உடை - உடைய, பொய் உடல் - பொய்யுடம்பானது, அன்பர் யார்க்கும் - அன்ப ரெல்லாருக்கும், அருவருப்பு அல்லவோ - அருவருக்கத் தக்க பொரு ளல்லவோ, என் பொல்லாமணியே - என் வசப்பட்ட தொளைக்காத முழு மணியே, இறையே - தலைவனே, இத்தால் - இந்த வுடம்பினால், துன்பம் அன்றி - துக்கமே யன்றி, சுகம் ஒன்றும் இல்லை - சுகம் சிறிதும் இல்லை — எ - று.

என் பொல்லாமணியே யென்றார்; அன்பர்க் கெளியன் என்பதை விளக்குதற்கு. மணி முன்றானையில் முடிந்தாளலாம்படி யிருத்தல்போல, இறைவனும் அன்பர்க் கெளியனாய் வில்லடி கல்லடிப்பட்டும், பரவைபால் பதம்

வருத்த நடந்தும், செருப்புதையேற்றும், வைகையை வரம்புகட்டு மிடத்துப் பிரம்படிபட்டும், நரி பரியாக்கி விற்க வந்தும் செய்த எண்ணிறந்த செய்கைகளைச் செய்தானாதலால் மணி இறைவனுக்கு உவமையாயிற்று.

**14.** இல்லை யுண்டென் றெவர்பக்க மாயினுஞ்
சொல்ல வோவறி யாத தொழும்பன்யான்
செல்ல வேறொரு திக்கறி யேனெலாம்
வல்ல நீயெனை வாழ்விக்க வேண்டுமே.

**இ - ள்.** இல்லை உண்டு என்று - இல்லை யென்றும் உண்டென்றும், எவர் பக்கம் ஆயினும் - எவர்களுடைய இடத்திற்காயினும் போய், சொல்ல அறியாத - கூற அறியாத, தொழும்பன் யான் - தொண்டனாகிய நான், செல்ல - போக, வேறு ஒரு திக்கு அறியேன் - மற்றொரு கதி யறியேன், எல்லாம் வல்ல நீ - எல்லாம் செய்ய வல்லவனான நீ, என்னை வாழ்விக்க வேண்டும் - அடியேனை வாழ்வித்தருளவேண்டும்—எ - று.

திக்கு கதி என்பன புகலிட மென்னும் பொருளன.

**15.** வேண்டுநின் சீரருண் மெய்யன்பர்க் கேயன்பு
பூண்ட நானென் புலமறி யாததோ
ஆண்ட நீயுன் னடியவ னானென்று
தூண்டு வேனன்றித் தொண்டனென் சொல்வதே.

**இ-ள்.** சீர் அருள் - உன்சிறந்த அருளானது, வேண்டும் - அடியேனால் விரும்பப்படும், மெய்யன்பர்க்கே - உன் மெய்யடியார்க்கே, அன்பு பூண்ட நான் - அன்புகொண்ட நான், என் புலம் அறியாதது - என்னுள வறியாமல், ஆண்டநீ - என்னை யாட்கொண்டநீ, உன் அடியவன் நான் என்று - உன் தொண்டன் நானென்று, தூண்டுவேன் அன்றி - எச்சரிப்பே னல்லது, தொண்டன் - தொழும்பனேன், என்சொல்வது - யாது சொல்லத்தக்கது.

மெய்யன்பர்க்கே யன்பு பூண்ட நானாதலாலும், என்புல மறியாமல் ஆண்ட நீ யாதலாலும், உன்னடியவன் நானென்று தூண்டுவேனன்றித் தொண்ட னென்சொல்வது என்பது கருத்து.

**16.** எனக்கு ளேயுயி ரென்ன விருந்தநீ
மனக்கி லேசத்தை மாற்றல் வழக்கன்றோ
கனத்த சீரருட் காட்சிய லாலொன்றை
நினைக்க வோவறி யாதென்ற னெஞ்சமே.

**இ-ள்.** எனக்கு உள்ளே - எனக்குள்ளே, உயிர் என்ன - உயிர்போல, இருந்தநீ - இருந்தநீ, மனக்கிலேசத்தை - மனவியாகுலத்தை, மாற்றல் - நீக்குதல், வழக்கு அன்றோ - உனக்குக் கடன்மை யல்லவா, கனத்த - மே

வான, சீர் - சிறப்பையுடைய, அருள்காட்சியல்லாது - திருவருட்டரிசநத்தையன்றி, ஒன்றை நினைக்கவோ - வேறொன்றை நினைக்கவென்றாலோ, என்றன் நெஞ்சம் - என்மனமானது, அறியாது - நினைக்க அறியாது—எ-று.

உயிர் என்ன என்பதற்கு உயிரென்று சொல்லும்படி யெனினுமாம். உன் றிருவருட் காட்சியையன்றி வேறொன்றை நினைக்கவு மறியாத என் மனத்தி லுறைகின்ற நீ அதனிடத்துள்ள வியாகுலங்களை நீக்குதல் உன்கடன்மை யல்லவோ வென்பது கருத்து.

**17.** நெஞ்சு கந்துனை நேசித்த மார்க்கண்டர்க்
கஞ்ச லென்ற வருள றிந் தேனையா
தஞ்ச மென் றுன் சரணடைந் தேனெங்கும்
செஞ்செ வேநின்ற சிற்சுக வாரியே.

இ - ள். நெஞ்சு உகந்து - மனமுவந்து, உன்னை நேசித்த - உன்னை விசுவாசித்த, மார்க்கண்டர்க்கு - மார்க்கண்ட முனிக்கு, அஞ்சல் என்ற - பயப்படாதேயென்ற, அருள் அறிந்து - திருவருளை யறிந்து, ஐயா-ஐயனே, தஞ்சம் என்று - அடைக்கலமென்று, உன்சரண் அடைந்தேன் - உன் திருவடிகளை யடைந்தேன், எங்கும் - எவ்விடத்தும், செஞ்செவ்வே நின்ற - பரிபூர்ணமாய்நிறைந்துநின்ற, சிற்சுகவாரியே - ஞானாநந்த சமுத்திரமே—எ-று.

நேசிப்போரை அஞ்சல் என்றருள்வோன் நீ யென்றறிந்தே நானும் தஞ்சமென்று உன் சரணடைந்தே னென்பதாம். மார்க்கண்டர்க்கு அஞ்சல் என்றதாவது அவருயிரைக் கூற்றங்கவராது கூற்றுயிரைக் கவர்ந்தது.

**18.** வாரி யேழு மலையும் பிறவுந்தான்
சீரி தானநின் சின்மயத் தேயென்றால்
ஆரி லேயுள தாவித் திரளதை
ஓரி லேனெனை யாண்ட வொருவனே.

இ - ள். என்னை ஆண்ட ஒருவனே - என்னை யாண்டருளின வொப்பற்றவனே, வாரியேழும் - சப்த சமுத்ரங்களும், மலையும் - மலைகளும், பிறவும் - மற்றுள்ளனவும், (இருப்பது) நின் சின்மயத்தே யென்றால் - உன் சிற்சொரூபத்தி லென்றால், ஆவித்திரள் - உயிர்த் தொகுதி, ஆரிலே உள்ளது - ஆரிடத்துள்ளது, அதை - அந்தச்செய்தியை, ஓரிலேன் - ஆராய்ந்திலேன்—எ - று.

"உலகமெனு மோவியங்க டிகழ்த்துமொரு படமாகி" என்ற மேலோர் கூற்றுக்கிணங்க, 'வாரியேழு மலையும் பிறவுந்தான் - சீரிதான நின் சின்மயத்தேயென்றால்' என்றார்.

**19.** ஒருவ ரென்னுளத் துள்கும் குறிப்பறிந்
தருள்வ ரோவெனை யாளுடை யண்ணலே
மருள னேன்பட்ட வாதை விரிக்கினோ
பெருகு நாளினிப் பேச விதியின்றே.

இ - ள். ஒருவர் - நீயேயன்றி வேறொருவர், என் உள்ளத்து - என் மனத்தில், உள்கும் - நினைக்கின்ற, குறிப்பு அறிந்து - நினைப்பறிந்து, அருள்வரோ - அருளுவரோ, என்னை ஆள் உடை அண்ணலே - என்னையடிமையாகவுடைய பெரியோனே, மருளனேன் - மயக்கத்தையுடைய நான், பட்ட வாதை - பட்ட துன்பத்தை, விரிக்கின் - பெருகச் சொன்னால், நாள் பெருகும் - நாள் அதிகரிக்கும், (ஆதலால்) இனி பேச விதியின்று - இனிப் பேசுதற்கு முறைமையில்லை—எ - று.

"உள்குவாருள்ளத்துள்ளுறை சோதியை" என்கிறபடியே, என்னுள்ளத்துள்ளுறைகின்றனை யாதலால், நீயன்றி வேறொருவர் என்னுள்ளக் குறிப்பறிந்து அக்குறிப்பின்படி வந்து அருள்வரோ என்பது கருத்து.

**20.** இன்று னக்கன் பிழைத்தில னென்றே
அன்று தொட்டெனை யாளர சேயென்று
நின்ற ரற்றிய நீலனைக் கைவிட்டால்
மன்ற மெப்படி நின்னருள் வாழ்த்துமே.

இ - ள். இன்று - இப்பொழுது, நான் உனக்கு அன்பு இழைத்திலன் என்று - நான் உனக் கன்பு செய்திலே னென்று, அன்று தொட்டு - அன்று தொடங்கி, அரசே - இறைவனே, என்னை ஆள் என்று - என்னையாள்வாயென்று, நின்று அரற்றிய - நின்று கதறின, நீலனை - வஞ்சகனாகிய என்னை, கைவிட்டால் - கைநெகிழ விடுவையாயின், மன்றம் - உலகமானது, நின் அருள் - உன்னருளை, எப்படி வாழ்த்தும் - எவ்வாறு துதிக்கும், (சொல்வாயாக)—எ-று.

நீலன் என்பது வஞ்சகியென்னும் பொருளுள்ள நீலியென்னும் பெண்பாற் பெயர்க்குரிய ஆண்பாற் பெயர்.

**21.** வாழ்த்து நின்னருள் வாரம்வைத் தாலன்றிப்
பாழ்த்த சிந்தைப் பதகனு முய்வனோ
சூழ்த்து நின்ற தொழும்பரை யானந்தத்
தாழ்த்து முக்க ணருட்செம்பொற் சோதியே.

இ - ள். சூழ்ந்து நின்ற - வளைந்து நின்ற, தொழும்பரை - தொண்டரை, ஆனந்தத்து - ஆநந்தக்கடலில், ஆழ்த்தும் - அமிழ்த்துகின்ற, முக்கண் - மூன்று கண்களையும், அருள் - கிருபையையுமுடைய, செம்பொன் சோதி

யே - செம்பொன் ஒளி யுள்ளவனே, வாழ்த்தும் - யாவரும் வாழ்த்துதற் குரிய, நின் அருள் - உன் திருவருளானது, வாரம் வைத்தால் அன்றி - என்மீது அன்புவைத்தா லல்லது, பாழ்த்த சிந்தை - பாழ்மனத்தையுடைய, பதகனும் - பாவியாகிய நானும், உய்வனோ - பிழைப்பேனோ—எ - று.

"கண்ணுக்கணிகலங் கண்ணோட்டம்" என்பவாகலின் 'முக்கணருள்' என்றார்.

**22.** சோதி யேசுட ரேசுக மேதுணை
நீதி யேநிச மேநிறை வேநிலை
ஆதி யேயுனை யானடைந் தேனகம்
வாதி யாதருள் வாயருள் வானையே.

இ - ள். சோதியே - ஒளியே, சுடரே (ஒளியைக்கொடுக்கின்ற) விளக்கே, சுகமே - இன்பமே, துணை (எம்போலியர்க்கு) சகாயமாகிய, நீதியே - நீதிநெறியே, நிசமே - உண்மையே, நிறைவே - பூர்ணமே, நிலை - எக்காலும் நிலைத்திருக்கிற, ஆதியே-முதற்பொருளே, உன்னை-நின்னை, யான் அடைந்தேன் - நான் சரணடைந்தேன், அகம் வாதியாது - மனம் என்னை வருத்தாதிருக்கும்படி, அருள்வாய் - அருள் வெளியில் விளங்குகிற, ஐயே - கடவுளே, அருள்வாய் - கிருபை புரிவாயாக—எ-று.

அருள்வானை என்பதற்கு அருள்வெளியை யென்றுரைப்பினுமாம்.

**23.** வானைப் போல வளைந்துகொண் டானந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்துக லந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடுவ னானெனும்
ஈனப் பாழ்கெட வென்று மிருப்பனே.

இ - ள். வானைப்போல வளைந்து கொண்டு - மேகங்களைப்போலச் சூழ்ந்துகொண்டு, ஆனந்தத் தேனைத்தந்து - ஆநந்தமாகிய தேனைச்சொரிந்து, என்னைச் சேர்ந்து கலந்த - என்னைச்சேர்ந்து பிரிவறக்கலந்த, மெய்ஞ்ஞானத் தெய்வத்தை - மெய்ஞ்ஞானத்தைத் தருகின்ற பரதேவதையை, நாடுவன் - தியானிப்பேன், (அதனால்) நான் என்னும் - நான் என்று விவகரிக்கிற, ஈனம் - இழிவாகிய, பாழ் - பாழ்நெறி, கெட - அழிய, என்றும் இருப்பன் - எக்காலத்தும் ஒருபடிப் பட்டிருப்பேன்—எ - று.

இறைவனை நாடுதலால் நானென்னும் அகம்பாவம் நீங்கி, என்று மொருதன்மைத்தாகிய மோக்ஷ பூமியில் வாழ்வேன் என்பதாம். "மலர் மிசையேகினான் மாணடிசேர்ந்தார் - நிலமிசை நீடுவாழ்வார்" என்றார் பெருநாவலரும்.

**24.** இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமற் றிருவடிக்
கரும்பைத் தந்துகண் ணீர்கம்ப லேயெலாம்
அரும்பச் செய்யென தன்னையொப் பாமனே.

இ - ள். இரும்பை - இரும்பை, காந்தம் - காந்தக்கல்லானது, இழுக்கின்ற ஆறு - கவர்கின்றவிதம், என்னை - அடியேனை, திரும்பிப் பார்க்கவொட்டாமல் - மீட்டும் இப்பிறவிக் கொள்ளையைத் திரும்பிப் பார்க்காதவண்ணம், திருவடி - உன் திருவடிகளாகிய, கரும்பைத்தந்து - கரும்பைக் கொடுத்து, கண்ணீர் - கண்ணீரும், கம்பலே - மெய்நடுக்கமும் ஆகிய, எல்லாம் - மோக்ஷதாகமுள்ளோர் குறிகளெல்லாம், அரும்பச்செய் - என்னிடத்துண்டாகச் செய்வாய், எனது அன்னை ஒப்பு ஆம் - என்தாய்க்குச் சமானமாகிய, மன்னே - இறைவனே—எ - று.

எதிரிட்ட இரும்பைக் காந்த மிழுத்துச் சலியா தடக்குமாறுபோல, எதிரிட்டறியு மென்னைக் கவர்ந்து மீட்டும் வெளிப்படா தடக்கிக்கொள்ள வேண்டு மென்பதாம்.

**25.** அன்னை யப்பனென் னாவித் துணையெனுந்
தன்னை யொப்பற்ற சற்குரு வென்பதென்
என்னைப் பூரண வின்ப வெளிக்குளே
துன்ன வைத்த சுடரெனத் தக்கதே.

இ - ள். அன்னை - தாய், அப்பன் - தந்தை, என் ஆவித்துணை - என்னுயிர்த்துணை, என்னும் - என்று சொல்லப்படுகிற, தன்னை - தன்னை, ஒப்பற்ற - நிகரற்ற, சற்குரு என்பது என் - சதாசாரிய னென்று சொல்லுவதென்ன, என்னை - அடியேனை, பூரண இன்பம் - பூர்ணாநந்தமாகிய, வெளிக்குள்ளே - வெளியினிடத்தே, துன்னவைத்த - பொருந்தவைத்த, சுடர் எனத்தக்கது - சோதியென்று சொல்லத்தக்கது—எ - று.

சற்குருவைப் பரப்பிரமமாகக் கருதவேண்டுமென்பது கருத்து.

**26.** தக்க கேள்வியிற் சார்ந்தநற் பூமியின்
மிக்கதாக விளங்கு முதலொன்றே
எக்க ணுந்தொழ யாவையும் பூத்துக் காய்த்
தொக்க நின்றுமொன் றுநிறை வானதே.

இ - ள். தக்க கேள்வியின் - தகுதியாகிய கேள்வி யென்னும் பெயரினல், சார்ந்த - பொருந்திய, நல்பூமியில் - நல்ல நிலத்தில், மிக்கது ஆக விளங்கும் - மேலானதாக விளங்குகின்ற, முதல் ஒன்றே - பீஜம் ஒன்று மாத்திரமே, எக்கண்ணும் தொழ - எத்திசையும் வணங்க, யாவையும் - எல்

லாவற்றையும், பூத்துக் காய்த்து - பூவெடுத்துக் காய்த்து, ஒக்க நின்றும் - (அவைகளோடு தனித் தனியே) கூடி நின்றும், ஒன்றாய் நிறைவு ஆனது - ஒரு பொருளாகியே எல்லாவற்றிலும் அகம்புற மென்றபடி நிறைவுற்றிருந்தது—எ - று.

'தக்க கேள்வியிற் சார்ந்த நற் பூமி' என்றது ஞான பூமிகளேழனுள் இரண்டாம் பூமியாகிய விசாரணையை.

**27.** ஆன மான சமயங்க ளாறுக்குந்
தான மாய்நின்று தன்மயங் காட்டிய
ஞான பூரண நாதனை நாடியே
தீன னேனின்பந் தேக்கித் திளைப்பனே.

இ - ள். ஆன - உண்டாகிய, மானம் - பெருமை பொருந்திய, சமயங்கள் ஆறுக்கும் - ஆறுசமயங்களுக்கும், தானம் ஆய் நின்று - இடமாய் நின்று, தன் மயம் காட்டிய - தன்னுருக் காட்டிய, ஞான பூரண நாதனை நாடி - ஞான நிறைவுள்ளவனாகிய தலைவனை நாடி, தீனனேன் - எளியனேன், இன்பம் - நிரதிசயாநந்தத்தை, தேக்கி திளைப்பன் - பூர்ணமா யநுபவிப்பேன்—

நிரதிசயம் - தனக்கு மேற்பட்ட தில்லாமை.

**28.** தேக்கி யின்பந் திளைக்கத் திளைக்கவே
யாக்க மாயெனக் கானந்த மாகியே
போக்கி னோடு வரவற்ற பூரணந்
தாக்கி நின்றவா தன்மய மாமதே.

இ - ள். இன்பம் தேக்கி - நிரதிசயாநந்தத்தை முற்று மடைந்து, திளைக்கத் திளைக்க - அநுபவிக்குந்தோறும், ஆக்கம் ஆய் - விருத்தி யடைந்து, எனக்கு ஆநந்தம் ஆகி - எனக்கு இன்பமாகி, போக்கினோடு வரவு அற்ற - போக்கும் வரவுமில்லாத, பூரணம் தாக்கி நின்றவா - பூரணப்பொருளானது வந்து மேலிட்டு நின்றவாறு என்னை, அதே தன்மயம் ஆம் - அதுவே தன்மயமாம்—எ - று.

'போக்கினோடு வரவற்ற பூரணம்' என்றது "போக்கும் வரவும் புணர்வு மிலாப் புண்ணியனே" என்றதைப் பற்ற.

**29.** அதுவென் றுன்னு மதுவு மறநின்ற
முதிய ஞானிகண் மோனப் பொருளது
எதுவென் றெண்ணி யிறைஞ்சுவ னேனழையேன்
மதியு ணின்றின்ப வாரி வழங்குமே.

இ - ள். அது என்று உன்னுமதுவும் - அதுவென்றெண்ணும் எண்ணமும், அறநின்ற - இல்லாமல் நின்ற, முதிய ஞானிகள் - பெரிய ஞானவான்

களுடைய, மோனப் பொருள் அது - மௌன நிலையிநற் பலிக்கும் பொருளாகிய அது, எது என்று எண்ணி - எதுவென்று மதித்து, இறைஞ்சுவன் - தொழுவேன், ஏழையேன் - எளியேனது, மதியுள் நின்று - அறிவினின்று, இன்பவாரி வழுங்கும் - ஆநந்தப் பெருக்குப் பெருகாநிற்கும்—எ - று.

என்னறிவுக் கறிவாயிருந் தின்பம் பயத்தலால் 'எதுவென் றெண்ணி யிறைஞ்சுவன்' என்றார்.

**30.** வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கண்டவை யாவும் பருகினை
ஓரிற் கண்டிடு மூமன் கனவென
யாருக் குஞ்சொல வாயிலை யையனே.

இ - ள். என்னை வாரிக்கொண்டு - என்னைக் கவர்ந்துகொண்டு, வாய் மடுத்து - வாயிற்பெய்து, இன்பம் ஆய் - சுகரூபமாகி, பாரில் - உலகில், கண்டவை யாவும் பருகினை - காணப்பட்ட பொருள்களெல்லாவற்றையும் விழுங்கிவிட்டனை, ஓரில்-ஆராயுமிடத்தில், ஊமன் கண்டிடும் கனவு என - ஊமன் காணுங் கனவுபோல, யாருக்கும் சொல்ல - யாருடனுஞ் சொல்லுதற்கு, வாயில்லை - வாக்கில்லை, ஐயனே - இறைவனே—எ - று.

"அரிந்த தலைவா யடங்கு மவ்வளவே யன்றித் - தெரிந்திடுமோ நீயே தெளி" என்றதற் கேற்ப, 'ஊமன் கனவென யாருக்குஞ் சொலவாயிலை' என்றார்.

**31.** ஐய மற்ற வதிவரு ணர்க்கெலாங்
கையி லாமல கக்கனி யாகிய
மெய்ய னேயிந்த மேதினி மீதுழல்
பொய்ய னேற்குப் புகலிட மெங்ஙனே.

இ - ள். ஐயம் அற்ற - (தம் மநுபவத்தில்) சந்தேகம் நீங்கின, அதிவருணர்க்கு எல்லாம் - அதிவர்ணாச்சிரமிகளாகிய ஞானியர்க்கெல்லாம், கையில் - உள்ளங்கையிலிருக்கிற, ஆமலகக் கனி ஆகிய - நெல்லிக் கனி போன்ற, மெய்யனே - உண்மையானவனே, இந்த மேதினி மீது - இந்தப் பூமியின்மேல், உழல் - சுழலுகின்ற, பொய்யனேற்கு - பொய்யனாகிய எனக்கு, புகல் இடம் எங்ஙன் - சரணடைதற்குரிய இடம் எங்குள்ளது—

அதிவருணர்க்குப் புலப்படுகிற நீ இப் பொய்யினேற்குப் புலப்படுதியோ வென்பதாம்.

**32.** எங்ங னேயுய்ய யானென தென்பதற்
றங்ங னேயுன்ன ருண்மைய மாகிலேன்
திங்கள் பாதி திகழப் பணியணி
கங்கை வார்சடைக் கண்ணுத லெந்தையே.

இ - ள். திங்கள் பாதி திகழ - சந்திரன் அரைப்பங்காகப் பிரகாசிக்க, பணி அணி - பாம்பை யணிந்த, கங்கை - கங்கை தங்கிய, வார் - நீண்ட, சடை - சடாபாரத்தையுடைய, கண்ணுதல் எந்தையே-நெற்றிக்கண்ணோடு கூடிய எமது தந்தையே, யான் எனது என்பது அற்று - யான் என்னது என்பதாகிய அகங்கார மமகாரங்கள் நீங்கி, அங்ஙனே - அப்படி யற்ற விடத்திற்றானே, உன் அருள் மயம் ஆகிலேன் - உன் திருவருள் மயமானே னில்லே, எங்ஙன் உய்ய - அடியன் எப்படி பிழைக்க—எ - று.

பாம்பைக் கண்டு சந்திரன் ஒளி மழுங்கு மென்பார் 'திங்கள் பாதி திகழப் பணி யணி' என்றார். அன்றித் திங்கள்பாதி என்பதற்கு சந்திரகண்டம் எனப் பொருளுரைத்தலுமாம்.

**33.** கண்ணிற் காண்பதின் காட்சிகை யாற்றொழில்
பண்ணல் பூசை பகர்வது மந்திரம்
மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவுமே
அண்ண லேயுன் னருள்வடி வாகுமே.

இ - ள். கண்ணின் காண்பது - கண்ணினால் பார்க்கப்படுவது, உன் காட்சி - உன் சேவையே, கையால் - என் கைகளால், தொழில் பண்ணல் - தொழில் செய்வது, பூசை - உன் பூசையே, பகர்வது - நான் சொல்லுவது, மந்திரம் - உன் மந்திரமே, மண்ணொடு - மண்ணோடு கூடி, ஐந்தும் - ஐந்தென்னும் தொகை பெற்றிருக்கிற பூதங்களும், வழங்கு - அவற்றினா லுண்டாகிப் பௌதிகங்களென்று வழங்கப்படுகிற, உயிர் யாவும் - உயிர்களெல்லாம், அண்ணலே - பெரியோனே, உன் அருள் வடிவு ஆகும் - உன்னருளுருவமாகும்—எ - று.

"மொழிவ துன்செப முத்திரை பாணியின் முயல்வதெங்கு நடப்பன கோயில் சூழ், தொழில ருந்துவ முற்றுமு னாகுதி துயில்வ ணங்கல் களிப்பன யாவுநீ, யொழிவ றுங்களி யென்செயல் யாவையு முனது நன்சப ரிச்செயலாகவே, யழிவ றும்பதம் வைத்தருள் பேரொளி யளிவிளைந்துக ளிப்பெழு நாதமே" என்றிவ்வாறு பிறர் கூறுதலுங் காண்க.

**34.** வடிவெ லாநின் வடிவென வாழ்த்திடாக்
கடிய னேனுமுன் காரணங் காண்பனோ
நெடிய வானென வெங்கு நிறைந்தொளிர்
அடிக ளேயர சேயரு ளத்தனே.

இ - ள். வடிவு எல்லாம் - உருவங்களெல்லாம், நின் வடிவு என - உன்னுருவ மென்று, வாழ்த்திடா - துதிக்காத, கடியனேனும் - கடினசித்தத்தை யுடையேனும், உன் காரணம் காண்பனோ - உனது முதன்மையைக் காணவல்லேனோ, நெடிய வான் என - பெரிதாகிய ஆகாயம்போல, எங்கும் -

எவ்விடத்தும், நிறைந்து ஒளிர் - நிறைந்து விளங்குகின்ற, அடிகளே - சுவாமீ, அரசே-இறைவனே, அருள் அத்தனே-கிருபையுள்ள தந்தையே—

எவ்விடத்தும் எல்லா வுருவங்களு முன்னதே என்னும்படி நீக்கமற நிறைந்து நிற்கிற கடவுளே! உன் இறைமையைக் காண வல்லேனே! நீயே யருள்செய்யவேண்டும் என்பதாம்.

**35.** அத்த னேயகண் டானந்த னேயருட்
சுத்த னேயென வுன்னைத் தொடர்ந்திலேன்
*மத்த னேன்பெறு மாமல மாயவான்
*கத்த னேகல்வி யாதது கற்கவே.

இ - ள். அத்தனே - தந்தையே, அகண்ட ஆநந்தனே - பரிச்சேதிக்கக்கூடாத ஆநந்தத்தை யுடையவனே, அருள் - கிருபையுள்ள, சுத்தனே - தூய்மையுள்ளவனே, என - என்று புகழ்ந்து, உன்னைத் தொடர்ந்திலேன் - உன்னைப் பற்றிலேன், மத்தனேன் - உன்மத்தனுகிய நான், பெறும் - அடைந்திருக்கிற, மாமலம் - பெரிய மலங்கள், மாய - அழியும்படி, வான்கத்தனே - மேலான சர்வ சக்திமானே, யாது கல்வி கற்க - எந்தக் கல்வியைக் கற்கட்டும் (அருளிச்செய்வாய்)—எ - று.

மலக்கேட்டுக்குக் காரணமாகிய உன்னை யடையாமல் வேறெந்தக் கல்வி கற்றுய்யப்போகிறே னென்பதாம்.

**36.** கற்று மென்பலன் கற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோநெறி
நிற்றல் வேண்டு நிருவிகற் பச்சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே.

இ - ள். நிருவிகற்பசுகம் - நிர்விகற்ப சமாதி சுகத்தை, பெற்றபேர் - அடைந்தவர்கள், பெற்ற - அடைந்த, பேசா பெருமையே - பேசப்படாத பெரும் பொருளே, கற்றும் - பல கல்விகளைக் கற்றும், என் பலன் - என்ன பிரயோசனம், கற்றிடும் - கற்கப்படுகிற, நூல் முறை - சாத்திர முறைகள், சொற்ற சொற்கள் - சொன்ன சொற்கள், சுகாரம்பமோ - சுகோதயகாரணமோ, நெறி - அவை சொன்ன நெறியில், நிற்றல் வேண்டும் - நிற்கவேண்டும்—எ - று.

"கற்க கசடறக் கற்பவை கற்றபி - னிற்க வதற்குத் தக" எனவும், "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவ - னற்ற டொழாஅ ரெனின்" எனவும் பெரியோர் பணித்ததற்கேற்ப 'கற்று மென்பலன் கற்றிடு நூன் முறை - சொற்ற சொற்கள் சுகாரம்பமோ நெறி - நிற்றல் வேண்டும்' என்றார்.

**37.** பெருமைக் கேயிறு மாந்து பிதற்றிய
கருமிக் கைய கதியுமுண் டாங்கொலோ
அருமைச் சீரன்பர்க் கன்னையொப் பாகவே
வருமப் பேரொளி யேயுன்ம ஞந்தமே.

இ - ள். அருமைசீர் - அருமையாகிய சிறப்பையுடைய, அன்பர்க்கு - அன்பர்களுக்கு, அன்னை ஒப்பு ஆகவரும் - தாய்க்குச் சமானமாக வருகின்ற, அப்பேரொளியே - அந்தப் பெரிய சோதியே, உன் மஞந்தமே - உன்மனி சத்திக்கும் முடிவான இடமே (அடங்கு மிடமே), பெருமைக்கே - பெருமையின் பொருட்டே, இறுமாந்து பிதற்றிய - இறுமாந்து குழறிய, கருமிக்கு - தீவினையேனுக்கு, ஐய - ஐயனே, கதியும் உண்டாமோ - நற்கதியும் உண்டாகுமோ—எ - று.

பெருமையை யடைய விரும்பித்திரியும் தீவினையேனுக்கு நற்கதியுண்டாமோ என்பதாம்.

**38.** உன்ம னிக்கு ளொளிர்பரஞ் சோதியாம்
சின்ம யப்பொரு ளேபழஞ் செல்வமே
புன்ம லத்துப் புழுவன்ன பாவியேன்
கன்ம னத்தைக் கரைக்கக் கடவதே.

இ-ள். உன்மனிக்குள் - உன்மனி சத்திக்குள்ளே, ஒளிர் - விளங்குகின்ற, பரஞ்சோதி ஆம் - பேரொளியாகிய, சின்மயப் பொருளே - ஞானகாரப் பொருளே, பழஞ் செல்வமே - தொன்மையான பாக்கியமே, புல் - அற்பமாகிய, மலத்து - மலத்திலுள்ள, புழு அன்ன - புழுவை யொத்த, பாவியேன் - பாவியாகிய என்னுடைய, கல் மனத்தை - கல்லையொத்த நெஞ்சை, கரைக்கக் கடவது - உருக்கக் கடவை—எ - று.

இறைவன் கல்லை மென்கனியாக்கும் விச்சை வல்லோனாதலால் 'கன்மனத்தைக் கரைக்கக் கடவது' என்றார்.

**39.** கரையி லின்பக் கடலமு தேயிது
வரையி ஞனுனை வந்து கலந்திலேன்
உரையி லாவின்ப முள்ளவர் போலவித்
தரையி லேநடித் தேனென்ன தன்மையே.

இ - ள். கரையில் - கரையில்லாத, இன்பக்கடல் அமுதே - ஆநந்த சாகரத்தி லுண்டாகிய அமிர்தமே, இதுவரையில் - இன்றளவும், நான் - அடியேன், உன்னை வந்து கலந்திலேன் - உன்னை வந்து சேர்ந்தே னில்லை, உரை இல்லா - பேச்சிறந்த, இன்பம் உள்ளவர்போல - சுகத்தை யடைந்தவர்போல, இத்தரையிலே நடித்தேன் - இந்தப் பூமியிலே நடித்திருந்தேன், என்ன தன்மை - இது என்ன குணம்—எ - று.

"செய்யுஞ் சடங்குந் திகைப்புஞ் சிதம்பரத்தி லையன் றனக்கறிய லாம்" என்று மேலோர் கூறியதையுஞ் சிந்தியாமல், இங்ஙன நடிக்கின்றே னென்பார் 'உரையிலா வின்பமுள்ளவர்போல வித்தரையிலே நடித்தேன்' என்றார்.

**40.** மையு லாம்விழி மாதர்க ளோதகப்
பொய்யி லாழும் புலையினிப் பூரைகாண்
கையி லாமல கக்கனி போன்றவென்
னைய னேயென்னை யாளுடை யண்ணலே.

இ - ள். மை உலாம் விழி - மைதோய்ந்த கண்களையுடைய, மாதர்கள் - மங்கையர்களுடைய, ஓதகம் - வஞ்சத்தோடுகூடிய, பொய்யில் - பொய் யின்பத்தில், ஆழும் - அழுந்துகின்ற, புலை - நீசத்தன்மை, இனிப்பூரை - இனிப்போதும், கையில் - கையிலிருக்கிற, ஆமலகக்கனிபோன்ற - நெல்லி க்கனிபோன்ற, என் ஐயனே - என் தந்தையே, என்னை ஆள் உடை அண்ணலே - என்னை யடிமையாகவுடைய பெரியோனே—எ - று.

வஞ்சனையுள்ள மாதரது பொய்யின்பத்தில் அழுந்துகின்ற நீசத்தன்மை இனி யமையும் என்பதாம்.

**41.** அண்ண லேயுன் னடியவர் போலருட்
கண்ணி னாலுனைக் காணவும் வாவெனப்
பண்ணி னாலென் பசுத்துவம் போயுயும்
வண்ண மாக மனோலயம் வாய்க்குமே.

இ - ள். அண்ணலே - பெரியோனே, உன் அடியவர்போல் - உன் தொண்டரைப்போல, அருள் கண்ணினால் - உன் திருவருளாகிய கண்ணைக் கொண்டு, உன்னைக் காணவும் - உன்னைச் சேவிக்கவும், வா எனப் பண்ணி னால் - வருவாயாகவென்று நான் சொல்லும்படி செய்தனையாயின், என் பசுத்துவம் போய் - என் சீவத்தன்மை நீங்கி, உய்யும் வண்ணமாக - பிழை க்கும் விதமாக, மனோலயம் வாய்க்கும் - மனோநாசம் சித்திக்கும்—எ - று.

உய்யும் வண்ணம் - பிறப் பிறப்புக்களினின்று நீங்குதல். மனோ நாச முண்டாகாதார்க்குப் பிறப் பிறப்புக்க ளொழியா வென்பார் 'உயும் வண்ண மாக மனோலயம் வாய்க்கும்' என்றார். "சங்கற்ப நாசத்தா லெளிதாக மன நாசந்தானே யெய்தும் - அங்குற்றமன மிறக்கிற் சநந மரணங்களெனு மரமு மாயும் - இங்கிப்பா லென்னைத் திருடுங் கள்ளனைக் கண்டேன் கண்டேனிவன் பேர் நெஞ்சம் - பொங்குற்ற விவனாலே நெடுநாளுணைந்தே னின்று பொன்று விப்பேன்" என் றிவ்வாறு பிறர் கூறுதலுங் காண்க.

**42.** வாய்க்குங் கைக்கு மௌன மௌனமென்
றேய்க்குஞ் சொற்கொண் டிராப்பக லற்றிடா
நாய்க்கு மின்பமுண் டோநல் லடியரைத்
தோய்க்கு மானந்தத் தூவெளி வெள்ளமே.

இ-ள். வாய்க்கும் கைக்கும் - வாய்க்கும் கைக்கும், மௌனம் மௌனம் என்று - மௌனம் மௌனம் என்று, ஏய்க்கும் சொல்கொண்டு - ஏமாத்துஞ் சொல்லைக்கொண்டு, இராப்பகல் அற்றிடா - இராப்பகல் அற்றொழியாத; நாய்க்கும் - நாயினேனுக்கும், இன்பம் உண்டோ - சுகமுளதோ, நல் அடியரை - நல்லன்பரை, தோய்க்கும் - முழுகுவிக்கின்ற, ஆநந்தம் - இன்பமாகிய, தூ வெளி வெள்ளமே - பரிசுத்தமான ஆகாயத்தினின் றொழுகாநின்ற பிரவாகமே—எ-று.

வாய்க்கும் கைக்கும் என்றது அடிக்கடி யென்றபடி. ஏய்க்கும் என்பதற்குப் பொருத்தமான என்றுரைத்தலு மொன்று. சொற் கோடலாவது சொல்லின்படி யநுட்டித்தல்.

**43.** தூய தான துரிய வறிவெனும்
தாயு நீயின்பத் தந்தையு நீயென்றால்
சேய தாமிந்தச் சீவத் திரளன்றோ
ஆயும் பேரொளி யான வகண்டமே.

இ-ள். ஆயும் - (அறிஞரால்) ஆராயப்படுகின்ற, பேரொளி ஆன - பரஞ்சோதியாகிய, அகண்டமே - அபரிச்சிந்நமே, தூயதான - பரிசுத்தமான, துரிய அறிவு என்னும் - துரியஞானமென்கிற, தாயும் நீ - அன்னையும் நீ, இன்பத்தந்தையும் நீ என்றால் - சுகத்தைக் கொடுக்கின்ற பிதாவும் நீயென்று சொன்னால், இந்தச் சீவத்திரள் அன்றோ - இந்த வுயிர்த் தொகுதியல்லவா, சேய் ஆம் - மக்களாகும்—எ-று.

"விடைய தூரிறையே தாதை மற்றவன் பான் மின்னெம தன்னை" என்ற மேலோர் வாக்குக் கநுரூபமாக 'தாயுநீ யின்பத்தந்தையுநீ' என்றார்.

**44.** அகண்ட மென்ன வருமறை யாகமம்
புகன்ற நின்றன்மை போதத் தடங்குமோ
செகங்க ளெங்குந் திரிந்துநன் மோனத்தை
உகந்த பேருனை யொன்று வரையனே.

இ-ள். அகண்டம் என்ன - அகண்டமென்று, அருமறை - அரிய வேதங்களும், ஆகமம் - ஆகமங்களும், புகன்ற - சொல்லிய, நின்றன்மை - உன்னியற்கையானது, போதத்து அடங்குமோ - தற்போதத்துக் குள்ளாமோ, செகங்கள் எங்கும் திரிந்து - உலகங்களி லெல்லாம் சஞ்சரித்து, நல்

மோநத்தை உகந்தபேர் - சிறந்த மோநநிலையை யடைந்தபோர்கள், உன்னை ஒன்றுவர் - உன்னை யடைவார்கள், ஐயனே - கடவுளே—எ - று.

மறை யாகமங்கட்கு அருமையாவது நியாயம் முதலிய சாத்திர விசாரத்தானன்றி யறியப்படா திருத்தல். 'நின்றன்மை போதத்தடங்குமோ' என்றமையான் தற்போத விழைவானன்றி யறியப்படா தென்பதாயிற்று. 'மோனத்தை யுகந்தபே ருனையொன்றுவர்' என்றது "மோன மென்பது ஞானவரம்பு" என்றதை விளக்கியவாறு.

**45.** ஐய னேயுனை யன்றி யொருதெய்வம்
கையி னாற்றொழ வுங்கரு தேன்கண்டாய்
பொய்ய னாகிலும் பொய்யுரை யேன்சுத்த
மெய்ய னாமுனக் கேவெளி யாகுமே.

இ - ள். ஐயனே - கடவுளே, உன்னை அன்றி - (முக்கரணங்களானும்) உன்னைத் தொழுவதற்குக் கருதுவதன்றி, ஒருதெய்வம் - வேறொரு தெய்வத்தை, கையினால் - கையொன்றினாலும், தொழவும் - தொழுதற்கும், கருதேன் - நினைக்கமாட்டேன், பொய்யன் ஆகிலும் - பொய்யினேனானாலும், பொய் உரையேன் - பொய் சொல்லேன், சுத்தமெய்யன் ஆம் - சுத்தமெய்யனாகிற, உனக்கே வெளியாகும் - உனக்கே விசதமாகும்—எ - று.

கையினாற் றொழவும் கருதேன் என்றது முக்கரணங்களானே யன்றிக் காயமொன்றினாலுந் தொழேன் என்றபடி. கை காயத்துக்கு உபலக்ஷணம். சுத்தமெய் - பொய் கலவாத மெய். உன்னையன்றி மற்றொரு தெய்வத்தை முக்கரணத்தானும் வழிபடுகிலேன் என்பது சர்வஜ்ஞனாகிய உனக்கே வெளியாகும் என்பதாம்.

**46.** வெளியி னின்ற வெளியாய் விளங்கிய
ஒளியி னின்ற வொளியாமுன் றன்னைநான்
தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று
களிபொ ருந்தவன் றோகற்ற கல்வியே.

இ - ள். வெளியில் நின்ற - அன்பரது இதயாகாயத்தில் நிலைபெற்றிருந்த, வெளியாய் விளங்கிய - பரவெளியாய் பிரகாசித்த, ஒளியில் நின்ற - ஒளிக்குள் நிலைபெற்றிருந்த, ஒளி ஆம் - பரவொளியாகிய, உன் தன்னை - உன்னை, நான் - அடியேன், தெளிவுதந்த - எனக்குத் தெளிவைக் கொடுத்த, கல்லால் அடி தே என்று - கல்லாலின் மூலத்தி லெழுந்தருளி யிருந்த தெய்வமென்று, களி பொருந்த அன்றோ - மனமகிழ்ச்சி யடைதற் கல்லவோ, கற்ற கல்வி - அடியேன் கற்ற கல்விகள்—எ - று.

ஒளியினின்ற ஒளி யென்றது சோதியே சுடரே என்றத்தைப் பற்ற. (அறிவுக்கறிவு) என்றபடி. நான் கற்ற கல்வியெல்லாம் உன்னைப் பெற்று மகிழ்தற்கன்றோ என்பதாம்.

**47.** கல்லை யுற்ற கருத்தினர் கார்நிறத்
தல்லை யொத்த குழலின ராசையால்
எல்லை யற்ற மயல்கொள வோவெழில்
தில்லை யிற்றிக ழுந்திருப் பாதனே.

இ - ள். எழில் - அழகைக்கொண்ட, தில்லையில் - தில்லை நகரில், திகழும் - பிரகாசிக்கிற, திருப்பாதனே - திருவடிகளை யுடையவனே, கல்லை உற்ற கருத்தினர் - கல்லின் தன்மையை யடைந்த மனத்தையுடையவர்களும், கார்நிறத்து - கருமேகத்தின் நிறத்தைத் தன்னிடத்துக்கொண்டிருத்தலால், அல்லை ஒத்த - இரவையொத்த, குழலினர் - கூந்தலையுடையவர்களுமாகிய மாதரது, ஆசையால் - ஆசையினால், எல்லை அற்ற - அளவு கடந்த, மயல் கொள்ளவோ - மயக்கங்கொண்டு நசிக்கவோ (அடியேன் பிறந்தது)—எ-று.

வேதத்துச்சியில் விளங்குந் திருவடி எம்மனோரை யுய்வித்தற்பொருட்டன்றே தில்லையிற் றிகழ்வது? அங்ஙனமாகவும், அடியேன் மாதர் மயக்கில் ஆதனை யழிகையோ எனக் கியல்பாவது என்பார் 'தில்லையிற் றிகழும் திருப்பாதனே மயல்கொளவோ' என்றார். கல்லின் தன்மை - காடிந்யம் (வன்மை).

**48.** திருவ ருட்டெய்வச் செல்வி மலைமகள்
உருவி ருக்கின்ற மேனி யொருபரம்
குருவை முக்கணெங் கோவைப் பணிநெஞ்சே
கருவி ருக்கின்ற கன்மமிங் கில்லையே.

இ - ள். திருவருள் - திருவருளென்கிற, தெய்வச்செல்வி - தெய்வச் செல்வத்தை யுடையவளாகிய, மலைமகள் - பார்வதிதேவியின், உரு - வடிவானது, இருக்கின்ற - அமைந்திருத்தற்குரிய, மேனி - திருமேனியையுடைய, ஒரு - ஒப்பற்ற, பரம் குருவை - பரமாசாரியனை, முக்கண் எம்கோவை - மூன்றுகண்களையுடைய எம்மிறைவனை, நெஞ்சே பணி - மனமே வணங்கு, (வணங்குவையாயின்) கருஇருக்கின்ற - கர்ப்பத்திற்றங்குதற்குரிய, கன்மம் - தீவினையானது, இங்கு இல்லை - இவ்வுலகத்தில் (நமக்கு) உண்டாவதில்லை—எ - று.

மலைமகள் - பார்வதி என்னும் வடமொழிப் பொருளமைந்த சொல். ஏனைய செல்வங்கள்போன்று நிலையறுதியுடைய தன்றென்பார் 'திருவருட் டெய்வச் செல்வி' என்றார். முக்கண் முத்தொழில் எனினுமாம்.

**49.** கன்ம மேது கடுநர கேதுமேற்
சென்ம மேதெனைத் தீண்டக் கடவதோ
என்ம னோரத மெய்தும் படிக்கருள்
நன்மை கூர்முக்க ணாத னிருக்கவே.

**இ - ள்.** என் மனோரதம் - என் மனோரதங்களையெல்லாம், எய்தும்படிக்கு - நான் அடையும்படி, அருள் - கிருபைசெய்கிற, நன்மைகூர் - நன்மை மிகுந்த, முக்கண் நாதன் - மூன்று கண்களையுடைய இறைவன், இருக்க - எனக்குள் வீடாயிருக்கும்போது, கன்மம் ஏது - தீவினையேது, கடுநரகு ஏது - கொடிய நரக மேது, மேல் சென்மம் ஏது - மேல் உண்டாகும் பிறவி ஏது, (இவற்று ளொன்றாயினும்) என்னைத்தீண்டக் கடவதோ - என்னைப் பற்றக் கடவதோ—எ - று.

நரகிற்கேது தீவினையும், அந்த நரகாநுபவத்தின்மேல் அத்தீவினைக் கீடானபிறப்பும் உளதாகுமுறைமைநோக்கி, 'கன்மமேது கடுநரகேது மேல் சென்மமேது' எனவும், முக்கணாதனது இருக்கையும் கன்மாதிகளும் ஒளியிருள்கள் போல்வனவாதலால் 'முக்கணாதனிருக்கக் கன்மம் தீண்டக்கடவதோ' எனவுங் கூறினர்.

**50.** நாத கீதனென் னாதன்முக் கட்பிரான்
வேத வேதியன் வெள்விடை யூர்திமெய்ப்
போத மாய்கின்ற புண்ணியன் பூந்திருப்
பாத மேகதி மற்றிலை பாழ்நெஞ்சே.

**இ - ள்.** நாதகீதன் - நாதகீதங்களை யுடையவன், என்நாதன் - என் தலைவன், முக்கட் பிரான் - மூன்று கண்களையுடைய பிரான், வேத வேதியன் - வேத முதல்வனாதலால் வேதியனென்னுந் திருநாம முள்ளவன், வெள் விடை ஊர்தி - வெள்ளிய ருஷபவாகனத்தை யேறி நடாத்துவோன், மெய்போதம் ஆய்கின்ற புண்ணியன் - உண்மை யறிவாகின்ற தரும மூர்த்தி, (அவனது) பூ - தாமரை மலர்போன்ற, திருப்பாதமே - திருவடிகளே, கதி - நமக்குப் புகலிடம், மற்று இல்லை - வேறில்லை, பாழ் நெஞ்சே - பாழ்மனமே—எ - று.

நாதகீதன் - நாதத்துவமாகிய கீதத்தை யுடையவன் எனினுமாம். பிரான் - உபகாரன்.

**51.** மற்று னக்கு மயக்கமென் வன்னெஞ்சே
கற்றை வார்சடைக் கண்ணுத லோனருள்
பெற்ற பேரவ ரேபெரி யோரெலாம்
முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே.

இ - ள். வல்நெஞ்சே - வலியமனமே, உனக்கு மற்றும் மயக்கம் என் - உனக் கின்னமும் மயக்க முளதாதற்குக் காரண மென்னை, கற்றை வார் சடை - திரட்சியாகிய நீண்ட சடையையுடைய, கண்ணுதலோன் - நெற்றிக் கண்ணனது, அருள்பெற்றபேர் அவரே - அருளைப் பெற்றோராகிய அவரே, பெரியோர் - சீரியரும், மூதுரை அர்த்தம் எல்லாம் - வேதப் பொருள்களை யெல்லாம், முற்றும் ஓர்ந்தவர் - முழுது முணர்ந்தவரும் (ஆவர்)—எ - று.

பெரியோரும் மூதுரை யர்த்தம் முற்றுமோர்ந் தோரும் யாவரென மயங்கு நெஞ்சிற்குக் கூறியதாக இத்திருவிருத்தங் கூறப்பட்டது. மூதுரை வேதம் என்றுரைக்கப்பட்டது; அது எல்லா நூல்களுக்கும் பழையதாதல் நோக்கி.

**52.** உரையி றந்துளத் துள்ள விகாரமாம்
திரைக டந்தவர் தேடுமுக் கட்பிரான்
பரைநி றைந்த பரப்பெங்ங னங்ஙனே
கரைக டந்தின்ப மாகக் கலப்பனே.

இ - ள். உரை இறந்து - சொல்லற்று, உள்ளத்து உள்ள - மனத்தி லுள்ள, விகாரம் ஆம் - வேறுபாடாகிய, திரைகடந்தவர் - ஆவரணத்தைக் கடந்தவர்கள், தேடும் - தேடுகின்ற முக்கண்பிரான் - மூன்று கண்களையு டைய பிரானது, பரைநிறைந்த - திருவருட்சத்தி நிறைந்த, பரப்பு எங்ஙன் - நிலம் எங்கு, அங்ஙனே - அவ்விடத்தே, கரைகடந்து - வரம்பு கடந்து, இன்பம் ஆகக் கலப்பன் - சுகவடிவாகக் கலப்பேன்—எ - று.

ஆவரணம் - மறைப்பு. திருவருட்சத்தி நிறைந்த பரப்பு-சிதாகாயம். இது "தினகரனைச் செறிவருட மீரைஞ்ஞூற்றிற் றிரியொடு நெய்மாண்ட விந்தீபம்போல, சிற்ககனத்துற்றோன்" என்றற்றொடக்கத்தனவற்றானும் உணர்க.

**53.** கலந்த முத்தி கருதினுங் கேட்பினும்
நிலங்க ளாதியு நின்றமைப் போலவே
அலந்து போயின மென்னு மருமறை
மலர்ந்த வாய்முக்கண் மாணிக்கச் சோதியே.

இ - ள். அருமறை - அரியவேதங்களை, வாய்மலர்ந்த - திருவாய் மலர்ந்தருளிய, முக்கண் மாணிக்கச்சோதியே - முக்கண் மாணிக்கச்சுடரே, கலந்த முத்தி கலந்தமுத்தி நிலையை, கருதினும் - நினைக்கப்புக்காலும்,

கேட்பினும் - கேட்கப்புக்காலும், நிலங்கள் ஆதியும் - பிருதுவி முதலான வைகளும், எம்மைப்போலவே நின்று - எம்மைப்போலவே திகைத்து நின்று, அலந்து போயினம் என்னும் - துன்பப்பட்டுப் போயினோமென்னு நிற்கும்—எ - று.

நிலங்களாதி - பிருதுவியாதி நாததத்துவ மீறுகிய தத்துவத் தொகுதி.

**54.** சோதி யாதெனைத் தொண்டருட் கூட்டியே
போதி யாதவெல் லாமெளப் போதிக்க
ஆதி காலத்தி லுன்னடிக் காந்தவம்
ஏது நான்முயன் றேன்முக்க ணெந்தையே.

இ - ள். முக்கண் எந்தையே - த்ரிநேத்ர தாரியாகிய எமது தந்தையே, என்னை சோதியாது - என்னைப் பரீக்ஷியாமல், தொண்டருட்கூட்டி - உன்னடியார்களோடு சேர்த்து, போதியாத எல்லாம் - போதிக்கக்கூடாத அரியபொருள்களை யெல்லாம், மெள்ளப்போதிக்க - மெல்லப் போதித்த ற்கு, ஆதிகாலத்தில் - முற்காலத்தில், உன் அடிக்கு ஆம் - உன் திருவடித் தொண்டுக் குரியனும்படியான, ஏதுதவம் - என்னதவத்தை, நான் முயன் றேன் - அடியேன் முயன்று செய்தேன்—எ - று

சோதித்தல் - பக்குவியோ அபக்குவியோவென் ஞராய்தல். தொண்டருள் என்றமையால் தாம் தொண்டரல்லர் என்பதூஉம், கூட்டி என்றமையால் கூடுதற்குரிமை யிலரென்பதூஉம், போதியாத எல்லாம் என்றமையால் போதித்தற்குரிய பக்குவம் தமக்கில்லை என்பதூஉம், மெளப்போதிக்க என்றமையால் தம்மதிகாராது குணமாக என்பதூஉம், ஆதி காலத்தில் என்றமையால் இச்சநநத்தில் தாம் தவஞ் சிறிது முயன்றிலர் என்பதூஉம் போதரும்.

**55.** எந்த நாளைக்கு மீன்றரு டாயென
வந்த சீரருள் வாழ்கவென் றுன்னுவேன்
சிந்தை நோக்கந் தெரிந்து குறிப்பெலாம்
தந்து காக்குந் தயாமுக்க ணாதியே.

இ - ள். சிந்தை நோக்கம் தெரிந்து - அடியவர் மனத்தினது நோக்கத்தை யறிந்து, குறிப்பு எல்லாம் - அவர்கள் கருதினவற்றை யெல்லாம், தந்து காக்கும் - கொடுத்து ரக்ஷிக்கிற, தயா - அருளையுடைய, முக்கண் ஆதியே - முக்கண் முதல்வனே, எந்த நாளைக்கும் - எக்காலத்தும், ஈன்று அருள் தாய் என - பெற்றருளிய தாயைப்போல, வந்த - வந்து என்னைக் காத்தருளிய, சீர் அருள் - சிறப்பையுடைய உன் திருவருளானது, வாழ்க என்று - வாழக்கடவதென்று, உன்னுவேன் - பிரார்த்திப்பேன்—எ - று.

*இறைவன் பெருங்கருணையாள ராதலால் 'குறிப்பெலாந்தந்து காக்குந் தயாமுக்க ணாதியே' என்றார். சிந்தை நோக்கந் தெரிந்து என்றது அவனது சர்வ வியாபகத்வத்தையும் சர்வஞ்ஞத்வத்தையுந் தோற்றுவிக்க.

**56.** கண்ண கன்றவிக் காசினி யூடெங்கும்
பெண்ணொ டாண்முத லாமென் பிறவியை
எண்ண வோவரி தேழை கதிபெறும்
வண்ண முக்கண் மணிவந்து காக்குமே.

இ - ள். கண் அகன்ற - இடமகன்ற, இக்காசினி ஊடு எங்கும் இவ்வுலகத்தி லெவ்விடத்தும், பெண்ணொடு ஆண்முதல் ஆம் - பெண்ணோடு ஆண்முதலாகப் பிறந்த, என் பிறவியை - என் சநநங்களை, எண்ணவோ அரிது - அளவிட வென்றாலோ அருமையாகும், (இங்ஙனமாகவும்) ஏழை - அறிவிலியாகிய நான், கதிபெறும் வண்ணம் - முத்தியை யடையுமாறு, முக்கண்மணி வந்து காக்கும் - முக்கண் மாணிக்கம் வந்து காத்தருளும்—எ-று.

மேலைத் திருவிருத்தத்தில் தயாமுக்கணாதி யெனத் தெளிந்து கூறினாராதலால், அத்துணிவு பற்றி வந்து காக்கும் என்றார். அன்றி, பெண்ணோடாண் முதலாகிய ஜந்ம பரம்பரையி லுழல்வேனை வந்து காப்பனோ என ஏகாரத்தை வினாவாக்கி யுரைப்பினு மமையும்.

**57.** காக்கு நின்னருட் காட்சியல் லாலொரு
போக்கு மில்லையென் புந்திக் கிலேசத்தை
நீக்கி யாளுகை நின்பர மன்பினர்
ஆக்க மேமுக்க ணானந்த மூர்த்தியே.

இ - ள். அன்பினர் - அன்பினர்களுக்கு, ஆக்கமே - நிறை செல்வமே, முக்கண் - மூன்று கண்களையுடைய, ஆனந்த மூர்த்தியே - சுகவடிவை யுடையவனே, காக்கும் - காப்பதே யியலாயமைந்த, நின் அருள் காட்சி அல்லால் - உனது திருவருட் டரிசநத்தையே யன்றி, ஒரு போக்கும் இல்லை - (அடியேனுக்கு) வேறொரு புகலிடமில்லை, (ஆதலால்) என் புந்திக்கிலேசத்தை நீக்கி - என் மனவருத்தத்தைப் போக்கி, ஆளுகை - ஆண்டருளுதல்; நின்பரம் - உனக்கே பாரமாகும்—எ - று.

ஆக்கம் - மேன்மேலுயருஞ் செல்வம். உன் திருவருட் காட்சியன்றி வேறு புகலிடமில்லாத என் மனக்கிலேசத்தை நீக்கி யென்னை யாட்கொள்ளுதல் உன் கடன்மையாமென்பதாம்.

**58.** ஆனந் தங்கதி யென்னவென் றானந்த
மோனஞ் சொன்ன முறைபெற முக்கணாங்
கோனிங் கீந்த குறிப்பத னல்வெறுந்
தீனன் செய்கை திருவருட் செய்கையே.

இ - ள். ஆநந்தம் - ஆநந்தமே, கதி என்ன - புகலிடமென்று தெளிய வும், என் ஆநந்த மோனம் சொன்ன - எனக்கானந்த ரூபமான மோன நிலையை யருளிச்செய்த, முறைபெற - முறையைப் பெறவும், முக்கண் - மூன்று கண்களையுடைய, எம் கோன் - எம்மிறைவன், இங்கு ஈந்த - இவ் விடத் தருளிச்செய்த, குறிப்பதனால் - குறிப்பினால், வெறும் தீநன்செய்கை - மிகவும் ஏழையாகிய என்செய்கை, திருவருள் செய்கையே - திருவருட் செய்கையாம்—எ - று.

மேல் ௪அ - ம் திருவிருத்த முதல் இதுகாறும் வர, முக்கணெங்கோ எனவும், முக்கணுதன் எனவும், முக்கட்பிரான் எனவும், கண்ணுதலோன் எனவும், முக்கண் மாணிக்கச்சோதி எனவும், முக்கணெந்தை எனவும், முக்கணாதி எனவும், முக்கண்மணி எனவும், முக்கணாநந்த மூர்த்தி எனவும் பலகாலும் முக்கண்மேற் கண்வைத்தது "தில்லை யேர்கொண் முக்கண்மன்" என்னு மாணிக்கக் கூற்றனது கூற்றின் வழிபற்றியும், அக் கண்ணழகு தம் மை யீடுபடுத்தினமைபற்றியும். ஆநந்தங் கதியென்று தெளியவும், மோன நிலையை முறைமையாகப்பெறவும் அருளிச்செய்த திருவருட் செய்கையே யன்றி எனக்கென ஒரு செய்கையிலேனென்பது கருத்து.

**59.** கையி னாற்றொழு தேத்திக் கசிந்துள்
மெய்யி னாலுனைக் காண விரும்பினேன்
ஐய னேயர சேயரு ளேயருள்
தைய லோர்புறம் வாழ்சக நாதனே.

இ - ள். ஐயனே - கடவுளே, அரசே - அரசனே, அருளே - தயா வானே, அருள் தையல் - திருவருட்சத்தியாகிய உமாதேவி, ஓர் புறம்வாழ் - திருமேனியி னொருபாகத்தில் வசித்தற்குரிய, சகநாதனே - லோகநாதனே, கையினால் தொழுது - கையினால் வணங்கி, ஏத்தி - வாயினால் துதித்து, உள் ளம் கசிந்து - மனமுருகி, மெய்யினால் - மெய்யுன்பினால், உன்னைக்காண விரும்பினேன் - உன்னைத் தரிசிக்க ஆசைப்பட்டேன்—எ - று.

மெய்யினால் என்பதற்கு உண்மையாகவென் றுரைத்தலு மாம். கையி னால் எனக் காயமும், ஏத்தி என வாக்கும், உள்ளம் என மனமுங் கூறப் பட்டன. முக்கரணங்களாலும் உன்னை வழிபட விரும்பினே னென்பது கருத்து.

**60.** சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே
மிகுத்த தீமை விளைய விளைக்கின்றேன்
அகத்து ளாரமு தாமைய நின்முத்திச்
சுகத்தி னான்வந்து தோய்வதெக் காலமே.

இ - ள். சகத்தின் வாழ்வை - உலக வாழ்க்கையை, சதம் என எண்ணி- நிலையென்று நினைந்து, மிகுத்த தீமை விளைய - அதிகமான தீமைகளுண்டாகும்படி, விளைக்கின்றேன் - விளையா நிற்கிறேன், அகத்துள் - அன்பரது மனத்தில்; ஆர் அமுது ஆம் - அரிய அமிர்தம்போல ருசிக்கின்ற, ஐய - ஐயனே, நின் - உனது, முத்தி சுகத்தில் - மோக்ஷ சுகவாரிதியில், நான் வந்து தோய்வது - நான்வந்து படிவது, எக்காலம்-எந்தக்காலம்—எ - று.

சகம் - தோன்றி யழிதன் மாலையது. எண்ணி யென்பதை எண்ண வெனத் திரித்து (அதனால்) மிகுத்த தீமை விளைய இளைக்கின்றேன் எனப் பொருத்தி யுரைப்பினு மமையும்.

**61.** கால மூன்றுங் கடந்தொளி ராநின்ற
சீல மேநின் றிருவரு ளாலிந்த்ர
சால மாமிச் சகமென வெண்ணிநின்
கோல நாடுத லென்று கொடியனே.

இ - ள். காலம் மூன்றும் கடந்து ஒளிராநின்ற - முக்காலங்களையும் கடந்து விளங்குகின்ற, சீலமே - குணவானே, நின் திருவருளால் - உன் திருவருளினால், இச்சகம் - இந்த வுலகமானது, இந்த்ரசாலம் ஆம் என எண்ணி - இந்த்ரஜாலமா மென்று நினைத்து, நின் கோலம் - உன் திருக் கோலத்தை, கொடியன் - கொடியேன், நாடுதல் - நாடுவது, என்று - எப் போது—எ - று.

காலாதீதமான வஸ்துவின் அருளாலன்றி இச்சகம் மித்தையாய்த் தோன்றுதென்பது இதனாற் கூறப்பட்டது.

**62.** கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும்
அடிக ளாம்பொரு ளேநினக் கன்பின்றிப்
படியி லேழைமை பற்றுகின் றேன்வெறும்
மிடியி னேன்கதி மேவும் விதியின்றே.

இ - ள். கொடிய - கொடிதாகிய, வெம்வினை - குரூரமான தீவினை யென்கிற, கூற்றை - யமனை, துரந்திடும் - ஓட்டுகின்ற, அடிகள் ஆம் பொருளே - கடவுளென்று சொல்லப்படுகிற வஸ்துவே, வெறும் மிடியினேன் - மிகவும்வறியனாகிய நான், கதிமேவும் விதி இன்று - நற்கதியை யடைதற்கு க் காரணமாகிய ஆகூழ் இல்லாமையால், நினக்கு அன்பு இன்றி - உன் னிடத் தன்பில்லாமல், படியில் - இவ்வுலகத்தில், ஏழைமை பற்றுகின்றேன் - அறிவில்லாமையையே ஆதாரமாகப் பற்றுநிற்கிறேன்—எ - று.

வினைக்கூற்றை என்பதற்கு வினைப்பகுதியை யெனவும், வினைக்கு ஊற்றை எனவும், வினையென்னுஞ் சொல்லை யெனவு முரைப்பினுமாம், ஊற்று - சுரக்குமிடம்.

**63.** விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையில்
பதிய வைத்த பசுபதி நின்னருட்
கதியை யெப்படிக் கண்டு களிப்பதே.

இ - ள். விதியையும் விதித்து - விதியையும் வகுத்து, என்னை விதித்து - அவ்விதிக்கிடனு யென்னையும் வகுத்து, இட்டமதியையும் விதித்து - எனக்கென்றமைத்த புத்தியையும் வகுத்து, அம்மதி - அந்தப் புத்தியானது, மாயையில் பதியவைத்த - மாயையி லழுந்தவைத்த, பசுபதி - பசுபதியே, (அப்படி மாயையி லழுந்தி நிற்கும் நான்) நின் அருள் கதியை - உன்னருளாலுளதாகுங் கதியை, கண்டு களிப்பது எப்படி - கண்டு மகிழ்வது எவ்வாறு—எ - று.

பசு - சீவன். பதி - இறைவன். பசுபதியாதலால் விதியையும் விதித்து, என்னை விதித்து, இட்டமதியையும் விதித்து, 'அம்மதி மாயையிற் பதிய வைத்த' என்றார்.

**64.** கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப்
பண்டு மின்றுமென் பானின் றுணர்த்திடும்
அண்ட னேயுனக் கோர்பதி னாயிரம்
தெண்ட னென்பொய்ம்மை தீர்த்திடல் வேண்டுமே.

இ - ள். கண்ட கண்ணுக்கு - பார்க்குங் கண்களுக்கு, காட்டும் - பதார்த்தங்களை விளக்கிக் காட்டுகின்ற, கதிர் என - சூரியன்போல, பண்டும் இன்றும் - முற்பொழுதினும் இப்பொழுதினும், என்பால் நின்று - என்னிடத்தினின்று, உணர்த்திடும் - துன்ப வின்பக் கூறுபாடுகளை யுள்ளவாறுணர்த்துகின்ற, அண்டனே - தேவனே, உனக்கு ஒரு பதினாயிரம் தெண்டன் - உனக்குப் பதினாயிரம் நமஸ்காரம் செய்கிறேன், என்பொய்ம்மை தீர்த்திடல் வேண்டும் - என் பொய்யொழுக்க முதலியவற்றை நீக்கியருளல்வேண்டும்.

பண்டும் இன்றும் என்றமையால் இனிமேலும் என்பதும் பெறப்படும். தேவத்துவம் இன்றாயின் சீவரிடத்து நின்றுணர்த்து மாற்றலின்றாமென்பார் 'என்பானின் றுணர்த்திடும் அண்டனே' என்றார்.

**65.** வேண்டும் யாவு மிறந்து வெளியிடைத்
தூண்டு வாரற்ற சோதிப் பிரானின்பால்
பூண்ட வன்பர் தம் பொற்பணி வாய்க்குமேல்
ஈண்டு சன்ம மெடுப்பன நந்தமே.

இ - ள். வேண்டும் யாவும் இறந்து - விரும்பப்படுகின்ற எல்லாப்பொருள்களையுங் கடந்து, வெளி இடை - பரவெளியில், தூண்டுவார் அற்ற - தூண்டுவாரை யில்லாத, சோதி - தேஜோமயமான, பிரான் - உபகார சீல

னே, நின்பால்பூண்ட அன்பர் - உன்னிடத் தன்பு பூண்ட அடியாரது, பொன்பணி வாய்க்குமேல் - திருப்பணி கிடைப்பதாயின், ஈண்டு - நெருங்கிய, அநந்தசன்மம் - முடிவில்லாத சன்மங்களை, எடுப்பன் - எடுப்பேன்—எ - று.

முமுட்சுக்க ளெல்லாரும் சன்மம் வேண்டா வென்று பிரார்த்தியா நிற்க இவர் 'சன்மமெடுப்பன்' எனக் கூறுதல் அசங்கத மன்றோவெனின், அன்று. என்னை? "இறவிலெப்பதமும் பெற வேண்டிலேனென்றும் பிறவி வேண்டுவ னின் றிருப்பணிசெயப் பெறினே" என்னும் ஆப்த வாக்கியப் படியே பிறவிப்பயனாகிய அன்பர் பணிசெய்யப் பெறுகையாலென்க.

**66.** எடுத்த தேக மிறக்குமு னேயெனைக்
கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே.

இ - ள் அடுத்தபேர் - ஆசிரயித்தவர்களுடைய, அறிவாய் - அறிவுருவாய், அறியாமையை - அவரது அஞ்ஞானத்தை, கெடுத்த - அழித்த, இன்பம் - சுகத்தைத் தருகின்ற, கிளர் - விளங்குகின்ற, மணிக்குன்றமே - மாணிக்க மலையே, எடுத்ததேகம் இறக்கும் முன்னே - எடுத்தவுடம்பு இறந்தழிவதன் முன்பே, என்னைக்கொடுத்து - என்னை யுனக்குணவாகக் கொடுத்து, நின்னையும் கூடவும் காண்பனோ - உன்னையுங் கூடப்பெறவுங் காண்பனோ—எ - று.

என்னைக் கொடுத்து நின்னையுங் கூட என்றது தற்போத விழப்பை. அதாவது சீவபோதமிறக்கச் சிவபோத மேலிடுகை.

**67.** குன்றி டாத கொழுஞ்சுட ரேமணி
மன்று ளாடிய மாணிக்க மேயுனை
அன்றி யார்துணை யாருற வார்கதி
என்று நீயெனக் கின்னருள் செய்வதே.

இ - ள். குன்றிடாத - அழியாத, கொழுஞ்சுடரே - செழுஞ்சுடரே, மணிமன்றுள் ஆடிய மாணிக்கமே - ரத்நசபையில் நடனஞ்செய்கின்ற மாணிக்கமே, உன்னை அன்றி - உன்னையல்லாமல், துணையார் - எனக்குத் துணையாவார் யாவர், உறவு யார் - உறவாவார் யாவர், கதி ஆர் - புகலிடமாவார் யாவர், (ஒருவருமில்லை ஆதலால்) நீ எனக்கு இன் அருள்செய்வது என்று - நீ எனக்கு இன்அருள் புரிவது எக்காலம்—எ - று.

'மணிமன்றுளாடிய மாணிக்கமே' என்றார் மணிக்கும் மாணிக்கத்துக்கும் ஒற்றுமை யுண்மையான். மணிமன்று அழகிய சபையெனினுமாம்.

**68.** அருளெ லாந்திரண் டோர்வடி வாகிய
பொருளெ லாம்வல்ல பொற்பொது நாதவென்
மருளெ லாங்கெடுத் தேயுள மன்னலால்
இருளெ லாமிரிந் தெங்கொளித் திட்டதே.

இ - ள். அருள் எல்லாம் திரண்டு ஒரு வடிவு ஆகிய - அருள் முழுதுங்கூடி யொருவடிவு கொண்டிருக்கிற, பொருள் எல்லாம் வல்ல - எல்லாப்பொருள்களையும் படைத்தளித் தழிக்க வல்ல, பொன் பொதுநாத - கனக சபாபதியே, என் மருள் எல்லாம் கெடுத்து - என் மயக்க முழுதுங் கெடச்செய்து, உள்ளம் மன்னலால் - என்னுள்ளத்தில் நீ நிலைபெற்றிருத்தலால், இருள் எல்லாம் - அஞ்ஞான விருள்முழுதும், இரிந்து - ஓடி, எங்கு ஒளித்திட்டது - எவ்விடத்தோ மறைந்துவிட்டது—எ - று.

ஒளிக்குமுன் இருள் நில்லாதலால், கனக சபாபதிக்குமுன் இருள் நில்லா தொளித்ததென்றற்கு 'பொற்பொதுநாத என் உள்ளம் மன்னலால் இருளெலாமிரிந் தெங்கொளித்திட்டதே' என்றார்.

**69.** எங்கு மென்னை யிகலுற வாட்டியே
பங்கஞ் செய்த பழவினை பற்றற்றால்
அங்க ணாவுன் னடியிணை யன்றியே
தங்க வேறிட முண்டோ சகத்திலே.

இ - ள். எங்கும் - எவ்விடத்தும், என்னை - அடியேனை, இகல் உற வாட்டி - பகை மிக வாடச்செய்து, பங்கம் செய்த - பங்கப்படுத்தின, பழவினை - பழவினையானது, பற்று அற்றால் - தொடக்கற்றுப் போனால், அங்கணா - கருணாநிதியே, உன் அடியிணை அன்றி - உன் னிரு சீர்பாதங்க ளல்லாமல், சகத்தில் - இவ்வுலகத்தில், தங்க - யான் சென்று தங்கி யிருத்தற்கு, வேறு இடம் உண்டோ - வேறிடமுளதோ—எ - று.

பழவினை பற்றற்றால் அங்கணன் திருவடியிற் றங்குதல் கூடுமென்பது கருத்து. தங்குதல் - இளைப்பாறியிருத்தல். பழவினை பற்றறுமளவும் பிறவியாகிய சண்டமாருதத்தி லகப்பட்ட துரும்புபோ லுழல்வது திண்ணமாதலால் இங்ஙனங்கூறினார். "தீராத சுழற்காற்றுற்ற செத்தைபோல்" என்றார் பிறரும்.

**70.** உண்ட வர்க்கன்றி யுட்பசி யோயுமோ
கண்ட வர்க்கன்றிக் காத லடங்குமோ
தொண்ட ருக்கெளி யானென்று தோன்றுவான்
வண்ட மிழ்க்கிசை வாக மதிக்கவே.

இ - ள். உண்டவர்க்கு அன்றி - புசித்தவர்களுக் கல்லது (மற்றையர்க்கு), உள்பசி ஓயுமோ - வயிற்றினுட்பசி யடங்குமோ, கண்டவர்க்கு அன்றி-

கண்டார்க்கல்லது, காதல் அடங்குமோ - (அப்பொருள்மேலுள்ள) ஆசை தீருமோ, வண்தமிழ்க்கு - என்வளவிய தமிழ்ப் பாடலுக்கு, இசைவு ஆக - பொருத்தமாக, மதிக்க - யாவரும் மதிக்கும்படி, தொண்டருக்கு எளியான் - அடியார்க் கெளியவனாகிய எம்மிறைவன், என்று தோன்றுவான் - எப்பொழுது என்னாசை யடங்கும்படி வெளிப்படத் தோன்றுவான்—எ - று.

வான் - மேலாகிய, வண்தமிழ்க்கு - (மூவர் முதலியோருடைய) வளவிய தமிழ் மாலைகளுக்கு, இசை - (தரிக்க) இசைந்திருந்த, வாக - புயங்களையுடையவனே, தொண்டருக்கு எளியானென்று மதிக்க - அடியார்க் கெளியவனென்று உன்னை யாவரும் மதிக்கும்படி, தோன்று - எனக்குப் பிரத்தியக்ஷமாவாய் - என்றுரைத்தலுமாம்.

**71.** மதியுங் கங்கையுங் கொன்றையு மத்தமும்
பொதியுஞ் சென்னிப் புனிதநின் பொன்னடிக்
கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென்
விதியை யெண்ணி விழிதுயி லாதன்றே.

இ - ள். மதியும் - சந்திரனும், கங்கையும் - கங்காநதியும், கொன்றையும் - கொன்றை மலர்மாலையும், மத்தமும் - மத்த மலர்மாலையும், பொதியும் - செறிந்திருக்கிற, சென்னி - சடாபாரத்தை யுடைய, புனித - பரிசுத்தனே, நின் பொன் அடி - உன் திருவடியாகிய, கதியைவிட்டு - புகலிடத்தை விட்டு, இந்தக்காமத்தில் ஆழ்ந்த - இந்தக் காமக்கடலி லழுந்திய, என் விதியை எண்ணி - என் போகூழை நினைத்து, விழி - என்கண், துயிலாது - உறங்காது—எ - று.

நின் பொன்னடிக் கதியைவிட்டிந்தக் காமக்கடலி லழுந்திக்கெடும் விதியை நினைத்து என் கண்ணுறங்குகின்றன வில்லை; ஆதலால் என் கண்ணுறங்கும்படி கிருபை செய்வாய் என்பது கருத்து.

**72.** அன்றெ னச்சொல வாமென வற்புதம்
நன்றெ னச்சொல நண்ணிய நன்மையை
ஒன்றெ னச்சொன வொண்பொரு ளேயொளி
இன்றெ னக்கருள் வாயிரு ளேகவே.

இ - ள். அன்று என சொல்ல - அல்லவென்று சொல்லவும், ஆம் என - ஆம் என்று சொல்லவும், அற்புதம் நன்று எனசொல்ல - ஆச்சரியம் நன்றாயிருக்கிறதென்று சொல்லவும், நண்ணிய - பொருந்தி யிருந்த, நன்மையை - சிறந்தபொருளை, ஒன்று எனசொன்ன - (குருரூபமாகிவந்து) ஒன்றேயென்று என்னைய மறுத்தருளிய, ஒண் பொருளே - மேலான பொருளே, இருள் ஏக - அஞ்ஞான விருளொழியும்படி, இன்று - இப்பொழுது, எனக்கு ஒளி அருள்வாய் - எனக்கு ஞானப்ரகாசத்தைக் கிருபைசெய்வாய்—எ - று.

இருள் ஏக ஒளி அருள்வாய் என்றது ஞானஞ்ஞானங்களுக்குப் பகை யுண்மை நோக்கி.

**73.** இருவ ரேபுகழ்ந் தேத்தற் கினியராம்
ஒருவ ரேதுணை யென்றுண ராய்நெஞ்சே
வருவ ரேகொடுங் காலர்கள் வந்தெதிர்
பொருவ ரேயவர்க் கென்கொல் புகல்வதே.

இ - ள். இருவரே - பிரம விஷ்ணுக்க ளென்பாரிருவரே, புகழ்ந்து ஏத்தற்கு இனியர் ஆம் - புகழ்ந்து துதித்தற் கினியராயிருந்த, ஒருவரே - ஒப்பற்றவரே, துணையென்று - நமக்குத் துணையாவாரென்று, உணராய் - அறியாய், நெஞ்சே - மனமே, கொடுங்காலர்கள் வருவரே - கொடிய யம தூதர்வருவரே, எதிர்வந்து பொருவரே - எதிரில்வந்து நின்று போர் செய்வரே, அவர்க்கு என்புகல்வது - அவர்க்கு யாது சொல்லக்கடவது—எ - று.

இருவரே புகழ்ந்தேத்தற் கினியரா மொருவர் என்றது நெருப்புப் பொருப்பனை.

**74.** புகழுங் கல்வியும் போதமும் பொய்யிலா
அகமும் வாய்மையு மன்பு மளித்தவே
சுகவி லாசத் துணைப்பொரு டோற்றமாங்
ககன மேனியைக் கண்டன கண்களே.

இ - ள். சுகவிலாசம் - இன்பத்தைத் தருகின்ற லீலையையுடைய, துணைப் பொருள் - உயிர்த் துணைப் பொருளாகிய பரமனது, தோற்றம் ஆம் - சேவைக்குரிய, ககனமேனியை - செவ்வானம்போன்ற திருமேனியை, கண்டன கண்கள் - கண்டனவாகிய கண்கள், புகழும் - கீர்த்தியையும், கல்வியும் - கல்வியையும், போதமும் - அறிவையும், பொய் இல்லா அகமும் - பொய்ம்மை யொழிந்த மனத்தையும், வாய்மையும் - சத்தியத்தையும், அன்பும் - அன்பையும், அளித்த - கொடுத்தன—எ - று.

புகழும் கல்வி - புகழப்படுங் கல்வி யெனினுமாம். அன்பிலர்க்கு எவை யிருப்பினும் பயனில வென்பார் அதனை யிறுதியிற் கூறினார். “அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண் - வற்றன் மரந் தளிர்த் தற்று.” எனவும், “அன்பின் வழிய துயிர்நிலை யஃதில்லார்க் - கென்புதோல் போர்த்த வுடம்பு” எனவும் மேலோர் கூறுதலுங் காண்க. புகழ் முதலானவற்றை எனக் கருளிச்செய்த சுகவிலாசத் துணைப்பொருளின் திருமேனியை என் கண்கள் கண்டு களித்தன என இத்திருவிருத்தத்துக்குப் பொருளுரைத்த லுங் கூடும்.

75. கண்ணு ணின்ற வொளியைக் கருத்தினை
விண்ணு ணின்று விளங்கிய மெய்யினை
எண்ணி யெண்ணி யிரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்றொழுந் தெய்வமே.

இ - ள். கண்ணுள் நின்ற ஒளியை - கண்ணின்க ணின்ற பிரகாசத்தை, கருத்தினை - என் கருத்தாயிருப்பதை, விண்ணுள் நின்று விளங்கிய மெய்யினை - பரவெளியினின்று விளங்கிய வுண்மைப் பொருளை, எண்ணி எண்ணி - பலகாலுஞ் சிந்தித்து, இரவும் பகலும் நண்ணுகின்றவர் - இரவினும் பகலினும் இடையறாது அடைந்திருப்பவர், நான்தொழும் தெய்வம் - நான் வணங்கும்படியான தெய்வமாவர்—எ - று.

இறைவனடியாரே யாமிறைஞ்சுந் தெய்வம் என்றார்; இவரையன்றி யவனை யெய்துத லருமை நோக்கி.

76. தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை
நைவ ரென்பது நற்பர தற்பர
சைவ சிற்சிவனே யுனைச் சார்ந்தவர்
உய்வ ரென்பதும் யானுணர்ந் தேனுற்றே.

இ - ள். வேறு தெய்வம் உளது - வேறு தெய்வம் உண்டு, என்பவர் - என்று சொல்லுவோர், சிந்தை நைவர் என்பதும் - மனம் வருந்துவர் என்பதையும், நல் - சிறந்த, பரம் - மேலாகிய, தற்பர - தற்பரனே, சைவ சிற்சிவனே - சைவ சமய ப்ரதிபாத்யஞான ஞானசுகத்தை யுதவுகின்ற மங்களகரனே, உன்னை சார்ந்தவர் - உன்னை யடைந்தவர்கள், உய்வர் என்பதும் - கடைத் தேறுவார்களென்பதையும், உற்று - ஆராய்ந்தமைந்து, யான் உணர்ந்தேன் - நானறிந்தேன்—எ - று.

தேவத்துவ பூர்த்தியில்லாதவர்க ளாதலால் தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை நைவர் எனவும், அஃதுண்மையால் நற்பர தற்பர சைவ சிற்சிவனே யுனைச்சார்ந்தவர் உய்வர் எனவும், இவற்றை மனமொருங்கி யாராய்ந்தாலன்றித் தோன்றாதாதலால் யானுணர்ந்தே னுற்றே எனவும் கூறினார். சைவம் - சிவசம்பந்தமாகிய சமயம்.

77. உற்ற வேளைக் குறுதுணை யாயிந்தச்
சுற்றமோ நமைக்காக்குஞ் சொலாய் நெஞ்சே
கற்றை வார்சடைக் கண்ணுதல் பாதமே
பற்ற தாயிற் பரசுகம் பற்றுமே.

இ - ள். உற்ற வேளைக்கு - ஒரு விபத்து நேரிட்ட காலத்தில், இந்தச் சுற்றமோ - இந்த வுறவோ, உறு துணை ஆய் - உற்ற துணையாகி, நம்மைக் காக்கும் - நம்மைக் காப்பாற்றும், நெஞ்சே சொல்லாய் - மனமே சொல்

வாய், கற்றை - திரட்சியாகிய, வார் - நீண்ட, சடை - சடாபாரத்தையும், கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுமுடைய பரமசிவனது, பாதமே - திருவடியே, பற்றது ஆயின் - நமக்கு ஆதாரமாகப் பெறுவோமாயின், பரசுகம் பற்றும் - பரமாநந்தம் (நம்மைப்) பற்றும்—எ - று.

துணைவேண்டுவது விபத்துக் காலத்தாதலால் உற்றவேளை என்றதற்கு விபத்து நேரிட்டகாலத்தில் என்று பொருள் கூறலாயிற்று. சுற்றமோ என்னும் ஒகாரம் எதிர்மறை.

78. பற்ற லாம்பொரு ளேபரம் பற்றினல்
உற்ற மாதவர்க் குண்மையை நல்குமே
மற்றும் வேறுள மார்க்க மெலாமெடுத்
தெற்று வாய்மன மேகதி யெய்தவே.

இ - ள், பற்றினல் - ஆசிரயித்தால், உற்றமாதவர்க்கு - மிக்க தபோதனர்க்கு, உண்மையை நல்கும் - உண்மை நிலையாகிய மோக்ஷத்தைக் கொடுக்கும், (ஆதலால்) பரம் - பரம்பொருளானது, பற்றலாம் பொருளே - ஆசிரயிக்கலாம் பொருளே, மனமே - நெஞ்சமே, கதி எய்த - மோக்ஷத்தையடைதற்காக, மற்றும் வேறு உள்ள மார்க்கம் எல்லாம் - இதையன்றி வேறுயுள்ள பொய்ந்நெறிகளை யெல்லாம், எடுத்து எற்றுவாய் - எடுத்தெறியக்கடவாய்—எ - று.

மேலைத் திருவிருத்தத்திற் பற்றதாயிற் பரசுகம் பற்றும் என்றார். அது பற்றப்படும் பொருளோ அன்றோ என்னும் ஆசங்கையை நீக்குதற்கு இத் திருவிருத்தத்தில் 'பற்றலாம் பொருளே' என்றார்.

## ஆரணம்.

1. ஆரண மார்க்கத் தாகம வாசி
யற்புத மாய்நடந் தருளும்
காரண முணர்த்துங் கையுநின் மெய்யும்
கண்கண்மூன் றுடையவென் கண்ணே
பூரண வறிவிற் கண்டில மதனாற்
போற்றியிப் புந்தியோ டிருந்து
தாரணி யுள்ள மட்டுமே வணங்கத்
தமியனேன் வேண்டிடத் தகுமே.

இ - ள். கண்கள் மூன்று உடைய - முக்கண்களையுடைய, என் கண்ணே - என் கண்ணே, ஆரணமார்க்கத்து - வேதவீதியில், ஆகமவாசி - ஆகமக்குதிரை, அற்புதம் ஆய் - ஆச்சர்யகரமாய், நடந்தருளும் காரணம் -

நடந்தருள்கின்ற காரணத்தை, உணர்த்தும் - அறிவியாநின்ற, நின் கையும் மெய்யும் - உன் கையையும் மெய்யையும், பூர்ண அறிவின் - முற்றுணர்வி னால், கண்டிலம் - காண்டலே யுடையே மல்லேம், அதனால் - ஆதலால், தாரணி உள்ளமட்டும் - உலகத்தி லுள்ளளவும், போற்றி - வாயினால் புகழ்ந்து, இப்புந்தியோடு இருந்து - இந்த மன நிலையோடிருந்து சிந்தித்து, வணங்க - காயத்தினால் வணங்க, தமியனேன் வேண்டிடத்தகும் - தமியேன் விரும்பத்தகும்—எ - று.

காரண முணர்த்துங் கை - சிந்முத்திரைக் கை. மெய் - திவ்யதேஹம். இவற்றைப் பூரண ஞானசமாதியில் காண்ட லரிதாகலால், பூரண வறிவிற் கண்டிலம் எனவும், சகளமாய்க் கண்டு களிக்க விருப்பமுடையராதலால், 'போற்றி யிப்புந்தியோடு இருந்து வணங்கத் தமியனேன் வேண்டிடத்தகும்' எனவுங்கூறினார். போற்றிஎன்றதனால் வாக்கும், புந்தி என்றதனால் மனமும், வணங்க என்றதனால் காயமும் பெறப்பட்டன. 'ஆரணமார்க்கத்து ஆகம வாசி நடந்தருளும்' என்றதனால் வேத*நெறியில் ஆகமம் அமைந்து நடப்ப தென்பதூஉம், வேதத்தினும் ஆகமம் தமக்குச் சிறந்த பிரமாண மென்ப தூஉம் போந்தவாறு காண்க. ஆகமம் - பசு பதி பாச லக்ஷணங்களைப் பிரதி பாதிப்பது என்னும் பொருளது. சச்சிதாநந்தம் என்னும் அத்துவித சித்தாந்த தத்துவத் திரயத்தையுடைய இவர் ஆகமம் என்னும் சைவ சித்தாந்த தத்துவத்திரயத்தை யிங்ஙனஞ் சிறந் தோதுவது அசங்கத மன்றோ வெனின், அன்று; என்னை? சச்சிதாநந்தமும் ஆகமும் சொல்வேறு பாட்டன வன்றிப் பொருள் வேறு பாட்டன அன்மையானும், இவர் பலவிடத்தும் சைவ சமயாநு குணமாகிய ஆகம சித்தாந்தத்தையே சிறந் தோதலானு மென்க. ஆரணம் நான்கு. அவை:—இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம் என்பன. தைத்திரியம் என்பதை யஜுர்வேத மென்றும், அதர்வணம் என்பதை அதர்வசிரசு என்றுங் கூறுவர். ஆகமம் உஅ. அவை:—காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிசுவாசம், சுவாயம்புவம், அனலம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தாந சருவோத்தம், பாரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுளம் என்பன.

**2.** இடமொரு மடவா ளுலகனைக் கீந்திட்
டெவ்வுல கத்தையு மீன்றும்
தடமுறு மகில மடங்குநா ளம்மை
தன்னையு மொழித்து விண் ணனவே
படருறு சோதிக் கருணையங் கடலே
பாயிருட் படுகரிற் கிடக்கக்

கடனதோ நினைப்பு மறப்பெனுந் திரையைக்
கவர்ந்தெனை வளர்ப்பதுன் கடனே.

இ - ள். இடம் - இடப்பாகத்தை, ஒரு மடவாள் - ஒப்பற்ற மடப்பத்தை யுடையாளாகிய, உலகு அன்னைக்கு - லோகமாதாவாகிய உமாதேவிக்கு, ஈந்திட்டு - கொடுத்துவிட்டு, எவ்வுலகத்தையும் ஈன்றும் - எல்லாவுலகங்களையும் படைத்தும், தடம் உறும் - பெருமை பொருந்திய, அகிலம் - உலகங்கள், மடங்கும் நாள் - அழியுங் காலத்தில், அம்மை தன்னையும் ஒழித்து - அவ் வுமாதேவியையும் லயப்படுத்திக் கொண்டு, விண் என - ஆகாயம்போல, படர் உறுசோதி - எங்கும் பரவியிருக்கிற பேரொளியாகிய, கருணை கடலே - கிருபா சமுத்திரமே, பாய் - பரவாநின்ற, இருள் - அஞ்ஞான இருளையுடைய, படுகரில் - பிறவிக்கடலில், கிடக்கக் கடனோ - வீழ்ந்து வருந்தக்கடனோ, நினைப்பு மறப்பு என்னும் திரையை - நினைப்பு மறப்பு என்னும் அலைகளை, கவர்ந்து - உன்னிடத் தடக்கிக்கொண்டு, என்னை வளர்ப்பது - என்னை வளர்த்தல், உன் கடன் - உன் கடன்மையாம்—எ - று.

அகிலம் அடங்கும் எனப் பிரிப்பினு மிழுக்காது. ஒளியை யடுத்தோர்க்கு இருளிற் கிடத்தல் தகாதென்பார் 'படருறுசோதிக் கருணையங்கடலே பாயிருட் படுகரிற் கிடக்கக்கடனதோ' என்றார். நினைப்பு மறப்பு - சகல கேவலங்கள். திரை என மேல்வருதலால் படுகர் கடலை யுணர்த்திற்று.

**3.** வளம்பெறு ஞான வாரிவாய் மடுத்து
மண்ணையும் விண்ணையுந் தெரியா
தளம்பெறுந் துரும்பொத் தாவியோ டாக்கை
யானந்த மாகவே யலந்தேன்
களம்பெறு வஞ்ச நெஞ்சினர் காணுக்
காட்சியே சாக்ஷியே யறிஞர்
உளம்பெறுந் துணையே பொதுவினி னடிக்கு
முண்மையே யுள்ளவா றிதுவே.

இ - ள். வளம்பெறும் - வளம்பொருந்திய, ஞானவாரி - ஞானப்ரவாஹத்தை, வாய்மடுத்து - வாயாற்பருகி, மண்ணையும் விண்ணையும் தெரியாது - பூமியையும் ஆகாயத்தையு முணராமல், அளம்பெறும் துரும்பு ஒத்து - கடற்றுரும்பை யொத்து, ஆவியோடு ஆக்கை - உயிருடம்புகள், ஆநந்தமாக - இன்புருவாக, அலந்தேன் - வருந்தினேன், கள்ளம்பெறு - கள்ளங்கொண்ட, வஞ்ச நெஞ்சினர் - வஞ்சக மனத்தினர், காணு - காணக்கூடாத, காட்சியே - திவ்ய சேவையே, சாட்சியே - சாக்ஷி பூதமே, அறிஞர் உள்ளம் பெறும் துணையே - ஞானிகள் நெஞ்சை யிடமாகப் பெற்ற என்னுயிர்த்துணையே, பொதுவினில் நடிக்கும் - அம்பலத்தில் நடனஞ் செய்

கின்ற, உண்மையே - மெய்ப்பொருளே, உள்ள ஆறு இதுவே - உன்னிலை உள்ளபடி யிதுதான்—எ - று.

வஞ்ச நெஞ்சினர் காணுக்காட்சி என்றும், அறிஞர் உளம் பெறுந்துணை என்றும் கூறி, பொதுவினி னடிக்கு முண்மையே எனக்கூறினார். வஞ்சநெஞ்சினர்க்கும் அறிஞர்க்கும் அங்ஙனமாயினும் தன்னளவிற் பொது நோக்குள்ளாரென்பது தோன்ற, இது "வீட்டுக்கு வாயிலெனுந் தொடைசாத்து சொல்வேந்த பொது-வாட்டுக்கு வல்லனொருவற்கு ஞானவமுதுதவி - நாட்டுக்கிலாத குடர்நோய் நினக்கு முன் னல்கினு மென் - பாட்டுக்கு நீயுமவனு மொப்பீரெப்படியினுமே" எனப்பிறர் கூறுதலானு முணர்க.

4. உள்ளமே நீங்கா வென்னைவா வாவென்
 றுலப்பிலா வானந்த மான
வெள்ளமே பொழியுங் கருணைவான் முகிலே
 வெப்பிலாத் தண்ணருள் விளக்கே
கள்ளமே துரக்குந் தூவெளிப் பரப்பே
 கருவெனக் கிடந்தபாழ் மாயப்
பள்ளமே வீழா தென்னைக்கரை யேற்றிப்
 பாலிப்ப துன்னருட் பரமே.

இ - ள். உள்ளமே - என் மனோரூபமா யிருப்பவனே, நீங்கா என்னை - உன்னை விட்டுப் பிரியாத என்னை, வா வா வென்று - வருவாய் வருவா யென்றழைத்து, உலப்பு இல்லா - கெடுத லில்லாத, ஆநந்தமான - இன்பமாகிய, வெள்ளமே - மழையையே, பொழியும் - சொரிகின்ற, வான் - மேலாகிய, கருணை முகிலே - கிருபா மேகமே, வெப்பு இல்லா - சூடில்லாத, தண் - குளிர்ச்சி பொருந்திய, அருள் விளக்கே - அருட்டீபமே, கள்ளம் - வஞ்சனையாகிய விருளை, துரக்கும் - ஓட்டுகின்ற, தூ - பரிசுத்த மாகிய, வெளிப்பரப்பே - ஒளிப்பரப்பே, கரு எனக்கிடந்த - கர்ப்பமென்று சொல்லக்கிடந்த, பாழ் - சூனியத்தன்மையுள்ள, மாயப்பள்ளம் வீழாது - மாயைக் கடலில் விழுந்தழியாமல், என்னைக் கரை ஏற்றிப் பாலிப்பது - என்னை முத்திக்கரையி லேறவிட்டுப் பாதுகாப்பது, உன் அருள்பரம் - உன் திருவருட்குப் பாரமாம்—எ - று.

உள்ளமே நீங்கா என்பதற்கு, என் மனத்தை விட்டுப் பிரியா திருந்து கொண்டு என்றுரைத்தலும் கூடும். உலக விளக்கை வேறுபடுத்த 'வெப்பிலாத் தண்ணருள் விளக்கே' என்றார். மாயப்பள்ளம் என்றது பிறவியை யாதலால், கரையென்றது முத்தியாதல் பெறப்பட்டது. முத்தி - விடுகை. பிறவிச்சிறையை விட்டொழிதல் என்பதாம். மோக்ஷம், வீடு என்பனவும் இப்பொருளனவே.

**5.** பரம்பர மாகிப் பக்குவம் பழுத்த
பழவடி யார்க்கருள் பழுத்துச்
சுரந்தினி திரங்குந் தானகற் பகமே
சோதியே தொண்டனே னின்னை
யிரந்துநெஞ் சுடைந்து கண்டுயில் பெறும
லிருந்தது மென்கணி லிருட்டைக்
கரந்துநின் கண்ணுற் றுயில்பெறல் வேண்டிக்
கருதினேன் கருத்திது தானே.

இ - ள். பரம் பரம் ஆகி - மேன்மையினு மேன்மையாகி, பக்குவம் பழுத்த - பக்குவ முதிர்ந்த, பழ அடியார்க்கு - பழமையாகிய தொண்டர்க்கு, அருள் பழுத்து - அருட்கனி பழுத்து, சுரந்து இனிது இரங்கும் - இன்பத்தேன் சுரந்து இனிதாக இரங்குகின்ற, தான கற்பகமே - கொடையிற் சிறந்த கற்பகத்தருவே, சோதியே - ஒளியே, தொண்டனேன் - தொழும்பனுகிய நான்; நின்னை இரந்து - உன்னைப் பிரார்த்தித்து, நெஞ்சு உடைந்து - (நீ என் பிரார்த்தனைக்கிரங்காமையால்) நெஞ்சங் கலங்கி, கண் துயில் பெறுமல் இருந்ததும் - கண்ணுறக்கங் கொள்ளா திருந்ததையும், என் கண்ணில் இருட்டைக் கரந்து - என் கண்ணிலுள்ள இருளையும் மறைத்து, நின் கண்ணுல் - உன் (திருவருட்) கண்கொண்டு, துயில் பெறல் - துயில் கோடலை, வேண்டி - விரும்பி, கருதினேன் - நினைத்தேன், கருத்து இதுதான் - என்னுள்ளக்கருத்திதுவே—எ - று.

மேல் கற்பகம் என வருதனுேக்கி அருள் பழுத்து என்பதற்கு அருட்கனி பழுத்து என்றுரைக்கலாயிற்று. பக்குவம் பழுத்தமை யுணர்தற் கருவி சோதியாயிற்று. பழவடியார் என்ருர்; சீவர்களெல்லாம் அநாதியே இறைவற் கடிமைகள் என்னு முறைமை நோக்கி. பக்குவம் பழுத்தலாவது - தீவிர தர பக்குவத்தை யடைந்திருத்தல்.

**6.** கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்துங்
காரணங் கண்டுசும் மாதான்
வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம்
வருந்தினேன் மதியின்மை தீர்ப்பாய்
ஒருத்தரா ருளப்பா டுணர்பவர் யாவ
ருலகவர் பன்னெறி யெனக்குப்
பொருத்தமோ சொல்லாய் மௌனசற் குருவே
போற்றிநின் பொன்னடிப் போதே

இ - ள். கருத்தினுள் கருத்தாய் இருந்து - அறிவுக் கறிவாயிருந்து, நீ உணர்த்தும் காரணம் கண்டு - நீ யறிவிக்குங் காரணத்தை நோக்கி, சும்மா

வருத்தம் அற்று இருந்து - சும்மா வருத்த மில்லாமலிருந்து, சுகம் பெறு வண்ணம் - இன்ப மடையாத வகையாய், வருந்தினேன் - வருத்த மடைந் தேன், மதியின்மை - என தறிவின்மையை, தீர்ப்பார் - நீக்குவோராகிய, ஒருத்தர் - ஒப்பற்றோர், ஆர் - யார், உள்ளப்பாடு - என் சிந்தாகுலத்தை, உணர்பவர் யாவர் - அறிவார் யார், உலகவர் - லோகத்தாருடைய, பல் நெறி - பல மார்க்கங்கள், எனக்குப் பொருத்தமோ - எனக்குப் பொருத்த மாகுமோ, சொல்லாய் - சொல்லுவாய், மௌன சற்குருவே - மௌன நிலை யையுடைய சதாசாரியனே, நின் பொன்னடிப்போது - நின் திருவடித் தாமரைகட்கு, போற்றி - நமஸ்காரம்—எ-று.

உலகத்தாருடைய பலவழிகள் எனக்குப் பொருந்தவில்லை. என்னறி யாமையை நீக்கி யாள்வா ரொருவரு மிலர். ஆதலால் நமஸ்கரிக்கிறேன்; என்னறியாமையை நீக்கியாளவேண்டு மென்பதாம்.

7. அடியெனு மதுவு மருளெனு மதுவு
மறிந்திடி னிர்க்குண நிறைவும்
முடியெனு மதுவும் பொருளெனு மதுவு
மொழிந்திடிற் சுகமன மாயைக்
குடிகெட வேண்டிற் பணியற நிற்றல்
குணமெனப் புன்னகை காட்டிப்
படிமிசை மௌனி யாகிநீ யாளப்
பாக்கிய மென்செய்தேன் பரனே.

இ - ள். அடியெனும் அதுவும் - ஆதியென்று சொல்லப்படுகிற அந்த ப்பொருளும், அருள் என்னும் அதுவும் - அருளென்று சொல்லப்படுகிற அந்தப்பொருளும், அறிந்திடின் - அறியுமிடத்து, நிர்க்குண நிறைவும் - நிர்க்குணவஸ்துவின் பூர்ணத்வமும், முடி எனும் அதுவும் - அந்தம் என்று சொல்லப்படுகிற அந்தப் பொருளும், பொருள் என்னும் அதுவும் - (இவைகளற்றவிடத்துக் கோசரிக்கிற) பரம்பொருள் என்று சொல்லப்படு கிற அந்தப்பொருளும், மொழிந்திடின் - சொல்லுமிடத்து, சுகம் மன்ன - இன்பம் பொருந்தவேயாம், மாயை குடிகெட வேண்டின் - மாயையானது குடிவிட்டோட விரும்பினால், பணி அற நிற்றல்-தொழிலற நிற்பதே, குணம் என - குணமாமென்று சொல்லி, புன்னகை காட்டி - புன் முறுவல்செய்து, படிமிசை - உலகின்மேல், மௌனி ஆகி - மௌன குருவாகி வந்து, நீ ஆள - நீ என்னைத் தடுத்தாட்கொள்ள, என் பாக்கியம் செய்தேன் - என்ன பாக்கி யம் பூர்வத்தில் பண்ணினேன், பரனே - மேலானவனே—எ - று.

'அடியெனு மதுவும் அருளெனு மதுவும் அறிந்திடி னிர்க்குண நிறைவு, முடியெனு மதுவும் பொருள் எனு மதுவும் ஒழிந்திடின் சுகம் மனமாயைக் குடிகெடவேண்டின் பணி அற நிற்றல் குணம்' என மூன்று தொடராகப் பிரித்து, முறையே முதற் பொருளையும் அப்பொருளின் அருளையும் அறியின் நிர்க்குண நிறைவுண்டாம்; அந்தத்தையும் அந்தத்திற் கிடைக்கும் அழியாப் பொருளையும் வேறுபடுத்த லொழியின் சுகமுண்டாம்; மனத்தின்கட் குடிகொண்டிருக்கும் மாயையானது கெட்டொழிய வேண்டினால் தொழிலற நிற்பதே குணம் எனப் பொருளுரைத்தலுங் கூடும். பணி அற நிற்றல் என்றது சும்மா விருத்தலை. என்செய்தேன் என இறந்த காலத்தாற் கூறினமையால், பூர்வம் என்பது பெறப்பட்டது.

**8.** என்செய லின்றி யாவுநின் செயலென்
றெண்ணுவே னெவ்வொரு காலம்
புன்செயன் மாயை மயக்கினென் செயலாப்
பொருந்துவே னஃதொரு காலம்
பின்செயல் யாது நினைவின்றிக் கிடப்பேன்
பித்தனே னன்னிலை பெறநின்
றன்செய லாக முடித்திடல் வேண்டுஞ்
சச்சிதா னந்தசற் குருவே.

இ - ள். என் செயல் இன்றி - என் செயலில்லாமல், யாவும் - எல்லாம், நின் செயல் என்று - உன் செயலா மென்று, ஒவ்வொரு காலம் எண்ணுவேன் - மாயா மயக்க மொழிய நின்ற ஒவ்வொரு காலம் சிந்தியாநிற்பேன், அஃது - அதனை, ஒரு காலம் - ஒருகாலத்தில், புன் செயல் - புன் செய்கையையுடைய, மாயை மயக்கின் - மாயா மயக்கத்தால், என் செயல் ஆ பொருந்துவேன் - என் செயலாகக்கொண்டு அமைந்திரா நிற்பேன், பின் - அதன் மேல், செயல் - நின் செயல் என் செயல்களை, யாதும் - சிறிதாயினும், நினைவு இன்றி - நினைத்தலில்லாமல், கிடப்பேன் - அசைவறக் கிடவா நிற்பேன், பித்தனேன் - (இவ்வாறு ஒருகாலைக் கொருகால் மாறுபடா நிற்பதனால்) பித்தனென்று அறிவுடையோராற் சொல்லப்பட்டேனென், (ஆதலால்) நல் நிலைபெற - (இப்பெயர் எனக்கின்றி யொழிதற்குக் காரணமாகிய) மேலான நிலையைப்பொருந்த, நின் தன் செயல் ஆக - உனது செய்கையாகிய ஆட்கோடல் உண்டாக, முடித்திடல் வேண்டும் - முடிவு செய்யத் தரும், சச்சிதாநந்த சற்குருவே - சச்சிதாநந்த ரூபியாகிய சதாசாரியனே—எ - று,

எண்ணுவேன், பொருந்துவேன், கிடப்பேன் என்பன ஈண்டு எதிர்வு கருதாது நிகழ்வு கருதி நின்றன. வேண்டும் என்பது தகுதிப்பொருட்டு.

**9.** குருவுரு வாகி மௌனியாய் மௌனக்
 கொள்கையை யுணர்த்தினை யதனாற்
கருவுரு வாவ தெனக்கிலை யிந்தக்
 காயமோ பொய்யெனக் கண்ட
திருவுருவாள ரனுபவ நிலையுஞ்
 சேருமோ வாவலோ மெத்த
அருவுரு வாகி யல்லவாய்ச் சமய
 மளவிடா வானந்த வடிவே.

இ - ள். குருவுரு வாகி - ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளி, மௌனி ஆய் - (அதிலும்) மௌனியாகி யிருந்து, மௌனக் கொள்கையை - மௌன நிலையின் மேலான தன்மையை, உணர்த்தினை - எனக் கறிவித்தாய், அதனால் - அந்தக் காரணத்தால், எனக்கு - அடியேனுக்கு, கரு வுரு ஆவது இல்லை - கருப்பத்தில் உருக்கோடல் இனி யில்லை, (ஆயினும்) இந்தக்காயமோ - இந்தச் சரீரமோ, பொய்யெனக் கண்ட - பொய்யெனப் பிரத்தியக்ஷமாகக் கண்ட, திரு வுருவாளர் - சிவானுபூதிச் செல்வமே யுருவாகக் கொண்ட அறிஞரது, அநுபவ நிலையும் - அநுபோக நிலையும், சேருமோ - எனக்குச் சித்திக்குமோ, ஆவலோ மெத்த - (அவ்வநுபவ நிலை சேருமோ வென்கிற) பேராசையோ மிகுதியாயிருக்கின்றது, அரு உரு ஆகி - அருவுருவங்களாகி, அல்ல ஆய் - அவைக ளல்லவாகி, சமயம் - சமயநூல்களால், அளவு இடா - அளவுபடுத் துரைக்கக்கூடாத, ஆநந்த வடிவே - இன்பவுருவே—எ - று.

குருவுரு வாதல், மௌனி ஆதல், மௌனக் கொள்கையை யுணர்த்துதல் என்பன முறையே ஒன்றற்கொன் றேற்ற முள்ளனவாதலால், இது முறையின் வைப்பு என்னும் உத்தி. அரு, உரு, அல்ல என நிற்றலால், சமயமளவிடா வானந்த வடிவாயிற்று.

**10.** வடிவிலா வடிவாய் மனநினை வணுகா
 மார்க்கமாய் நீக்கருஞ் சுகமாய்
முடிவிலா வீட்டின் வாழ்க்கைவேண் டினர்க்குன்
 மோனமல் லால்வழி யுண்டோ
படியிரு ளகலச் சின்மயம் பூத்த
 பசுங்கொம்பை யடக்கியோர் கல்லா
லடியிலே யிருந்த வானந்த வரசே
 யன்பரைப் பருகுமா ரமுதே.

இ - ள். வடிவு இலா வடிவு ஆய் - உருவிலா வுருவாகி, மன நினைவு அணுகா மார்க்கம் ஆய் - மனக்கருத் தணுகப்பெறாத நெறியாகி, நீக்கு அரு சுகம் ஆய் - இடையீடில்லாத இன்பமாகி, முடிவு இலா - நாசம் இல்லாத,

வீட்டின் - மோக்ஷ நிலையின், வாழ்க்கை - வாழ்க்கையை, வேண்டினர்க்கு - விரும்பினோர்க்கு, உன் மோனம் அல்லால் - உன் மௌனநிலையே வழியாவ தன்றி, வழிஉண்டோ-(வேறு) மார்க்க முளதோ, படி இருள் அகல - உலகத்தி லுள்ள அஞ்ஞான விருள் ஒழிய, சின் மயம் பூத்த பசுங்கொம்பை அடக்கி - ஞான மயமாகிய மலர்களைப் பூத்த பசுமையாகிய கொடியை யுள்ளடக்கி க்கொண்டு, ஓர் கல்லால் அடியிலே யிருந்த - ஒரு கல்லால மர நிழலில் தக்ஷிணாமூர்த்தமாய் எழுந்தருளி யிருந்த, ஆனந்த அரசே - இன்பத்தை யுதவும் அருள் வேந்தே, அன்பரை - பத்தி செய்வாரை, பருகும் - பருகு கின்ற, ஆர் அமுதே - அரிய அமுதமே—எ - று.

படி - படிந்த எனினுமாம். படி யிருள் அகல சின்மயம் பூத்த பசுங் கொம்பு என்பதற்கு, அஞ்ஞானாந்தகாரம் நீங்க, உலகங்களை, ஞானவடிவினு லுண்டாக்கிய பசும் பூங்கொம்பை யொப்பாளாகிய வுமாதேவி என்றுரை ப்பினுமாம். அடக்கி என்றது மறைத்தென்றவாறு. தக்ஷிணாமூர்த்தியாகிக் கல்லாலினீழலி லெழுந்தருளி யிருந்து சநகாதி நால்வர்க் குபதேசித்த கால த்துத் தனித்திருந்தமை தோன்ற இவ்வாறு கூறினர். "சிவமெனும் பொருளு மாதி சத்தியொடு சேரி னெத் தொழிலும் வல்லதா, மிவள் பிரிந்திடி னியங்குதற்குமரி தரிதெனுமறையிரைக்கும்" என்பதனால், அகற்றியென்னாது அடக்கி என்றார். அன்பரை - அன்பரால் எனவும், அன்பரை என்பதில் ஐ சாரியையென் றொழித்து அன்பர் பருகும் எனவும் கூறலாம். பருகுதல் தன்வயமாக்கிக்கோடல்.

---

## சொல்லற்கரிய.

**1.** சொல்லற் கரிய பரம்பொருளே
சுகவா ரிதியே சுடர்க்கொழுந்தே
வெல்லற் கரிய மயலி லென்னை
விட்டெங் கொளித்தாயா கெட்டேன்
கல்விற் புசிய நாருரித்துக்
கடுகிற் பெரிய கடலடைக்கும்
அல்லிற் கரிய வந்தகனுக்
காளாக் கினையோ வறியேனே.

இ - ள். சொல்லற்கு அரிய - (அறவறமாகிய காரணவகையாற் கூறப் படுவதன்றி) இலக்கண வகையாற் கூறுதற்கரிய, பரம் பொருளே - மேலா கிய பொருளே, சுகவாரிதியே - ஆநந்த சாகரமே, சுடர்க் கொழுந்தே - சோதிக் கொழுந்தே, வெல்லற்கு அரிய - (உன்னை யடையாதவர்களால்) வெல்லற் கரிதாகிய, மயலில் - மயக்கத்தில், என்னை விட்டு - என்னை விடு

த்து, எங்கு ஒளித்தாய் - எவ்விடத்து மறைந்தனை, கல்லில் - கல்லினிட த்து, பசிய நார்உரித்து-பசுமையாகிய நாரை யுரித்து, கடுகில் - (சிறிய) கடுகி னிடத்து, பெரிய கடல் அடைக்கும் - பெரிய கடலை யடைத்தலில் வல்ல ளுன, அல்லின் கரிய - இரவினுங் கரியனுன, அந்தகனுர்க்கு - யமனுர்க்கு, ஆளாக்கினையோ - அடிமையாக்கினுயோ, அறியேன்-உணர்கிலேன் —எ-று.

ஆ கெட்டேன் என்பது வியப்புப் பொருடருவதோ ரிடைச்சொல். கல்லில் நார் உரித்தல் முதலியன சமர்த்தனென்பதை அறிவுறுத்தற் கெழுந் தன. அல்லின் என்பதில் இன் ஒப்புப்பொருளெனக் கோடலுமாம்.

2. அறிவிற் கறிவு தாரகமென்
றறிந்தே யறிவோ டறியாமை
நெறியிற் புகுதா தோர்படித்தாய்
நின்ற நிலையுந் தெரியாது
குறியற் றகண்டா தீதமயக்
கோதி லமுதே நினைக்குறுகிப்
பிறிவற் றிருக்க வேண்டாவோ
பேயேற் கினிநீ பேசாயே.

இ-ள். அறிவிற்கு - சீவபோதத்திற்கு, அறிவு - சிவபோதம், தார கம் என்று அறிந்து - ஆதாரமென்றுணர்ந்து, அறிவோடு அறியாமை நெறி யில் புகுதாது - அறிவறியாமைகளாகிய மார்க்கத்திற் பிரவேசியாமல், ஓர் படித்தாய் - ஒரு தன்மைத்தாகி, நின்ற நிலையும் - நின்ற நிலையையும், தெரி யாது - உணர்கிலாது, குறி அற்று - அடையாளமற்று, அகண்ட அதீத மயம் - அகண்டாதீதமயமாகிய, கோது இல் - குற்றமற்ற, அமுதே - அமிர் தமே, நின்னை குறுகி - உன்னை யடைந்து, பிறிவு அற்று இருக்க வேண் டாவோ - நீக்கமற் றிருக்கவேண்டாவோ, பேயேற்கு - பேயேனுக்கு, இனி - இனியாயினும், நீ பேசாய் - நீ சொல்லாய்—எ - று.

இதுவரையில் சொல்லா தொழிந்தனையாயினும், உனக் காட்பட்ட இக் காலத்தாயினும் சொல்லாய் என்பது கருத்து. இனி யென்றது நிகழ்வின் கண்ணது. இது "பண்டறியேன் கூற்றென் பதனை யினி யறிந்தேன் பெண்டகையாற் பேரமர்க் கட்டு" என்னுந் திருக்குற ளுரையால் விசத மாகும்.

3. பேசா வனுபூதியை யடியேன்
பெற்றுப் பிழைக்கப் பேரருளால்
தேசோ மயந்தந் தினியொருகால்
சித்தத் திருளைத் தீர்ப்பாயோ

பாசா டவியைக் கடந்தவன்பர்
பற்று மகண்டப் பரப்பான
ஈசா பொதுவில் நடமாடும்
இறைவா குறையா வின்னமுதே.

இ - ள். பாச அடவியை கடந்த - ஆசையாகிய காட்டைக்கடந்த, அன்பர் - பத்தர்கள், பற்றும் - பற்றுகின்ற, அகண்டப்பரப்பு ஆன - கண்டிக்கப் படாத பெரும் பரப்பாகிய, ஈசா - ஈசனே, பொதுவில் - அம்பலத்தில், நடம் ஆடும் - நடிக்கின்ற, இறைவா - தலைவனே, குறையா - (கொள்ளக்) குறையாத, இன் அமுதே - இனிய அமிர்தமே, பேசா அநுபூதியை - பேசாமைக்குக் காரணமாகிய சிவானுபூதியை, அடியேன் பெற்று பிழைக்க - அடியேன் பெற்று உய்யுமாறு, பேரருளால் - பெருங் கருணையால், தேசோமயம் தந்து - உனது தேஜோமயத்தைக் கொடுத்து, இனி ஒருகால் - இனி யோர்தரம், சித்தத்து இருளும் தீர்ப்பாயோ - என் மன விருளையும் நீக்குவாயோ—எ - று.

"ஆசா நிகளந் துகளா யினபின் - பேசா வநுபூதி பிறந் ததுவே" என்றார் மேலோரும். இரு ளொழிவுக்கு ஒளி வேண்டப் படுதலால், 'தேசோமயந் தந்து சித்தத்திருளுந் தீர்ப்பாயோ' என்றார்.

4. இன்பக் கடலிற் புகுந்திடவா
ளிரவும் பகலுந் தோற்றுமல்
அன்பிற் கரைந்து கரைந்துருகி
யண்ணு வரசே யெனக்கூவிப்
பின்புற் றழுஞ்சே யெனவிழிநீர்
பெருக்கிப் பெருக்கிப் பித்தாகித்
துன்பக் கடல்விட் டகல்வேனே
சொரூபா னந்தச் சுடர்க்கொழுந்தே.

இ - ள். சொரூப ஆநந்தம் - ஸ்வஸ்வரூபானந்தமாகிய, சுடர்க்கொழுந்தே - ஒளிச்சிகையே, இன்பக் கடலில் - ஆநந்த சாகரத்தில், புகுந்திடுவான் - பிரவேசித்தற் பொருட்டு, இரவும் பகலும் தோற்றுமல் - அல்லும் பகலும் காணுமல், அன்பின் - அன்பினுல், கரைந்து கரைந்து உருகி - சரீரந் தளர்ந்து மனமிளகி, அண்ணு - அப்பா, அரசே - அரசனே, என கூவி - என்றழைத்து, பின்பு உற்று அழும் - பின் றொடர்ந்தழாநின்ற, சேய் என - குழந்தையைப்போல, விழி நீர் - கண்ணீரை, பெருக்கி பெருக்கி - மிகவும் பெருகச்செய்து, பித்து ஆகி - பித்தாகி, துன்பக் கடல்விட்டு - துன்பக் கடலை விட்டு, அகல்வேனே - நீங்குவேனே—எ - று.

துன்பக் கடல்விட்டு இன்பக் கடலிற் புகுவேனோ என்பது கருத்து. இன்பக் கடலைப் பற்றா நின்று துன்பக்கடல்விட் டகல்வேனோ வெனினு மாம்.

**5.** கொழுந்து திகழ்வெண் பிறைச்சடிலக்
கோவே மன்றிற் கூத்தாடற்
கெழுந்த சுடரே யிமயவரை
யென்றாய் கண்ணுக் கினியானே
தொழுந்தெய் வமுநீ குருவுநீ
துணைநீ தந்தை தாயுநீ
அழுந்தும் பவநீ நன்மையுநீ
யாவி யாக்கை நீதானே.

இ - ள். கொழுந்து திகழ் - கொழுந்துவிட்டு விளங்குகின்ற, வெள் பிறை - வெள்ளிய பிறையை யணிந்த, சடிலம் - சடாபாரத்தையுடைய, கோவே - இறைவனே, மன்றில் - அம்பலத்தில், கூத்தாடற்கு - நடஞ்செய் தற்பொருட்டு, எழுந்த (ஆநந்தக் கடலில்) தோற்றஞ்செய்த, சுடரே - ஞாந சூரியனே, இமயவரை - இமயமலையிற் பிறந்த, என் தாய் - என் தாயாகிய வுமாதேவியின், கண்ணுக்கு - கண்களுக்கு, இனியானே - இனிமையா யிருப்பவனே, தொழும் தெய்வமும் நீ - அடியேனால் தொழப்படுகின்ற கட வுளும் நீயே, குருவும் நீ - ஆசாரியனும் நீயே, துணை நீ - சகாயமும் நீயே, தந்தை தாயும் நீ - தந்தை தாய்மாரும் நீயே, அழுந்தும் பவம் நீ - அடியேன் அழுந்திக்கிடக்கிற பவரூபமும் நீயே, நன்மையும் நீ - நன்மையும் நீயே, ஆவி யாக்கை நீதான் - உயிருடம்புகளும் நீயே—எ - று.

'எழுந்த சுடரே என்றது' "இன்பப் புணரி யாதவனாய் நாளும் தோன்றிய விமலபோத சொரூபம்" எனப் பிறர் கூறுதனோக்கி யென்க.

**6.** தானே யகண்டா காரமயந்
தன்னி லெழுந்து பொதுநடஞ்செய்
வானே மாயப் பிறப்பறுப்பான்
வந்துன் னடிக்கே கரங்கூப்பித்
தேனே யென்னைப் பருக வல்ல
தெள்ளா ரமுதே சிவலோகக்
கோனே யெனுஞ்சொன் னினதுசெவி
கொள்ளா தென்னே கூறாயே.

இ - ள். தானே - தானாகவே, அகண்டாகார மயம் தன்னில் எழு ந்து - அகண்டாகாரரூபமாகத் தோன்றி, பொதுநடஞ் செய்வானே - ஐந் தொழிற்கும் பொதுவாகிய நடனஞ்செய்பவனே, மாயப்பிறப்பு அறுப்பான்-

மாயப் பிறவியை யறுத்துக்கொள்வதற்கு, வந்து - வந்து, உன் அடிக்கே - உன் திருவடிகளுக்கே, கரம் கூப்பி - கைகுவித்து, தேனே - தேனே, என்னை பருகவல்ல - என்னைப் பருகவல்லதான, தெள் - தெளிந்த, ஆர் அமுதே - அரிய அமுதமே, சிவலோகக்கோனே - சிவபுரத்துக் கிறைவனே, என்னும் - என்று நானழைக்கிற, சொல் - சொல்லை, நினது செவி கொள்ளாது - உன் திருச்செவியி லேற்றுக்கொள்ளா திருப்பது, என்னே - என்ன காரணத்தினாலோ, கூறாய் - சொல்லாய்—எ - று.

பொதுநடஞ் செய்வானே, ஆரமுதே, சிவலோகக்கோனே என் றிவ்வாறு பலபடியாக நானழைக்கிற சொற்கள் உன் திருச்செவியிற் புகப்பெறாமைக்குக் காரணம் என்னோ வென்பதாம்.

7\. கூறு நின்ற விடர்க்கவலைக்
குடும்பக் கூத்துட் டுளைந்துதடு
மாறு நின்ற பாவியைநீ
வாவென் றழைத்தா லாகாதோ
நீறார் மேனி முக்கணுடை
நிமலா வடியார் நினைவினிடை
யாறாய்ப் பெருகும் பெருங்கருணை
அரசே யென்னை யாள்வானே.

இ-ள். நீறு ஆர் மேனி - திருவெண்ணீறு நிறைந்த திருமேனியையும், முக்கண் - மூன்று கண்களையும், உடை - உடைய, நிமலா - நிர்மலனே, அடியார் நினைவின் இடை - அடியவர் மனத்தின்கண், ஆறு ஆய் பெருகும் - ஆறாகிப் பெருகுகின்ற, பெரு கருணை - பெருங் கருணையையுடைய, அரசே - இறைவனே, என்னை ஆள்வானே - என்னை யாண்டருள்வோனே, கூறு நின்ற - பல வகையாகச் சொல்லப்படுகின்ற, இடர் - பிறவித் துன்பத்திற் கேதுவாகிய, கவலை - வியசநத்தைத் தருகின்ற, குடும்பம் - சம்சாரமாகிய, கூத்துள் - கூத்தாட்டில், துளைந்து - படிந்து, தடுமாறுநின்ற - தடுமாறு கின்ற, பாவியை - பாபிஷ்டனாகிய வென்னை, நீ - நீயே, வாவென்று அழைத்தால் - வாவென் றழைத்தருளினால், ஆகாதோ - உனக்கடாததோ—எ-று.

பிறவித்துன்பங்கள் பல வகையானும் மூளவாதல்பற்றி, கூறுநின்ற என்பதற்கு, பலவகையாகச் சொல்லப்படுகின்ற எனப் பொருளுரைக்கப்பட்டது. ஆகாதோ என்பதில் ஓகாரம் எதிர்மறை, ஆகும் எனப் பொருள் படுதலால்.

8. வானே முதலாம் பெரும்பூதம்
வகுத்துப் புரந்து மாற்றவல்ல
கோனே யென்னைப் புரக்குநெறி
குறித்தா யிலையே கொடியேனைத்
தானே படைத்திங் கென்னபலன்
றன்னைப் படைத்தா யுன்கருத்தை
நானே தென்றிங் கறியேனே
நம்பினேன் கண் டருள்வாயே.

இ-ள். வானே முதல் ஆம் - ஆகாயமே முதலான, பெரும் பூதம் வகுத்து - ஐம்பெரும் பூதங்களையும் படைத்து, புரந்து - காத்து, மாற்ற வல்ல - அழிக்கவல்ல, கோனே - தலைவனே, என்னைப் புரக்கும் நெறி - என்னைக் காக்கும் வழியை, குறித்தாய் இல்லையே - திருவுளம் பற்றினாயில்லையே, கொடியேனைத்தானே படைத்து - கொடியேனை மாத்திரமே படைத்து, இங்கு என்ன பலன்தன்னை படைத்தாய் - இவ்விடத் தென்ன பலனைப் பெற்றாய், உன் கருத்தை - உன் திருவுள்ளக்கிடையை, நான் - அடியேன், ஏது என்று - யாதென்று, இங்கு அறியேன் - இங்கு அறிகிலேன், (ஆயினும்) நம்பினேன் - (என்னை உய்விக்க வல்லவன் நீயே யென்று) நம்பியிருக்கிறேன், கண்டு - (அந்த நம்பிக்கையை உன் முற்றறிவினால்) கண்டு, அருள்வாய் - கிருபைசெய்யவேண்டும்—எ - று.

வானே முதலாம் பெரும்பூதம் என்றது, அவற்றையும் அவற்றா னுளவாக்கப்பட்ட சராசர சீவராசிகளை யுட்கொண்ட வுலகங்களையும். காரணத்தைக் கூறவே காரியமு மடங்கு மாதலால் இவ்வாறு கூறினார்.

9. கண்டார் கண்ட காட்சியுநீ
காணார் காணாக் கள்வனுநீ
பண்டா ருயிர்நீ யாக்கையுநீ
பலவாஞ் சமயப் பகுதியுநீ
எண்டோண் முக்கட் செம்மேனி
யெந்தாய் நினக்கே யெவ்வாறு
தொண்டாய்ப் பணிவ ரவர்பணிநீ
கூட்டிக் கொள்வ தெவ்வாறே.

இ-ள். கண்டார் - (யதார்த்தத்தை யுள்ளவாறு) கண்ட அறிஞர்கள், கண்ட - கண்ட, காட்சியும்நீ - காட்சிப் பொருளும் நீயே, காணார் - அவ்வாறு காணாதவர்களாகிய பொய்யர், காணா - காணாத, கள்வனும் நீ-கள்வனும் நீயே, பண்டு - தொன்மையாக, ஆர் - பொருந்திய, உயிர் நீ - உயிரும் நீயே, யாக்கையும் நீ - உடலும் நீயே, பல ஆம் - பலவாகிய, சமயப் பகுதியும் நீ - சமய

ப்பாகுபாடுகளும் நீயே, (ஆதலால்) எண் தோள் - எட்டுத் தோள்களையும், முக்கண் - மூன்று கண்களையும், செம் மேனி - செம்மையாகிய திருமேனியையு முடைய, எந்தாய் - எந்தையே, நினக்கு - உனக்கு, எவ்வாறு - எவ்விதம், தொண்டு ஆய் பணிவர் - தொண்டராய்ப் பணிவார் (பணிவது), அவர் பணி - அவரது பணியை, நீ சூட்டிக்கொள்வது - நீ ஏற்றுக்கொள்வது, எவ்வாறு - எவ்விதம்—எ - று.

எல்லாம் நீயேயா யிருத்தலால், தொண்டர் உன்னைப் பணிவ தெவ்வாறு, அவர் பணியை நீ யேற்றுக்கொள்வது எவ்வாறு என்பது கருத்து.

**10.** சூட்டி யெனதென் றிடுஞ்சுமையைச்
சுமத்தி யெனையுஞ் சுமையாளாக்
கூட்டிப் பிடித்து வினைவழியே
கூத்தாட் டினையே நினதருளால்
வீட்டைக் கருது மப்போது
வெளியா முலக வியப்பனைத்தும்
ஏட்டுக் கடங்காச் சொப்பனம்போ
லெந்தா யிருந்த தென்சொல்வேன்.

இ - ள். சூட்டி - ஏற்றுக்கொண்டு, எனது என்றிடும் சுமையை - எனது என்று மமகரித்திருக்கிற உடற்சுமையை, சுமத்தி - சுமக்கச்செய்து, எனையும் - அடியேனையும், சுமை ஆள் ஆ கூட்டிப்பிடித்து - சுமையெடுக்குமாளாகச் சேர்த்துப் பிடித்து, வினைவழியே - இருவினையின் வழியாகவே, கூத்தாட்டினையே - கூத்தாடுவித்தனையே, நினது அருளால் - உன் திருவருளால், வீட்டை கருதும் அப்போது - மோக்ஷத்தை விரும்பும் அக்காலத்தில், வெளி ஆம் - வெளிப்படையாகத் தோன்றுகின்ற, உலக வியப்பு அனைத்தும் - உலக விவகார அதிசயங்களெல்லாம், ஏட்டுக்கு அடங்கா - ஏட்டி லெழுதுதற் கடங்காத, சொப்பனம்போல் இருந்தது - கனவையொத்திருந்ததை, எந்தாய் - எந்தையே, என்சொல்வேன் - என்னென்று சொல்ல வல்லேன்—எ - று.

"இருவினைப் பாசக் கயிற்றின்வழி யாட்டுவிப்பானும்" என்ற அறிஞர் வாக்கியத்தை யடியொற்றி, வினைவழியே கூத்தாட்டினை என்றார்.

---

## வம்பனேன்.

**1.** வம்பனேன் கள்ளங் கண்டு
மன்னருள் வெள்ள ராய
உம்பர்பா லேவல் செய்யென்
றுணர்த்தினை யோகோ வானோர்

தம்பிரா னேநீ செய்த
தயவுக்குங் கைம்மா றுண்டோ
எம்பிரா னுய்ந்தே னுய்ந்தே
னினியொன் றுங் குறைவி லேனே.

இ-ள். வம்பனேன் - வம்பனேனது, கள்ளம் - கபடத்தை, கண்டும் - கண்டுவைத்தும், மன் - நிலைபேறுள்ள, அருள் வெள்ளர் ஆய - அருட்கடலினராகிய, உம்பர்பால் - தேவரிடத்தில், ஏவல் செய் என்று - ஏவல் செய்வாயாக வென்று, உணர்த்தினை - அறிவுறுத்தினாய், ஒகோ - ஆச்சரியம், வானோர் தம்பிரானே - தேவர்களுக் கிறைவனே, நீ செய்த தயவுக்கும் - நீ செய்த கிருபாகாரியமாகிய உதவிக்கும், கைம்மாறு உண்டோ - அடியேன் செய்யக்கிடந்ததாகிய பிரதியுபகாரமுளதோ, எம்பிரான் - எம்மிறைவனே, உய்ந்தேன் உய்ந்தேன் - பிழைத்தேன் பிழைத்தேன், இனி ஒன்றும் குறைவு இலேன் - இனிச் சிறிதும் குறையற்றவ னானேன்—எ-று.

கண்டும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. 'பிரமமே ஞானியாம்' என்பதனை யுட்கொண்டு உம்பர் என்றார். தயவு என்றது அதன் காரியமாகிய வுதவியை யுணர்த்தி நின்றது. வானோர் தம்பிரானே யென்றவர் எம்பிரான் என மீட்டுங் கூறினது, வானோர்க்குத் தலைவராதலேயன்றி எமக்குத் தலைவராகார் எனப் பொருடருமோவென் றுசங்கித்தென்க.

2\. குறைவிலா நிறைவாய் ஞானக்
கோதிலா னந்த வெள்ளத்
துறையிலே படிந்து மூழ்கித்
துளைந்துநான் றோன்றா வாறுள்
ளுறையிலே யுணர்த்தி மோன
வொண்சுடர் வைவா டந்த
இறைவனே யுனைப் பிரிந்திங்
கிருக்கிலே னிருக்கி லேனே.

இ-ள். குறைவு இல்லா நிறைவுஆய் - குறைவற்றநிறைவாகி, கோது இல் - குற்ற மற்ற, ஞான ஆனந்த வெள்ளத் துறையிலே - ஞானானந்தப் பெருக்கின் வழியில், படிந்து மூழ்கி - முழுகிப் படிந்து, துளைந்து - அழுந்தி, நான் தோன்றா ஆறு - நான் தோன்றாதவகை, உள்ளுறையிலே உணர்த்தி - உள்ளுறைவகையா லறிவுறுத்து, ஒள் - ஒள்ளிய, சுடர் - ஞான வொளியாகிய, வை - கூர்மையையுடைய, மோனவாள் - மௌனநிலையாகிய வாளை, தந்த - கொடுத்தருளிய, இறைவனே - தலைவனே, உன்னை பிரிந்து - உன்னை நீங்கி, இங்கு - இவ்விருட்டு மாஞாலத்தில், இருக்கிலேன் இருக்கிலேன் - தங்கியிரேன் தங்கியிரேன்—எ-று.

குறைவு இல்லா நிறைவு - எக்காலும் ஒரு தன்மையாயுள்ள நிறைவு. படிந்து முழ்கி துளைந்து என்றது தான் றேன்றுமைக்கு. உள்ளுறை - சிலேடைவகையா லுட்கருத்தை வெளிப்படுப்பது.

**3.** இருநில மாதி நாத
 மீறதா மிவை கடந்த
பெருநில மாய தூய
 பேரொளிப் பிழம்பாய் நின்றும்
கருதரு மகண்டா னந்தக்
 கடவுணின் காட்சி காண
வருகவென் றழைத்தா லன்றி
 வாழ்வுண்டோ வஞ்ச னேற்கே.

இ - ள். இரு நிலம் ஆதி - பெரிய பிருதுவி தத்துவ முதல், நாதம் ஈறது ஆம் - நாத தத்துவ மிறுதியாகவுள்ள, இவை - இவற்றை, கடந்த - கடந்துநின்ற, பெரு நிலம் ஆய - பெரு நிலமாகிய, தூய - பரிசுத்தமான, பேரொளிப் பிழம்பாய் நின்றும் - பெரிதாகிய ஒளித் திரளா யிருப்பினும், கருது அரும் - நினைத்த லரிதாகிய, அகண்டானந்தம் - அகண்ட சுகத்தைத் தருகின்ற, கடவுள் - கடவுளே, நின் காட்சி காண - உன் காட்சி கண் டெய்தற்பொருட்டு, வருகவென்று அழைத்தாலன்றி - வாவென் றென்னை யழைத்தாலல்லது, வஞ்சனேற்கு - வஞ்சனாகிய எனக்கு, வாழ்வு உண்டோ - இன்பவாழ்வுளதோ (இல்லை)—எ - று.

நீ பிருதுவி முதல் நாததத்துவ மீறாகிய தத்துவத் தொகுதியைக் கடந்து நின் றொளிரும் பேரொளிப் பிழம்பாயினும் என்னை வாவென் றறை கூறி யாண்டருளினல்லது எனக்கு இன்பவாழ் வுளதாமோ என்பது கருத்து.

**4.** வஞ்சனை யழுக்கா றாதி
 வைத்திடும் பாண்ட மான
நெஞ்சனை வலிதின் மேன்மேல்
 நெக்குநெக் குருகப் பண்ணி
அஞ்சலி செய்யுங் கையு
 மருவிநீர் விழியு மாகத்
தஞ்சமென் றிரங்கிக் காக்கத்
 தற்பரா பர முனக்கே.

இ - ள். தற்பரா - தற்பரனே, வஞ்சனை - கபடமும், அழுக்காறு ஆதி - பொறாமை முதலிய குணங்களை, வைத்திடும் - இடப்பட்டிருக்கிற, பாண்டம் ஆன - பாத்திரமாகிய, நெஞ்சனை - மனத்தை யுடையவனை

என்னை, வலிதின் - பலாத்காரமாக, மேன்மேல் - மேலுமேலும், நெக்கு நெக்கு - நெகிழ்ந்து நெகிழ்ந்து, உருகப்பண்ணி - உருகும்படி செய்து, அஞ்சலி செய்யும் கையும் - கூப்புங்கையும், அருவி நீர் விழியும் ஆக - அருவியாறுபோல நீர் பாயும் கண்களுமாகப் பண்ணி, தஞ்சம் என்று இரங்கி - நாமே யாதாரமென் றிரங்கி, காக்க - காப்பாற்ற, உனக்கேபரம் - உனக்கே பாரமாகும்—எ - று.

வஞ்சனை பொறாமை முதலியவைகட் கிடனுயிருக்கும் என்மன முருகப்பண்ணி என்னைக் காத்தல் உன் கடன்மையாம் என்பதாம்.

**5.** உனக்குநா னடித்தொண் டாகி
யுன்னடிக் கன்பு செய்ய
எனக்குநீ தோற்றி யுஞ்சே
லென்னுநா ளெந்த நாளோ
மனக்கிலே சங்க டீர்ந்த
மாதவர்க் கிரண்டற் றோங்குந்
தனக்குநே ரில்லா வொன்றே
சச்சிதா னந்த வாழ்வே.

இ - ள். மனக் கிலேசங்கள் தீர்ந்த - மனோ வியாகுலங்கள் நீங்கப்பெற்ற, மாதவர்க்கு - பெரிய தபோதனர்க்கு, இரண்டு அற்று ஓங்கும் - இரண்டென்ற லற்றோங்கிய, தனக்கு நேர் இல்லா - தனக்குச் சமானமான வஸ்துவில்லாத, ஒன்றே - ஒப்பற்ற பொருளே, சச்சிதானந்த வாழ்வே - சச்சிதானந்த ரூபமாகிய வாழ்வே, உனக்கு - தேவரீருக்கு, நான் - அடியேன், அடித்தொண்டாகி - அடித் தொண்டனாகி, உன் அடிக்கு - உன் திருவடிகளுக்கு, அன்பு செய்ய - அன்பு செய்யும்படி, எனக்கு - அடியேனுக்கு, நீ தோற்றி - நீ வெளிப்பட்டுத் தோன்றி, அஞ்சேல் - பயப்படாதே, என்னும் நாள் - என்று சொல்லுகிற நாள், எந்த நாள் - எந்நாளோ—எ-று.

அடித்தொண்டு - பழமையாகிய தொண்டு. நான் உன் திருவடிகளுக் கன்புசெய்யும்படி நீ வெளிப்பட வந்து, என்னை அஞ்சேலென்பது எக்காலமோ என்பதாம்.

**6.** வாழ்வெனு வயங்கி யென்னை
வசஞ்செய்து மருட்டும் பாழ்த்த
ஊழ்வினைப் பகுதி கெட்டிங்
குன்னையுங் கிட்டு வேனோ
தாழ்வெனுஞ் சமய நீங்கித்
தமையுணர்ந் தோர்கட் கெல்லாம்

சூழ்வெளிப் பொருளே முக்கட்
சோதியே யமர ரேறே.

இ - ள். தாழ்வு என்னும் - (அறிஞர்) தாழ்வென்று மதிக்கிற, சமயம் நீங்கி - சமயப் பற்றுவிட்டு, தமை யுணர்ந்தோர்கட்கு - தமது சொரூபத்தை யறிந்தவர்களுக்கு, எல்லாம் - எல்லாவகையானும், சூழ் - ஆராயப்படுகின்ற, வெளிப்பொருளே - வெள்ளிடைப் பொருளாயுள்ளவனே, முக்கண் சோதியே - மூன்று கண்களையுடைய தேஜோராசியே, அமரர் ஏறே - தேவாதி தேவனே, வாழ்வு என வயங்கி - வாழ்க்கையென்று விளங்கி, என்னை வசம் செய்து - என்னை வசிகரித்து, மருட்டும் - பிரமிக்கச் செய்கிற, பாழ்த்த - பாழாகிய, ஊழ்வினைப் பகுதி கெட்டு - ஊழ்வினைப் பகுப்பு நசித்து, இங்கு - இப்பிறப்பிற்றானே, உன்னையும் கிட்டுவேனோ - உன்னையும் அடையப்பெறுவேனோ—எ - று.

சமயங்களெல்லாம், உண்மை இதுவோ அதுவோ வென்று மயங்குதற் கேதுவாதலால், தாழ்வெனுஞ் சமயம் என்றார். ஊழ்வினையற்று இப்பிறவியிற்றானே உன்னை யடையப் பெறுவேனோ என்பதாம்.

7. ஏறுவாம் பரியா வாடை
யிருங்கலை யுரியா வென்றும்
நாறுநற் சாந்த நீறு
நஞ்சமே யமுதாக் கொண்ட
கூறருங் குணத்தோ யுன்றன்
குரைகழல் குறுகி னல்லால்
ஆறுமோ தாப சோபம்
அகலுமோ வல்ல றானே.

இ - ள். ஏறு - இடபம், வாம் பரி ஆ - தாவிச் செல்லும் குதிரையாகவும், இரு கலை உரி - பெரிய மானினது தோல், ஆடை ஆ - உடையாகவும், நீறு - திரு வெண்ணீறு, என்றும் நாறும் - எக்காலும் பரிமளியாநின்ற, நல் சாந்தம் ஆ - நல்ல சந்தனமாகவும், நஞ்சமே - விடமே, அமுது ஆ - அமுதாகவும், கொண்ட - உகந்தருளின, கூறு அரு - சொல்லுதலருமையாகிய, குணத்தோய் - மங்கள குணங்களை யுடையவனே, உன் தன் - உனது, குரை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளை, குறுகின் அல்லால் - அடைந்தால் தணிவதன்றி, தாப சோபம் - (எனக்கு) முத்தாபத்தாலுண்டான விடாய், ஆறுமோ - தணியுமோ, அல்லல் - துன்பமானது, அகலுமோ - நீங்குமோ—எ - று.

ஏறு முதலியவற்றைப் போக்யமாகக் கொண்டதற்குக் காரணம் மங்கள குணங்க ளாதலால், 'ஏறுவாம் பரியாவாடை யிருங்கலை யுரியாவென்றும்

நாறுநற் சாந்த நீரு நஞ்சமே அமுதாக்கொண்ட கூறருங் குணத்தோய்" என்றார். நான் உன் திருவடிகளை யடைந்தாலன்றி எனக்குண்டாயிருக்கிற முத்தாபவிடாய் தணியுமோ என்பதாம். முத்தாபம் - ஆதியாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம் என்பன.

**8.** தானமுந் தவமும் யோகத்
தன்மையு முணரா வென்பால்
ஞானமுந் தெவிட்டா வின்ப
நன்மையு நல்கு வாயோ
பானலங் கவர்ந்த தீஞ்சொற்
பசிளங் கிள்ளை காண
வானவ ரிறைஞ்ச மன்றுள்
வயங்கிய நடத்தி னானே.

இ - ள். பால் நலம் கவர்ந்த - பாலினது சுவையைக் கவர்ந்துகொண்ட, தீ சொல் - மதுரமாகிய சொல்லையுடைய, பச்சிளங்கிள்ளை - பசுமையாகிய இளங் கிளிபோல்பவளாகிய உமாதேவியானவள், காண - கண்டுகளிக்கவும், வானவர் இறைஞ்ச - தேவர்கள் வணங்கவும், மன்றுள் - பொற்சபையில், வயங்கிய - விளங்கிய, நடத்தினானே - நடனத்தையுடையவனே, தானமும் - கொடையையும், தவமும் - தவத்தையும், உணரா - அறியாத, என்பால் - என்னிடத்தில், ஞானமும் - ஞானத்தையும், தெவிட்டா - தெவிட்டாத, இன்பம் - சுகமாகிய, நன்மையும் - நன்மையையும், நல்குவாயோ - கிருபை செய்வாயோ—எ - று.

தானம் என்றது கொடையினேற்றத்தை. தவம் என்றது தவத்தானுளவாகின்ற இம்மை மறுமைப் பயன்களை. பச்சிளங்கிள்ளை - நிறத்தானும் மொழியானும் வந்த உவமையாகுபெயர். "பச்சைப் பசுங்கொடி" என்றார் மேலோரும். பச்சை இளங்கிள்ளை யெனற்பாலது பச்சிளங் கிள்ளையென நின்றது. "பச்சுதிர முற்றொழுக" எனச் செய்யுளினும், பச்சரிசி என வழக்கினும் இவ்வாறு வருதல் காண்க. பொற்சபையில் நடிப்பவனே, எனக்கு ஞானாநந்தங்களைக் கிருபை செய்வாயோ என்பதாம்.

**9.** நடத்தியில் வுலகை யெல்லாம்
நாதநீ நிறைந்த தன்மை
திடத்துட னறிந்தா னந்தத்
தெள்ளமு தருந்தி டாதே
விடத்திர ளனைய காம
வேட்கையி லழுந்தி மாயைச்
சடத்தினை மெய்யென் றெண்ணித்
தளரவோ தனிய னேனே.

இ - ள். நாத - இறைவனே, இவ்வுலகையெல்லாம் - இந்த லோகங்களையெல்லாம், நடத்தி - இயங்குவித்து, நீ நிறைந்த தன்மை - (அவைகளெல்லாவற்றுள்ளும்) நீ நிறைந்திருக்குந் தன்மையை, திடத்துடன் அறிந்து - சலியாமையோடு நின்றறிந்து, ஆனந்தம் - பேரின்பமாகிய, தெள் அமுது அருந்திடாதே - தெளிவாகிய அமுதத்தை யுண்ணுமலே, விடத்திரள் அனைய - விஷயத்திரளையொத்த, காம வேட்கையில் அழுந்தி - காம விருப்பமாகிய படு குழியில் முழுகி, மாயை சடத்தினை - பொய்யுடம்பை, மெய்யென்று எண்ணி - மெய்யென்று நினைத்து, தனியனேன் - தனிமையாகிய நான், தளர்வோ - தளர்ச்சியை யடையவோ—எ - று.

'நீ நிறைந்த தன்மை அறிந்து, ஆநந்தத் தெள்ளமு தருந்திடாதே' என்றமையால், இறைவனது சர்வ வியாபகத்வத்தை யுணர்ந்தமாத்திரையானே பேரின்பம் தானே கிடைக்கு மென்ற தாயிற்று. திடத்துடன் என்றது அஞ்ஞான சந்தேக விபரீதங்களால் தளராமையை. அமு தருந்தினுல் விடம் வருத்தாதென்றற்கு 'அமுதருந்திடாதே விடத்திர ளனைய காமவேட்கையி லழுந்தி' என்றுர். மெய்யெனு மேல் வருதலால், மாயை பொய்யெனப் பட்டது. அழுந்தி யென்றதனுல், காமவேட்கையைப் படுகுழியாக்கி யுரைக்கலாயிற்று. நான் உனது சர்வ வியாபகத்வத்தை யறிந்து, நிரதிசயா நந்தாமிர்தத்தைப் பருகாது, விஷயரூபமாகிய காமக்கடலி லழுந்தித் தளர்வது தகவோ என்பதாம்.

**10.** தனிவளர் பொருளே மாறுத்
    தண்ணருங் கருணை பூத்த
இனியகற் பகமே முக்க
    ணெந்தையே நினக்கன் பின்றி
நனிபெருங் குடிலங் காட்டு
    நயனவேற் கரிய கூந்தல்
வனிதையர் மயக்கி லாழ்ந்து
    வருந்தவோ வம்ப னேனே.

இ - ள். தனி வளர் பொருளே - ஒப்பற வளர்ந்த பொருளே, மாறு - நீங்காத, தண் - குளிர்ச்சி பொருந்திய, அரு - கிடைத்தற் கரிய, கருணை பூத்த - கருணையாகிய மலர்களைப் பூத்த, இனிய கற்பகமே - கண் மனங்களுக் கினிமையைத் தருகின்ற கற்பகத் தருவே, முக்கண் எந்தையே - மூன்று கண்களையுடைய என் தந்தையே, வம்பனேன் - வீணனாகிய நான், நினக் கன்பு இன்றி - உன்னிடத் தன்பில்லாமல், நனி பெருங் குடிலம் காட்டும் - மிகப் பெருங் கொடுமையைச் செய்கின்ற, நயனவேல் - விழிகளாகிய வேல்களையும், கரிய கூந்தல் - கரிய கூந்தலையு

முடைய, வனிதையர் மயக்கில் - மாதர் மயக்கமாகிய படுகுழியில், ஆழ்ந்து - அழுந்தி, வருந்தவோ - வருத்தப் படவோ—எ - று.

நயனத்துக்கு நணிபெருங் குடிலமாவது ஆடவரை மிக வருத்துதல். இது "விடங்கா லயிற் கண்ணி" "காய் சின வேல்" என்றற் றொடக்கத் தனவற்றாற் காண்க. சுயம்பு வாதலால், 'தனிவளர் பொருளே' எனவும், தனிவளர் பொருளாயினும் கருணை யின்றாயின் எவர்க் கென்னபய னென் பதை விலக்கற்கு, 'தண் அருங் கருணை பூத்த' எனவும், கருணை யொன்ற னையே பூத்ததனால் எல்லாப் பொருள்களு மெய்துமோவென்னு மாசங்கை யொழித்து எல்லாப் பொருள்களு மெய்துவிக்கு மென்பார் 'இனிய கற் பகமே' எனவும், அன்பர்கள் வேண்டுமவை யின்னவெனக் கண்டுணரப் போதுமான கண்ணுடைய னென்பார் 'முக்கணெந்தையே' எனவும் கூறி னார். இத்தன்மையனான நீ யிருக்க, வம்பனே னாதலால், வனிதையர் மயக்கி லாழ்ந்து வருந்துகின்றேன், அங்ஙனம் வருந்துதல் தகுமோ என்பது கருத்து.

---

## சிவன் செயல்.

**1.** சிவன்செய லாலே யாதும்
வருமெனத் தேறே னாளும்
அவந்தரு நினைவை யெல்லா
மகற்றிலே னாசை வெள்ளம்
கவர்ந்துகொண் டிழுப்ப வந்தக்
கட்டிலே யகப்பட் டையோ
பவந்தனை யீட்டி யீட்டிப்
பதைக்கின்றேன் பாவி யேனே.

இ - ள். யாதும் - எதுவும், சிவன் செயலாலே - சிவன் செயலால், வரும் என - வருமென்று, தேறேன் - தெளியேன், நாளும் - நாள்தோறும், அவம் தரும் நினைவை யெல்லாம் - வீணான எண்ணங்களை யெல்லாம், அகற்றிலேன் - நீக்கிலேன், ஆசைவெள்ளம் - ஆசைப் பெருக்கானது, கவர்ந்துகொண்டு இழுப்ப - என்னைக் கோத்துக் கொண்டிழுக்க, அந்தக் கட்டிலே அகப்பட்டு - அந்தப் பிணிப்பினுள் ளடங்கி, ஐயோ - அந்தோ, பவம் தன்னை ஈட்டி ஈட்டி - பாவத்தைச் சம்பாதித்துச் சம்பாதித்து, பாவி யேன் - பாபிஷ்டனாகிய நான், பதைக்கின்றேன்-பதையாநின்றேன்—எ-று.

சிவன் செயலாலே யாதும் வருமெனத் தேறுவேனாயின், அவந்தரு நினைவகற்றுதல் முதலாயின வுளவாகும்; அத்தேற்ற மில்லே னாதலால் பவந் தனை யீட்டி யீட்டிப் பதைக்கின்றேன் என்பது கருத்து.

**2.** பாவியே னினியென் செய்கேன்
பரமனே பணிந்துன் பாதம்
சேவியேன் விழிநீர் மல்கச்
சிவசிவ வென்று தேம்பி
ஆவியே நிறைய வந்த
வமுதே யென்னே னந்தோ
சாவிபோஞ் சமயத் தாழ்ந்து
சகத்திடைத் தவிக்கின் றேனே.

இ - ள். பாவியேன் - பாவியாகிய நான், இனி யென் செய்கேன் - இனி யென் செயக்கடவேன், பரமனே - மேலோனே, உன்பாதம் பணிந்து - உன் திருவடிகளை வணங்கி, சேவியேன் - தெரிசனஞ் செய்யேன், விழி - கண்களில், நீர்மல்க - நீர் நிறைய, சிவசிவ என்று - சிவசிவ வென்று உச்சரித்து, தேம்பி - வாடி, ஆவியே - உயிரே, நிறையவந்த அமுதமே - பூர்ணமாக வந்த அமிர்தமே, என்னேன் - என்று துதியேன், அந்தோ - ஐயோ, சாவிபோம் - பாழ்பட்டுப் போகின்ற, சமயத்து - சமயப்படுகுழியில், ஆழ்ந்து - அழுந்தி, சகத்திடை - உலகின்கண், தவிக்கின்றேன் - இளையாகிற்கிறேன்—எ - று.

ஆவி - தடாகம், அமுதம் - நீர், தடாகம் நிறையவந்த நீரே எனச் சொன்னயங்காண்க. பரமனே, பாவியாகிய நான் உன் திருவடியைத் தொழுதல் செய்யேன், விழிநீர் சிந்தநின்று சிவசிவ வென்று துதியேன், பாழாகிய சமயப் படுகுழியி லாழ்ந்து இவ்வுலகில் தவிக்கின்றேன்; இனி யெப்படி உய்வேன் என்பதாம். நான் என வொரு சொல் வருவித்து, பாவியேன் என்பதற்கு நினையேன் என்றுரைத் தலுமாம்.

**3.** இடைந்திடைந் தேங்கி மெய்புள கிப்ப
வெழுந்தெழுந் தையநின் சரணம்
அடைந்தன னினிநீ கைவிடே லுனக்கே
யபயமென் றஞ்சலி செய்துள்
உடைந்துடைந் தெழுது சித்திரப் பாவை
யொத்துநா னசைவற நிற்பத்
தொடர்ந்துநீ யெனையாட் கொள்ளுநா ளென்றோ
சோதியே யாதிநா யகனே.

இ - ள். சோதியே - தேஜோராசியே, ஆதிநாயகனே - ஆதியாகிய முதல்வனே, இடைந்து இடைந்து - விலகி விலகி, ஏங்கி - அழுது, மெய்புளகிப்ப - சரீரம் புளகிக்க, எழுந்து எழுந்து - பலகாலெழுந்து, ஐய - அழ

குள்ளனவாகிய, நின் சரணம் - உன் திருவடிகளை, அடைந்தனன் - சேர்ந்தேன், இனி நீ கைவிடேல்-இனி நீகைவிடாதே, உனக்கே அபயம் என்று-உனக்கே அபயம் என்று விண்ணப்பஞ்செய்து, அஞ்சலிசெய்து - கும்பிட்டு, உள் உடைந்து உடைந்து - மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து, எழுது - எழுதின, சித்திரப் பாவை ஒத்து - சித்திரப் பிரதிமைபோன்று, நான் அசைவு அற நிற்ப - நான் அசைவற நிற்கும்படி, நீ என்னை தொடர்ந்து - நீ யென்னை விடாது பற்றி, ஆட்கொள்ளும் நாள் - அடிமை கொள்ளும் நன்னாள், என்றோ - எந்நாளோ—எ - று.

ஐய என்பதை விளியாக்கி யுரைப்பினு மமையும். அசைவற நிற்றல் - சும்மாவிருத்தல். உன் திருவடியை யடைந்தேன், நீ என்னையாட்கொள்ளும் நாள் எந்நாளோ என்பதாம்.

**4.** ஆதியாய் நடுவா யந்தமாய்ப் பந்தம்
யாவுமற் றகம்புற நிறைந்த
சோதியாய்ச் சுகமா யிருந்தவெம் பெருமான்
றொண்டனேன் சுகத்திலே யிருக்கப்
போதியா வண்ணங் கைவிடன் முறையோ
புன்மையே னென்செய்கேன் மனமோ
வாதியா நின்ற தன்றியும் புலன்சேர்
வாயிலோ தீயினுங் கொடிதே.

இ - ள். ஆதி ஆய் - முதலாகி, நடு ஆய் - இடையாகி, அந்தம் ஆய் - கடையாகி, பந்தம் யாவும் அற்று - பிறவிப் பிணிப்புக்க ளெல்லாம் ஒருசேரநீங்கி, அகம்புறம் நிறைந்த - அகத்தும் புறத்தும் நிறைந்த, சோதியாய் - ஒளிப்பிழம்பாய், சுகமாய் - ஆனந்த ரூபமாகி, இருந்த - இருந்த, எம்பெருமான் - எம்மிறைவனே, தொண்டனேன் - அடிமையாகிய நான், சுகத்திலே யிருக்க - இன்ப நிலையிலிருக்கும்படி, போதியாவண்ணம் - போதியாத விதம், கைவிடல் - கைவிடுதல், முறையோ - முறைமையோ, புன்மையேன் - புன்மையை யுடையேன், என்செய்கேன் - என்செயக் கடவேன், மனமோ - மனதோ, வாதியாநின்றது - வருத்தாநின்றது, அன்றியும் - அல்லாமலும், புலன்சேர் வாயிலோ - விஷயங்கள் சேர்தற்குரிய பொறியோ, தீயினும் கொடிதே - நெருப்பினும் கொடியதே—எ - று.

"பொறிவாயி லைந்தவித்தான்" என்றார் மேலோரும். ஆதி மத்யாந்த ரஹிதனே, அடியேன் உன்னின்ப நிலையிலிருக்கும்படி போதியாது கைவிடுதல் உனக்கு முறைமையாமோ என்பதாம்.

**5.** வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடர்
வந்தெனை யீர்த்துவெங் காமத்

தீயிலே வெதுப்பி யுயிரொடுந் தின்னச்
 *சிந்தைநைந் துருகிமெய்ம் மறந்து
தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்
 றாயினுங் கருணைபா மன்றுள்
நாயகமாகி யொளிவிடு மணியே
 நாதனே ஞானவா ரிதியே.

இ - ள். தாயினும் - தாயைப்பார்க்கிலும், கருணை ஆம் - கருணை செய்கின்ற, மன்றுள் - பொற்சபையில், நாயகம் ஆகி - இறைவனாகி, ஒளி விடும் - ஒளி செய்கின்ற, மணியே - மாணிக்கமே, நாதனே - முதல்வனே, ஞானவாரிதியே - ஞானக்கடலே, வாயில் ஓர் ஐந்தில் - பொறிகளாகிய வோரைந்து வழிகளில், புலன் என்னும் வேடர் வந்து - ஐம்புலன்களென்கிற வேடுவர் வந்து, என்னை ஈர்த்து - என்னை யிழுத்து, வெம்காமத்தீயிலே வெதுப்பி - வெவ்விய காமநெருப்பினால் சுட்டு, உயிரொடும் தின்ன - பிராணனுடன் உண்ண, சிந்தை நைந்து - மனம் நைந்து, உருகி - இளகி, மெய் மறந்து - சரீரத்தை மறந்து, தாய் இல்லா சேய்போல் - தாயற்ற குழந்தையைப்போல, அலைந்து அலைப்பட்டேன் - திரிந்து வருந்தினேன்.—

தாயினுங் கருணையாம் மணியே என இயையும். இவ்வாறு அன்றி, கருணை ஆ - எனப் பதம்பிரித்து, கருணைரூபமாக எனப் பொருளுரைப்பினுமாம். மணிக்குப் பொன் பொருத்தப் பொருளாதலால் மன்று என்பதற்குப் பொற்சபை யெனப் பொருளுரைக்கலாயிற்று.

**6.** ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடு
 நாட்டமே நாட்டத்து ணிறைந்த
வானமே யெனக்கு வந்துவந் தோங்கு
 மார்க்கமே மருளர்தா மறியா
மோனமே முதலே முத்திநல் வித்தே
 முடிவிலா வின்பமே செய்யுந்
தானமே தவமே நின்னைநா னினைந்தேன்
 றமியனேன் றனைமறப் பதற்கே.

இ - ள். ஞானமே வடிவு ஆய் - அறிவே யுருவமாகி, தேடுவார் தேடும் - தேடுவோர் தேடுகின்ற, நாட்டமே - தேடப்படுபொருளே, நாட்டத்துள் நிறைந்த - என் கண்ணில் நிறைந்த, வானமே - பரமாகாயமே, எனக்கு - அடியேனுக்கு, வந்து வந்து ஓங்கும் மார்க்கமே - வந்து வந்து உயர்ந்து தோன்றுகின்ற நெறியே, மருளர்தாம் அறியா மோனமே - மருளையுடையார் உணராத மோன நிலையே, முதலே - தலைவனே, முத்தி நல் வித்தே - மோக்ஷ விளைவுக்குக் காரணமாகிய நல்லவிதையே, முடிவு இல்லா

இன்பமே - முடிவற்ற ஆனந்தமே, செய்யும் - (யாவரும் தமது இம்மை மறுமைப்பயன் கருதிச்) செய்கின்ற, தானமே - ஈகையே, தவமே - தபஸ்ஸே, தமியனேன் தன்னை மறப்பதற்கு - என்னை நான் மறந்து விடுதற்பொருட்டு, நான் நின்னை நினைந்தேன் - நானுன்னைச் சிந்தனைசெய்தேன்—

தானத்துக்கு இம்மைப் பயன்புகழ், மறுமைப்பயன் சுவர்க்காதி பதங்கள். என்னை மறக்க உன்னை நினைந்தேனென்பது கருத்து.

**7.** மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும்
வந்துநின் னன்பர்தம் பணியாம்
அறமது கிடைக்கி னன்றியா னந்த
வற்புத நிட்டையி னிமித்தம்
துறவது வேண்டு மௌனியா யெனக்குத்
தூயநல் லருடரி னின்னம்
பிறவியும் வேண்டும் யானென திறக்கப்
பெற்றவர் பெற்றிடும் பேறே.

இ - ள். நின் அன்பர்தம் பணி ஆம் அறம் - உன்னடியாரது பணிவிடையாகிய மேலான தருமம், வந்து கிடைக்கின் வந்து கிடைக்கப்பெறுவேனாயின், மறம் மலி - பாவம் நிறைந்த, உலக வாழ்க்கையே வேண்டும் - பிரபஞ்ச வாழ்வே யெனக்கு வேண்டும், அன்றி - அல்லாதவிடத்து, ஆநந்தம் - இன்பத்தைத் தருகின்ற, அற்புதம் - அதிசயமான, நிட்டையின் நிமித்தம் - நிஷ்டையின் பொருட்டு, துறவது வேண்டும் - துறவு வேண்டும், மௌனி ஆய் - மௌன குருவாகி வந்து, எனக்கு - அடியேனுக்கு, தூய - பரிசுத்தமான, நல் அருள் தரின் - சிறந்த அருளைத் தருவதாயிருப்பின், இன்னம் - இனிமேலும், பிறவியும் வேண்டும் - ஜந்மங்களும் வேண்டும், யான் எனது - யான் எனது என்பவற்றுக்குக் காரணங்களான அகங்கார மமகாரங்கள், இறக்கப் பெற்றவர் - இறக்கப் பெற்றவர்கள், பெற்றிடும் - அடைகின்ற, பேறே - இலாபமே—எ - று.

அன்பர் பணிகிடைப்பின், உலகவாழ்க்கை வேண்டும், அல்லாத பக்ஷத்தில் துறவுவேண்டும். மௌன குருவாகிவந்து அருள்செய்வதா யிருப்பின், எனக்கு இனிமேலும் பிறவிவேண்டும் என்பது கருத்து. அறமது துறவது என்பவற்றுள் அது பகுதிப்பொருள் விகுதி. "இறவி லெப்பதமும் பெற வேண்டிலே னென்றும் பிறவிவேண்டுவ னின்றிருப்பணிசெயப் பெறினே" என்றார் பிறரும்.

**8.** பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே
பெருகிய கருணைவா ரிதியே
நற்றவத் துணையே யானந்தக் கடலே
ஞாதுரு ஞானஞே யங்கள்

அற்றவர்க் கறாத நட்புடைக் கலப்பே
யனேகமாய் நின்னடிக் கன்பு
கற்றதுங் கேள்வி கேட்டது நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ காணே.

இ-ள். பெற்றவர் - தத்துவஞானத்தைப் பெற்றவர்கள், பெற்ற - அடைந்த, பெரு - பெரிய, தவக்குன்றே - தவமலையே, பெருகிய - பெருக்கெடுத்த, கருணைவாரிதியே - கருணைக்கடலே, நல் தவத் துணையே - நல்ல தவத்துக் குதவிசெய்வோனே, ஆனந்தக்கடலே - இன்பசாகரமே, ஞாதுரு ஞான ஞேயங்கள் அற்றவர்க்கு - ஞாதுரு ஞானம் ஞேயம் என்னு மிவைகளற்றவர்களுக்கு, அறாதநட்பு உடை - நீங்காதசிநேகத்தையுடைய, கலப்பே - கூட்டுறவே, அனேகமாய் கற்றதும் கேள்வி கேட்டதும் - வெகுமுகமாகக் கல்விகற்றதும் கேள்வி கேட்டதும், நின் அடிக்கு அன்பு - உன் திருவடிக்கன்பு செய்து, நின்னைக் கண்டிடும்பொருட்டு அன்றோ - உன்னைக் காணும் பொருட்டல்லவா—எ - று.

அன்பு என்பதனோடு செய்து என்னுஞ்சொல் பெய்துரைக்கப்பட்டது. இது இசையெச்சம், சொல்லெச்ச மெனினுமாம். ஞாதுரு - காண்பான், ஞானம் - காட்சி, ஞேயம் - காட்சிப் பொருள். இவற்றை வடநூலார் த்ரிபுடியென்பர். நான் கற்ற கல்விகளும் கேட்ட கேள்விகளும் உன் திருவடிக்கன்புசெய்து உன்னைப் பெறும்பொருட்டன்றோவென்பதாம்.

9. அன்றுநால் வருக்கு மொளிநெறி காட்டு
மன்புடைச் சோதியே செம்பொன்
மன்றுண்முக் கண்ணுங் காளகண் டமுமாய்
வயங்கிய வானமே யென்னுள்
துன்றுகூ ரிருளைத் துரந்திடு மதியே
துன்பமு மின்பமு மாகி
நின்றவா தனையைக் கடந்தவர் நினைவே
நேசமே நின்பரம் பரனே.

இ-ள். அன்று - அந்நாளில், நால்வருக்கும் - ஸநகாதி நால்வருக்கும், ஒளிநெறிகாட்டும் - தேஜோ மார்க்கத்தைக் காட்டிய, அன்புடை சோதியே - அன்பையுடைய தேஜோ ராசியே, செம்பொன் மன்றுள் - செம்பொற் சபையில், முக்கண்ணும் - மூன்று கண்களும், காளகண்டமும் ஆய் - காளகண்டமுமாகி, வயங்கிய - விளங்கிய, வானமே - பரமாகாயமே, என்னுள் துன்று - என்னுட் செறிந்த, கூர் இருளை - மிகுந்த அஞ்ஞானவிருளை, துரந்திடும் - ஓட்டுகின்ற, மதியே - பூர்ணசந்திரனே, துன்பமும் இன்பமும் ஆகின்ற வாதனையை - துக்கமும் சுகமுமாகி நின்றவாச

னைகளை, கடந்தவர் - கடந்துநின்ற அறிஞரது, நினைவே - எண்ணமே, நேசமே - அன்புருவே, யான் - நான், நின் பரம் - உன் பக்ஷம்— எ - று.

காளம் - விஷம், விஷகண்ட மென்றபடி. கருமையுமாதலால், நீலகண்ட மெனினுமாம். மதி - அறிவுமாம். கடவுளே நான் உன் அடைக்கலப் பொருள் என்பதாம்.

**10.** யானெனல் காணேன் பூரண நிறைவில்
யாதினு மிருந்தபே ரொளிநீ
தானென நிற்குஞ் சமத்துற வென்னைத்
தன்னவ னாக்கவுந் தகுங்காண்
வானென வயங்கி யொன்றிரண் டென்னு
மார்க்கமா நெறிதந்து மாறாத்
தேனென ருசித்து ளன்பரைக் கலந்த
செல்வமே சிற்பர சிவமே.

இ - ள். வான் என வயங்கி - கைம்மாறு கருதாத மேகத்தைப் போல விளங்கி, ஒன்று இரண்டு என்னு - ஒன்றிரண்டென்று சொல்லப்படாத, மார்க்கம் ஆம் நெறி தந்து - மார்க்கமாகிய நன்னெறியை யருள் செய்து, மாறா - ஒழுக்கிடையறாத, தேன் என - தேனைப்போல, ருசித்து - சுவையைத் தந்து, அன்பரை - அன்பர்களை, உள் கலந்த - உள்ளே கலந்து நின்ற, செல்வமே - ஐசுவரியமே, சிற்பர சிவமே - ஞானமயமாகிய மேலான சுபமே, பூரண நிறைவில் - உனது சர்வ வியாபகத்தில், யான் எனல் காணேன் - யான் என்பதை யறிந்திலேன், யாதினும் - எப்பொருளினும், இருந்த பேர் ஒளி - தங்கிய பரஞ்சோதி, நீதான் என நிற்கும் - நீயேயென்று சலிப்பற நிற்கின்ற, சமத்து - சமநிலையில், உற - பொருந்தும்படி, என்னை - அடியேனை, தன்னவன் ஆக்கவும் தகும் - உன்னவனாக்கிக் கொள்ளவும் தகும்— எ - று.

காண் - அசை. மாறா என்பதற்கு இனிமை நீங்காத எனினுமாம். கடவுளே, நீயே யெப்பொருள்களுள்ளும் வியாபித்து நிற்கின்றனையென்னுஞ் சமபாவம் எனக்குண்டாம்படி, என்னை உன்றொண்டனாக்கிக் கோடல் வேண்டும் என்பதாம்.

---

## தன்னை யொருவர்.

**1.** தன்னை யொருவர்க் கறிவரிதாய்த்
தானே தானா யெங்குநிறைந்
துன்னற் கரிய பரவெளியா
யுலவா வமுதா யொளிவிளக்காய்

என்னுட் கலந்தா யானறியா
திருந்தா யிறைவா வினியேனும்
நின்னைப் பெறுமா றெனக்கருளா
நிலையைக் கொடுக்க நினையாயோ.

இ - ள். தன்னை ஒருவர்க்கு அறிவு அரிது ஆய் - தன்னை யொருவருக்கறித லருமையாகி, தானேதான் ஆய் - தானே தானாகி, எங்கும் நிறைந்து - எங்கும் வியாபித்து, உன்னற்கு அரிய - நினைத்தற் கரிதாகிய, பரவெளி ஆய் - பராகாயமாகி, உலவா - அழியாமைக்குக் காரணமாகிய, அமுது ஆய் - அமிர்தமாகி, ஒளி விளக்கு ஆய் - ஒளியை யுடைய தீபமாகி; என்னுள் கலந்தாய் - என் மனத்திற் கலந்திருந்தாய், (அப்படி யிருத்தலினும்) யான் அறியாது இருந்தாய் - நானறியாதவண்ண மிருந்தாய், இறைவா - இறைவனே, இனியேனும் - இனியாயினும், நின்னைப் பெறுமாறு - உன்னை யடையுமாறு, எனக்கு - அடியேனுக்கு, அருள் ஆம் நிலையைக் கொடுக்க - உன் திருவருளாகிய நிலைமையைக் கொடுக்க, நினையாயோ - நினைக்கமாட்டாயோ—எ - று.

தன்னை யொருவர்க் கறிவரிதாதல் முதல், அறியாதிருத்த லிறுதியாக வுரைத்தன வெல்லாம் இறைவனுக்கே பொருந்து மென்பார், இறைவா என ஈற்றில் விளித்தனர். எல்லாப் பொருள்களுக்கும் இறைவனே, இனியாயினும் எனக்கு உன் திருவரு ணிலையைக் கொடுக்க நினையாயோ என்பதாம்.

**2.** நினையு நினைவுக் கெட்டாத
நெறிபெற் றுணர்ந்த நெறியாளர்
வினையைக் கரைக்கும் பரமவின்ப
வெள்ளப் பெருக்கே நினதருளால்
மனைவி புதல்வ ரன்னைபிதா
மாடு வீடென் றிடுமயக்கம்
தனையு மறந்திங் குனைமறவாத்
தன்மை வருமோ தமியேற்கே.

இ - ள். நினையும் நினைவுக்கு எட்டாத - கருதுகின்ற கருத்துக் கெட்டாத, நெறிபெற்று - மோன நெறியைப் பெற்று, உணர்ந்த - அந்நெறியாலுன்னையறிந்த, நெறியாளர் - சன்மார்க்கரது, வினையை - வினைகளை, கரைக்கும் - கரைத்து மெல்லமெல்ல அழிக்கின்ற, பரமம் - மேலான, இன்ப வெள்ளப் பெருக்கே - ஆநந்த ப்ரவாஹத்தின் மிகுதியே, நினது அருளால் - உன் திருவருளால், மனைவி - பாரியை, புதல்வர் - புத்திரர், அன்னை பிதா -

தாய் தந்தையர், மாடு - பசுக்கள், வீடு - மனை, என்றிடும் மயக்கம் தன்னையும் மறந்து - என்று சொல்லி அவர்களிடத் தன்பினால் மயங்கும் மயக்கத்தையு மறந்து, இங்கு - இவ்விடத்து, உன்னை மறவாதன்மை - உன்னை மறவாத குணம், தமியேற்கு வருமோ - இழிவினை லொப்பற்ற வெனக் குண்டாகுமோ—எ - று.

யாற்றி னிருகரையை நீர்ப்பெருக்கு மெல்ல மெல்லக் கரைத்தழிக்குமாறுபோல, இறைவன் அன்பரது இருவினையை மெல்ல மெல்லக் கரைத்து அழித்தலால், நினையு நினைவுக் கெட்டாத நெறி பெற்றுணர்ந்த நெறியாளர் வினையைக் கரைக்கும் பரமவின்ப வெள்ளப்பெருக்கே என்றார். எனக்கு மனைவி மக்களிடத்தன்பு நீங்கி, உன்னை மறவாமையாகிய குண முண்டாகுமோ என்பதாம்.

**3.** வரும்போ மென்னு மிருநிலைமை
மன்னா தொருதன் மைத்தாகிக்
கரும்போ தேனோ முக்கனியோ
வென்ன வென்னுட் கலந்துநலம்
தரும்பே ரின்பப் பொருளேநின்
றன்னை நினைந்து நெக்குருகேன்
இரும்போ கல்லோ மரமோவென்
னிதய மியாதென் றறியேனே.

இ - ள். வரும் போம் என்னும் - வரும் போம் என்கிற, இருநிலைமை மன்னாது - இரு நிலையைப் பொருந்தாமல், ஒரு தன்மைத்து ஆகி - ஒரு தன்மையை யுடையதாகி, கரும்போ - கருப்பஞ் சாறோ, தேனோ - மதுவோ, முக்கனியோ - முக்கனிகளோ, என்ன - என்று சொல்லும் வண்ணம், என்னுள் கலந்து - என் மனத்திற் சேர்ந்து, நலம் தரும் - நன்மையைத் தருகின்ற, பேரின்பப் பொருளே - பேரானந்த வஸ்துவே, நின் தன்னை நினைந்து - உன்னை நினைந்து, நெக்கு - நெகிழ்ந்து, உருகேன் - உருகிலேன், (ஆதலால்) என் இதயம் - என்னுடைய இதயமானது, இரும்போ - இரும்பு தானோ, கல்லோ - கல்தானோ, மரமோ - மரந்தானோ, யாது என்று அறியேன் - இவற்றுள் யாதென் றெடுத்துரைக்க அறிந்திலேன்—எ - று.

யாதென்று - செயவெ னெச்சத்திரிபு. பேரின்பப் பொருளே, உன்னை நினைந் துருகாமையால், என்மனம் இரும்போ, கல்லோ, மரமோ, இவற்றுள் எதனைவியன்றதோ என்பதாம்.

**4.** அறியுந் தரமோ நானுன்னை
அறிவுக் கறிவாய் நிற்கையினால்

பிரியுந் தரமோ நீயென்னைப்
பெம்மா னேபே ரின்பமதாய்ச்
செறியும் பொருணீ நின்னையன்றிச்
செறியாப் பொருணான் பெறும்பேற்றை
நெறிநின் றொழுக விசாரித்தால்
நினக்கோ வில்லை யெனக்காமே.

இ - ள். அறிவுக்கு அறிவு ஆய் நிற்கையினால் - உணர்வுக் குணர்வாய் நிற்கையால், நான் உன்னை அறியும் தரமோ - நானுன்னை யறியுந்தரமாமோ, பெம்மானே - எம்பெருமானே, பேரின்பமது ஆய் - பேரானந்தமாகி, செறியும் பொருள் நீ - நிறைந்து நிற்கும் வஸ்து நீ யாதலால், நீ என்னை பிரியும் தரமோ - நீ யென்னைப் பிரியுந்தரமாமோ, நின்னை அன்றி - உன்னை யல்லது, செறியாப் பொருள் நான் - வேறிடத்துச் சேர்ந்து நில்லாத பொருளாகிய நான், பெறும் பேற்றை - அடையும் பிரயோஜநத்தை, நெறிநின்று - உரிய நெறிக்கணின்று, ஒழுக விசாரித்தால் - முழுதும் விசாரணை செய்தால், நினக்கோ இல்லை - உனக்கோவில்லை, எனக்கு ஆம் - எனக்கேயாகும்—எ - று.

இதற்கு இவ்வாறன்றி 'நான் உன்னை அறியுந்தரமோ, அறிவுக்கறிவாய் நிற்கையினால் நீ யென்னைப் பிரியுந்தரமோ, பேரின்பமதாய்ச் செறியும் பொருள் நீ, நின்னை யன்றிச் செறியாப் பொருள் நான் எனப்பிரித்து' இணக்கிப் பொருளுரைத்தலும் கூடும்.

5. எனதென் பதும்பொய் யானெனல்பொய்
யெல்லா மிறந்த விடங்காட்டும்
நினதென் பதும்பொய் நீயெனல்பொய்
நிற்கு நிலைக்கே நேசித்தேன்
மனதென் பதுமோ வென்வசமாய்
வாரா தைய நின்னருளோ
தனதென் பதுக்கு மிடங்காணேன்
தமியே னெவ்வா றுய்வேனே.

இ - ள். எனது என்பதும் பொய் - எனதென்று விவகரித்தலும் பொய், யான் எனல் பொய் - யானென்று விவகரித்தலும் பொய், எல்லாம் இறந்த இடம் காட்டும் - எல்லா விவகாரங்களு மற்ற விடத்தைக் காட்டுகின்ற, நினது என்பதும் பொய் - நின்னதென்று விவகரித்தலும் பொய், நீ எனல் பொய் - நீ யென்று விவகரித்தல் பொய், (ஆதலால்) நிற்கும் நிலைக்கே நேசித்தேன் - (இவைகள் ஒழிந்து) நிற்கும்நிலைக்கே யன்புவைத்தேன், மனது என்பதுமோ - மனமென்று சொல்லப்படும் பொருளுமோ, என் வசமாய்

வாராது - என் வசப்பட்டு வராது, ஐய - ஐயனே, நினது அருளோ - உனது திருவருளோ, தனது என்பதுக்கும் - தன்னதென்று சொல்வதற்கும், இடம் காணேன் - இடங்கண்டிலேன், தமியேன் - துணையிலேன், எவ்வாறு உய்வேன் - எவ்விதமாய்ப் பிழைப்பேன், எ - று.

உய்தல் - எக்காலு மொருதன்மையாய் நித்யவாழ்வு பெற்றுவாழ்தல். என் மனம் என் வசப்படாமல் பலவழியானும் கலங்குவதனால், நான் எவ்வாறு உய்வேன் என்பதாம்.

**6.** உய்யும் படிக்குன் றிருக்கருணை
யொன்றைக் கொடுத்தா லுடையாய்பாழ்ம்
பொய்யு மவாவு மழுக்காறும்
புடைபட் டோடு நன்னெறியா
மெய்யு மறிவு பெறும்பேறும்
விளங்கு மெனக்கு னடியார்பால்
செய்யும் பணியுங் கைகூடும்
சிந்தைத் துயரந் தீர்ந்திடுமே.

இ - ள். உய்யும்படிக்கு - பிழைக்கும்வண்ணம், உன் திருக்கருணை ஒன்றைக்கொடுத்தால்-உன் திருவருளொன்றனைமாத்திரமேகொடுத்தனையாயின், உடையாய்-எல்லாப் பொருள்களையு முடையவனே, பாழ்பொய்யும் - (பொருள் காரணமாயுளதாகும்) பாழாகிய அசத்தியமும், அவாவும்- ஆசையும், அழுக்காறும் - (அதுகிடையாவிடத்துளதாகும்) பொறாமையும், புடைபட்டு ஓடும் - புடைபெயர்ந்தோடி யொழியும், நல்நெறி ஆம் - நன்மார்க்கமுளதாதற் கேதுவாகிய, மெய்யும் - சத்தியமும், அறிவு பெறும் பேறும்-அறிவினாற்பெறும் பிரயோஜனமும், விளங்கும்-பிரகாசிக்கும், எனக்கு - அடியேனுக்கு, உன் அடியார்பால் செய்யும் - உன்னடியவரிடத்துச் செய்யவேண்டிய, பணியும் - பணிவிடையும், கைகூடும் - கைவசப்படும், சிந்தை துயரம் - மனோவியாகுலம், தீர்ந்திடும் - தீர்ந்துபோம், எ - று.

நன்னெறி ஆம் என நிறுத்தி - நன்மார்க்க முளதாகும் என்றுரைத்து முடிப்பினுமாம். உன் திருவருள் எனக்குக் கிடைக்குமாயின், நான் எல்லாச் சித்திகளையும் பெற்று மனத்துயரமும் நீங்கப்பெறுவேன் என்பதாம்.

**7.** சிந்தைத் துயரொன் றொருபாவி
சினந்து சினந்து மேயார்முயங்க
நிந்தைக் கிடமாய்ச் சகவாழ்வை
நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்

எந்தப் படியுன் னருள்வாய்க்கு
மெனக்கெப் படிநீ யருள் செய்வாய்
பந்தத் துயரற் றவர்க்கெளிய
பரமா னந்தப் பழம்பொருளே.

இ - ள். பந்தத்துயர் அற்றவர்க்கு-பிறவிப்பிணிப்பா லுளதாம் துன்ப மற்றவர்கட்கு, எளிய-எளியனாகிய, பரமானந்தப் பழம்பொருளே-மேலான வின்பத்தைத் தருகின்ற புராதநப்பொருளே, சிந்தை துயர் என்ற ஒரு பாவி - மநோதுக்க மென்கிற ஒரு பாவி, சினந்து சினந்து - கோபித்துக் கோபித்து, போர் முயங்க - போரைச்செய்ய, நிந்தைக்கு இடம் ஆய் - நிந் தனைக் கிடமாகி, சகவாழ்வை - (நிலையற்ற) பிரபஞ்சவாழ்க்கையை, நிலை யென்றுணர்ந்தே நிற்கின்றேன் - நிலையுளதென் றறிந்தே அதனிடத்துப் பற்றுளோனாய் நிற்கிறேன், உன் அருள் - உன் திருவருள், எந்தப்படிவாய்க் கும் - எப்படி கிடைக்கும், எனக்கு - அடியேனுக்கு, நீ எப்படி அருள்செய் வாய் - நீ யெவ்வாறு கிருபை பண்ணுவாய், எ - று.

துயர் என்றொரு பாவி என்பதில், பெயரெச்சத்தகரந் தொகுத்தல். கடவுளே, பிரபஞ்சவாழ்க்கையை மெய்யெனக் கொண்டுழலும் எனக்கு உன் திருவருள் கிடைப்பதெப்படி என்பதாம்.

8\. பொருளைப் பூவைப் பூவையரைப்
பொருளென் றெண்ணு மொருபாவி
இருளைத் துரந்திட் டொளிநெறியை
யென்னுட் பதிப்ப தென்றுகொலோ
தெருளத் தெருள வன்பர்நெஞ்சந்
தித்தித் துருகத் தெவிட்டாத
அருளைப் பொழியுங் குணமுகிலே
யறிவா னந்தத் தாரமுதே.

இ - ள். தெருள தெருள - தெளியத் தெளிய, அன்பர் நெஞ்சம் - அன்பர் மனத்தின்கண், தித்தித்து இனித்து, உருக-உருகும்படி, தெவிட் டாத அருளை - தெவிட்டாத அருள்மழையை, பொழியும் - சொரிகின்ற, குணமுகிலே - குணமேகமே, அறிவு ஆனந்தத்து - ஞானானந்தமாகிய, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, பொருளை - திரவியத்தையும், பூவை - பூமியையும், பூவையரை - மாதரையும், பொருள் என்று எண்ணும் - நிலை யுடைப் பொருள்களென்று நினைக்கின்ற, ஒருபாவி இருளை - ஒருபாவி யாகிய அஞ்ஞானவிருட்டை, துரந்திட்டு - துரத்திவிட்டு, ஒளிநெறியை - ஒளியுடைச் சன்மார்க்கத்தை, என்னுள் பதிப்பது - என் மனத்திற் பதியச் செய்வது, என்றுகொல் - என்நாளோ (அறியேன்), எ - று.

பூவை - மொழியான் வந்தவுவமையாகு பெயர். பொருள், பூ, பூவை யர் என்பவற்றை, பொன்னிலமாதர் என்றார் பிறரும். அறிவானந்தத்து என்பதில், அத்து அல்வழிச்சாரியை. கடவுளே, பொன்முதலியவைகளை நிலையுள்ளனவாக நினைக்கின்ற எனது அஞ்ஞானவிருளைத் துரத்தி, உன் ஒளியுடைச் சந்மார்க்கத்தை என் மனத்திற் பதியச் செய்வது எந்நாளோ என்பதாம்.

**9.** ஆரா வமிர்தம் விருப்பினர்க
ளறிய விடத்தை யமிர்தாக்கும்
பேரா னந்தச் சித்தனெனும்
பெரியோ யாவிக் குரியோய்கேள்
காரார் கிரக வலையினிடைக்
கட்டுண் டிருந்த களைகளெல்லாம்
ஊரா லொருநாள் கையுணவேற்
றுண்டா லெனக்கிங் கொழிந்திடுமே.

இ - ள். ஆரா அமிர்தம் விரும்பினர்கள் - தேவர்கள், அறிய - உன் ஏற்றத்தை அறியும்படி, விடத்தை - நஞ்சை, அமிர்து ஆக்கும் - அமிர்தமாக்கிய, பேரானந்தச் சித்தன் என்னும் - பேரானந்தச் சித்தன் என்கிற, பெரியோய் - பெரியோனே, ஆவிக்கு உரியோய் - உயிர்க் குரியவனே, கேள் - கேட்பாயாக, கார்ஆர் - கருமையார்ந்த, கிரகவலையினிடை - சமுசாரவலையின்கண், கட்டுண்டு இருந்த - கட்டுப்பட்டிருந்த, களைகள் எல்லாம் - விடாய்களெல்லாம், ஊரால் - ஊர் தோறும், ஒரு நாள் - ஒவ்வொரு நாளாக, கை உணவு ஏற்று உண்டால் - கைப்பிச்சை யேற்றுண்பேனாயின், இங்கு - இவ்விடத்து, எனக்கு ஒழிந்திடும் - எனக்கொழிந்துபோம்.

தெவிட்டா வமுதம் விரும்பினவர்கள் தேவர்களாதலால், அப் பெயர் அவர்கட்காயிற்று. பேரானந்தச் சித்தன் என்பது, நஞ்சை யமு தாக்கி யுண்டமையா லுண்டாகிய பேரின்பத்தைப் பொருந்திய மனத்தை யுடையான் எனவும், பேரினால் ஆநந்தச் சித்தன் எனவும், பொருள்படுத லுங் காண்க. சித்தன் - ஒன்றை யொன்றாக்கி யதிசயத்தை விளைப் போன். அது இவ்விடத்து விடத்தை யமிர்தாக்கினமை. கார் ஆர் என் பதற்குப் பெருமை நிறைந்த என்றலும் பொருந்தும். குடும்பத் துன்பங் களெல்லாம் ஊர்தோறும் பிச்சையேற் றுண்பேனாயின் என்னைவிட்டு ஒழிந்துபோம் என்பதாம்.

**10.** எனக்கென் றிருந்த வுடல்பொருளும்
யானு நினவென் றீந்தவண்ணம்
அனைத்து மிருந்து மிலதாக
வருளாய் கில்லா தழிவழக்காய்

மனத்துட் புகுந்து மயங்கவுமென்
மதிக்குட் களங்கம் வந்ததென்னோ
தனக்கொன் றுவமை யறநிறைந்த
தனியே தன்னந் தனிமுதலே.

இ-ள். தனக்கு ஒன்று உவமை அற நிறைந்த - தனக்கோருவமை யில்லாதவண்ணம் நிறைந்த, தனியே - தனிமைப் பொருளே, தன்னந் தனி முதலே - தன்னந்தனியாகிய முதற்பொருளே, எனக்கென் றிருந்த- எனக்கென்று நம்பி யிருந்த, உடல் பொருளும் - உடலும் பொருளும், யானும் - நானும், நின என்று - உன்னுடையன வென்று, ஈந்தவண்ணம் - கொடுத்தபடி, அனைத்தும் இருந்தும் - எல்லாமிருந்தும், இலவாக - இல் லாதனவாக, அருளாய் நில்லாது - அருள் வடிவாய் நிற்காமல், அழி வழக்காய் - கெடுவழக்காகி, மனத்துள் புகுந்து - மனத்திற் பிரவேசித்து, மயங்கவும் - கலக்கவும், என்மதிக்குள் - என்னறிவுக்குள், களங்கம் வந் தது - களங்கம் வந்ததற்குக் காரணம், என்னோ - யாதோ (அறிகிலேன்).

உடல் பொருள் யான் என்றது - உடல்பொரு ளாவிகளை, அழிவழ க்கு - துர்வியாச்சியம். தன்னந்தனி - அறத்தனிமை. கன்னங் கறுத்த குழல், பென்னம் பெருத்தமுலை, சின்னஞ் சிறுத்தவிடை என்றற்றொடக் கத்தனவு மிப்பொருள் கருதினவே. உடல் பொருள் ஆவி மூன்றினை யும் உனக்குக் கொடுத்தும், இன்னமும் உன் திருவருணிலையில் நில்லாமை யாகிய மயக்கம் எனக்குண்டானதற்குக் காரணம் யாதோ என்பதாம்.

---

## ஆசையெனும்.

1. ஆசையெனும் பெருங்காற்றா டிலவம்பஞ் செனவுமன
தலையுங் காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட்ட துந்தூர்ந்து
முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி
நிற்ப ரந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேற்
றெய்வமுண்டோ.

இ - ள். ஆசையென்னும் பெருங்காற்றாடு - ஆசையாகிய பெருங் காற்றி லகப்பட்டு, இலவம் பஞ்சு எனவும் - இலவம் பஞ்சு அலைவதுபோல வும், மனது அலையும் காலம் - மனமானது அலையுங் காலத்தில், மோசம் வரும்-மோசம் நேரிடும், இதனாலே - இதனால், கற்றதும் கேட்டதும் தூர் ந்து - கற்ற கல்விகளும் கேட்ட கேள்விகளும் அழிந்து, முத்தி

க்கு ஆன நேசமும் - மோக்ஷவிருப்பமும், நல் வாசமும், குருகுல வாசம் முதலிய நல்லவாசங்களும், போய் - நீங்கி, புலன் ஆய் - ஐம்புலவடிவாகி, இல் கொடுமைபற்றி - குடும்பபாரக் கொடுமையால் தொடரப்பட்டு, நிற பர் - (அதை யறுத்தகல வழியிலராய் அதனிடத்தே) தங்கியிருப்பார்கள், (ஆதலால்) தேசு பழுத்து - ஒளி மிகுந்து, அருள் பழுத்த - அருள் மிகுந்த, பராபரமே - பராத்பரமே, நிராசை இன்றேல் - அவாவறுதி (ஒருவனுக்கு) இல்லையாயின், (அவனுக்கு) தெய்வம் உண்டோ - தெய்வமுமுள்ளதோ; எ - று.

ஆசை யென்றது மனைவி மக்கள் முதலாயினோரிடத்துச் செய்யும் மிகு விருப்பம். பஞ்சு எல்லாப் பொருள்களினும் நொய்து, அதினும் இலவம் பஞ்சு மிகவும் நொய்து, அது சிறு காற்றுக்கே எதிர்நில்லாது அலைவ தியற்கையாயிருக்க, பெருங் காற்றுக்கு என்னபாடுபடாது? அதுபோல மனமானது ஆசைவழியி லகப்பட்டுழல்வதனால் கல்வி கேள்விகளுந் தூர்ந்து, மோக்ஷவிருப்பமும், குருகுலவாசமுதலிய நல்ல சஹவாசங்களும் நீங்கி, ஐம்புல வடிவாகிக் குடும்பபாரக் கொடுங் குழியில் வீழ்ந்து வருந்துவர். ஆதலால், ஒருவனுக்கு நிராசையுண்டானாலன்றித் தெய்வவுண்மை விளங்காதென்பது கருத்து. பெருங்காற்று - சண்டமாருதம். புலன்வழிப்பட்டென்னாது, புலன் ஆய் என்றமையால், புலம் வேறு மனம் வேறு என்று தோன்றாவண்ணம் ஒன்றி அவற்றி னுருவமாய் நிற்றல் பெற்றாம். நிராசையே தெய்வமென்பது இதனாற் கூறப்பட்டது.

"அற்றது பற்றெனி லுற்றது வீடே" எனவும்,

"பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅதவர்க்கு"—எனவும்,

"தந்தைதாய் தன்னுடன் றோன்றினோர் புத்திரர் தாரமென்னும்
பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப் பற்றினையே
வெந்தநீ றாடியா ராதியார் சோதியார் வேதகீதர்
எந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே" எனவும்,

"பழகி னால்வரும் பண்டுள சுற்றமும்
விழவி டாவிடின் வேண்டிய தெய்தொணா
திகழ்கொள் சேறையுட் செந்நெறி மேவிய
அழக னாரு ளாஞ்சுவ தென்னுக்கே"—எனவும்,

"அருத்தமும் மனையாளொடு மக்களும்
பொருத்தமில்லை பொல்லாதது போகட்டும்
கருத்தன் கண்ணுத லண்ணல் காட்டுப்பள்ளித்
திருத்தன் சேவடியைச்சென்று சேர்மினே"—எனவும்,

"பதியுஞ் சுற்றமும் பெற்றமக்களும்
பண்டை யார் நல்ல பெண்டிரும்
நிதியு மிம்மனை வாழும் வாழ்க்கை
நினைப் பொழி மட நெஞ்சமே
மதியஞ் சேர்சடைக் கங்கையானிட
மகிழ மல்லிகை சண்பகம்
புதிய பூமலர்ந் தெல்லினுறும்
புறம்ப யந்தொழப் போதுமே."—எனவும்,

"தாமே தமக்குச் சுற்றமுந் தாமே தமக்கு விதிவகையும்
யாமா ரெமதார் பாசமா ரென்ன மாய மிவைபோகக்
கோமான் பண்டைத்தொண்டரொடு மவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப் புயங்க னுள்வான் பொன்னடிக்கே"—எனவும்,

"திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களு மனையு மொக்கலுந் திருவும்
பொருளென நினையா துன்னருளினை நினைந்து"—எனவும்,

"வளைபட் டகைமா தொடுமக்க ளெனும்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியும்
தொளைபட் டுருவத் தொடும்வே லவனே"—எனவும்,

"கொண்ட பெண்டீர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லாற் காதன் மற்றியாது மில்லை
எண்டிசையுங் கீழுமேலு முற்றவு முண்டபிரான்
தொண்டரோ மாயய்யி னல்லாலில்லை கண்டீர் துணையே"—எனவும்,

மண்ணினுந் தனத்தினு மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும் பெரிய பேரினும்
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார்"—எனவும்,

தாரதன மிகுமென்னிற் றளையாகு மப்பாசந் தளைத்துக்கொண்டால்
ஆரதனை யறுத்தகனும் விரகுடையா ரறிவிலா ராசைவிஞ்சிக்
கூரிதய மப்போகத்து ழன்றுழக்குங் கொடுந்துயரைக் குறித்தபோதே
தீரதையா மறிஞருக்கு விரத்தியுள தாய்ச்சித்தந் தெளியுமன்றே"—எனவும்,

"உடம்பு மனைவிமக வுற்றாரோ சேர்கேள்
அடைந்ததனம் வீட்டிமை காணி—தொடர்ந்தவிவை
என்னவெனுஞ் சொன்னினைவு போனு லிறையருளால்
மன்னிய வனைப் பெறுமான்மா"—எனவும்,

"நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கள்
மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள்—கூடத்
தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதை யிப்போது
விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்"—எனவும்,

"அறிபவற்றாசை யறிலதுதானேய வித்தையு மனமு மாண்டதுவாம்
பொறிபயிலாசை துன்பமாம் நிராசை புகலரு முத்தியாமின்பம்
பிறிவருதனது முயற்சியா லுண்டாம் பேதையருண் டெனுமவித்தை
செறிதரு பொய்யாய் நாம்மாத்திரமாய்ச் சித்தெனத் தேர்ந்திடினிலதாம்"
எனவும் வருவனவற்றாலும் நிராசையே தெய்வமென்பது விசதம்.

**2.** இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட் டருள்செ [யென
வேசற் றேதான்
புரப்பான்ற னருணாடி யிருப்பதுபோ லெங்குநிறை
பொருளே கேளாய்
மரப்பான்மை நெஞ்சினன்யான் வேண்டுவகேட்டிரங்கெ [னவே
மௌனத் தோடந்
தரப்பான்மை யருணிறைவி லிருப்பதுவோ பராபரமே
சகச நிட்டை.

இ - ள். அங்கு - அவ்விடத்து, இரப்பான் ஒருவன் அவன் - யாசகனாகிய ஒருவனென்னும் அவன், வேண்டுவ - வேண்டுமவற்றை, கேட்டு - செவியேற்று, அருள்செய் என - கிருபைசெய்வாயென்று, ஏசற்று-பழிப்பற்று, புரப்பான் - ரக்ஷிப் பவனுடைய, அருள் - கிருபையை, நாடியிருப்பதுபோல் - நோக்கி நிற்பதுபோல, எங்கும் நிறைபொருளே - எவ்விடத்தும் நீக்கமின்றி நிறைந்தவஸ்துவே, கேளாய்-கேட்பாயாக, மரப்பான்மை நெஞ்சினன் யான் - மரத்தின்தன்மை யமைந்த மனத்தினையுடைய நான், வேண்டுவ கேட்டு இரங்கு என - விரும்புமவற்றைத் திருச்செவி சாத்தியிரங்கி யருள்வாயென்று, மௌனத்தோடு - மௌன நிலையுடன், அந்தரப்பான்மை - ஆகாயத்தின் றன்மை யமைந்த, அருள் நிறைவில் - உன்திருவருட் பூரண நிலையில், இருப்பதுவோ - இருப்பது தானோ, பராபரமே - பராத்பர வஸ்துவே, சகசநிட்டை - எனக்குச் சஹஜ நிஷ்டையென்று சொல்லப்படுவது, எ - று.

மரப்பான்மை - வன்மைக்கு எடுத்துக் காட்டுவதோருவமை. இரப் பாளன் ஈகையாளனது அருளை நாடியிருப்பதுபோல, உன்திருவருளை நாடி அத்திருவரு ணிறைவி லிருப்பதுவோ எனக்குச் சகசநிட்டை யென்பது கருத்து.

**3.** சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவா னிறையென வறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே.

இ - ள். நெஞ்சமே - மனமே, சாட்டையின் - சாட்டையினு லாட் டப்பட்ட, பம்பரசாலம் போல் - பம்பரத் தொகுதிகள்போல, எல்லாம் - எல்லா வுயிர்களையும், இறை - இறைவன், ஆட்டுவான் என - ஆட்டுவா னென்று, அறிந்து - ஐயந்திரிபறத் தக்க பிரமாணங்களைக்கொண்டுணர்ந்து, தேட்டம் ஒன்று அற - தேடப்படும் பொருளொன் றில்லாதவகை, அருள்செயலில் நிற்றியேல் - திருவருட் செய்கைக் குட்பட்டு நிற்பையா யின், வீட்டு அறம் துறவு அறம் இரண்டும் - இல்லறம் துறவறம் என்று சொல்லப்பட்ட இரண்டறங்களும், மேன்மையே - மேன்மையை யுடை யனவே, எ - று.

நிற்றியேல் என்பது நிற்றலருமை தோன்ற நின்றது. திருவருள் வயப்பட்டவர்க்குத்தேட வேண்டுவதோர் பொருளின்மைதலால், "தேட்ட மொன்றற வருட்செயலி னிற்றியேல்" என்றார். அருட்செயலி னிற்றி யேல் வீட்டறந் துறவறமிரண்டு மேன்மையே என்றதனால், அருட்செயலி னில்லாவிடின் அவ்விரண்டும் தாழ்மையே என்ற வாறாயிற்று. பம்பர மாட்டுவோன், பம்பரம், சாட்டை, இவைமுறையே இறைவனுக்கும், உயிர் களுக்கும், இருவினைகட்கும் உவமைப் பொருள்கள். ஐயம் - சந்தேகம். அது குற்றியோ மகனோ என்பது. திரிபு - விபரீத வுணர்ச்சி. அது பழு தையைப் பாம்பென்பது. "இருவினைப் பாசக் கயிற்றின்வழி, ஆட்டுவிப் பானு மொருவனுண்டே" எனவும், "ஓங்குவிண்ணோர் நாடேயிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாகியர்பால், வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட் டின்ப மேவுவரே, எனவும், யேலோரும் பணித்தனர்.

**4.** தன்னெஞ்ச நினைப்பொழியா தறிவிலிநான் ஞானமெனுந் தன்மை பேச
உன்னெஞ்ச மகிழ்ந்தொருசொல் லுரைத்தனையே யதனை யுருகேனையா [யுன்னி
வன்னெஞ்சோ விரங்காத மரநெஞ்சோ விருப்பு நெஞ்சோ வைரமான

கன்னெஞ்சோ வலதுமண்ணுங் கட்டி நெஞ்சோ வெனது
செஞ்சங் கருதிற்றுனே.

இ-ள். தன்நெஞ்சம் நினைப்பொழியாத-மனமானது தன்கணுள்ள எண்ணங்கள் நீங்காத, அறிவிலி நான் - அறிவிலியாகிய நான், ஞானம் என்னும் தன்மைபேச - ஞானமென்னுந் தன்மையை எடுத்துப் பேசும்படி, உன்நெஞ்சம் மகிழ்ந்து - உன்னுள்ள மகிழ்ந்து, ஒருசொல் உரைத்தனையே - ஒருமொழி பகர்ந்தனையே, அதனை உன்னி உருகேன் - அதை நினைத் துருகமாட்டேன், (ஆதலால்) ஐயா - ஐயனே, எனது நெஞ்சம் - என்மனமானது, கருதின் - நினைத்துப் பார்க்குமிடத்து, வல்நெஞ்சோ - வன்மனமோ, இரங்காத - இரக்கமில்லாத, மரநெஞ்சோ - மரமனமோ, இருப்புநெஞ்சோ - இரும்பு மனமோ, வைரமான கல்நெஞ்சோ - வயிரம் பற்றிய கல்மனமோ, அலது - அல்லது, மண்ணுங்கட்டி நெஞ்சோ - மண்ணுங்கட்டி மனமோ (அறிந்திலேன்), எ - று.

அறிவுடையார் ஞானத் தன்மையை யெடுத்துப் பேசுதற்குரியரே யன்றி, அறிவிலியாகிய நான் பேசுதற்குரிய னல்லேன் என்ற தாயிற்று. அங்ஙனமாயினும், ஆட்படுந்தன்மையில்லாத என்னை ஒருமொழியுணர்த்தி உனக்குரிய னாக்கினையே, அந்தப்பெருங் கருணையை நினைந் துருகாமையால் என்னெஞ்ச மித்தன்மைத்தெனத் தன்மன வன்மையையும் இறைவனது கருணை மிகுதியையும்பற்றி யிடுபட்டார்.

“வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா னின்றுச்சி யளவு நெஞ்சா
யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே.” என்றார் மேலோரும்,

**5.** வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தரு டோற்றமுஞ் சோபனம்
ஆழி போலருளையன் மௌனத்தால்
ஏழை யேன்பெற்ற வின்பமுஞ் சோபனம்.

இ- ள். சோபனம் வாழி வாழி - நான்பாடுஞ் சோபனமானது வாழி வாழி, (அது யாதெனின்) நல் அன்பர்கள் சூழவந்து - மாசற்ற அன்புடையார் சூழுமாறு என்னிடத் தெழுந்தருளி, அருள் - தன்னருட் குரிமை

யில்லாத வென்னை யுரியனுக்கியருளின, தோற்றமும் - மௌந குருவுருவு வெளிப்பாடும், சோபனம் - சோபனமாகுக, ஆழிபோல் அருள் - கடல் போன்ற அருளையுடைய, ஐயன் - அருளிறையன், மௌநத்தால் - மௌந முத்திரையால், ஏழையேன் பெற்ற - யெளியேன் அடைந்த, இன்பமும் - நிரதிசயாநந்தமும், சோபனம் - சோபனமாகுக, எ-று.

நிரதிசயம் - தனக்கு மேலானதோர் பொருளின்மை. இறைவனது திருவருட் பெருக்கத்தை யறிவுறுத்தற்கு ஆழிபோலருள் என்றார். சோப னம் - சுபம், நன்மை - மாசின்மை.

6. கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையா
   தியானெனுங் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பாற் பிரிகிலா
   துள்ளன்பு விடாதே
அடுங்கின் றோர்களுக் கிரங்கிடுந்
   தண்டமி ழலங்கல்
தொடுக்கின் றோர்களைச் சோதியா
   ததுபரஞ் சோதி.

இ-ள். தண்தமிழ் அலங்கல் - தண்ணிய தமிழ்ச்சொல் மாலைகளை, தொடுக்கின்றோர்களை - தொடுத்துச் சூட்டுகின்ற அன்பர்களை, சோதியா தது - சோதனை செய்யாததாகிய, பரஞ்சோதி - பரஞ்சுடரானது, கொடுக் கின்றோர்கள்பால் - கொடையாளரிடத்து, குறைவையாது - ஒரு குறை வையும் வைக்காது, யான் என்னும் குதர்க்கம் - யான் என்கிற குதர்க் கத்தை, விடுக்கின்றோர்கள்பால் - விடுப்பவரிடத்து நின்றும், பிரிகிலாது - நீங்காது, உள்ளன்பு விடாது அடுக்கின்றோர்களுக்கு - உள்ளன்புநீங்காம லடுத்திருப்பவர்களுக்கு, இரங்கிடும் - இரங்கியருளும், எ-று.

தண்டமிழ்ப் பாமாலைகளைச் சூட்டுவோரிடத்துப் பிழை பாராட்டாத இயற்கையை யுடைய விறைவன் வரையாது கொடுக்கும் உதாரிகளுக்குக் குறைசெய்யான், யான் என்னும் அகங்காரத்தை விட்டவரை விடான், உள்ளன்போடு அடுத்தவரை யிரங்கியருளுவன் என்பதுகருத்து. உள் ளன்பு விடாதே யடுக்கின்றோர்களுக் கிரங்கிடும் என்பதற் குதாரணம்.

“ மனைவி லங்கறு மைந்தனே கற்பக
   மரங்கனல் புனல் மூன்றும்
தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந்
   தாகமுந் தவிர்த்தாளும்

அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வா
னகன்றவர்க் கருள்செய்யான்
இனைய குற்றங்க ளெவர்குற்ற மாகுமென்
றெண்ணி நீயறிவாயே"—என்னுந் தொடக்கத்தன.

**7.** உலக மாயையி லேயெளி யேன்றனை
யுழல விட்டனை யேயுடை யாயருள்
இலகு பேரின்ப வீட்டினி லென்னையும்
இருத்தி வைப்பதெக் காலஞ்சொ லாயெழில்
திலக வாணுதற் பைந்தொடி கண்ணிணை
தேக்க நாடகஞ் செய்தடி யார்க்கெலாம்
அலகி லாவினை தீர்க்கத் துசங்கட்டும்
அப்ப னேயரு ளானந்தச் சோதியே.

இ-ள்: எழில் - அழகுள்ள, திலகம்-பொட்டணிந்த, வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றியையும், பைப தொடி - பசியவளையலையு முடைய வுமாதேவியின், கண் இணைதேக்க - இருகண்கள் நிறையும்படி, நாடகம் செய்து - நிருத்தஞ்செய்து, அடியார்க்கு எல்லாம் - அடியவர்கட் கெல் லாம், அலகு இல்லா - அளவற்ற, வினைதீர்க்க - கர்மங்களை யொழித்தற் காக, துசம் கட்டும் - கொடி கட்டுகின்ற, அப்பனே - தந்தையே, அருள் ஆநந்த சோதியே - அருளாநந்தங்களையுடைய சுடரே, எளியேன்றனை - ஏழையேனை, உலகமாயையிலே - பிரபஞ்ச மாயையில், உழலவிட்ட னையே - அலைய விட்டாயே, அருள் இலகு - உன் திருவருளால் விளங்கு கின்ற, பேர் இன்பவீட்டினில் - பேராநந்தைத் தருகின்ற மோக்ஷநிலத் தில், என்னையும் - (உனக்காட்படுந் தன்மையில்லாத) என்னையும், இருத்தி வைப்பது - இருக்கச்செய்வது, எக்காலம் - எந்நாள், சொல்லாய் - பேசு வாயாக, எ - று.

அப்பன் என்பதற்கு - உபகாரகன் என்பது பொருள். கடவுளே என்னை உலகமாயையில் உழலவிட்டாயே, இனி யெக்காலம் உனது பேரி ன்பவீட்டினில் இருத்திவைப்பாயோ என்பது கருத்து.

**8.** முன்னிலைச்சுட் டொழுகியெனப் பலகாலு நெஞ்சே நான்
மொழிந்தே னேநின்
தன்னிலையைக் காட்டாதே யென்னையொன் றாச் சூட்டாதே
சாணுன் போந்த

அந்நிலையே நிலையந்த நிலையிலே சித்திமுத்தி
யனைத்துந் தோன்றும்
நன்னிலையீ தன்றியிலை சுகமென்றே சுகர்முதலோர்
நாடி னாரே.

இ - ள். நெஞ்சே - மனமே, முன்னிலைச்சுட்டு ஒழுகி என - முன்னிலையாகச் சுட்டுதலை யொழிவாயாக வென்று, பல்காலும் - பலதாமும், நான் மொழிந்தேனே - நான் சொன்னேனே, நின்றன் நிலையைக் காட்டாது - உனது நிலையைக் காட்டாமலும், என்னை ஒன்றாகச் சூட்டாது - என்னையொரு பொருளாக வையாமலும், நான்சரண் போந்த-நான்சரண் புகுந்த, அந்நிலையே - அந்தநிலையே, நிலை - நன்னிலையாகும், (ஏனெனின்) அந்தநிலையிலே-அந்த நிலையிற்றானே, சித்திமுத்தி அனைத்தும் தோன்றும்-சித்திமுத்திகளெல்லாமுளவாகும், ஈது அன்றி நன்னிலை இல்லை - இதையன்றிவேறுநல்ல நிலையில்லை, சுகம் - இதுவே இன்பநிலையம், என்றே - என்று ஆராய்ந்தறிந்தே, சுகர் முதலோர் நாடினார் - சுகர் முதலானோர் இந்தநிலையை விரும்பினார்கள், எ - று.

முன்னிலைச் சுட்டு - எதிரிட்டறிதல். உன்னிலையு மென்னிலையு மொருங்கொழிய யானொடுங்கி யுய்ந்தநிலையே நன்னிலை யென்பார், நின்றன்னிலையைக் காட்டாதே யென்னை யொன்றாய்ச்சூட்டாதே சரணன்போந்த வந்நிலையேநிலை என்றார். சித்தி - அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், என்பன. அவை முறையே அறச்சிறிதாதலும், அறப்பெரிதாதலும், தன்னுடல் கண்டிப்பின்றிக்கண்டிப் புள்ளவற்றை யுருவவல்லனாதலும், நொய்தாதலும், வேண்டுவன வடைதலும், நிறையுளனாதலும், ஆட்சியுளனாதலும், எல்லாம் தன்வச மாக்கவல்லனாதலுமாம்.

**9.** அத்துவிதம் பெறும்பேறென் றறியாமல் யானெனும்பே
யகந்தை யோடு
மத்தமதி யினர்போல மனங்கிடப்ப வின்னமின்னம்
வருந்து வேனோ
சுத்தபரிபூரணமாய் நின்மலமா யகண்டிதமாய்ச்
சொரூபா னந்தச்
சத்திகணீங் காதவனந் தன்மயமா யருள்பழுத்துத்
தழைத்த வொன்றே.

இ - ள். சுத்த பரிபூரணமாய் - சுத்த நிலையாகிய பரிபூர்ணமாகி, நின்மலமாய் - நிர்மலமாகி, அகண்டிதமாய் - கண்டிக்கப் படாததாகி, சொரூபா

நந்தச் சத்திகள் நீங்காதவண்ணம் தன்மையாய் - சொரூபானந்த சத்திகள் விலகாதபடி தன்மயமாகி, அருள் பழுத்து - அருள் கனிந்து, தழைத்த - செழித்த, ஒன்றே - ஒப்பற்ற பொருளே, பெறும்பேறு - விரும்பியடையத் தக்கபேறு; அத்துவிதம் என்று - அத்வைதமென்று, அறியாமல் - ஆராய்ந் துணராமல், யான் என்னும் - நான்என்கிற, பேய் அகந்தையோடு - பேய்த் தன்மையாகிய அகங்காரத்தோடுகூடி, மத்தம் மதியினர்போல - உன்மத் தங்கொண்டவர்போல, மனம் கிடப்ப - மனமானது விடயச்சேற்றிலழுந் திக்கிடக்க, இன்னம் இன்னம் வருந்துவேனோ - மேலும் மேலும் வருந்து வேனோ, எ-று.

சொரூபானந்த சத்திகள் - ஆத்மாநந்தத்துக் கேதுவாகிய சத்திகள். கடவுளே, அத்துவிதநிலையே நன்னிலையென்றுணராமல் யான் என்னும் அகங்காரத்தோடுகூடி உன்மத்தர்போல மனமானது விடயச்சேற்றி லழுந்திக்கிடக்க, யான் மேலுமேலும் துன்பமடையவோ என்பது கருத்து.

**10.** தந்தை தாயுநீ யென்னுயிர்த் துணையுநீ
சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவுநீ யுனையலான்
மற்றொரு துணைகாணேன்
அந்த மாதியு மளப்பருஞ் சோதியே
யாதியே யடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனெனுஞ்
சிரகிரிப் பெருமானே.

இ - ள். அந்தம் ஆதியும் - முடியடிகளும், அளம்பு அருசோதியே - அள த்தலரிதாயிருந்த சுடர்ப்பிழம்பே, ஆதியே - முதல்வனே, அடியார் சிந்தை மேவிய - அடியவர் மனத்தில் நிலைபெற்ற, தாயுமானவன் என்னும் - தாயு மானவன் என்று சொல்லப்படுகிற, சிரகிரிப் பெருமானே - சிராமலை மேவிய சிவபெருமானே; தந்தைதாயும் நீ - தந்தை தாய்களும் நீயே, என் உயிர்த்துணையும் நீ - என்னுயிர்த் துணைவனும் நீயே, சஞ்சலம் தீர்க்க - என்மனோ சலனங்களை நீக்குதற்தாக, வந்த - நானிருக்குமிடந்தேடிவந்த, தேசிகவடிவும் நீ - ஆசாரிய மூர்த்தமும் நீயே; உனை அல்லால் - உன்னை யன்றி, மற்றொரு துணைகாணேன் - வேறொரு துணையைக் கண்டிலேன்.

அந்தமாதியு மளப்பருஞ் சோதி என்றது நெடியோன் நான்முகன் நிலமகழ்ந்தும் விட்புலம் பறந்து மறியாத அடிமுடிகளை யுடைய சோண சைலத்தை. அன்றி யாவராலும் முடியிது அடியிது என்றறியப்படாத ஒளிப்பிழம்பு எனினுமாம். தாயுமானவன் - மாத்ருபூதேசுவரன்.

**11.** காதி லோலையை வரைந்துமேற் குமிழையுங்
கருவிவேள் கருநீலப்
போது போன்றிடுங் கண்ணியர் மயக்கிலெப்
போதுமே தளராமல்
மாது காதலி பங்கனை யபங்கனை
மாடமா ளிகைசூழும்
சேது மேவிய ராமநா யகன்றனைச்
சிந்தைசெய் மடநெஞ்சே.

இ-ள். மடநெஞ்சே - அறியாமையோடுகூடிய நெஞ்சமே, காதில் ஓலையை - காதிலணிந்த பொன்னோலையை, வரைந்து - சிறுகிட்டு, மேல் குமிழையும் கறுவி - மேற்புறத்துள்ள குமிழம் பூவினையுஞ்சினந்து, வேள் - மன்மதனது, கருநீலப்போது போன்றிடும் - கருநீலப் பூவினையொத்திருக் கின்ற, கண்ணியர் - கண்களையுடைய மாதரது, மயக்கில் - மயக்கத்தில் அகப்பட்டு, எப்போதும் தளராமல் - எப்பொழுதுந் தளர்ச்சியடையாமல், மாது காதலிபங்கனை - ஆசை நாயகியாகிய வுமாதேவியைப் பாகத்திலு டையவனை, அபங்கனை - நாசமில்லாதவனை, மாடமாளிகை சூழும் - மாட மாளிகைகள் சூழ்ந்திருக்கிற, ராமநாயகன்றனை - ராமநாதனை, சிந்தைசெய் - சிந்தனைசெய்வாய், எ-று.

"இருபெருங் குழையிட்ட பொன்னோலையின் வாசியே" என்ற மேலோர்கூற்றைக் களைகணாகக்கொண்டு ஓலை என்றதற்குப் பொன்னோலை யென்று பொருளுரைக்கலாயிற்று. குமிழ் - நாசி. நீலம் மன்மதன் பஞ்ச பாணங்களி லொன்றாதலால், வேள் கருநீலப்போது என்றார். உயிர்க் கிறுதி பயப்பதனைக்காணின் யாவர்தாம் மயங்கித்தளரார், ஆதலினன்றே, இவர், வேள் கருநீலப்போது போன்றிடுங்கண்ணியர் மயக்கிலெப்போதுமே தளராமல் என்றதூஉமென்க. "குழையைச் சிறுகிட்டு" எனமேலோர் கூற லால், வரைந்து, என இவரும் கூறுவாராயினர். சிறுகிடல் - தொலைத்தல். மாதுகாதலிபங்கனை என்பதற்கு மலைவளர் காதலிபங்கன் எனினுமாம். காதலி ஆத லானன்றே பங்களித்தானென்க.

**12.** அண்டமுமாய்ப் பிண்டமுமா யளவிலாத
வாருயிருக் கோருயிரா யமர்ந்தா யானால்
கண்டவரார் கேட்டவரா ருன்றனுன்னைக்
காண்பதல்லா லென்னறிவாற் காணப் போமோ
வண்டுளப மணிமார்பன் புதல்வனோடு
மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்

புண்டரிக புரத்தினிற் நாந்தமௌன
போதாந்த நடம்புரியும் புனித வாழ்வே.

இ-ள். வண் துளப மணிமார்பன் - வளப்பமாகிய துளசிமாலையையணிந்த மார்பையுடையவிட்டுணு, புதல்வரோடு - புத்திரரோடும், மனைவியொடும்-மனையாட்டியோடும், குடியிருந்து-குடியாயிருந்துகொண்டு, வணங்கிபோற்றும் - வணங்கித்துதிக்கின்ற, புண்டரிகபுரத்தினில் - புண்டரிக புரத்தில், நாதாந்தமௌன போதாந்தநடம்புரியும்-நாதாந்தமௌன போதாந்த நடனத்தைச்செய்கின்ற, புனிதவாழ்வே - பரிசுத்தவாழ்வே, அண்டமும் ஆய் பிண்டமும் ஆய் - அண்டபிண்டங்களுமாகி, அளவு இல்லாத - அளவுசெய்தலருமையாகிய, ஆர் உயிருக்கு - நிறைந்த வுயிர்களுக்கு, ஓர் உயிராய் - ஒப்பற்ற வுயிருமாகி, அமர்ந்தாயானால் - நீயமர்ந்திருப்பையாயின், கண்டவர் ஆர் - உன்னைக் கண்டார் யாவர், கேட்டவர் ஆர் - கேட்டார் யாவர், உன்னால் உன்னைக் காண்பது அல்லால் - உன்னாலுன்னைக் காண்பதன்றி, என் அறிவால் - என்னறிவைக் கொண்டு, காணப் போமோ - காணலாகுமோ, எ - று.

நாதாந்த மௌன போதாந்த நடம்புரியும் என்றது நாததத்துவத்தின் முடிவாயுள்ள மகாதீதத்தில் சுட்டுணர்வுக்கெட்டாத நடனஞ்செய்தலை.

"அவனருளாலே யவன்றாள் வணங்கி" என மேலோர் கூறலான் 'உன்றாலுன்னைக் காண்பதல்லா லென்னறிவாற் காணப்போமோ' என்றார். துளபம் மணி எனப்பிரித்து, துளசிமாலையையும் கௌஸ்துப மணியையும் தரித்த என வுரைத்தலுமாம். புண்டரிகம்-புலி. வியாக்ரபாதர் வணங்கின வூராதலால் இதற்குப் புண்டரிக புரமெனப் பெயர்வந்தது. புலியூர் என்பதும் இக்காரணம் பற்றியேவந்தது. அன்றி விராட்புருடனது இருதய கமலஸ்த்தான மென்னலும் பொருந்தும்.

**13.** பொறியிற் செறியைம் புலக்கனியைப்
புந்திக் கவராற் புகுந்திழுத்து
மறுகிச் சுழலு மனக்குரங்கு
மாள வாளா விருப்பேனோ
அறிவுக் கறிவாய்ப் பூரணமா
யகண்டா னந்த மயமாகிப்
பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப்
பெம்மா னேயெம் பெருமானே.

இ-ள். அறிவுக்கு அறிவு ஆய் - உணர்வுக் குணர்வாகி, பூரணமாய்-நிறைவாகி, அகண்ட ஆநந்தமயம் ஆகி - கண்டிக்கப்படாத சுகரூபமாகி, பிறிவு அற்று இருக்கும் - நீக்கமற்றிருக்கிற, பெருங்கருணை - பெருங்கரு

ணையுடைய, பெம்மானே - பெருமானே, எம்பெருமானே - எம்மிறைவனே, பொறியில் செறி - பொறிகளிற் றாங்குகிற, ஐம்புலக்கனியை-ஐம்புலன்களாகிய கனிகளை, புந்திக்கவரால் புகுந்து இழுத்து - புத்தியாகிய மரக்கப்பில் ஏறியிழுத்து, மறுகிச்சுழலும் - மயங்கிச் சுழல்கின்ற, மனக்குரங்கு மாள - மனமாகிய குரங்கு மடியும்படி, வாளா இருப்பேனே - சும்மா இருப்பேனே, எ - று.

அறிவிற்கும் உள்ளீடாயிருந்து அறியுந் தன்மையைக் கொடுப்பவன் இறைவனாதலால், அறிவுக் கறிவாய் என்றார். சும்மாவிருத்தல் - நிச்சலமாயிருத்தல். "பொன்போல விலங்குமனம் சஞ்சலத்தாற் குரங்காம்" என மேலோர் கூறலால், இவரும் மறுகிச்சுழலு மனக்குரங்கு என்றார். இறைவனே என்மனம் அசைவற்றிருக்கும்படி சும்மாவிருக்கப் பெறுவேனோ என்பது கருத்து.

**14.** உரையுணர் விறந்து தம்மை யுணர்பவ ருணர்வி னூடே
கரையிலா வின்ப வெள்ளங் காட்டிடு முகிலே மாறாப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனோ சிறிய னேனே.

இ-ள். உரை உணர்வு இறந்து-சொல்லும் அச்சொற்களுக்குக் கருவியாகிய உணர்ச்சியும் இறக்கப்பெற்று, தம்மை உணர்பவர்-தம்மையுணர்வாராகிய அறிஞரது, உணர்வினூடே - அறிவினுள்ளே, கரை இல்லா - கரையற்ற, இன்பம் வெள்ளம் காட்டிடும் - ஆநந்தப் பெருக்கைக் காட்டுகின்ற, முகிலே - மேகமே, மாறா - நீங்காத, பரை என்னும்-பரையென்று சொல்லப்படுகிற, கிரணம் சூழ்ந்த - கிரணம் சூழப்பெற்ற, பானுவே - சூரியனே, நின்னைப்பற்றி-உன்னைப்பற்றி, திரை இல்லா நீர்போல் - அலையில்லாத கடல்போல, சிறியனேன் - சிறியேன், சித்தம் தெளிவனோ - மனந் தெளிவேனோ, எ - று.

முகில் என்றார் - கைம்மாறு கருதாது உபகரித்தனோக்கி. கிரணமில்லாத பானுவில்லையாமாறு போலப் பரையில்லா விறைவனில்லை யென்பார், 'மாறாப் பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே' யென்றார். நீர் இவ்விடத்துக் கடலுக்காயிற்று, பெரும்பாலும் அலைகளுள்ள ததுவேயாகலின். வடநூலாரும் நிஸ்தரங்க சமுத்ரமென்பர்.

**15.** கேவல சகல மின்றிக் கீழொடு மேலா யெங்கும்
மேவிய வருளின் கண்ணாய் மேவிட மேலா யின்பம்
தாவிடவின்பா தீதத் தனியிடை யிருத்தி வைத்த
தேவெனு மௌனி செம்பொற் சேவடி சிந்தை செய்வாம்.

இ - ள். கேவலசகலம் இன்றி - மறப்பு நினைப்புகளின்றி, கீழொடு மேலாய் - கீழொடுமேலாகி, எங்கும் மேவிய - எவ்விடத்தும் பொருந்திய அருளின்கண் ஆய் - அருட்கண்ணாகி, மேவிட - அடியேன் பொருந்தவும், இன்பம் மேலாய்தாவிட - ஆநந்தமேலிட்டுச் சிறக்கவும், இன்பாதீதத்தனியிடை - ஆநந்தாதீதமாகிய தனியிடத்தில், இருத்திவைத்த - என்னையிருத்திவைத்த, தே என்னும் - தெய்வமென்கிற, மௌனி - மௌனகுருவின், செம்பொன் - செம்பொற்கழலணிந்த, சேவடி - திருவடிகளை, சிந்தைசெய்வாம் - சிந்தனைபண்ணுவோம், எ - று.

செம்பொன் என்பதற்கு செம்பொன்போன்ற என்னலுமாம். இன்பாதீதத் தனியிடை யிருத்திவைத்த மௌனகுருவின் சேவடியைச் சிந்திப்போம் என்பது கருத்து.

**16.** நேற்றுளா ரின்று மாளா நின்றன ரதனைக் கண்டும்
போற்றிலே னின்னை யந்தோ போக்கினேன் வீணேகாலம்
ஆற்றிலே னகண்டானந்த வண்ணலே யளவின் மாயைச்
சேற்றிலே யின்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறியனேனே.

இ - ள். நேற்று உள்ளார்-நேற்றுளராயினோர், இன்று மாளாநின்றனர் - இன்று இலராமாறு மடியாநின்றார், அதனை - அவ்வகையாகிய நிலையாமையைக்கண்டு வைத்தும், நின்னை - சாசுவதனாகியவுன்னை, போற்றிலேன் - வணங்கிலேன், அந்தோ - ஐயோ, காலம்வீணேபோக்கினேன் - காலத்தை வீணாகவே கழித்தேன், ஆற்றிலேன் - (இனியிவ்விடர்களை) சகித்திலேன், அகண்டானந்தம் - அகண்ட சுகத்தை யுண்டாக்குகின்ற, அண்ணலே - பெரியோனே, சிறியனேன் - சிறியேன், அளவு இல் - அளவு செய்தலருமையாகிய, மாயைச் சேற்றிலே - மாயையாகிய அளற்றிலே, வீழ்ந்து - விழுந்து, இன்னம் திளைக்கவோ - இன்னமுழந்துன்பத்தை யநுபவிக்கவோ.

"நெருநலுள னொருவனின் றில்லையென்னும்-பெருமையுடைத் திவ்வுலகு" எனவும், "நேற்றிருந்தாளின்று வெந்துநீறானாள்" எனவும், மேலோர் கூறுதலுங்காண்க. சிறியனேன் அளவில் மாயைச்சேற்றிலே வீழ்ந்து திளைத்தல் அசங்கத மென்றாராயிற்று. நேற்றிருந்தார் இன்றிலராதல் கண்டும் உன்னைப் போற்றிலேன், இவ்வாறு யானிருத்தல் இன்னமும் அளவற்ற மாயையாகிய சேற்றின்கண் வீழ்ந்தழுந்தித் துன்பமுழக்கவோ யானறிந்திலேன் என்பது கருத்து.

**17.** போதமென்பதே விளக்கொவ்வுமவித்தை பொய்யிருளாம்
தீதி லாவிளக் கெடுத்திரு டேடவுஞ் சிக்கா
தாத லர்லறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்.

இ - ள். போதம் என்பதே - அறிவென்று சொல்லப்படுவதே, விளக்கு ஒவ்வும் - தீபத்தையொக்கும், அவித்தை - அஞ்ஞானமே, பொய் இருள் ஆம் - பொய்யாகிய இருளையொக்கும், தீது இல்லா - குற்றமில்லாத, விளக்கு எடுத்து - தீபத்தையேந்திக்கொண்டு, இருள் தேடவும் - இருளைத் தேடினாலும், சிக்காது - கிடைக்காது, ஆதலால் - ஆகையால், அறிவாய் நின்றவிடத்து - ஞானமயமாய் நின்றவிடத்தில், அறியாமை - அஞ்ஞானமானது, ஏதும் இல்லையென்று - சிறிது மில்லையென்று, எம்பிரான் சுருதியே - எம்மிறைவனு லருளிச்செய்யப்பட்ட வேதங்களே, இயம்பும் - கூறாநிற்கும், எ - று.

விளக்குக்குத் தீது இன்மையாவது - நெய் திரி தூண்டுகோல் முதலியவை குறையாதிருத்தல். "விளக்குப் புகவிருண்மாய்ந் தாங்கு" என்றார் மேலோரும். விளக்குக்கெதிரில் இருள் நில்லாததுபோல, ஞானத்துக்கெதிரில் அஞ்ஞானம் நில்லாதென்பது கருத்து.

**18.** சுருதி யேசிவாக மங்களே யுங்களாற் சொல்லும்
ஒருத னிப்பொரு ளளவையீ தென்னவா யுண்டோ
பொருதி ரைக்கட னுண்மண லெண்ணினும் புகலக்
கருத வெட்டிடா நிறைபொரு ளளவையார் காண்பார்.

இ - ள். சுருதியே - வேதங்களே, சிவாகமங்களே - சைவாகமங்களே, உங்களால் சொல்லும் - உங்களால் பிரதிபாதிக்கப்படுகிற, ஒரு தனிப்பொருள் அளவை - ஒரு தனிமைப்பொருளினது அளவையானது, ஈது என்ன - இதுதானென்று துணிந்துசொல்ல, வாய் உண்டோ - வாக்குளதோ, பொருதிரைக் கடல் - கரையை மோதியழிக்கின்ற அலைகளையுடைய கடலினுள்ள, நுண் மணல் எண்ணினும் - நுண்ணியமணலை எண்ணித் தொகை யேற்படுத்தினாலும், புகல கருத - இத்தன்மைத்தென்று வாயினாற் சொல்லவும் மனதினால் நினைக்கவும், எட்டிடா - எட்டாத, நிறைபொருள் அளவை - பரிபூரணப் பொருளினளவை, யார்காண்பார்- யாவர் காணவல்லார், எ - று.

சுருதி இருக்காதிகள், சிவாகமங்கள் காமிகாதிகள். யார் என்பது ஒருவருமில்லை யென்னும்பொருட்டு. சுருதிகளே, சிவாகமங்களே, உங்களாற் பிரதிபாதிக்கப்படுகிற இறைவனது அளவையை யாவர்காணவல்லார் என்பது கருத்து.

**19.** பின்னைப்போன்றன வகிலமென் றறிந்துமெய்ப் பொருளாம்
உன்னைப் போன்றநற் பரம்பொரு ளில்லையென் றோர்ந்து
பொன்னைப் போன்றநின் போதங்கொண் டுன்பணிபொருந்தா
என்னைப் போன்றுள வேழைய ரையவிங் கெவரே.

இ - ள். அகிலம்-பிரபஞ்சங்கள், மின்னைப்போன்றன என்று அறிந்து-(நிலையாமையால்) மின்னலையொத்தன வென்றுணர்ந்து, மெய்பொருள் ஆம் - உண்மைப் பொருளாகிய, உன்னைப்போன்ற - உன்னையொத்த, நல்பரம்பொருள் - நன்மையைத் தருகின்ற மேலான பொருள், இல்லையென்று ஓர்ந்து - இல்லை யென்றுராய்ந்தறிந்து, பொன்னைப்போன்ற-பொன்போலச் சிறந்த, நின்போதங்கொண்டு - நீயருளிய ஞானத்தைக்கொண்டு, உன்பணி பொருந்தா - உன் திருத்தொண்டைப் பொந்தாத, என்னைப்போன்று உள்ள - என்னை யொத்துள்ள, ஏழையர் - அறிவிலிகள், ஐய - ஐயனே, இங்கு எவர் - இவ்வுலகத்தில் யாவர் (ஒருவருமிலர்).

ஓர்தல் - அளவைகளா னுராய்தல். பிரபஞ்சம் - பஞ்சபூதங்களானுகிய பௌதிகத்திரள். "மின்னினிலையில மன்னுயிராக்கைகள்" என்பதற்கேற்ப, இவரும் மின்னைப் போன்றனவகிலம், என்றார். பிரபஞ்சம்போன்ற பொய்ப் பொருளுமில்லை, இறைவனைப்போன்ற மெய்பொருளுமில்லையென்பது கருத்து.

**20.** தாயுந் தந்தையு மெனக்குற வாவதுஞ் சாற்றின்
ஆயு நீயுநின னருளிநின் னடியரு மன்றே
பேய னேன்றிரு வடியிணைத் தாமரை பிடித்தேன்
நாய னேயெனை யாளுடை முக்கணு யகனே.

இ - ள். தாயும் - அன்னையும், தந்தையும்-பிதாவும், எனக்கு உறவு ஆவதும் - எனக்குச் சுற்றமாவதும், சாற்றின்-சொல்லுமிடத்தில், ஆயும் - அறிஞராலாராயப் படுகின்ற, நீயும்-நீயும், நின் அருளும்-உன் திருவருளும், நின் அடியரும் - உன்னடியாரும், அன்றே - அல்லவோ, பேயனேன் - பேயை யொப்பேன், திருவடி-உன் திருவடியாகிய, இணைத்தாமரைபிடித்தேன் - இரண்டு தாமரைமலர்களைப் பற்றினேன், நாயனே - நாதனே, என்னை ஆள் உடை - என்னை யடிமையாகவுடைய, முக்கண் நாயகனே - மூன்று கண்களையுடைய தலைவனே, எ - று.

இறைவன் தந்தையாகவும், திருவருட்சத்தி தாயாகவும், அடியார் உறவினராகவும் கொள்க. "விடைய தூரிறையே தாதை மற்றவன் பான் மின்னெமதன்னை" என்றார் பிறரும். ஆய் - தாய் எனினுமாம். தாமரை திருவடியிணை யென்னுது, திருவடியிணைத் தாமரையென்றது அடித்தன்மை குறைந்து தாமரைத் தன்மை மிக்கிருத்தலானென்க.

**21.** காந்தமதை யெதிர்காணிற் கருந்தாது செல்லுமந்தக் காந்தத் தொன்றே
தேய்ந்தவிட மெங்கேதா னங்கேதான் சலிப்பறவு
மிருக்கு மாபோல்

சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு ளிருக்குமத்தாற்
சலிக்குஞ் சித்தம்
வாய்ந்தபொரு ளில்லையெனிற் பேசாமை நின்றநிலை
வாய்க்கு மன்றே.

இ - ள். காந்தமதை - காந்தத்தை, எதிர்காணின்-எதிரிற்கண்டால், கருந்தாது-இரும்பானது, செல்லும்-அதனிடைச் சென்றுவிழும், அக்காந்தத்து ஒன்றாது - அந்தக்காந்தத்தோடு பொருந்தாமல், எய்த இடம் எங்கே - ஒழிந்துநின்ற இடமெங்கே, அங்கே-அவ்விடத்தில், சலிப்பறவும் இருக்குமாபோல்-சலன மில்லாதிருக்கு மாறுபோல, சாந்தபதம் பரம் பொருளே-சாந்தபதமாகிய பரவஸ்துவே, பற்றுபொருள் - பற்றுதற்குரிய பொருள், இருக்குமத்தால் - இருப்பதனால், சித்தம் சலிக்கும்-மனமசையா நிற்கும், வாய்ந்த பொருள் இல்லையெனின் - பொருந்திய பொருள் இல்லை யாயின், பேசாமை நின்றநிலை - பேசாதுநின்ற நிலை, வாய்க்கும் - கிடைக்கும், எ - று.

தாது - உலோகம். காணின் - இலக்கணை. மனத்துக்கு விடயத்தின் எதிர்டுண்மையாற் சலியாநின்றது அவ்வெதிர் டின்றாயின் அசைவற்று நிற்கும் என்பதாம். "செய்கையுஞ் செப்விக்கையு மற்றிருக்குங் காந்தச்சிலை மலை முன்னிரும்புகள் சேட்டிக்குமாபோல்" என்றார்பிறரும்.

**22.** பொற்பு றுங்கருத் தேயக மாயதிற் பொருந்தக்
கற்பின் மங்கைய ரெனவிழி கதவுபோற் கவினச்
சொற்ப னத்தினுஞ் சோர்வின்றி யிருந்தநான் சோர்ந்து
நிற்ப தற்கிந்த வினைவந்த வாறென்கொ னிமலா.

இ - ள். நிமலா - நிர்மலனே, கற்பின்மங்கையர் என - கற்பினை யுடைய மகளிர்போல, பொற்பு உறும்கருத்தே-அழகுமிக்க கருத்தே, அகமாய் - வீடாக, பொருந்த - பொருந்தவும், விழி - கண்கள், கதவுபோல் கவின - கதவுபோல அழகு செய்யவும், சொற்பனத்தினும் - கனவினும், சோர்வு இன்றி இருந்தநான்-சோர்வில்லாம லிருந்தநான், சோர்ந்துநிற்ப தற்கு - சோர்ந்து நிற்குமாறு, இந்த வினைவந்த ஆறு என் - இந்தக்கர்மம் உண்டான விதம் யாது, எ - று.

நிர்மலனே, உன்னையடுத்த எனக்கு இந்தக்கர்மம் வரலாமோ என்பது கருத்து.

**23.** வந்தவா றிந்த வினைவழி யிதுவென மதிக்கத்
தந்தவா றுண்டோ வுள்ளுணர் விலையன்றித் தமியேன்
நொந்த வாறுகண் டிரங்கவு மிலைகற்ற நூலால்
எந்த வாறினித் தற்பரா வுய்குவே னேழை.

இ - ள். வந்தவாறு - வந்தவிதம், இந்தவினைவழி இது என - இந்தக் கர்ம மார்க்கமாகிய இதுவென்று, மதிக்க - மதித்துணர்தற் குரிய, உள்ளுணர்வு தந்தவாறு உண்டோ-உள்ளுணர்ச்சியை நீ கொடுத்த துண்டோ, இல்லை - இல்லை, அன்றி - அல்லாமலும், தமியேன் - அடியேன், நொந்த ஆறுகண்டு - வருந்தினபடியைக் கண்டு, இரங்கவும் இல்லை - இரங்கியருளவுமில்லை, தற்பரா - தற்பரனே, ஏழை - அறிவிலியாகிய நான், கற்ற நூலால் - கற்ற நூலுணர்ச்சியால், எந்தவாறு - எந்தவகை, இனி உய்குவேன் - இனிப்பிழைப்பேன், எ - று.

நீ யுள்ளுணர்ச்சியைக் கொடாவிடின் நூலுணர்ச்சியால் அடியேனுய்கிலே னென்பதாம்.

**24.** சொல்லாலும் பொருளாலு மளவையாலும்
தொடரவொண்ணு வருணெறியைத் தொடர்ந்து நாடி
நல்லார்க ளவையகத்தே யிருக்கவைத்தாய்
நன்னர் நெஞ்சந் தன்னலமு நணுகுவேனே
இல்லாளி யாயுலகோ டுயிரை யீன்றிட்
டெண்ணரிய யோகினுக்கு மிவனே யென்னக்
கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனிக்
கற்பகமே பராபரமே கயிலை வாழ்வே.

இ - ள். இல்லாளியாய் - குடும்பஸ்த்தனாய், உலகோடு - உலகங்களோடு, உயிரை-அவற்றிலுள்ள உயிர்களையும், ஈன்றிட்டு-தோன்றுவித்து, எண் அரிய-நினைத்தலருமையாகிய, யோகினுக்கு - யோகமார்க்கத்துக்கும், இவனே என்ன-இவனே சிறந்தவனென்று சொல்லும்படி, கல்லாலின்கீழ் இருந்த - கல்லாலமரத்தி னடியில் வீற்றிருந்த, செக்கர் மேனி - செந்நிறமுள்ள, கற்பகமே - கற்பகமரமே, பராபரமே-பராத்பரவஸ்துவே, கைலை வாழ்வே - கைலையில் வாழ்கின்றவனே, சொல்லாலும் - சப்தத்தாலும், பொருளாலும் - அர்த்தத்தாலும், அளவையாலும் - அளவைகளாலும், தொடரவொண்ணு - பற்றக்கூடாத, அருள் நெறியை - அருள் வழியை, தொடர்ந்துநாடி - பற்றிநாடி, நல்லார்கள் அவையகத்தே- நல்லோர் சபையின்கண், இருக்கவைத்தாய் - இருக்கவைத்தனை, நன்னர் நெஞ்சம் தன் நலமும் - நல்லமனத்தினது பேற்றையும், நணுகுவேனே -அடைவேனே.

அடியார் நினைப்பவை யாவு மொருங்களித்தலால் கற்பகம் எனவும், விண்ணுலகத்துக் கற்பகத்தை வேறுபடுக்கக் கல்லாலின் கீழிருந்த செக்கர்மேனிக் கற்பகமே எனவும் கூறினர்.

**25.** சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்தும்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருட னோடு
நின்றதுமுப் பானைந்து நிலவுங் கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயு பத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதி யாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட
நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணியோரே.

இ - ள். இந்திரியம் பத்தும் - தசேந்திரியங்களும், சத்தாதி வசனாதி (பத்தும்) - சத்தாதி வசனாதிகளாகிய விடயங்கள் பத்தும், வாயு பத்தும் - வாயுக்கள்பத்தும், நீக்கம் இல் - நீங்குதலில்லாத, அந்தக்கரணம் - அந்தக் கரணங்கள் நான்கும், புருடனோடு-ஆன்மாவோடு, முப்பான் ஐந்து - முப் பத்தைந்தும், நுதலினில் நின்றது - லலாடத்தில் நின்ற அவஸ்த்தை, சாக்கிரம் ஆ-சாக்கிரா வஸ்த்தையாகவும், நிலவும்-விளங்குகின்ற, கண்டத்து - கண்டத்தில், ஆக்கிய - உண்டாக்கப்பட்டிருக்கிற, சொப்பன மதனில் - ஸ்வப்நாவஸ்த்தையில், வாயுபத்தும் - தசவாயுக்களும், அடுத்தன- அடுத்திருப்பனவாகிய, சத்தாதி வசனாதியாக - சத்தாதி வசனாதிகளாகிய தசவிஷயங்களாக, நோக்கு-பார்க்கப்படுகிற, கரணம்புருடனுடனேகூட- அந்தக்கரணங்கள் நான்கும் ஆன்மாவோடு கூடிநிற்க, இருபத்தைந்து ஆ- இருபத்தைந்து தத்துவங்களாகவும், நுண்ணியோர் - நுண்ணறிவினர் (சொல்லா நிற்பர்), எ - று.

இந்திரியம் பத்தாவன - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரிய மைந்தும்; வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்க ளைந்துமாம். சத்தாதி வசனாதிகளாகிய விடயங்கள் பத்தாவன - சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தங்கள், ஆகிய ஞானேந்திரியவிடயங்கள் ஐந்தும்; வசந; கமந, தாந, விஸர்க்க, ஆநந்தங்களாகிய கர்மேந்திரிய விஷயங்கள் ஐந்துமாம். வாயு பத்தாவன - பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பன. அந்தக்கரணம் நான்காவன - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன.

**26.** சுழுத்திமித யந்தனிற்பி ராணஞ் சித்தம்
சொல்லரிய புருடனுடன் மூன்றதாகும்
வழுத்தியநா பியிற்றுரியம் பிராண னோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்

அழுத்திடுமூ லந்தன்னிற் றுரியா தீதம்
அதனிடையே புருடனொன் றி யமரு ஞானம்
பழுத்திடும்பக் குவரறிவ ரவத்தை யைந்திற்
பாங்குபெறக் கருவி நிற்கும் பரிசு தானே.

இ-ள். இதயம் தன்னில் - இதயஸ்த் தானத்தில், சுழுத்தி - சுழுத்தி யவஸ்த்தை யுளதாம், (அவ்விடத்தில் நிற்குங்கருவிகள்) பிராணம் - பிராண வாயு, சித்தம் - சித்தம், சொல்லரிய - சொல்லுதற் கரிதாகிய, புருடனுடன் - ஆன்மாவோடு, மூன்றதாகும் - மூன்றாகும், வழுத்திய - சொல்லப்பட்ட, நாபியில் - நாபீஸ்த்தானத்தில், துரியம் - துரியாவஸ்த்தையுளதாம், (அவ்விடத்தில்) பிராணனோடு - பிராணவாயுவோடு, மன்னு - நிலைபெற்ற, புருடனும் - ஆன்மாவும், கூட - கூடவே, வயங்காநிற்கும் - பிரகாசியாநிற்கும், அழுத்திடும் மூலந்தன்னில் - அழுத்துதற்குரிய குதஸ்த்தானத்தில், துரியாதீதம் - துரியாதீதாவஸ்த்தையுளதாம், அதனிடை - அதனிடத்தில், புருடன் - ஆன்மா, ஒன்றி அமரும் - தனித்து அமர்ந்திருக்கும், (இவ்வாறு) அவத்தை ஐந்தில்-பஞ்சாவஸ்த்தைகளிலும், பாங்குபெற-பாங்காக, கருவிநிற்கும்பரிசு - கருவிநிற்குந் தன்மையை, ஞானம்பழுத்திடும் பக்குவர் அறிவர் - ஞானம்முதிர்ந்த பக்குவிகள் அறிவார்கள், எ-று.

இந்த அவஸ்த்தா பஞ்சகத்திற் கருவிகள்நிற்கும் தன்மையை ஞானிகள் அறிவார்களேயன்றி மற்றையர் அறியார் என்பதாம்.

**27.** இடத்தைக் காத்திட்ட சுவாவெனப் புன்புலா லிறைச்சிச்
சடத்தைக் காத்திட்ட நாயினே னுன்னன்பர் தயங்கும்
மடத்தைக் காத்திட்டசேடத்தால் விசேடமாய் வாழ
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய் நின்னருள் வேண்டும்.

இ-ள். இடத்தை - (யஜமானனது) இடத்தை, காத்திட்ட - காத்திருந்த, சுவாஎன - நாய்போல, புன்புலால் இறைச்சி - புல்லிய புலால் நாற்றம் வீசுகின்ற மாமிசத்தா லாக்கப்பட்ட, சடத்தை - சரீரத்தை, காத்திட்ட - காத்திருந்த, நாயினேன் - நாயேன், உன் அன்பர் தயங்கும் - உன்னடியார்கள் சஞ்சரிக்கிற, மடத்தை - மடத்தினை, காத்து - காத்திருந்து, இட்ட-அவர்களிட்ட, சேடத்தால்-பரிகலசேஷத்தால், விசேடமாய்வாழ-பெருமைபெற்று வாழ்வதற்கு, விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய் - விஷத்தைத் தடுத்திருத்தின திருமிடற்றை யுடையாய், நின் அருள்வேண்டும் - உன்கிருபா விசேஷம் அடியேனுக்கு வேண்டும், எ-று.

தயங்குதல் - விளங்குதல் எனினுமாம். மடம் - முனிவர்வாசம். உன் அன்பர் என்றமையால் தாம் அன்பரல்லாமை பெறப்படும். படவே, அன்பனல்லாத நானும் உன்னருள் வேண்டுமென்றல் பொருத்தமன்றே

யெனின், அற்றன்று, அபோக்யமான நஞ்சை, போக்யமாகக் கொண்ட நீ, அன்பனல்லாத எனக்கும் அருள்புரிதல் பொருத்தமே யென்னும் பொருள் போதரலாமெனன்க.

**28.** வாத னைப்பழக் கத்தினுன் மனமந்த மனத்தால்
ஓத வந்திடு முரையுரைப் படிதொழி லுளவாம்
ஏத மம்மன மாயையென் றிடிற்கண்ட வெல்லாம்
ஆத ரஞ்செயாப் பொய்யதற் கையமுண் டாமோ.

இ - ள். வாதனைப் பழக்கத்தினுல் மனம் - வாசனைப் பழக்கத்தால் மனமுளதாகும், ஓத - சொல்லுமிடத்து, அந்தமனத்தால் - அந்த மனத்தினுல், உரைவந்திடும் - சொல்லுண்டாம், உரைப்படி - சொல்லின்படியே, தொழில் உள ஆம் - தொழிலுண்டாம், ஏதம் அம்மனம் - குற்றத்தையுடைய அந்தமனமானது, மாயை என்றிடின் - மாயையென்று அறிஞராற் சொல்லப் படுமாயின், கண்ட எல்லாம் - காணப்பட்டனவெல்லாம், ஆதரம் செய்யா - விரும்பத்தகாத, பொய் - மித்தையேயாம், அதற்கு - அப்படி சொல்வதற்கு, ஐயம் உண்டாமோ - சந்தேகமும் ஒருவர்க்குளதாமோ.

மாயா ப்ரபஞ்சமெல்லாம் மனோவிகாரமே என்றற்கு இவ்வாறு கூறினர். மனத்தின்வழியது சொல், சொல்லின் வழியது தொழில் என்பதாம். "தோன்றின மறையும்" எனமேலோர் கூறலால், கண்டவெல்லாம் ஆதரஞ்செயாப் பொய், என்றார்.

**29.** ஐய வாதனைப் பழக்கமே மனநினை வதுதான்
வைய மீதினிற் பரம்பரை யாதினு மருவும்
மெய்யி னின்றொளிர் பெரியவர் சார்வுற்று விளங்கிப்
பொய்ய தென்பதை யொருவிமெய் யுணருதல் போதம்.

இ - ள். ஐய - ஐயனே, வாதனைப்பழக்கமே மனநினைவு - வாசனைப் பழக்கமே மனத்தினெண்ணங்கள், அதுதான் - அவ்வாசனைப்பழக்கமே, வையம்மீதினில் - உலகத்தில், பரம்பரை-பாரம்பரியமாய்த் தொடர்ந்து வருவது, யாதினும் மருவும்-எல்லாப் பொருள்களுள்ளும் வியாபித்திருக்கிற, மெய்யில் - உண்மைப் பொருணிலையில், நின்று - நிலைத்து, (அதனுல்) ஒளிர்-பிரகாசிக்கிற, பெரியவர்-பெரியோர்களுடைய, சார்வு உற்று விளங்கி - சார்பையடைந்து விளங்கி, பொய்யதென்பதை ஒருவி - பொய் யென்று சொல்லப்பட்டதை நீங்கி, மெய் உணருதல் - யதார்த்தத்தை யறிதலே, போதம் - அறிவு, எ - று.

ஆயினும் மருவும் என்றுசில ஏட்டுப்ரதிகளில் காணப்படுகின்றது. அந்தப் பாடத்துக்கு, பாரம் பரியமேயாயினும் எனப்பொருளுரைத்துக் கொள்க. களையுள்ளளவும் பயிர்செழியாவாறுபோல, பொய்யுள்ளளவும்

மெய் செழியாதாதலால், பொய்ய தென்பதை யொருவி மெய்யுணருதல் என்றார். "ஐயறிவறிந்தவை யடங்கினர்களேனும், மெய்யறி விலாதவர்கள் வீடதுபெறுரே" என்றார் மேலோரும்.

**30.** குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம்
புலமி லான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்தும்
இலமி லான்மைந்தர் மனைவியில் லானெவ னவன்சஞ்
சலமி லான்முத்தி தரும்பர சிவனெனத் தகுமே.

இ - ள். (முற்பாட்டில் பெரியவர் என்றார், அவர்க்கிலக்கணம் இப்பாட்டிற் கூறுகின்றார்.) குலமில்லான் - குலமில்லாதவனும், குணம் குறி இல்லான் - குணங்குறிக ளில்லாதவனும், குறைவு இல்லான் - தாழ்வில்லாதவனும், கொடிது ஆம்புலம் இல்லான் - கொடிதாகிய விஷயப்பற்றில்லாதவனும், தனக்கு என்ன - தனக்கென்று, ஓர் பற்று இல்லான் - ஒரு ஆதார மில்லாதவனும், பொருந்தும் இல்லம் இல்லான் - பொருந்துகின்ற வீடில்லாதவனும், மைந்தர்மனைவி இல்லான் - புத்ரகளத்ரர்க ளில்லாதவனும், எவன் - யாவன், அவன் - அவனே, சஞ்சலம் இல்லான் - சலநமற்றவனும், முத்திதரும் பரசிவன் - மோக்ஷத்தைத் தருதற்குரிய பரமசிவனும் ஆவன், எனத்தகும் - என்று சொல்லத்தகும், எ - று.

"நரன்சுரன் ஞானியாமென்பது நன்றல - பிரமமே ஞானியாம்," என மேலோர் கூறலான், இவரும் ஞானியைப் பரசிவன் எனத்தகும் என்றார்.

**31.** கடத்தை மண்ணென வுடைந்தபோ தோவிந்தக் கருமச்
சடத்தைப் பொய்யென விறந்தபோ தோசொலத் தருமம்
விடத்தை நல்லமிர் தாவுண்டு பொற்பொது வெளிக்கே
நடத்தைக் காட்டியெவ் வுயிரையு நடப்பிக்கு நலத்தோய்.

இ - ள். விடத்தை - நஞ்சை, நல் அமிர்து ஆ உண்டு - சிறந்தஅமிர்தமாகக் கொண்டுண்டு, பொன்பொது வெளிக்கு - பொன்னம்பலமாகிய வெளியில், நடத்தைக்காட்டி - நடனஞ்செய்து, எவ்வுயிரையும் - எல்லாவுயிர்களையும், நடிப்பிக்கும் - ஆட்டுகின்ற, நலத்தோய் - உபகார சீலமாகிய நன்மையை யுடையவனே, கடத்தை - மட்குடத்தை, உடைந்த்போதோ - உடைந்த பொழுதிற்றானோ, மண் எனச்சொலத் தருமம் - மண்ணென்று சொல்லத் தருமமாகும், இந்தக் கருமச்சடத்தை - இந்த வினைவயத்தான் வந்த சரீரத்தை, இறந்தபோதோ - இறந்த பொழுதிற்றானோ, பொய்யெனச் சொல்லத் தருமம் - பொய்யென்று சொல்லத் தருமமாகும், எ - று.

குடம் நசியாதிருக்கச் செய்தே மண்ணென்றல் போல, இச்சரீரமும் நசியாதிருக்கச் செய்தே பொய்யெனலா மென்பது கருத்து. ஒருவிபத்தில் நின்று மீண்டவன் உள்ளக்களிப்பாற் கூத்தாட லியற்கையன்றே, இறைவனும் இறுதிபயக்கு நஞ்சையுண்டு அமிர்தாக்கிக் கொண்ட களிப்பாற் கூத்தாடினனென்க. இறைவன் உயிருக் குயிராதலால் அவன் நடிக்க எல்லா வுயிர்களும் நடியாநின்றன வென்றற்கு, நடத்தைக்காட்டி யெவ்வுயிரையு நடிப்பிக்கு நலத்தோய் என்றார். தீமையாகிய இறப்பை யொழித்தலால் அமிர்துநல் என்னும் விசேடணத்தோடு கூடிநின்றது. பொது நடம் என்றது இறைவன் சிதாகாயத்தினின்று பஞ்சக்ருத்யங்களையும் நிகழ்வித்தலை.

**32.** நானெனவு நீயெனவு மிருதன்மை நாடாம
 லடுவே சும்மா
தானமரு நிலையெனவே சத்தியஞ்சத் தியமெனநீ
 தமிய னேற்கு
மோனகுரு வாகியுங்கை காட்டினையே திரும்பவுநான்
 முளைத்துத் தோன்றி
மானதமார்க் கம்புரிந்திங் கலைந்தேனே பரந்தேனே
 வஞ்ச னேனே.

இ - ள். நான் எனவும் - நானென்றும், நீ எனவும் - நீயென்றும், இருதன்மை நாடாமல் - இருவேறு வகையாகப் பிரித்துணராமல், நடுவே - இடையாக, சும்மாதான் அமரும் நிலை இதுவே - சும்மாவிருக்கின்ற நிலையாகிய இதுவே, சத்தியம் சத்தியம் என - உண்மையுண்மை யென்று, நீ - நீ, தமியனேற்கு - தமியேனுக்கு, மோன குரு ஆகியும் - மௌன குருவாகியும் வந்து, கைகாட்டினையே - கையமைத்து உண்மை நிலையைக் காட்டினையே, (அவ்வாறாகியும்) திரும்பவும் - மீட்டும், நான் முளைத்துத் தோன்றி - நான் அங்குரித்து வெளிப்பட்டு, மானதமார்க்கம் புரிந்து - மாநஸ மார்க்கத்தையே விரும்பி, இங்கு - இவ்விடத்து, அலைந்தேனே - திரிந்தேனே, பரந்தேனே - விஷயங்களிற் பரவினேனே, வஞ்சனேன் - பாவியேனாதலால், எ - று.

மானதாமார்க்கம் - மனம்போன நெறியேபோதல். நீ மௌனகுருவாகி வந்து, அபேதமாய்ச் சும்மாவிருத்தலே உண்மை நிலையென்றுகையமைத்தும், நான்பாவி யாதலால், இன்னமும் என்மனம் செல்லும்வழியே செல்லாநின்றேன் என்பது கருத்து.

**33.** தன்மயஞ் சுபாவஞ் சுத்தந் தண்ணருள் வடிவஞ் சாந்தம்
மின்மய மான வண்ட வெளியுரு வான பூர்த்தி
என்மய மெனக்குக் காட்டா தெனையப கரிக்க வந்த
சின்மய மகண்டா காரந் தக்ஷிணா திக்க மூர்த்தம்.

இ - ள். தக்ஷிணா திக்க மூர்த்தம்-தக்ஷிணாமூர்த்தமானது, தன்மயம் தன்மயமும், சுபாவம் - சுபாவமும், சுத்தம் - சுத்தமும், தண் அருள் வடிவம் - குளிர்ந்த அருளுருவமும், சாந்தம் - சாந்தமும், மின்மயமான - மின்னுருவான, அண்டவெளி - அண்டவெளியில், உருவான - உருவாகி நின்ற, பூர்த்தி - நிறைவும், என்மயம் - என்னுருவத்தை, எனக்குக்காட்டாது - எனக்குக் காட்டாமல், என்னை அபகரிக்கவந்த - என்னைக் கவர வந்த, சின்மயம் - ஞானரூபமும், அகண்டாகாரம் - அகண்டாகாரமும் ஆம், எ - று.

என்மயம் என்றது ப்ரக்ருதி வயப்பட்டுழலும் அஞ்ஞான ரூபத்தை. எல்லாந் தானேயா யிருத்தலால் தன்மயம் என்றும், செயற்கையற்று இயற்கையாயே யிருத்தலால் சுபாவம் என்றும், உயிர்களின் மலவழுக்கைப் போக்குதலால் சுத்தமென்றும், கிருபாரூபமா யிருத்தலால் தண்ணருள் வடிவம் என்றும், முத்தாபக் கோடை தணிந்து விசிராந்தியடைதற்கிடமா யிருத்தலால் சாந்தம் என்றும், சிதாகாயத்தில் தேஜோரூபமாய் விளங்கலால் மின்மயமான வண்ட வெளியுருவான பூர்த்தி என்றும், சீவபோதத்தை யறக்கெடுத்தலால் என்மயமெனக்குக்காட்டாதென்னை யபகரிக்க வந்த சின்மயம் என்றும், கண்டிக்கப்படா திருத்தலால் அகண்டாகாரம் என்றுங் கூறினார்.

**34.** சிற்ற ரும்பன சிற்றறி வாளனே தெளிந்தால்
மற்ற ரும்பென மலரெனப் பேரறி வாகிக்
கற்ற ரும்பிய கேள்வியான் மதித்திடக் கதிச்சீர்
முற்ற ரும்பிய மௌனியாய்ப் பரத்திடை முளைப்பான்.

இ - ள். சிற்றரும்பு அன்ன-சிற்றரும்பையொத்த, சிற்றறிவாளனே தெளிந்தால்-சிற்றறிவனாகிய ஜீவனே தெளிவானாயின், மற்று அரும்பு என - பேரரும்பு போலவும், மலர் என - மலர்போலவும், பேர் அறிவு ஆகி-பேரறிவையுடையனாகி, கற்று - கற்கவேண்டு மறிவு நூல்களைக்கற்று, அரும்பிய கேள்வியால் - உண்டாகிய கேள்விகளால், மதித்திட-யாவரும் மதிக்கும்படி, கதிச்சீர் முற்று அரும்பிய - நற்கதிக்குரிய சீரிய குணங்களெல்லாம் உளனாகிய, மௌனிஆய் - மௌந நிலையை யுடையனாகி, பரத்திடை முளைப்பான் - மோக்ஷ நிலத்தில் முளைப்பான், எ - று.

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான் - வரனென்னும் வைப்புக் கோர்வித்து" என்றார் மேலோரும். கிஞ்சிஜ்ஞனே மெய்யறிவால் சர்வஜ்ஞனாவ னென்பதாம்.

**35.** மயக்கு சிந்தனை தெளிவென விருநெறி வகுப்பால்
நயுக்கி மொன்றன்பா லொன்றிலை யென்னல வழக்கே

இயக்க முற்றிடு மயக்கத்திற் றெளிவுற லினிதாம்
பயக்க வல்லதோர் தெளிவுடை யவர்க்கெய்தல் பண்போ.

இ - ள். மயக்கு சிந்தனை (என) - மயக்கப்பட்ட மனமெனவும், தெளிவு என - அந்த மனத்தெளிவு எனவும், இருநெறி வகுப்பால் - இரண்டு மார்க்கத்தின் பிரிவினால், நயக்கும் - விரும்பப்பட்ட, ஒன்றன்பால் - ஒன்றினிடத்து, ஒன்று இல்லையெனல் - ஒன்றில்லையென்று சொல்லுதல், நல்வழக்கே - நல்வழக்கேயாம், இயக்கம் உற்றிடும் மயக்கத்தின் - சஞ்சரிக்கிற மயக்கத்தினும், தெளிவுறல் இனிது ஆம் - தெளிவடைதல் இனிதாகும், பயக்கவல்லது - பயன்படுதல் வல்லதாகிய, ஓர் தெளிவுடையவர்க்கு - ஒப்பற்ற தெளிவினை யுடையவர்க்கு, எய்தல் - மயக்கம்வந்து பொருந்துதல், பண்போ - குணமாமோ, எ - று.

மயக்கமும் தெளிவும் ஒன்றற்கொன்று முரணுடைப் பொருள்களாதலால், தெளிவுடையாரிடத்து மயக்க முண்டாதல் பொருத்தமன்றென்பதாம்.

**36.** அருள்வடி வேழு மூர்த்த
மவைகள் சோ பாநமென்றே
சுருதிசொல் லியவாற் றாலே
தொழுந்தெய்வ மெல்லா மொன்றே
மருளெனக் கில்லை முன்பின்
வருநெறிக் கிவ்வ ழக்குத்
தெருளின்முன் னிலையாமுன்னைச்
சேர்ந்தியான் றெளிகின் றேனே.

இ - ள். அருள்வடிவு ஏழுமூர்த்தம் (என்று) - உன்னருளுருவானது ஏழுமூர்த்தமா யிருக்குமென்றும், அவைகள் - அந்த மூர்த்தங்கள், சோபாநம் என்று - (உன்னை யடைதற்குப்) படிகளாமென்றும், சுருதி சொல்லிய ஆற்றாலே - வேதங்கள் சொன்ன பிரகாரத்தாலே, தொழும் தெய்வம் எல்லாம் ஒன்றே - (எச்சமயத்தாரும்) தொழுகின்ற கடவுள் ஒருவனே, முன்பின்வரு நெறிக்கு - முன்னும் பின்னும் வந்ததும் வரப் போவதுமாகிய வழிக்கு, எனக்கு மருள் இல்லை - எனக்கு மயக்கமில்லை, தெருளின் - தெளிவாக, முன்னிலை ஆம் உன்னை - எனக்குப் பிரத்தியக்ஷமாகிய நின்னை, சேர்ந்து - அடைந்து, இவ்வழக்கு - இந்தவழக்கை, யான் தெளிகின்றேன் - நான் தெளியாநின்றேன், எ - று.

எழுமூர்த்தம்-எழூருவங்கள். அவை திருமால், இந்திரன், பிரமன், உபமந்யு, சூரியன், நந்தி, முருகன் என்னு மிவ்வேழுருவங்கள். இவ்வாறன்றி சதாசிவன், அநந்தன், ஸ்ரீகண்டன், அம்பிகை, கந்தர், திருமால், பிரமன், இவர்களுருவங்களென்றுங் கூறுப. அபௌருஷேயமாய், நித்யநிர்த்தோஷங்களாய், எல்லாச்சமயத்தார்க்கும் த்ருடதர ப்ரமாணங்களாயிருக்கிற வேதங்கள் சொல்லுகையால் தெய்வமொன்றே, எனக்கு இவ்விஷயத்தில் மயக்கமில்லை யென்பார், சுருதிசொல்லிய வாற்றாலே தொழுந்தெய்வமெல்லாமொன்றே மருளெனக்கில்லை 'யென்றார். முன் பின் என்பன இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையுஞ் சுட்டிநின்றன. தெருளுடையாரைச் சேர்ந்தாருந் தெளிவுடையராதல் திண்ணமாதலால், 'தெருளின் முன்னிலையா முன்னைச்சேர்ந்தியான் றெளிகின்றேனே' என்றார்.

**37.** எத்தனைப் பிறப்போ வெத்தனை யிறப்போ
வெளியனேற் கிதுவரை யமைத்த
தத்தனை யெல்லா மறிந்தநீ யறிவை
யறிவிலி யறிகிலே னந்தோ
சித்தமும் வாக்குந் தேகமு நினவே
சென்மமு மினியென லாற்று
வைத்திடிங் கென்னை நின்னடிக் குடியா
மறைமுடி யிருந்தவான் பொருளே.

இ - ள். எளியனேற்கு - எளியேனுக்கு, இதுவரை அமைத்தது-இதுவரையி லமைக்கப்பட்டது, எத்தனை பிறப்போ - எத்தனை ஜந்மமோ, எத்தனை இறப்போ - எத்தனை மரணமோ, அத்தனை - அவ்வளவை, எல்லாம் அறிந்த நீ அறிவை - சர்வஜ்ஞனை நீ யறிவாய், அறிவிலி - அறிவற்ற நான், அறிகிலேன் - அறியுமாற்றலிலேன், அந்தோ - ஐயோ, சித்தமும் - மனமும், வாக்கும் - வாக்கும், தேகமும் - காயமும், நினவே - உன்னுடையனவே, சென்மமும் - பிறப்பும், இனி என்றால் ஆற்று - இனியென்றால் சகிக்கமுடியாது, (ஆதலால்) இங்கு - இவ்விடத்து, என்னை - அடியேனை, நின் அடி குடி ஆ வைத்திடு - உன்னடிமைக் குடியாக வைத்தருளுவாய், மறைமுடி இருந்த - வேதத்தின் சிரசில் தங்கியிருந்த, வான் பொருளே - மேலான வஸ்துவே, எ - று.

வேதமுடிப் பொருளே, இது காறும் எனக்குண்டாகிய ஜநந மரணங்களுக் கெல்லையில்லை, இனியவை யாற்றகிலேன், என் மனவாக்குக்காயங்களும் உன்னுடையனவே, ஆதலால் என்னை உன்னடிமைக் குடியாக வைத்தருளல் வேண்டும் என்பதாம்.

**38.** வான்பொரு ளாகி யெங்கு நீ யிருப்ப
வந்தெனைக் கொடுத்திநீ யாகா
தேன்பொருள் போலக் கிடக்கின்றேன் முன்னை
யிருவினை வாதனை யன்றோ
தீன்பொரு ளான வமிர்தமே நின்னைச்
சிந்தையிற் பாவனை செய்யும்
நான்பொரு ளானே னைல்லநல் லரசே
நானிறந் திருப்பது நாட்டம்.

இ - ள். வான் பொருள் ஆகி - மேலான பொருளாகி, எங்கும் நீ இருப்ப - எவ்விடத்தும் நீ யிருக்கச்செய்தே, வந்து என்னைக் கொடுத்து - வந்து என்னை யுனக்குக்கொடுத்து, நீயாகாது - நீயாய் விடாமல், பொருள் போல - ஜடப்பொருள்போல, ஏன் கிடக்கின்றேன்-ஏன் கிடவாநின்றேன், (இவ்வாறு கிடத்தற்குக் காரணம்) முன்னை இருவினை வாதனை அன்றோ - முன்செய்த இருவினைகளின் வாசனை யல்லவா, தீன்பொருள் ஆன அமிர்தமே - பருகற்குரிய பொருளாகிய அமிர்தமே, நின்னை-உன்னை, சிந்தையில்-மனத்தில், பாவனை செய்யும் - பாவனை பண்ணுகின்ற, நான்-அடியேன், பொருள் ஆனேன் - ஒரு பொருட்டன்மை யுடையே னாயினேன், நல்ல நல் அரசே - மிகவும் நல்ல அரசே, நான் இறந்திறப்பது - நானற்றிருப்பதே, நாட்டாம் - என்னால் விரும்பப்படுவது, எ - று.

சர்வவியாபகனாய் நீ யிருக்கவும், அதனை யுணர்ந்து என்னை யுனக்குக் கொடுத்து உன்னி லொடுங்காமல் ஜடப்பொருள்போல யாதுக்குக் கிடவாநின்றேன், அவ்வா றிருத்தற்குக் காரணம் இருவினை வாசனை யல்லவா, ஆயினும் நானென்ப தற்றிருத்தலின்கண்ணே எனக்கு நோக்கு என்பதாம். என்னைக் கொடுத்து நீயாகாது என்றது சிவபோத மிழந்து சிவ்போதமாய் நில்லாமையை.

**39.** நாட்டமூன் றுடைய செந்நிற மணியே
நடுவுறு நாயக விளக்கே
கோட்டமில் குணத்தோர்க் கெளியகிர்க் குணமே
சோதிலா வமிர்தமே நின்னை
வாட்டமி னெஞ்சங் கிண்ணமாச் சேர்த்து
வாய்மடுத் தருந்தின ளுங்கே
பாட்டளி நறவ முண்டயர்ந் ததுபோற்
பற்றயர்ந் திருப்பதெந் நாளோ.

இ - ள். நாட்டம் மூன்று உடைய - மூன்று கண்களையுடைய, செந்நிறம் மணியே - செந்நிறமுள்ள மாணிக்கமே, நடுவுறு நாயக விளக்கே-எல்

லாப் பொருள்களுக்கும் இடையே விளங்குகின்ற பெருந் தீபமே, கோட்டம் இல் குணத்தோர்க்கு - குற்றமற்ற குணத்தையுடைய அறிஞர்க்கு, எளிய - எளியனாய்த் தோன்றுகின்ற, நிர்க்குணமே - நிர்க்குணவஸ்துவே, கோது இல்லா - குற்றமில்லாத, அமிர்தமே - அமிழ்தே, நின்னை - உன்னை, வாட்டம் இல் - வாடுதலில்லாத, நெஞ்சம் - மனம், கிண்ணம் ஆ சேர்த்து - கிண்ணமாகப் பொருத்தி, வாய்மடுத்து அருந்தினன் - வாய் வைத்துப்பருகி, ஆங்கே - அவ்வாறே, பாட்டு அளி - இசைப்பாட்டைப் பாடுகின்ற வண்டுகள், நறவம் உண்டு அயர்ந்ததுபோல் - தேனுண் டயர்ந்தாற்போல, பற்று அயர்ந்துஇருப்பது - பற்றுதலற்றுஇருப்பது, எந்நாளோ - எக்காலமோ, எ-று.

பற்றயர்ந் திருத்தல் - பரவசப்பட் டிருத்தல். ஈற்றில் அமிர்தமே யென்றதனால், நெஞ்சம் கிண்ணமாச் சேர்த்து வாய்மடுத் தருந்துதற் குரிய தாயிற்று. இறத்தற்குரிய அமரருண்ணு மதை யமிர்தமென்றல் அடாதென்றற்கு இறவாப்பதந் தருதற்குரிய இறைவனைக் கோதிலா வமிர்தம் என்றார்.

**40.** என்னுடை யுயிரே யென்னுளத் தறிவே
யென்னுடை யன்பெனு நெறியாய்
கன்னன்முக் கனிதேன் கண்டமிர் தென்னக்
கலந்தெனை மேவிடக் கருணை
மன்னிய வுறவே யுன்னைநான் பிரியா
வண்ணமென் மனமெனுங் கருவி
தன்னது வழியற் றென்னுழைக் கிடப்பத்
தண்ணருள் வரமது வேண்டும்.

இ - ள். என்னுடை உயிரே - என துயிரே, என் உள்ளத்து அறிவே - என் மனத்தின் கண்ணதாகிய வுணர்வே, என்னுடை அன்பு என்னும்நெறியாய் - என தன்பென்கிற நெறியையுடையவனே, கன்னல் - கருப்பஞ்சாறும், முக்கனி - முக்கனிகளும், தேன் - தேனும், கண்டு - கற்கண்டும், அமிர்து - அமிர்தமும், என்ன - போல, என்னைக் கலந்துமேவிட - என்னைக்கூடிவாழ, கருணை மன்னிய உறவே - கிருபை நிலைபெற்ற வுறவே, உன்னை நான் பிரியாவண்ணம் - உன்னை நான் பிரியாவகை, என் மனம் என்னும் கருவி - என் மனமென்கிற சாதநமானது, தன்னது வழி அற்று - தன் நெறியைவிட்டு, என்னுழை கிடப்ப - என்னிடத்துத் தங்கிக்கிடக்க, தண்ணருள் வரம்வேண்டும் - தண்ணிய உனது அருள் வரமெனக்கு வேண்டுவது, எ - று.

வான்பொருள் என்பது முதல் இம் மூன்று பாட்டினும் இறைவனை அமிர்தம் என்றார், தம்மை யழியாப் பதந்தந்தளிப்போன் என்பது தோன்ற. என் மனமானது என் வயப்பட்டிருக்க உன்வரம் பெறவேண்டுகிறேன் என்பது கருத்து.

## எனக்கெனச்செயல்.

**1.** எனக்கெ னச்செயல் வேறிலை யாவுமிங் கொருநின்
தனக்கெ னத்தகு முடல்பொரு ளாவியுந் தந்தேன்
மனத்த கத்துள வழுக்கெலா மாற்றியெம் பிரானீ
நினைத்த தெப்படி யப்படி யருளுத னீதம்.

இ - ள். எனக்கு என-எனக்கென்றுசொல்ல, வேறுசெயல் இல்லை-வேறு செய்கையில்லை, யாவும் - எல்லாம், இங்கு - இவ்விடத்தில், ஒரு-ஒப்பற்ற, நின்தனக்கு எனத்தகும் - உனக்கே யுரியனவென்று சொல்லத் தகும், (ஆதலால்) உடல்பொருள் ஆவியும் தந்தேன் - உடல் பொருளாவிகளாகிய மூன்றனையு முனக்குக்கொடுத்தேன், மனத்து அகத்து உள்ள-என் மனத்திலுள்ள, அழுக்கு எல்லாம் மாற்றி - களங்கமெல்லாம் நீக்கி எம்பிரான் - எம்பெருமானே, நீ நினைத்தது எப்படி - நீ கருதினது எவ்வாறோ, அப்படி - அவ்வாறே, அருளுதல் - கிருபைசெய்தல், நீதம் - நீதியாகும், எ - று.

எம்பிரானே, எனக்கெனவொரு செயலுமில்லையாதலால் என்னுடல் பொருளாவிகளை யுனக்குக் கொடுத்தேன், என் மனமாசகற்றி உன் திருவுளப்படி நடத்துதல் உனக்கு நீதியாம் என்பது கருத்து.

**2.** உளவ றிந்தெலா நின்செய லாமென வுணர்ந்தோர்க்
களவி லானந்த மளித்தனை யறிவிலாப் புன்மைக்
களவு நாயினேற் கிவ்வண மமைத்தனை கருத்துத்
தளருந் தன்மையிங் காரொடும் புகலுவேன் தக்கோய்.

இ - ள். உளவு அறிந்து - உன் உட்கிடையை யுணர்ந்து, எல்லாம் நின்செயல் ஆம்என உணர்ந்தோர்க்கு-எல்லாமுன்செயலாமென் றறிந்தவர்கட்கு, அளவு இல் - அளவற்ற, ஆநந்தம் அளித்தனை - இன்பத்தைக் கொடுத்தாய், அறிவு இல்லா - அறிவற்ற, புன்மை - அற்பத்தன்மையும், களவு - திருட்டுத்தனமுமுள்ள, நாயினேற்கு - நாயேனுக்கு, இவ்வண்ணம் அமைத்தனை - இவ்வாறு அமைத்தாய், கருத்து - என் மனமானது, தளரும் தன்மை-தளர்கின்ற தன்மையை, தக்கோய்-தகுதியுடையோனே, இங்கு - இவ்விடத்து, ஆரொடும் புகலுவேன் - ஆரோடு சொல்லிக் கொள்வேன், எ - று.

உன்னுளவறிந்த அறிஞருக்கு இன்பமருளினை, அறியாமையுள்ள எனக்குத் துன்பமருளினை, என் மனந்தளரும் நிலையை யாரோடு சொல்லி யாற்றுவேன் என்பது கருத்து.

**3.** என்னைத் தானின்ன வண்ணமென் றறிகிலா வேழை
தன்னைத் தானறிந் திடவருள் புரிதியேற் றக்கோய்

பின்னைத் தானின்ற னருள்பெற்ற மாதவப் பெரியோர்
நின்னைத் தானிக ராரென வாழ்த்துவர் நெறியால்.

இ - ள். என்னை இன்னவண்ணம் என்று அறிகிலா - என்னை இன்ன தன்மையே னென்றறியு மாற்றலில்லாத, ஏழை - எளியேன், தன்னைத் தான் அறிந்திட - தன்னைத்தா னுணருமாறு, அருள்புரிதியேல் - அருள் செய்வையாயின், தக்கோய் - தகுதியுடையானே, பின்னை - பிறகு, நின் றன் அருள்பெற்ற - உன் கிருபையைப்பெற்ற, மாதவம் பெரியோர்-மாத வர்களாகிய பெரியோர்கள், நெறியால்-முறையினால், நின்னை நிகர்-உன்னை நிகர்வார், ஆர் என - யாவரென்று, வாழ்த்துவர் - புகழ்வார்கள், எ-று.

என்னை யின்னனென்றுணராத அறிவிலேனை, என் சிறுமைநோக்கா தருள்செய்வையாயின், உன் திருவருள்பெற்ற மாதவர், உன்னைக் கருணை யால்நிகர்ப்பவர் யாவரென்று உன்னைக் கீர்த்தித்துக் கொண்டாடுவார்கள் என்பது கருத்து. தன்னை யென்றது ஈண்டு முன்னிலைக்கண்ணது.

4. ஏத மின்றித்தன் னடியிணைக் கன்புதா னீட்டும்
காத லன்பர்க்குக் கதிநிலை யீதெனக் காட்டும்
போத நித்திய புண்ணிய வெண்ணரும் புவன
நாத தற்பர நானெவ்வா றுய்குவே னவிலாய்.

இ - ள். ஏதம் இன்றி - குற்றமில்லாமல், தன் அடியிணைக்கு - உன் திருவடிகளுக்கு, அன்பு ஈட்டும் - அன்பைச் செய்கின்ற, காதல் அன் பர்க்கு - ஆசையையுடைய அன்பர்களுக்கு, கதிநிலை - முத்திநிலையானது, ஈது எனக்காட்டும் - இதுவென்று காட்டுகின்ற, போத - முற்றறிவனே, நித்திய - சாசுவதனே, புண்ணிய - புண்ணியவானே, எண் அரு - எண் ணுதலருமையாகிய, புவனம் - புவனங்களுக்கு, நாத - இறைவனே, தற் பர - தற்பரனே, நான் எவ்வாறு உய்குவேன் - நான் எவ்விதம் பிழைப் பேன், நவிலாய் - சொல்லாய், எ - று.

உன் திருவடிக்கண் அன்புசெய்வார்க்கு முத்திநிலை யிதுவென்று காட்டுகின்ற சர்வஜ்ஞனே, அவ்வாறு அன்புசெய்யாத நான் எப்படி பிழைப்பேன் என்பதாம்.

5. வேத மெத்தனை யத்தனை சிரத்தினும் விளங்கும்
பாத நித்திய பரம்பர நிரந்தர பரம
நாத தற்பர சிற்பர வடிவமாய் நடிக்கும்
நீத நிர்க்குண நினையன்றி யொன்றுநா னினையேன்.

இ - ள். வேதம் எத்தனை - வேதமென்பன எத்தனை, அத்தனை சிரத் தினும் - அத்தனை வேதங்களின் முடிகளிலும், விளங்கும் - பிரகாசியா

நின்ற, பாத - திருவடிகளையுடையவனே, நித்திய - சாசுவதனே, பரம்பர- பரம்பரனே, நிரந்தர - என்றுமுள்ளவனே, பரம - மேலானவனே, நாத- நாயகனே, தற்பர - தற்பரனே, சிற்பரவடிவமாய் - சிற்பரவடிவாகி, நடிக் கும் - நடிக்கின்ற, நீத - நீதியையுடையவனே, நிர்க்குண - நிர்க்குணனே, நின்னை அன்றி - உன்னை யல்லது, ஒன்றும் - வேறொன்றையும், நான் நினையேன் - நான் நினைக்கமாட்டேன், எ - று.

வேதமுடியில் விளங்கும் திருவடிகளை யுடையவனே, உன்னையன்றி நான் வேறொரு பொருளையும் நினையேன் என்பதாம்.

6. நெறிக டாம்பல பலவுமா யந்தந்த நெறிக்காம்
செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தால்
அறியுந் தன்மையிங் காருனை யறிவினு லறிந்தோர்
பிறியுந் தன்மையில் லாவகை கலக்கின்ற பெரியோய்.

இ - ள். நெறிகள் தாம் பலபலவும் ஆய் - மார்க்கங்கள் அநேகமாய், அந்தந்த நெறிக்கு ஆம் - அந்தந்த மார்க்கங்களுக் கிணங்கிய, செறியும் தெய்வமும் - மிக்க தெய்வங்களும், பல பல ஆகவும் - அநேகமாகவும், செறிந்தால் - நீ நிறைந்திருப்பையாயின், இங்கு - இவ்வுலகில், உன்னை அறியும் தன்மை - உன்னை யுணரும் தன்மையர், ஆர் - யாவர், அறிவினால் அறிந்தோர் - அறிவினு லறிந்தோர்கள், பிறியும் தன்மை இல்லாவகை - நீங்கும் வகையில்லாதபடி, கலக்கின்ற - அவர்களைக் கூடுகின்ற, பெரி யோய் - பெரியோனே, எ - று.

தன்மை - தன்மையுடையாரை யுணர்த்தி நின்றது. அறிவினால் உன்னை யறிந்தோர்களைப் பிரிவறக் கலக்கின்ற பெரியோனே, சமயமார்க் கங்கள் அநேக மாகவும் அவைகட்குரிய தெய்வங்கள் அநேகமாகவும் நீயே யிருப்பின், உன்னையறியுந் தரத்தினர் யாவர் என்பதாம்.

7. பெரிய வண்டங்க ளெத்தனை யமைத்தவிற் பிறங்கும்
உரிய பல்லுயி ரெத்தனை யமைத்தவைக் குறுதி
வருவ தெத்தனை யமைத்தனை யமைத்தருள் வளர்க்கும்
அரிய தத்துவ வெனக்கிந்த வண்ணமே னமைத்தாய்.

இ - ள். பெரிய அண்டங்கள் எத்தனை அமைத்து - பெரியனவாகிய அண்டங்கள் எத்தனைவகுத்து, அவில் பிறங்கும் - அவற்றுள் விளங்கு கின்ற, உரிய பல் உயிர் எத்தனை அமைத்து - உரியனவாகிய பலவகைப் பட்ட வுயிர்கள் எத்தனைவகுத்து, அவைக்கு உறுதிவருவ- அவைகட்குறுதி பயப்பனவாகிய பொருள்கள், எத்தனை அமைத்தனை - எத்தனை வகுத் தாய், அமைத்து - இவ்வாறு வகுத்து, அருள்வளர்க்கும் - (அவற்றின் மேல்) கிருபையைப் பெருக்குகிற, அரிய தத்துவ - அரிதாகிய வுண்மைப்

பொருளா யிருப்பவனே, எனக்கு - அடியேனுக்கு, இந்தவண்ணம் - இந்தப்பிரகாரம், ஏன் அமைத்தாய் - ஏன் அமைத்தனை, எ - று.

அண்டங்கள் என்ற பன்மை சகல அண்டங்களையும் உணர்த்தி நின்றது. உயிர்கள் என்றது இயங்கு திணை, நிலைத்திணை யென்பவற்றை. இவற்றை வடநூலார் சரம் அசரம் என்பர். அவைகளுக்குஉறுதிவருவ என்றது அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றை. இவற்றை வடநூலார் புருஷார்த்த சதுஷ்டயம் என்பர். இவற்றை இருவகை யுயிர்களுக்கு ஏற்ற பெற்றி யியைத்துக்கொள்க. இந்த வண்ணம் என்றது உன்னருளின்றி வருந்துகிற இந்த நிலையென்றபடி. இங்ஙனமாகவும் அடியேன் என்றார் உயிர்கள் அநாதியே யிறைவற்கடிமைகளா யிருந்தமை நோக்கி. அண்ட முதலியவைகளை வகுத்து அவற்றை யருளினாற் காக்கின்ற நீ என்மீது கிருபையில்லாதிருத்தல் அவ்வுயிர்களில் நான் ஒருவனல்லேனென்று கருதியோ என்பது கருத்து.

**8.** கணமதேனுநின் காரணந் தன்னையே கருதி
உணருமாதவர்க் கானந்த முதவினை யொன்றுங்
குணமிலாதபொய் வஞ்சனுக் கெந்தைநிர்க் குணமா
மணமுலாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார்.

இ - ள். கணமதேனும் - க்ஷணகாலமாயினும், நின்காரணந் தன்னையே - உன் சர்வ காரணத்வத்தையே, கருத்தின் - மனத்தினால், உணரும் - அறிகிற, மாதவர்க்கு - பெரிய தவத்தினர்க்கு, ஆநந்தம் உதவினை - இன்பத்தைக் கொடுத்தாய், ஒன்றும் குணம் இல்லாத - சிறிதும் குணமில்லாத, பொய் வஞ்சனுக்கு - பொய்வஞ்சகங்களை யுடையேனுக்கு, எந்தை - எந்தையே, நிர்க்குண - நிர்க்குணனே, மாமணம் உலாம் - பெரிய மணந்தங்கிய, மலர் - தாமரைமலர்போன்ற, பதம் - திருவடிகளை, தரின் - கொடுத்தனையாயின், உன்னை மறுப்பார்யார் - உன்னைத் தடுக்க வல்லார் யார்.

காரணம் - யாவைக்கும் யாவர்க்கு முதலாந் தன்மை. கருத்தின் என்ற ஐந்தனுருபு மூன்றாவதன் கருவிப் பொருளில் வந்தது. இறைவனது சர்வ காரணத்வத்தை யுணர்தல் பெரிய தவப்பேறு பெற்றவர்க்கன்றி யேனையர்க் கருமையென்பது தோன்ற, உணரும் என்றதை யடுத்து மாதவர் என்றார். பொய் வஞ்சன் என்றது பொய்யையும் வஞ்சத்தையுமுடையன் என்றபடி. மாமணம் என்றது அன்பர் முதலாயினோர் சாத்துமலர் மணமன்றி இயற்கை மணத்தை. தந்தை புதல்வர்க்குத் தரும் பொருளைத் தடுப்பவர் உலகி லொருவருமில்லை யாதலால், எந்தை தரின் யாருனை மறுப்பார் என்றார். மாதவர்க்கு அருள்செய்ததுபோல எனக்கும் அருள்செய்தால், சுதந்திரனாகிய வுன்னைத் தடுப்பவர் யாவர் என்பது கருத்து.

**9.** கன்னன் முக்கனி கண்டுதேன் சருக்கரை கலந்த
தென்ன முத்தியிற் கலந்தவர்க் கின்பமா யிருக்கும்
நன்ன லத்தநின் னற்பதந் துணையென நம்பச் [ன்.
சொன்ன வர்க்கென லாங்கைம்மா றில்லையென் சொல்வே

இ - ள். கன்னல் - கருப்பஞ்சாறும், முக்கனி - முக்கனிகளும், கண்டு - கற்கண்டும், தேன் - தேனும், சருக்கரை - சர்க்கரையும், கலந்தது என்ன - கலந்தாற்போல, முத்தியில் கலந்தவர்க்கு - முத்திநிலையிற் கூடினவர்களுக்கு, இன்பமாயிருக்கும் - சுகரூபமாயிருக்கிற, நல் நலத்த- சிறந்த அழகையுடைய, நின் - உனது, நல்பதம் - நல்ல திருவடியே, துணை என நம்ப - துணையென்று நம்பும்படி, சொன்னவர்க்கு - சொல்லிய சதா சாரியருக்கு, என்னல் ஆம் - என்னாற்செய்யஇயல்வதாகிய, கைம்மாறு இல்லை - பிரதி யுபகாரம் இல்லை, என் சொல்வேன் - அவரது அருட்டன் மையை என் சொல்லவல்லேன், எ - று.

முத்தி - மோக்ஷம், அது சர்வசங்க பரித்யாகத்தின் மேலது. சதா சாரியர் என்றது:—

"குட்டித் திரட்கரடி யாளொருகூக் கோன்குதித்துக்
கட்டிப் புதைந்த கதையாகும்—துட்டமலப்
பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப்
புத்திபோற் காட்டும் பொருள்."—என்னும் ஒழிவி லொடுக்கச்

செய்யுளில் சொல்லப்படுவோரை யொழித்து, அடுத்த நன்மாணவகரைச் சக்ஷு தீக்ஷை முதலியவற்றாற் புனிதராக்கி, வீட்டைவிக்க வல்லாரை. நற்பதம் என்றார் இன்பமாயிருத்தலான். "நற்றாள்" என்றார் தெய்வப் புலமைப் பெருநாவலரும். உனது நல்லதிருவடியே யுறுதிப்பொருளென் றருளிச்செய்த சதாசாரியருக்கு அடியேன் செய்யலாம் கைம்மாறு இல்லை யென்பது கருத்து.

**10.** தந்தை தாய்தமர் மகவெனு மவையெலாஞ் சகத்தில்
பந்த மாமென்றே யருமறை வாயினாற் பகர்ந்த
எந்தை நீயெனை யின்னமவ் வல்லலி லிருத்தின்
சிந்தை தான்றெளிந் தெவ்வண முய்வணஞ் செப்பாய்.

இ - ள். தந்தை - பிதா, தாய் - மாதா, தமர் - உறவினர், மகவு - புத்திரன், என்னும் - என்று சொல்லப்படுகிற, அவையெல்லாம்-அவைக ளெல்லாம், சகத்தில் - உலகத்தில், பந்தம் ஆம் என்றே - தளையாகு மென்றே, அருமறை வாயினால் - அருமையாகிய வேதங்களை யருளிச் செய்த திருவாக்கினால், பகர்ந்த - சொல்லியருளிய, எந்தை - எமது தந்தையாகிய, நீ - நீ, என்னை - அடியேனை, இன்னம் - இன்னமும், அ

அல்லலில் இருத்தின் - அந்தத் துன்பத்தில் இருக்கச்செய்தால், சிந்தை தெளிந்து - மனந்தெளிந்து, உய்வண்ணம் - உய்யும்வகை, எவ்வண்ணம் - எவ்வகை, செப்பாய் - சொல்வாய், எ - று.

அருமறைவாயினால் என்பதற்கு அரியமறையாகிய வாக்கினால் என்றுரை கூறினுமமையும். 'தந்தை தாய் தமர்மகவெனுமவை யெலாம் சகத்திற் பந்தமாம், என்றது. "தாரதனமிகு மென்னிற் றளையாகும்" என்றற்றொடக்கத் தனவாகிய மேலோர் திருவாக்குகளை யடியொற்றியென்க. தந்தை தாய் முதலியன பந்தமென் றருளிச்செய்த நீயே என்னை அதிற் கட்டுண்டு கிடக்கத் திருவுளம்பற்றினையாயின், அடியேன் மனந்தெளிந்து எவ்வாறு உய்வேன் என்பது கருத்து.

**11.** தூய்யன் றண்ணருள் வடிவினன் பொறுமையாற் றுலங்கும்
மெய்ய னென்றுனை யையனே யடைந்தனன் மெத்த
நொய்ய னுண்ணிய வறிவில னொன்றைநூ றாக்கும் [லாய்.
பொய்ய னென்றெனைப் புறம்விடி னென்செய்வேன் புக

இ - ள். தூய்யன் - பரிசுத்தன், தண் அருள் வடிவினன் - குளிர்ந்த அருளுருவாயிருப்பவன், பொறுமையால் - க்ஷமையோடு, துலங்கும் - விளங்குகின்ற, மெய்யன் - மெய்ம்மையன், என்று - என்று துணிந்து, ஐயனே - இறைவனே, உன்னை அடைந்தனன் - உன்னை யடைந்தேன், மெத்தநொய்யன் - மிகவும் அற்பன், நுண்ணிய அறிவு இலன் - நுட்பமாகிய அறிவிலாதவன், ஒன்றை நூறு ஆக்கும் பொய்யன் - ஒன்றை நூறாக்குகின்ற பொய்ம்மையன், என்று - என்றுணர்ந்து, என்னை புறம் விடின் - என்னைப் புறமேவிட்டு விட்டால், என்செய்வேன் - என்செயக் கடவேன், புகலாய் - சொல்வாய், எ - று.

அபாவமே ரூபமாயினும் ஒன்று பலவாகச்செய்யு மாற்றல் பொய்க்குள தென்பார், ஒன்றை நூறாக்கும் பொய்யன் என்றார். அது பிரபஞ்சத் தோற்றத்தானே விசதம். நீ தூய்யன், அருள்வடிவினன், பொறுமையோடு விளங்கும் மெய்யன், அடியேன் நொய்யேன், மருள்வடிவினேன், அறிவின்மையோடு பொய்யையுமுடையேன், என்னை நீ கைவிடின், யான் எவ்வண்ணம் உய்வேன் என்பதுகருத்து.

**12.** ஒன்ற தாய்ப்பல வாயுயிர்த் திரட்கெலா முறுதி
என்ற தாயென்று முள்ளதா யெவற்றினு மிசைய
நின்ற தாய்நிலை நின்றிடு மறிஞரெவன் னெஞ்சம்
மன்ற தாயின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்.

இ - ள். ஒன்றதாய் - ஒன்றாகி, பல ஆய் - பலவாகி, உயிர்த்திரட்கு எல்லாம் - உயிர்த்தொகுதிக்கெல்லாம், உறுதி என்றதாய் - உறுதியென்று சொல்லப்பட்டதாய், என்றும் உள்ளதாய் - என்றுமுள்ளதாகி, எவற்றினும்-எவ்வகைப்பட்ட பொருள்களுள்ளும், இசைய நின்றதாய்-பொருந்த நின்றதாகி, நிலைநின்றிடும் - சாசுவதமாயிருக்கிற, அறிஞ - முற்றறிவனே, என் நெஞ்சம் - என் மனமானது, மன்றதாய் - திருச்சிற்றம்பலமாகக் கொண்டு, இன்ப உருக்கொடு - சுகவடிவுதாங்கி, நடித்திடின் - நடிப்பையாயின், வாழ்வேன் - பிழைப்பேன், எ - று.

ஒன்று முதலாகநின்ற முற்றறிவனே, நீ என் மனத்தைத் திருச்சிற்றம்பலமாகக்கொண்டு ஆநந்தரூபமாய் நின்று நடிப்பையாயின், அடியேன் உய்வேன் என்பதாம். ஒன்றதாய் என்றதனால் ஏகத்வமும் பலவாய் என்றதனால் அநேகத்வமும், உயிர்த்திரட்கெலாமுறுதி என்றதாய் என்றதனால் சர்ஜீவவாதாரத்வமும், என்றுமுள்ளதாய் என்றதனால் சாசுவதத்வமும், எவற்றினுமிசையநின்றதாய் என்றதனால் சர்வாந்தர்யாமித்வமும், நிலைநின்றிடும் என்றதனால் சர்வ வியாபகவத்வமும், அறிஞ என்றதனால் சர்வஜ்ஞத்வமும், என்னெஞ்சம் மன்றதாய் என்றதனால் தோஷ போக்யத்வமும், இன்பவுருக்கொடு என்றதனால் சுகரூபக்ரஹணமும் விளங்கா நின்றன.

**13.** தனியி ருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்
கினியி ரங்குதல் கடனிது சமயமென் னிதயக்
கனிவு மப்படி யாயின தாதலாற் கருணைப்
புனித நீயறி யாதவொன் றுள்ளதோ புகலாய்.

இ - ள். தனி இருந்து - ஏகாந்தமாயிருந்து, அருள் - உன் திருவருளுதவியால், சகசமே பொருந்திட - சகசநிஷ்டையையே பொருந்துமாறு, தமியேற்கு - தனியேனுக்கு, இனி இரங்குதல்கடன்-இனி யிரங்கி யருளுதல் உன் கடமையாம், இதுசமயம் - இதுதான் சமயம், என் இதயக்கனிவும் அப்படியாயினது - என்னிதயத்தின் கனிவு மவ்வாறேயாயிற்று, ஆதலால் - ஆகையால், கருணைப்புனித - கருணாமூர்த்தியாகிய பரிசுத்தனே, நீ அறியாதது ஒன்று உள்ளதோ - நீயறியாததொரு பொருளுண்டோ, புகலாய் - சொல்லாய், எ - று.

தனி யிருத்தல்—பஞ்சகோசங் கடந்து பாழையுந்தள்ளி யுள்ளிற் கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடஸ்த்தப் பிரமமென்னும் நெஞ்சமு நழுவி யொன்றாய் நிற்குநிலை. சகச நிஷ்டை அருளுதவியானன்றி யடையப்படாதென அதினருமைதோன்ற அருள் சகசமே பொருந்திட என்றார். நீ யன்றி யுதவுவார் வேறொருவ ரிலர் என்றற்கு தமியேற்கு எனவும்,

இப்பிறவி தப்பினல் என்னை முடியுமோவென்றதற்கு இதுசமயம் எனவும், கருணையும் பரிசுத்தமும் இன்றுயபோது இரங்குதல்கூடாதாதலால் கருணைப் புனித இனி இரங்குதல் கடன் எனவும், இறைவன் முற்றறிவனாதலால், நீ யறியாத தொன்றுள்ளதோ எனவும் கூறினர். சர்வஞ்ஞனே, உன் திருவருளால் அடியேன் சகசநிஷ்டை யடையுமாறு நீ யிரங்கியருளல்வேண்டும் என்பது கருத்து.

**14.** திருந்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப்
பொருந்து நாணல்ல புண்ணியஞ் செய்யுநாள் பொருந்தா
திருந்த நாள்வெகு தீவினை யிழைத்தநா ளென்றால்
அருந்த வாவுனைப் பொருந்துநா ளெந்தநா ளடிமை.

இ - ள். திருந்து - திருத்தமாகிய, சீர் - சிறப்படைந்த, அடித்தாமரைக்கு - திருவடித் தாமரைகளுக்கு, அன்புதான் செய்யப் பொருந்தும் நாள் - அன்புசெய்யப் பொருந்தியநாள், நல்ல புண்ணியம் செய்யும்நாள் - நல்ல புண்ணியம் செய்யும் நாளாகும், பொருந்ாது இருந்த நாள் - அன்பு செய்யப் பொருந்தாமலிருந்த நாள், வெகு தீவினை இழைத்தநாள் - வெகு பாவஞ்செய்த நாளாகும், என்றால் - என்று சொல்லுமிடத்து, அருந்தவா - அருந்தவ வுருவத்தையுடையவனே, அடிமை - அடியேன், உன்னை பொருந்துநாள் எந்தநாள் - உன்னையடையுநாள் எந்தநாள், எ - று.

உன் திருவடிகட் கன்புசெய்யும் நாள் நல்ல நாள் அன்புசெய்யாத நாள் தீயநாள் என்பதுகருத்து. அருந்தவாவுனை யென்பதற்கு, அருமையாகிய அழியாத உன்னை யென்றுரைப்பினு மமையும்.

**15.** பின்னு முன்னுமாய் நடுவுமா யாவினும் பெரிய
தென்னுந் தன்மையா யெவ்வுயிர்த் திரளையு மியக்கி
மன்னுந் தண்ணருள் வடிவமே யுனக்கன்பு வைத்தும்
துன்னு மின்னலேன் யானெனு மகந்தையேன் சொல்லாய்.

இ - ள், பின்னும் முன்னும் ஆய் - பின்னு முன்னுமாகி, நடுவும் ஆய் - நடுவுமாகி, யாவினும் - எல்லாப் பொருள்களினும், பெரியது என்னும் தன்மையாய் - பெரியதென்னுந் தன்மையுள்ளதாகி, எவ்வுயிர்த்திரளையும் - எவ்வகைப்பட்ட வுயிர்த்தொகுதியையும், இயக்கி - இயங்குவித்து, மன்னும் - நிலைபெற்றிருக்கிற, தண் அருள்வடிவமே - குளிர்ந்த அருளுருவமே, உனக்கு அன்புவைத்தும் - உன்னிடத் தன்புசெய்தும், துன்னும் - மிகுதியான, இன்னல் ஏன் - துன்பம் யாதுக்கு, யான் என்னும் அகந்தை ஏன் - நான் என்னும் அகங்காரம் யாதுக்கு, சொல்லாய் - கூறாய், எ - று.

ஆதிமத்யாந்த ரூபமா யிருப்பவனே, பெரியோனே, உயிர்த்தொகுதியை இயங்குவிப்போனே, அருளே திருவுருவமாகக் கொண்டவனே,

நான் உன்னிடத் தன்புசெய்த பின்னும் என்னிடத்துத் துன்பமும் அகங்காரமும்இருத்தல் அடாதுஎன்பது கருத்து. "ஈசற்கியாம் வைத்தவன்பி னகன்றவன் வாங்கிய வெம்பாசத்தின்" என்றார் மேலோரும்.

**16.** மின்னை யன்னபொய் வாழ்க்கையே நிலையென மெய்யாம்
உன்னை நான்மறந் தெவ்வண முய்வண முரையாய்
முன்னை வல்வினை வேரற முடித்தென்று முடியாத்
தன்னைத் தன்னடி யார்க்கருள் புரிந்திடுந் தக்கோய்.

இ - ள். முன்னை வல்வினைவேர் அறமுடித்து - பூர்வஞ்செய்த வலிய பாபத்தின் மூலமற நாசம்பண்ணி, என்றும் முடியா - என்றும் நசியாத, தன்னை - உன்னை, தன் அடியார்க்கு - உன்னடியவர்க்கு, அருள்புரிந்திடும்- அருள்செய்கின்ற, தக்கோய் - நடுநிலையுள்ளவனே, மின்னை அன்ன - மின்னலை யொத்த, பொய்வாழ்க்கையே - பொய்வாழ்வையே, நிலையென - நிலையென்று, மெய் ஆம் - உண்மையாகிய, உன்னை - உன்னை, நான் மறந்து- நான் மறந்துவிட்டு, உய்வணம்-பிழைக்கும்வகை, எவ்வண்ணம்-எவ்வகை, உரையாய் - சொல்லாய், எ - று.

தன்னையென்ற படர்க்கை இவ்விடத்து முன்னிலைப் பொருளது. "பாவநாசாவுன் பாதமே" என்ற மேலோர் திருவாக்கை யனுசரித்து முன்னை வல்வினைவேர் அறமுடித்து எனவும், அடைந்தாரைப் பாபவிமோசநராக்கித் தன்னையு மவர்களுக்கு ஆரமுதாயூட்டுதல் தக்கார்க்கன்றி இயலாதென்றற்கு, முன்னை வல்வினை வேரறமுடித்து என்று முடியாத் தன்னைத் தன்னடியார்க் கருள்புரிந்திடுந் தக்கோய் எனவும் கூறினர். பொய்வாழ்க்கையை நம்பி மெய்யாகிய உன்னை மறந்து நான் எவ்வாறு உய்வேன் என்பது கருத்து.

**17.** எம்ப ராபர வெம்முயிர்த் துணைவவென் றிறைஞ்சும்
உம்ப ரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின்றா யுன்றன்
அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணையென வடிமை
நம்பி னேனினிப் புரப்பதெக் காலமோ நவிலாய்.

இ - ள். எம்பராபர - எம்முடைய பராபரனே, எம் உயிர்த்துணைவ- எம்முயிர்த்துணைவனே, என்று இறைஞ்சும் - என்று வணங்குகின்ற, உம்பர் இம்பர்க்கும்-அவ்வுலகத்தார்க்கும் இவ்வுலகத்தார்க்கும், உளக்கணே - அவரவரிதயத்தின் கண்ணே, நடிக்கின்றாய்-நடிக்கின்றனை, உன்றன்-உன்னுடைய, அம் - அழகிய, பொன் - பொன்போன்ற, மா - பெருமை பொருந்திய, மலர் - தாமரையலர்போன்ற, பதத்தையே - திருவடியையே, துணை என - துணையென்று, அடிமை - அடியேன், நம்பினேன் - நம்பி

யிருக்கிறேன், இனி புரப்பது-இனிக் காத்தருள்வது, எக்காலமோ - எந்தக்காலமோ, நவிலாய் - சொல்வாய், எ - று.

இறைவனே, மண்ணுலகத்தார் விண்ணுலகத்தார் என்னு மிருதிறத்தார்க்கும் அவரவர் இதயத்தின்கண்ணே நடியாநின்றனை யாதலால், உன் திருவடியே துணையென நம்பியிருக்கிற என்னையும் காத்தருளல்வேண்டும் என்பது கருத்து.

**18.** பாடி யாடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தன ரமலநின் னடியர்யான் றொழும்பன்
நாடி யேயிந்த வுலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன் வெறுந் தீமையே யென்னினிச் செய்வேன்.

இ - ள். பாடி - பாடுதல்செய்து, ஆடி - ஆடுதல்செய்து, நின்று இரங்கி - நின்றழுது, நின்பதமலர் - உன் திருவடிமலரை, முடிமேல்சூடி - சிரசிற் றரித்து, நின்னடியர் - உன்னடியார், அமல - பரிசுத்தனே, வாழ்ந்தனர் - நித்தியவாழ்வை யடைந்தார்கள், தொழும்பன் யான் - தொண்டனாகிய நான், இந்த உலகத்தைநாடி-இந்த வுலகத்தை விரும்பி, மெய் என நம்பி - உண்மையென்று நம்பி, வெறுந்தீமையே தேடினேன் - வெறும் பாவத்தையே யீட்டினேன், இனி என்செய்வேன் - இனி யென்னசெய்வேன், எ - று.

உன்னடியார் பாடுதல் முதலியவைசெய்து உன் திருவடியை முடிமேற் றரித்து மெய்வாழ்வடைந்தனர். அடியேன் இந்த வுலகத்தை நம்பிப் பாவத்தையே யீட்டிவைத்தேன். இனி யுய்வதற்கு வழி என்செய்யவல்லேன் என்பது கருத்து.

**19.** களவு வஞ்சனை காமமென் றிவையெலாங் காட்டும்
அளவு மாயையிங் காரெனக் கமைத்தன ரையா
உளவி லேயெனக் குள்ளவா றுணர்த்தினுன் னடிமை
வளரு மாமதி போன்மதி தளர்வின்றி வாழ்வேன்.

இ - ள். களவு - சோரத்வம், வஞ்சனை - கபடம், காமம் - காமம், என்ற இவை எல்லாம் காட்டும் அளவு-என்ற இவற்றையெல்லாம் காட்டுமளவினையுடைய, மாயை - மாயையை, இங்கு - இவ்விடத்து, எனக்கு அமைத்தனர் ஆர் - எனக் கமைத்தவர் யாவர், ஐயா-ஐயனே, உளவிலே-ரஹஸ்யத்திலே, உள்ளவாறு - உள்ளபடி, எனக்கு உணர்த்தின்-எனக் கறிவிப்பையாயின், உன் அடிமை - உன்னடியேன், மதிதளர்வு இன்றி - மதி தளர்தல் இல்லாமல், வளரும் மாமதிபோல் வாழ்வேன்-விருத்தியடையா நின்ற பெரிய சந்திரன்போல் வாழ்ந்திருப்பேன், எ - று.

களவு முதலியவற்றைத்தோற்றுவிக்கும் மாயையை எனக்கு அமைத்தவர் யாவர். அந்த ரஹஸ்யத்தை எனக் குள்ளபடி யறிவுறுத்திஞயாயின், பூர்வபக்ஷத்துச் சந்திரன்போல அறிவு வளரப்பெற்று வாழ்வேன் என்பதாம்.

**20.** வான நாயக வானவர் நாயக வளங்கூர்
ஞான நாயக நான்மறை நாயகந லஞ்சேர்
மோன நாயக நின்னடிக் கன்பின்றி முற்றும்
தீன ஞயகம் வாடவோ வென்செய்வேன் செப்பாய்.

இ - ள். வானநாயக - மேலுலகத்துக்கு இறைவனே, வானவர்நாயக- அவ்வுலகத்துள்ளார்க் கிறைவனே, வளம் கூர் - வளம்மிகுந்த, ஞான நாயக - ஞானத்துக் கதிபனே, நான்மறைநாயக - நான்கு வேதங்களுக்கு முதல்வனே, நலம் சேர் - நன்மைசேர்ந்த, மோனநாயக - மௌனநிலைக் கிறைவனே, நின் அடிக்கு - உன்திருவடிகளுக்கு, அன்பு இன்றி - அன்பு செய்தலில்லாமல், முற்றும் - முழுதும், தீனஞய் - ஏழையாகி, அகம்வாடவோ- மனம்வாடவோ, என்செய்வேன் - என்செயக் கடவேன், செப்பாய்- சொல்லாய், எ - று.

வானம் முதலானவைகட்கு நாயகனே, அடியேன் உன் திருவடிக் கன்புசெய்யாமல் ஏழையாய் வாடுதல்தகுமோ வென்பது கருத்து.

**21.** ஏத மற்றவர்க் கின்பமே பொழிகின்ற விறையே
பாத கக்கருங் கன்மனங் கோயிலாப் பரிந்து
சூத கத்தஞ யாதினு மிச்சைமேற் றோன்றும்
வாத னைக்கிட மாயினே னெவ்வண்ணம் வாழ்வேன்.

இ - ள். ஏதம் அற்றவர்க்கு - குற்றமற்றவர்க்கு, இன்பமே பொழி கின்ற - ஆநந்தத்தையே பொழிகின்ற, இறையே - இறைவனே, பாதகக் கருங்கல் மனம் - பாவவுருவாகிய கருங்கல் மனமானது, கோயிலாப் பரிந்து - கோயிலாகவிரும்பி, சூது அகத்தஞய் - வஞ்சனைக்கிடமாகிய மனத்தை யுடையவஞய், யாதினும் - எப் பொருளின் மேலும், இச்சை மேல் தோன்றும் - விருப்பம் மிகுதியாய்த் தோன்றுகின்ற, வாதனைக்கு - லோகவாசனைக்கு, இடம் ஆயினேன் - இடமாய் இருக்கின்றேன், எவ் வண்ணம் வாழ்வேன் - எவ்விதம் வாழ்வேன், எ - று.

குற்றமற்றவர்கட்கு ஆநந்தமழையைப் பொழிகின்ற இறைவனே, இச்சைவயத்தஞய், லோகவாசனைக் கிடமாயினேன், எங்ஙனம் உய்வேன் என்பது கருத்து.

**22.** தெளிவொ டீகையோ வறிகிலா னறிவிலான் சிறிதும்
அளியி லானிவன் றிருவருட் கயலென வறிந்தோ
எளிய னாக்கினை யென்செய்வே னென்செய்வே னெல்லா
ஒளியு மாய்நிறை வெளியுமா யாவுமா முரவோய்.

இ-ள். எல்லா ஒளியும் ஆய் - ஒளியுடைப்பொருள்க ளெல்லாமாகி யும், நிறைவெளியும் ஆய் - அவைநிறைந்து விளங்கும் வெளியுமாகியும், யாவும் ஆம் - மற்றெல்லாப் பொருள்களு மாகாநின்ற, உரவோய் - அறிவுருவனே, தெளிவொடு - பொய்யிது மெய்யிது வென்னுந் தெளிவோடு, ஈகையோ - கொடையோ, அறிகிலான் - உணர்கிலான், அறிவு இலான் - அறிவிலாதவன், சிறிதும் அளியிலான் - கொஞ்சமும் கிருபையில்லாதவன், இவன் திருவருட்கு அயல் என அறிந்தோ - இவன் திருவருளுக்குப் புறமென் றுணர்ந்தோ, எளியன் ஆக்கினை - ஏழையாக்கினாய், என்செய்வேன் என்செய்வேன் - என்செயக்கடவேன் என்செயக்கடவேன், எ - று.

இறைவனே, தெளிவு முதலானவை யில்லாதவன் ஆதலால் இவன் திருவருட்கயலென் றறிந்தோ என்னை யேழையாக்கினாய், நீயே யிங்ஙனம் செய்யின், அடியேன் என்னசெய்ய வல்லேன் என்பது கருத்து.

**23.** கண்ணி னுண்மணி யென்னவே தொழுமன்பர் கருத்துள்
நண்ணு கின்றநின் னருளெனக் கெந்நா ணணுகும்
மண்ணும் விண்ணுமற் றுள்ளன பூதமு மாறாப்
பெண்ணு மாணுமா யல்லவாய் நிற்கின்ற பெரியோய்.

இ - ள். மண்ணும் விண்ணும் - பூமியும் ஆகாயமும், மற்றுள்ளன பூதமும் - வேறுள்ளனவாகிய பூதங்களும், மாறா - நீங்காத, பெண்ணும் ஆணும் ஆய் - பெண்ணும் ஆணுமாகி, அல்ல ஆய் நிற்கின்ற - அவையல்லனவுமாகி நிற்கிற, பெரியோய் - பெரியோனே, கண்ணின் உள் - கண்ணுக்குள்ளே, மணி என்ன - மணியென்னலாம்படி, தொழும் அன்பர் கருத்துள் - வணங்குகின்ற அன்பரது மனத்தில், நண்ணுகின்ற - பொருந்துகின்ற, நின் அருள் - உன்னருளானது, எனக்கு - அடியேனுக்கு, எந்நாள் நணுகும் - எந்தக்காலம் வந்துபொருந்தும், எ - று.

இறைவனே, அன்பர்கருத்திற் பொருந்துகின்ற உன் திருவருள் எனக்கு எக்காலம் வாய்க்கும் என்பதாம்.

**24.** சகமெ லாந்தனி புரந்தனை தகவுடைத் தக்கோர்
அகமெ லாநிறைந் தானந்த மாயினை யளவில்
மகமெ லாட்புரிந் தோரைவாழ் வித்தனை மாறா
இகமெ லாமெனைப் பிறந்திடச் செய்ததே னெந்தாய்.

இ - ள். சகம் எல்லாம் - எல்லாவுலகங்களையும், தனிபுரந்தனை - பொதுவறக்காத்தனை, தகவு உடை - தகுதியையுடைய, தக்கோர் - மேலோர்களுடைய, அகம் எல்லாம் நிறைந்து - மனமெல்லாம் நிறைந்து, ஆநந்தம் ஆயினை - இன்பவுருவாயிருந்தனை, அளவு இல் - அளவற்ற, மகம் எல்லாம் - யாகங்களெல்லாவற்றையும், புரிந்தோரை - செய்தவர்களை, வாழ்வித்தனை - வாழச்செய்தனை, மாறு - நீங்காமல், என்னை - அடியேனை, இகம் எல்லாம் - இவ்வுலகங்களிலெல்லாம், பிறந்திடச்செய்தது - ஜன்மிக்கச்செய்தது, என் - யாதுக்கு, எந்தாய் - எந்தையே, எ - று.

எல்லா வுலகங்களையும் காத்தல் முதலியவையுடையோய், உன்னடியார்க்கு அளவுகடந்த இன்பத்தை யருளிச்செய்து, என்னை எல்லாவிடத்தும் பிறக்கச்செய்ததற்குக் காரணம் யாதோ அறிகிலேன் என்பதாம்.

**25.** ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலா யெளியேன்
வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணைநீ வளர்ப்பாய்
ஆய்ந்த மாமறை யெத்தனை யத்தனை யறிவால்
தோய்ந்த பேர்கட்குந் தோன்றிலாத் தோன்றலாந்தூயோய்.

இ - ள். ஏய்ந்த - பொருந்திய, நல்அருள் பெற்றவர்க்கு - சிறந்த அருளைப் பெற்றவர்களுக்கு, எளியேன் - ஏழையேன், ஏவலாய் - ஏவலாளாகி, வாய்ந்த - வாய்ப்பாகிய, பேர் அன்பு வளர்க்கவும் - பேரன்பைப் பெருக்கு மாறும், நீ கருணைவளர்ப்பாய் - நீ கிருபையைப் பெருக்க வேண்டும், ஆய்ந்த - ஆராயப்பட்ட, மா - பெரிய, மறை எத்தனை - வேதங்களெத்தனை, அத்தனை - அத்தனையும், அறிவால் தோய்ந்த பேர்கட்கும் - ஞானத்தாற் கிடைக்கப் பெற்றவர்களுக்கும், தோன்றிலா - காணப்படாத, தோன்றல் ஆம் - பெரியோனாகிய, தூயோய் - பரிசுத்தனே, எ - று.

இறைவனே, உன்னருள் பெற்றவர்கட்கு ஏவலாளாகி, எளியேன் உன்மீது அன்பை வளர்க்கும்படி நீ கருணைசெய்யவேண்டும் என்பதாம்.

**26.** தக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித் தமியேன்
மிக்க தெய்வமே நின்னின்ப வெள்ளத்தில் வீழேன்
ஒக்க லுய்தந்தை மகவெனும் பாசக்கட் டுடனே [தேன்.
துக்கவெள்ளத் திலாழ்கின்றேனென் செய்வான் றுணிந்

இ - ள். தக்க - தகுதியாகிய, நின் - உனது, அருள் - திருவருளைப் பற்றிய, கேள்வியோ சிறிது இன்றி - கேள்வியோ கொஞ்சமுமில்லாமல், தமியேன் - தனியனேன், மிக்க தெய்வமே - மேலானதெய்வமே, நின் - உனது, இன்பவெள்ளத்தில் - ஆனந்தப்பெருக்கில், வீழேன் - முழுகாதவனாய், ஒக்கல் - உறவினர், தாய்தந்தை - தாய்தந்தையர், மகவு - புதல்வன், என்னும் - என்கிற, பாசக்கட்டுடனே - பாசத்தளையுடன், துக்கவெள்ளத்

தில் - துன்பப்பெருக்கில், ஆழ்கின்றேன் - மூழ்காநின்றேன், என் செய்வான் துணிந்தேன் - என்னசெய்யத் துணிந்தேன், எ - று.

இறைவனே, உன்னருட்கேள்வி சிறிதுமின்றி உன்னின்பவெள்ளத்தில் மூழ்கிலேன், தாய்தந்தை முதலாகிய பாசப்பிணிப்புடன் துக்க சாகரத்தழுந்தாநின்றேன் என்பதாம்.

**27.** பவம்பு ரிந்திடும் பாவியேற் கருணிலை பதியத்
தவஞ்செ யும்படித் தயவுசெய் தருள்வதே தருமம்
அவம்பு ரிந்திடார்க் கானந்த வமிர்தத்தை யளிக்க
நவங்கொ டத்துவத் திரையெறி கடலெனு நலத்தோய்.

இ - ள். அவம்புரிந்திடார்க்கு-வீணனகாரியத்தைச் செய்யாதவர்க்கு, ஆநந்த அமிர்தத்தை அளிக்க-ஆனந்தாமிர்தத்தைக் கொடுக்க, நவம்கொள்-புதுமையைக்கொண்ட, தத்துவம் - தத்துவமாகிய, திரை எறி-அலைகளை வீசுகின்ற, கடல் என்னும் - கடலென்று சொல்லப்பட்ட, நலத்தோய் - நன்மையுடையோனே, பவம்புரிந்திடும் - பாவத்தைச்செய்கிற, பாவியேற்கு - பாவியாகிய எனக்கு, அருள்நிலைபதிய - உன் திருவருணிலைபதியும் பொருட்டு, தவம்செய்யும்படி - தவத்தைச் செய்யும் வண்ணம், தயவு செய்தருள்வதே - தயைசெய்தருளலே, தருமம் - தர்மமாகும், எ - று.

இறைவனே பாவத்தையேசெய்கிற எனக்கு அருணிலைபதியும்படி, தவம்புரியுமாறு கிருபைசெய்வதே தருமம் என்பது கருத்து.

**28.** உற்று ணர்ந்தெலா நீயல தில்லையென் றுனையே
பற்று கின்றன ரெந்தைநின் னடியர்யான் பாவி
முற்று மாயமாஞ் சகத்தையே மெய்யென முதறுன்
அற்றி ருந்திடத் தொழில்செய்வான் றனைநிக ரானேன்.

இ - ள். நின் அடியர் - உன்னடியார், உற்றுணர்ந்து-ஆராய்ந்தறிந்து, எல்லாம்-எல்லாப்பொருள்களும், நீ அல்லது-நீயேயாயிருப்பதன்றி,இல்லை என்று - வேறுபொருளில்லை யென்று துணிந்து, எந்தை - எந்தையே, உன்னையே பற்றுகின்றனர்-உன்னையேபற்றுகின்றார்கள், யான்பாவி - நான் பாவி, முற்றும்மாயம் ஆம் - முழுதும் பொய்யாகிய, சகத்தையே - உலகத்தையே, மெய் என - மெய்யென்றுகொண்டு, முதல்தான் அற்று இருந்திட-முதலே யற்றொழிய, தொழில்செய்வான் தன்னை - தொழில் செய்பவனை, நிகர் ஆனேன் - நிகர்ப்பவனானேன், எ-று.

எந்தையே உன்னடியர், எல்லாம்நீயேயென்றாராய்ந்தறிந்து, உன்னையேபற்றாநின்றனர். பாவியாகிய நான்முழுதும்பொய்யாகிய சகத்தையே மெய்யென்று நம்பி, முதலறத்தொழில் செய்வான்போல் வீணானேன் என்பதாம்.

மண்டலத்தின்.

**1.** மண்டலத்தின் மிசையொருவன் செய்த வித்தை
யகோவெனவும் வாரணுதி
அண்டமவை யடுக்கடுக்கா யந்தரத்தி னிறுத்துமவ
தானம்போல
எண்டருநல் லகிலாண்டகோடியைத்தன் னருள்வெளியி
லிலக வைத்துக்
கொண்டுநின்ற வற்புதத்தை யெவராலு நிச்சயிக்கக்
கூடா வொன்றை.

இ - ள். மண்டலத்தின்மிசை - மண்ணுலகின்மீது, ஒருவன் செய்த வித்தை - ஒருவன் செய்த வித்தையானது, அகோ எனவும்-ஆச்சர்யகரம் என்று சொல்லவும், வாரணுதி அண்டமவை - கோழிமுதலியவற்றின் முட்டைகளை, அடுக்கடுக்காய்-அடுக்கடுக்காக, அந்தரத்தில்-ஆகாயத்தில், நிறுத்தும்-நிறுத்துகின்ற,அவதானம்போல-சாமர்த்தியம்போல, எண்தரும்-எண்ணிக்கையைத் தருகின்ற, நல் - சிறந்த, அகிலாண்டகோடியை - அகிலாண்ட கோடிகளை, தன் அருள் வெளியில்-தன்திருவருளாகிய ஆகாயத்தில், இலக - விளங்கும்படி, வைத்துக்கொண்டு நின்ற-வைத்துக்கொண்டிருக்கிற, அற்புதத்தை - ஆச்சரியகரமான வஸ்துவை, எவராலும் - எத்தன்மையராலும், நிச்சயிக்கக்கூடா - இத்தன்மைத்தென்று இலக்கண வகையால் துணியக்கூடாத, ஒன்றை - ஒப்பற்றபொருளை, எ - று.

இதுமுதல் எட்டுப்பாட்டும் குளகம். குளகம் - பலபாட்டொருவினை கொண்டு முடிவது. மண்தலம் - மண்ணாகிய இடம். அகோ-வியப்பிடைச்சொல். கோழிமுதலியவற்றின் முட்டைகளை ஒருமாயாவியானவன் ஆகாயத்தில் நிற்கும்படிசெய்கிற சதுரதைபோல, இறைவன் அண்டகோடிகளைத் தன் திருவருளாகிய ஆகாயத்தில் நிற்கும்படி செய்யவல்லான் என்பது கருத்து.

**2.** ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந்தேழாம்
யோக பூமி
நின்றுதெளிந் தவர்பேசா மௌனநியா யத்தைநிறை
நிறைவைத் தன்னை
அன்றியொருபொருளிலதா வெப்பொருட்குந் தான்முதலா
யசல மாகி
என்றுமுள்ள வின்பத்தைத் தண்ணென்ற சாந்தபத
வியற்கை தன்னை.

இ - ள். ஒன்று இரண்டு ஆய்விவகரிக்கும்-ஒன்றிரண்டென்று விவகரிக்கிற, விவகாரம் - விவகாரத்தை, கடந்து - தாண்டி, ஏழாம்யோக பூமி நின்று - ஏழாகிய ஞானபூமிகளில் நிலைத்து, தெளிந்தவர் - தெளிந்தோர்கள், பேசா - பேசாமைக்குக் காரணமாகிய, மௌநநியாயத்தை - மௌநநீதியை, நிறைநிறைவை-முழுநிறைவை, தன்னை அன்றி - தன்னையல்லது, ஒருபொருள் இலது ஆ - ஒருபொருளில்லாததாக, எப்பொருட்கும் - எல்லாப் பொருள்களுக்கும், தான்முதல் ஆய் - தானொருமுதற் பொருளாகி, அசலம் ஆகி - சலியாததாகி, என்றும் உள்ள - எக்காலத்தும் நசியாதிருக்கிற, இன்பத்தை-ஆநந்தத்தை, தண்ணென்ற-குளிர்ந்த, சாந்தபத இயற்கை தன்னை - சாந்தபதமென்கிற இயற்கைப்பொருளை, எ - று.

சலம் - சலித்தல்.

**3.** பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப்
பரிசு காட்டிச்
சதமாகி நிராலம்ப சாக்ஷியதா யாரம்பத்
தன்மை யாகி
விதமியாவுங் கடந்தவித்தை யெனுமிருளைக் கீண்டெழுந்து
விமல மாகி
மதமாறுங் காணாத வானந்த சாகரத்தை
மௌன வாழ்வை.

இ - ள். பதம்மூன்றும் கடந்தவர்க்கு - முப்பதங்களையுங் கடந்தவர்களுக்கு, மேலான-மேன்மையாகிய, ஞானபதப்பரிசுகாட்டி - ஞானபதத்தின் தன்மையைக்காட்டி, சதம் ஆகி - நிலையாகி, நிராலம்ப சாக்ஷியதாய்-பற்றுக்கோடில்லாததாகிய சாக்ஷிபூதமாகி, ஆரம்பத்தன்மை ஆகி - ஆதியாந் தன்மையுடையதாகி, விதம் யாவும் கடந்து - எல்லா விதங்களையுந் தாண்டி, அவித்தை என்னும் - அஞ்ஞானமென்கிற, இருளை - அந்தகாரத்தை, கீண்டு எழுந்து-கிழித்தெழுந்து, விமலம் ஆகி-மலரஹிதமாகி, மதம் ஆறும் - ஷண்மதங்களும், காணாத - காணக்கூடாத, ஆநந்த சாகரத்தை-இன்பக்கடலை, மௌநவாழ்வை - மௌநவாழ்க்கையை, எ - று.

பதமூன்றும் என்றது-சரியை கிரியை யோகம் என்னும் முப்பதங்களை.

**4.** வாழ்வனைத்துந் தந்தவின்ப மாகடலை நல்லமிர்தை
மணியைப் பொன்னைத்
தாழ்வறவென் னுளத்திருந்த தத்துவத்தை யத்துவித
சாரந் தன்னைச்
சூழ்பெரும்பே ரொளியையொளி பரந்தபர வெளியையின்
சுகத்தை மாறா

தேழுலகுங் கலந்தின்றாய் நாளையா யென்றுமா
மியற்கை தன்னை.

இ - ள். வாழ்வு அனைத்தும்தந்த-எல்லா வாழ்வுகளையுந்தந்தருளின, இன்பமாகடலை-பேரின்பக்கடலை, நல் அமிர்தை - சிறந்த அமிர்தத்தை, மணியை - மாணிக்கத்தை, பொன்னை - சுவர்ணத்தை, தாழ்வு அற-இழிவு நீங்க, என் உள்ளத்து இருந்த - என் மனத்தின் கண்வீற்றிருந்த, தத்துவத்தை - உண்மைப்பொருளை, அத்துவிதசாரம் தன்னை - அத்வைதசாரத்தை, சூழ்-வளைந்த, பெரும்பேர் ஒளியை-மிகவும் பெரிதாகிய வொளியை, ஒளிபரந்த - ஒளிபரவிய, பரவெளியை - பரமாகாயத்தை, இன்பச்சுகத்தை-பேராநந்தத்தை, மாறாது - நீங்காது, ஏழ் உலகும்கலந்து-ஏழுலகத்திலும் வியாபித்து, இன்று ஆய் - இன்றாகி, நாளை ஆய் - நாளையாகி, என்றும் ஆம்-என்றுமாகின்ற, இயற்கை தன்னை-இயற்கையை, எ - று.

**5.** தன்னையறிந் தவர்தம்மைத் தானாகச் செய்தருளுஞ்
சமத்தை லோகம்
மின்னைநிகர்த் திடவழியாச் சொரூபானந்தச்சுடரை
வேத மாதி
என்னையறி வரிதென்னச் சமயகோ டிகளிடைய
விடையறாத
பொன்னைவிரித் திடுமுலகத் தும்பருமிம் பரும்பரவும்
புனித மெய்யை.

இ - ள். தன்னை அறிந்தவர்தம்மை - தன்னையுணர்ந்தவர்களை, தான் ஆக செய்தருளும் - தானாகச் செய்தருள்கின்ற, சமத்தை - சம நிலையை, லோகம் மின்னைநிகர்த்திட - உலகம் மின்னலையொத்தழியவும், அழியா-நசியாத, சொரூபாநந்தச்சுடரை-சொரூபாநந்தச்சோதியை, வேதம் ஆதி-வேதம் முதலியவை, என்னை அறிவு அரிது என்ன - என்னை யறிதலரிதாமென்னவும், சமயகோடிகள் - பலசமயங்களும், இடைய - இடையவும், இடையறாத-அவற்றினுள்ளிடையறாதுவியாபித்துநின்ற, பொன்னைவிரித்திடும் உலகத்து - பொன்னுலகத்திலுள்ள, உம்பரும்-தேவர்களும், இம்பரும் - இவ்வுலகத்தாரும், பரவும் - துதிக்கின்ற, புனிதமெய்யை - பரிசுத்தமாகிய மெய்ப்பொருளை, எ - று.

என்னை என்பதனை வினவாக்கி யுரைப்பினும், பொன்னை எனநிறுத்தி, விரித்திடும் உலகத்து என்பதற்கு, விரிக்கப்பட்டவுலகத்தில் எனவுரைப்பினும் அமையும். கோடி என்றது இவ்விடத்துத் தனக்குரிய எண்ணுப்

பொருளை யுணர்த்தாது பலவென்னும் பொருளை யுணர்த்தி நின்றன. "அக்க மொருகோடி பெறுவஜ்ரபாணிக்குமரி" என்றார் பிறரும்.

**6.** பரவரிய பரசிவமா யதுவெனலாய் நானெனலாய்ப்
 பாச சாலம்
விரவிநின்ற விசித்திரத்தை யைக்யபதத் தினிதிருந்த
 விவேகந் தன்னை
இரவுபக னினைப்புமறப் பெனுந்தொந்த மறியார்க
 ளிதயம் வேதச்
சிரமெனவாழ் பராபரத்தை யானந்த நீங்காத
 சிதாகா சத்தை.

இ - ள். பரவு அரிய - துதித்தற்கரிய, பரசிவமாய்-பரசிவமாகி, அது எனல் ஆய் - அதுவென்றுசொல்லலாகி, நான் எனல் ஆய் - நானென்று சொல்லலாகி, பாசசாலம் - பாசக்கூட்டத்தோடு, விரவிநின்ற - கலந்து நின்ற, விசித்திரத்தை - விசித்ரரூபத்தை, ஐக்யபதத்து - ஐக்யபதத்தில், இனிது இருந்த - இனிதாயிருந்த, விவேகம்தன்னை - ஞான வடிவை, இரவுபகல் - இராப்பகல்கள், நினைப்புமறப்பு - நினைப்பு மறப்புக்கள், என்னும் - என்றுசொல்லப்படுகிற, தொந்தம் - தொடர்பை, அறியார்கள் - அறியாதவர்களுடைய, இதயம் - இதயமே, வேதச்சிரம் என - வேதமுடி யென்றுகொண்டு, வாழ் - அதனிடத்து வாழ்கின்ற, பராபரத்தை-பராத் பரவஸ்துவை, ஆநந்தம் நீங்காத - இன்பம்நீங்காத, சிதாகாசத்தை-ஞானா காயத்தை, எ - று.

ஐக்யம் - ஏகத்வம், ஏகம் - ஒன்று. ஐக்யம் என்றது சிவபரங்க ளொன்று பட்டிருக்கு நிலையை.

**7.** அத்துவித வனுபவத்தை யனந்தமறை யின்ன மின்ன
 மறியே மென்னும்
நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தைத் தன்னருளா
 னினைவுக் குள்ளே
வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தானாக வெந்நாளும்
 வளர்த்துக் காக்கும்
சித்தினைமாத் தூவெளியைத் தன்மயமா மானந்தத்
 தெய்வந் தன்னை.

இ - ள். அத்துவித அநுபவத்தை - அத்வைதாநுபவத்தை, அநந்தம் மறை - முடிவற்றவேதங்கள், இன்னம் இன்னம் - இன்னும் இன்னும், அறியேம் என்னும் - அறியோமென்றற்குரிய, நித்தியத்தை - சாசுவதவஸ் துவை, நிராமயத்தை - நிராமயப்பொருளை, நிர்க்குணத்தை-நிர்க்குணவஸ்

துவை, தன் அருளால் - தனதருளால், நினைவுக்குள்ளே - கருத்தினிடத்தே, வைத்துவைத்துப் பார்ப்பவரை - வைத்துவைத்து நோக்குவாரை, தான் ஆக - தானேயாகும்படி, எந்நாளும் வளர்த்து - எக்காலும் விருத்தியடைவித்து, காக்கும் - ரக்ஷிக்கிற, சித்தினை - சிற்பொருளை, மா-பெரிய, தூ - பரிசுத்தமாகிய, வெளியை - ஆகாயத்தை, தன்மயம் ஆம் - தன்மயமாகிய, ஆநந்தத் தெய்வந்தன்னை - இன்பத்தைக் கொடுக்கின்ற தெய்வத்தை, எ - று.

ஆமயம் - நோய். நிராமயம் - நோயின்மை. நிர்க்குணம் - குணமின்மை. சித்து - ஞானம். மாத்தூவெளி - சிதாகாசம்.

**8.** தன்னிலே தானாக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக
சமாதி யாகப்
பொன்னிலே பணிபோலு மாயைதரு மனமேயுன்
புரைக டீர்ந்தாய்
என்னினோ யான்பிழைப்பே னெனக்கினியா ருன்போல்வா
ரில்லை யில்லை
உன்னிலோ திருவருளுக் கொப்பாவா யென்னுயிர்க்கோ
ருறவு மாவாய்.

இ - ள். தன்னிலே தானாகநினைந்து - தன்னிலேதான் லயிக்கும்படி நினைந்து, கனிந்து அவிழ்ந்து-முதிர்ந்தவிழ்ந்து, சுக சமாதி ஆக-சுகத்தைத் தருகின்ற சமாதி யுண்டாக, பொன்னிலே பணிபோலும் - பொன்னில் ஆபரண முண்டானாற்போல, மாயைதரும் - மாயையினால் தரப்பட்ட, மனமே - நெஞ்சே, உன்புரைகள் தீர்ந்தாய் என்னின் - உன்குற்றங்களினின்று நீங்கினையாயின், யான்பிழைப்பேன் - நான் உஜ்ஜீவிப்பேன், இனி - இனி, எனக்கு - எனக்கு, உன் போல்வார்யார் - உன்னை யொப்பவர்யாவர், இல்லை இல்லை - (ஒருவரும்) இல்லை இல்லை, உன்னிலோ - நினைத்துப்பார்த்தாலோ, திரு அருளுக்கு ஒப்பு ஆவாய் - திருவருளுக்குச் சமானமாவாய், என் உயிர்க்கு - என் உயிருக்கு, ஓர் உறவும் ஆவாய் - ஒப்பற்ற வுறவுமாவாய், எ - று.

**9.** உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை
யொழிந்து தள்ளற்
கறவுமரி தரிதன்றோ விகபரமு முன்னையன்றி
யாவ துண்டோ
வறிதிலுன்னை யசத்தென்னல் வழக்கன்று சத்தெனவும்
வாழ்த்து வேனென்
சிறுமைகெடப் பெருமையினின் சென்மதே யத்தினிநீ
செல்லல் வேண்டும்.

இ - ள். உற - மிகவும், உடலை எடுத்தவரில் - உடம்பெடுத்தவர்களுக்குள்ளே, பிரமாதியேனும் - பிரமாதியராலும், உன்னை ஒழிந்து - உன்னை நீங்கி, தள்ளற்கு - காலங்கழித்தற்கு, அறவும் - மிகவும், அரிது அரிது அன்றோ - அருமையாகுமல்லவா, இகபரமும் - இகபரசித்திகளும், உன்னை அன்றி - உன்னையல்லது, ஆவது உண்டோ - கைகூடுவதுளதோ, வறிதில் - வீணே, உன்னை அசத்து என்னல் - உன்னை அசத்தென்று சொல்லுதல், வழக்கு அன்று - விவகாரமல்ல, சத்து எனவும் வாழ்த்துவேன் - சத்தென்றும் வாழ்த்தாநிற்பேன், என் சிறுமைகெட - என்தாழ்வுதீர, பெருமையின் - பெருமையோடு, நின்சென்மதேயத்து - உன்சென்மபூமிக்கு, இனி நீ செல்லல்வேண்டும் - இனி நீ போதல்வேண்டும், எ - று.

ஜன்மபூமிக்குச் செல்லவேண்டும் என்றது இறந்தொழியவேண்டும் என்றபடி. பிரமாதிகளாலும் உன்னை வெல்லமுடியாது, இகபரசித்திகளும் உன்னையன்றிப்பலியா, ஆதலால், உன்னைச் சத்தென்று வாழ்த்துவேன், நீயிறந்தொழிய வேண்டுமென்பது கருத்து.

**10.** வேண்டிய நாளென்றோடும் பழகியநீ யெனைப்பிரிந்த
விசாரத் தாலே
மாண்டுகிடக் கினுமந்த வெல்லையையும் பூரணமா
வணக்கஞ் செய்வேன்
ஆண்டகுரு மௌனிதன்னா லியானெனதற் றவனருளா
னாவேன் பூவில்
காண்டகவெண் சித்திமுத்தி யெனக்குண்டா முன்னாலென்
கவலை தீர்வேன்.

இ - ள். வேண்டியநாள் - அநேகநாள், என்னோடும் பழகிய நீ - என்னோடு பழகியிருந்த நீ, என்னைப் பிரிந்த விசாரத்தாலே - என்னைப் பிரிந்த வியசநத்தாலே, மாண்டு கிடக்கினும் - மடிந்து கிடந்தாலும், அந்த எல்லையையும் - அந்த இடத்தையும், பூரணமா வணக்கம் செய்வேன் - பூர்த்தியாய் வணங்குவேன், ஆண்ட - என்னையாண்டருளின, குரு மவுநி தன்னால் - மௌநகுருவினால், யான் எனது அற்று - யான் எனது என்பது அற்று, அவன் அருள் - அவனதருளே, நான் ஆவேன் - நானாய்விடுவேன், பூவில் - உலகத்தில், காண்தக - யாவரும் காணலாம்படி, எண்சித்தி - அஷ்டசித்திகளும், முத்தி - மோக்ஷமும், எனக்கு உண்டாம் - எனக்குளதாகும், உன்னால் - உன்னாலே, என்கவலை தீர்வேன் - என் வியசநந்தீர்வேன், எ - று.

நீ மாண்டொழியினும், நாம் பழகின பழக்கவாசனையால் நீ மாண்டு கிடக்கிற எல்லையையும் தொழுவேன், மௌனகுருவின் அருளால் அருளுருவாய் விடுவேன், அஷ்டசித்திகளையு மெய்துவேன், உன்னால் என் கவலை யொழிவேன் என்பது கருத்து.

**11.** தீராத வென்செனன வழக்கெல்லாந் தீருமிந்தச்
 செனனத் தோடே
யாரேனு மறிவரிய சீவன்முத்தி யுண்டாகு
 மைய வையோ
காரேனுங் கற்பகப்பூங் காவேனு முனக்குவமை
 காட்டப் போமோ
பாராதி யாகவெழு மண்டலத்தி னின்மகிமை
 பகர லாமோ.

இ - ள். தீராத - ஒழியாத, என்செனனவழக்கு எல்லாம் - என் ஜந்ம விவகாரங்களெல்லாம், இந்த செனனத்தோடே தீரும் - இந்த ஜந்மத்தோடு ஒழிந்துபோம், யாரேனும் - யாவராயினும், அறிவு அரிய - அறிதலருமையாகிய, சீவன்முத்தி உண்டாகும் - சீவன்முத்தியும் உண்டாகும், ஐய - ஐயா, ஐயோ - அந்தோ, காரேனும் - மேகமாயினும், கற்பகப் பூங்காவேனும் - கற்பகப் பூஞ்சோலையாயினும், உனக்கு உவமை காட்டப் போமோ - உனக்கு உவமைப் பொருள்களாக எடுத்துச் சொல்லலாமோ, பார் ஆதியாக - பூமி முதலாகவுள்ள, எழு மண்டலத்தில் - சப்தலோகங்களிலும், நின்மகிமை பகரலாமோ - உன் பெருமையைச் சொல்லுதல் ஒரு வர்க்கியையுமோ.

அருத என் ஜந்மவிவகாரம்யாவும் இந்த ஜந்மத்தோடு அற்றொழியும், ஜீவன் முத்தியும் உண்டாகும். மேகமுதலானவைகளும் ஔதார்யத்தால் உனக்குச் சமானமாமோ, உன்மஹிமை ஏழுலகத்தாரானுஞ் சொல்லி முடியுமோ என்பதாம்.

---

## பாயப்புலி.

**1.** பாயப் புலிமுன் மான்கன்றைக் காட்டும் படியகில
மாயைப் பெரும்படைக் கேயிலக்காவென்னை வைத்தனையோ
நீயெப் படிவகுத் தாலுநன் றேநின் பெருங்கருணை
தாயொத் தடியர்க் கருள்சச்சி தானந்த தற்பரமே.

இ - ள். பாய் - பாய்கின்ற, அப்புலிமுன்னம் - அப்புலிக்கெதிரில், மான் - மானானது, கன்றைக்காட்டும்படி - தன்கன்றைக்காட்டுதல் போல, அகிலமாயை - பிரபஞ்சமாயையாகிய, பெரும்படைக்கே - பெரிய ஆயுதத்துக்கே, இலக்கு ஆ - லக்ஷ்யமாக, என்னை வைத்தனையோ - என்னை வைத்தாயோ, நீ எப்படி வகுத்தாலும் - நீயெவ்வாறுவகுக்கினும், நன்றே - நல்லதே, நின்பெருங்கருணை - உனது பேரருளை, அடியர்க்கு - உன் அடியார்களுக்கு, தாய் ஒத்து - தாய்போன்று, அருள் - அருள் செய்யாநின்ற, சச்சிதானந்த தற்பரமே - அஸ்திபாதி ப்ரியரூபமாகிய தற்பரவஸ்துவே.

புலிபாயும்போது மானானது தன்கன்றைக்காட்டுதல் இயற்கையாதலால் இவ்வாறு கூறினார். இறைவனே, புலிபாயும்போது மானானது தன் கன்றை அதற்கு லக்ஷயமாக்குதல்போல, மாயைக்கு என்னை லக்ஷயமாக்கினாயோ, நீ எப்படி வகுப்பினும் நன்றே என்பது கருத்து. "நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானோவதற்கு நாயகமே" என்றார் திருவாதவூரடிகளும்.

**2.** தற்பர மாஞ்சிற் பரமாகி மன்றந் தனினடித்து
நிற்பரம் போருகன் மால்பணி நீதரென் னெஞ்சகமாம்
கற்பரந் தாங்கு கரைந்திட வானொத்த காட்சிநல்கும்
பொற்பர மாயென் வினைக்கருந் தாதைப் பொடிசெய்ததே.

இ - ள். அம்போருகன் - பிரமனும், மால் - திருமாலும், பணி - வணங்கத்தக்க, நீதர் - நீதியையுடையவர், தற்பரம் ஆம் சிற்பரம் ஆகி - தற்பரமாகிய சிற்பரமாகி, மன்றம்தனில் - அம்பலத்தில், நடித்துநிற்பர் - திருநடஞ்செய்து நிற்பர், (அத்தன்மையர்) என் நெஞ்சகமாம்கல்-என் மனமாகிய கல்லானது, பரந்தாங்கு - பரவினாற்போல, கரைந்திட-உருகிநிற்க, வான் ஒத்த காட்சிநல்கும் - மேன்மைபொருந்திய காட்சியைக் கொடுக்கின்ற, பொற்புஅரம் ஆய் - அழகாகிய அரமாகி, என்வினை-என் தீவினையாகிய, கருந்தாதை - இரும்பை, பொடிசெய்தது - பொடியாக்கினது, ஏ - என்னவியப்பு, எ-று.

இறைவன் என் வினையாகிய இரும்பைப்பொடியாக்கும் அரத்தையொப்பான் என்பது கருத்து.

**3.** செய்யுந் தவஞ்சற் றுமில்லாத நானுன் றிருவடிக்கே
கொய்யும் புதுமல ரிட்டுமெய் யன்பர் குழாத்துடனே
கையுஞ் சிரமிசைக் கூப்பிநின் றாடிக் கசிந்துருகி
உய்யும்படிக்கருள் செய்வதென் றோபுலி யூரத்தனே.

இ - ள். புலியூர் - புலியூரின் கண்ணெழுந்தருளியிருக்கிற, அத்தனே - எமது தந்தையே, செய்யும்தவம் - செய்தற்குரிய தவமானது, சற்றும் இல்லாத - சிறிதுமில்லாத, நான் - அடியேன், உன்திருவடிக்கு-உன் திருவடியின்மேல், கொய்யும் - பறிக்கப்படுகின்ற, புதுமலர் இட்டு-நாண்மலரைத் தூவி, மெய்யன்பர் குழாத்துடனே-மெய்யடியார் கூட்டத்தோடு (கூடி), கையும் - கைகளையும், சிரமிசைக்கூப்பி - சிரத்தின்மீது குவித்து, நின்று ஆடி-நின்று ஆநந்தநிர்த்தனஞ்செய்து, கசிந்துஉருகி - மனங்கசிந்து மெய்யுருகி, உய்யும்படிக்கு - உஜ்ஜீவிக்கும்படிக்கு, அருள்செய்வது - கிருபை செய்வது, என்றோ - என்னாளோ, எ - று.

செய்யுந்தவஞ் சற்றுமில்லாமையே, நான் உன்திருவடிக்கே கொய்யும் புதுமலரிட்டு மெய்யன்பர் குழாத்துடனே கையுஞ் சிரமிசைகூப்பி நின்றாடிக் கசிந்துருகி உய்யும்படிக் கருள்செய்வதென்று என்றிரங்குதற்குக் காரணமாயிற்று. என்நாளோ என்பதில் ஓகாரம் இரக்கமும் அருமையுந்தோன்றநின்றது. புதுமலரிடுதல்முதல்கசிந்துருகுதலீறாகியசெயல்கள் உய்தற்குக் கருவிகளென்பதூஉம், அருள்செய்வதென்றோ என்றமையால் அவையும் அவனருளின்றிக் கைவராவென்பதூஉம் போதரும், "அதுவுமவனதின்னருளே" எனவும், "அவனருளாலே யவன்றாள் வணங்கி" எனவும், அருள் கைவந்த அறிஞர் கூறலுங்காண்க.

**4.** அத்தனைச் சிற்றம் பலவனை யென்னுயி ராகின்ற
சுத்தனைச் சுத்த வெளியா னவனைச் சுகவடிவாம்
நித்தனை நித்த நிராதார மாகிய நின்மலனை
எத்தனை நாள்செல்லு மோமன மேகண் டிறைஞ்சுதற்கே.

இ - ள். மனமே - நெஞ்சமே, அத்தனை - எமது தந்தையை, சிற்றம்பலவனை - சிதாகாயத்தில் பொதுநடஞ்செய்வோனை, என் உயிர் ஆகின்ற சுத்தனை - என்னுயிராய் நின்ற பரிசுத்தமுடையவனை, சுத்தவெளி ஆனவனை - வெறுவெளியானவனை, சுகவடிவு ஆம்நித்தனை - சுகரூபமாகிய சாசுவதனை, நித்தம் நிராதாரம் ஆகிய நின்மலனை - என்றும் நிராதாரமாயிருக்கின்ற மலரஹிதனை, கண்டு இறைஞ்சுதற்கு - கண்ணாரக்கண்டு மெய்யார வணங்குதற்கு, எத்தனை நாள்செல்லுமோ - எத்தனை காலங்கழியுமோ, (நீ சொல்வாயாக) எ - று.

யான் என்பது இவ்விடத்து அறிவுருவாகிய ஆன்மாவைக் குறிக்கின்றமையால் என் உயிர் என்றது அறிவுக்கறிவாகிய பரமான்மாவை.

**5.** கண்டா ருளத்தினிற் காலூன்றிப் பெய்யுங் கருணைமுகில்
அண்டார் புரத்துக்கு மன்பர் வினைக்கு மசனிதன்னைக்
கொண்டாடினார்முனங் கூத்தாடுமத்தன் றன்கோலமெல்லாம்
விண்டாலம்மா வொன்றுங் காணாது வெட்ட வெறுவெளியே.

இ - ள். கண்டார் உள்ளத்தினில் - தன்னையுள்ளவாறு கண்டவர்களுடையமனங்களில், கால்ஊன்றி - அடியூன்றி, கருணைபெய்யும் - கருணைவர்ஷத்தைப்பொழிகின்ற, முகில்-மேகம், அண்டார்புரத்துக்கும்-பகைவராகியதிரிபுரவாசிகளாகிய மலைகளுக்கும், அன்பர்வினைக்கும் - அடியார் வினைகளாகியமலைகளுக்கும், அசனி - இடியேறு, தன்னைகொண்டாடினார் முன்னம் - தன்னைக் கொண்டாடினவர்களுக்கெதிரில், கூத்தாடும் - கூத்தாடுகின்ற, மத்தன்-உன்மத்தன், கோலம் எல்லாம்-(அவன்) கோலங்களையெல்லாம், விண்டால்-வெளியிட்டுச் சொல்லலாமென்றால், ஒன்றும் காணாது-

சிறிதுங் காணப்படாது, வெட்டவெறுவெளியே - (காணப்படுவது) வெட்ட வெறுவெளிதான், அம்மா - ஆச்சரியம், எ-று.

அசனியென மேல்வந்தமையால் அண்டார்புரத்தையும் அன்பர்வினையையும் மலைகளாக்கி யுரைக்கலாயிற்று. யாவராயினுங் கொண்டாடலையே யுகந்து கூத்தாடுவோனாதலால் மத்தனென்று பிரித்துரைக்கலாயிற்று, கூத்தாடும் அத்தன் எனப் பிரித்துரைப்பினுமாம்.

**6.** வெளியான நீயென் மனவெளி யூடு விரவினையா
ஒளியாருங் கண்ணு மிரவியும் போனின் றுலாவுவன்காண்
அளியாருங்கொன்றைச் சடையாடவம்புலி யாடக்கங்கைத்
துளியாட மன்றுணடமாடு முக்கட் சுடர்க்கொழுந்தே.

இ - ள். வெளியானநீ - சிதாகாசரூபமானநீ, என்மன வெளியூடு விரவின் - என்மனாகாசத்திற் கலந்தால், ஐயா-ஐயனே, ஒளி ஆரும்கண்ணும்- ஒளிபொருந்திய விழியும், இரவியும் - சூரியனும், போல் - போல, நின்று உலாவுவன் - நிலைபெற்றுலாவுவேன், அளி ஆரும் - (தேன்விருப்பத்தால்) வண்டுகள் நிறைந்து, கொன்றை-கொன்றைமலர்களையணிந்த, சடை ஆட- சடையாடவும், அம்புலி ஆட - அச்சடையி லணிந்திருக்கிற சந்திரகண்டமாடவும், கங்கை - கங்கையின், துளி ஆட - துளிகள் ஆடவும், மன்றுள்- சிற்சபையில், நடம்ஆடும் - நடனமாடுகின்ற, முக்கண் - மூன்றுகண்களையுடைய, சுடர்க் கொழுந்தே - தேஜோஜ்வாலையே, எ-று.

முக்கண் சுடர்க்கொழுந்து என்பதற்கு, மூன்றுகண்களாக முச்சுடரைக்கொண்ட வேதமுடிவே யென்றுரைப்பினுமமையும். முச்சுடர்- சோமசூர்யாக்நிகள். இறைவனுடின் எல்லா மாடுமென்பதாயிற்று. "கருவூரனுக்கா, மான்சாயச்செங்கை மழுவலஞ்சாயவனைந்த கொன்றைத் தேன்சாயநல்ல திருமுடிசாய்த்த சிவக்கொழுந்தே" என்றார் மேலோரும்.

**7.** கொழுந்தா துறைமலர்க் கோதையர் மோகக் குரைகடலில்
அழுந்தாத வண்ணநின் பாதப் புணைதந் தருள்வதென்றோ
எழுந்தா தரவுசெ யெம்பெரு மானென் றிறைஞ்சி விண்ணோர்
தொழுந்தாதை யேவெண் பொடி பூத்த மேனிச் சுகப்பொருளே.

இ - ள். விண்ணோர் - தேவர்கள், எழுந்து - எழுந்து நின்று, எம்பெருமான் - எம்மிறைவனே, ஆதரவுசெய் - எங்களுக்கோ ராதரவுண்டாக்கு, என்று - என்று வாயினாற்றுதித்து, இறைஞ்சிதொழும் - வணங்கித்தொழுதற்குரிய, தாதையே - எமது தந்தையே, வெண்பொடிபூத்த - திருவெண்ணீறுபூத்த, மேனி - திருமேனியையுடைய, சுகப்பொருளே - ஆநந்தவஸ்துவே, கொழு-செழிய, தாது உறை - மகரந்தம்பொருந்திய, மலர்க் கோதையர் - மலர்மாலைகளையணிந்த மாதர்களுடைய, மோகம் மோஹ

மாகிய, குரைகடலில் - ஆரவாரத்தோடுகூடிய சமுத்திரத்தில், அழுந்தாத வண்ணம்-அமிழாதபடி, நின் பாதப்புணை - உன் திருவடியாகிய மரக்கலத்தை, தந்தருள்வது என்றோ - கொடுத்தருளுவது எக்காலமோ (அறிகிலேன்), எ-று.

இறைவனடியை யடையாதார்க்கு மோகக்கடல் கடத்தலருமையாமென்பார், "கொழுந்தா துறை மலர்கோதையர் மோகக்குரை கடலிலழுந்தாதவண்ண நின்பாதப்புணை தந்தருள்வதென்றோ" என்றார். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடிசேராதார்" என்றார் மேலோரும். கடல் கடக்கப் புணையமையாதாதலால், புணையீண்டுமரக்கலத்தின்மேலது.

**8.** சுகமாகு ஞானந் திருமேனி யாநல்ல தொண்டர்தங்கள்
அகமே பொற் கோயி லெனமகிழ்ந் தேமன்று ளாடியகற்
பகமேயுன் பொன்னடி நீழல்கண் டாலன்றிப் பாவிக்கிந்தச்
செகமாயை யானவருங்கோடை நீங்குந் திறமிலையே.

இ - ள். சுகம்ஆகும் - சுகமுதய மாதற்குக் காரணமாகிய, ஞானம் - ஞானமே, திருமேனி ஆம் - திருமேனியாகக் கொண்ட, நல்லதொண்டர் தங்கள் - சிறந்த தொண்டர்களுடைய, அகமே - மனமே, பொற்கோயில் எனமகிழ்ந்து - பொற்கோயிலாகக் கொண்டுமகிழ்ந்து, மன்றுள் - அம்பலத்தில், ஆடிய - கூத்தாடின, கற்பகமே - கற்பகவிருக்ஷமே, உன்பொன்னடி நீழல் கண்டால் அன்றி - உன் திருவடி நிழலைக்கண்டாலல்லது, பாவிக்கு-பாவியாகிய எனக்கு, இந்த செகமாயை ஆன-இந்த ப்ரபஞ்சமாயையாகிய, அருங்கோடை-நீக்குதற்கரிய கோடையானது, நீங்கும் திறம் இல்லை-நீங்கும் வகையில்லை, எ-று.

அம்பலவாணனே, பாவியேன் உன் பொன்னடி நிழலையடைந்தாலன்றி எனக்கு இந்தப் பிரபஞ்சமாயையாகிய கடுங்கோடை நீங்கும் வகையில்லை என்பது கருத்து.

**9.** நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினையறிந்தே
தூங்காமற் றூங்கினல் லாதே யெனக்குச் சுகமுமுண்டோ
ஓங்கார மாமைந் தெழுத்தாற் புவனத்தை யுண்டுபண்ணிப்
பாங்கா நடத்தும் பொருளே யகண்ட பரசிவமே.

இ - ள். ஓங்காரம் ஆம் - ப்ரணவஸ்வரூபமாகிய, ஐந்து எழுத்தால் - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தால், புவனத்தை உண்டுபண்ணி - புவனங்களையுண்டாக்கி, பாங்கு ஆ முறையாக, நடத்தும் - அவைகளை நடத்துகின்ற, பொருளே - வஸ்துவே, அகண்டபரசிவமே - அகண்டாகார பரசிவமே, நீங்காது - நீங்காமல், உயிருக்கு உயிர் ஆகின்ற - உயிருக்குயிராயிருக்கிற, நின்னை அறிந்து - உன்னை யுணர்ந்து, தூங்காமல் தூங்கின் அல்லாது - தூங்காமல் தூங்கின

லன்றி, எனக்கு - அடியேனுக்கு, சுகமும் உண்டோ - நிரதிசய சுகமு முண்டாகுமோ, எ - று.

ப்ரணவமே பஞ்சாக்ஷரத்துக்கு மூலமென்பார் "ஓங்காரமா மைந் தெழுத்து" என்றார். தூங்காமற் றூங்குதல் - நனவிற் சுழுத்திநிலையை யடைந்திருத்தல். அது, "வினவிற்பரத்தை யறிவுறுதற்கவத்தை புலன் வினைமாறியே, நனவிற் சுழுத்திநிலைவரினப் பொருட்டி கழூநலனுகவே" என்னும் மேலோர் வாக்கானு முணர்க.

**10.** சிவமாதி நான்முகக் கோவந்த மாமறை செப்புகின்ற
நவமாயி லங்கிய வொன்றே யிரண்டற்ற நன்மைபெறா
தவமே தருமைம் புலப்பொறிக் கேயென் னறிவுபொல்லாப்
பவமே விளைக்கவென் றேவெளி மானெனப் பாய்ந்ததுவே.

இ - ள். சிவம் - மங்களகரம், ஆதி - முதற்பொருள், (என்று) நான் முகக்கோ - பிரமனும், அந்த - அந்த, மாமறை - பெரிய வேதங்களும், செப்புகின்ற - புகழ்ந்து சொல்லுகின்ற, நவம்ஆய் இலங்கிய - புதுமையாய் விளங்காநின்ற, ஒன்றே - ஒப்பற்றபொருளே, இரண்டு அற்ற நன்மை பெறாது-அத்விதீயமாகிய நலத்தையடையாமல், அவமேதரும் - பயனின் மையையே கொடுக்கின்ற, ஐம்புலப்பொறிக்கே - ஐம்பொறிப்புலன்களில், என் அறிவு - என்மனமானது, பொல்லா - கொடிதாகிய, பவமேவிளைக்க என்றே - பிறவியையே விளைத்தற் கென்றுதானோ, வெளிமான் என - வெளிமானைப்போல, பாய்ந்தது - தாவிக்குதித்தது, எ - று.

சிவமாதி என ஒன்றாகவைத்து, சிவமாதியாக எனப்பொருளுரைத் தலுமாம். பெருமை சொலற்கரிதா மென்பார் அந்த என்றொழிந்தார். வேதங்களுக்குப் பெருமையாவது-வினையினீங்கி விளங்கியவறிவின் முனை வன் கண்டது என்னும்பெருமை. இரண்டற்ற நன்மை - அத்வைதாநந் தம். "காட்சிக்கெட்டாதொன்றிற் கவ்வையறவடைகின்றாய்" என மேலோருமிவ்வாறு கூறுதல் காண்க. ஐம்பொறிப்புலன்கள் ஐம்பொறிகள் வாயிலாகவரும் விடயங்கள். ஐம்பொறி முன்பின்னாகமாற்றியும் உருபைப் பிரித்துஞ் சேர்த்தும் பொருட்கிணங்க வுரைக்கலாயிற்று. அறிவு - இவ் விடத்து மனத்தை யுணர்த்திற்று. வெளிமான் - ஒருமான்விசேடம், அது தாவுதற்றொழிலில் வல்லது "மரைபோற்றிரிவாரை யகனெஞ்சமே" எனப் பிறருங்கூறினார்.

**11.** ஆறொடுத் திலங்கு சமயங்க ளாறுக்கு மாழ்கடலாய்
வீறிப் பரந்த பரமான வானந்த வெள்ளமொன்று
தேறித் தெளிந்து நிலைபெற்ற மாதவர் சித்தத்திலே
ஊறிப் பரந்தண்ட கோடியெல் லாநின் றுலாவியதே.

இ - ள். ஆறு ஒத்திலங்கு - நதிகளை யொத்துவிளங்குகின்ற, சமயங்கள் ஆறுக்கும் - ஆறுசமயங்களுக்கும், ஆழ்கடலாய் - ஆழ்ந்த கடலுக்கு நிகராய், வீறி பரந்த - விஞ்சிப்பரவிய, பரமான - மேலான, ஆநந்தவெள்ளம் ஒன்று - ஆநந்தப்பெருக்கொன்று, தேறி தெளிந்து-தேறித்தெளிந்து, நிலைபெற்ற - நிலையையடைந்த, மாதவர்சித்தத்திலே - பெருந்தவத்தினரது ஹ்ருதயத்திலே, ஊறி பரந்து - கசிந்து பரவி, அண்டகோடியெல்லாம் - அண்டகோடிகளி லெல்லாம், நின்று உலாவியது - நின்றுவியாபித்தது.

சமயங்களெல்லாம், தன்னுண்மையை நோக்குமிடத்து, நிஷ்ப்ரயோஜநங்களாய்ச் சென்றொடுங்கு மிடமாதலால், "ஆறொத்திலங்கு சமயங்களாறுக்கு மாழ்கடலாய்" என்றார். தேறுதல் - சாத்திரங்களாற்றெளிதல். தெளிதல் - ஆசாரியனாலும் சுவாநுபவத்தாலும் தெளிதல்.

**12.** நடக்கினு மோடினு நிற்கினும் வேறொரு நாட்டமின்றிக்
கிடக்கினுஞ் செவ்வி திருக்கினு நல்லருட் கேள்வியிலே
தொடக்குமென் னெஞ்ச மனமற்ற பூரணத் தொட்டிக்குளே
முடக்குவன் யான்பர மானந்த நித்திரை மூடிடுமே.

இ - ள். நடக்கினும் - நடந்தாலும், ஓடினும் - ஓடினாலும், நிற்கினும் - நின்றாலும், வேறு ஒருநாட்டம் இன்றி கிடக்கினும் - வேறொரு கருத்தின்றிக் கிடந்தாலும், செவ்வி து இருக்கினும் - செவ்விதாக இருந்தாலும், நல் அருட்கேள்வியில் - சிறந்த திருவருட்கேள்வியில், என் நெஞ்சம் தொடக்கும் - என் மனமானது கட்டுண்ணுநிற்கும், யான் - நான் என்றாலோ, மனமற்ற பூரணத்தொட்டிக்குள்ளே முடக்குவன் - மனமிறந்த பூரணமாகிய தொட்டிலில் முடக்கிக்கொள்வேன், பரமாநந்த நித்திரைமூடிடும் - பேரின்ப வுறக்கமானது என்னை வந்து மூடிக்கொள்ளும், எ - று.

"நின்று மிருந்துங்கிடந்து நடந்துநினை - என்றுஞ் சிவன்றாளினை" என்னுமேலோர் திருவாக்குகளை யடியொற்றி, நடக்கினு மோடினுநிற்கினும் வேறொரு நாட்டமின்றிக் கிடக்கினுஞ் செவ்விதிருக்கினு நல்லருட் கேள்வியிலே தொடக்குமென்னெஞ்சம் என்றார். மனமற்ற பூரணத் தொட்டிக்குளே என்றது, உள்ளத்தழிவி லடுக்குந்தேனை.

**13.** எண்ணாத தெண்ணிய நெஞ்சே துயரொழி யென்னிரண்டு
கண்ணே யுறங்குக வென்னனை மூக்கட் கருணைப்பிரான்
தண்ணார்கருணை மௌனத்தி னன்முத்தி சாதிக்கலாம்
நண்ணாத தொன்றில்லை யெல்லா நலமு நமக்குளவே.

இ - ள். எண்ணாதது எண்ணியநெஞ்சே-எண்ணவொண்ணாதவெண்ணங்களையெல்லாம் எண்ணின மனமே, துயர் ஒழி - துன்பத்தை நீக்குவா

யாக, என் இரண்டு கண்ணே - என்னிரண்டுகண்களே, உறங்குக - உறங்குவீர்களாக, என் ஆணை - என்மீது ஆணை, முக்கண் - மூன்றுகண்களையுடைய, கருணைப்பிரான் - கருணாசமுத்ரமாகிய பெருமானது, தண் ஆர்கருணை - தட்பத்தினையுடைய கருணையால் நமக்குளதாகிய, மௌனத்தினால் - மௌனநிலையினால், முத்திசாதிக்கலாம் - முத்திநெறியைச் சாதிக்கலாம், நண்ணாதது ஒன்றுஇல்லை - கிடையாததொருபொருளில்லை, எல்லாநலமும் நமக்கு உள - எல்லா நன்மைகளும் நமக்குளவாம், எ - று.

என்மனமே, உன் துயரம்நீங்கு, என்கண்களே உறங்குக, முக்கட்பிரானது திருவருளால் முத்திமுதலாகிய எல்லாப் பேறுகளையும் அடையலாம் என்பது கருத்து.

**14.** நானென் றொருமுத லுண்டென்ற நான்றலை நாணவென்
னுட்,டானென் றொருமுதல் பூரண மாகத் தலைப்பட்டொ
ப்பி,லானந்தந் தந்தென் னறிவையெல் லாமுண்டவசநல்கி
மோனந் தனைவிளைத் தாலினி யாது மொழிகுவதே.

இ - ள். நான்என்று ஒருமுதல் உண்டு என்ற-நானென்றொரு முதற்பொருளுளதென்று அகங்கரித்துத்திரிந்த, நான் - நான், தலைநாண - தலைவளைக்க, என்னுள் - என்மனதுக்குள்ளே, தான் என்று ஒருமுதல் - தானென்றொரு முதற்பொருள், பூரணமாக தலைப்பட்டு - நிறைவாகக் கலந்து, ஒப்பில் ஆநந்தம் தந்து - ஒப்பற்ற ஆநந்தத்தைக்கொடுத்து, என் அறிவையெல்லாம் உண்டு - என்னறிவு முழுமையுமுட்கொண்டு, அவசம் நல்கி - பரவசத்தைக்கொடுத்து, மோனந்தனைவிளைத்தால் - மௌனநிலையை யெனக்குக் கிருபைசெய்ததானால், இனியாது மொழிகுவது - இனியென் சொல்வது, எ - று.

நான் என்று அகங்கரித்துத்திரிந்த நான் தலைவளைக்கும்படி பூரணப்பொருள் என் மனத்திற்கலந்து ஒப்பற்ற இன்பத்தைக் கொடுத்து என்னறிவு முழுதையும் ஆக்ரமித்துக்கொண்டு பரவசத்தை யெனக்குக்கொடுத்து மோநநிலையையும் எனக்குக் கொடுத்ததானால், யான்சொல்லத்தகுவது யாது என்பதாம்.

**15.** தானந் தவஞ்சற்று மில்லாத நானுண்மை தானறிந்[த்
மோனம் பொருளெனக் கண்டிடச் சற்குரு மோனனுமா
தீனன் றனக்கிங் கிரங்கினை யேயினிச் சிந்தைக்கென்று
மானந்தந் தானல்லவோபர மேசச்சி தானந்தமே.

இ - ள். தானம் தவம் சற்றும் இல்லாத - கொடை தவம் சிறிதுமில்லாத, நான்-நான், உண்மைதான் அறிந்து - யதார்த்தத்தை யுணர்ந்து,

மோனம் - மௌனநிலையே, பொருள் எனக்கண்டிட - மெய்யென்றுணருமாறு, சற்குருமோனனுமாய் - மௌனசத்குருவாகி, நீனன்தனக்கு - எளியேனுக்கு, இங்கு - இவ்விடத்து, இரங்கினையே - இரங்கியருளினையே, இனி - இனி, சிந்தைக்கு - என்மனதுக்கு, என்றும் - எக்காலமும், ஆநந்தந்தான் அல்லவோ - இன்பமே யன்றோவுள்ளது, பரமே - மேலான பொருளே, சச்சிதானந்தமே - சச்சிதாநந்தப்பொருளே, எ - று.

சச்சிதானந்த வஸ்துவே, தானம்முதலியவை சிறிதுமில்லாத நான் உண்மையையறிந்து மௌனநிலையே நன்னிலையெனக் காணுமாறு மௌனசற்குருவாகிவந்து எளியனேற்கிரங்கி யருளினை, இனியெனக்குள்ளது இன்பமேயன்றோ என்பதாம்.

**16.** எனக்கோர் சுதந்தர மில்லையப் பாவெனக் கெய்ப்பில்வைப்
பாய்,மனக்கோ தகற்றும்பரம்பொருளே யென்னை வாழ்
வித்திட
னினக்கே பரநின்னை நீங்காத பூரண நீள்கருணை
தனக்கே பரமினிச் சும்மா விருக்கத் தகுமென்றுமே.

இ - ள். எனக்கு - அடியேனுக்கு, ஓர்சுதந்தரம் இல்லை - ஒருஸ்வதந்தரம் இல்லை, அப்பா - அப்பனே, எனக்கு - அடியேனுக்கு, எய்ப்பில் வைப்பு ஆய் - எய்ப்பில் வைப்பாகி, மனக்கோது - மனக்களங்கத்தை, அகற்றும் - நீக்குகின்ற, பரம்பொருளே - மேலானவஸ்துவே, என்னை வாழ்வித்திடல் - என்னை வாழ்விப்பது, நினக்கேபரம் - உனக்கேபாரமாகும், (இல்லை) நின்னை நீங்காத-உன்னைவிட்டு நீங்காத, பூரணம் - பூரணமாகிய, நீள் கருணைதனக்கே - பெருங்கருணைக்கே, பரம் - பாரமாகும், (ஆதலால்) இனி என்றும் - இனி எக்காலத்திலும், சும்மாஇருக்கத்தகும் - (எனக்கு) சும்மாவிருத்தலே தகுதியாகும், எ - று.

எய்த்தல் - இளைத்தல். வைப்பு - நிக்ஷேபம், என்னை வாழ்வித்திடல் உன் கருணைக்குக்கடமை, சும்மா இருத்தல்எனக்குக்கடமை என்பது கருத்து.

**17.** இடம்பெறு வீடுமின் ஞர்சேய் சகமு மிருநிதியு
முடம்பைவிட் டாருயிர் போம்போது கூடியுடன்வருமோ
மடம்பெறு மாயை மனமே யினியிங்கு வாமவுனி
திடம்பெற வைத்த மௌனஞ் சகாயந்தெரிந்துகொள்ளே.

இ-ள். இடம்பெறுவீடு-விசாலமானவீடு, மின்னார்-மாதர்கள், சேய் - புத்திரன், சகமும் - பிரபஞ்சம் ஆகிய எல்லாமும், இருநிதியும் - பெரியதிரவியமும், ஆர்உயிர் - அரியவுயிர், உடம்பை விட்டுபோம்போது-சரீரத்தை விட்டுப் போகுங்காலத்தில், கூடி - சேர்ந்து, உடன்வருமோ - நம்மோடு

வருமோ, மடம்பெறுமாயை மனமே - மடைமைபெற்ற மாயாரூபமாகிய நெஞ்சே, இனி இங்குவா - இனி யிவ்விடத்துவா, மவுனி - மௌனகுருவானவர், திடம்பெறவைத்த-நாம்திடம் பெறும்வகையமைத்த, மௌனம் - மௌனநிலையே, சகாயம் - நமக்கு அப்பொழுது உதவியாவது, தெரிந்துகொள் - அறிந்துகொள்வாயாக, எ-று.

மனமே, உடம்பைவிட்டு உயிர் நீங்குங்காலத்தில் வீடுமுதலியவை கூடச்செல்லுமோ, செல்லா, ஆகையால், மௌனகுரு நாம்திடப்பட அமைத்த மௌனநிலையே நமக்குதவியாவதென்று அறிந்து கொள்வாயாக என்பதாம்.

**18.** நாற்றச் சடலத்தை யொன்பது வாச னடைமனையைச்
சோற்றுப் பசையினை மும்மல பாண்டத் தொடக்கறையை
யாற்றுப் பெருக்கன்ன கன்மப் பெருக்கை யடர்கிருமிச்
சேற்றைத் துணையென்ற நாய்க்குமுண் டோகதி சேர்வதுவே.

இ - ள். நாற்றம் சடலத்தை - துர்க்கந்தத்தின் நெருக்கத்தை, ஒன்பதுவாசல் நடைமனையை - நவத்வாரங்களையுடைய நடைவீட்டை, சோற்றுப்பசையினை - சோற்றுப்பசையை, மும்மல பாண்டத்தொடக்கு அறையை - மும்மலபாண்ட சம்பந்தமுள்ள சிறுவீட்டை, ஆற்றுப்பெருக்கு அன்ன - நதிப்பெருக்கையொத்த, கன்மப் பெருக்கை - கர்மப்ரவாஹத்தை, அடர் - நெருங்கிய, கிருமி - புழுக்களையுடைய, சேற்றை - சேற்றினை, துணையென்ற - சஹாயமென்றெண்ணியிருந்த, நாய்க்கும்-நாயினேற்கும், கதிசேர்வது - சத்கதியையடைவது, உண்டோ-உளதோ, எ-று.

அருவருப்பான இந்தவுடம்பைத் துணையென்று நம்பியிருந்த எனக்கும் நற்கெதிப்பேறுண்டோ என்பதாம்.

**19.** பொய்யா ருலக நிலையல்ல கானற் புனலெனவே
மெய்யா வறிந்தென்ன வென்னு லிதனை விடப்படுமோ
கையான் மவுனந் தெரித்தேகல் லானிழற் கண்ணிருந்த
வையாவப் பாவென் னரசேமுக் கண்ணுடை யாரமுதே.

இ - ள். பொய் ஆர் உலகம் - பொய்நிறைந்தவுலகமானது, நிலை அல்ல- நிலைபேறுடையதன்று, கானல்புனல் - கானற்சலம்போலப் பொய்யாய்ப் போவதாம், என-என்று, மெய்ஆ - உண்மையாக, அறிந்துஎன்ன-உணர்ந்தால்தான் என்ன, என்னுல் - என்னாலே, இதனை விடப்படுமோ - இதை விடக்கூடுமோ, கையால் - சின்முத்திரைக்கையால், மவுனம் தெரித்து - மௌனநிலையையுணர்த்தி, கல்லால்நிழற்கண் இருந்த - கல்லாலின்நிழலில்

எழுந்தருளியிருந்த, ஐயா - ஐயனே, அப்பா - அப்பனே, என் அரசே - என்னரசே, முக்கண்ணுடைய - மூன்றுகண்களையுடைய, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, எ - று.

இவ்வுலகம் கானற்சலம்போலப் பொய்யென்றறிந்திருப்பினும், உன் திருவருளினாலன்றி என்னாலிதனைவிட வொண்ணுமோவென்பதுகருத்து.

**20.** ஆரா வமுதென மோனம் வகித்துக்கல் லானிழற்கீழ்ப்
பேராது நால்வ ருடன்வாழ்முக் கண்ணுடைப் பேரரசே
நீரா யுருகவுள் ளன்புதந் தேசுக நிட்டையைநீ
தாரா விடினென் பெருமூச்சுத் தானத் தனஞ்சயனே.

இ - ள். ஆராஅமுது என - தெவிட்டாத அமிர்தம்போல, மோனம் வகித்து-மௌனமுத்திரையைத்தாங்கி, கல்லால்நிழல்கீழ்-கல்லாலின்நீழலின்கீழ், பேராது - நீங்காமல், நால்வருடன்வாழ் - ஸநகாதிநால்வரோடும் வசிக்கின்ற, முக்கண் உடை - மூன்றுகண்களையுடைய, பேர் அரசே - பேரரசனே, நீராய்உருக - நீராயுருகும்வண்ணம், உள் அன்புதந்து-மனோப்ரீதியைக்கொடுத்து, சுகநிட்டையை - இன்பநிஷ்ட்டையை, நீதாரா விடின் - நீகொடாவிடின், என்பெருமூச்சுத்தான் - என் நெட்டுயிர்ப்பே, அத்தனஞ்சயன் - அத்தனஞ்செய வாயுவாய்முடியும், எ - று.

வாயு பத்தனுள், தனஞ்செயவாயு உயிர்நீங்கினும் உடம்பை வீக்கித் தலைகிழித்தகல்வது. என் பெருமூச்சுத்தான் அத்தனஞ்செயன் என்றது நான் இறந்துபடுவேனென்பதாம். எனக்கு உன்மேல் அன்புபெருகப் பண்ணி, சுகநிஷ்ட்டையைக் கொடாவிடின், நான் இறந்துபடுவேன் என்பது கருத்து.

**21.** வாயுண்டு வாழ்த்த மவுனஞ்செய் போது மவுனவருட்
டாயுண்டு சேயென்ன வென்னைப் புரக்கச் சதானந்தமா
நீயுண்டு நின்னைச் சரண்புக நானுண்டென் னெஞ்சமையா
தீயுண் டிருந்த மெழுகல வோகதி சேர்வதற்கே.

இ - ள். வாழ்த்த - உன்னைவாழ்த்துதற்கு, வாயுண்டு - வாயுள்ளது, மவுனம்செய்போது-மௌனநிலையை யனுஷ்ட்டிக்கும்போது, மவுன அருள் தாய் உண்டு - (அதைமுற்றுவிக்க) மௌனமாகிய அருட்டாயுண்டு, சேய் என்ன-பிள்ளையைப்போல, என்னைப்புரக்க - என்னைக்காப்பாற்ற, சதானந்தம் ஆம் நீ உண்டு - சதானந்தமாகிய நீயுண்டு, நின்னைச்சரண்புக-நின்னைச் சரணடைதற்கு, நான் உண்டு-நானுண்டு, ஐயா - ஐயனே, கதிசேர்வதற்கு- நற்கதியடையும்பொருட்டு, என்நெஞ்சம்-என்மனமானது, தீயுண்டிருந்த தீயினால்வெதுப்பப்பட்ட, மெழுகு அல்லவோ - மெழுகாமல்லவோ, எ-று.

உன்னைத் துதிக்கவாயுண்டு, மௌநநிலையை முற்றுவிக்கத் திருவருட் டாயுண்டு, என்னை மகவைப்போலெண்ணிக் காப்பாற்றுதற்கு நீயுண்டு, உன்னைச் சரணடைய நான் உண்டு, நற்கதியையடைதற்கு என்னெஞ்சம் நெருப்பைச்சேர்ந்த மெழுகுபோலுருகா நின்றதன்றே என்பதாம்.

**22.** கல்லா லெறிந்துங்கை வில்லா லடித்துங் கனிமதுரச்
சொல்லாற் றுதித்துநற் பச்சிலை தூவியுந் தொண்டரின
மெல்லாம் பிழைத்த னரன்பற்ற நானினி யேதுசெய்வேன்
கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே.

இ - ள். கொல்லாவிரதியர் நேர்நின்ற - கொல்லாமையாகிய விரதத்தையுடையோர்களுக்குப் பிரத்தியக்ஷமாய்நின்ற, முக்கண் - மூன்றுகண்களையுடைய, குருமணியே - நிறம்பொருந்திய மாணிக்கமே, கல்லால் எறிந்தும் - கல்லினால்வீசியும், கைவில்லால் அடித்தும் - கைவில்லினாலடித்தும், கனிமதுரச்சொல்லால் துதித்தும் - முதிர்ந்த மதுரத்தையுடைய தமிழ்ச் சொன்மாலைகளால் தோத்திரம்பண்ணியும், நல்பச்சிலை தூவியும் - சிறந்தபச்சிலைகளைத்தூவியும், தொண்டர் இனம் எல்லாம் - தொண்டர் குழாமெல்லாம், பிழைத்தனர் - உஜ்ஜீவித்தார்கள், அன்பு அற்றநான் - அன்பில்லாத நான், இனி ஏதுசெய்வேன் - இனியாதுசெய்துபிழைக்கக்கடவேன், எ - று.

கல்லால் எறிந்தவர் - சாக்கியநாயனர். கைவில்லாலடித்தவன் - அருச்சுநன். கனிமதுரச் சொல்லாற் றுதித்தவர் - மூவர் முதலாயினோர். நற்பச்சிலை தூவினோர் - ஔவையார் முதலாயினோர். தமிழ் என்பதற்கு இனிமையென்பது பொருளாதலால், கனிமதுரச்சொல் என்றதற்குத் தமிழ்ச்சொல்லென்றுரை யுரைக்கப்பட்டது. பச்சையிலை என்பது பச்சிலையெனநின்றது. இதனை, "பச்சிலையிடினும் பத்தர்க்கிரங்கி, மெச்சிச் சிவபதவீடருள் பவனை" "பச்சுதிரமுற்றொழுக" "பச்சிளங்கொடி" என்றற் றொடக்கத்து ஆன்றோர் பிரயோகங்களானுமுணர்க. அன்பர்தமது அன்புமிகுதியால் கல்லெறிதல் முதலாயினவற்றைச் செய்துபிழைத்தார்கள், அன்பில்லாத நான் யாதுசெய்து பிழைப்பேன் என்பதாம்.

**23.** முன்னிலைச்சுட்டொழிநெஞ்சேநின்போதமுளைக்கிலையோ
பின்னிலைச்சன்மம்பிறக்குங்கண்டாயிந்தப்பேய்த்தனமேன்
தன்னிலை யேநில்லு தானே தனிச்சச்சி தானந்தமா
நன்னிலை வாய்க்குமெண் சித்தியுங் காணு நமதல்லவே.

இ - ள். நெஞ்சே - மனமே, முன்னிலைச்சுட்டு ஒழி - முன்னிலைச் சுட்டையொழிப்பாயாக, நின்போதம் முளைக்கில் - உன்போதம் தலையெடுக்கின், ஐயோ - அந்தோ, பின்னிலை - பிறகே, சன்மம்பிறக்கும் - ஜன்மங்க

ளுண்டாகும், இந்தப் பேய்த்தனம் என் - இந்தப்பேய்த் தன்மையாதுக்கு, தன்னிலையேநில்லு - தன்னிலையிற்றானே நிற்பாய், தானே - தானே, தனி - ஒப்பற்ற, சச்சிதாநந்தமாம் - சச்சிதாநந்தமாகிய, நல்நிலைவாய்க்கும் - நன்னிலையானது கிடைக்கும், எண் சித்தியும் காணும் - அஷ்டசித்திகளு முண்டாம், (ஆயினும் அவ்வாறுசித்தித்தல் இறைவனது திருவருளாலே யன்றி) நமது அல்ல - நமது முயற்சியளவினுலன்று, எ - று.

தற்போத விழவுண்டாகாவிடின், ஜநநமரணாதிகளொழியாவென்பதனைநெஞ்சே நின்போதமுளைக்கில் பின்னிலைச்சனனம்பிறக்கும் என்பதனால் வற்புறுத்தினர், "சங்கற்பநாசத்தாலெளிதாக மனநாசந்தானே யெய்தும்-அங்குற்றமனமிறக்கிற் சநநமரணங்களெனுமரமுமாயும்" என்றார்மேலோரும். மனமே, முன்னிலைச் சுட்டொழியாவிடின், ஜநமபரம்பரைகள் விளையும், உன்னுண்மை நிலையில் நீ நிற்பையாயின் நன்னிலை கைகூடும், அட்டமாசித்திகளும் வாய்க்கும் என்பது கருத்து.

**24.** சொல்லால் மவுன மவுனமென்றே சொல்லிச் சொல்
லிக்கொண்ட, தல்லான் மனமறப் பூரண நிட்டையி லாழ்ந்
ததுண்டோ, கல்லாத மூடனினியென்செய் வேன்சகற்
காரணமாம், வல்லாள னான மவுன சதானந்த மாகடலே.

இ - ள். சகத்காரணம் ஆம் - சகத்துக்கு மூலமாகிய, வல்லாளன் ஆன - சர்வசக்திமானாகிய, மௌனசதாநந்தமாகடலே - மௌன சதாநந்த மாகிய பெருங்கடலே, சொல்லால் - சொல்லினால், மவுனம்மவுனம்என்றே - மௌனம் மௌனம் என்றே, சொல்லிச் சொல்லிக்கொண்டது அல்லால் - பலகால் சொல்லிக்கொண்டதன்றி, மனம் அற - மனமிறக்க, பூரணநிட்டையில் - பூரணநிஷ்டையாகிய கடலில், ஆழ்ந்தது உண்டோ - நான்மூழ்கினதுண்டோ, கல்லாதமூடன் - (அதற்குக் காரணமாகியகல்வியை) கல்லாத மூடனேன், இனி என்செய்வேன் - இனி யென்செயக்கடவேன், எ-று.

ஜகத்காரணனே, யான் மௌனம்மௌனம் என்று வாக்கினால் சொல்லிக்கொண்டிருந்ததன்றி மனமிறக்கப் பூரணநிஷ்டையில் பதிந்ததுண்டோ என்பதாம்.

**25.** ஆரண மாகம மெல்லா முரைத்த வருண்மவுன
காரண மூலங்கல் லாலடிக் கேயுண்டு காணப்பெற்றால்
பாரணங் கோடு சுழலெஞ்சு மாகிய பாதரச
மாரண மாய்விடு மெண்சித்தி முத்தியும் வாய்த்திடுமே.

இ - ள். ஆரணம் - வேதங்கள், ஆகமம் - ஆகமங்கள் ஆகிய, எல்லாம் - எல்லாவற்றையும், உரைத்த - சொல்லியருளிய, அருள் - கிருபையுள்ள, மௌநம் - மௌநநிலையையும், காரணம் - ஜகத் காரணத்வத்தையும் (உடைய), மூலம் - முதற்பொருள், கல்லால்அடிக்கே உண்டு-கல்லாலமரத்தினடியின்கண்ணே யுளது, (அதனை) காணப்பெற்றால் - காணக் கிடைத்தால், பார் அணங்கோடு - பிரபஞ்ச வாசனையாகிய துன்பத்துடன்கூடி, சுழல் - சுழலாநின்ற, நெஞ்சம் ஆகிய - மனமாகிய, பாதரசம் - பாதரசமானது, மாரணம் ஆய்விடும் - மடிந்தொழியும், எண் சித்தி - அஷ்டமா சித்திகளும், முத்தியும் - மோக்ஷமும், வாய்த்திடும் - கிடைக்கும், எ - று.

பார் அணங்கோடு என்பதற்கு, நிலம் மாதர் என்பவற்றின் அவாவோடு கூடி என்றுரைப்பினுமாம். கல்லாலி னீழலி லெழுந்தருளியிருக்கிற ஜகத்காரணனைக் காணப்பெறுவோமாயின், மனமாகிய பாதரசம் மடியும், மடிந்தால் எல்லாச் சித்திகளும் முத்தியும் கிடைக்கும் என்பது கருத்து. ரசம்மடிந்தால் எல்லா லோகங்களையும் வேதிக்கலாமென்பது ரசவாதியர்மதம். இதனாலன்றே ரசவாதமென்று வழங்குவதூஉமென்க. இவ் வாசிரியரும் "வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும் வேதித்து விற்றுண்ணலாம்" என்றார்.

**26.** சித்த மவுனி வடபான் மவுனிநந் தீபகுண்ட
சுத்த மவுனி யெனுமூவ ருக்குந் தொழும்புசெய்து
சத்த மவுனமு தன்மூன்று மௌனமுந் தான்படைத்தேன்
நித்த மவுனமல் லாலறி யேன்மற்றை நிட்டைகளே.

இ - ள். சித்த மவுனி - சித்தமவுனி, வடபான் மவுனி - வடபான் மவுனி, நம் தீபகுண்ட சுத்தமவுனி - நமது தீபகுண்ட சுத்தமவுனி, என்னும் மூவருக்கும்-என்று சொல்லப்பட்ட மூவருக்கும், தொழும்பு செய்து-தொண்டு செய்து, சத்த மவுன முதல் - சத்த மவுன முதலாகிய, மூன்று மௌனமும் தான் படைத்தேன் - மூன்று மௌனத்தையும் பெற்றேன், நித்த மவுனம் அல்லால் - சதாமௌநமன்றி, மற்றை நிட்டைகள் அறியேன் - வேறு நிட்டைகளறிந்திலேன், எ - று.

சித்த மவுனமுதல் மூன்று மௌநம் என்றது திரிகரணங்களும் அசைவற நிற்றலை.

**27.** கண்டே னினதரு ளவ்வரு ளாய்நின்று காண்பதெல்லாம்
உண்டே யதுவு நினதாக்கி னேனுவுட் டாதவின்பம்
மொண்டே யருந்தி யிளைப்பாறி னேனல்ல முத்திபெற்றுக்
கொண்டேன் பராபர மேயெனக் கேதுங் குறைவில்லையே.

இ - ள். நினது அருள் கண்டேன் - உன் திருவருளைத் தரிசித்தேன், அவ்வருளாய் நின்று - அவ்வருளுருவாய் நின்று, காண்பதெல்லாம் உண்டே - காண்பது முழுது முளதே, அதுவும் - அதையும், நினது ஆக்கினேன் - உன்னதாக்கிவிட்டேன், உவட்டாத - தெவிட்டாத, இன்பம் - ஆநந்த வெள்ளத்தை, மொண்டு அருந்தி - முகந்துபருகி, இளைப்பு ஆறினேன் - மெலிவு தீர்ந்தேன், நல்ல முத்திபெற்றுக்கொண்டேன் - சிறந்த மோக்ஷத்தைப் பெற்றுக்கொண்டேன், பராபரமே - பராபரப்பொருளே, எனக்கு - அடியேனுக்கு, இனி - இனி, ஏதுங்குறைவு இல்லை - சிறிதுங் குறைவில்லை, எ - று.

இறைவனே, உன் திருவருளைத் தரிசித்து என் மெலிவுநீங்கினேன், முத்தியையும் ஒரு தலையாக அடைவேன், இனி யெனக்கோர் குறைவு மில்லை யென்பது கருத்து.

**28.** மேற்கொண்ட வாயுவுங் கீழ்ப்பட மூலத்து வெந்தழலைச்
சூற்கொண்ட மேக மெனவூமை நின்று சொரிவதையென்
றாற்கண்ட தன்று மௌனோப தேசி யளிக்கையினிப்
பாற்கண்டு கொண்டன னேமேலே யமிர்தம் பருகுவனே.

இ - ள். மேற்கொண்ட வாயுவும் - மேற்பட்டவாயுவும், கீழ்ப்பட - கீழாக, மூலத்து - மூலாதாரத்திலுள்ள, வெம் தழலை - வெவ்விய அக்கினியை, சூல்கொண்ட மேகம் என - கருப்பங்கொண்ட மேகம்போல, ஊமை நின்று சொரிவதை - ஊமையானவன் நின்று பொழிதலை, என்றால் கண்டதன்று - என்றால் கண்டுகொண்டதல்ல, மௌனோபதேசி அளிக்கையின் - மௌனோபதேசி அருள்செய்தலால், இப்பால் - இவ்விடத்தில், கண்டு கொண்டனன் - கண்டுகொண்டேன், மேலே - இனிமேல், அமிர்தம் பருகுவன் - அமிர்தத்தைப் பருகுவேன், எ - று.

**29.** சொல்லாற் றொடர்பொருளாற்றொடராப்பரஞ் சோதிநின்னை
வல்லாளர் கண்ட வழிகண்டி லேன்சக மார்க்கத்திலும்
செல்லாதென் சிந்தை நடுவே கிடந்து திகைத்துவிம்மி
அல்லான துய்பக லானதும் வாய்விட் டாற்றுவனே.

இ - ள். சொல்லால் - சொல்லினாலும், தொடர்பொருளால் - அச்சொல்லைத் தொடர்ந்து நிற்கிற பொருளினாலும், தொடரா-பற்றப்படாத, பரஞ்சோதி - பரஞ்சோதியே, நின்னை - உன்னை, வல்லாளர் கண்டவழி கண்டிலேன் - வல்லாளர் கண்டுகொண்ட மார்க்கத்தைக் கண்டேனில்லை, சகமார்க்கத்திலும் - பிரபஞ்சமார்க்கத்திலும், என் சிந்தைசெல்லாது - என் மனஞ்செல்லாது, நடுவே கிடந்து திகைத்து விம்மி - இடையே வீழ்ந்து திகைத்துவிம்மி, அல்லானதும் பகலானதும் - அல்லும் பகலும், வாய்விட்டு அரற்றுவன் - வாய்விட்டு அலறுவேன், எ - று.

சொல்லாலும் பொருளாலும் தொடரவொண்ணாத பரஞ்சோதியே, அறிஞர்கள் உன்னைக் கண்டுகொண்ட வழியையுங் கண்டிலேன், பிரபஞ்ச மார்க்கத்தினும் என் மனம் செல்லவில்லை, நடுவேகிடந் துழைத்துக் கொண்டிருக்கின்றேன் என்பதாம்.

**30.** அறியாத வென்னை யறிவாயு நீயென்ற கம்புறமும்
பிறியா தறிவித்த பேரறி வாஞ்சுத்தப் பேரொளியோ
குறியாத வானந்தக் கோவோ வமுதருள் குண்டலியோ
சிறியேன் படுந்துயர் கண்டு கல்லானிழல் சேர்ந்ததுவே.

இ - ள். அறியாத - யாவராலு மறியக்கூடாத, என்னை - என்னை, அறிவாயும் நீ என்று - அறிகின்றவனும் நீயேயென்று, அகம் புறமும் பிறியாது - உள்ளும் புறமும் நீங்காதிருந்து, அறிவித்த - உணர்த்தின, பேர் அறிவு ஆம் - பேரறிவாகிய, சுத்த பேரொளியோ - சுத்தமாகிய பெருஞ்சோதியே, குறியாத - நினைக்கக் கூடாத, ஆநந்தக் கோவோ - இன்பத்தைத் தருகின்ற இறைவனே, அமுது அருள் குண்டலியோ - அமிர்தத்தை யருள்செய்கின்ற குண்டலி சத்தியோ, சிறியேன் படுந் துயர் கண்டு - சிறியேன் படுந் துன்பத்தைப் பார்த்து, கல்லால் நிழல் சேர்ந்தது - கல்லாலினீழலை யடைந்தது, எ - று.

சிறியேன் படுந் துன்பத்தைக் கண்டு கல்லாலினீழலில் எழுந்தருளியிருந்ததுபெருஞ்சோதியோ, இன்பத்தைத் தருகிற இறைவனே, குண்டலிசத்தியோ என்பது கருத்து.

**31.** எல்லா முதவு முன்னையொன்றிற் பாவனை யேனுஞ்செய்து
புல்லா யினுமொரு பச்சிலை யாயினும் போட்டிறைஞ்சி
நில்லேனல் யோக நெறியுஞ்செ யேனருணீதியொன்றும்
கல்லேனெவ் வாறு பரமே பரகதி காண்பதுவே.

இ - ள். எல்லாம் - எல்லாவற்றையும், உதவும் - வரையாது கொடுக்கின்ற, உன்னை - உன்னை, ஒன்றில் - ஒரு விக்ரஹ ரூபத்தில், பாவனையேனும் செய்து - பாவனையாயினும் பண்ணி, புல்லாயினும் - புல்லையாயினும், ஒரு பச்சிலையாயினும் - ஒரு பச்சிலையையாயினும், போட்டு - தூவி, இறைஞ்சி நில்லேன் - வணங்கி நில்லேன், நல் - சிறந்த, யோகநெறியும் செய்யேன் - யோகமார்க்கத்தையும் அநுஷ்டியேன், அருள் நீதி ஒன்றும் கல்லேன் - திருவருளைப்பற்றிய நீதி நூல்களு ளொன்றையாயினும் கற்றறியேன், பரமே - பரம்பொருளே, எவ்வாறு - எவ்வகை, பரகதிகாண்பது - பரகதியை நான் கண்டுகொள்வது, எ - று.

புல் பச்சிலை முதலியவற்றுக்கும் வீடருள்வோனாதலால், "புல்லாயினுமொரு பச்சிலையாயினும்" என்றார். "பத்த ரத்தத்தி லறுகுக்கு முத்

திப் பதங்கொடுக்கும் பித்தர்" எனவும், "பச்சிலையிடினும் பத்தர்க்கிரங்கி மெச்சிச் சிவபத வீடருள்பவனை" எனவும், கூறுமாற்றானுமுணர்க. பரம்பொருளே, சர்வார்த்த ப்ரதாதாவாகிய உன்னை ஒன்றிவிருப்பதாகப் பாவித்துப் புல்லாயினும் பச்சிலையாயினும் தூவி வணங்கி நிற்கிலேன், யோகமும் பயின்றிலேன், உன்திருவருணீதி சிறிதும் கற்கிலேன், இவ்வாறாய நான் எவ்வாறு பரகதியைக் கண்டுகொள்வது என்பதாம்.

**32.** ஒன்றுந் தெரிந்திட வில்லையென் னுள்ளத் தொருவவெனக்
கென்றுந் தெரிந்த விவையவை கேளிர வும்பகலும்
குன்றுங் குழியும் வனமு மலையுங் குரைகடலும்
மன்று மனையு மனமாதி தத்துவ மாயையுமே.

இ - ள். என் உள்ளத்து ஒருவ - என்மனத்தின் கண்ணுள்ள ஒப்பற்றவனே, எனக்கு - அடியேனுக்கு, ஒன்றும் தெரிந்திடவில்லை - உன்னைக்குறித்த மார்க்கங்களுள் ஒன்றாயினும் தெரியவில்லை, என்றும் - எப்பொழுதும், தெரிந்த - தெரிந்திருப்பன, இவை-இவைகளே, அவைகேள்-அவற்றைக்கேள், இரவும் பகலும் - இராத்திரிகாலமும் பகற்காலமும், குன்றும் - சிறுமலையும், குழியும் - குளமும், வனமும் - காடும், மலையும் - பெருமலையும், குரை கடலும் - ஒலிக்கின்ற கடலும், மன்றும் - அம்பலமும், மனையும் - வீடும், மனமாதி தத்துவ மாயையுமே - மனமுதலிய தத்துவத் தொகுதியாகிய மாயாகாரியங்களுமே, எ - று.

என்மனத்திற் குடிகொண்டிருக்கும் ஒப்பற்றவனே, அடியேனுக்கு உன்விடயமாகிய காரியங்களுள் ஒன்றாயினும் தெரிந்திலது, தெரிந்தனவெல்லாம் இராப்பகல் முதலான மாயாகாரியங்களே என்பதாம்.

**33.** பழுதுண்டு பாவையர் மோக விகாரப் பரவையிடை
விழுகின்ற பாவிக்குந் தன்றாட் புணையை வியந்தளித்தான்
தொழுகின்ற வன்ப ருளங்களி கூரத் துலங்குமன்றுள்
எழுகின்ற வானந்தக் கூத்தனென் கண்மணி யென்னப்பனே.

இ - ள். தொழுகின்ற அன்பர் - வணங்குகின்ற அன்பரது, உள்ளம்-மனமானது, களிகூர - களிப்புமிகும்படி, துலங்கும் - விளங்குகின்ற, மன்றுள் எழுகின்ற - அம்பலத்திற் காணப்படுகின்ற, ஆநந்தக்கூத்தன் - ஆநந்த நர்த்தநம் பண்ணுவோன், என் கண்மணி - என்கண்மணியையொப்பான், என் அப்பன் - என்தந்தை, பழுதுண்டு - பழுதுபட்டு, பாவையர் - மாதரது, மோகவிகாரப் பரவையிடை-காமவிகார சமுத்திரத்தில், விழுகின்ற பாவிக்கும் - வீழ்ந்தழுந்தப்புகும் பாவியேனுக்கும், தன் தாள் புணையை - தன் திருவடியாகிய மரக்கலத்தை, வியந்து அளித்தான்-அதிசயித்துத் தந்தான், எ - று.

தன்னடியார் மனங்களிக்கத் தில்லையம்பலத்துள் நடிக்கும்என் தந்தையானவன், மாதராது காமக்கடலி லழுந்திக்கிடக்கும் எனக்கும், அந்தக் கடலைக்கடந்து மோக்ஷதீரத்தை யடையுமாறு தன் திருவடிப்புணையைத் தந்தருளினன், இவனது பெருங்கருணை யிருந்தவா றென்னை யென்பதாம்.

**34.** அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக்கை யாநின்னருள்வழங்கின்
இழுக்காகு மென்றெண்ணி யோவிரங்காத வியல்புகண்டாய்
முழுக்காதலாகி விழிநீர் பெருக்கிய முத்தரெனும்
குழுக்காண நின்று நடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே.

இ - ள். முழுக்காதல் ஆகி-முழு அன்புள்ளவர்களாகி, விழிநீர்பெருக்கிய-கண்ணீர் பெருக்கிய, முத்தர் என்னும் - முத்தரென்கிற, குழு-இனம், காண - சேவிக்க, நின்று நடம் ஆடும் - நின்று நடனமாடுகின்ற, தில்லை - தில்லையின் கண்ணதாகிய, கொழுஞ்சுடரே-செழுஞ்சுடரே, ஐயா-ஐயனே, அழுக்கு ஆர்ந்த - களங்கம் நிறைந்த, நெஞ்சு உடையேனுக்கு-மனமுடையேற்கு, நின்னருள் வழங்கின் - உன்னருளைத் தரின், இழுக்கு ஆகும் என்று எண்ணியோ - குற்றமாமென்று நினைத்தோ, இரங்காத இயல்பு - (என்னிடத்து) நீ யிரக்கஞ்செய்யாத இயற்கை, எ - று.

பேரன்புள்ள அடியவர் கண்டு களிக்கும்படி தில்லையம்பலத்தில் நடிப்பவனே, களங்கமாகிய மனத்தை யுடையேனுக்கு உன்னருள் வழங்கல் குற்றமாமென்று திருவுளத்தடைத்தோ, என்னிடத் திரக்கஞ்செய்யா திருப்பது என்பது கருத்து.

**35.** ஆலம்படைத்த விழியார்கண் மால்கொண் டவர்செ யிந்திர
சாலம் படைத்துத் தளர்ந்தனையே யென்றுந் தண்ணருள்கூர்
கோலம் படைத்துக்கல் லாலடிக் கீழ்வைகுங் கோவுக் கன்பாம்
காலம்படைக்கத் தவம்படை யாதென்கொல் கன்னெஞ்சமே.

இ-ள். கல்நெஞ்சமே-கல்லையொத்த வன்னெஞ்சமே, ஆலம்படைத்த-நஞ்சம்பொருந்திய, விழியார்கள் - கண்களையுடைய மாதர்கள்மேல், மால் கொண்டு-ஆசைகொண்டு, அவர் செய் - அவர்கள் செய்கிற, இந்திரசாலம் படைத்து - இந்திரசாலத்துக்குள்ளாகி, தளர்ந்தனையே - தளர்ச்சியடைந்தாயே, என்றும் - எப்போதும், தண் அருள் கூர் - தண்ணிய அருள் மிகுந்த, கோலம் படைத்து - திருவுருவைப் படைத்து, கல்லால் அடிக்கீழ் வைகும் - கல்லாலி னடிக்கண் எழுந்தருளி யிருக்கிற, கோவுக்கு - இறைவனுக்கு, அன்பு ஆம் - அன்புசெய்யும்படியான, காலம் படைக்க - காலத்

தைப்படைக்க, தவம் படையாதது - தவஞ் செய்யாமைக்குக் காரணம், என் - யாது, எ - று.

ஆலம்போன்ற என்றது ஆலம் படைத்த என்றது அதன் கொடுமை மிகுதியை வற்புறுத்தற்கு. கொடுமையாவது ஆடவரை வருத்துதல். அது "வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு மலைத்தலைந் தேனை" எனவும், "மூழுதயில் வேற்கண் ணியரென்னு மூரித் தழன்முழு கும் விழுதனையேனை" எனவும், "காய்சின வேலன்ன மின்னியல கண்ணின் வலைகலந்து வீசின போதுள்ள மீனிழந்தார்" எனவும், "கூற்றமோ கண்ணோ பிணையோ" எனவும், வரும் மேலோர் திருவாக்கா னுணர்க. மனமே! மாதர்கள் செய்யு மாயத்தி லகப்பட்டு வருந்தத் தவஞ் செய்தனையன்றி, கல்லாலி னிழலி லெழுந்தருளிய இறைவன் திருவடிக்கு அன்பு செய்யத் தவஞ்செய்தனை யில்லையே என்பது கருத்து.

**36.** சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு மறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பியென் பேதமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தேனந் தோவென் விதிவசமே.

இ - ள். சும்மா இருக்க - சும்மா விருக்கின், சுகம் சுகம் என்று - சுக முண்டாம் சுக முண்டாம் என்று, சுருதியெல்லாம் - வேதங்களெல்லாம், அம்மா - ஆச்சரியம், நிரந்தரம் - சதாகாலமும், சொல்லவும்-சொல்லாநிற்க வும், கேட்டும் - கேட்டிருந்தும், அறிவு இன்றியே - மெய்யுணர்வில்லாமை யானே, பெம்மான் - எம்பெருமானாகிய, மௌனி மொழியையும் தப்பி - மௌனகுருவின் வாக்கையுங்கடந்து, என் பேதமையால் - என் அறிவீ னத்தால், வெம்-வெவ்விய, மாயக்காட்டில் - மாயாடவியில், அலைந்தேன் - திரிந்தேன், அந்தோ - ஐயோ, என் விதிவசமே - (இது) என் விதிவ சந்தானோ. எ - று.

சும்மா இருத்தலே சுகம் என்று வேதங்கள் சொல்லக்கேட்டும், அந் நிலையில் நிற்றற்குரிய மெய்யுணர்வின்மையால், மௌன குருவின் மொழி யையுங் கடந்து மாயைக்காட்டில் மயங்கித்திரிந்தேன், இது என் விதி வசமோ என்பது கருத்து.

**37.** தினமே செலச்செல வாழ்நாளு நீங்கச் செகத்திருள்சொற்
பனமே யெனவெளி கண்டே யிருக்கவும் பாசபந்த
இனமே துணையென் றிருந்தோ நமன்வரி னென்செய்குவோம்
மனமேநம் போலவுண் டோசுத்த மூடரிவ் வையகத்தே.

இ - ள். தினம் செல்ல செல்ல - நாள் கழியக் கழிய, வாழ்நாளும் நீங்க - ஆயுளுநாளுந் தொலைய, செகத்து இருள் - பிரபஞ்ச விருளானது, சொற்பனமே என - கனவேயென்று சொல்லும்படி, வெளி - வெளிப் படையாக, கண்டே யிருக்கவும் - பார்த்திருந்தும், பாசபந்த இனமே - பாசபந்தக் கூட்டமே, துணை என்று இருந்தோம் - சகாயமென்று நினைத் திருந்தோம், நமன் வரின் - காலன் வந்தால், என் செய்குவோம் - என் செய்யக்கடவோம், மனமே-நெஞ்சமே, நம்போல - நம்மைப்போல, சுத்த மூடர் - முழுமூடர், இவ்வையகத்து உண்டோ - இவ்வுலகத்திலுண்டோ.

மனமே, நாட்செல்ல நாட்செல்ல பிரபஞ்ச வாழ்வானது கனவு போலப் பொய்யாய் விடுவதைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டிருந்தும், பாசக் கட்டிலகப்பட் டுழலாநின்ற உறவினரே துணையென் றிருந்துவிட்டோம், இனிக்காலன் வருங்கால் என் செய்யக்கடவோம் என்பது கருத்து.

**38.** கடலைத் தனைமலை யெத்தனை யத்தனைகன்மமதற்
குடலைத் தனையத் தனைகட னுண்மண லொக்கு மிந்தச்
சடலத்தை நான்விடு முன்னே யுனைவந்து சாரவிருட்
படலத்தை மாற்றப் படாதோ நிறைந்த பராபரமே.

இ - ள். கடல் எத்தனை மலை எத்தனை - கடல்களெத்தனைப் பரப் புள்ளன மலைகளெத்தனைப் பெருமையுள்ளன, அத்தனை கன்மம் - அவ் வள வினையுடையது கன்மம், அதற்கு - அக்கன்மத்துக் கீடா யுளவா கின்ற, உடல் - சரீரங்கள், எத்தனை - எத்தனை, அத்தனை - அவ்வளவினை, கடல்-கடலின்கண் ணுண்டாயிருக்கிற, நுண் மணல் ஒக்கும் - நுண்ணிய மணல் ஒத்திருக்கும், (ஆதலால்) இந்த சடலத்தை-இந்தச்சரீரத்தை, நான் விடுமுன்னே - நான் விட்டு நீங்குதற்கு முன்னமே, உன்னை வந்து சார - உன்னைவந் தடையும்படி, இருள் படலத்தை - இருட்கூட்டத்தை, மாற் றப்படாதோ-என்னிடத்து நின்றும் நீக்கப்படாதோ, நிறைந்த பராபரமே- எங்கும் வியாபித்திருக்கின்ற பராபரமே, எ - று.

இறைவனே, அளவற்ற பிறவிகளிற் பிறந்து வருந்தின அடியேன் இந்த வுடலைவிட்டு நீங்குவதற்கு முன்பே உன்னைவந் தடையும்படி என் அஜ்ஞாநாந்தகாரத்தை நீக்கியருளலாகாதோ என்பது கருத்து.

**39.** நினையு நினைவு நினையன்றி யில்லை நினைத்திடுங்கால்
வினையென் றொருமுத னின்னையல் லாது விளைவதுண்டோ
தனையுந் தெளிந்துன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச்செந் தாமரையாம்
மனையும்பொன் மன்றமு நின்றாடுஞ் சோதி மணிவிளக்கே,

இ - ள். தன்னையும் தெளிந்து - தம்மையுந் தெளிந்து, உன்னை சார்ந்தோர்கள் - உன்னை யாசிரயித்தவர்களுடைய, உள்ளம் - மனமாகிய, செந்தாமரை ஆம் மனையும் - செந்தாமரையென்கின்ற வீட்டினிடத்தும், பொன் மன்றமும் - பொற்சபையினிடத்தும், நின்று ஆடும் - நின்று நடனம் பண்ணுகிற, சோதி - பிரகாசமுள்ள, மணிவிளக்கே - ரத்னதீபமே, நினையும் நினைவும் - நினைக்கின்ற நினைப்பும், நின்னை அன்றி இல்லை - உன்னையல்ல தில்லை, நினைத்திடுங்கால் - நினைக்குமிடத்து, வினை என்ற ஒரு முதல் - கர்மமென்கிற ஒரு முதற்பொருள், நின்னை அல்லாது - உன்னையன்றி, விளைவது உண்டோ - முளைப்பதுண்டோ, எ - று.

அன்பர்களுடைய மனத்தாமரையினும் பொன்னம்பலத்தினும் நின்று நடிக்கின்ற ரத்ந தீபமே, நான் நினைக்கின்ற நினைப்பு உன்னையன்றி யில்லை யென்னுமிடத்து, உன்னை யறியாமல் எனக்கொரு தீமையுண்டாகுமோ என்பது கருத்து.

**40.** உள்ளத் தையுமிங் கெனையுநின் கையினி லொப்புவித்தும்
கள்ளத்தைச் செய்யும் வினையால் வருந்தக் கணக்குமுண்டோ
பள்ளத்தில் வீழும் புனல்போற் படிந்துன் பரமவின்ப
வெள்ளத்தின் மூழ்கினர்க் கேயெளி தாந்தில்லை வித்தகனே.

இ - ள். பள்ளத்தில் வீழும் - பள்ளத்திற் பாய்ந்து செல்லுகின்ற, புனல்போல் - நீர்போல, படிந்து - அமைந்து, உன் பரம இன்பவெள்ளத்தில் - உன் பரமானந்த சாகரத்தில், மூழ்கினர்க்கே - அழுந்தினவர்களுக்கே, எளிது ஆம் - எளியனாகின்ற, தில்லை வித்தகனே - தில்லையின் மேவிய ஞான மயனே, உள்ளத்தையும் - மனத்தையும், இங்கு - இவ்விடத்து, என்னையும் - அடியேனையும், நின் கையினில் ஒப்பிவித்தும் - உன் கையி லொப்புவித்தும், (இன்னமும்) கள்ளத்தைச் செய்யும் வினையால் - வஞ்சனையைச்செய்யும் கர்மத்தினால், வருந்த - துன்பமடைய, கணக்கும் உண்டோ - கணக்கு முளதோ, எ - று.

என்னையும் என் மனத்தையும் உன் கையினில் ஒப்புவித்தும் கர்மவயத்தனாய் வருந்துதல் எனக் குரித்தாமோ என்பதாம்.

**41.** கள்ளம் பொருந்து மடநெஞ்ச மேகொடுங் காலர்வந்தால்
உள்ளன் பவர்கட்குண் டோவில்லை யேயுல கின்றவன்னை
வள்ளம் பொருந்து மலரடி காணமன் றுடுமின்ப
வெள்ளச்செம் பாதப் புணையே யல்லாற்கதி வேறில்லையே.

இ - ள். கள்ளம் பொருந்தும் - கபடம் பொருந்திய, மடநெஞ்சமே - அறியாமையுள்ள மனமே, கொடுங்காலர் வந்தால் - கொடிய யமபடர்

வந்தால், அவர்கட்கு - அவர்களுக்கு, உள்ளன்பு உண்டோ - அகத்தன் புளதோ, இல்லையே - இல்லையன்றே, உலகு ஈன்ற அன்னை - உலகத்தைப் பெற்ற தாய், வள்ளம் பொருந்தும் - கிண்ணத்தைப்போலப் பொருந்தித் தோன்றுகிற, மலர் - தாமரை மலர்போன்ற, அடி - திருவடியை, காண - தரிசிக்கும்படி, மன்று - அம்பலத்தில், ஆடும் - நடிக்கின்ற, இன்பவெள்ளம் - ஆநந்தக்கடலாகிய இறைவனது, செம் பாதம் - சேவடியாகிய புணையேயல்லால் - மரக்கலமேயன்றி, வேறு கதியில்லை - வேறுபுகலிடமில்லை, எ - று.

மனமே, கொடிய காலர்வந்தால், அவர்களுக்கு உள்ளன்புண்டோ இல்லை, நமது பிறவிக்கடலைக் கடப்பதற்கு இறைவனது திருவடியே மரக்கலமாம், ஆதலால் அதுவே நமக்குப் புகலிடம் என்பது கருத்து.

**42.** தன்மயமான சுபாவத்தின் மெள்ளத் தலைப்படுங்கால்
மின்மயமான சகம்யா துரைத்தென் வெளியி லுய்த்த
சின்மய முத்திரைக் கையேமெய் யாகத் தெளிந்த நெஞ்சே
நின்மய மென்மய மெல்லா நிறைந்த நிராமயமே.

இ - ள். தன்மயம் ஆன சுபாவத்தில் - தன்மயமான இயற்கையில், மெள்ள தலைப்படுங்கால் - மெல்லக் கலக்குமிடத்து, மின் மயம் ஆன - மின்னலி னியற்கையமைந்த, சகம் - உலகம், யாது உரைத்து என் - என் சொன்னாலென்ன, வெளியில் உய்த்த-வெளிப்படையாகத் தந்த, சின்மய முத்திரைக்கையே - சின்முத்திரைக் கையே, மெய் ஆக - உண்மையாக, தெளிந்த நெஞ்சே - தெளிந்த மனமே, நின் மயம் என்மயம் எல்லாம் - உன்னுருவம் என்னுருவமாகிய எல்லாமும் நிறைந்த நிராமயமே - பூர்ணமான நிராமயப்பொருளே, எ - று.

தன்மயமாகிய இயற்கையிற் பொருந்தினால் நம்முருவங்களெல்லாம் பூர்ணமாகிய நிராமயப்பொருளி னுருவமே யென்பது கருத்து.

**43.** ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியவுனைத்
தோயும் படிக்குக் கருணைசெய் வாய்சுக வான்பொருளே
தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுதலும்
நீயும் பரையுமென் றேயுணர்ந் தேனிந் நிச்சயமே.

இ - ள். ஆயும் - ஆராயப்படுகிற, கலையும் - கலைகளும், சுருதியும் - வேதங்களும், காண்டற்கு அரிய உன்னை - காண்பதற் கரிதாகிய வுன்னை, தோயும்படிக்கு - வந்தடையும்படிக்கு, கருணைசெய்வாய் - கிருபை புரிவாய், சுகவான்பொருளே - ஆநந்த ரூபமாகிய மேலான பொருளே, தாயும் - மாதாவும், பிதாவும்-தந்தையும், தமரும் - உறவினரும், குருவும் - ஆசாரியனும், தனி - ஒப்பற்ற, முதலும்-முதற்பொருளும், நீயும் பரையும்

என்றே - நீயும் பராசத்தியுமென்றே, உணர்ந்தேன் - அறிந்தேன், இது நிச்சயமே - இது உண்மையே, எ - று.

இறைவனே, உன்னையும் பிராட்டியையும் தந்தை தாயராக அறிந்து உறுதியாய் நம்பி யிருக்கின்றேன், ஆதலால், அடியேன், வேதங்களுக்கு மெட்டாத வுன்னைவந் தடையும்படி கருணை செய்யவேண்டும் என்பது கருத்து.

**44.** அல்லும் பகலு முனக்கே யபய மபயமென்று
சொல்லுஞ்சொலின்னந் தெரிந்ததன்றோதுதிப்பார்கண்மனக்
கல்லுங் கரைக்கு மௌனாவுனது கருணை யென்பால்
செல்லும் பொழுதல்லவோ செல்லுவே னந்தச் சிற்சுகத்தே.

இ - ள். அல்லும் பகலும் - இரவும் பகலும், உனக்கே அபயம் அபயம் என்று - உனக்கே யபயமபயம் என்று, சொல்லும் சொல் - நான் சொல்லும் சொல்லானது, இன்னம் தெரிந்தது அன்றோ - இன்னமும் கேட்கவில்லையோ, துதிப்பார்கள் - துதிப்பவர்களுடைய, மனக்கல்லும் - நெஞ்சமாகிய கல்லையும், கரைக்கும் - உருக்குகின்ற, மௌனா - மௌன குருவே, உனது கருணை - உன் கிருபையானது, என்பால் - என்னிடத்து, செல்லும் பொழுதல்லவோ - வியாபிக்கும் போதல்லவோ, அந்த சிற்சுகத்து - அந்த ஞானாநந்தத்தில், செல்லுவேன் - புகுவேன், எ - று.

மௌனகுருவே, இரவும் பகலும் உனக்கே அபயமென்று அடியேன் சொல்லுஞ் சொல்லானது இன்னமும் உன்செவி கேட்கவில்லையோ! உன் கருணை யென்னிடத் துண்டானாலல்லவோ அந்த ஞானாநந்தம் எனக்குண்டாம் என்பது கருத்து.

**45.** எல்லாஞ் சிவன்செய லென்றறிந் தாலவ னின்னருளே
அல்லாற் புகலிடம் வேறுமுண் டோவது வேநிலையா
நில்லாயுன் ஞற்றமி யேற்குக் கதியுண்டிந் நீணிலத்தில்
பொல்லா மயக்கத்தி லாழ்ந்தாவ தென்ன புகனெஞ்சமே.

இ - ள். எல்லாம் - யாவும், சிவன் செயல் என்று அறிந்தால்-சிவன் செயலென் றுணர்ந்தால், அவன் - அவனது, இன் - இனிய, அருளே அல்லால் - அருளேயன்றி, புகல் இடம் - புகுதற்குரிய இடம், வேறும் உண்டோ - மற்றுமுளதோ, அதுவே நிலை ஆ நில்லாய் - அதுவே நிலையாக நிற்கக்கடவாய், (அப்படி நிற்பையாயின்) தமியேற்கு - தனியேனுக்கு உன்னால் கதி உண்டு - உன்னால் சற்கதி யுள்ளது, இ நீள் நிலத்தில்-இந்தப் பெரிய வுலகில், பொல்லா மயக்கத்தில் - தீமையாகிய மயக்கத்தில், ஆழ்ந்து - அழுந்தினதினால், ஆவது - உண்டாவதாகிய பிரயோஜநம், என்ன-யாது, நெஞ்சமே - மனமே, புகல் - சொல்வாயாக, எ - று.

மனமே, எல்லாம் சிவன்செயலென் றுணர்ந்தால், அவனது இனிய அருளேயல்லது நமக்குப் புகலிடம் வேறுண்டோ, இல்லையாதலால், அந்த நிலையிற்றானே நிற்பையாயின் உன்னால் எனக்கு நற்கதியுண்டு, இதைவிட்டு இந்தப் பிரபஞ்ச மாயையிலழுந்தி என்ன லாபமடைந்தா யென்பது கருத்து.

**46.** ஒளியே யொளியி னுணர்வே யுணர்வி னுவகை பொங்குங்
களியே களிக்குங் கருத்தே கருத்தைக் கவளங் கொண்ட
வெளியே வெளியின் விளைசுக மேசுகர் வீறுகண்டுந்
தெளியேன்றெளிந்தவரைப்போற்றிடேனென்னசெய்குவனே.

இ - ள். ஒளியே - தேஜஸ்ஸே, ஒளியின் உணர்வே - ஒளியை யுடைய அறிவே, உணர்வின் - அறிவினிடத்து, உவகை பொங்கும் - சந்தோஷம் பெருகாநின்ற, களியே - களிப்பே, களிக்கும் கருத்தே - களிக்கின்ற கருத்தே, கருத்தைக் கவளங்கொண்ட - கருத்தினை விழுங்கின, வெளியே - சிதாகாயமே, வெளியின் - அவ்வாகாயத்தில், விளை - உண்டாகிற, சுகமே - இன்பமே சுகர் வீறு கண்டும் - சுகரது பெருமையைக் கண்டும், தெளியேன் - தெளிந்திலன், தெளிந்தவரை போற்றிடேன் - தெளிந்தவர்களை வணங்கலுஞ் செய்யேன், என்னசெய்குவன் - (இனி உஜ்ஜீவநத்திற்கு விரகு)யாது செய்வேன், எ - று.

பரஞ்சோதியே, சுகமுனிவரது விரக்தி மஹிமையை யறிந்திருந்தும் தெளிவடைந்திலேன், தெளிந்தவரை வணங்குதலுஞ் செய்திலேன், இனி உய்வதற்குரிய வுபாயம் யாதுசெய்வேன் என்பது கருத்து.

**47.** மறக்கின்ற தன்மை யிறத்தலொப் பாகு மனமதொன்றில்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பாகுமிப் பேய்ப்பிறவி
இறக்கின்ற வெல்லைக் களவில்லை யேயிந்தச் சன்மவல்லல்
துறக்கின்ற நாளெந்த நாள்பர மேநின் றொழும்பனுக்கே.

இ - ள். மறக்கின்ற தன்மை - மறக்குந் தன்மை, இறத்தல் ஒப்பாகும்-இறத்தலுக்கு நிகராகும், மனமது ஒன்றில் பிறக்கின்ற தன்மை - மனமானது ஒன்றில் பற்றுந்தன்மை, பிறத்தல் ஒப்பாகும் - பிறத்தலுக்கு நிகராகும், இ பேய் பிறவி - இந்தப் பேய்ப்பிறவிகள், இறக்கின்ற எல்லைக்கு-கழிகின்ற வெல்லைக்கு, அளவில்லையே - வரம்பில்லையே, இந்த சன்மம் அல்லல் - இந்தப் பிறவித்துன்பத்தை, துறக்கின்ற நாள் - விட்டு நீங்கு காலம், பரமே - பரம்பொருளே, நின் தொழும்பனுக்கு - உன் தொண்டனுக்கு, எந்தநாள் - எந்தக்காலம், (அறிந்திலேன்) எ - று.

பரனே, மறப்பு நினைப்புகள் இறப்புப் பிறபுக்களுக்குச் சமானமாகும் உன் தொண்டனாகிய நான், இந்தப் பிறவித்துன்பங்களை யொழிக்குங் காலம் எந்தக்காலமோ வென்பது கருத்து.

**48.** காட்டிய வந்தக் கரணமு மாயையிக் காயமென்று
சூட்டிய கோலமு நானா வியங்கத் துறையிதனுள்
நாட்டிய நான்றனக் கென்றோ ரறிவற்ற நானிவற்றைக்
கூட்டிநின் றாட்டினை யேபர மேநல்ல கூத்திதுவே.

இ - ள். காட்டிய - வகுத்துக் காட்டப்பட்ட, அந்தக் கரணமும் - அந்தக்கரணங்களும், மாயை-மாயாகாரியமாகிய, இக்காயம்என்று சூட்டிய கோலமும் - இந்தச் சரீரமென்று பெயர் சூட்டப்பெற்ற வுருவும், நானா இயங்க - பலவிதமாக இயங்கா நிற்க, துறை இதனுள் - பல துறைகளை யுடைய இதற்குள்ளே, நாட்டிய - நிலைநிறுத்தப்பட்ட, நான் - நானே, தனக்கு என்று ஓர் அறிவு அற்றநான் - தனக்கென்று ஓருணர்வில்லாத நான், இவற்றை - இவைகளை யெல்லாம், கூட்டி - ஒன்றாகச் சேர்த்து, நின்று ஆட்டினையே - நின்று ஆடுவித்தனையே, பரமே - பரம்பொருளே, இது நல்ல கூத்தே - உனக்கு இது நல்ல கூத்தாயிருக்கின்றதோ, எ - று.

பரனே, எனக்கென்று ஓரறிவில்லாத என்னை, மாயாகாரியமாகிய இந்தச் சரீரத்திற் சேர்த்து நடிப்பிக்கின்றனையே, இது உனக்கு நல்ல கூத்தாயிருக்கின்றதோ என்பதாம்.

**49.** பொல்லாதமாமர்க்கடமனமேயெனைப்போலடுத்த
எல்லாற்றையும்பற்றிக்கொண்டனையேயென்னை நின்மயமா
நில்லாயருள்வெளிநீநானிற்பேனருணிட்டையொரு
சொல்லாற்பதிந்துபரிபூரணானந்தந்தோய்குவனே.

இ - ள். பொல்லாத - தீமையாகிய, மா - பெரிய, மர்க்கடமனமே - குரங்கு நெஞ்சமே, என்னைப்போல் - என்னைப் பற்றிக்கொண்டாற்போலவே, அடுத்தவெல்லாற்றையும்பற்றிக்கொண்டனையே - அடுத்தஎல்லாவற்றையும் பற்றிக்கொண்டாயே, என்னை - இதுவென்ன, நீ அருள்வெளி - நீஅருள் வெளியில், நின்மயம் ஆநில்லாய் - தன்மயமாகநில்லாய், நான் - நான், அருள் நிட்டை - திருவருணிட்டையை, ஒரு சொல்லால் பதிந்து - (ஆசாரியன் சொல்லுகின்ற) ஒருமொழியால் பதியப்பெற்று, பரிபூரணானந்தம் தோய்குவன் - பரிபூர்ண சுகத்தில் மூழ்குவேன், எ - று.

மனமே, என்னைப் பற்றிக்கொண்டாற்போல எல்லாப் பொருள்களையும் பற்றிக்கொண்டனையே, நீ அருள் வெளியில் நிற்பாயாயின், நான்

ஆசார்யைகவசநத்தால் அருணிட்டை கூடி, பரிபூர்ண சுகக்கடலில் முழுகு வேன் என்பதாம்.

**50.** வாராய்நெஞ் சேயுன்றன் றுன்மார்க்கம் யாவையும் வைத் துக்கட்டிங், காரா யடிக்கடி சுற்றுகின் றாயுன் னவலமதிக், கோரா யிரம்புத்தி சொன்னாலு மோர்கிலே யோகெடுவாய், பாரா யுனைக்கொல்லு வேன்வெல்லு வேனருட் பாங்கு கொண்டே.

இ - ள். நெஞ்சே - மனமே, வாராய் - வருவாயாக, உன்றன் துன் மார்க்கம்யாவையும் - உன் கெட்டவழிகளெல்லாவற்றையும், வைத்துக் கட்டு-கட்டிவை, இங்கு - இவ்விடத்துநின்று, ஆராய் - நன்னெறியை யாராய்வாயாக, அடிக்கடி சுற்றுகின்றாய் - அடிக்கடி சுழலாநின்றாய், உன் அவலமதிக்கு-உன் சபலபுத்திக்கு, ஓர் ஆயிரம் புத்திசொன்னாலும்- ஓராயிரம் புத்திகளைச் சொல்லினும், ஓர்கிலே - ஆராய்கிலே, ஓ கெடுவாய் - ஆ கெடுவாய், பாராய் - பார்ப்பாயாக, உன்னை - உன்னை, அருள் பாங்கு கொண்டு - திருவருட் பாங்கினால், கொல்லுவேன் - கொலைசெய்வேன்; வெல்லுவேன் - (அன்றி) வென்றடக்குதலையாயினும் செய்வேன், எ - று.

கொல்லுவேன் என்றதற்கேற்ப, பாங்குஎன்பதற்குக்கட்டாரியெனப் பொருளுரைப்பினுமாம். மனமே, உன் துன்மார்க்க சஞ்சாரத்தை விட்டு, சன்மார்க்கத் தூக்குவா, பலகால் உனக்குப் புத்திசொன்னாலும் கேட்டிலே, உன்னைத் திருவருணெறியைக்கொண்டு வெல்லுவேன் என்பது கருத்து.

"சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந் தானே யெய்தும்
அங்குற்ற மனமிறக்கிற் சநநமர ணங்களெனு மாமு மாயும்[நெஞ்சம்
இங்கிப்பாலெனைத்திருடுங்கள்ளனைக்கண்டேன்கண்டேனிவன்பேர்
பொங்குற்றவிவனாலேநெடுநாளோர்ந்தேனின்றுபொன்று விப்பேன்"

என்றார் பிறரும்.

**51.** மாதத்திலேயொருதிங்களுண்டாகிமடிவதைநின்
போதத்திலேசற்றும்வைத்திலேயேவெறும்புன்மைநெஞ்சே
வேதத்திலேதர்க்கவாதத்திலேவிளங்காதுவிந்து
நாதத்திலேயடங்காதந்தவான்பொருளுடிக்கொள்ளே.

இ - ள். மாதத்திலே - ஒருமாதத்தில், ஒருதிங்கள் - ஒரு சந்திரன், உண்டாகி மடிவதை - தோன்றி யொடுங்குவதை, நின்போதத்திலே - உன் அறிவினிடத்து, சற்றும் வைத்திலேயே - சிறிதும் வைத்திலேயே, வெறும் புன்மை நெஞ்சே - சுத்தஇழிவாகிய மனமே, வேதத்திலே - வேதங்களுள் ளும், தர்க்கவாதத்திலே-தர்க்கவாதத்துள்ளும், விளங்காது -விளங்காதது

(எது), விந்து நாதத்திலே அடங்காது - விந்து நாதங்களுள்ளு மடங்காதது (எது), அந்த வான்பொருள்-அந்த மேலான பொருளை, நாடிக்கொள்-ஆராய்ந்து பற்றிக்கொள்வாய், எ - று.

**52.** எங்கும் வியாபித் துணர்வா யுனக்கென் னிதயத்துள்ளே
தங்குந் துயரந் தெரியாத வண்ணந் தடைசெய்ததார்
அங்கங் குழைந்துள் ளுருகுமன் பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக் கடலே சம்பூரண போதத்தனே.

இ - ள். அங்கம் குழைந்து - சரீரம் வாடி, உள் உருகும்-மனமுருகுகின்ற, அன்பாளர்க்கு - அன்பர்களுக்கு, அணைகடந்து பொங்கும்-வரம்பு கடந்து பொங்குகின்ற, கருணைக்கடலே - கருணை சமுத்திரமே, சம்பூரண போதத்தனே - பரிபூர்ண ஞானத்தை யுடையவனே, எங்கும் வியாபித்துணர்வாய்-நீ யெவ்விடத்தும் நிறைந்து எல்லாவற்றையு முணர்கின்றாய், உனக்கு என் இதயத்துள்ளே தங்கும் துயரம் - உனக்கு என்னிருதயத்தில் நிலைபெற்றதுன்பம், தெரியாதவண்ணம் - (உனக்குத்) தெரியாத வகை, தடைசெய்தது ஆர் - மறைத்தது யார், எ - று.

இறைவனே நீ யெங்கும் வியாபித்து எல்லாவற்றையு முணரவல்லை, அங்ஙனமாக, என்னிதயத் துன்பத்தையுணராமைக்குக் காரணமென்னோ வென்பது கருத்து.

**53.** வையகமாதர்சுகத்தையும்பொன்னையுமாயைமலம்
மெய்யையுமெய்யென்றுநின்னடியார்தம்விவேகத்தையும்
ஐயமில்வீட்டையுமெய்ந்நூலையும்பொய்யதாகவெண்ணும்
பொய்யர்தந்நட்பைவிடுவதென்றோபரிபூரணமே.

இ - ள். வையகம் - உலகில், மாதர் சுகத்தையும் - பெண்டிரின்பத்தையும், பொன்னையும் - பொருளையும், மாயை - மாயாகாரியமாகிய, மலம்-அழுக்குள்ள, மெய்யையும் - உடம்பையும், மெய்யென்று - உண்மையென்று, நின் அடியார்தம் விவேகத்தையும் - உன்னடியார்களுடைய விவேகத்தையும், ஐயம் இல் வீட்டையும் - சந்தேகமில்லாத மோக்ஷத்தையும், மெய்நூலையும் - உண்மைநூல்களையும், பொய்யதாக எண்ணும்-பொய்யாக வெண்ணுகிற, பொய்யர்தம் நட்பை - பொய்யரது சினேகத்தை, விடுவது - விட்டொழிவது, என்றோ - எந்தக்காலமோ, பரிபூரணமே - பரிபூர்ணமே, எ - று.

பரிபூர்ணவஸ்துவே, மாதர் சுகமுதலியவற்றை மெய்யென்றும், உன்னடியாரது விவேக முதலியவற்றைப் பொய் யென்றும் எண்ணுகின்ற பொய்யர் நட்பைவிட் டொழிவது எந்தக்காலமோ என்பது கருத்து.

**54.** அளியுங் கனியொத் தருவினை யானொந் தயர்வுறுவேன்
தெளியும் படிக்குப் பரிபாக காலமுஞ் சித்திக்குமோ
ஒளியுங் கருணையு மாறாத வின்பமு மோருருவாய்
வெளிவந் தடியர் களிக்கநின் றாடும் விழுப்பொருளே.

இ - ள். ஒளியும் - புகழும், கருணையும் - கிருபையும், மாறாத இன்பமும் - நீங்காத இன்பமும், ஓர் உரு ஆய் - ஒருருவமாகி, வெளிவந்து-வெளிப்பட்டு, அடியர் களிக்க - அடியார்கள் களிக்கும்படி, நின்று ஆடும் - நின்று கூத்தாடுகின்ற, விழுப்பொருளே - மேம்பொருளே, அருவினையால் - வெல்லுதற் கரிதாகிய கர்மத்தினால், அளியும் கனி ஒத்து நொந்து - கனிந்த கனிபோன்று நொந்து, அயர்வுறுவேன் - அயர்வடைகின்ற நான், தெளியும்படிக்கு - தெளியும் வண்ணம், பரிபாக காலமும் - பரிபக்குவ காலமும், சித்திக்குமோ-எனக்குக் கிடைக்குமோ, எ - று.

இறைவனே, கனிந்தகனிபோல வினையால் நைந்து வருந்துவேனாகிய நான் தெளிவடையத்தக்க பரிபக்குவ காலமும் வாய்க்குமோ வென்பது கருத்து.

**55.** அடையார்புரஞ்செற்றதேவேநின்பொன்னடிக்கன்புசற்றும்
படையாதவென்னைப்படைத்திந்தப்பாரிற்படர்ந்தவினைத்
தடையாற்றளையிட்டுநெஞ்சப் புண்ணாகத்தளரவைத்தாய்
உடையாயுடையபடியன்றியான்செய்தொன்றிலையே.

இ - ள். அடையார் - பகைஞருடைய, புரம்-முப்புரங்களை, செற்ற - அழித்த, தேவே - தேவனே, நின் பொன்னடிக்கு - உன் திருவடிக்கு, அன்பு - அன்பை, சற்றும் படையாத என்னை - சிறிதும் படைக்காத வென்னை, இந்த பாரில் படைத்து - இவ்வுலகில் சிருஷ்டித்து, படர்ந்த - பரவிய, வினை தடையால் - கர்மமாகிய விலங்கினால், தளையிட்டு - தளை பூட்டி, நெஞ்சம் - மனமானது, புண் ஆக - புண்பட, தளரவைத்தாய் - தளரவைத்தனை, உடையாய் - உடையவனாகிய நீ, உடையபடி அன்றி - உடைத்தாந் தன்மையன்றி, யான் செய்தது - நான் செய்தது, ஒன்று இல்லை - ஒன்றுமில்லை, எ - று.

இறைவனே, உன் திருவடிக் கன்பு சிறிதுமில்லாத என்னை இந்தப் பிரபஞ்சத்திற் படைத்து, வினைத் தளையாற்றளைத்து, மனம் புண்பட்டுத் தளரவைத்தனை, எல்லாம் உன் செயலேயன்றி என்செயல் யாதுமில்லை யென்பது கருத்து.

**56.** ஆடுங் கறங்குந் திரிகையும் போல வலைந்தலைந்து
காடுங் கரையுந் திரிவதல் லானின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவமுய லாத கொடியரெமன்
தேடும் பொழுதென்ன செய்வார் பரானந்த சிற்சுடரே.

இ - ள். பரானந்த சிற்சுடரே - மேலாகிய இன்பத்தைத் தருகிற ஞான தீபமே, ஆடும் - அலைகின்ற, கறங்கும் - காற்றுடியையும், திரிகையும் போல - குலால சக்கரத்தையும் போன்று, அலைந்து அலைந்து - திரிந்து திரிந்து, காடும் கரையும் திரிவது அல்லால் - காட்டினும் கரையினுந் திரிவதன்றி, நின் கருணை - உன் கிருபை, வந்து கூடும்படிக்கு - வந்து அடையும்படிக்கு, தவம் முயலாத கொடியர் - தவத்தை முயன்று செய்யாத கொடியோர், எமன் தேடும்பொழுது - யமன் தேடும் காலத்தில், என்ன செய்வார் - என்ன செய்யக் கடவர், எ - று.

இறைவனே, கறங்கு திரிகைகளை யொத் துழலாநின்ற பாவிகள் யமபடர் வந்து தம்மைத் தேடிப்பிடிக்கும்போது யாது செய்வர் என்பதாம்.

**57.** கற்றும் பலபல கேள்விகள் கேட்டுங் கறங்கெனவே
சுற்றுந் தொழில்கற்றுச் சிற்றின்பத் தூடு சுழலினென்னுங்
குற்றங் குறைந்து குணமே விடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண் டாய்சுத்த மூடநெஞ்சே.

இ - ள். சுத்த மூடநெஞ்சே - சுத்த மூடமனமே, கற்றும் - பலநூல்களைக் கற்றும், பல பல கேள்விகள் கேட்டும் - பற்பல கேள்விகளைக் கேட்டும், கறங்கு என - காற்றுடியைப்போல, சுற்றும் தொழில் கற்று - சுழலும் தொழிலைக்கற்று, சிற்றின்பத்தூடுசுழலின் - சிற்றின்பத்திற் சுழலாநிற்பின், என் ஆம் - என்ன பயனுண்டாம், குற்றம் குறைந்து - தோஷங்கள் குறைந்து, குணம் மேவிடும் - குணம் மேற்படுகின்ற, அன்பர் கூட்டத்தையே - அன்பர் குழுவினையே, முற்றும் துணையென நம்பு - முழுதுந் துணையென்று நம்புவாயாக, எ - று.

மனமே, பல நூல்களைக்கற்றும், பல கேள்விகளைக் கேட்டும், கறங்கு போலச் சுழலுந்தொழில் கற்றுச் சிற்றின்பத்தில் அழுந்துவதனால், என்ன பிரயோசனம், ஒன்றுமில்லையாதலால், அன்பர் கூட்டத்தையே முழுதும் துணையென்று நம்பியிரு என்பதாம்.

**58.** நீயென நானென வேறில்லை யென்னு நினைவருளத்
தாயென மோன குருவாகி வந்து தடுத்தடிமைச்
சேயெனக் காத்தனை யேபர மேநின் றிருவருளுக்
கேயென்ன செய்யுங்கைம் மாறுள தோசுத்த வேதியனே.

இ-ள். நீ என - நீ யென்றும், நான் என - நானென்றும், வேறு இல்லை என்னும் நினைவு - வேறில்லையென்கிற நினைப்பை, அருள - எனக்குக் கிருபை செய்யும்பொருட்டு, தாய் என - தாயைப்போல, மோன குரு ஆகி வந்து - மௌனகுருவாகி வந்து, தடுத்து - (வேறுவிடயத்திற் செல்லாது) தடுத்து, அடிமைச் சேய் என - அடிமைக் குழந்தைபோல, காத்தனையே - காத்தருளினையே, பரமே - பரம்பொருளே, நின் திருவருளுக்கு - உன் திருவருட்கு, சுத்த ஏழையன் - சுத்த எளியேன், செய்யும் கைம்மாறு - செய்தற்குரிய பிரதியுபகாரம், உளதோ - உண்டோ, என்ன - (உளதாயின்) அது என்ன சொல்வாயாக, எ-று.

பரனே, நீ நானென்னும் வேற்றுமை யில்லை யென்கிற நினைவை யெனக்கருள்செய்தற் பொருட்டுத் தாய்போல மௌனகுருவாய் வந்து என்னைத் தடுத்தாட்கொண்டு, அடிமைக் குழந்தைபோலக் காத்தருளினையே, உன் திருவருளுக்கு என்ன கைம்மாறு செய்வேன் என்பதாம்.

**59.** ஆத்திரம் வந்தவர் போலலை யாம லரோகதிட
காத்திரந் தந்தென்னை யேயன்னை போலுங் கருணைவைத் திம்
மாத்திர முன்னின் றுணர்த்தினை யேமௌ னாவினிநான்
சாத்திரஞ் சொன்ன படியிய மாதியுஞ் சாதிப்பனே.

இ-ள். ஆத்திரம் வந்தவர்போல் - ஆத்திர முண்டானவர்போல, அலையாமல் - அலையாதிருக்கும் வண்ணம், அரோகம் - பிணியில்லாத, திடகாத்திரம் தந்து - த்ருட' சரீரத்தைக்கொடுத்து, என்னை - என்னை, அன்னைபோலுங் கருணைவைத்து - தாயைப்போலக் கருணைசெய்து, இம்மாத்திரம் - இம்மட்டாயினும், முன் நின்று - ப்ரத்யக்ஷமாய் நின்று, உணர்த்தினையே - அறிவுறுத்தினையே, மௌனா - மௌனகுருவே, இனி - இனி, நான்-அடியேன், சாத்திரம் சொன்னபடி - சாத்திரஞ் சொன்ன வண்ணம், இயமாதியும் - இயமம் முதலிய எண்வகை யோக வுறுப்புக்களையும், சாதிப்பன் - செய்துமுடிப்பேன், எ-று.

ஆத்திரம் - விரைவு. மௌனகுருவே, நீ பிரத்திக்ஷமாய் எழுந்தருளி எனக் கறிவுறுத்த வேண்டியவற்றை யறிவுறுத்தினையே, இனி அடியேன், சாத்திரம் சொன்னபடி இயமாதிகளையும் செய்து முடிப்பேன் என்பது கருத்து.

---

## உடல்பொய்யுறவு.

**1.** உடல்பொய் யுறவாயி னுண்மை யுறவாகக்
கடவாரார் தண்ணருளே கண்டாய்—திடமுடனே
உற்றுப்பார் மோன வொருசொல்லே யுண்மைநன்றாப்
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ்.

இ - ள். உடல் - உடம்பே, பொய்யுறவு ஆயின் - பொய்யுறவானால், உண்மை உறவு ஆகக்கடவார் ஆர் - மெய்யுறவாகக் கடவர் யாவர், தண் அருளே - தண்ணிய திருவருளே, திடமுடனே - திடத்துடன், உற்றுப் பார் - உற்றுப்பார்ப்பாயாக, மோனன் - மௌனகுருவின், ஒரு சொல்லே - ஒருமொழியே, உண்மை - மெய்யாம், நன்று ஆ - நன்றாக, பற்றிப்பார் - பற்றிப் பார்ப்பாயாக, மற்ற எல்லாம் - மற்றவைகளெல்லாம், பாழ்-பொய் யாம், எ - று.

மனமே சர்வதேச சர்வகால சர்வாவஸ்த்தைகளிலும் நம்மைவிட்டு நீங்காத இந்தச் சரீரமே நமக்குப் பொய்யுறவா யொழிந்தால், இனி மெய் யுறவாகக்கடவார் யார் ஒருவருமில்லை, ஆகையால், நமக்கு மெய்யுறவா வது திருவருளே, மௌனகுரு அருளிச்செய்த ஒரு மொழியே மெய், மற்றவையாவும் பொய்யென்பது கருத்து.

**2.** பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்—நேராக
நிற்குந் திருவருளி னெஞ்சேயா நிற்பதல்லால்
கற்குநெறி யாதினிற்மேற் காண்.

இ - ள். பார் ஆதி பூதம் எல்லாம் - பிருதுவி முதலிய பூதங்கள் யாவும், பார்க்குங்கால் - பார்க்குமிடத்து, அப்பரத்தின் - அந்தப் பரம் பொருளினது, சீர் ஆக - சிறந்த வடிவமாக, நிற்கும் திறம் - நிற்கும் விதத்தை, கண்டாய் - கண்டனை, (ஆதலால்) நெஞ்சே - மனமே, யாம் - நாம், நேராக நிற்கும் - நேராய் நிற்கிற, திருவருளில் - திருவருணிலையில், நிற்பது அல்லால் - நிற்பதன்றி, இனிமேல் - இனிமேல், கற்கும் நெறி யாது - கற்கவேண்டிய மார்க்கம் யாது, எ - று.

மனமே, பிருதுவி முதலிய பூதங்கள் யாவும் ஆராயுமிடத்து, அந்தப் பரம்பொருளி னுருவாயிருத்தலைத் கண்டனை யாதலால், திருவருணிலை யில் நிற்பதன்றி, இனி நமக்குக் கற்க அடுப்பது என்னென்பதாம்.

**3.** மெய்யான தன்மை விளங்கினால் யார்க்கேனும்
பொய்யான தன்மைபொருந்துமோ—வையாவே
மன்னு நிராசையின்னம் வந்ததல்ல வுன்னடிமை
யென்னுநிலை மெய்துமா றென்.

இ - ள். மெய்யான தன்மை விளங்கினால் - உண்மையாந் தன்மை விளங்கினால், யார்க்கு ஏனும் - யாவர்க்காயினும், பொய்யான தன்மை பொருந்துமோ - பொய்யாந்தன்மை பொருந்துமோ, ஐயாவே - ஐயனே, மன்னும் - நிலைபேறுடைய, நிராசை - அவாவறுதி, இன்னம் வந்தது அல்ல - இன்னமு முண்டானதில்லை, (அங்ஙனமாக) உன் அடிமை என்னும்

நிலை - உன்னடியனென்கிற நிலைமை, எய்துமாறு என் - அடையும் வழி யாது, எ - று.

யாவர்க்காயினும் மெய் விளங்கினால் பொய் நிலக்குமோ, அடியே னுக்கு நிராசை யின்னம் உண்டாகவில்லையே, உன்னடியன் யான் என்னு நிலை யெனக்கு எப்படியுண்டாகு மென்பதாம்.

**4.** அறியாமை மேலிட் டறிவின்றி நிற்கும்
குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயா
நீயுணர்த்த நானுணரு நேசத்தா லோவறிவென்
றேயெனக்கோர் நாமமிட்ட தே.

இ - ள். அறியாமை மேலிட்டு - அறிவின்மை மேற்பட்டு, அறிவு இன்றி நிற்கும் - அறிவற்று நிற்கிற, குறியேற்கு - சிறியேனுக்கு, அறிவு என்ற கோலம் - அறிவு என்கிற ரூபம், வறிதே ஆம் - வீணேயாகும், நீ உணர்த்த - நீ என்னுண்ணின் றறிவிக்க, நான் உணரும் நேசத்தாலோ- நானறியு மன்பினாலோ, எனக்கு - அடியேனுக்கு, அறிவு என்று ஓர் நாமம் இட்டது - அறிவென்றொரு பெயரிட்டது, எ - று.

அரியாமையே யதிகரித்து நிற்கிற எனக்கு அறிவென்னு ரூருவம் பொய்யாம், ஆயினும், நீ யுள்ளிருந் தறிவிக்க நானறிதலினாலோ, எனக்கு அறிவென்றொரு பெயரிட்டது என்பதாம்.

**5.** ஏதுக்குச் சும்மா விருமனமே யென்றுனக்குப்
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்—வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னாயேயுன்
புந்தியென்ன போதமென்ன போ.

இ - ள். ஏதுக்கு - (நீ யலைகின்றது) எற்றுக்கு, சும்மா இரு மனமே யென்று - சும்மாவிரு நெஞ்சமே யென்று, உனக்கு போதித்த உண்மை - உனக்குப் போதித்த உண்மைநிலையை, எங்கே போகவிட்டாய் - எங்கே போகவிட்டனை, வாதுக்கு வந்து எதிர்த்த - வாதுசெய்யவந் தெதிர்த்த, மல்லரைப்போல்-மல்லரைப்போல, வாதாடினாயே - வாது செய்தனையே, உன் புந்தி யென்ன - உன் புத்திதானென்ன, போதம் என்ன - அறிவுதா னென்ன, போ - ஒழிவாயாக, எ - று.

மனமே, சும்மாவிரு என்று நான் உனக்குப் போதித்த வுண்மையை எங்கே நழுவவிட்டாய், எதிர்த்த மல்லரைப்போல் என்னோடு வாது செய் கின்றனையே, உன் புத்தி மதிக ளென்ன என்பதாம்.

**6.** சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தாற் றுக்க
சுகமனைத்தும் பொய்யன்றோ சோரா—திகபரத்தும்

விட்டுப் பிரியாத மேலான வத்துவிதக்
கட்டுக்கு ளாவதென்றோ காண்.

இ - ள். சகம் அனைத்தும் - பிரபஞ்சமெல்லாம், பொய்யென உணர்ந்தால் - மித்தையென்றறிந்தால், துக்க சுகம் அனைத்தும் - துன்பவின்பங்களெல்லாம், பொய் அன்றோ - பொய்யா மல்லவோ, சோராது - தளராமல், இகபரத்தும் - இகபரங்களிலும், விட்டுப்பிரியாத - விட்டுநீங்காத, மேலான - மேன்மையாகிய, அத்துவிதம் - அத்துவித மென்கிற, கட்டுக்குள் ஆவது - கட்டுக்குட்படுவது, என்றோ - எக்காலமோ, எ - று.

பிரபஞ்சமெல்லாம் பொய்யென் றறிந்தால் சுக துக்கங்கள் யாவும் பொய்யாமல்லவோ, ஆதலால், அத்துவிதக் கட்டுக்குட்பட்டு நிற்பது எந்தக் காலமோ என்பதாம்.

**7.** கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோவென்
சொற்கண்டா தேதெனநான் சொல்லுவேன் — விற்கண்ட
வான மதிகாண மௌனிமௌ னத்தளித்த
தானமதி லூறு மமிர்தம்.

இ - ள். வில் கண்ட - ஒளிபெற்ற, வானமதி - சிதாகாயத்திலுள்ள சந்திர மண்டலத்தை, காண - பார்க்கும்படி, மௌனி - மௌனகுரு, மௌனத்து அளித்த - மௌனநிலையாற் கிருபைசெய்த, தானமதில் - இடத்தில், ஊறும் - சுரக்கின்ற, அமிர்தம் - அமிர்தமானது, கற்கண்டோ - கற்கண்டுதானோ, தேனோ - தேன்றானோ, கனிரசமோ - முக்கனிகளின்சாறுதானோ, பாலோ - பால்தானோ, என் சொற்கு அண்டாது - என் சொல்லுக்கடங்காது, ஏது என நான் சொல்லுவேன் - (இவற்றுள்) யாதென்று நான் சொல்லவல்லேன், எ - று.

சிதாகாயத்திலுள்ள சந்திரனிடத்துச் சுரக்கின்ற அமிர்தமானது கற்கண்டு முதலிய மதுரவஸ்துக்களுள் யாதென்று சொல்லுவேன்என்பதாம்.

**8.** கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறா வுற்பவநோய் மாறுமோ — நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம்.

இ - ள். கேட்டலுடன் - சிரவணத்தோடு, சிந்தித்தல் - மநநம், கேடு இல்லா - கெடுதியில்லாத, மெய்த்தெளிவால் - உண்மையாகிய நிதித்யாசநம் இவைகளால், வாட்டம் அறா - துன்பம் நீங்காத, உற்பவநோய் - பிறவிப் பிணி, மாறுமோ - நீங்குமோ, நாட்டம் உற்று - ஆராய்ச்சி பொருந்தி, மெய் ஆன - உண்மையாகிய, நிட்டையினை - நிஷ்டையை, மேவினர்கட்கன்

ரே-பொருந்தினவர்களுக் கல்லவோ, பொய் ஆம் - பொய்யாகிய, பிறப்பு இறப்பு போம் - உற்பத்தி நாசங்கள் இல்லாதொழியும், எ - று.

சிரவண மநந நிதித்யாசநங்களாற் பிறவிப்பிணி நீங்காது; உண்மையாகிய நிஷ்டையைப் பொருந்தினவர்களுக்கு நீங்கும் என்பதாம்.

**9.** மாயாச கத்தை மதியாதார் மண்முதலா
யேயான தத்துவத்தி லெய்துவரோ—நேயானு
பூதிநிலை நிற்கப் பொருந்துவர்க ளன்னவர்தம்
நீதியையே யோர்மனமே நீ.

இ - ள். மாயா சகத்தை - மாயாகாரியமாகிய பிரபஞ்சத்தை, மதியாதார் - ஒருபொருளாக மதியாதவர்கள், மண் முதலாய் ஆன - பிருதுவி முதலாக வுள்ள, தத்துவத்தில் - தத்துவக் குப்பையில், எய்துவரோ - பொருந்துவரோ, நேயம் - அன்புருவமான, அநுபூதி நிலைநிற்கப் பொருந்துவர்கள் - அநுபூதிநிலையில் நிற்கப் பொருந்துவார்கள், (ஆதலால்) அன்னவர் தம் நீதியையே - அவரது நிதியையே, நீ ஓர் - நீ அறி, மனமே - நெஞ்சமே, எ - று.

மனமே, பிரபஞ்சத்தை ஒரு பொருளாக மதியாதவர்கள் பிருதுவி முதலிய தத்துவக்குப்பையிற் பொருந்துவரோ, பொருந்தார், அநுபூதிநிலையில் நிற்பர் ஆதலால், அவர்களுடைய நீதியையே நீ யாராய்வாயாக என்பதாம்.

**10.** இகமுழுதும் பொய்யெனவே யெய்ந்துணர்ந்தா லாங்க
மிகவளர வந்தவருண் மெய்யே—யகநெகிழப்
பாரீரொருசொற் படியே யனுபவத்தைச்
சேரீ ரதுவே திறம்.

இ - ள். இகம் முழுதும் - இவ்வுலகமுழுமையும், பொய் யெனவே - மித்தையென்றே, எய்ந்து உணர்ந்தால் - பொருந்தி யறிந்தால், ஆங்கே - அப்பொழுதே, மிக வளரவந்த - மிகவும் பெருக்கமடையும்படி வந்த, அருள் - திருவருள், மெய்யே - உண்மையேயாம், அகம் நெகிழப் பாரீர் - மனமுருகப் பாருங்கள், ஒரு சொல் படியே - ஒரு மொழிப்படியே, அநுபவத்தைச் சேரீர் - அநுபவத்தைப் பொருந்துங்கள், அதுவே - அப்படி செய்தலே, திறம் - உறுதியாவது, எ - று.

இவ்வுலக முழுதும் மித்தையென்றறிந்தால், அப்பொழுதே திருவருள் மெய்யாக விளங்கும், ஆதலால், மன நெகிழப் பாருங்கள், ஆசாரியனது ஒரு மொழிப்படியே அநுபவத்தை யடையுங்கள், அப்படிசெய்வதே உங்களுக் குறுதியாவது என்பதாம்.

**11.** ஆரணங்க ளாகமங்க ளியாவுமே யானந்த
பூரணமே யுண்மைப் பொருளென்னும்—காரணத்தை
ஓராயோ வுள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ் வுண்மையினைப்
பாராயோ நெஞ்சே பகர்.

இ - ள். ஆரணங்கள் - வேதங்கள், ஆகமங்கள்-ஆகமங்கள் (ஆகிய), யாவும் - எல்லாம், ஆனந்த பூரணமே - இன்ப நிறைவே, உண்மைப் பொருள் என்னும்-உண்மைப் பொருளென்று சொல்லுகிற, காரணத்தை-ஹேதுவை, ஓராயோ - ஆராய்ச்சி செய்யாயோ, உள்ளுள்ளே உற்றுணர்ந்து - உள்ளிற்குள்ளேதானே உற்றறிந்து, அவ்வுண்மையினை - அந்த மெய்யை, பாராயோ-பார்க்காயோ, நெஞ்சே பகர்-மனமே சொல்வாயாக.

மனமே, வேதாகமங்களெல்லாம் ஆநந்த பூரணே மெய்ப்பொருளென்று ஏககண்டமாய்ச் சொல்வதை ஆராய்ந்தடங்குவா யென்பதாம்.

**12.** நேராயம் மௌனநிலை நில்லாமல் வாய்பேசி
யாரா யலைந்தீர்நீ ராகெடுவீர்—தேறீர்
திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவால்
கரையுங் கரையுமனக் கல்.

இ - ள். நேராய் - நேராக, அம்மௌநநிலை நில்லாமல் - அந்தமௌந நிலையில் நிற்காமல், வாய் பேசி - வாயினுற் பேசிக்கொண்டு, நீர் - நீங்கள், ஆராய் அலைந்தீர் - யாராக நினைந்தலைந்தீர்கள், ஆ கெடுவீர் - ஐயோ கெடுவீர்காள், தேறீர் - தெளியுங்கள், திரையும் திரையும் - அலைகள் பலகால் திரைந்துவிழுகின்ற, நதி சென்னியனை - கங்கைச் சடையனை, நாவால் - நாவினுல், கரையும்-செபித்து உருகுங்கள், (அப்படி செய்தால்) மனக் கல் - நெஞ்சமாகிய கல்லானது, கரையும் - உருகும், எ - று.

மூடர்களே, மௌனநிலையில் நில்லாமல் நீங்கள் வீணுக என் அலைகிறீர்கள், கங்காதரனைப் பலகால் துதித்துருகுங்கள், உங்கள் மனக் கல் உருகும் என்பதாம்.

**13.** அற்ப மனமே யகிலவாழ் வத்தனையுஞ் [யொன்
சொற்பனங்கண் டாயுண்மை சொன்னேனுன்—கற்பனை
றில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக்
கல்லாய்நீ தானேர் கவி.

இ - ள். அற்பமனமே - அற்பமாகிய நெஞ்சமே, அகில வாழ்வு அத்தனையும் - பிரபஞ்ச வாழ்வெல்லாம், சொற்பனம் - கனவேயாம், நான் உண்மை சொன்னேன் - நான் யதார்த்தத்தைச் சொல்லிவிட்டேன், கற்பனை ஒன்று இல்லா இடத்து - கற்பனை சிறிதுமில்லாத இடத்தில், என்னை-

என்னை, சும்மாவைத்திருக்க - சும்மாவைத்திருக்க, நீ ஓர் கவி கல்லாய் - நீ ஒரு கவியைக் கற்பாயாக. எ - று.

மனமே, பிரபஞ்ச வாழ்க்கையானது சொறபரம்போலப் பொய்யாம், ஆதலால், கற்பனையற்ற இடத்தில் என்னைச் சும்மா இருத்திவைப்பதற்கு ஒருமொழியைக் கற்பாயாக என்பதாம்.

**14.** ஏதுந் திருவருளி னிச்சையா மென்றென்றெப்
போதும் பொருந்தும் புனிதர்பாற்—றீதுநெறி
செல்லுமோ செல்லாதே செல்லுமிட மின்பமலால்
சொல்லுமே வேதத் தொனி.

இ - ள். ஏதும் - யாதும், திருவருளின் இச்சை ஆம் என்று என்று - திருவருளின் சங்கற்பமே யாமென்று, எப்போதும் பொருந்தும் - எப்பொழுதும் அமைந்திருக்கிற, புனிதர் பால் - பரிசுத்தர்களிடத்தில், தீது நெறி செல்லுமோ-தீய நெறி செல்வதோ, செல்லாதே - செல்லாதன்றே, செல்லும் இடம் - செல்லுமிடமானது, இன்பம் அல்லால் - ஆநந்தமன்றி, வேதத் தொனி சொல்லுமோ - வேத வொலி (வேறொன்றைச்) சொல்லுமோ, எ - று.

எல்லாம் திருவருளேயென் றமைந்திருக்கும் பரிசுத்தர்களிடத்தில் தீ நெறிகள் செல்லா என்பதாம்.

**15.** கல்லேறுஞ் சில்லேறுங் கட்டியே றும்போலச்
சொல்லேறப் பாழ்த்த துளைசெவிகொண்—டல்லேறு
நெஞ்சனென நிற்கவைத்தாய் நீதியோ தற்பரமே
வஞ்சனல்லே னீயே மதி.

இ - ள். கல்லேறும் - கல்லெறிதலையும், சில் ஏறும் - ஓடு எறிதலையும், கட்டி யேறும் - மண்ணாங்கட்டி யெறிதலையும், போல - ஒத்திருக்க, சொல் ஏற - பலவகைச் சொற்களேறுதலால், பாழ்த்த - பாழான, துளை செவிகொண்டு - செவித்தொளைகொண்டு, அல் ஏறு-அஞ்ஞான இருளேறிய, நெஞ்சன் என - மனத்துடையா னிவ னென்று உண்மைநிலை கண்டோர் சொல்லும்படி, நிற்க வைத்தாய் - என்னை நிற்கச்செய்தனை, நீதியோ - இது வுனக்கு நீதியாமோ, தற்பரமே - தற்பரவஸ்துவே, வஞ்சன் அல்லேன் - வஞ்சகனல்லேன், நீயே மதி - நீயே மதித்தறிவாய். ()

தற்பரனே, பல கேள்விகள் கேட்டுக் கலக்கமடைந்த மனத்தினையுடையா னிவனென்று என்னை உண்மைநெறியினர் சொல்ல வைத்தாய், இது உனக்கு நீதியோ வென்பதாம்.

**16** அப்பொருளு மான்மாவு மாரண நூல் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்றுஞ் சாதியிறு—லெப்படியும்

தேறிற் றுவிதஞ் சிவாகமமே சொல்லுநிட்டை
யாருமிடத் தத்துவித மாம்.

இ - ள். அப்பொருளும் - அந்தப் பரம்பொருளும், ஆன்மாவும் - ஆன்மவஸ்துவும், ஆரண நூல் சொன்னபடி - வேதநூல் சொன்ன பிரகாரம், சாதியினால்-சாதியால், தப்பு இல்லா சித்து ஒன்று ஆம் - குற்றமற்ற சித்து ஆகிய ஒரு பொருளேயாம், எப்படியும் - எவ்விதத்தினாலும், தேரின் - ஆராய்ந்தால், சிவாகமம் துவிதம் சொல்லும்-சிவாகமங்கள் துவிதத்தையே சொல்லும், நிட்டை ஆரு மிடத்து - நிஷ்டைகூடுமிடத்தில், அத்துவிதம் ஆம் - அத்துவிதமாகும், எ - று.

சீவபரங்கள் சித்தென்னுஞ் சாதியால் ஒன்றேயாம் என்பதாம்.

**17.** வேத முதலாய் விளங்குஞ் சிவவடிவாம்
போத நிலையிற் பொருந்தாம—லேதமிகு
மோகாதி யல்லலிலே மூழ்கினையே நெஞ்சேயித்
தேகாதி மெய்யோ தெளி.

இ - ள். வேத முதலாய் - வேதமுதலாகி, விளங்கும்-விளங்குகின்ற, சிவ வடிவு ஆம் - சிவரூபமாகிய, போதநிலையில் பொருந்தாமல் - ஞான நிலையிற் பொருந்தியிராமல், ஏதம் மிகும் - குற்றம்பெருகுகின்ற, மோகாதி அல்லலிலே - மோக முதலிய துன்பங்களில், மூழ்கினையே-அழுந்தினையே, நெஞ்சே - மனமே, இத் தேகாதி - இந்தத் தேகாதிகள், மெய்யோ - மெய்யாமோ, தெளி-தெளிவாயாக, எ - று.

மனமே, வேத முதலாக விளங்குகின்ற சிவரூபமாகிய போத நிலையிற் பொருந்தியிராமல், மோகசாகரத்தில் அழுந்தினை, இந்தத் தேகாதிகள் மெய்யோ என்பதாம்.

**18.** நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநிலை
தாக்கற் குபாயஞ் சமைத்தபிரான்—காக்குமுயிர்
அத்தனைக்கு நானடிமை யாதலினால் யானெனதென்
றித்தனைக்கும் பேசவிட மில்.

இ - ள். நோக்கற்கு அரிது ஆன-பார்த்தற் கருமையான, நுண்ணிய-நுட்பமான, வான்-மேலாகிய, மோன நிலை தாக்கற்கு - மௌனநிலையைப் பதித்தற்கு, உபாயம் சமைத்தபிரான் - உபாயம் அமைத்த எம்பெருமான், காக்கும் உயிர் அத்தனைக்கும் - காக்கின்ற வுயிர்களெல்லா வற்றுக்கும், நான் அடிமை ஆதலினால் - நான் அடிமை யாகையால், யான் எனது என்று - நான் என்னது என்று, இத்தனைக்கும் - இவ்வளவுக்கும், பேச - பேசுதற்கு, இடம் இல் - இடமில்லை, எ - று.

மோனநிலை யெனக் குண்டாம்வண்ணம் உபாயஞ்செய்த இறைவன் காக்கின்ற வுயிர்க ளெல்லாவற்றுக்கும் நான் அடிமையாதலால், நான் எனது என்பதற்குச் சிறிதும் இடமில்லை யென்பதாம்.

**19.** ஒன்றுமற நில்லென் றுணர்த்தியநம் மோனகுரு
தன்றுணைத்தா ணீடூழி தாம்வாழ்க—வென்றென்றே
திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்மையர்க்கே
கைக்குவரு மின்பக் கனி.

இ - ள். ஒன்றும் அற-ஒரு விகற்பமுமின்றி, நில் என்று உணர்த்திய-நில்லென்றறிவுறுத்தின, நம் - நம்முடைய, மோநகுருதன் - மௌநகுருவினது, துணைத்தாள் - இரண்டு திருவடிகள், நீடூழி வாழ்க - நீடூழி வாழக்கடவன, என்று என்றே - என்று சொல்லியே, திக்கு அனைத்தும் - திசைகளெல்லாவற்றினும், கை குவிக்கும் - கை கூப்பி வணங்குகிற, சின்மயர் ஆம் தன்மையர்க்கே - சின்மயராகிய தன்மையையுடையவர்க்கே, இன்பக் கனி - (நிரதிசய) சுகக்கனியானது, கைக்கு வரும் - கைக்குக் கிடைக்கும்.

சிறிதும் விகற்பமில்லாமல் நிற்பாயாக வென்று என்னை யறிவுறுத்தின நம் மோனகுருவினது திருவடி வாழ்கவென்று எல்லாத் திசைகளிலுங் கைகுவிக்கும் அன்பர்களுக்கே இன்பக்கனியானது கைக்குக் கிடைக்கும் என்பதாம்.

**20.** மனத்தாலும் வாக்காலு மன்னவொண்ணு மோன
வினத்தாரே நல்ல வினத்தார்—கனத்தபுகழ்
கொண்டவரு மன்னவரே கூறரிய முத்திநெறி
கண்டவரு மன்னவரே காண்.

இ - ள். மனத்தாலும் - மனத்தினாலும், வாக்காலும் - வாக்கினாலும், மன்ன வொண்ணு - நிலைக்கக்கூடாத, மோனம் - மௌந நிலையையுடைய, இனத்தாரே - கூட்டத்தாரே, நல்ல இனத்தார் - நல்ல கூட்டத்தார், கனத்த புகழ் கொண்டவரும் - பெரும்புகழைக் கொண்டவரும், அன்னவரே - அத்தன்மையரே, கூறு அரிய - சொல்லுதலருமையாகிய, முத்தி நெறி கண்டவரும் - மோக்ஷமார்க்கத்தைக் கண்டவரும், அன்னவரே - அத்தன்மையாரே, எ - று.

மனோ வாக்குக்களுக் கெட்டாத மௌந ஸமாஜத்தாரே சிறந்தவர் என்பதாம்.

**21.** கண்ணொளியே மோனக் கரும்பே கவலையறப்
பண்ணொளிக்கு முள்ளொளியாம் பான்மையினை—நண்ணிடவுன்
சித்த மிரங்கிலதென் சித்தந் தெளியாவே
றித்தனைக்கு மாதரவு மில்.

இ - ள். கண் ஒளியே-கண்ணுக்குள் ளொளியே, மோனக் கரும்பே-மௌனக் கரும்பே, கவலை யறப்பண் - கவலையறப் பண்ணுகின்ற, ஒளிக்கும் உள் ஒளி ஆம் பான்மையினை - ஒளிக்கும் உள்ளொளியாகிய தன்மையை, நண்ணிட - நான் பொருந்துமாறு, உன் சித்தம் இரங்கிலது-உன் சித்த மிரங்கவில்லை, என் சித்தம் தெளியா - என்மனந் தெளியாது, வேறு இத்தனைக்கும் - உன்னையன்றி வேறாக இத்தனைக்கும், ஆதரவும் இல்-ஆதர வு மில்லை, எ - று.

இறைவனே, ஒளிக்கும் ஒளியாகிய தன்மையைப் பொருந்துமாறு உன் சித்த மிரங்கியருளல்வேண்டும், உன்னையன்றி வேறோ ராதரவில்லை யென்பதாம்.

**22.** அறியாமை சாரி னதுவா யறிவா
நெறியான போததுவாய் நிற்குங்—குறியால்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய்.

இ - ள். அறியாமை சாரின் - அறியாமை பொருந்தினால், அது ஆய்-அவ்வறியாமையேயாகி, அறிவு ஆம் நெறி ஆனபோது-அறிவாகிய நெறியை யடைந்தபோது, அது ஆய் நிற்கும் - அவ்வறிவாகவே நிற்கும், குறியால்-பெயரினால், சத்து அசத்து - சத்து அசத்தென்று, அருள் உணர்ந்த-திருவரு ளறிவிக்க, தான் உணராநின்ற - தான் அறியாநின்ற, விதம் உற்று - விதத்தைப்பொருந்தி, அறிவு என்னும் பேர் மெய் - அறிவென்கிற பேர் மெய்யாம், எ - று.

அறியாமை சாரின் அதின் மயமாயும் அறிவு சாரின் அதின் மயமாயும் இருத்தலால், சதசத்தென் றுணரற்பாலது, திருவரு ளுணர்த்த உணரும் விதத்தைப் பொருந்தி அறிவு என்னும் பெயர் நிலைக்கும் என்பதாம்.

**23.** குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி
கருவொன் றுமேனிநம்பாற் காட்டா—தருளொன்று
கண்டவர்க்கே யானந்தங் கண்டுகொள லாமலது
கொண்டவர்க்கிங் கென்ன கிடைக்கும்.

இ - ள். அருள்-திருவருளானது, குருலிங்க சங்கமம் ஆக கொண்ட-குருலிங்க ஜங்கமங்களாகக் கொண்ட, திருமேனி-தன் யதார்த்தஸ்ரூபத்தை, கரு ஒன்றும் மேனி நம்பால் காட்டாது என்று-கருப்ப சஞ்சாரமுள்ள வுருவத்தையுடைய நமக்குக் காட்டாது என்று, கண்டவர்க்கே-உண்மையை யறிந்தவர்களுக்கே, ஆநந்தம் கண்டுகொளல் ஆம் - இன்பம் கண்டுகொள்ளல் கூடும், அல்லது கொண்டவர்க்கு - அதன்றி வேறு எண்

ணங் கொண்டவர்களுக்கு, இங்கு என்ன கிடைக்கும் - இவ்விடத்தென்ன கிடைக்கும், எ - று.

குரு - ஆசாரியன். லிங்கம் - இலிங்கரூபமாகிய இறைவனது விக்ரஹம். ஜங்கமம்-இயங்கியற்பொருள். இறைவன் குருலிங்க ஜங்கமங்களாயிருக்கும் உண்மை பரிபாகிகளுக் கன்றித் தெரிந்து இன்பமடைதல் கூடாதென்பதாம்.

**24.** புலியி னதளுடையான் பூதப் படையான்
பலியிரந்து மெல்லாம் பறிப்பான்—மலிபுனல்சேர்
பொன்முடியான் முக்கட் புனிதன் சரண்புகுந்தோர்க்
கென்முடியா தேது முளதே.

இ - ள். புலியின் அதள் உடையான் - புலித்தோலையுடையவன், பூதப்படையான் - பூதப்படையையுடையவன், பலி யிரந்தும் - பலியேற்றும், எல்லாம் பறிப்பான் - எல்லாவற்றையும் பறித்துக்கொள்வான், மலி புனல் சேர் - நிறைந்த நீரையுடைய கங்காநதிசேர்ந்த, பொன்முடியான் - திருமுடியை யுடையவன், முக்கண் புனிதன் - மூன்று கண்களையுடைய பரிசுத்தன், (அவனது) சரண்புகுந்தோர்க்கு - சரணமடைந்தவர்களுக்கு, என்முடியாது - எந்தக் காரியந்தான் முடியாது, ஏதும் உளதே (முடியாத காரியம்) சிறிதுமுண்டோ, எ - று.

இறைவனைச் சரணடைந்தார்க்கு முடியாத காரியம் ஒன்றுமில்லையென்பதாம். முடியென்றது சடையை.

**25.** சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே
அல்லும் பகலு மரற்றுவதென்—நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்க ணாமில்லை யென்பரந்தோ
மோனமய மான முறை.

இ - ள். சொல்லுக்கு அடங்கா-வாக்குக் கடங்காத, சுகப்பொருளை - சுகரூபமான வஸ்துவை, நாமென - நாமென்று, அல்லும் பகலும் - இரவும் பகலும், அரற்றுவது என் - இரைவதென்ன, நல்லசிவம் - நல்ல சுபகரமாகிய, ஞானமயம் பெற்றோர்கள் - ஞான ரூபத்தைப் பெற்றவர்கள், நாம் இல்லையென்பர் - நாமில்லை யென்பார்கள், அந்தோ - அன்றோ, (இது வன்றோ) மோன மயம் ஆன முறை - மௌனரூபமான முறைமை, எ-று.

நல்ல என நிறுத்தி, சிவஞானமயம் எனப் பிரித்துரைப்பினு மிழுக்காது. அவாங்மாநஸகோசரமாகிய பரம்பொருளை நாமென்பது அடாது, ஞானியர் நாமென்ப தில்லையென்பர், அது வன்றோ மௌனநிலையின் முறைமையென்பதாம்.

**26.** ஐயா வருணகிரி யப்பா வுனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்
சாற்றறிதென் றேசற்றார் தன்னனையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னான்.

இ - ள். ஐயா - ஐயனே, அருணகிரி - சோணசலத்தி லெழுந்தருளி யிருக்கிற, அப்பா - அப்பனே, உன்னைப்போல - உன்னைப்போல, மெய்யாக - உண்மையாக, ஓர் சொல் - ஒரு மொழியை, விளம்பினர் யார் - சொன்னவர் யார், வையகத்தோர் - உலகத்தார், சாற்று அரிது என்று - சொல்லுதலருமையாகுமென்று, ஏசற்றார்-இளைத்தார்கள், தன்னனையாய்-தன்னைத்தானே நிகர்த்தவனே, முக்கண் எந்தை-மூன்று கண்களையுடைய எமது தந்தை, நாற்றிசைக்கும் கைகாட்டினான் - நாற்றிசையிலுள்ளார்க்குங் கைகாட்டியருளினான், எ - று.

நாற்றிசைக்கும் என்பதற்குச் சநகாதியர் நால்வர் பக்கலிலும் என்றுரைத்தலுமாம். அருணகிரியப்பா, முக்கணெந்தைகைகாட்டிதலா லுணர்த்தின பொருளை நீயொரு மொழியா லுணர்த்தினையே, உன்னை நிகர்ப்பவர் யாவர் என்பதாம்.

**27.** காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவதுண்டோ
தீதற்ற காயமுமச் செய்கையே—போதமாய்
நிற்பரல்லா லிச்சகத்தி னேரார்க ணேர்ந்திடினும்
தற்பரமாக் கண்டிருப்பார் தாம்.

இ - ள். காது அற்றுப்போன - காதற்றுப்போன, முறி - எழுதுமுறியை, கட்டிவைத்தால்-கட்டிவைத்ததனால், ஆவது உண்டோ-உண்டாவதோர் பயனுளதோ, (இல்லை), தீது அற்ற காயமும் - (பிணி முதலிய) குற்றமற்ற சரீரமும், அச்செய்கையே - அந்தத்தன்மையுள்ளதே யாகும், (ஆதலால்) போதமாய் நிற்பர் அல்லால் -(அறிஞர்) ஞானவடிவாய் நிற்பரே யன்றி, இச்சகத்தில் - இவ் வுலக வியாபாரத்தில், நேரார்கள் - பொருந்தார்கள், நேர்ந்திடினும் - பொருந்தினும், தற்பரம் ஆகக்கண்டிருப்பார் - (அதனை) தற்பரமாகவே பார்த்திருப்பார்கள். எ - று.

காதற்றமுறிபோல இவ்வுடம்பு பயனற்றதாதலால் அறிஞர் ஞானரூபமாய் நிற்பர் என்பதாம்.

**28.** வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினான்
கள்ளங் குலாவுவஞ்சக் கள்ளனே—யுள்ளத்தில்
இல்லனென்று லன்னவன்று னெங்கும் வியாபகத்தால்
நல்லனென்றுஞ் சொல்ல வழக்காம்.

இ - ள். வெள்ளம் குலாவு - கங்கை தங்கிய, சடை - சடாபாரத்தை யுடைய, வெள்ளக் கருணையினன் - கருணைசமுத்ரமாகிய இறைவன், கள்ளம் குலாவு - கபடம் பொருந்திய, வஞ்சக் கள்ளனேன் - வஞ்சனையுள்ள கள்வனேனது, உள்ளத்தில் - மனத்தில், இல்லன் என்றால் - இலனென்றால், அன்னவன்தான் - அவனே, எங்கும் - எவ்விடத்தும், வியாபகத்தான் அல்லன் என்றும்-வியாபித்தலையுடைய னல்லனென்றும், சொல்ல-சொல்லுதற்கு, வழக்கு ஆம் - ஒரு வழக்குளதாகும், எ - று.

இறைவன் என்மனத்திலிலனென்றால் அவனது சர்வ வியாபகத்துக் குப்பழுதுண்டாமென்பதாம்.

**29.** தத்துவப் பேயோடே தலையடித்துக் கொள்ளாமல்
வைத்தவருண் மௌன வள்ளலையே—நித்தமன்பு
பூணக் கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்பும்
காணத் துடிக்குமிரு கண்.

இ - ள். தத்துவப் பேயோடே - தத்துவங்களாகிய பேய்களுடன், தலையடித்துக்கொள்ளாமல் - தலைமோதிக்கொள்ளாத வண்ணம், அருள் வைத்த - அருள் புரிந்த, மௌன வள்ளலையே - மௌனோதாரனையே, நித்தம் - நாடோறும், அன்பு பூண - அன்பு செய்ய, நெஞ்சு கருதும் - என் மனம் நினைக்கும், போற்ற - அஞ்சலி பண்ண, கரம் எழும்பும்-கைகளுயரும், காண-சேவிக்க, இருகண் துடிக்கும் - இரு கண்களும் பதைக்கும்.

மௌனநிலையை யெனக் கறிவுறுத்தின இறைவனுக்கு அன்புசெய்ய என்மனம் விரும்பும், அஞ்சலிக்கக் கைகளுயரும்; காணக் கண்பதைக்கும் என்பதாம்.

**30.** தொல்லைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற நானொருவன்
எல்லையிலா நின்கருணை யெய்துவனோ—வல்லவனாம்
மோன குருவே முழுதினையுந் தானுணர்ந்த
ஞான குருவே நவில்.

இ - ள். தொல்லைவினைக்கு ஈடு ஆய்-பழவினைக் கிடுதிரையாய், சுழல்கின்ற நான் ஒருவன் - திரிகின்ற நானொருவனும், எல்லை இல்லா - அளவில்லாத, நின் கருணை - உன்கிருபையை, எய்துவனோ - அடைவனோ, வல்லவன் ஆம் - எல்லாம் வல்லவனாகிய, மோனகுருவே - மௌனாசாரியனே, முழுதினையும் தான் உணர்ந்த - எல்லாவற்றையுந் தானே யறிந்த, ஞான குருவே - ஞானத்தையுடைய ஆசாரியனே, நவில் - சொல்வாயாக.

இறைவனே, கர்மாநுகுணமாகச் சுழலாநின்ற நான் உன்கருணைக் குரிய னாவேனோ என்பதாம்.

**31.** மூன்றுகண்ணு முத்தொழிலா மும்முதலா மூவுலகும்
தோன்றக் கருணை பொழி தோன்றலே—யீன்றவன்னை
தன்னைப்போ லன்பு தழைத்தோ யொருதெய்வம்
உன்னைப்போ லுண்டோ வுரை.

இ - ள். மூன்று கண்ணு - முக்கண்ணனே, முத்தொழிலா - முத்தொழிலையுடையவனே, மும்முதலா - மும்முதலாயுள்ளவனே, மூவுலகும் தோன்ற-மூன்றுலகங்களு முண்டாகும்படி, கருணைபொழி-கருணைமழை பொழிகின்ற, தோன்றலே - பெரியோனே, ஈன்ற அன்னை தன்னைப் போல் - பெற்றதாய்போல, அன்பு தழைத்தோய் - அன்பு மிக்கோனே, உன்னைப்போல் ஒருதெய்வம் உண்டோ - உன்னைப்போல வொரு தெய்வ முளதோ, உரை - சொல்வாய், எ - று.

மூன்று கண்களாவன - சோம சூரியாக்கினிகள். முத்தொழில்களாவன - சிருட்டி, திதி, சங்காரங்கள். மும்முதல் என்றது மும்மூர்த்திகளை. இவர்கள் ஜகதுத்பத்திஸ்திதி லயங்களுக்கு முதல்வர்களாதலால் இவர்களுக்கு இப்பெயருண்டாயிற்று. மூவுலகு - ஸ்வர்க்க மத்திய பாதாளங்கள். இறைவனே, உன்னைப்போ லொரு தெய்வமுண்டோ என்பதாம்.

**32.** நேசிக்குஞ் சிந்தை நினைவுக்கு ளுன்னைவைத்துப்
பூசிக்குந் தானிறைந்து பூரணமா—யோசித்து
நின்றதல்லான் மோனு நிருவிகற்ப நிட்டைநிலை
என்றுவரு மோவறியே னே.

இ - ள். நேசிக்கும் - விசுவாசிக்கின்ற, சிந்தை - என்மனமானது, நினைவுக்குள் - எண்ணத்தில், உன்னை வைத்துப் பூசிக்கும் - உன்னை வைத்துப் பூசியா நிற்கும், தான் - தானே, நிறைந்து - நிறைவுற்று, பூரணமாய் யோசித்து நின்றது அல்லால் - நன்றாக ஆலோசித்து நின்றதே யன்றி, மோனு - மௌனகுருவே, நிருவிகற்ப நிட்டை நிலை-நிருவிகற்ப நிஷ்டை நிலையானது, என்று வருமோ - எப்பொழு துண்டாமோ, அறியேன் - உணர்ந்திலேன், எ - று.

இறைவனே, என்மனமானது உன்னைத் தன்னிடத்திருத்திப் பூசித்தலும், உன்னிலையைப் பற்றி யாலோசித்தலும் செய்வதன்றி, நிர்விகற்ப சமாதியை யடைந்ததில்லை யென்பதாம்.

**33.** அறிவி னறியாமை யற்றறிவாய் நின்று
பிறிவறவா னந்தமயம் பெற்றுக்—குறியவிழ்ந்தால்
அன்றைக் குடல்வேண்டே னையாவிவ் வாக்கையையே
என்றைக்கும் வேண்டுவனே யான்.

இ - ள். அறிவின் அறியாமை அற்று - அறிவோடறியாமை யற்று, அறிவாய் நின்று - அறிவுருவாய் நின்று, பிறிவு அற - நீக்கமற, ஆநந்த மயம் பெற்று - ஆநந்த வடிவமடைந்து, குறி அவிழ்ந்தால் - நினைவொடுங்கினால், அன்றைக்கு - அப்பொழுது, உடல் வேண்டேன் - சரீர மெடுத்தலை விரும்பேன், (அப்படியல்லாதவிடத்து) ஐயா - ஐயனே, என்றைக்கும் - எப்பொழுதும், இவ்வாக்கையையே - இந்தச் சரீரத்தையே, யான் வேண்டுவன் - நான்விரும்புவேன், எ - று.

இறைவனே, அறிவறியாமைகளற்று, அறிவுருவாகி நின்று, ஆநந்த ரூபமடைந்து, நினைவொடுங்கினால், அன்றைக்குச் சரீரத்தை விரும்பேன், அதுவரையும் சரீரம் வேண்டும் என்பதாம்.

**34.** உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல்
விடவிடவே நாடுவரோ மெய்யைப்—படபடென
வேண்டுவே னிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனான்
ஆண்டநீ தானே யறி.

இ - ள். உடலைப் பழித்து - உடம்பை நிந்தித்து, இங்கு - இவ்விடத்து, உணவும் கொடாமல் - உணவையுந் தராமல், மெய்யை விடவிடவே நாடுவரோ - உடம்பைவிட்டு நீங்குதற்கே விரும்புவார்களோ, (விரும்பார்கள் ஆதலால்) படபடென - விரைவாய், இந்த வுடல் - இந்த வுடம்பை, மெய் உணரா - உண்மையை யறியாத, பொய்யன் நான் - பொய்யனாகிய நான், வேண்டுவேன் - விரும்பா நின்றேன், ஆண்ட நீதானே அறி - (இதனை) என்னை யாண்டருளின நீதானே யறிவாயாக, எ - று.

அறிஞர்கள் இந்த வுடம்பைக்கொண்டு முத்தியடைய வேண்டுதலால் இதனை வருத்தார், நானும் அவ்வாறே, இவ்வெண்ணம் நீயறியாததன்று என்பதாம்.

**35.** அறியாயோ வென்னையுநீ யாண்டநீ சுத்த
வெறியாய் மயங்கவுமேன் விட்டாய்—நெறிமயங்கிக்
குன்றுஞ் செடியுங் குறுகுமோ வையாவே
கன்றுகெட்டாற் றாயருகே காண்.

இ - ள். நீ என்னையும் அறியாயோ - நீ யென்னையு மறிந்திலையோ, ஆண்ட நீ - என்னை யாண்டருளின நீ, சுத்த வெறியாய் - சுத்த வெறியனாகி, மயங்கவும் - நான் மயங்கும் வண்ணமாகவும், ஏன் விட்டாய் - ஏன் கைவிட்டாய், ஐயாவே - ஐயனே, கன்று கெட்டால் - கன்றுமறைந்தால், அருகே தாய் - அருகேயிருக்கிற தாய்ப்பசுவானது, நெறி மயங்கி - வழி பிசகி, குன்றும் - குன்றுகளையும், செடியும் - செடிகளையும், குறுகுமோ - அணுகுமோ, எ - று.

தாய்ப் பசுவானது தன் கன்று மறைந்தால் அதனையே தேடிக்கண்டு கொள்வதன்றிக் குன்றையுஞ் செடியையும் அணுகாது. அதுபோல, என் நிலைமையயறிந்த நீ, உன்னை நீங்கி மயங்கும்படி என்னை யேன் கைவிட்டாய் என்பதாம்.

**36.** ஏதுக் குடற்சுமைகொண் டேனிருந்தே னையனே
ஆதிக்க மோன வருட்டாயே—சோதியாம்
மன்ன நிருவிகற்ப வானந்த நிட்டையிலே
பின்னமற நில்லாத பின்.

இ - ள். ஐயனே - ஐயாவே, ஆதிக்கம் - மேன்மையையுடைய, மோனம் - மௌனநிலையைத் தருகின்ற, அருள் தாயே - கருணையுள்ள மாதாவே, சோதி ஆம் - தேஜோமயமாகிய, மன்னே - இறைவனே, நிருவிகற்பம் - நிர் விகல்பமாகிய, ஆனந்த நிஷ்டையிலே - சுகநிஷ்டையில், பின்னம் அற நில்லாதபின் - பிரிவற நில்லாதபோது, ஏதுக்கு - எதின் பொருட்டாக, உடல்சுமைகொண்டு - உடற்பாரந் தாங்கி, ஏன் இருந்தேன் - என்ன பயனையடைய இருந்தேன், எ - று.

ஐயனே, நிர்விகற்ப நிஷ்டையை யடையாமல், இவ்வுடற் சுமையை யென்ன பயனடையும்பொருட்டுச் சுமந்து திரியாநின்றேன் என்பதாம்.

**37.** பின்னு முடற்சுமையாப் பேசும் வழக்கதனால்
என்னபல னுற்றிருந்தோ மே—யன்னதனால்
ஆனந்தந் தானே தானாகு மெய்ம்மையனே
ஏனிந்தத் துன்ப மினி.

இ - ள். பின்னும் - மேலும், உடல் சுமை ஆ பேசும் வழக்கதனால் - உடம்பைச் சுமையாகப் பேசுகின்ற வழக்கத்தினால், என்ன பலன் - என்ன பயனை, நாம் உற்றிருந்தோம் - நாமடைந்திருந்தோம், அன்னதனால் - அத்தன்மைத்தாகிய வுடலினால், ஆனந்தம் - சுகமானது, தானே தான் ஆகும் - தானேதான் உண்டாகும், மெய்ம்மையனே - உண்மையாளனே, இனி இந்தத் துன்பம் ஏன் - இனி யிந்தத் துக்கம் யாதுக்கு, எ - று.

உடம்பை நிந்திப்பதில் பயனில்லை, இவ்வுடம்பே முத்திக்குச் சாதனமாம் என்பது கருத்து.

**38** துன்பக் கடலிற் றுளைந்த தெல்லாந் தீர்ந்ததே
இன்பக் கடலி லிருமென்ன—வன்பிற்
கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்துவரு மானந் தமே.

இ - ள். துன்பக்கடலில் - துக்கசாகரத்தில், துளைந்தது எல்லாம் தீர்ந்தது - அழுந்தின துக்கமெல்லாந் தீர்ந்தது, இன்பக்கடலில் - சுகசாகர

த்தில், இரும் என்ன - இருங்கோளென்று உலகினர்க்கு அறிவுறுத்தி, அன்பின் - அன்பினால், கரைந்து கரைந்து உருகி - சரீரம் மிக வாடி மனங்கசிந்து, கண்ணருவி காட்ட - கண்ணருவி காட்டின், ஆநந்தம் - இன்பமானது, விரைந்து வரும் - விரைவி லுண்டாகும், எ - று.

துக்கம் நீங்கிற்று. இனிச் சுகமா யிருங்கோளென்று உலகத்தார்க்குப் போதித்துத் தானும் அன்பினால் மனங்கரைந்து கண்ணீரை அருவி யாறுபோலக் காட்டினால், ஆநந்த மேலீடு விரைவி லுண்டா மென்பதாம்.

**39.** கரைந்துக ரைந்துருகிக் கண்ணீரா றாக
விரைந்தே நிருவிகற்ப மெய்த—நிரந்தரமும்
நின்னையே சிந்திக்க நீகொடுத்தாய் மோனாநான்
என்னைமுழு துங்கொடுத்தேனே.

இ - ள். கரைந்து கரைந்து - உடல் மிக மெலிந்து, உருகி - மன நெகிழ்ந்து, கண்ணீர் ஆறு ஆக - கண்ணீர் ஆறுபோலப் பெருகவும், விரைந்து - விரைவாய், நிருவிகற்பம் எய்த - நிர்விகல்ப நிஷ்டையை யுடையவும், நிரந்தரமும்-சதாகாலமும், நின்னையே சிந்திக்க - உன்னையே சிந்திக்கவும், நீகொடுத்தாய் - நீ தயை செய்தாய், மோனா - மௌநாசாரியனே, நான் என்னை முழுதும் கொடுத்தேன் - நான் என்னை முற்றுங் கொடுத்தேன், எ - று.

என்னை முழுதுங் கொடுத்தேன் என்றது சீவபோத மிழந்து சிவ போதமாய் நிற்றலை. நிருவிகற்ப நிஷ்டையை யடையவும் உன்னையே நினைக்கவும் என்னுட லுயிர்களைக் கொடுத்தருளினை, அதற்குப் பிரதியாக என்னை யுனக்குக் கொடுத்தேன் என்பதாம்.

**40.** அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தால்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே—பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய் சந்ததமு நீயிறந்த
எய்ப்பிலே யானந்தமே.

இ - ள். அல்லும் பகலும் - இரவும் பகலும், பேரன்புடனே தானிருந்தால் - பேரன்புடனிருந்தால், கல்லும் உருகாதோ - கல்லும் உருகிப் போகாதா, கல் நெஞ்சே - கல் மனமே, பொல்லாத - தீமையான, தப்பு வழி - தப்பு வழியை, ஏன் நினைந்தாய் - ஏன் நினைந்தனை, சந்ததமும்-சதா காலமும், நீஇறந்த எய்ப்பிலே - நீயிறந்த வொடுக்க நிலையிற்றானே, ஆனந்தம் - சுகமுண்டு, எ - று.

மனமே, அல்லும் பகலும் பேரன்போ டிருப்பின், கல்லுங் கரையும், அதைவிட்டுத் தீநெறியையேன் நினைந்தாய், நீ யிறந்து நின்ற ஒடுக்க நிலை யிற்றானே ஆநந்த மோங்கும் என்பதாம்.

**41.** கொடுத்தேனே யென்னைக் கொடுத்தவுட னின்பம்
மடுத்தேனே நீடூழி வாழ்ந்தே—யடுத்தேனே
பெற்றேனே பெற்றுப் பிழைத்தேனே சன்மவல்லல்
இற்றேனே யேழை யடியேன்.

இ - ள். ஏழை அடியேன் - அறிவிலியாகிய அடியனேன், கொடுத்தேன் என்னை - என்னைக்கொடுத்தேன், கொடுத்தவுடன் - கொடுத்தவுடனே, இன்பம் மடுத்தேன் - இன்பத்தைப் பொருந்தினேன், நீடூழி வாழ்ந்து அடுத்தேன் - பல்லூழிக்காலம் வாழ்ந் தடுத்தேன், பெற்றேன் - பெறவேண்டியதைப் பெற்றேன், பெற்றுப் பிழைத்தேன் - பெற்று உஜ்ஜீவித்தேன், சன்ம அல்லல் இற்றேன் - பிறவித்துன்ப மற்றொழிந்தேன், எ - று.

ஏழையடியேன், என்னை யுனக்குக் கொடுத்தவுடன், பிறவித்துன்பமொழிந்தேன் என்பதாம்.

**42.** பெற்றோம் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றோ மெனவுரைக்கக் காரியமென்—சற்றேனும்
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி யேசற்று
வாக்கற்றாற் பேசுமோ வாய்.

இ - ள். பிறவாமை பெற்றோம் - பிறவாமையாகிய பெரும்பேற்றை யடைந்தோம், பேசாமையா யிருக்கக் கற்றோம் - மௌனமாயிருக்கக் கற்றனம், என வுரைக்க - என்று சொல்ல, காரியம் என் - காரியமென்ன, சற்றேனும் - சிறிதாயினும், நீக்கற்ற - பிரிவற்ற, இன்பநிலை பொருந்தி - சுகநிலையையடைந்து, ஏசற்று - பழியற்று, வாக்கு அற்றால்-வார்த்தைக்கு மூல மற்றுப்போனால், வாய் பேசுமோ-வாயானது தானே பேசுமா, எ-று.

வார்த்தைக்கு மூலம் மனம். பிறவாமையை யடைந்தோம் மௌனமாயிருக்கக்கற்றோ மென்பதில் என்னபயன். ஆநந்த நிலையையடைந்து அதிலழுந்திவிட்டால், வாய்பேசுமோ என்பதாம். "அரிந்ததலை வாயடங்கு மவ்வளவே யன்றித் - தெரிந்திடுமோநீயே தெளி." என்றார் பிறரும்.

**43.** காலன் றனையுதைத்தான் காமன் றனையெரித்தான்
பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை—ஞாலமெச்சப்
பின்னே நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்
கென்னே நடக்கை யினி.

இ-ள். ஞாலம் மெச்ச-உலகத்தார் புகழாநிற்க, காலன் தனை உதைத்தான் - யமனை யுதைத்தவனும், காமன்தனை எரித்தான் - மன்மதனையெரித்தவனும், பாலன் பசிக்கு இரங்கி-பாலகனுடைய பசிக்கிரக்கமுற்று, பால் கடலை - க்ஷீர சாகரத்தை, பின்னே நடக்கவிட்டான் - பின்னே செல்லவிட்டவனுமாகிய இறைவனது, பேர் அருளை நாடாதார்க்கு - பெரி

தாகிய அருளை விரும்பாதவர்க்கு, இனி என் நடக்கை - வேறென்ன நல்லொழுக்கமுளது, எ - று.

பாலன் என்றது உபமந்யுவை. இவர் கௌதமரிஷிக்குப் புதல்வர். "பாலகனார்க்கன்று பாற்கடலீந்திட்ட கோலச்சடையர்க்கே யுந்தீபற" என்றார் மேலோரும்.

**44.** விண்ணருவி மேன்மேல் விளங்குவபோ லேயிரண்டு
கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித் — தண்ணமிர்த
வெள்ளமே யானந்த வெற்பே யெனத்தொழுவோர்
உள்ளமே ஞான வொளி.

இ - ள். விண் அருவி மேல் மேல் விளங்குவபோலே - ஆகாயப் பெருக்கு மேன்மேல் விளங்குவன போல, இரண்டு கண் அருவி வெள்ளமொடு - இரண்டு கண்களில் அருவிப்பெருக்குடன், கை கூப்பி - கைகுவித்து, தண் அமிர்த வெள்ளமே - தண்ணிய அமுதப்பெருக்கே, ஆநந்த வெற்பே - ஆநந்தமலையே, என - என்று வாக்கினாற்சொல்லி, தொழுவோர் - காயத்தால்வணங்குவோர்களுடைய, உள்ளமே - மனமே, ஞான ஒளி - ஞானச் சுடராம், எ - று.

மழைத்தாரைபோலக் கண்ணீர்த்தாரை யொழுகக் கைகூப்பி நின்று, அமிர்தப்ரவாஹமே, ஆநந்த மலையே என்று இறைவனை வணங்குவோர்களுடைய மனமே ஞானச்சுடராம் என்பது கருத்து.

**45.** பிள்ளைமதிச் செஞ்சடையான் பேசாப் பெருமையினான்
கள்ளவிழும் பூங்கொன் றைக் கண்ணியா — னுள்ளபடி
கல்லாலின் கீழிருந்து கற்பித்தா னோர்வசனம்
எல்லாரு மீடேறவே.

இ - ள். பிள்ளை மதி - பாலசந்திரனை யணிந்த, செஞ்சடையான் - செஞ்சடையையுடையவன் எவன், பேசா பெருமையினான் - புகழ்ந்து பேசுதற்கரிய பெருமையையுடையவன் எவன், கள் அவிழும் - தேனோடு மலர்கின்ற, கொன்றைப்பூ கண்ணியான் - கொன்றைமலர் மாலையைத் தரித்தவன் எவன்; (அவன்) எல்லாரும் ஈடேறவே - யாவரும் கடைத்தேறும் பொருட்டாகவே, கல்லாலின் கீழ் இருந்து - கல்லாலி னிழலி லெழுந்தருளியிருந்து, உள்ளபடி - யதார்த்தமாக, ஓர் வசனம் கற்பித்தான் - ஒரு மொழியைக் கற்பித்தருளினான், எ - று.

சந்தரசேகரன், கல்லாலின்கீழ் தக்ஷிணாமூர்த்தியா யெழுந்தருளியிருந்து, யாவரு மீடேறும்படி ஒரு மொழியைச் சொல்லாமற் சொல்லியருளினான் என்பதாம். சொல்லாமற் சொன்னமை 'பேசாப்பெருமையினான்' என்பதனாற் பெறப்பட்டது.

**46.** புலனைந்துந் தாமே பொரமயங்கிச் சிந்தை
அலமந் துழலு மடிமை—நலமிகுந்த
சித்தான மோன சிவனே நின் சேவடிக்கே
பித்தானா லுண்டோ பிறப்பு.

இ - ள். புலன் ஐந்தும் - சப்தாதி விடயங்களைந்தும், தாமே பொர - தாமேவந்து தாக்குதலால், சிந்தைமயங்கி - மனமயங்கி, அலமந்து உழலும் - மிகவும் சுழலப்பெற்ற, அடிமை - அடியேன், நலம்மிகுந்த - நன்மை மிகுந்த, சித்து ஆன - ஞானமயமான, மோன சிவனே - மௌனநிலையையுணர்த்துகின்ற சிவனே, நின் சேவடிக்கே - உன் திருவடிக்கே, பித்து ஆனால் - பித்தேறப்பெற்றால், பிறப்பு உண்டோ - பிறவியுண்டோ, எ - று.

இறைவனே, உன் திருவடிக்கே பித்தானால், பிறகு எனக்குப் பிறவி யுண்டோ வென்பதாம்.

**47.** நிறைகுடந்தா நீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்—பிறையணிந்த
மிக்ககை லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு.

இ - ள். நிறைகுடம் - நிறைகுடமானது, நீர் கொளுமோ - நீரைக் கொள்ளுமோ, நிச்சயம் ஆம் - உறுதியாகிய, மோனமுறை உணர்ந்தார் - மௌனநிலையின் முறைமையை அறிந்தவர்கள், யாதை முயல்வார் - எதை முயல்வார்கள், பிறை அணிந்த - பிறையைத் தரித்த, மிக்க - மேலான, கைலாயமலை - கைலாயமலையின்கண் எழுந்தருளி யிருக்கின்ற, வித்தகனே - ஞானநிறைவுள்ளவனே, வேதியனே - வேத ப்ரதிபாத்யனே, செக்கர் அணி மேனியனே - செம்மைநிறமுள்ள திருமேனியை யுடையானே, செப்பு - சொல்லு, எ - று.

சந்திரசேகரனாகிய கைலாசபதியே ! நிறைகுடம் நீர் கொள்ளாதது போல, க்ருதக்ருத்யராயிருப்பவர் வேறொன்றை முயலார் என்பதாம்.

**48.** துங்கமழு மானுடையாய் சூலப் படையுடையாய்
திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய்—மங்கையொரு
பாலுடையாய் செங்கட் பணியாயென் சென்னியின்மேல்
காலுடையாய் நீயே கதி.

இ - ள். துங்கம் - பரிசுத்தமான, மழுமான் உடையாய் - மழுவையும் மானையும் உடையவனே, சூலப்படை உடையாய் - சூலாயுதத்தை யுடையவனே, திங்கள் அணி - சந்திரகண்டத்தை யணிந்த, செஞ்சடையாய் - செஞ்சடையை யுடையானே, சே உடையாய் இடபவாகனத்தை யுடைய

வனே, மங்கை - உமாதேவியை, ஒருபால் உடையாய் - ஒரு பாகத்தில் உடையானே, செங்கண் பணியாய் - சிவந்த கண்களையுடைய சர்ப்பாபரணத்தையுடையவனே, என் சென்னியின்மேல் - என் சிரசின்மீது வைத்தருளிய, கால் உடையாய் - திருவடியையுடையவனே, நீயே கதி - நீயே புகலிடம், எ - று.

மழுமான் முதலியவற்றை யுடையானே, நீயே அடியேனுக்குப் புகலிடம் என்பது கருத்து.

**49.** இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி—தனிமுதல்வன்
நித்தன் பரம னிமலனிறை வாய்நிறைந்த
சுத்தனமக் கென்றுந் துணை.

இ - ள். இனிய - இனிதான, கருணை முகில் - கருணை மழையைப் பொழிகின்ற மேகம், எம்பிரான் - எம்பெருமான், முக்கண் கனி - மூன்று கண்ணுள்ள கனி, அமிர்தவாரி - அமுதசாகரம், இன்பக்கட்டி - இன்பத்தைத் தருகின்ற கருப்புக்கட்டி, தனிமுதல்வன் - ஒப்பற்ற முதல்வன், நித்தன் - சாசுவதன், பரமன் - மேலானவன், நிமலன் - நிர்மலன், நிறைவாய் நிறைந்த - பூர்ணமாக நிறைந்த, சுத்தன் - பரிசுத்தன், (இத்தன்மைகளையுடைய இறைவனே) நமக்கு - எங்களுக்கு, என்றும் துணை - எக்காலுந் துணையாகக் கடவான், எ - று.

கருணாவர்ஷம் பொழியு முக்கட்பிரானே நமக்கு எக்காலத்துந் துணையா யிருப்பவன் என்பதாம்.

**50.** நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து
போதியா வுண்மையெலாம் போதித்தா—னேதில்
சனகாதி யாய தவத்தோர்க்கு ஞான
தினகரனு மௌன சிவன்.

இ - ள். ஞான தினகரன் ஆம் - ஞான சூரியனாகிய, மௌனசிவன் - மௌனநிலையையுணர்த்துஞ் சிவபிரான், நீதியாய் - நீதியை யுடையவனாகி, கல்லாலின் - கல்லாலமரத்தின், நீழலின் கீழேயிருந்து - நிழலிலெழுந்தருளியிருந்து, ஏதம் இல் - குற்றமில்லாத, சனகாதி ஆய தவத்தோர்க்கு - சநகாதிகளாகிய தபோதனர்கட்கு, போதியா - போதிக்கக்கூடாத, உண்மையெல்லாம் - யதார்த்தங்களை யெல்லாம், போதித்தான் - போதித்தருளினான், எ - று.

எதயில் என்பது எதில் என நின்றது.

ஞானசூரியனாகிய சிவபெருமான் கல்லாலி னிழலிலிருந்து சநகாதியராகிய பெருந்தவத்தினர்க்கு, போதியாத வுண்மைப்பொருள்களை யெல்லாம் போதித்தருளினான் என்பதாம்.

**51.** தேகச் செயறானுஞ் சிந்தையுடனே குழையில்
யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ—மோகநிலை
அல்லலிலே வாழ்வாரோ வப்பனே நீயற்ற
எல்லையிலே சும்மா விரு.

இ - ள். தேகச்செயல்தானும் - சரீரச் செய்கையும், சிந்தையுடனே குழையில் - மனத்தோடொழிந்தால், யோகநிலை - யோகநிலையானது, ஞானிகளுக்கு ஒப்புவதோ - ஞானிகளுக்கு ஒத்திருப்பதோ, (அவர்கள்) மோகநிலை - மோகநிலையாகிய, அல்லலிலே - துன்பத்தில், வாழ்வாரோ - வாழ்ந்திருப்பாரோ, அப்பனே - அப்பா, நீ அற்ற எல்லையிலே - நீயென்பதற்ற இடத்தில், சும்மா இரு - சும்மாவிருக்கக்கடவாய், எ - று.

மனமே, ஞானியர்க்கு யோகநிலை ஒவ்வுமோ, ஒவ்வாது ஆதலால், நீயிறந்த வெல்லையிலே சும்மாவிருக்கக்கடவை யென்பதாம்.

**52.** சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி யேனடா—தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ.

இ - ள். கன்ம நிட்டா - கர்மநிஷ்டையையுடையவனே, சிறுபிள்ளாய் - சிறுவனே, நீ - நீ, சும்மா இருக்க - சும்மாவிருக்கின், சுகம் உதயம் ஆகுமே - சுகோதயமுண்டாகுமே, இம் மாயாயோகம் இனி யேன் அடா - இந்த மாயாகாரியமாகிய யோக மேதுக்கேடா, தம் அறிவின் சுட்டாலே ஆகுமோ - தம்முடைய அறிவின் சுட்டுதலாலே சுகோதயமுண்டாகுமோ, சொல்லவேண்டாம் - அதைக்குறித்து வற்புறுத்திச் சொல்ல வேண்டிற்றிலேம், எ - று.

கர்மநிஷ்டனாகிய சிறுபிள்ளாய், அறிவினாற் சுட்டாது சும்மாவிருக்கின் சுகோதயமாமே, ஏன் சுட்டிநின் றலைகிறாயென்பதாம்.

**53.** நீயற்ற வந்நிலையே நிட்டையதி னீயிலையோ
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா,

இ - ள். நீ அற்ற - நீயிறந்த, அந்நிலையே - அந்நிலையே, நிட்டை - நிஷ்டை, அதில் - அதில், நீயிலையோ - நீயில்லையோ, வாய் அற்றவனே - வாயில்லாதவனே, மயங்காதே - மயங்கவேண்டாம், போய் அற்று இருந்தாலும் - சென்றற்றிருப்பினும், நீ போகாய் - நீ போகமாட்டாய், என்றும் உள்ளாய் - என்றும் உளை, சும்மா வருந்தாதே - சும்மா வருத்தப்படாதே, இன்பன் உண்டு - சுகம் உண்டு, வா - வருவாயாக, எ - று.

வாயற்றவன் - மௌனநிலையுள்ளவன். நீயிறந்து நின்ற நிலையே நிஷ்டை. அதில் நீயுண்டு, வருந்தாதிரு, நமக்கின்பமுண்டு, வருவாயாக என்பதாம்.

**54.** வாவாவென் றின்பம் வரவழைக்குங் கண்ணீரோ
டாவாவென் றேயழுத வப்பனே—நீவாடா
எல்லா நமக்கெனவே யீந்தனையே யீந்தபடி
நில்லா யதுவே நிலை.

இ - ள். வாவாவென்று - வாவாவென்று, இன்பம் வரவழைக்கும் - சுகத்தை வருவிக்கின்ற, கண்ணீரோடு - கண்ணீருடன், ஆவா என்று அழுத - ஐயோவென்றழுத, அப்பனே - அப்பா, நீ வாடா-நீ வருவாயேடா, எல்லாம் - யாவும், நமக்கு எனவே ஈந்தனையே - நமக்கென்றே கொடுத்துவிட்டாயே, ஈந்தபடி - கொடுத்தபடி, நில்லாய் - நிற்பாயாக, அதுவே நிலை - அதுவே யுனக்குறுதியான நிலை, எ - று.

இன்பத்தை யுண்டாக்குங் கண்ணீரோடு நின்று ஆவாவென்றழுத அப்பனே, நீ வாடா, எல்லாப்பொருள்களையும் நமக்கென்றே கொடுத்தனை யன்றே, கொடுத்தபடியே அந்நிலையிற்றானே நிற்பாயாக என்பதாம்.

**55.** நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்
சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே—கல்லாத
சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால்
வந்தவழி நல்ல வழி.

இ - ள். நில்லாப்பொருளை நினையாதே-நிலையில்லனவாகிய பொருள்களை நினைக்காதே, நின்னை உள்ளோர்-உன்னை யுள்ளிட்டோர், சொல்லா - சொல்லத்தகாத, பொருள் திரளை சொல்லாதே - பொருட் டொகுதியைச் சொல்லாதே, கல்லாத சிந்தை குழைந்து - உருதிப்பொருளைக் கல்லாத மனமானது உருகப்பெற்று, சுகம்சேர - சுகத்தையடைய, குரு அருளால்- அருளிறையின் கருணையால், வந்தவழி - வந்தநெறியே, நல்வழி - நல்ல நெறியாகும், எ - று.

நிலையில்லாத பொருளை நினையாதே, உன்போலியர் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லாதே, மனமுருகி, இன்பத்தை யடையும்படி, குருவருளால் உண்டாகிய வழியே நல்லவழி யென்பதாம்.

**56.** வழியிதென் று மல்லா வழியிதென் றுஞ் சொல்லில்
பழிபழியா நல்லருளாற் பார்த்தோர்—மொழியுனக்கே
ஏற்றிருக்கச் சொன்னவன்றே யெங்கும் பெருவெளியாம்
பார்த்தவிட மெல்லாநீ பார்.

இ - ள். வழி இது என்றும் - இது நன்னெறியென்றும், அல்லா வழி இது என்றும் - இது தீநெறியென்றும், சொல்லின் - சொன்னால், பழி பழியாம் - பழித்தற்குரிய பழியாகும், நல் அருளால் பார்த்து - மேன்மையான கருணையால் நோக்கி, ஓர்மொழி - ஒருமொழியை, உனக்கு ஏற்றிருக்க - உனக்குப் பொருத்தமாயிருக்க, சொன்ன அன்றே - சொன்ன அன்றைக்கே, எங்கும் பெருவெளி ஆம் - எவ்விடத்தும் பெருவெளியாகும், பார்த்த இடம் எல்லாம் - முன்னே நீ பார்த்த இடங்களையெல்லாம், நீபார் - இப்போது நீ பார், எ - று.

உன்னைக் கிருபையால் நோக்கி ஒருமொழியைச் சொன்னபோதே எங்கும் பெருவெளியாகும், ஆதலால் நல்வழியிது தீயவழியிது எனல் தகுதியன்று என்பதாம்.

**57.** பாரனைத்தும்பொய்யெனவேபட்டினத்துப்பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கையரிதரிது—நேரே
மனத்துறவு மப்படியே மாணு விவற்றில்
உனக்கிசைந்த வாறொன்றே யோர்.

இ - ள். பார் அனைத்தும் - பிரபஞ்சமெல்லாம், பொய்யெனவே - மித்தையென்றே, பட்டினத்துப் பிள்ளையைப்போல் - பட்டணத்தடிகள் போல, ஆரும் - எவரும், துறக்கை - துறத்தல், அரிது அரிது - அருமை அருமை, நேரே - நேராக, மனத்துறவும் அப்படியே - அகத்துறவு மப்படியே, மாணு - மாணவகனே, இவற்றில் - இவற்றுள், உனக்கு இசைந்த ஆறு ஒன்றே - உனக்கிசைந்தவாறொன்றனையே, ஓர் - ஆராய்ந்து கைக்கொள்வாயாக, எ - று.

பட்டணத்துப்பிள்ளை அகத்துறவு புறத்துறவு என்னும் இரண்டினுஞ் சிறந்தவர், அவ்விரண்டனுள் உனக்கிசைந்ததாகிய ஒன்றனையே கைக்கொள்வாயாக என்பதாம். ஒன்று கைகூடின் மற்றொன்றும் கைகூடும் என்றதாயிற்று.

**58.** ஓராம லேயொருகா லுன்னாம லுள்ளொளியைப்
பாராம லுள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளம்
தத்திக் கரைபுரண்டு தான்.

இ - ள். ஓராமல் - ஆராயாமலும், ஒருகால் உன்னாமல் - ஒருகால் நினையாமலும், உள் ஒளியை - உள்ளொளியினை, பாராமல் - நோக்காமலும், உள்ளபடி பார்த்திருந்தால் - யதார்த்தமாக நோக்கிக்கொண்டிருந்தால், ஆநந்தவெள்ளம் - இன்பப்பெருக்கானது, தத்தி - தாவி, கரைபுரண்டு - கரைகடந்து, எழுந்து - மேலெழுந்து, பத்துத்திசையும்பரந்து - பத்துத் திக்கினும் பரவி, வாராதோ - வாராதோ, எ - று.

ஒன்றனை யாராய்தல் முதலியவற்றைச் செய்யாது சும்மா விருந்தால் ஆநந்தம் தானே யுண்டாகும் என்பதாம்.

**59.** தானான தன்மைவந்து தாக்கினா லவ்விடத்தே
வானாதி மாயை வழங்காவோ—ஞானாகேள்
உன்னுள்ளே தோன்றா வுறவாகி நின்றதென
என்னுள்ளே யென்று மிரு.

இ - ள். தான் ஆன தன்மை வந்து தாக்கினால் - தானாகிய தன்மை வந்து பொருந்தினால், அவ்விடத்தே - அவ்விடத்திற்றானே, வானாதி மாயை-ஆகாசமுதலிய மாயாகாரியங்கள், வழங்காவோ-நடையாடாவோ, ஞானா - ஞானவானே, கேள்-கேட்பாய், உன்னுள்ளே - உனக்குள்ளே, தோன்றா உறவு ஆகி நின்றது என - தோன்றா வுறவாய் நின்றதுபோல, என்னுள்ளே - எனக்குள்ளே, என்றும் இரு - என்றும் சும்மா இருப்பாயாக, எ - று.

தான் என்னும் அகங்காரம் தலையெடுத்தால், பிருதிவியாதி மாயா காரியங்கள் நடையாடும் ஆதலால் உன்னுள்ளே நானடங்கி யிருந்தது போல, என்னுள்ளே நீயடங்கியிரு என்பதாம்.

**60.** என்னையுன்னை யின்னதிது வென்னாம னிற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தி—லன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே
உள்ளத்தி னுள்ளே யுணர்.

இ - ள். ஐயனே - ஐயா, என்னை உன்னை - என்னையும் உன்னையும், இன்னது இது என்னாமல் - இன்ன திதுவென்று சுட்டாமல், நிற்கும் நிலை தன்னை - நிற்கும் நிலையை, அருள் என்ற தருணத்தில் - அருள்செய்ய வேண்டுமென்ற சமயத்தில், அன்னை-தாயானவள், பெற்ற பிள்ளைக்கும் -

தான்பெற்ற பிள்ளைக்கும், சொல்லாத - சொல்லக்கூடாத, பெற்றி - தன் மையை, உள்ளத்தினுள்ளே - மனத்துக்குள்ளே, உணர் - அறிவாயாக.

என்னையும் உன்னையும் வேறுபடுத்துணராமல் நிற்கும் நிலையை யருள் செய்ய வேண்டுமென்ற சமயத்தில், உண்டாகிய இன்பம், தாயானவள் தான் பெற்றபிள்ளைக்கும் சொல்லப்படாத தன்மைத் தென்பதாம்.

**61.** சொன்னவர்தா நிட்டை தொகுத்திரார் நிட்டையிலே
மன்னினவர் போதியார் மாமௌனன் —றன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்க வடநீழல்
இருப்பா னிருவிகற்பத் தே.

இ - ள். சொன்னவர்தாம் - பேசினவர்கள்தாம், நிட்டை தொகுத்து இரார் - நிட்டையில் தொகுக்கப்பட் டிருக்கமாட்டார்கள், நிட்டையிலே மன்னினவர் - நிஷ்டையில் படிந்தவர்கள், போதியார் - போதிக்கமாட் டார்கள், மா - பெரிய, மௌனன் - மௌனநிலையை யுணர்த்து மிறைவன், தன்னுள் விருப்பாக - தன்னுள்ளன்பு காரணமாக, கைகாட்டி-கைகாட்டா நின்று, மிக்க வடநீழல் - மேலான கல்லாலின் நீழலில், நிருவிகற்பத்தே யிருப்பான் - நிருவிகற்ப சமாதியி லிருப்பன், எ - று.

பேசுவோர் நிஷ்டையில் நிலையார், நிஷ்டாபரர்பேசார், இதற்குச் சாக்ஷியாக,மஹாமௌனதேசிகன் அடுத்தார்மேல்விருப்பத்தோடு கைகாட்டி வடநிழலி லிருக்கின்றான் என்பதாம்.

**62.** இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேறாய் செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடலல்லால்
ஆடுவதே னாட்டு மவன்.

இ - ள். இந்த நிருவிகற்பத்து - இந்த நிருவிகற்ப சமாதியில், எந்தை நிட்டை இருக்க - எமது தந்தை நிஷ்டைகூடியிருக்க, நீ சிந்தை தேறாய்- நீ மனந்தெளியாய், செகம் அனைத்தும் - பிரபஞ்சமெல்லாம், வந்த - உண் டாண, தொடர்ப்பாடு - சம்பந்தமானது, கெடஅன்றோ - நசித்தற்பொருட் டல்லவோ, ஓர் பாத்திரத்துக்கு ஆடல் - ஒரு பாத்திரத்துக்காடுதல், அல் லால் - அல்லாக்கால், ஆடுவது ஏன் - ஆடுவது யாதுக்கு, அவன் ஆட்டும்- அவனாட்டுகிறான், எ - று.

**63.** அவனே பரமு மவனே குருவும்
அவனே யகில மனைத்து—மவனே தாம்
ஆனவரே சொன்னா லவரே குருவெனக்கு
நானவனாய் நிற்பதெந்த நாள்.

இ - ள். அவனே பரமும் - பரமு மவனே, குருவும் அவனே - ஆசாரியனும் அவனே, அகிலம் அனைத்தும் அவனே - பிரபஞ்சமெல்லாம் அவனே, அவனே தாம் ஆனவரே - அவனே தாமானவர்களே, சொன்னால் - சொல்லுமிடத்து, அவரே - அவர்களே, எனக்கு குரு - எனக்கு ஆசாரியர், நான் அவன் ஆய் நிற்பது - நான் அவனாகி நிற்குங்காலம், எந்த நாள் - எந்தக்காலம், எ - று.

**64.** நாளவங்கள் போகாம னாடோறு நந்தமையே
ஆளவந்தார் தாளின்கீ ழாட்புகுந்தாய்—மீளவுன்னைக்
காட்டாம னிற்குங் கருத்தறிந்தா னெஞ்சேயுன்
ஆட்டானே யையமில்லை யால்.

இ - ள். நாள் அவங்கள் போகாமல் - நாட்கள் வீண் காரியங்களிற் கழியாமல், நாள்தோறும் - தினந்தோறும், நம் தமையே - நம்மையே, ஆளவந்தார் - ஆளவந்த அருளிறைவனது, தாளின்கீழ் - திருவடியின்கீழ், ஆட்புகுந்தாய் - அடிமைபுகுந்தனை, மீள - மறுபடியும், உன்னைக் காட்டாமல் நிற்கும் கருத்து அறிந்தால் - உன்னைத் தோற்றுவியாமல் நிற்குங் கருத்தையறிந்தனையாயின், நெஞ்சே - மனமே, நான் உன் ஆள்தான் - நான் உன்னடிமைதான், ஐயம் இல்லை - சந்தேகமில்லை, எ - று.

மனமே, நமது வாணாள் வீணாளாய்க் கழியாமல் நம்மை யாட்கொள வந்த அருளிறைவன் திருவடிக்கீழ் அடிமை புகுந்தாய், இனி உன்னைக் காட்டாமல் நிற்குங் கருத்தையும் அறிவையாயின், நான் உன்னடிமையே இதிற் சந்தேகமில்லை யென்பதாம்.

**65.** யான்றா னெனலறலே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ—தோன்றி
இழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய்.

இ - ள். யான்தான் எனல் அறலே - யான்தான் என்பது அற்றொழிகையே, இன்பநிட்டை என்று - சுகநிஷ்டையென்று, அருணைக்கோன்தான் உரைத்தமொழி - அருணகிரிநாதன் சொன்ன சொல்லை, கொள்ளாயோ - உட்கொள்ளாயோ, தோன்றி - உண்டாகி, நெஞ்சே - மனமே, என் கலைகள் சோர - என் கலைகள் சோரும்படி, அழுக்கடிக்கும் - அழுக்கொழிக்க அடிக்கின்ற, வண்ணார்போலாய் - வண்ணாரையொத்து, நீ இழுக்கடித்தாய் - நீ என்னை யிழுக்கடித்தனை, எ - று.

மனமே யான்தானென்ப தற்றிருத்தலே சுகநிஷ்டை யென்று அருணகிரிநாதர் அருளிச்செய்த மொழியைக் கொள்ளாயோ, வண்ணார்

போன்று என் கலைகள் சோர இழுக்கடித்தாய் என்பதாம். கலை - ஆடை, நூலறிவு.

**66.** எங்குஞ் சிவமே யிரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே—யங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம்.

இ - ள். இரண்டு அற்று நிற்கின் - இரண்டற்று நின்றால், எங்கும் சிவமே - எவ்விடத்துஞ் சிவசொரூபமே, நெஞ்சே - மனமே, சுகம் தங்கும் - இன்பந்தங்கும், நீ சலியாதே - நீ சலிக்காதே, அங்கு இங்கு என்று எண்ணாதே - அவ்விடத்துள்ளது இவ்விடத் தில்லையென்று நினையாதே, பாழில் - வீணாக, இறந்து பிறந்து - இறந்தும் பிறந்தும், உழலப்பண்ணாதே - உழலச்செய்யாதே, யான் உன்பரம் - நான் உன்னடைக்கலம், எ-று.

மனமே, எவ்விடத்தினும் வியாபித்து நிற்பது சிவசொரூபமே, நமக்குச்சுகம் வாய்க்கும், நீ சலிக்கவேண்டாம், அங்குண்டு இங்கில்லையென்று நினைக்காதே, இறந்தும் பிறந்தும் உழலும்படிப் பண்ணவேண்டாம், நான் உன் அடைக்கலம் என்பதாம்.

**67.** மெய்யைப்பொய்யென் றிடவுமெய்யணையாப்பொய்நெஞ்சே
பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ—ஐயமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லானந்தம்
என்மயமு நின்மயமு மே.

இ - ள். மெய்யை பொய்யென்றிடவும் - சரீரத்தைப் பொய்யென்று நான் சொல்லவும், மெய் அணையா - மெய்யைப் பொருந்தாத, பொய் நெஞ்சே - பொய் மனமே, பொய்யைத்தான் - பொய்யைத்தானே, மெய்யெனவும் போகுமோ - மெய்யென்று சொல்லவுந் தகுமோ, ஐயம் அற - சந்தேகமில்லாமல், தன்மயத்தை - தன்மயப்பொருளை, மெய்யெனவே சார்ந்தனையேல் - மெய்யென்றே யடைவாயானால், என்மயமும் நின்மயமுமே - என்னுருவும் உன்னுருவுமே, ஆனந்தம் - சுகரூபமாம், எ-று.

மனமே, மெய்யைப் பொய்யென்றும் பொய்யை மெய்யென்றும் சொல்லத் தகுமோ, சந்தேகம் ஒழியும் வண்ணம், தன்மயத்தை மெய்யென்று துணிந்து அதனை யடைந்தனையாயின், என்னுருவமும் உன்னுருவமும் ஆனந்த வுருவமேயாம் என்பதாம்.

**68.** பூங்கா வனநிழலும் புத்தமுதுஞ் சாந்தபதம்
வாங்காத வானந்த மாமழையு—நீங்காவாம்
சொல்லிறந்து மாண்டவர்போற் றாமௌன பூமியினுன்
இல்லையென நின்ற விடம்.

இ - ள். சொல் இறந்து மாண்டவர்போல் - சொல்லற்று மாண்டவர் போல, தூ - பரிசுத்தமாகிய, மௌனபூமியில் - மௌந நிலயத்தில், நான் இல்லையென - நானில்லையென்று, நின்ற இடம் - நின்ற விடத்தில், பூங்காவன நிழலும் - கற்பகப் பூங்காவனத்தின் நிழலும், புத்தமுதும் - புதிய அமிர்தமும், சாந்தபதம் வாங்காத - சாந்தசப்தம் நீங்காத, ஆனந்தமாமழையும் - பேரின்ப மழையும், நீங்கா ஆம் - நீங்கா திருப்பனவாம், எ - று.

நான் என்பதற்கு மௌநபூமியில் நின்றவர்களுக்கு இந்திரபதமும் முத்தியும் வாய்க்குமென்பது கருத்து.

**69.** இடங்கான நல்லபொரு ளின்பமெனக் கேவல்
அடங்காக் கருவி யனைத்து—முடனுதவ
மந்தார தாருவென வந்து மவுனகுரு
தந்தானோர் சொற்கொண்டு தான்.

இ - ள். எனக்கு இடம்கானம் - எனக்கு இடம் காடாகவும், நல்ல - நல்லனவாகிய, பொருள் இன்பம் ஏவல்-பொருள் சுகம் ஏவல் (இவைகள்), அடங்கா - அடங்காத, கருவி அனைத்தும் - கருவிக ளெல்லாமுமாகவும், உடன் உதவ - உடனேயருளுதற்காக, மவுனகுரு - மௌனகுருவானவன், மந்தாரதாரு என வந்து - மந்தார விருக்ஷத்தைப் போலவந்து, ஓர் சொல் கொண்டுதான் - ஒருமொழியைக் கொண்டே, தந்தான் - தந்தருளினன்.

மௌநகுருவானவர் எழுந்தருளி, எனக்கு இடம் பொருளேவல்களைக் கிருபை செய்தார் என்பது கருத்து. மந்தாரம் - பஞ்ச தருக்களிலொன்று. "அணிபடையோர் நண்ணொருகாலொன்பதாமவரேவலு நண்ணும்" என்றார் பட்டணத்தடிகளும்.

**70.** தானந் தவஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி
ஆனவையெல் லாந்தாமே யாகுமே—மோனகுரு
சொன்னவொரு சொல்லாற் சுகமா யிருமனமே
இன்ன மயக்கமுனக் கேன்.

இ - ள். தானம் - கொடையும், தவம் - தவமும், ஞானம் - ஞானமும், சாற்று அரிய - சொல்லுதலரிய, சித்தி முத்தி ஆனவை - சித்திமுத்திகளானவைகளுமாகிய, எல்லாம் - யாவும், தாமே ஆகும் - தாமே யுண்டாம், மௌனகுரு சொன்ன - மௌன குருசொல்லிய, ஒரு சொல்லால் - ஒரு சொல்லினல், மனமே - நெஞ்சே, சுகமாய் இரு - சுகமாயிரு, இன்னம் - இன்னமும், உனக்கு - உனக்கு, மயக்கம் ஏன் - மயக்கம் யாதுக்கு.

மனமே, மௌனகுரு சொன்ன ஒருமொழியைக் கொண்டு சும்மா இருப்பையாயின் தானம் தவம் முதலிய எல்லாம் உனக்குண்டாம் என்பது கருத்து.

**71.** உன்னை யுடலை யுறுபொருளைத் தாவெனவே
என்னை யடிமைக் கிருத்தினான்—சொன்னவொரு
சொல்லை மறவாமற் றோய்ந்தானெஞ் சேயுன்னால்
இல்லை பிறப்பதெனக் கே.

இ - ள். உன்னை - ஆவியாகிய வுன்னையும், உடலை - உடலையும், உறு பொருளை - இந்த ஆவி யாக்கைகட்கும் மறுமை யிம்மைகட்கும் வேண்டு மெனக் கைக்கோடற்குரிய பொருளையும், தா என-தாவென்றேற்றுக் கொண்டு, என்னை - என்னை, அடிமைக்கு இருத்தினான் - தொண்டுக்காக வைத்துக்கொண்ட அருளிறை, சொன்ன ஒருசொல்லை - சொல்லிய ஒரு மொழியை, மறவாமல் தோய்ந்தால்-மறவாது அநுசந்திப்பை யானால், நெஞ்சே - மனமே, உன்னால் - உன்னாலே, எனக்கு - எனக்கு, பிறப்பது இல்லை - பிறத்தற்றொழில் இல்லை, எ - று.

நெஞ்சமே, உடல்பொரு ளாவிகளை யேற்றுக்கொண்டு என்னை யடிமை கொண்ட அருளிறையானவன் சொன்ன வொருமொழியை மறவாது அநுசந்திப்பையாயின், உன்னால் எனக்குப் பிறக்குந் தொழிலொழியும் என்பதாம்.

**72.** எனக்கு முனக்கு முறவில்லை யெனத்தேர்ந்து
நினைக்க வரிதான வின்பநிட்டை—தனைக்கொடுத்தே
ஆசான் மவுனி யளித்தானெஞ் சேயுனையோர்
காசா மதியேனான் காண்.

இ - ள். எனக்கும் உனக்கும் - எனக்கும் உனக்கும், உறவு இல்லை யென - உறவாந்தன்மை யில்லையென்று, தேர்ந்து - தெளிந்து, நினைக்க அரிது ஆன - நினைத்தற்கரிதாகிய, இன்ப நிட்டைதனை - சுகநிஷ்டையை, ஆசான் மௌநி - மௌநகுருவானவர், கொடுத்து அளித்தான் - கொடுத்தருளினான் (ஆதலால்) நெஞ்சே-மனமே, உன்னை-உன்னை, நான் - நான், ஓர் காசு ஆ மதியேன் - ஒருகாசாக மதிக்கமாட்டேன், எ - று.

நெஞ்சே, எனக்கும் உனக்கும் உறவாந் தன்மையில்லையென்று நினைத் தற்கரிய சுகநிஷ்டையை மௌநகுரு எனக்குக் கிருபைசெய்தார் ஆதலால், உன்னை ஒருகாசாக மதிக்கமாட்டேன் என்பதாம்.

**73.** ஆனந்த மோனகுரு வாமெனவே யென்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதாற்—றேனுந்து
சொல்லெல்லா மோனந் தொழிலா தியுமோனம்
எல்லாநன் மோன வடிவே.

இ - ள். மோனகுரு - மௌந குருவானவர், ஆனந்தம் ஆம் எனவே - ஆனந்த முண்டாமென்ற மாத்திரையானே, என் அறிவில் - என்னறி

வினிடத்து, மோனந்தனக்கு இசைய-மௌனநிலைக் கிணங்க, முற்றியது-முடிந்தது, (என்னெனின்) தேன் உந்து சொல்லெல்லாம் மோனம் - தேன்போல ருசிக்கிற சொற்களெல்லாம் மோனரூபமே, தொழிலாதியும் மோனம் - செயல் முதலானவைகளும் மோனரூபமே, எல்லாம்- மற்றுள்ளனயாவும், நல் மோனவடிவே - நல்ல மோன ரூபமே, எ - று.

மௌன குருவானவர், என்னறிவுக் கிணங்கச் சுகமுண்டாமென்று சொல்லி அவ்வாறே முடிவு பெற்றமையால், என் சொல் முதலிய யாவும் மௌன ரூபமேயாயின என்பதாம்.

**74.** எல்லாமே மோனநிறை வெய்துதலா லெவ்விடத்தும்
நல்லார்கண் மோனநிலை நாடினார்—பொல்லாத
நானெனவிங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோன குருவே.

இ - ள். எல்லாமே - எல்லாப் பொருள்களுமே, மோன நிறைவு எய்துதலால் - மௌன பூர்த்தியை யடைதலால், நல்லார்கள் - நல்லவர்கள், எவ்விடத்தும் - எவ்விடத்திலும், மோனநிலை நாடினார் - மௌன நிலையை விரும்பினார்கள், பொல்லாத நான் என - பொல்லாத நானென்று, இங்கு - இவ்விடத்து, ஒன்றை - ஒன்றினை, நடுவே முளைக்கவிட்டு - இடையே முளைக்கவிட்டு, இங்கு - இவ்வுலகில், ஏன் அலைந்தேன் - யாது காரணமாகத் திரிந்தேன், மோனகுருவே - மௌனகுருவே, எ - று.

மௌனகுருவே, நல்லோர்கள் எல்லாப் பொருள்களும் மௌன பூர்த்தியை யடைதலால், எவ்விடத்தும் மௌன நிலையையே சிறந்ததாக நாடினார்கள், நானொருவனும் நான் என்றகங்கரித்து ஏன் திரிந்து பயனிலியானேன் என்பதாம்.

**75.** மோன குருவளித்த மோனமே யானந்த
ஞான வருளுமது நானுமது—வானாதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
என்றறிந்தே னுணர்ந்த மே.

இ - ள். மோனகுரு அளித்த - மௌனகுரு அருளிச்செய்த, மோனமே - மௌன நிலையே, ஆனந்தம் - ஆநந்தமாகும், (என்னெனின்) ஞான அருளும் அது - ஞானத்தைத் தருகின்ற திருவருளுமதுவே, நானும் அது - நானும் அதுவே, வான் ஆதிநின்ற நிலையும் அது - ஆகாய முதலியவை நிற்றற் கிடமாயிருப்பதும் அதுவே, நெஞ்சப்பிறப்பும் அது - மனம்பிறத்தற் கிடமாயிருப்பதும் அதுவே, என்று அறிந்தேன் - என்றுணர்ந்தேன், (உணர்ந்தபின்) ஆனந்தமே - எல்லாம் ஆனந்த ரூபமாகவே தோன்றுகின்றன, எ - று.

மௌனகுரு பிரசாதித்த மௌன நிலையே சுகரூபமாகும், என்னெனின், ஞானவருளும், அதனை யடைதற்குரிய நானும், ஆகாய முதலியவை நிற்பதற்கிடமும், மனப்பிறப்புக்குக் காரணமா யிருப்பதுவும் அதுவே யாதலால் என்பது கருத்து.

**76.** அறிந்த வறிவெல்லா மறிவன்றி யில்லை
மறிந்த மனமற்ற மவுனஞ்—செறிந்திடவே
நாட்டினு ஞனந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினுன் மோன குரு.

இ-ள். அறிந்த அறிவு எல்லாம் - அறியப்பட்ட அறுபொருள்களெல்லாம், அறிவு அன்றி இல்லை - அறிவையன்றி வேருகவில்லை, மறிந்த-திரும்பின, மனம் அற்ற - மனமிறந்த, மவுனம் - மௌன நிலையானது, செறிந்திட - பொருந்த, மோனகுரு - மௌன குருவானவன், நாட்டினுன் - என் மனத்தி னிலைபெறச் செய்தான், ஆனந்த நாட்டில் - இன்பமென்னும் நாட்டின்கண், வாழ்க்கைகுடி - வாழ்ச்சிக் குடியாக, கூட்டினுன் - என்னைச் சேர்த்தான், எ - று.

மௌன குருவானவர் என்னை ஆநந்த நாட்டில் குடித்தனக் காரனுகச் செய்து விட்டார், இனி நானறிந்த பொருள்களெல்லாம் என்னறிவினிடத்தனவே யென்பதாம்.

**77.** குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னே மோனு
உருநீ டுயிர்பொருளு மொக்கத்—தருதியென
வாங்கினையே வேறுமுண்மை வைத்திடவுங் கேட்டிடவும்
ஈங்கொருவ ருண்டோ வினி.

இ-ள். குரு ஆகி - ஆசாரியனுகி, தண்ணருளைக் கூறுமுன்னே - தட்பமாகிய அருணிலையைச் சொல்வதற்கு முன்னே, மோனு-மௌன குருவே, உரு-உடலையும், நீடு உயிர்-சாசுவதமான வுயிரையும், பொருளும்-பொருளையும், ஒக்க - ஒருசேர, தருதி என - தருவாயென்று, வாங்கினையே-வாங்கிக் கொண்டனையே, வேறும் - மற்றும், உண்மை வைத்திடவும் - உண்மையைப் போதிக்கவும், கேட்டிடவும் - கேட்கவும், ஈங்கு - இவ்விடத்தில், இனி ஒருவர் உண்டோ-இனியொருவர் உளரோ, எ - று.

மௌனகுருவே, நீ எனக்கு ஆசாரிய னுகிவந்து அருணிலையைப் போதிக்கு முன்பே, உடல் பொருளாவிகளைத் தாவென்று வாங்கிக் கொண்டனையே, இனி உண்மையைச் சொல்லவும் என்னிடத்துக் கேட்டு வாங்கவும் இவ்வுலகத்தில் ஒருவர் உளரோ என்பதாம்.

**78.** இனிய கருப்புவட்டை யென்னுவி விட்டால்
நனியிரத மாறுது நானுந்—தனியிருக்கப் .

பெற்றிலேன் மோனம்பிறந்தவன்றே மோனமல்லால்
கற்றிலே னேதுங் கதி.

இ - ள். இனிய-இனியதாகிய, கருப்புவட்டை-கருப்பு வெல்லத்தை, என் நாவில் இட்டால் - என் நாவில் வைத்தால், நனி - மிகவும், இரதம் - இரதமானது, மாறாது - நீங்காது, நானும் - நானும், தனியிருக்க மோனம் பெற்றிலேன் - தனிமையாயிருக்க மோநத்தைப் பெற்றிலேன், பிறந்த அன்றே - ஜன்மித்த அன்றே, மோனம் அல்லால் - மோனமல்லது, ஏதும் - யாதும், கதி - புகலிடம், கற்றிலேன் - அறிந்திலேன், எ - று.

**79.** ஏதுக்குஞ் சும்மா விருநீ யெனவுரைத்த
சூதுக்கோ தோன்றாத் துணையாகிப்—போதித்து
நின்றதற்கோ வென்னையா நீக்கிப் பிரியாமல்
கொன்றதற்கோ பேசாக் குறி.

இ - ள். ஏதுக்கும் - யாதுக்கும், நீசும்மா இரு எனவுரைத்த-நீசும்மா இருவென்று சொன்ன, சூதுக்கோ - வஞ்சனைக்கோ, தோன்றா துணை ஆகி போதித்து நின்றதற்கோ - தோன்றாத் துணையாய்ப் போதித்து நின்றதற்கோ, என்னையா - என்னையனே, நீக்கி - நீங்கச்செய்து, பிரியாமல் - பிரிக்காமல், கொன்றதற்கோ-கொன்றதற்குத்தானோ, பேசாக்குறி-பேசாதிருக்கு மடையாளம், எ - று.

**80.** குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட வாங்கே—பிறிவறவும்
சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோன நின்பால்
கைம்மாறு நானொழிதல் காண்.

இ - ள். குறியும் - அடையாளமும், குணமும் - குணமும், அற - இல்லாமல், கூடாத கூட்டத்து-கூடாத கூட்டத்தில், அறிவு அறிவு ஆய் நின்றுவிட - என்னறிவானது அறுவுருவாகவே நின்றுவிடவே, ஆங்கே - அப்பொழுதே, பிறிவு அறவும் - நீக்கமறவும், சும்மா இருத்தி - சும்மா இருக்கச்செய்து, சுகம்கொடுத்த - இன்பத்தைத் தந்த, மோன - மௌந குருவே, நின்பால் - உன்னிடத்து, கைம்மாறு - நான் செய்யவேண்டிய பிரதியுபகாரம், நான் ஒழிதல் - நானொழிதலாம், எ - று.

குறிகுணங்களில்லாமல், கூடாத கூட்டரவில் என் சிவபோதம் உன் சிவபோதமாய் விட்ட மாத்திரையிற்றானே, இடையறாது சும்மா இருக்கச் செய்து இன்பத்தைத் தந்தருளின மௌனகுருவே, நான் என்பது அற்றொழிதலே உனக்கு நான் செய்தற்குரிய கைம்மாறும் எனபது கருத்து.

**81.** நான்றா னெனுமயக்க நண்ணுங்கா லென்றனை
வான்றா னெனநிறைய மாட்டாய்நீ—யூன்றாமல்

வைத்தமவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடு ஞான சுகம்.

இ - ள். நான் தான் என்னும் மயக்கம் நண்ணுங்கால் - நான் தான் என்கிற மயக்கம் பொருந்துமிடத்து, என் ஆணை - என் மீது ஆணையாக, வான் என - ஆகாயத்தைப்போல, நீ நிறையமாட்டாய் - நீ பூரணமாக மாட்டாய், ஒன்றுமல் வைத்த - ஒன்றிலும் பதியாதுவைத்த, மவுனத் தாலே-மௌன நிலையாலே, மாயை மனம்-மாயா ரூபமாகிய மனமே, இற ந்து - நீ ஒடுங்கி, ஞானசுகம் துய்த்துவிடு - ஞானாநந்தத்தை யநுபவி.

மனமே, நான் தான் என்கிற மயக்கத்தைப் பொருந்தினையாயின் நீ பூர்ணமாகமாட்டாய், நீ யொன்றினும் பதியாமல் அருளிறைவைத்த மௌன நிலையினால் ஒடுங்கி ஞானாநந்தத்தை யநுபவிப்பாயாக என்பதாம்.

**82.** ஞானநெறிக் கேற்றகுரு நண்ணரிய சித்திமுத்தி
தானந் தருமந் தழைத்தகுரு—மானமொடு
தாயெனவும் வந்தென்னைத் தந்தகுரு வென்சிந்தை
கோயிலென வாழுங் குரு.

இ - ள். ஞான நெறிக்கு - ஞான மார்க்கத்துக்கு, ஏற்ற குரு - தகுதி யாகிய குருவும், நண் அரிய - பொருந்துதற்கரிய, சித்தி முத்தி - சித்தி முத்திகளும், தானம் தருமம் - தான தர்மங்களும், தழைத்த குரு - செழி த்தகுருவும், மானமொடு - பெருமையோடு, தாய் எனவும் வந்து - தாய் போலவும்வந்து, என்னைத் தந்தகுரு-என்னை யீன்றகுருவும் (யாரெனின்), என் சிந்தை - என் மனமே, கோயில் என - திருக்கோயி லாகக்கொண்டு, வாழும் குரு - வாழ்கின்ற மௌன குருவேயாம், எ - று.

மௌன குருவே ஞான மார்க்கத்துக்குத் தக்ககுருவும், சித்தி முத்தி களை யடைவித்தற்குரிய குருவும், தான தருமங்கள் செழித்தற் கிடமா யிருக்கும் குருவும், தாய்போ லெழுந்தருளி என்னை யீன்ற குருவும் ஆவன் என்பதாம்.

**83.** சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்—சுத்தநிலை
பெற்றோமே நெஞ்சே பெரும்பிறவி சாராமல்
கற்றோமே மோனக் கரு.

இ - ள். நெஞ்சே-மனமே, சித்தும் சடமும்-சித்துப்பொருளும் சடப் பொருளும், சிவத்தைவிட - சிவத்தையன்றி, இல்லை யென்ற - இல்லை யென்று சொன்ன, நித்தன் - நித்தியனாகிய, பரமகுரு நேசத்தால் - பரமா சாரியனது நேசத்தினால், சுத்தநிலைபெற்றோம்-பரிசுத்தமானநிலையையடைந்

தோம், பெரும்பிறவி சாராமல் - பெரும்பிறவியைச் சேராமல், மோனக் கரு கற்றோம் - மௌன நிலையாகிய வித்தையைக் கற்றுக்கொண்டோம்.

சித்துப்பொருள் - உயிருள் பொருள். சடப்பொருள் - உயிரில் பொருள். மனமே, சித்துப்பொருளும் சடப்பொருளும் சிவத்தையன்றி வேறாக வில்லையென்று சொன்ன குருவிசுவாசத்தால் சுத்தநிலையை யடைந்தோம், பிறவியைச் சேராதவண்ணம் மௌனவித்தையைக் கற்றோம் என்பதாம்.

---

ஏசற்றவந்நிலை.

**1.** ஏசற்ற வந்நிலையே யெந்தைபரி பூரணமாய்
மாசற்ற வானந்த வாரி வழங்கிடுமே
ஊசற் சுழல்போ லுலகநெறி வாதனையால்
பாசத்துட் செல்லாதே பல்காலும் பாழ்நெஞ்சே.

இ - ள். ஏசு அற்ற - பழிப்பில்லாத, அந்நிலையே - அந்த மோனநிலையிலேயே, எந்தை - எமது பரமபிதா, பரிபூரணமாய் - பரிபூரணமாகி, மாசு அற்ற - குற்றமில்லாத, ஆநந்தவாரி வழங்கிடும் - இன்பப் பெருக்கைத் தந்தருளுவன், ஊசல் சுழல்போல் - ஊசற்கயிற்றின் நிலையில்லாமை போல, உலகநெறி வாதனையால் - பிரபஞ்ச மார்க்கத்தின் வாசனையினால், பல்காலும் - பலதரமும், பாசத்துள் செல்லாதே-பாசத் தளையுட் புகாதே, பாழ்நெஞ்சே - பாழான மனமே, எ - று.

ஏசறவு - ஒடுக்கம். ஏசற்ற அந்நிலை - கருவிகளொடுங்கப்பெற்ற அந்த மோனநிலை. பழிப்பு - கருவிகளோடு கூடிநின்றதனால் உளதாய நிந்தை. மனமே, மோனநிலையிலிருந்தால் இறைவன் இன்பத்தைத் தந்தருளுவன், ஆதலால், இதைவிடுத்துப் பிரபஞ்சமார்க்கத்திற் செல்லாதேயென்பதாம்.

**2.** பாழாகி யண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்தும்
ஆழாழி யின்பத் தழுந்தப்படியா யோ
தாழாயோ வெந்தையருட் டாட்கீழ்நெஞ்சேயெனைப்போல்
வாழாது வாழ்ந்தழியா வண்ண மிருப்பாயே.

இ - ள். பாழாகி - பாழ்பட்டு, அண்டப் பரப்பை யெல்லாம்-லோக விஸ்தீர்ணத்தை யெல்லாம், வாய் மடுத்தும் - உட் கொண்டும், ஆழ் - ஆழ்ந்த, ஆழி இன்பத்து - இன்பக் கடலில், அழுந்த - மூழ்க, படியாயோ-கல்லாயோ, நெஞ்சே - மனமே, எந்தை - எமது பரம பிதாவின், அருள் தாள் கீழ் - திரு வரு ளுருவாகிய திருவடியின் கீழ், தாழாயோ - வணங்காயோ, (அப்படித் தாழ்வை யாயின்) என்னைப் போல் - என்னைப்

போல, வாழாது வாழ்ந்து - வாழாமல் வாழ்ந்து, அழியா வண்ணம் இருப்பாய் - அழியாம லிருக்கக்கடவாய், எ - று.

மனமே, இன்பக்கடலி லழுந்தக்கல். இறைவனது திருவடியை வணங்கு, இவ்வாறு செய்வையாயின், என்றும் அழியாநிலையி லிருக்கக்கடவை யென்பதாம்.

**3.** இருப்பா யிருந்திடப் பேரின்பவெளிக்கேநமக்குக்
குருப்பார்வை யல்லாமற்கூடக் கிடைத்திடுமோ
அருட்பாய் நமக்காக வாளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே.

இ - ள். இருப்பாய் - இருப்பாக, இருந்திட - இருந்திடுதற்கு, நமக்கு - நங்கட்கு, குருப்பார்வை அல்லாமல் - குரு கடாக்ஷ மில்லாமல், பேரின்ப வெளிக்கு கூட கிடைத்திடுமோ - பேரானந்த வெளியைப் பொருந்தக் கிடைக்குமோ, நமக்காக - நம் பொருட்டு, அருள் பாய் - அருளை விரித்து, ஆளவந்தார் - நம்மைத் தடுத்தாட் கொள்ளவந்த இறைவரது, பொன் அடிக் கீழ் - திருவடியின் கீழ், மருள் - மருள் கொண்ட, பேயர்போல் இருக்க - பேயர் போலே யிருத்தற்கு, வஞ்ச நெஞ்சே வா - வஞ்ச மனமே வருவாயாக, எ - று.

மனமே, பேரின்ப வெளியிலிருத்தற்கு, நமக்குக்குருகடாக்ஷம் வேண்டும், ஆதலால், நம்மை யாட்கொள்ளவந்த அருளிறையின் திருவடிக்கீழ் அமைந்து, பேய்க் கோட்பட்டார்போல் உன்மத்தமாயிருக்க வருவாயாக என்பதாம்.

**4.** வஞ்சமோ பண்டையுள வாதனையா னீயலைந்து
கொஞ்சமுற்றா யுன்னைக் குறைசொல்ல வாயுமுண்டோ
அஞ்சலஞ்ச லென்றிரங்கு மானந்த மாக்கடற்கீழ்
நெஞ்சமே யென்போல நீயழுந்த வாராயோ.

இ - ள். வஞ்சமோ - வஞ்சகமோ, பண்டை உள்ள வாதனையால் - முன்னுள்ள வாசனையால், நீ அலைந்து - நீ திரிந்து, கொஞ்சம் உற்றாய் - சிறுமையை யடைந்தாய், உன்னைக் குறை சொல்ல - உன்னைக் குறை கூற, வாயும் உண்டோ - வாயு முளதோ, அஞ்சல் அஞ்சல் என்று - பயப்படாதே பயப்படாதே யென்று, இரங்கும் - இரங்குகின்ற, ஆனந்தமா கடற்கீழ் - பேரானந்தக் கடலில், நெஞ்சமே - மனமே, என் போல - என்னைப் போல, நீ அழுந்த வாராயோ - நீ மூழ்க வாராயோ, எ - று.

மனமே, உன்னிடத்து வஞ்சனையில்லை, பூர்வகர்ம வாசனையால் நீ அலைந்து தாழ்வடைந்தாய். உன்னைக் குறைகூற எனக்கு வாயுமுளதோ.

அஞ்சே லென்றிரங்கியருள்கின்ற ஆநந்தக்கட லுருவமாகிய இறைவனிடத்து, இடையறாத அன்பு செய்வா யென்பதாம்.

**5.** வாரா வரவாய் வடநிழற்கீழ் வீற்றிருந்த
பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டியன்றோ
ஓராயோ நெஞ்சே யுருகாயோ வுற்றிருந்து
பாராயோ வவ்வுருவைப் பார்க்கநிறை வாய்விடுமே.

இ - ள். வாரா வரவு ஆய்-வரத்தகாத வரவாகி, வடநிழல் கீழ் வீற்றிருந்த - கல்லாலின் நீழலி லெழுந்தளியிருந்த, பூராயம் - வரலாறு, நம்மை - நம்மை, புலப்படுத்த வேண்டி அன்றோ - அறிவுறுத்த வேண்டியல்லவா, நெஞ்சே - மனமே, ஓராயோ - இதனை நீ யறியாயோ, உருகாயோ - உருகமாட்டாயோ, உற்றிருந்து பாராயோ - உற்றிருந்து நோக்காயோ, அவ்வுருவைப்பார்க்க-அந்த பூரண ரூபத்தைப் பார்க்கின், நிறைவு ஆய்விடும் - பூரண மாகி விடும், எ - று.

மனமே, இறைவன் கல்லாலின் நீழலில் வீற்றிருந்தது நம்மை யறிவுறுத்த வேண்டியல்லவா, அதனை நீ யுற்றுப்பார்த்தனையாயின், நமக்கு எல்லாக் காரியங்களும் முற்றுப்பெறும் என்பதாம்.

**6.** வாயாதோ வின்பவெள்ளம் வந்துன் வழியாகப்
பாயாதோ நானும் பயிராய்ப் பிழையேனோ
ஓயாம லுன்னி யுருகுநெஞ்சே யந்நிலைக்கே
தாயான மோனனருள் சந்திக்க வந்திடுமே.

இ - ள். நெஞ்சே - மனமே, இன்ப வெள்ளம் வாயாதோ - சுகப்பெருக்குக் கிடைக்காதோ, உன் வழியாக வந்து பாயாதோ - உன் வழியைப் பற்றி வந்து பரவாதோ, நானும் - (அதை எதிர் பார்த்திருந்த) நானும், பயிர் ஆய் பிழையேனோ - பயிராகப்பிழைக்க மாட்டேனோ, ஓயாமல் - இடையறாமல், உன்னி-நினைத்து, உருகு - கரைவாயாக, அந்நிலைக்கே-அந்த நிலைக்கே, தாயான-தாயையொத்த, மோனன் அருள்-மௌநகுருவின் கிருபையானது, சந்திக்க வந்திடும்-நாம் சந்திக்கக் கிடைக்கும்.

மனமே, நீ யிடையறாமற் கரைந்துருகு, இன்பங்கிடைக்கும், மோநகுருவின் அருளுமுண்டாகும் என்பதாம்.

**7.** வந்தவரவை மறந்துலகாய் வாழ்ந்துகன்ம
பந்தமுற வுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்
இந்தமதி யேனுனக்கிங் கென்மதிகே ளொன்றுலே
சந்ததநெஞ் சேபரத்திற் சாரினின்ப முண்டாமே.

இ - ள். நெஞ்சே-மனமே, வந்த வரவை மறந்து - நாம் வந்த வரவின் காரணத்தை மறந்து, உலகு ஆய் வாழ்ந்து - பிரபஞ்ச ரூபமாய்

வாழ்ந்து, கன்ம பந்தம் உற-கர்மம் பிணிப்பைப் பொருந்த, உன்னை படிப்பிக்க கற்றவர் யார் - உன்னைப் படிப்பிக்கக் கற்றவர் யாவர், உனக்கு இந்த மதி ஏன் - உனக்கு இந்தப் புத்தியேன், என் மதி கேள் - என் புத்தியைக் கேள், என்ஞலே - என்னைக் கொண்டே, சந்ததம் - சதா காலமும், பரத்தில் சாரின் - பரம் பொருளினிடத்திற் சேர்வை யாயின், இன்பம் உண்டாம் - சுக முண்டாம், எ - று.

மனமே, வந்தகாரியத்தை மறந்து பிரபஞ்ச ரூபமாய், கர்மபந்தத்திஞற் பிணிக்கப்பட்டு வருந்தும்படி யுனக்குக் கற்பித்தது யார், இதை விடுத்து, சதாகாலமும் பரத்திற் சிந்தைசெலுத்திஞல், சுகமுண்டாகும் என்பதாம்.

**8.** இன்பமய மாயுலக மெல்லாம் பிழைப்பதற்குன்
அன்புநிலை யென்பா ரதுவுநினை யன்றியுண்டோ
உன்புலத்தை யோரினருட் கொப்பாவாய் நெஞ்சேநீ
தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே.

இ - ள் நெஞ்சே - மனமே, இன்ப மயமாய் - சுக ரூபமாகி, உலகம் எல்லாம் - பிரபஞ்ச மெல்லாம், பிழைப்பதற்கு - உஜ்ஜீவிப்பதற்கு, உன் அன்பு நிலை என்பார் - உன் அன்பே காரண மென்பார்கள், அதுவும் - அந்த அன்பு நிலையும், நின்னை அன்றி உண்டோ - உன்னை யல்ல துளதோ, உன் புலத்தை ஓரின் - உன்னுளவை யராய்ந்தால், அருட்கு ஒப்பு ஆவாய் - திருவருளுக்குச் சமானமாவாய், நீ - நீ, தென்புலத்தாரோடு இருந்து - தென் புலத்தாருடனிருந்து, செய் பூசை - என்ஞற் செய்யப் படுவதாகிய பூசனையை, கொண்டருள் - ஏற்றருள்வாயாக, எ - று.

மனமே, உலகமெல்லாம் உஜ்ஜீவித்தற்கு உன்னன்பே காரணம், நீ திருவருட்குச் சமானமாவாய், நீ தென்புலத்தாரோடு கூடியிருந்து, யான் செய்யும் பூசனைகளை யேற்பாயாக என்பதாம். தென்புலத்தார்-பிதிரர். அவரோடிருந்து செய்பூசைகொண்டருள் என்றமையால், நீ யிறந்துபடவேண்டுமென்ரு ராயிற்று.

**9.** அருளேயோ ராலயமா வானந்த மாயிருந்த
பொருளோடி யானிருக்கப் போயொளித்த நெஞ்சேநீ
மருடீர் முயற்கோடோ வான் மலரோ பேய்த்தேரோ
இருடீர் நீயுறைந்த தெவ்விடமோ காணேனே.

இ - ள். அருளே - திருவருளே, ஓர் ஆலயம் ஆ - ஓராலயமாக, ஆநந்தமாய் இருந்த - சுக ரூபமாயிருந்த, பொருளோடு - பரம் பொருளோடு கூடி, யான் இருக்க - நானிருக்க, போய்ஒளித்த - போய் மறைந்த, நெஞ்சே - மனமே, நீ - நீ, மருள் தீர் - மயக்கமற்ற, முயல்கோடோ - முயற்

கொம்போ, வான் மலரோ - ஆகாயத் தாமரை மலரோ, பேய்த் தேரோ - கானற் சலமோ, இருள்தீர - என்னுடைய அஞ்ஞானாந்தகாரம் நீங்கின வளவில், நீ உறைந்தது - நீ போய்த் தங்கினது, எவ்விடமோ - எந்த இடமோ, காணேன் - அதனை யான் அறிந்திலேன், எ - று.

அருட்கோயிற் கடவுளோடுகூடி யானிருக்க நீ யொளித்துக் கொண்டனை, அப்போது, உன்னுரு, முயற்கொம்பு முதலியவற்றை யொத்திருந்தது, என்னவிச்சை கெட்டவளவிலே நீ யோடி யொளித்துக்கொண்டது எவ்விடத்தோ, அறிந்திலேன் என்பதாம்.

**10.** எவ்விடத்தும் பூரணமா மெந்தைபிரான் றண்ணருளே
அவ்விடத்தே யுன்னை நெஞ்சே யாராயிற் கண்டிலனே
அவ்விடத்து மாயையிலே மாண்டனையோ வவ்விடமும்
செவ்விடமே நீயுஞ் செனனமற்று வாழியவே.

இ - ள். எவ்விடத்தும் - எவ்விடத்திலும், பூரணம் ஆம் - நிறைவாயிருக்கிற, எந்தை பிரான் - எனது தயாகிய உபகார சீலனது, தண் அருளே - தண்ணிய திருவருளே, அவ்விடத்தே - அவ்விடத்திலே, நெஞ்சே - மனமே, உன்னை ஆராயின் - உன்னை ஆராயுமிடத்தே, கண்டிலன் - கண்டிலேன், அவ்விடத்து - அந்த இடத்தில், மாயையிலே மாண்டனையோ - மாயையிலே மடிந்தாயோ, அவ்விடமும் செவ்விடமே - அந்த இடமும் செவ்வையாகிய இடந்தான், நீயும் செனனம் அற்று வாழிய - நீயும் பிறப்பற்று வாழக்கடவாய், எ - று.

மனமே, எவ்விடத்தும் இறைவனது பரிபூர்ணரூபமே வியாபித்திருப்பது, அந்த நிலையில் உன்னைக் கண்டிலேன், மாயையால் மடிந்தாயோ, அப்படி உன்னுருத் தோற்றுதபடியிருந்த விடமும் உன் பிறவிக் கேட்டுக் கேதுவாகிய இடமே யென்பதாம்.

---

## காடுங்கரையும்.

**1.** காடுங் கரையு மனக்குரங்கு
 கால்விட் டோடவதன்பிறகே
ஓடுந் தொழிலாற் பயனுளதோ
 வொன்றாய்ப் பலவா யுயிர்க்குயிராய்

ஆடுங் கருணைப் பரஞ்சோதி
 யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடு ம்பருவ மிதுகண்டீர்
 சேர வாருஞ் சகத்தீரே.

இ - ள். மனக் குரங்கு - மனமாகிய குரங்கு, காடும் கரையும்-காட்டினும் மேட்டினும், கால்விட்டு ஓட - கால் வீசி யோடாநிற்க, அதன் பிறகே-அதின் பின்னே, ஓடும் தொழிலால் - ஓடும் தொழிலினால், பயன் உளதோ - பிரயோஜந முண்டோ, (இல்லையே) ஒன்று ஆய் - ஒன்றாகி, பல ஆய் - பலவாகி, உயிர்க்கு உயிர் ஆய் - உயிருக் குயிராய், ஆடும்-நடிக்கின்ற, கருணைப் பரஞ்சோதி-கருணைப் பரஞ்சுடரினது, அருளைப் பெருதற்கு- அருளைப்பெறும்பொருட்டு, அன்பு நிலை - அன்பு நிலையை, தேடும் - தேடற் குரிய, பருவம் - சமயம், இது - இது தான், (ஆதலால்) செகத்தீரே - உலகத் தீரே, சேரவாரும் - ஒரு சேர வாருங்கள், எ - று.

உலகத் துள்ளவர்களே, மனம்போனவிடங்களிலெல்லாம் அதன் பிறகே யோடுவதனாற் பயனில்லை, இறைவனது திருவருளைப் பெறுகைக்குக்காரணமாகிய அன்புசெய்தற்குரிய தருணம் இதுவே, ஆதலால்நீங்கள் ஒருமிக்கக்கூடி வாருங்கள் என்பதாம்.

**2.** சைவ சமய மேசமயஞ்
சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளிக்
காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்

பொய்வந் துழலுஞ் சமயநெறி
புகுத வேண்டா முத்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
சேர வாருஞ் சகத்தீரே.

இ - ள். சைவ சமயமே சமயம் - பல சமயங்களுள்ளும்சைவ சமயமொன்றுமே சற்சமயம், (ஏனெனின்) சமயாதீதப் பழம்பொருளை-சமயங்களுக் கெட்டாத அநாதி வஸ்துவை, கைவந்திட - கைவச மாம்படி, மன்றுள் - பொற்சபையில், வெளிக்காட்டும் - வெளிப் படையாய்க் காட்டாநிற்கும், இந்தக் கருத்தைவிட்டு - இந்த அபிப்ராயத்தை விட்டு, பொய் வந்து உழலும் - பொய் மேலிட்டுழல்வதற் கேதுவாகிய, சமயநெறி-சமய மார்க்கங்களில், புகுதவேண்டாம் - நுழைய வேண்டாம், முத்திதரும் - மோக்ஷத்தைக் கொடுக்கின்ற, தெய்வ சபையைக் காண்பதற்கு-தெய்விகமமைந்த பொன்னம்பலத்தைச் சேவிப்பதற்கு, செகத்தீரே-உலகத்தீரே, சேரவாரும் - ஒரு சேரவாருங்கள், எ - று.

உலகத்துள்ளவர்களே, சமயாதீதப்பொருளை வெளிப்படையாகக் காட்டவல்லது சைவசமயமாதலால், அதுவே சற்சமயம் என்பதாம்.

**3.** காக முறவு கலந்துண்ணக்
கண்ட ரகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ
வின்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாருஞ் செகத்தீரே.

இ - ள். காகம் - காகமானது, உறவு கலந்து உண்ண கண்டீர்-தன் இனமாகிய காகங்களோடு கலந்து (கிடைத்ததைப்) புசிக்கக் கண்டீர்கள், (அவ்வாறு நாமுங் கலந்துண்ணல் கடன்மையாதலால்) அகண்ட ஆகாரம் - அகண்ட ரூபத்தையுடைய, சிவபோகம் என்னும் - சிவாநுபவம் என்கிற, பேரின்ப வெள்ளம்-பேரானந்தப் பெருக்கானது; பொங்கி ததும்பி-பொங்கி வழிந்து, பூரணமாய் - நிறைவாகி, ஏக வுருவாய் - ஏக ரூபமாகி, கிடக்குது - (எளிதிற் கொள்ளக்) கிடவாநின்றது, ஐயோ - அந்தோ, நாம் இனி இன்புற்றிட - நாம் இனியாயினும் சுகமடைதற் பொருட்டு, எடுத்த தேகம் விழுமுன் புசிப்பதற்கு - நாம் எடுத்த இந்த மானுட சரீரம் விழு முன்னே (அந்தப் பேரின்ப வெள்ளத்தை) பருகுதற்கு, செகத்தீரே - உலகத்தீரே, சேரவாரும் - ஒருசேர வாருங்கள், எ - று.

உலகத்தாரே, ஒருபொருள் கிடைத்தால் அதனைத் தனியேயுண்ணாமல் இனத்தோடு கூடியுண்ணுங் காகம்போல, சிவபோகத்தை நாமெல்லாருங்கூடி யுண்ண வாருங்கள் என்பதாம்.

---

## எடுத்ததேகம்.

### கட்டளைக்கலிப்பா.

**1.** எடுத்த தேகம்பொ ருளாவி மூன்றுநீ
யெனக்கொன் றில்லை யெனமோன நன்னெறி
கொடுத்த போதுகொ டுத்ததன் றோபினுங்
குளறி நானென்று கூத்தாட மாயையை
விடுத்த வாறுங்கண் ணீரொடு கம்பலை
விலகு மாறுமென் வேட்கைப்ர வாகத்தைத்
தடுத்த வாறும் புகலாய் சிரகிரித்
தாயுமான தயாபர மூர்த்தியே.

இ - ள். எடுத்த தேகம் - எடுத்த (இந்த மானுட) தேகம், பொருள் - பொருள், ஆவி - உயிர், மூன்றும் - ஆகிய இம்மூன்றும், நீ - நீயே, எனக்கு ஒன்று இல்லை என - எனக்கு ஒன்று மில்லையென்று சொல்லி, மோன

நல்நெறி கொடுத்தபோது - மௌன நிலையாகிய சன்மார்க்கத்தை நீ யெனக்குத் தந்தருளினபொழுது, கொடுத்தது அன்றோ - நான் உனக்குக் கொடுத்துவிட்டதல்லவா, பின்னும் - மீட்டும், நான் என்று குளறி கூத்தாட - நான் என்று குழறிக் கூத்தாடும்படி, மாயையை விடுத்தவாறும் - மாயையை யேவினதற்குக் காரணத்தையும், கண்ணீரொடு கம்பலை விலகுமாறும் - கண்ணீருடன் கம்பலை விலகுதற்குக் காரணத்தையும், என் வேட்கை ப்ரவாகத்தை - என் ஆசை வெள்ளத்தை, தடுத்த வாறும் - தடை செய்ததற்குக் காரணத்தையும், புகலாய் - சொல்லாய், சிரகிரி - சிரகிரியி லெழுந்தருளிய, தாயுமான தயாபரமூர்த்தியே-மாத்ரு பூதேசுவர னென்று சொல்லப்படுகிற கருணையிற் சிறந்த உருவமே, எ - று.

மாத்ரு பூதேசுவரனே, நீ மௌனநிலையை யருள்செய்த காலத்தில், நான் உடல் பொருளாவிகளை உனக்குக் கொடுத்து விட்டேனல்லவா? அங்ஙனமாக, மீட்டும் மாயை வயப்பட்டு நானென்று குழறுதல் முதலியவற்றைச் செய்துழலா நின்றேன் என்பதாம்.

**2.** நோயும் வெங்கலிப் பேயுந் தொடரநின்
  னூலிற் சொன்ன முறையிய மாதிநான்
தோயும் வண்ண மெனைக்காக்குங் காவலுந்
  தொழும்பு கொள்ளுஞ் சுவாமியு நீகண்டாய்
ஓயுஞ் சன்ம மினியஞ்ச லஞ்சலென்
  றுலகங் கண்டு தொழவோ ருருவிலே
தாயுந் தந்தையு மானோய் சிரகிரித்
  தாயுமான தயாபர மூர்த்தியே.

இ - ள். நோயும் - வியாதியும், வெம் - வெவ்விய, கலிப்பேயும் - தரித்திரமாகிய பிசாசமும், தொடர - தொடர்தலால், நின் நூலில் சொன்னமுறை - உன் னூலாகிய வேதாகமங்களில் சொல்லிய முறையாக, இயமாதி - இயமாதிகளை, நான் தோயும் வண்ணம் - நான் பொருந்துமாறு, என்னைக் காக்கும் காவலும் - என்னை (வேறு விடயங்களிற் செல்லாது தடுத்துக்) காக்கின்ற காவலும், தொழும்பு கொள்ளும் சுவாமியும் - என்னை யடிமை கொள்ளும் சுவாமியும், நீ - நீயே, சன்மம் ஓயும் - பிறவியொழிந்துபோம், இனி அஞ்சல் அஞ்சல் என்று - இனி அஞ்சாதே அஞ்சாதே யென்று சொல்லி, உலகம் கண்டுதொழ - உலகத்தார் பார்த்து வணங்கும்படி, ஓர் உருவிலே - ஓர் வடிவிற்றானே, தாயும் தந்தையும் ஆனோய் - தாயும் தந்தையு மானவனே, சிரகிரித் தாயுமான தயாபர மூர்த்தியே, எ - று.

மாத்ரு பூதேசுவரனே, வேதாகமோக்தமாக இயமாதிகளை நான் செய்யும் வண்ணம் என்னைக் காக்குங் காவலும் எனக்குக் கடவுளும் நீயே, உன்

பிறவி யொழியுமென்று சொல்லி, அச்சந்தீர்த்து, உலகு கண்டு தொழும் படி ஒருருவத்தில் தாயுந் தந்தையுமாய்வந்து சேவை சாதித்தருளினை யென்பதாம்.

---

முகமேலாம்.

1. முகமெ லாங்கணீர் முத்தரும் பிடச்செங்கை முகிழ்ப்ப
அகமெ லாங்குழைந் தானந்த மாகநல் லறிஞர்
இகமெ லாந்தவ மிழைக்கின்றா ரென்செய்கோ வேழை
சகமெ லாம்பெற நல்லரு ளுதரமாச் சமைந்தோய்.

இ - ள். முகம் எல்லாம் - முகம் முழுமையும், கண்ணீர் முத்து அரும்பிட - கண்ணீராகிய முத்துக்களுதிர்ந்திட, செங்கை முகிழ்ப்ப-செங்கைகள்கூப்ப, அகம் எல்லாம் குழைந்து - மனமெல்லா முருகி, ஆனந்தமாக - இன்பமய மாதற்பொருட்டு, நல் அறிஞர் - சிறந்த அறிஞர்கள், இகம் எல்லாம் தவம் இழைக்கின்றார் - இக முழுதுந் தவம் செய்கிறார்கள், ஏழை - எளியனேன், என் செய்கோ - என் செய்வேனோ, சகம் எலாம் பெற - உலகங்களை யெல்லாம் பெறுதற்காக, நல் அருள் - சிறந்த அருளே, உதரம் ஆ சமைந்தோய் - திருவயிறாகச் சமைந்தவனே, எ - று.

அருளாகிய திருவயிற்றினின்று, உலகத்துயிர்களாகிய குழந்தைகளைத் தோற்றுவித்தவனே, அறிஞர், உன்னிடத் தன்புசெய்து தவமிழையாநிற்க, நான் யாதொரு சற்காரியமுஞ் செய்யாதிருக்கின்றேன், எவ்வாறு பிழைப்பேன் என்பதாம்.

---

திடமுறவே.

கொச்சகக்கலிப்பா.

1. திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணி நின்னைக்கை குவித்தோனானலனோ
வடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லல்
படிமுடியா தென்னுவிப்பற்றே பராபரமே.

இ - ள். திடம் உற - திடம் பொருந்த, நின் அருளைச்சேர்த்து - உன்னருளைக்கூட்டி, என்னைக் காத்து ஆள - என்னைக் காத்துரக்ஷிக்க, உனக்கு கடன் என்று எண்ணி - உனக்குக் கடனென்று நினைத்து, நின்னை - உன்னை, கைகுவித்தோன் - கைகூப்பி வணங்கினேன், நான் அல்லனோ - யானல்லேனோ, அடைவுகெட்ட - முறைகெட்ட, பாழ் - பாழான, மாயை ஆழியிலே - மாயசாகரத்தி லமிழ்ந்து, இன்னம் - இன்னமும், அல்லல்பட முடியாது - துன்பப்பட முடியாது, என் ஆவி பற்றே - என்னுயிர்க்கோராதாரமே, பராபரமே, எ - று.

கடவுளே, உறுதியாக உன்னருளிற்கூட்டி என்னைக் காத்தருள்வது உன் கடனென்று நினைத்து உன்னைக் கைகூப்பி வணங்கினேன், வணங்கியும், மாயைக்கடலில் இன்னம் மூழ்கிவருந்த என்னால் முடியாதென்பதாம்.

**2.** ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீ யொருகால்
வாராயோ வந்து வருத்தமெல்லாந் தீராயோ
பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதல்
பாராதி வைத்த பதியே பராபரமே.

இ - ள். ஆராமைகண்டு - என் தரியாமையைப் பார்த்து, இங்கு-இவ்விடத்து, அருட்குருவாய் - அருட்குருவாகி, நீ ஒருகால் வாராயோ - நீ ஒருதரம் வாராயோ, வந்து - வந்து, வருத்தம் எல்லாம் - என் துன்பத்தையெல்லாம், தீராயோ - ஒழியாயோ, பூராயமாக - புராதநமாக, அருட்பூரணத்தில் - திருவருணிறைவில், அண்டமுதல் - உலகங்கட்கு முதற்காரணமாகிய, பார் ஆதி - பிருதிவி முதலாகிய பஞ்ச மஹா பூதங்களை, வைத்த - வகுத்து வைத்த, பதியே - இறைவனே, பராபரமே. எ - று.

கடவுளே, என்னாற்றாமையைக் கண்டு, நீ அருட்குருவாகிவந்து என் துன்பமெல்லாம் ஒழியும்படி கிருபைபுரியாயோ என்பதாம்.

**3.** வாழாது வாழவுனை வந்தடைந்தோ ரெல்லாரும்
ஆழாழி யென்னவரு ளானா ரழுக்காற்றோ
டேழா யெனவுலக மேசுமினி நானொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே.

இ - ள். வாழாது - அநித்யவாழ்வு வாழாமல், வாழ - நித்தியவாழ்வு பெற்றுவாழ, உன்னைவந்து அடைந்தோர் எல்லாரும் - உன்னைவந்தடுத்தவர்களெல்லாரும், ஆழ் - ஆழ்ந்த, ஆழி என்ன - கடலைப்போல, அருள் ஆனார் - அருளுருவ மானார்கள், அழுக்காற்றோடு - பொறாமையோடு கூடிய, ஏழாய் - அறிவிலீ, என - என்று, உலகம் ஏசும்-உலகம் பழித்தற்குரிய, நான் ஒருவன் - நானொருவனும், இனி பாழ் ஆகாவாறு - இனிப் பாழ் படாவண்ணம், நீ முகம்பார்-நீ என்முகம் பார்த்திரங்கு, பராபரமே.

கடவுளே, உன்னைவந் தடைந்தோரெல்லாரும் உன்னருளுருவமானார்கள், நானொருவனும் பாழ்படாவண்ணம் என் முகம்பார்த் திரங்க வேண்டும் என்பதாம்.

**4.** உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற
கள்ளக் கருணையை யான் காணுந் தரமாமோ

வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே.

இ - ள். உள்ளத்தினுள்ளே ஒளித்து - என் மனத்தினுள்ளே மறைந்து, என்னை ஆட்டுகின்ற - என்னை நடிப்பிக்கிற, கள்ளக் கருணையை - வஞ்சகக்கருணையை, யான் காணும் தரம் ஆமோ - நான் காணுந்தரமாகுமோ, விடக்கு உண்பார் - ஊனுண்பவரால், வெள்ளத்தை மாற்றி - (இறைத்தல் முதலியவற்றால்) நீரை வடியச்செய்து, நஞ்சு ஊட்டும் - விஷமூட்டப்பெற்ற, பள்ளத்தில் - சிறு குட்டையிலுள்ள, மீன்போல் - மீன்களைப்போல, பதைத்தேன் - துடித்தேன், பராபரமே. எ - று.

கடவுளே, என்மனத்தின்கண் மறைந்திருந்து என்னை யாட்டுகின்ற உன் கருணாதிசயத்தை யான் காண வல்லேனோ, விஷமூட்டப்பட்ட சிறுபள்ளத்திலுள்ள மீன்போலப் பதையா நின்றேன் என்பதாம்.

**5.** வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டுதுவண்
டாவிக்கு ணின்றவுனக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்
பூவிற்கும்வான்கடையிற்புல்விற்போர்போலவொன்றைப்
பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே.

இ - ள். வாவி - தடாகத்திலுள்ள, கமலமலர் வண்டு ஆய் - தாமரை மலரில் வண்டுபோலாகி, துவண்டு துவண்டு - திவண்டு திவண்டு, ஆவிக்கு உள்நின்ற - உயிருக்குள்ளே நிலைத்திருக்கிற, உனக்கு - உன்மேல், அன்பு வைத்தார்க்கு - அன்புவைத்த தொண்டர்களுக்கு, அஞ்சல் என்பாய் - அஞ்சன்மின் என்போய், பூவிற்கும் - புஷ்பம் விற்கிற, வான்கடையில் - சிறந்த கடையில், புல் விற்போர்போல - புல் விற்பாரைப்போல, ஒன்றை - (உன்னையன்றி) வேறொரு பொருளை, பாவிக்கமாட்டேன் - பாவனை பண்ணமாட்டேன், பதியே - இறைவனே, பராபரமே. எ - று.

கடவுளே, தாமரைப்பூவில் வண்டுபோலத் துவண்டு துவண்டு, உயிர்க்குயிராய் நிற்குமுன்னை யஞ்சலிசெய்யுமன்பர்க்கு அஞ்சலென்பாய், நான், பூவிற்குங்கடையில் புல்விற்பார்போல, உன்னையன்றி வேறு தெய்வத்தை நினைப்பதுஞ் செய்யேன் என்பதாம்.

**6.** விண்ணாறு வெற்பின் விழுந்தாங் கெனமார்பில்
கண்ணாறு பாய்ச்சிடுமென் காதல் வெள்ளங் கண்டிலையோ
தண்ணாறு சாந்தபதத் தற்பரமே நால்வேதப்
பண்ணாறு மின்பப் பதியே பராபரமே.

இ - ள். விண் ஆறு - ஆகாய கங்கை, வெற்பின் - மலையாகிய, ஆங்கு - அவ்விடத்து, விழுந்தென - விழுந்தாற்போல, மார்பில் - மார்பின்மீது, கண் ஆறு - கண்ணீர் நதியை, பாய்ச்சிடும் - பாய்ச்சுகின்ற, என் காதல்வெள்

ளம் - என் னுசைப் பெருக்கை, கண்டிலையோ - பார்த்திலையோ, தண்ணாறு - தட்பமே மிகுதியாய்த் தோற்றுகிற, சாந்தபதம் - சாந்த பதத்தையுடைய, தற்பரமே - தற்பரவஸ்துவே, நால் வேதப்பண் - நான்கு வேதப் பண்களுளுள்ளும், நாறும் - பிரகாசிக்கிற, இன்பம் - சுகரூபமாகிய, பதியே- இறைவனே, பராபரமே. எ - று.

கடவுளே, ஆகாய கங்கை மலைமேல் விழுந்தாற்போல, மார்பின்மீது கண்ணீராற்றைப் பெருகச்செய்கிற என்னுசை வெள்ளத்தைப் பார்த்திலையோ என்பதாம்.

**7.** கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்குமென
வாடியவென் னெஞ்சுமுக வாட்டமுநீ கண்டிலையோ
தேடியநின் சீரருளைத் திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடியநான் கண்டாய் பதியே பராபரமே.

இ - ள். கூடிய - சேர்ந்த, நின்சீர் அடியார் - உன் சிறந்த அடியார்களது, கூட்டம் - கூட்டமானது, என்று வாய்க்குமோ என - எப்பொழுது கிடைக்குமோவென்று, வாடிய - வாடின, என் நெஞ்சும் - என் மனத்தையும், முகவாட்டமும் - முகவாட்டத்தையும், நீ கண்டிலையோ - நீபார்த்திலையோ, தேடிய - அறிஞராற் றேடப்பட்ட, நின்சீர் அருளை - உனது சிறந்த அருளைக் குறித்து, திக்கு அனைத்தும் - திசைகளெல்லாவற்றினும், கைகுவித்து - கைகூப்பி, பாடிய நான் - துதித்த நானுக்கும், பதியே - முதல்வனே, பராபரமே. எ - று.

கடவுளே, உன்னடியார் கூட்டம் என்று வாய்க்குமென்று வாடின என் மனவாட்டத்தையும் முகவாட்டத்தையும் நீ பார்த்திலையோ, எல்லாத் திசைகளினும் உன்னருளை நாடிக் கைகுவித்துத் துதியா நின்றேன் என்பதாம்.

**8.** நெஞ்சத்தி னூடே நினைவாய் நினைவூடும்
அஞ்சலென வாழுமெனதாவித் துணைநீயே
சஞ்சலமாற் றினையினிமேற் றாய்க்குபசா ரம்புகன்று
பஞ்சரிக்க நானார் பதியே பராபரமே.

இ - ள். நெஞ்சத்தினூடே நினைவு ஆய் - மனத்தினுள்ளே நினைவாகி, நினைவூடும் - நினைவினுள்ளும், அஞ்சல் என - பயப்படாதேயென்று நின்று, வாழும் - வாழ்கின்ற, எனது ஆவித்துணை - என் உயிர்த்துணையாகிய, நீயே - நீ தானே, சஞ்சலம் மாற்றினை - என் மனோசலனத்தை நீக்கினாய், இனிமேல் - இனிமேல், தாய்க்கு - தாயாகிய வுனக்கு, உபசாரம் புகன்று - உபசாரஞ் சொல்லி, பஞ்சரிக்க - கெஞ்ச, நான் ஆர் - நான் யார், பதியே - தலைவனே, பராபரமே. எ - று.

கடவுளே, நினைவுக்குள் நினைவாயிருந்து, அஞ்சல் என்றருள்செய்கிற என்னுயிர்த் துணையாகிய நீ, என் மனோசலனங்களை நீக்கியருளினை, தாயாகியவுனக்கு உபகாரஞ்சொல்ல நான் யார் என்பதாம்.

**9.** புத்திநெறி யாகவுனைப் போற்றிப் பலகாலும்
முத்திநெறி வேண்டாத மூடனே னாகெடுவேன்
சித்திநெறிக் கென்கடவேன் சீரடியார்க் கேவல்செய்யும்
பத்திநெறிக் கேனுமுகம் பார்நீ பராபரமே.

இ-ள். புத்திநெறியாக - புத்திவழியாக, உன்னைப் பலகாலும் போற்றி - உன்னைப் பலதரமும் துதித்து, முத்தி நெறிவேண்டாத - முத்தி மார்க்கத்தை விரும்பாத, மூடனேன - மூடனாகிய நான், ஆ கெடுவேன் - ஐயோ கெடுவேன், சித்திநெறிக்கு என் கடவேன் - சித்தி மார்க்கத்துக்கு என் செய்யக்கடவேன், சீர் அடியார்க்கு - உன் சிறந்த அடியார்களுக்கு ஏவல் செய்யும் - ஏவல் செய்தற்குரிய, பத்திநெறிக்கேனும்-பத்தி மார்க்கம் எனச்குச் சித்தித்தற் பொருட்டாயினும், நீ முகம் பார் - நீ யென்முகம் பார், பராபரமே. எ-று.

கடவுளே, புத்திவழியாக உன்னைப் பலகாலும் துதித்து, முத்தி நெறியை விரும்பாத மூடனாகிய நான், சித்திகளையடையும் வழிக்கு என் செயக்கடவேன், உன்னடியார்க்கு ஏவல்செய்கின்ற பத்திமார்க்கம் எனக்கமையும் வண்ணமாயினும் என் முகம் பார்க்கவேண்டும் என்பதாம்.

**10.** கண்டறியேன் கேட்டறியேன் காட்டுநினை யேயிதயம்
கொண்டறியேன் முத்தி குறிக்குந் தரமுமுண்டோ
தொண்டறியாப் பேதைமையேன் சொல்லேனின்றொன்
மையெல்லாம், பண்டறிவாய் நீயே பகராய் பராபரமே.

இ-ள். கண்டறியேன் - கண்டறிந்திலேன், கேட்டறியேன் - கேட்டறிந்திலேன், காட்டும் நினையே - (எல்லாப் பொருள்களையும் பகுத்து) உணர்த்துகின்ற உன்னையே, இதயம்கொண்டு அறியேன் - இருதயத்தில் வைத்தறிந்திலேன், முத்தி குறிக்கும் தரமும் உண்டோ - (இப்படிப்பட்ட எனக்கு) முத்தியை நினைக்கும் யோக்யதையாயினு முளதோ, தொண்டு அறியா - அடிமைத் திறமறியாத, பேதமையேன் - அறிவின்மையை யுடையேன், நின் தொன்மையெல்லாம் சொல்லேன் - உன் பழமையெல்லாம் சொல்லியறியேன், பண்டு அறிவாய் - (இவற்றையெல்லாம்) முன்னமே யுணர்வாயாகிய, நீயே பகராய்-நீயேசொல்லாய், பராபரமே, எ-று.

கடவுளே, உன்னைக் கண்டிலேன், இதயத்தில் அமைத்துமிலேன், இப்படிப்பட்ட எனக்கு முத்தியை நினைத்தற்காயினுந் தகுதியுண்டோ,

உன்னடிமைத் திறமறியாத பேதையேன், உன் பழமையெல்லாம் சொல்லி யறியேன், முன்னமே நீ யுணர்வாயாதலால் என்பதாம்.

---

### தன்னை.

1. தன்னை யறியத் தனதருளாற் றானுணர்த்தும்
மன்னைப் பொருளெனவே வாழாமற் பாழ்நெஞ்சே
பொன்னைப் புவியைமடப் பூவையரை மெய்யெனவே
என்னைக் கவர்ந்திழுத்திட் டென்னபலன் கண்டாயே.

இ - ள். தன்னை அறிய - தன்னை யுணர, தனது அருளால் - தன் திருவருளால், தான் உணர்த்தும் - தானே யுணர்த்துகின்ற, மன்னை - இறைவனை, பொருள் என வாழாமல் - உறுதிப்பொருளென்று வாழாமல், பாழ் நெஞ்சே - பாழ்மனமே, பொன்னை - பொன்னையும், புவியை - நிலத்தையும், மடப்பூவையரை - இளமை பொருந்திய மாதரையும், மெய்யென - மெய்யென்றுகொண்டு, என்னை - என்னை, கவர்ந்து இழுத்திட்டு - பற்றி யிழுத்திட்டு, என்ன பலன் கண்டாய் - என்ன பயனை யடைந்தாய், எ - று.

மனமே, தன்னை யுணருமாறு தன்னருளால் நமக்கறிவுறுத்துகின்ற இறைவனைவாழ்த்தி வாழாமல், பொன் மண் பெண் என்பவைகளை மெய் யென்று நம்பி, என்னை யவ்விடயங்களில் இழுத்துப்போய், நீயென்ன பயனடைந்தனை யென்பதாம்.

---

### ஆக்குவை.

1. ஆக்குவை மாயையாவு நொடிதனி லதனைமாள
நீக்குவை நீக்கமில்லா நினைப்பொடு மறப்புமாற்றிப்
போக்கொடு வரவுமின்றிப் புனிதநல் லருளானந்தம்
தாக்கவுஞ் செய்வாயன்றோ சச்சிதானந்தவாழ்வே.

இ - ள். மாயையாவும் - மாயைகளெல்லாவற்றையும், ஆக்குவை - உண்டாக்குவாய், அதனை - அம்மாயையை, நொடிதனில் - நொடிப்பொழுதில், மாள நீக்குவை - ஒழிய நீக்கிவிடுவாய், நீக்கம் இல்லா - நீங்குதலில்லாத, நினைப்பொடு - நினைப்புடன், மறப்பும் - மறப்பையும், மாற்றி - ஒழித்து, போக்கொடு வரவும் இன்றி - போக்குடன் வரவும் இல்லாமல், புனிதம் - பரிசுத்தமாகிய, நல்-சிறந்த, அருள் ஆனந்தம்-அருளாநந்தத்தை, தாக்கவும் செய்வாய் அன்றோ - அடையவுஞ் செய்பவன் நீ யல்லவா, சச்சிதானந்த வாழ்வே - அஸ்திபாதி ப்ரியவாழ்க்கையே, எ - று.

சச்சிதாநந்தப்பொருளே, மாயாகாரியமாகிய பிரபஞ்ச முழுதையும் படைத்துக்காத்து அழிக்கவல்லை, போக்கொடு வரவற்ற அருளாநந்தத்தை யடையவுஞ் செய்வோன் நீயல்லையோ என்பதாம்.

## கற்புறுசிந்தை.

**1.** கற்புறு சிந்தைமாதர் கணவரை யன்றிவேறோர்
இற்புறத் தவரைநாடார் யாங்களு மின்பவாழ்வும்
தற்பொறி யாகநல்குந் தலைவநின் னலதோர்தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணானந்தவாழ்வே.

இ - ள். கற்பு உறு சிந்தை மாதர் - கற்பு மிகுந்த மனத்தையுடைய மாதர்கள், கணவரை அன்றி - தம் கணவரை நாடுதலன்றி, வேறு-அந்நிய மாகிய, ஓர் இல்புறத்தவரை - ஒரு அயல்வீட்டாரை, நாடார் - நாடார் கள், (அதுபோல) யாங்களும் - நாங்களும், இன்ப வாழ்வும் - சுக வாழ்க் கையையும், தற்பொறி ஆக நல்கும் - தன் செல்வமாகத் தந்தருள்கின்ற, தலைவ - முதல்வனே, நின்னலது - உன்னையன்றி, ஓர் தெய்வம் - மற் றொரு தெய்வத்தை, பொற்பு உற - யாம் பொலிவடைதற் பொருட்டு, கரு தோம் - நாடோம், பூரணானந்த வாழ்வே - பரிபூரண சுகத்தையே வாழிட மாகக்கொண்டு அதனிடத்து வாழ்வோனே, எ - று.

கடவுளே, கற்புடைமாதர், தங்கணவரையன்றி அயலாரை நாடா தது போல, யாங்கள் உன்னையன்றி வேறு தெய்வத்தைக் கருதோம் என் பதாம்.

**2.** முருந்திள நகையார்பார முலைமுகந் தழுவிச் செவ்வாய்
விருந்தமிர் தெனவருந்தி வெறியாட்டுக் காளாய்நாளும்
இருந்தலோக யதப்பே ரினத்தனா யிருந்தவேழை
பொருந்தவுங் கதிமேலுண்டோ பூரணானந்தவாழ்வே.

இ - ள். முருந்து - மயிலிறகினடிபோன்ற, இள நகையார் - சிறிய பல்வரிசையையுடைய மாதரது, பாரம் - பெரிய, முலைமுகம் - முலை முகட்டை, தழுவி - தழுவிக்கொண்டு, செவ்வாய் - செவந்த அதரா மிர்தத்தை, விருந்து - விருந்தாகக்கொடுக்கப்பட்ட, அமிர்து என - தேவா மிர்தம்போலக் கருதி, அருந்தி-பாநம்பண்ணி, வெறியாட்டுக்கு ஆள் ஆய் - வெறியாடலுக் காளாகி, நாளும் இருந்த - நாடோறுமிருந்த, லோகாயதப் பேர் - உலோகாயதம் என்னும் பேர்பூண்ட, இனத்தனாய் இருந்த ஏழை - கூட்டத்தானாயிருந்த அறிவிலியாகிய நான், மேல்கதி பொருந்தவும்-இனி யொருகால் நற்கதியடையவும், உண்டோ - விரகுண்டோ, பூரணானந்த வாழ்வே—, எ - று.

கடவுளே, மாதர் மயக்கிலகப்பட்டு, லோகாயதனுக் கினமாயிருக்கிற எனக்கு நற்கதியுமுண்டோ என்பதாம்.

**3.** தீதெலா மொன்றும் வன்மை செறிந்திருட் படலம்போர்த்த
பாதகச் சிந்தைபெற்ற பதகனுன் பாதநீழல்
ஆதர வடையவுள்ளன் பருள்கிலை யாயின்மற்றியார்
போதனை செய்யவல்லார் பூரணானந்தவாழ்வே.

இ - ள். தீது எல்லாம் - தீமைகள் யாவும், ஒன்று ஆம் வன்மை செறிந்து - ஒன்றாகக் கூடியிருந்தாற்போன்ற காடிந்யம் பொருந்தி, இருள் படலம் போர்த்த - அஞ்ஞா னாந்தகாரச் செறிவினால் மூடப்பெற்ற, பாதகச் சிந்தை பெற்ற - பாப சிந்தனையுள்ள, பதகன் - பாபியாகிய நான், உன் பாதநீழல் - உன் திருவடி நிழலை, ஆதரவு அடைய - ஆதாரமாக அடைய, உள்ளன்பு அருள்கிலை யாயின் - உள்ளன்பைத் தந்தருளாயானால், போதனைசெய்ய வல்லார் - (என் பாவந்தொலையப்) போதிக்க வல்லார், மற்று யார் - வேறு யாவர், பூரணானந்தவாழ்வே—. எ - று.

கடவுளே, தீமைகள்யாவும் ஒன்றாய்த் திரண்டாற்போன்ற மனத்தையுடையேன், உன் திருவடி நீழலையடையும் வண்ணம் உள்ளன்பை யருள் செய்திலையாயின், வேறு யாவர் என் பாவந்தொலையப் போதிக்கவல்லார் என்பதாம்.

**4.** நாதனை நாதாதீத நண்பனை நடுவாய்நின்ற
நீதனைக் கலந்துநிற்க நெஞ்சமே நீவாவென்றால்
வாதனை பெருக்கியென்னை வசஞ்செய்து மனந்துன்மார்க்க
போதனை செய்தனன்றோ பூரணானந்தவாழ்வே.

இ - ள். நாதனை - இறைவனை, நாத அதீத - நாத தத்துவத்துக்கு மெட்டாத, நண்பனை - அன்பர்க் கன்பனை, நடுவாய்நின்ற நீதனை - பஞ்ச கிருத்தியங்களுக்கும் பொதுவாயிருக்கின்ற நீதிமானை, கலந்து நிற்க-கூடி நிற்க, நெஞ்சமே - மனமே, நீவா என்றால் - நீ வருகவென்றால், மனம் - என் மனமானது, வாதனை பெருக்கி - உலக வாசனையைப் பெருகச் செய்து, என்னை வசம்செய்து-என்னை வசிகரித்து, துன்மார்க்க போதனை செய்தல் - துன்மார்க்க போதனை செய்வது, நன்றோ - நன்மையோ, பூரணானந்தவாழ்வே—. எ - று.

கடவுளே, இறைவனைக் கூடவாவென்றழைத்தால், என் மனம் அதற்கிசையாமல், உலகவாசனையில், என்னை யிழுத்துச்சென்று தீநெறியை யுபதேசித்து என்னை நசிக்கப்பண்ணுதல் அழகோ என்பதாம்.

**5.** எண்ணிய வெண்ணமெல்லா மிறப்புமேற் பிறப்புக்காசை
பண்ணியென்னறிவையெல்லாம்பாழாக்கியெனைப்பாழாக்கும்
திண்ணிய வினையைக்கொன்று சிறியனை யுய்யக்கொண்டால்
புண்ணிய நினக்கேயன்றோ பூரணானந்தவாழ்வே.

இ - ள். எண்ணிய எண்ணம் எல்லாம் - நான் எண்ணிய நல்லெண்ணங்கள் யாவையும், இறப்புமேல் பிறப்புக்கு ஆசை பண்ணி - இறப்புக்கும் மேல்வரக் கடவதாகிய பிறப்புக்குமே விருப்பமாகச்செய்து, என் அறிவை யெல்லாம் பாழாக்கி - என்னறிவு முழுதும் பாழ்படுத்தி, என்னைப் பாழ் ஆக்கும் - என்னையும் பாழாக்குகின்ற, திண்ணிய வினையை - வல்வினையை, கொன்று - கெடுத்து, சிறியனை உய்யக்கொண்டால் - சிறியேனை யுய்விக்க ஏற்றுக்கொண்டால், புண்ணியம் - அந்தப் புண்ணியம் நினக்கே அன்றோ - உனக்கேயல்லவா, பூரணானந்தவாழ்வே—.எ - று.

கடவுளே, என்னறிவையும் என்னையும் பாழாக்குகின்ற வினையைக் கெடுத்துச் சிறியேனை உய்யக் கொண்டனையாயின், அதனாலுளதாகும் புண்ணியம் உனக்கே யுண்டாமல்லவா என்பதாம்.

**6.** பத்திநீ பத்திக்கான பலனுநீ பலவாச்சொல்லும்
சித்திநீ சித்தர்சித்தித் திறமுநீ திறமார்மோன
முத்திநீ முத்திக்கான முதலுநீ முதன்மையான
புத்திநீ யெனக்கொன் றுண்டோ பூரணா னந்தவாழ்வே.

இ - ள். பத்தி நீ - பக்திரூபமாயிருப்பவனும் நீயே, பத்திக்கு ஆன பலனும் நீ - பக்திக்குரிய பல ரூபமாயிருப்பவனும் நீயே, பல ஆ சொல்லும் சித்தி நீ-பலவகையாகச் சொல்லப்படுகிறசித்திகளும் நீயே, சித்தர் சித்தித் திறமும்நீ-சித்தராது சித்திவகைகளும்நீயே, திறம்ஆர்மோனமுத்திநீ-உறுதியாகிய மோனமுத்தியும் நீயே, முத்திக்கு ஆன-முத்தியை யுதவுதற்குரிய, முதலும் நீ - முதல்வனும் நீயே, முதன்மையான புத்திநீ - முதன்மையாகிய அறிவும் நீயே, எனக்கு ஒன்று உண்டோ-எனக்கென்றொரு பொருளுளதோ, பூரணானந்தவாழ்வே—.எ - று.

கடவுளே, பத்திமுதலிய எல்லாம் நீயேயா யிருக்கச்செய்தே, எனக்கென வொருபொருளுண்டோ—.என்பதாம்.

**7.** தாயினு மினிய நின்னைச் சரணென வடைந்த நாயேன்
பேயினுங் கடையனாகிப் பிதற்றுதல் செய்தனன்றோ [லம்
தீயிடை மெழுகாய் நொந்தேன் றெளிவிலேன் வீணேகா
போயின தாற்றகில்லேன் பூரணா னந்தவாழ்வே.

இ - ள். தாயினும் இனிய நின்னை - தாயினு மினியனான வுன்னை, சரண் என அடைந்த நாயேன் - அடைக்கலமாக அடைந்த நாயினேன், பேயினும் கடையன் ஆகி - பேயினு மிழிந்தவனாகி, பிதற்றுதல் செய்தல் - பிதற்றுவது, நன்றோ - நன்மையோ, தீயிடை மெழுகு ஆய் நொந்தேன் - செந்தழலின் மெழுகுபோல வுருகினேன், தெளிவிலேன் - தெளி

விலாதேன், காலம் வீணே போயினது ஆற்றகில்லேன் - காலம் பயனற்றொழிந்ததைப் பற்றித் தரியேன், பூரணானந்தவாழ்வே—. எ - று.

கடவுளே, தாயினுமினியனான வுன்னைச் சரண்புகுந்த நான் பேயினுமிழிந்தேனாகிப் பிதற்றித் திரிதலழகாமோ, அழலிலிட்ட மெழுகுபோலுருகி நொந்தேன், அன்றியும், காலம்வீணே கழிந்ததைக்குறித்து ஆற்றகில்லேன் என்பதாம்.

மலைவளர்காதலி.

1. பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கண் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரொனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதுருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் றாளிற்
கருத்தொன் றுமுண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்தவொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூ தனன்றங்கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே.

இ - ள். நதி உண்ட கடல் என-பலநதிகளையும் உட்கொண்ட கடல் போல, சமயத்தை உண்ட - பல சமயங்களையு முட்கொண்ட, பரம் - மேலான, ஞான ஆனந்த ஒளியே-ஞானானந்தச்சுடரே, நாதாந்த ரூபமே- நாத தத்துவத்தின் முடிவாகிய வுருவே, வேதாந்த மோனமே - வேதமுடிவில் விளங்குகிற மௌனநிலையே, நான் என்னும் அகந்தை தீர்த்து - நானென்னு மகங்காரத்தைப்போக்கி, என் மதி உண்ட-என்னறிவை விழுங்கிய மதி ஆன - அறிவுருவமாகிய, மதிவதனவல்லியே - பூர்ண சந்திரனுக்கு நிகரான முகத்தையுடைய கொடிபோல்வாளே, மது சூதனன் தங்கையே- திருமாலுக்குத் திருத்தங்கையே, வரைராஜனுக்கு - மலையரையனுக்கு, இரு கண்மணியாய் உதித்த - இரண்டு கண்மணிபோலத் தோன்றிய, மலை வளர் காதலிப் பெண் உமையே—, கறை உண்ட கண்டர்பால்-விஷமுண்ட கண்டரிடத்து அமர்ந்த, அம்மை - அன்னையே, நின் தாளில் - உன் திருவடியில், கருத்து ஒன்றும் உண்டாகுமேல் - நினைப்பொன்றுமே

யுளதாயின், பதி உண்டு-நல்விடமுண்டு, நிதி உண்டு-செல்வமுண்டு, புத்திரர்கள் - புத்திரரும், மித்திரர்கள் - மித்திரரும், பக்கம் - உறவினரும், உண்டு - உண்டு, எக்காலமும்-எப்போதும், பவிசு உண்டு - திறமை உண்டு, தவிசு உண்டு - நல்ல சயனமுண்டு, திட்டாந்தமாக - த்ருஷ்டாந்தமாக, யமபடர் என்னும் திமிரம் அணுகா - யமதூதர் என்கிற இருள் அணுகாத, கதி உண்டு - சிறந்தகதியுண்டு, ஞானம் ஆம் கதிர் உண்டு - ஞானமாகிய சூரியனுண்டு, சதுர் உண்டு - சதுரதையுண்டு, காயசித்திகளும் உண்டு - பல்வேறு வகையான காயசித்திகளும் உண்டு, எ - று.

இருளொளி கட்குப்போல், யமபடர்க்கும் ஞானத்துக்கும் பகையுண்மைதோன்ற, "யமபடரெனுந் திமிரமணுகாக் கதியுண்டு, ஞானமாங் கதிருண்டு" என்றார். மதுசூதநன் - மதுவென்பவனைக் கொன்றவன். தவிசு ஆசநமெனினுமாம். மலைவளர் காதலி-தேவைநகரி லெழுந்தருளியிருக்கின்ற தேவியார் திருப்பெயர். மலைவளர் காதலிப் பெண்ணுமையே, எனக்கு உன் திருவடி மேலன்பொன்று முளதாயின், பதி முதலிய எல்லாமுண்டா மென்பதாம்.

**2.** தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையி லேநடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலேமேல்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்தி லேயுனிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே.

இ - ள். வலியமடமாதர் - வன்மையாகிய மடப்பத்தையுடைய மாதரது, தெட்டிலே - வஞ்சகத்திலும், வாய் வெட்டிலே - வாயின் வெட்டு வார்த்தையிலும், சிற்றிடையிலே - சிறிய இடையிலும், நடையிலே - நடையிலும், சேல் ஒத்த விழியிலே-சேல்போன்ற கண்களிலும், பால் ஒத்தமொழியிலே-பால்போன்ற இன்சொல்லிலும், சிறுபிறை நுதல் கீற்

றிலே - சிறு பிறைபோன்ற நெற்றி வகிரிலும், பொட்டிலே - அதிலிட்ட பொட்டிலும், அவர்கட்டு பட்டிலே - அவ ரணிந்திருக்கும் பட்டாடை யிலும், புனை கந்த பொடியிலே - பூசப்பட்ட பரிமளப் பொடியிலும், அடி யிலே - பாதங்களிலும், மேல் - மேலிடத்து, பூரித்த முலையிலே - இறு மாந்த முலைகளிலும், நிற்கின்ற நிலையிலே - நிற்கின்ற நிலையிலும், புந்தி தனை நுழையவிட்டு - புத்தியைப் புகவிட்டு, நெட்டிலே அலையாமல் - (மனம்) போனபோக்கிலே யுழலாமல், அறிவிலே - ஞானமார்க்கத்திலும், பொறையிலே - பொறுமையிலும், நின் அடியர் கூட்டத்திலே - உன் தொண்டர் குழாத்திலும், நிலைபெற்ற அன்பிலே - நிலைபெற்ற அன்பிலும், மலைவு அற்ற - மயக்கமற்ற, மெய்ஞ்ஞான ஞேயத்திலே - உண்மைஞான நேசத்திலும், உன் இருதாள் மட்டிலே-உன்னிரண்டு திருவடியி னளவி லும், மனதுசெல்ல - என் மனஞ் செல்லும்படி, நினது அருளும் அருள் வையோ-உன்னருளையுந் தந்தருள்வையோ, வளம் மருவு - வளம்பொருந் திய, தேவை அரசே - தேவைநகர்க் கரைசியே, வரைராஜ—.எ - று.

மலைவ்ளர் காதலிப்பெணுமையே, என்மனத்தை மாதர் வஞ்சனை முதலியவற்றில் செலுத்தாமல் ஞானமார்க்க முதலியவற்றிற் செலுத்து மாறு அருள்புரியவேண்டும் என்பதாம்.

வாய்ச்சொல் முதலியவற்றால் ஆடவரைவயப்படுத்துதற்குக் காரணம் வஞ்சனையாதலால், தெட்டு என அதனை முதற்கட் கூறினார், வாய்வெட்டு- ஆடவர் சொற்களைக் கண்டித்துப்பேசுதல். இன்னதுபோலுஞ் சிற்றிடை யென்றது சிற்றிடையென வாளா கூறினமையால், சிறுமையின் இறுதி யெல்லையளவுங் கொள்ளப்படும். இதனை " எம்மையா ளுடையா ளிட்டி டையின் மின்னி " " அகல்கின்ற வல்குற்றடமது கொங்கை யவையவநீ- புகல்கின்ற தென்னைநெஞ் சுண்டே யிடை " "பொட்டணி யானுதல் போயிறும்பொய்போ லிடையெனப்பூ - ணிட்டணியான்" எனப் பல்லாற் றானும் புனைந்துரைக்கு மேலோர் கூற்றானு முணர்க. நடை - அன்னப் பேட்டின் நடைபோலும் நடை. இதனை," ஓங்குதெய்வ மருவளர் மாலை யோர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்து " " குன்முதிர் துள்ளுநடைப் பெடைக் கிற்றுணைச் சேவல் செய்வான் - தேன்முதிர் வேழத்தின் மென் பூக்குதர் செம்மனூரான் " பேட்டன மடவ நடைபயில் பிடியை" அன் னஞ் சிலம்பு நடையிளமானை" என்றற் றொடக்கத்தனவற்றாற் காண்க. சேலொத்த விழி - சேல்போல மிளிரும் கண். மிளர்தல் - வலமிடமாகப் பிறழ்தல், இதனை, "செழுநீர்த் தடத்துக் கயன்மிளிர்ந் தாலொப்பச் சேயரிக்கண், அழுநீர் துளும்ப வலமரு கின்றன " "வேல்போ னிறம் படைத்து வீரவாள் போலிரண்டு-சேல்போற் கயல்போற் றிசைபரந்து " " கயலோ நும கண்கள் ". " அங்கயற்கண்ணி " என்றற் றொடக்கத்

தனவற்றானும் உணர்க. பாலொத்தமொழி - பாலின் சுவைபோலுஞ் சுவையினையுடைய மொழி. இதனை, "பாலூறு தேன்வாய்ப்படிறீ கடைதிறவாய்" "பாலேய் மொழியினள்" என்றற் றொடக்கத்தனவற்றானும் உணர்க. சிறுபிறை நுதல் பூர்வபக்ஷத் தட்டமி சந்திரன்போலும் நெற்றி, இது, "பூருவபக்கத் தட்டமி விதுவைப்போ லொளிர்நுதலினாள்" என்றற் றொடக்கத்தனவற்றா னுணர்க. பொட்டு - "சிக்காப்புள், ஒட்டுக்குளரவதுபோ லுள்ள பணக்காரர்களுன் பொட்டுக்குளாகவென்று பொட்டிட்டாள்" என்றபடி ஆடவரை வசிகரித்தற்பொருட்டு நெற்றியி லிடுந் திலகம்.

பூரித்தமுலை - "புலியூரம் பலவர்க்குற்ற பத்தியர்போலப் பணைத்திறுமாந்த பயோதரத்து" "இருப்பைவிட் டயனுர் நெடிதுநாட் டவஞ்செய் திருகையுஞ் சிந்தையும் வருந்திச், செருப்பயின் றிறந்த மதனனைச் சூட்டத் திருமுடி வேண்டுமென் றியானை, மருப்பையும் கும்பத் தலத்தையுஞ் சக்ரவாகத்தை யும்வட கனகப், பொருப்பையும் படைத்துத் தெளிந்தபின் படைத்த புளகித பூரண முலையாள்" என்றபடி இறுமாந்த முலை. நிற்கின்ற நிலை - இவ்வாறான அவயவ வொப்பனையோடு ஆடவருடைய கண் மனங்களைக் கவர்தற் குரித்தாய் நிற்கிற நிலை. தெட்டிலே வலிய என வியைத்து, வஞ்சித்தலில் வலிய என வுரைப்பினு மமையும். தெட்டுதல் முதலியவற்றானும், மாதர் எனப் பன்மையாற் கூறினமையானும் இது பொருட்பெண்டிரை நோக்கினதாகத் தோன்றுகின்றது.

**3.** பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
  பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
  போதபூ ரணவெளிக்குள்
ஏதுமற நில்லென் றுபாயமா வைத்துநினை
  வெல்லாஞ்செய் வல்லசித்தாம்
இன்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
  யெளியேன் மறந்துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
  விளக்குமுட் கண்ணிலார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
  வீறுவா தம்புகலும்வாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
  மாமருந் துக்கமிர்தமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
  வளர்காத லிப்பெண்ணுமையே.

இ - ள். பூதமுதலாக - பிருதிவியாதி பூத முதலாக, நாத பரியந்தமும் - நாத தத்துவம் வரைக்கும், பொய் யென்று - பொய்யாமென்று, என்னைக்காட்டி - என்னை யறிவுறுத்தி, என் போதத்தின் நடுவாகி - என்னறிவினிடையாகி, அடியீறும் இல்லாத - ஆதியந்தங்களில்லாத, போத பூரண வெளிக்குள் - ஞானபூர்ணமாகியசிதாகாயத்தில், ஏதும் அறநில் என்று - ஒன்றுமற நிற்பாயென்று, உபாயமா வைத்து - உபாயமாகவைத்து, நினைவு எல்லாம் - எண்ணங்களையெல்லாம், செய்வல்ல - பலிக்கச் செய்யவல்ல, சித்தாம் - ஞானமாகிய, இன்பவுருவைத் தந்த - சுகவடிவைத் தந்தருளிய, அன்னையே - தாயே, நின்னையே - உன்னையே, எளியேன் - ஏழையேன், மறந்து உய்வனோ - மறந்துய்வேனோ, வேதம்முதலான - வேதமுதலாகிய, நல்ஆகமம்தன்மையை - நல் ஆகமத்தின் தன்மையை, விளக்கும் - விளக்கிக் காட்டுகிற, உள் கண் இல்லார்க்கும் - அகக்கண்ணில்லாதார்க்கும், மிக்க - மேலான, நின்மகிமையை - உன் பெருமையை, கேளாத செவிடர்க்கும் - கேட்காத செவிடர்கட்கும், வீறுவாதம் புகலும் வாய் - விஞ்சியவாதம் பேசுகின்ற வாயையுடைய, வாதநோயாளர்க்கும் - வாதநோயாளிகட்கும், எட்டாத - எட்டப்படாத, முக்கண் உடை - மூன்று கண்களையுடைய, மாமருந்துக்கு - பெரிய அமிர்தத்துக்கு, அமிர்தமே - அமிழ்தாயிருப்பவளே, வரைராஜ—, எ - று.

மலைவளர் காதலிப் பெண்ணுமையே, பிருதுவிமுதல் நாததத்துவமீறாயுள்ளவைகள் பொய்யென்று என்னை யறிவுறுத்தி, என்னறிவிற்கறிவாகி, சிதாகாயத்திற் றங்குகவென் றுபாயங் கற்பித்து, எல்லாம் வல்ல ஞானாநந்த வுருவைத் தந்த அன்னையே, இவ்வாறு சர்வோபகார பூதையான வுன்னை, ஏழையேன் மறந்து, வேறோராற்றான் உய்யும் விரகுளதோ வென்பதாம்.

"ஆறாறையு நீத்த தன்மேனிலை" என்ற ஆன்றோர் திருவாக்குக்கிணங்க, 'பூதமுதலாகவே நாதபரியந்தமும் பொய்யென்றெனைக்காட்டி' யென்றார்.

4. மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
மெய்யெலா முள்ளுடைந்து
வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுற வேதனும்
துடியிட்ட வெவ்வினையை யேவினான் பாவிநான்
தொடரிட்ட தொழில்க ளெல்லாம்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
றொண்டர்பணி செய்வ தென்றோ

வடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரி
லரிவையோர் பரவை வாயில்
அம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிக
ளடியீது மூடியீ தென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே.

இ - ள். மிடியிட்ட வாழ்க்கையால் - வறுமையாகிய வாழ்க்கையி னுல், உப்பு இட்ட கலம் எனவும் - உப்புவைத்த மட்கலம்போலவும், மெய் யெலாம் உள் உடைந்து - சரீரமெல்லாம் உள்ளுடைந்து, வீறிட்ட செல்வர் - மிகுந்த செல்வரது, தலைவாயில் வாசமாய் - தலைவாயிலே வாசஸ்தான மாகக்கொண்டு, வேதனைகள் உற - வேதனைகளை யடைய, வேதனும் - பிரமனும், துடியிட்ட வெவ்வினையை - பதைத்தற்குரிய வெவ் வினைகளை, ஏவினுன் - ஏவிவிட்டான், பாவிநான் - பாவியாகிய நான், தொடரிட்டதொழில்க ளெல்லாம் - தொடங்கின தொழில்கள் யாவும், துண்டிட்ட - துண்டிக்கப்பட்ட, சாண்கும்பியின் பொருட்டாயது - சாண் வயிற்றி னளவாயினவே, (இதைவிடுத்து) உன்தொண்டர் பணிசெய்வது என்ருே - உன்னடியார் பணிசெய்வ தெக்காலமோ, வடியிட்ட செந்தமி ழின் அருமையிட்டு - பழமையாகிய செந்தமிழின் அருமையைக் குறித்து, ஆரூரில் - திருவாரூரின்கண், அரிவை - பெண்ணுகிய, ஓர்பரவை - ஒப்பற்றபரவை யென்பாளது, வாயில் - தலை வாயிலாகிய, அம்மட்டும் - அதுவரைக்கும், அடியிட்டு - திருவடிகளை யூன்றி, நடை நடந்தருள் - நடைநடந்தருளிய, அடிகள் - இறைவரது, அடி ஈது - மூலமிது, மூடி ஈது - ஈறு இது, என - என்று, வடியிட்ட - தெளிவித்த, மறை - வேதங்களை, பேசு - பேசுகின்ற, பச்சிளங்கிள்ளையே - பச்சிளங் கிளியே, வளம் மருவு தேவை அரசே - வளம்பொருந்திய தேவைநகர்க் கரை சியே, வரைராஜ—, எ - று.

செந்தமிழி னருமையிட்டு என்றது, சுந்தரமூர்த்தி சுவாமிகளது செந்தமிழ்ப்பாடல்களின் அருமையைக் குறித்து என்றபடி.

மலைவளர் காதலிப் பெண்ணுமையே, யான் ருெடங்கிச் செய்யுந் தொழில்கள் யாவும் சாண்வயிற்றின் பொருட்டேயாம், இதை விடுத்து உன்னடியார் பணிசெய்வ தெக்காலமோ வென்பதாம்.

" பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர்சற்றல்லவே.—" என்ருர் பட் டணத்தடிகளும்.

உப்பிட்ட மட்கலம் மேலுக்கு நன்கு தோன்றினும், உட்புறத்து உளுத்துப்பொடியா யுதிர நிற்பதுபோல, இந்தச் சரீரமும்மேலுக்கு நன்கு தோன்றினும் உள்ளிடம் மனோதுக்கம் முதலியவற்றால் சிதைந்து நிற்கு மாதலால், உப்பிட்ட கலமெனவு மெய்யெலா முள்ளுடைந்து என்றார். 'பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகிய பொய்க்கூரை' என்றார் மேலோரும். "செல்வரைப் பின்சென்று சங்கடம்பேசித் தினந் தினமும், பல்லினைக் காட்டிப் பரதவியாமல்" என்றதற் கேற்ப, "வீறிட்ட செல்வர்தந் தலைவாசல் வாசமாய் வெதனைக ளுற" என்றார்.

**5.** பூரணி புராதநி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழில்
புங்கவி விளங்குசிவ சங்கரி சஹஸ்ரதள
புஷ்பமிசை வீற்றி ருக்கும்
நாரணி மநாதீத நாயகி குணாதீத
நாதாந்த சக்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச் சரிக்க வசமோ
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்த ரூப மயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கை புகழ்
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே.

இ - ள். பூரணி (என்று) - பூரணியென்றும், புராதனி (என்று)-புராதனியென்றும், சுமங்கலை (என்று)-சுமங்கலையென்றும், சுதந்தரி (என்று)-ஸ்வதந்தரியென்றும், புராந்தகி (என்று) - புராந்தகியென்றும், த்ரியம்பகி (என்று) - த்ரியம்பகி யென்றும், எழில்-அழகுள்ள, புங்கவி (என்று)-புங்கவியென்றும், விளங்கு - விளங்குகின்ற, சிவசங்கரி (என்று) - சிவசங்கரி யென்றும், சஹஸ்ரதள புஷ்பமிசை வீற்றிருக்கும்-ஸஹஸ்ரதளங்களுள்ள தாமரைமலரில் வீற்றிருக்கிற, நாரணி(என்று)-நாரணியென்றும், மநாதீத நாயகி(என்று)-மனத்துக்கெட்டாத இறைவி யென்றும், குணாதீதம்-குணங்களற்ற, நாதாந்தசத்தி (என்று)-நாதாந்த சத்தியென்றும், உன்நாமமே உச்சரித்திடும்-உன் திருநாமங்களையே யுச்சரிக்கின்ற, அடியார் நாமமே-அடியார்களுடைய திருநாமங்களையே, நான் உச்சரிக்கவசமோ-நானுச்சரிக்கவசமாமோ, ஆர் அணி சடை - ஆத்திமலர் மாலையையணிந்த சடையையுடைய,

கடவுள் - சிவபிரான், ஆரணி எனப்புகழ - வேதமுதல்வியென்று துதிக்க, அகிலாண்ட கோடி யீன்ற - அண்டகோடிகளெல்லாவற்றையு மீன்றருளிய, அன்னையே - தாயே, பின்னையும் - (அப்படி எல்லாவுலகங்களையு மீன்றருளிய) பின்னும், கன்னியென - பாலையென்று, மறைபேசும் - வேதங்கள் துதிக்கின்ற, ஆநந்த ரூபம் மயிலே - சுகரூபமாகிய மயில்போல்வாளே, வார் அணியும் - கச்சையலங்கரிக்கின்ற, இரு கொங்கை மாதர் - இரண்டு ஸ்தனபாரங்களி னழகையும், மகிழ் - மகிழ்ச்சியையுமுடைய, கங்கைபுகழ் - கங்கையால் புகழப்பெற்ற, வளமருவு தேவை யரசே வரை ராஜ.

ஆர் அணி சடை - அழகு நிரைந்த சடையெனினுமாம். வார் அணியும் - கச்சை தரித்த எனினும் பொருந்தும்.

மலைவளர்காதலிப் பெண்ணுமையே, பூரணி முதலியவாகிய உன் திருநாமங்களை யுச்சரிக்கின்ற உன்னடியார் திருநாமத்தை அடியேன் உச்சரிக்க வசமாமோ என்பதாம்.

பூரணி முதலிய திருநாமங்கள் இறைவனைப்பற்றி இறைவிக்கு முள வாதலால் இவ்வாறு கூறினர். பூரணி - சர்வ வியாபினி. புராதனி - பழையோள். சுமங்கலை - சுமங்கலியை. இது, "வேதரஞ்சகன் மால் புரந்தரன் வேகசண்டகு பேரனே, டாதி யெண்டிசை பாலர் பொன்றவு மாதியந்தமிலாததோர், நாதர் பொன்றில ரேதுன் மங்கல நாணுறுந்திற மாதலால்" என்பதனு லினிது விளங்கும். சுதந்தரி - தன்வயத்தி. புராந்தகி - திரிபுர நாசனி. த்ரியம்பகி - மூக்கண்ணி. புங்கவி - தேவத்வ பூர்த்தி யுள்ளவள். சங்கரி - சுகத்தையுண்டாக்குபவள். சஹஸ்ரதள புஷ்பம் - ஆயிரமிதழ்களுள்ள தாமரைமலர். இதனை வடநூலார் ஸஹஸ்ராரகமலம் என்பர், இது, மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞேயம் என்னும் ஆராதாரங்களுக்கு மேலுள்ளது. இது,

"மூலமணி பூரகத்தோ டிலிங்க மார்பு
 முதுகளம்விற் புருவநடு மொழிவதாறு
ஞாலமுமென் புனலுமனற் பிழம்புங் காலு
 நாதமுறு பெருவெளியு மனமுமாக
மேலனுக்கி குளபதத்தைப் பின்னிட் டப்பான்
 மென்மகலத் தாயிரந்தோட் டருண பீடத்
தாலவிடம் பருகியதன் மகிழ்நரோடு
 மானந்த முறும்பொருளை யறியலாமே."— என்பதனு லினிது விளங்கும். புஷ்பமிசை வீற்றிருக்கும் நாரணி - சிரத்திலே ஆயிரம் இதமுடனே கூடியிருக்கும் தாமரையின் நடுவே வீற்றிருக்கின்ற ஞான மகிழ்ச்சியையுடைய மின்போன்ற குண்டலி சத்தி, தன்னுடைய இரண்டுபாத கமலங்களிலும் உள்ளிருந்து ஊறிப் புறப்படும் அமுதம் உள்ளண்ணத்தின் வழியே நாநுனியைச் செலுத்திப் பருகுதலால் உடலிலே பரந்து

எழுபத்திராயிர நாடிகளையும் நனைப்ப, அதன்பின்பு கும்பித்த வாயுவை ரேசிப்ப, அதனால், மீண்டு அவ்விடங்களையெல்லாம் அடைவிலே விட்டுக் கீழ் இறங்கி, தான் முன்னிருந்த பழைய மூலாதாரத்திலே, ஒளியை யுடைய பாம்புபோல உடல்வளைத்து, மேற்கொண்டிருக்கிற படத்தை யுடையதாய், நாடோறும் மையையுடைய கயல்போன்ற கண்ணினால்யோக நித்திரைசெய்யும் சத்தி. இது,

"தாளிணைக் கமல மூறித் தருமமிழ் துடல மூழ்க
மீளவப் பதங்கள் யாவும் விட்டுமூற் பழைய மூலம்
வாளர வென்ன வாகம் வளைத்துயர் பணத்தி னோடு
நாளுமைக் கயற்கண் டுஞ்சு ஞானவா னந்த மின்னே"-என்பதனு

லினிது விளங்கும். மூலாதாரம் முதலிய ஆறுக்கும் - குதம், குய்யம், நாபி, இதயம், அடிநா, நெற்றி என்பன முறையே யிடங்களாம். இவற் றின் விரிவெல்லாம் யோக நூல்களிற் காண்க.

6\. பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்மல
  பரிபாகம் வரவு மனதில்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
  பாவியேன் பாப ரூப
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
  சிந்தியேன் பேரின்பமோ
சேரவென் றாற்கள்ள மனதுமோ மெத்தவுஞ்
  சிந்திக்கு தென் செய்குவேன்
மோகமோ மதமோகு ரோதமோ லோபமோ
  மூற்றுமாற் சரிய மோதான்
மூறியிட் டெனைக்கொள்ளு நிதியமோ தேடவெனின்
  மூசுவரி வண்டுபோல
யாகமோ டவும்வல்ல னெனையாள வல்லையோ
  வளமருவு தேஜவயரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
  வளர்காத லிப்பெ ணுமையே.

இ - ள். உன்னை-உன்னை, பாகம்பெறப் பாட அறியேன்-பாகமமையப் பாட வறிந்திலேன், மலபரிபாகம் வரவும் - மலபரிபாக முண்டாதற்கும், மனதில் பண்புமோ சற்றும் இலை - மனதில் நற்குணமும் சிறிதுமில்லை, நியமமோ செய்திட - நியமம் பண்ணவென்றாலோ, பாவியேன் - பாபிஷ் டனாகிய எனது, பாபரூப தேகமோ - பாவவடிவாகிய தேகமோ, திடம் இல்லை - த்ருடமில்லை, ஞானமோ - ஞானத்தை யென்றாலோ, கனவிலும் சிந்தியேன் - கனவிலும் நினையேன், பேரின்பம்சேர என்றாலோ - பேரா

ணந்தத்தை யடையவென்றாலோ, கள்ள மனதும் - கள்ளமனமும், மெத்த வும் சிந்திக்குது - மிகவுஞ் சிந்திக்கிறது, என்செய்குவேன் - நான் என் செயக்கடவேன், மோகமோ - மோகமொன்றேயோ, மதமோ - மதமொன் றேயோ, குரோதமோ-குரோதமொன்றேயோ, லோபமோ - லோபமொன் றேயோ, முற்றும் மாற்சரியமோ-முற்றுப்பெற்ற மாற்சரிய மொன்றேயோ, (இவைகள் யாவும்) முறியிட்டு என்னைக்கொள்ளும் - முறியெழுதி யென்னைக்கொள்ளா நின்றன, நிதியமோ தேடவெனின் பொருள் தேட வென்றாலோ, மூசு - (பல மலரினும்) மொய்க்கு மியல்புள்ள, வரிவண்டு போல - கீற்றமைந்த வண்டுபோல, மாகம் ஓடவும் வல்லன் - ஆகாயத்தி லோடவும் வல்லேன், என்னை ஆளவல்லையோ - (இப்படிப்பட்ட) என்னை யாளு மாற்ற லுடையையோ, வள மருவு தேவையரசே வரைராஜ—, எ-று.

மலைவளர்காதலிப் பெண்ணுமையே, உன்னைப் பாகம்பெறப்பாடுதல் முதலியவை செய்யவறியேன், ஆதலால் என்னை உய்விக்கும் பொருட்டு உன் பெருங்கருணை காரணமாக ஆண்டருளவல்லையோ என்பதாம்.

**7.** தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி நாளும்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவை யெல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றின்
நட்பேற வுள்ளு டைந்து
நயனங்க ளற்றதோ ரேறு போலவே
நானிலந் தனி லலையவோ
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலை சூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங் கூந்தலாய்
வாளேறு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்த மயிலே
வரைராஜ னுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே.

இ-ள். தூள் ஏறு - துகளேறப்பெற்ற, தூசுபோல் - வஸ்திரம் போல, வினை ஏறு - கர்மங்களேறப்பெற்ற, மெய் என்னும் - சரீரமென் கிற, தொக்கினுள் - தோற்பையுள்ளே, சிக்கி-அகப்பட்டு, நாளும் - நாடோ றும், சுழல் ஏறு காற்றினிடை - சுழற்காற்றி லகப்பட்ட, அழல் ஏறு பஞ்சு என - நெருப்புப்பட்ட பஞ்சுபோலப் பறக்கும்படி, அறிவையெல் லாம் சூறையிட்டு - அறிவைமுற்றுஞ் சூறையாடி, நாள் ஏற நாள் ஏற

தினங்கள் செல்லச்செல்ல, வார்த்திகம் என்னும் - மூப்பு என்கிற, கூற்றின் - யமனது, நட்பு ஏற-சிநேகம் அதிகரிக்க, உள்ளுடைந்து - மனங் கலங்கி, நயனங்கள் அற்றது - கண்களற்றதாகிய, ஓர் ஊர் ஏறுபோலவே - ஒரு ஊர்ப்பன்றிபோலவே, நான் - யான், நிலந்தனில் - பூமியினிடத்து, அலையவோ - திரிய (உனக்குத் திருவுளந்தானோ), வேள் ஏறு தந்தியை - மன்மதனேறி நடத்தும் யானையை, கனதந்தியுடன் வென்று - மேகங்களாகிய யானைகளோடு வென்று, விரையேறு மாலை சூடி - பரிமளம் விஞ்சிய மலர்மாலைகளைத்தரித்து, விண் ஏறு மேகங்கள் - ஆகாயத்திலேறிச் சஞ்சரிக்கிற மேகங்கள், வெற்பு ஏறி மறைவுற - மலைமேலேறி மறைய, வெருட்டிய - அச்சுறுத்திய, கருங்கூந்தலாய்-கரிய கூந்தலையுடையாளே, வாள் ஏறு கண்ணியே - வாளின்றன்மை மிக்க கண்களையுடையாளே, விடையேறும் எம்பிரான் மனதுக்கு இசைந்தமயிலே - இடபமூரு மெம்பெருமானது திருவுளத்துக்கிசைந்த மயூரமே, வரைராஜ—, எ - று.

வேளேறு தந்தி-இருள். இதை "இருண்மால்களிறும்" என்பதனானும், 'கங்குல் களிறு' என்பதனானு முணர்க. வாள் ஏறு கண்ணி என்பதற்கு ஒளி மிகுந்த கண்களையுடையாள் எனினு மமையும். கனபந்தி எனவும் பாடம். இதற்கு மேகவரிசை யென்பது பொருள்.

மலைவளர்காதலிப் பெண்ணுமையே, வினைப்போகமாகிய சரீரத்தில் கட்டுப்பட்டு,படாதனபட்டு, இறுதிக்காலத்தில் கூற்றுவன் வருவனென்றஞ்சி உள்ளங்கலங்கிக் கண்கெட்ட வூர்ப்பன்றிபோல நானலையவோ என்பதாம்.

**8.** பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமூத லான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்களொன்
போதத்தை யூட மித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானி வல்ல லெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியந் தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்த மயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரிய பொருளே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே.

இ - ள். பூதமொடு பழகிவளர் - பூதங்களோடு பழகி வளர்கின்ற, இந்திரியம் ஆம் பேய்கள் - இந்திரியங்களாகிய பேய்கள், புந்தி முதலான பேய்கள் - புத்திமுதலாகிய பேய்கள், போராடு - போராடுகின்ற, கோபாதி ராக்ஷசப்பேய்கள் - கோபம் முதலாகிய ராக்ஷசப்பேய்கள், (ஆகிய இவைகள்) என்போதத்தை ஊடு அழித்து - என்னறிவை யுள்ளழித்து, வேதனை வளர்த்திட - துன்பத்தை விருத்திசெய்யும்படி, சதுர்வேத வஞ்சன் விதித்தான் - பிரமன் வகுத்தான், இவ்வல்லல் எல்லாம் - இத் துன்பங்களெல்லாம், வீழும்படிக்கு - நசிக்கும்படிக்கு, உனது - உன்னுடைய, மௌனமந்த்ரம்-மௌனமந்திரமாகிய, ஆதிக்ய வித்தையை - மேன்மையாகிய வித்தையை, வியந்து அருள்வையோ - மனமகிழ்ந் தருளிச் செய்வையோ, நாதவடிவாகிய-நாதரூபமாகிய, மஹாமந்த்ர ரூபியே-மஹாமந்த்ர ரூபமுள்ளவளே, நாதாந்த வெட்டவெளியே - நாதாந்தமாகிய வெறுவெளியே, நற்சமயமானபயிர் - (சைவமென்கிற) சற்சமயமாகியபயிர், தழையவரு மேகமே-செழிக்கவருகின்ற மேகமே, ஞான ஆனந்த மயிலே - ஞானானந்தங்களையுடைய மயிலே, வாதம்இடு - தர்க்கவாதஞ்செய்கிற, பரசமயம் யாவுக்கும் - இதரசமயங்க ளெல்லாவற்றுக்கும், உணர்வு அரிய - அறிதலருமையாகிய, மகிமைபெறு-மேன்மைபெற்ற, பெரிய பொருளே - பெரிய வஸ்துவே, வரைராஜ—, எ - று.

"சைவசமயமேசமயம்" என்பதனல், நற்சமயம் என்றதற்குச் சைவ சமயம் என் றுரைக்கலாயிற்று. வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன் விதித்தான் என்றது, அவனது கல்வியறிவிற் குரிய அஹிம்ஸை முதலிய நற்குணங்க ளிலனென்றற்கு. சதுர்வேத அஞ்சன் எனப் பிரித்து, நான்குவேதங்களையும் அன்னவாகனத்தையு முடையவன் என வுரைத்தலும் பொருந்தும்.

மலைவளர்காதலிப் பெண்ணுமையே, இந்திரியப்பேய்கள் முதலியவை என்னறிவைக்கெடுத்து வேதனையை விருத்தி யடைவிக்கும்படிப் பிரமனுகிய வஞ்சகன் விதித்தனன். இவ்வேதனைகளெல்லாம் நிர்மூலமாம்படி, உனது மௌனமந்த்ர வித்தையை, மனமகிழ்ந்து எனக் கருள் புரிவையோ என்பதாம்.

---

அகிலாண்டநாயகி.

1. வட்ட மிட்டொளிர்பி ராண வாயுவெனு
நிகள மோடுகம னஞ்செயும்
மனமெ னும்பெரிய மத்த யானையைஎன்
வசம டக்கிடின்மு மண்டலத்
திட்ட முற்றவள ராஜ யோகமிவன்
யோக மென்றறிஞர் புகழவே

ஏழை யேனுலகி னீடு வாழ்வனினி
யிங்கி தற்குமனு மானமோ
பட்ட வர்த்தனர் பராவு சக்கரதர
பாக்ய மானசுக யோகமும்
பார காவியக வித்வ நான்மறை
பாரய ணஞ்செய்மதி யூகமும்
அட்ட சித்தியுந லன்ப ருக்கருள
விருது கட்டியபொ னன்னமே
அண்ட கோடிபுகழ் காவை வாழுமகி
லாண்ட நாயகியெ னம்மையே.

இ - ள். வட்டமிட்டு ஒளிர் - வட்டமிட்டுப் பிரகாசிக்கிற, பிராண வாயு என்னும் - ப்ராணவாயுவென்கிற, நிகளமோடு - விலங்குடன், கமனம் செய்யும் - நடக்கின்ற, மனம் என்னும் - மனமென்கிற, பெரிய மத்த யானையை - பெரிய மதயானையை, என்வசம் அடக்கிடின் - என் வசத்தில் அடங்கும்படி செய்தால், மும்மண்டலத்து - மூன்றுலகங்களிலும், இட்ட முற்ற - விரும்பத் தகுதியான, வளம் - வளம்பொருந்திய, ராஜயோகம் - ராஜயோகமே, இவன் யோகம் என்று - இவனது யோகமென்று, அறிஞர் புகழ - அறிஞர் புகழும்படி, ஏழையேன் - எளியேன், உலகில் நீடுவாழ்வன் - உலகில் நெடுங்காலம் வாழ்வேன், இனி - இனி, இங்கு இதற்கும் அனுமானமோ - இவ்விடத்து இதற்கும் அனுமானந்தானோ, பட்டவர்த்தனர் பராவு - பட்டவர்த்தநர் துதிக்கத்தக்க, சக்ரதர பாக்யமான-சக்ரவர்த்தித்வமென்கிற பாக்கியமாகிய, சுகயோகமும் - சுபயோகத்தையும், பார காவிய கவித்வம் - பெருங்காவிய கவித்வத்தையும், நான்மறை - நான்கு வேதங்களை, பராயணஞ்செய் பராயணஞ் செய்யும்படியான, மதியூகமும் - மதிநுட்பத்தையும், அட்டசித்தியும் - அட்டமாசித்திகளையும், நல் அன்பருக்கு அருள - நல்லடியார்க் கருள்செய்ய, விருது கட்டிய - விருது கட்டிக்கொண்ட, பொன் அன்னமே-ஸ்வர்ண ஹம்ஸம்போல்பவளே, அண்ட கோடி புகழ் - அண்டகோடிகள் புகழ்கின்ற, காவை வாழும் - திருவானைக் காவில் வாழ்கின்ற, அகிலாண்ட நாயகி - அகிலாண்ட நாயகியென்னும் திருநாமம்படைத்த, என் அம்மையே - என்தாயே, எ - று.

அகிலாண்டநாயகியே, வாயுமனங்கள் என் வயப்படும்வண்ணம் அருள் புரிவையாயின், மூன்றுலகங்களும் புகழ யான் இனிது வாழ்வேன் என்பதாம்.

## பெரியநாயகி - விருத்தம்.

**1.** காற்றைப் பிடித்துமட்கரகத் தடைத்தபடி
கன்மப் புனற்கு ளூறும்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மட்கலக்
காயத்து ளென்னை யிருத்திச்

சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குண் மது வென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேனருட்
டோயநீ பாய்ச்சல் செய்து

நாற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை
நாட்டிப் புலப் பட்டியு
நமனென தீப்பூடு மணுகாமன் முன்னின்று
நாடுசிவ போக மான

பேற்றைப் பகுத்தருளி யென்னையாள வல்லையோ
பெரியவகி லாண்ட கோடி
பெற்றநா யகிபெரிய கயிலைமா நகர்மருவு
பெரியநா யகி யம்மையே.

இ - ள். காற்றைப்பிடித்து - வாயுவைப்பிடித்து, மட்கரகத்து - மட்கலயத்தில், அடைத்தபடி - அடைத்தது போல, கன்மப் புனற்குள் ஊறும் - கர்மமாகிய நீரில் ஊறிக்கொண்டிருக்கிற, கடைகெட்ட-இழிந்த, நவவாயில் பெற்ற - ஒன்பது வாயில்களையுடைய, பசு மட்கலம் - பச்சை மண்பாத்திரம்போன்ற, காயத்துள் - தேகத்தினுள்ளே, என்னை யிருத்தி- என்னை யிருக்கச்செய்து, சோற்றைச் சுமத்தி - அன்னத்தையேற்றி, நீ பந்தித்து வைக்க - நீ கட்டிவைக்க, துருத்திக்குள் மது என்ன - துருத்தியிலடைத்துவைத்த கள்ளைப்போல, துள்ளித் துடித்து - துள்ளிப்பதைத்து, என்னபேறு பெற்றேன் - என்னலாப மடைந்தேன், (ஒன்றுமில்லை யாதலால்) நீ அருள் தோயம் பாய்ச்சல் செய்து - நீ உன் திருவருளாகிய நீரைப் பாய்ச்சி, நாற்றைப் பதித்தது என - நாறு பதித்தாற்போல, ஞானம் ஆம் பயிரதனை நாட்டி - ஞானமாகிய பயிரை நட்டு, புலம் - புலன்களாகிய, பட்டியும் - பட்டிமாடுகளும், நமன் ஆன - யமன் என்று சொல்லப்படுகிற, தீப்பூடும் - தீப்பூடும், அணுகாமல் - சேராமல், முன்னின்று-எதிரில்நின்று, நாடு - விரும்புதற்குரிய, சிவபோகம் ஆன பேற்றை - சிவாநுபவமாகிய பலனை, பகுத்தருளி - பகிர்ந்தருளி, என்னை ஆள வல்லையோ - என்னை யாண்டருள வல்லையோ, பெரிய - பெரிதாகிய, அகிலாண்டகோடி - அகிலாண்டகோடிகளை, பெற்ற நாயகி - ஈன்றருளிய

இறைவியே, பெரிய-பெரிய, கபிலைமாநகர் மருவு - கபிலைமாநகரில் எழுந்தருளியிருக்கிற, பெரியநாயகி அம்மையே - பெரியநாயகி யம்மையே, எ-று.

பெரியநாயகியம்மையே, சரீரத்துள் என்னை யிருத்திவைக்க, திருத்தியிற் கள்ளைப்போலத் துள்ளித் துடித்து என்ன பயனடைந்தேன், உன்னருளாகிய நீர் பாய்ச்சி, சிவாநுபவவிளைவை யெனக்குப் பகிர்ந்தருளி, என்னைக் காக்கவல்லையோ வென்பதாம்.

---

## தந்தைதாய்.

**1.** தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்து மௌனியரு டழைத்தபோதே
இந்திரசா லங்கனவு கான னீராய்
இருந்ததுவே யிவ்வியற்கை யென்னே யென்னே.

இ - ள். தந்தைதாய் - தந்தைதாயார், மகவு - பிள்ளை, மனை - மனையாள், வாழ்க்கை - (இவர்களோடு கூடிவாழும்) வாழ்வு, யாக்கை - சரீரம், சகம் - இந்தப் பிரபஞ்சம், (ஆகிய) அனைத்தும் - எல்லாம், மௌனி அருள் தழைத்தபோதே - மௌன குருவினது அருள் செழித்தபோதே, இந்திரசாலம் (ஆய்) - இந்திரசாலம்போலவும், கனவு (ஆய்) - கனவுபோலவும், கானல் நீர் ஆய் - கானற் சலம்போலவும், இருந்ததுவே - இருந்ததே, இவ்வியற்கை - இந்தச் சுபாவம், என்னே என்னே - யாதே யாதே, எ - று.

மௌனகுருவின் அருள் என்னிடத்துத் தழைத்தபோதே, தந்தை தாய் முதலாக விவரிக்கப்படுகிற பிரபஞ்சமுழுதும், இந்திரசால முதலியவை போலப் பொய்யா யொழிந்த தென்பதாம்.

**2.** என்னைநான் கொடுக்கவொருப் பட்ட கால
மியாதிருந்தென் னெதுபோயென் னென்னை நீங்கா
அன்னைபோ லருள்பொழியுங் கருணைவாரி
ஆனந்தப் பெருமுகிலே யரசே சொல்லாய்.

இ - ள். என்னை - என்னையே, நான்கொடுக்க - நான்கொடுத்தற்கு, ஒருப்பட்ட காலம் - இசைந்த காலத்தில், யாது இருந்து என் - எது விருந்தாலென்ன, எதுபோய் என் - எதுபோனாலென்ன, என்னை நீங்கா - என்னை விட்டுப் பிரியாத, அன்னைபோல் - தாயைப்போல, அருள்பொழியும் - அருள் மழையைச் சொரிகின்ற, கருணைவாரி - கருணைசமுத்ரமே, ஆனந்தப் பெருமுகிலே - இன்பப்பெருமேகமே, அரசே - அதிராசனே, சொல்லாய் - சொல்வாயாக, எ - று.

எல்லாப் பொருள்களையும் இருவகைக் கிழமையான் ஆளவல்ல தானே யற்றொழியுங்காலத்து, அப்பொருள்கள் இருந்தென்ன போயென்ன என்

பார், என்னை நான் கொடுக்க வொருப்பட்ட காலம் யாதிருந்தென் னெது போயென் என்றார். இறைவனே, என்னையே நான் கொடுக்க விசைந்த காலத்தில், எது இருந்தால்தா னென்ன எது போனால்தானென்ன என்பதாம்.

3. அரசேநின் றிருக்கருணை யல்லா தொன்றை
அறியாத சிறியேனா னதனான் முத்திக்
கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டும்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன்.

இ - ள். அரசே - அரசனே, நான் - யான், நின் திருக்கருணை அல்லாது - உன் திருவருளை யன்றி, ஒன்றை அறியாத் - வேறொரு பொருளையுமறியாத, சிறியேன் - சிறியனேன், அதனால் - ஆதலால், முத்தி கரை சேரும்படிக்கு - முத்தியாகிய கரையை யடையும் வண்ணம், உன் அருள் புணையை - உன் திருவருளாகிய மரக்கலத்தை, கூட்டும் - கிடைக்கச்செய்கின்ற, கைப்பிடியே - உன்கைப்பிடியே, கடைப்பிடி ஆ - கருமமுடிக்குந் துணிவாக, கருத்துள் கொண்டேன் - மனத்துட்கொண்டேன்.

4. கண்டேனிங் கென்னையுமென் றனையுநீங்காக்
கருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்
விண்டேனென் றெனைப்புறம்பாத் தள்ளவேண்டாம்
விண்டதுநின் னருட்களிப்பின் வியப்பாலன்றோ.

இ - ள். இங்கு - இவ்விடத்து, என்னையும் கண்டேன் - என்னையும் பார்த்தேன், என்தனையும் நீங்கா கருணையும் - என்னையும் நீங்காத கருணையையும், நின் தன்னையும் - உன்னையும், நான் கண்டேன் கண்டேன் - நான் பார்த்தேன் பார்த்தேன், (ஆனால்) விண்டேன் என்று - வெளிப்படச் சொன்னேனென்று, என்னைப் புறம்பு ஆ தள்ளவேண்டாம் - என்னை வெளியிற் றள்ளவேண்டாம், விண்டதும் - நான் சொன்னதும், நின் அருள் களிப்பின் - உன் திருவருட் களிப்பா லுளதாகிய, வியப்பால் அன்றோ - அதிசயத்தாலல்லவோ, எ - று.

5. ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்மினென வுவட்டாவின்பத்
தேவென்ற நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ செகவிலாசம்.

இ - ள். ஓ என்ற - ஓவென்று கொண்டாடத்தக்க, சுத்தவெளி ஒன்றே நின்று - வெறுவெளி யொன்றின் கண்ணே நின்று, இங்கு உயிரையெல்லாம் - இவ்விடத்துள்ள வுயிர்களையெல்லாம், வம்மின் என - வாருங்களென்றழைத்து, உவட்டா இன்பம் - தெவிட்டாத ஆநந்தத்தைத்தருகிற,

தே என்ற - தெய்வமென்று சொல்லப்படுகிற, நீ கலந்து கலந்து - நீ கூடிக் கூடி, முத்தி சேர்த்தனையேல் - மோக்ஷத்திற் சேர்த்தனையாயின், செக விலாசம் குறைவு ஆமோ - பிரபஞ்சலீலை குறைவுபடுமோ, எ - று.

**6.** செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறு வண்ணம்
சேர்த்தணுவில் வைப்பையணுத் திரளை யெல்லாம்
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா நீநினைந்த வாறே யெல்லாம்.

இ - ள். செகத்தையெல்லாம் - பிரபஞ்சத்தையெல்லாம், அணுவளவும் - அணுபரிமாணமாயினும், சிதறுவண்ணம் - சிதறுதவகை, அணுவில் சேர்த்து வைப்பை - அணுவினிடத்துச் சேர்த்துவைப்பாய், அணுத்திரளை யெல்லாம் - அணுக்கூட்டங்களையெல்லாம், மகத்துவமா - பெருமையுள்ளனவாகத் தோன்ற, பிரமாண்டம் ஆகச்செய்யும் - ப்ரம்ஹாண்டமாகப் பண்ணுகின்ற, வல்லவா - சர்வசக்தனே, எல்லாம் - யாவும், நீ நினைந்த ஆறே - நீ சங்கற்பித்தபடியே, எ - று.

**7.** சொல்லாலே வாய்துடிப்ப தல்லா னெஞ்சம்
துடித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே யிருந்தநெஞ்சங் கல்லான் முக்கட்
கனியேநெக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ.

இ - ள். சொல்லாலே - சொற்களாலே, வாய் துடிப்பதல்லால் - வாய் பதைப்பதன்றி, நெஞ்சம் துடித்து - மனம்பதைத்து, இரு கண் - இரண்டுகண்களும், நீர் - நீரை, அருவி சொரிய - அருவிபோலப்பொழிய, தேம்பி - வாடி, கல்லால் - கல்லாவின் நீழலி லெழுந்தருளியிருக்கிற, முக் கண் கனியே - மூன்று கண்களையுடைய பழமே, கல்லால் எய் இருந்த நெஞ்சும் - கல்லானே யியன்றிருந்த மனமும், நெக்கு - நெகிழ்ந்து, உருகிடவும் காண்பேனோ - உருகவும் காண்பேனோ, எ - று.

---

## பெற்றவட்கே.

**1.** பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
பெறாப்பேதை யறிவாளோ பேரானந்தம்
உற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண் டாகும்
உறாதவரே கன்னெஞ்ச முடையராவார்.

இ - ள். அந்த வருத்தம் - அந்தக் (கருவுயிர்க்குந்) துன்பம், பெற்றவட்கே தெரியும் - ஈன்றவளுக்கே தெரியும், பிள்ளை பெறாப்பேதை அறிவாளோ - பிள்ளைபெறாத பேதைப்பெண் அறிவாளோ, (அறியாள் அது போல) பேரானந்தம் உற்றவர்க்கே - பேரின்பமடைந்தவர்களுக்கே, கண்

ணீர் கம்பலே உண்டாகும் - கண்ணீர் கம்பலேக ளுளவாகும், உறுதவரே - அடையாதவரே, கல் நெஞ்சம் உடையர் ஆவார் - கன்னெஞ்சை யுடையவர்க ளாவார்கள், எ - று.

**2.** ஆவாவென் றழுதுதொழுங் கையராகி
அப்பனே யானந்த வடிகளேநீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை யெந்தாய்
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறுநீயே.

இ - ள். ஆவா என்று அழுது - ஐயோவென்றழுது, தொழும் கையர் ஆகி - வணங்குகிற கைகளையுடையவர்களாகி, அப்பனே - ஐயனே, ஆனந்த அடிகளே - இன்பத்தைத் தருகின்ற சுவாமியே, நீ வாவா என்றவர்க்கு - நீ வாவாவென் றழைத்தவர்களுக்கு, அருளும் - அருள் செய்கிற, கருணை எந்தாய் - கருணையையுடைய எந்தையே, நீ-நீ, வன்னெஞ்சர்க்கு - வலிய நெஞ்சினையுடையார்க்கு, இரங்குவது - இரங்கியருள்வது, எவ்வாறு - எவ்விதம், எ - று.

**3.** நீயேயிங் கெளியேற்குந் தாகமோக
நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்தலாலே
பேயேற்குந் தனக்கெனவோ ரன்புமுண்டோ
பெம்மானே யின்னமன்பு பெருகப் பாராய்.

இ - ள். நினைவூடே நின்று உணர்த்தி நிகழ்த்தலாலே - நினைவின் கண்ணே நின் றறிவுறுத்தி நடத்துகையாலே, எளியேற்கும் - எளியேனுக்கும், தாகமோகம் - தாகமோகரூபமாயுள்ளவன், நீயே - நீயே, பேயேற்கும் - பேயனேனுக்கும், தனக்கு என - தனக்கென்று, ஓர் அன்பும் உண்டோ - ஒரு அன்புமுளதோ, பெம்மானே - பெருமானே, இன்னம் - இன்னமும், அன்புபெருகப்பாராய் - அன்புவளரப் பாராய், எ - று.

**4.** பாராயோ வென்றுயர மெல்லா மையா
பகருமுன்னே தெரியாதோ பாவி யேன்முன்
வாராயோ வின்னமொரு காலா னுலும்
மலர்க்காலென் சென்னிமிசை வைத்தி டாயோ.

இ - ள். என் துயரம் எல்லாம் - என் துக்கங்களையெல்லாம், பாராயோ - பார்க்கமாட்டாயோ, ஐயா - ஐயனே, பகருமுன்னே - சொல்வதற்கு முன்பே, தெரியாதோ - தெரியாதா, பாவியேன்முன் - பாவியாகிய என்னெதிரில், இன்னம் ஒருகால் ஆனுலும் - இன்னம் ஒருதரமானுலும், வாராயோ - வரமாட்டாயோ, மலர் - தாமரைமலர்போன்ற, கால் - திருவடிகளை, என் சென்னிமிசை வைத்திடாயோ - என் சிரசின்மேல் வைக்கமாட்டாயோ, எ - று.

**5.** வைத்திடுங்கா லைப்பிடித்துக் கண்ணின் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டுகையால் வளைத்துக் கட்டிச்
சித்தமிசைப் புகவிருத்திப் பிடித்துக்கொண்டு
தியக்கமற வின்பசுகஞ் சேர்வ தென்றோ.

இ - ள். வைத்திடும் காலைப்பிடித்து - (அப்படி என் சிரசின்மீது) வைக்கின்ற திருவடிகளைப்பிடித்து, கண்ணில் - கண்களிலும், மார்பில் - மார்பிலும், வைத்து அணைத்துக்கொண்டு-வைத்துத் தழுவிக்கொண்டு, கையால் வளைத்துக்கட்டி - கையினால் வளைத்துக்கட்டி, சித்தமிசைப் புக இருத்தி - நெஞ்சின்மீது பொருந்த விருத்தி, பிடித்துக்கொண்டு - பற்றிக் கொண்டு, தியக்கம் அற - மயக்கமில்லாமல், இன்பசுகம் - பேரின்பத்தை, சேர்வது என்றோ - அடைவது எக்காலமோ, எ - று.

**6.** சேராமற் சிற்றினத்தைப் பிரித்தெந்நாளும்
திருவடிப்பே ரினத்துடனே சேராவண்ணம்
அராக நானலைந்தே னரசே நீதான்
அறிந்திருந்து மாயையிலே னழுந்த வைத்தாய்.

இ - ள். சிற்றினத்தை -சிற்றினத்தாரை, சேராமல் பிரித்து - சேரா மல் வேறுபடுத்தி, எந்நாளும் - எக்காலமும், திருவடிப் பேரினத்துடனே- திருவடியையடைந்த பேரினத்தாரோடு, சேராவண்ணம் - கூடாதவகை, ஆர் ஆக நான் அலைந்தேன் - என்னை யாராக நினைத்து நான் அலைந்தேன், அரசே - அரசனே, நீ தான் அறிந்திருந்தும் - நீதானே யறிந்திருந்தும், ஏன் - யாதுக்கு, மாயையில் அழுந்தவைத்தாய் - மாயையில் மூழ்கவைத் தாய், எ - று.

**7.** வைத்தபொரு ளுடலாவி மூன்று நின்கை
வசமெனவே யான்கொடுக்க வாங்கிக் கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ பொய்யோ
சிறியேற்கிங் குளவுரையாய் திகையா வண்ணம்.

இ - ள். வைத்த - தேடிவைத்த, பொருள் - பொருளும், உடல்- உடலும், ஆவி - ஆவியும் ஆகிய, மூன்றும் - மூன்றையும், நின் கைவசம் என - உன் கையடையென்று, யான் கொடுக்க - நான்கொடுக்க, வாங்கிக் கொண்டு - ஏற்றுக்கொண்டு, சித்தமிசை - என்மனத்தினிடத்தில், புகுந் ததுதான் - பிரவேசித்ததுதான், மெய்யோ பொய்யோ - உண்மையோ அபத்தமோ, இங்கு - இவ்விடத்தில், திகையாவண்ணம் - மனம் மயங்கா வண்ணம், சிறியேற்கு - சிறியேனுக்கு, உளவு உரையாய் -உட்கிடையைப் பேசு, எ - று.

8. திகையாதோ வெந்நாளும் பேரா னந்தத்
தெள்ளமுத முதவாமற் றிவலை காட்டி
வகையாக வலக்கழித்தா யுண்டு டுத்து
வாழ்ந்தேனு னிரண்டுகான் மாடு போலே.

இ - ள். திகையாதோ - திகையாதா, எந்நாளும் - எக்காலமும், பேரானந்தத் தெள் அமுதம் உதவாமல் - பேரின்பமாகிய தெளிந்த அமிர்தத்தைக் கொடாமல், திவலை காட்டி - துளிகாட்டி, வகையாக - வகைவகையாக, அலக்கழித்தாய் - அலையவைத்தாய், நான் இரண்டுகால் மாடுபோலே - நானிருகால்மாடுபோல, உண்டு உடுத்துவாழ்ந்தேன் - உண்டும் உடுத்தும் வாழ்ந்திருந்தேன், எ - று.

9. மாடுமக்கள் சிற்றிடையார் செம்பொ னாடை
வைத்தகன தனமேடை மாட கூடம்
வீடுமென்பாற் றொடர்ச்சியோ விடை விடாமல்
மிக்ககதி வீடன்றோ விளங்கல் வேண்டும்.

இ - ள. மாடு - மாடு, மக்கள் - பிள்ளைகள், சிற்றிடையார் - மாதர்கள், செம்பொன் - உயர்ந்தபொன், ஆடை - வஸ்திரம், வைத்த - ஈட்டி வைத்த, கனதனம்-பெரியதனம், மேடை-மேடை, மாடகூடம்-மாளிகை சாலைகள், வீடும் என்பால் - விட்டோடுகிற என்னிடத்தில், தொடர்ச்சியோ - தொடர்ச்சியையுடையனவோ, இடைவிடாமல்-இடையீடின்றி, மிக்ககதி - மேன்மையாகிய கதியென்று சொல்லப்படுகிற, வீடு அன்றோ - மோக்ஷமல்லவா, விளங்கல் வேண்டும் - பிரகாசித்தல்வேண்டும், எ - று.

10. விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற
வேதகமே போதகமே விமல வாழ்வே
களங்கரகி தப்பொருளே யென்னை நீங்காக்
கண்ணுதலே நாதாந்தக் காட்சிப் பேறே.

இ - ள். விளங்க - தெரியும்படி, எனக்கு உள்ளுள்ளே விளங்கா நின்ற - எனக்கு உள்ளுள்ளே பிரகாசியாநின்ற, வேதகமே - வேதகப் பொருளே, போதகமே-சுகித்து உணரும்பொருளே, விமலவாழ்வே - நிர்மல வாழ்க்கையே, களங்கரகிதப்பொருளே - களங்கமற்ற வஸ்துவே, என்னை நீங்கா - என்னைப் பிரியாத, கண்ணுதலே - நெற்றிக் கண்ணனே, நாதாந்தம் - நாததத்துவத்தின் முடிவில், காட்சி - காட்சிப்பொருளாகிய, பேறே - லாபமே, எ - று.

11. நாதமே நாதாந்த வெளியே சுத்த
ஞாதுருவே ஞானமே ஞேயமே நல்

வேதமே வேதமுடி வான மோன
வித்தையிங் கென்னையினி விட்டி டாதே.

இ - ள். நாதமே - நாதரூபமே, நாதாந்தவெளியே - நாதமுடிவாகிய வெளியே, சுத்த ஞாதுருவே - சுத்தமான ஞாதுருவே, ஞானமே - ஞானமே, ஞேயமே - ஞேயமே, நல்வேதமே - சிறந்தவேதமே, வேத முடிவான - வேதமுடிவாகிய, மோன வித்தே - மௌன பீஜமே, இங்கு - இவ்விடத்து, என்னை - என்னை, இனி விட்டிடாதே - இனிக் கைவிட்டு விடாதே, எ - று.

---

## கல்லாலின்.

1. கல்லாலி னீழறனி லொருநால்வர்க்குங்
கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட் டென்றால்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை
துரும்புப்பற்றிக் கடல்கடக்குந் துணிபே யன்றோ.

இ - ள். கல்லாலின் நீழறனில் - கல்லாலின் நீழலில் வீற்றிருந்து, ஒருநால்வர்க்கும் - சநகாதிகளாகிய ஒருநால்வருக்கும், கடவுள் நீஉணர்த்துவதும் - கடவுளாகிய நீ யறிவுறுத்ததும், கைகாட்டு என்றால் - கைகாட்டாலேயாமாயின், (அது) சொல்லாலே சொல்லப்படுமோ - சொல்லாற் சொல்லப்படுவதோ, சொல்லும் தன்மை - சொல்லுந் தன்மையானது, துரும்பு பற்றிக் கடல் கடக்கும் துணிபேயன்றோ - துரும்பைத் துணையாகப் பற்றிக்கொண்டு கடலைக் கடந்துசெல்லுந் துணிவினை நிகர்த்ததல்லவா, எ-று.

கடவுள் நீ என்பதைக் கடவுளே நீ யெனப் பிரித்துரைத்தலுமாம். கடவுள் - எல்லாவற்றையுங் கடத்தலையுடையான். கைகாட்டல் - சும்மா விருவெனக் கையமைத்தல். சொல்லுந்தன்மை துரும்புபற்றிக் கடல் கடக்குந் துணிபேயன்றோ என்றமையால், கைகாட்டல் மரக்கலம் பற்றிக் கடல்கடத்தல் என்பது பெறப்படும்.

2. அன்றோவா மோவெனவுஞ் சமய கோடி
அத்தனையும் வெவ்வேறா யாற்ற நேரே
நின்றாயே நினைப்பெறுமா றெவ்வா றங்கே
நின்னருள்கொண் டறிவதல்லா னெறிவே றுண்டோ.

இ - ள். அன்றோ ஆமோ எனவும் - (பொருள் இது) அல்லவோ ஆமோ என்றும், சமயகோடி அத்தனையும் - சமயகோடிகள்யாவும், வெவ்வேறாய் ஆற்ற - வேறு வேறாய் நின் றாற்றும்படி, நேரே நின்றாயே - (அவரவர் கொள்கைக் கிசைய) நேரே நின்றனையே, நினைப்பெறும் ஆறு எவ்வாறு - உன்னைப் பெறும்வழி யெவ்வழி, ஆங்கே - அவ்விடத்து, நின்

அருள்கொண்டு - உன்னருளைக்கொண்டே, அறிவது அல்லால் - உணர்வ தன்றி, நெறி - அறியு நெறி, வேறு உண்டோ - வேறுளதோ, எ - று.

**3.** நெறிபார்க்கி னின்னையன்றி யகிலம் வேறோ
நிலநீர்தீக் கால்வானு நீய லாத
குறியாது மில்லையென்றால் யாங்கள்வேறோ
கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய்.

இ - ள். நெறிபார்க்கின் - முறையாகப்பார்த்தால், நின்னை அன்றி - உன்னை யல்லது, அகிலம் வேறோ - உலகம் வேறோ, நிலம் - பூமியும், நீர் - நீரும், தீ - நெருப்பும், கால் - காற்றும், வானும் - ஆகாயமும், நீ அல் லாத குறியாதும் இல்லையென்றால் - நீ யல்லாத அடையாளம் சிறிதும் இல்லையென்றால், யாங்கள் வேறோ - நாங்கள் வேறாதுமோ, கோதை - உமாதேவியை, ஒரு கூறு உடையாய் - ஒருபாகத்தி லுடையானே, கூறாய் கூறாய் - சொல்லாய் சொல்லாய், எ - று.

வானும் என்ற வும்மை நிலநீர் தீக் கால் களுக்குங் கூட்டியுரைக்கப் பட்டது.

**4.** கூறாய வைம்பூதச் சுமையைத் தாங்கிக்
குணமிலா மனமெனும் பேய்க் குரங்கின் பின்னே
மாறாத கவலையுடன் சுழல வென்னை
வைத்தனையே பரமேநின் மகிமை நன்றே.

இ - ள். கூறு ஆய - பாகிக்கப் பட்டனவாகிய, ஐம்பூதம் - பஞ்ச பூதங்களா லாக்கப்பட்ட, சுமையை - உடற்சுமையை, தாங்கி - சுமந்து, குணம் இல்லா - குணமற்ற, மனம் என்னும் - மனமென்கிற, பேய்க் குரங் கின் பின்னே - பேய்கொண்ட குரங்கின்பின் றொடர்ந்து, மாறாத கவலை யுடன் - நீங்காத கவலையோடு, சுழல - சுழலும்படி, என்னை வைத்தனையே - என்னை வைத்தாயே, பரமே - பரம்பொருளே, நின் மகிமை நன்று - உன் பெருமை அழகிது, எ - று.

கூறாய வைம்பூதம் - பஞ்சீகரிக்கப்பட்ட பஞ்சபூதம். இதன் விரி வெல்லாம் "ஐந்து பூதமும் பத்தாக்கி யதிற்பாதி நந்நான் காக்கி - வந்தன தூல பூதம்" என்னுந் தொடக்கத் தான்றோர் திருவாக்குகளா னுணர்க. குரங்கே சலந மிக்குளதாக, பேய்க்குரங்கு என மனத்தையெடுத் தோதி யது, அதினும் அதிக சலநமுள்ளது இம் மனமென்பதை வலியுறுத்தற்கு.

இது "திரிகையிலாயிரவெல்லாழிமண்விண்டருசிரபாத்
திரிகையிலாயிரவாநந்தநாடகிசேரிமகோத்
திரிகையிலாயிரமிக்குமைந்தாசெந்திலாயொருகால்
திரிகையிலாயிரக்கோடிசுற்றேடுந்திருத்துளமே." என்றற் றொடக்கத்துச் செய்யுட்களா னுணர்க.

5. நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ
நானாகி நீயிருந்த நியாயஞ் சற்றே
இன்றெனக்கு வெளியானா லெல்லாம் வல்ல
இறைவாநின் னடியருட னிருந்து வாழ்வேன்.

இ - ள். நன்று எனவும் - நன்மையென்றும், தீது எனவும் - தீமையென்றும், எனக்கு இங்கு உண்டோ - எனக் கிவ்வுலகத்தி லுளதோ, நீ நான் ஆகி இருந்த நியாயம் - நீயே நானா யிருந்த நியாயமானது, இன்று - இப்பொழுது, எனக்கு - எனக்கு, சற்று வெளி ஆனால் - சிறிது வெளியாயின், எல்லாம் வல்ல இறைவா-எல்லாம் செய்யவல்ல இறைவனே, நின் அடியருடன் இருந்து - உன்னடியாரோடு கூடியிருந்து, வாழ்வேன் - சுக ஜீவியாய் வாழ்வேன், எ - று.

6. வாழ்வெனவுந் தாழ்வெனவு மிரண்டாப் பேசும்
வையகத்தார் கற்பனையா மயக்கமான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
பரமேநின் னானந்தப் பார்வை யெங்கே.

இ - ள். வாழ்வு எனவும் - வாழ்வென்றும், தாழ்வு எனவும் - தாழ்வென்றும், இரண்டு ஆ பேசும் - இரண்டாகப் பேசுகின்ற, வையகத்தார் - உலகத்தாரது, கற்பனை ஆம் - கற்பனையென்கிற, மயக்கம் ஆன - மயக்கமாகிய, பாழ் வலையை - பாழாகிய வலையை, கிழித்து உதறி - கிழித்துதறி விட்டு, செயல் போய் வாழ - செயல் அற்று வாழ்வதற்கு, பரமே - பரவஸ்துவே, நின் - உனது, ஆனந்தப் பார்வை எங்கே - ஆனந்த நோக்கமெங்கே, எ - று.

7. எங்கேயெங் கேயருளென் றெம்மையி ரந்தான்
ஏழையிவ னெனவுமெண்ணி யிச்சை கூரும்
அங்கேயங் கேயெளிவந் தென்னை யாண்ட
ஆரமுதே யுனைக்காண்பா னலந்துபோனேன்.

இ - ள். ஏழை இவன் - ஏழையாகிய இவன், அருள் எங்கே எங்கே என்று - அருள் எவ்விடத்தது எவ்விடத்தது என்று, எம்மை இரந்தான் எனவும் எண்ணி - எம்மை யாசித்தானென்றும் நினைத்து, இச்சை கூரும் - யான் விரும்புகிற, அங்கே அங்கே - அவ்வவ்விடங்களிலே, எளி வந்து - எளிதில் வந்து, என்னை யாண்ட - என்னை யாட்கொண்ட, ஆர் அமுதே - அரிய அமிர்தமே, உன்னை காண்பான் - உன்னைக் காணும்பொருட்டு, அலந்துபோனேன் - துன்பப்பட்டுப்போனேன், எ - று.

8. போனநாட் கிரங்குவதே தொழிலா யிங்ஙன்
பொருந்துநா ளத்தனையும் போக்கி னேனென்

ஞானநா யகனேநின் மோன ஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந் நாளோ.

இ - ள். போன நாட்கு - கழிந்த நாள்களைக் குறித்து, இரங்குவதே - இரங்கலே, தொழில் ஆ - தொழிலாகக்கொண்டு, இங்ஙன் - இவ்வாறு, பொருந்தும் நாள் அத்தனையும் - பொருந்துகின்ற நாள்களெல்லாவற்றையும், போக்கினேன் - கழித்துவிட்டேன், என் ஞான நாயகனே - என் ஞானத் தலைவா, நின் - உனது, மோன ஞான நாட்டம் - மௌனஞான நோக்கத்தை, உற்று - அடைந்து, வாழ்ந்திருக்கும் நாள் - வாழ்ந்திருக்கும் நாள், எந்நாளோ - எந்தநாளோ, எ - று.

**9.** நாட்பட்ட கமலமென்ன விதய மேவு
நறுந்தேனே துன்மார்க்க நாரிமார்கண்
வாட்பட்ட காயமிந்தக் காய மென்றோ
வன்கூற்று முயிர்பிடிக்க வருமந் நீதி.

இ - ள். நாள்பட்ட கமலம் என்ன - அன்றலர்ந்த கமலம்போல (எண்ணி), இதயம் மேவும் - என்னிதயத்திற் பொருந்திய, நறு தேனே - நறுவியதேனே, துன்மார்க்கம் - தீநெறியுள்ள, நாரிமார் - மாதர்களுடைய, கண் - கண்களாகிய, வாள்பட்ட காயம் - வாள்பட்ட சரீரம், இந்தக்காயம் - இந்தச் சரீரம், வல் கூற்றும் - வலிய யமனும், உயிர் பிடிக்க வரும் அந்நீதி - உயிர் கவரவருகிற அந்த நியாயம், என்றோ - எக்காலமோ, எ - று.

**10.** நீதியெங்கே மறையெங்கே மண்விண்ணெங்கே
நித்தியரா மவர்களெங்கே நெறிதப் பாத
சாதியெங்கே யொழுக்கமெங்கே யாங்க ளெங்கே
தற்பரநீ பின்னுமொன்றைச் சமைப்ப தானல்.

இ - ள். தற்பர - தற்பரனே, நீ - நீயே, பின்னும் ஒன்றைச் சமைப்பது ஆனல் - வேறு மொன்றைச் சமைப்பதாயின், நீதி எங்கே - நியாயமெங்கே, மறை எங்கே - வேதங்களெங்கே, மண் விண் எங்கே - பூமியந்தரிக்ஷங்களெங்கே, நித்தியர் ஆம் அவர்களெங்கே - நித்தியராகிய அவர்களெங்கே, நெறி தப்பாத சாதி எங்கே - நெறி வழுவாத சாதியெங்கே, ஒழுக்கம் எங்கே - ஆசாரம் எங்கே, யாங்களெங்கே - நாங்கள் எங்கே.

**11.** ஆனலும் யானென்ன திங் கற்ற வெல்லை
அதுபோது மதுகதிதா னல்லவென்று
போனலும் யான்போவ னல்லான் மோன
புண்ணியனே வேறுமொரு பொருளை நாடேன்.

இ - ள். ஆனாலும் - ஆயினும், இங்கு - இவ்விடத்து, யான் எனது அற்ற எல்லை - யான் எனது என்னும், அகங்கார மமகாரங்களற்ற இடமாகிய, அதுபோதும் - அது சாலும், அது - அவ்விடம், கதிதான் அல்ல என்று போனாலும் - கதியல்லவென் றொழிந்தாலும், யான் போவன் அல்லால் - நான் போவேனல்லது, மோன புண்ணியனே - மௌனநிலையை யறிவுறுத்தும் புண்ணிய சீலனே, வேறும் ஒருபொருளை நாடேன் - வேறுமோர் பொருளை விரும்பேன், எ - று.

**12.** பொருளேநின் பூரணமே விட்ட காலம்
போக்குவர வுண்டோதற் போத முண்டோ
விருடானுண் டோவல்லால் வெளிதா னுண்டோ
வின்பமுண்டோ துன்பமுண்டோ யாமங் குண்டோ.

இ - ள். பொருளே - வஸ்துவே, நின் பூரணம் - உனது நிறைவு, மேவிட்ட காலம் - அதிகரித்த காலத்தில், போக்கு வரவு உண்டோ - போக்கு வரவுகளுளவோ, தற்போதம் உண்டோ - தற்போத முளதோ, இருள்தான் உண்டோ - அந்தகாரந்தா னுளதோ, அல்லால் - அன்றி, வெளிதான் உண்டோ - ஒளிதானுளதோ, இன்பம் உண்டோ - சுகமுளதோ, துன்பம் உண்டோ - துக்கமுளதோ, யாம் அங்கு உண்டோ - நாங்கள் அவ்விடத்துளேமோ, எ - று.

**13.** உண்டோநீ படைத்தவுயிர்த் திரளி லென்போல்
ஒருபாவி தேகாதி யுலகம் பொய்யாக்
கண்டேயு மெள்ளளவு துறவு மின்றிக்
காசினிக்கு ளலைந்தவரார் காட்டாய் தேவே.

இ - ள். நீபடைத்த - நீயுண்டாக்கின, உயிர்த்திரளில் - உயிர்த் தொகுதியில், என்போல் ஒருபாவி உண்டோ-என்போல ஒருபாபிஷ்டன் உளனோ, தேகாதி உலகம்-தேகாதி ரூபமாகிய உலகமானது, பொய் ஆ- பொய்யாயிருக்க, கண்டேயும் - பார்த்திருந்தும், எள் அளவு - எட்டுணையாகிய, துறவும் இன்றி - துறவும் இல்லாமல், காசினிக்குள் - உலகத்துள், அலைந்தவர் - அலைந்தவர்கள், ஆர் - யாவர், காட்டாய் - காட்டுவாய், தேவே - கடவுளே, எ - று.

**14.** தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவிக்கே
மூடனேன் புலம்பியசொன் முற்று போதான்.

இ - ள். தேவர் எல்லாம் - தேவர்களெல்லாரும், தொழ - வணங்கலால், சிவந்த - செவந்த, செந்தாள் - செவ்விய சீர் பாதங்களையும், முக்

கண் - மூன்று கண்களையுமுடைய, செங்கரும்பே-செம்மையாகிய கரும்பே, மொழிக்கு மொழி - சொல்லுக்குச்சொல், தித்திப்பு ஆக - இனிதாக, மூவர்சொல்லும் - மூவர்பாடிய, தமிழ் - செந்தமிழ்ப்பாடல்களை, கேட்கும் திருச்செவிக்கு - கேட்கின்ற திருச்செவிகளுக்கு, மூடனேன் புலம்பிய சொல் - மூடனாகிய யான் புலம்பியசொற்கள், முற்றுமோ - ஏற்கப்பெறு வனவோ, எ - று.

மூவராவார் - அப்பர், சுந்தரர், சம்பந்தர் எனப்படுவார். அப்பரைத் திருநாவுக்கரசு எனவும் வாகீசர் எனவுங் கூறுவர். இம்மூவர் தமிழ் இறை வரது திருச்செவிக்கு இனிமையைத் தரும் என்பதனை, "மூவர் தமிழ்க் குருகான் "எனவும், " ஒழித்திடும் பவப்பகை விரைந் துள்ளமேயோதமூ துணர்வோர்முற் பழிச்சு பாடலை யாற்கவை விடர்க்கிளம்பாவைய ருரை போலும்" எனவும் கூறிய அறிஞர் திருவாக்குகளா னுணர்க. அவ்வாறு இறைவரது திருச்செவிக் கின்றமிழ் கூறியதே, "அரவக லல்குலார்பா லாசைநீத் தவர்க்கே வீடு - தருவமென் றளவிள் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப் - பரவைதன் புலவிதீர்ப்பான் கழுதுகண் படுக்கும்பானா - ளிர வினிற் றூதுகொண்டோன் " எனவும், "தொடர்ந்தாளு மையர் திரு வெங்கை வாணரச் சுந்தரர் சொற் - கடந்தாலும்," எனவும் கூறிய தூது போதல் முதலியவைகட்குக் காரணமென்க.

**15.** முற்றுமோ வெனக்கினியா னந்த வாழ்வு
மூதறிவுக் கினியாய்நின் முளரித் தாளில்
பற்றுமோ சற்றுமில்லை யையோ வையோ
பாவிபடுங் கட்கலக்கம் பார்த்தி லாயோ.

இ - ள். எனக்கு - சிற்றறிவினனாகிய எனக்கு, இனி - இனி, ஆன ந்த வாழ்வு முற்றுமோ - சுகவாழ்வு கிடைக்குமோ, மூதறிவுக்கு - அறிஞ ரது பேரறிவுக்கு, இனியாய் - இனிமையைத்தருவோய், நின் - உனது, முளரி - தாமரை மலர்போன்ற, தாளில் - திருவடிகளில், பற்றுமோசற் றும் இல்லை - அன்புமோ சிறிதுமில்லை, ஐயோ ஐயோ - அந்தோ அந்தோ, பாவிபடும் கண்கலக்கம் - பாவியேன் படுகின்ற கண்கலக்கத்தை, பார்த்தி லாயோ - பார்த்திலையோ, எ - று.

இறைவனது திருவடித் தாமரைப் பற்றிலாதார்க்கு, ஆனந்தவாழ்வு கிடைத்த லருமையாதலால், நின் முளரித்தாளிற் பற்றுமோ சற்றுமில்லை, எனக்கு இனி ஆனந்தவாழ்வு முற்றுமோ என்றார்.

**16.** பார்த்தனவெல் லாமழியு மதனாற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே மோன

மூர்த்திவடி வாயுணர்த்துங் கைகாட் டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ.

இ - ள். பார்த்தன எல்லாம் அழியும் - கண்டன யாவும் அழியாநிற்கும், அதனால் - ஆதலால், சுட்டிப்பாராதே பார்த்திருக்க - சுட்டிப்பாராமல் பார்த்திருக்க, பரமே - பரம்பொருளே, மோன மூர்த்தி வடிவாய் உணர்த்தும் - மௌனகுரு ரூபமாகிவந் தறிவுறுத்திய, கைகாட்டு உண்மை - கைகாட்டலின் உண்மையானது, முற்றி - முற்றுப்பெற்று, எனது அல்லல் வினை - எனது துன்பத்திற் கேதுவாகிய கர்மங்கள், முடிவது - முடிவு பெறுவது, என்றோ - எக்காலமோ, எ - று.

**17.** என்றுளைநீ யன்றுளம்யா மென்ப தென்னை
இதுநிற்க வெல்லாந்தா மில்லையன்றே
பொன்றிடச்செய் வல்லவனீ யெமைப்படைக்கும்
பொற்புடையா யென்னினது பொருந்தி டாதே.

இ - ள். நீ என்று உளை - நீ யென்று உள்ளாய், அன்று யாம் உளம் - அன்று நாங்களும் உள்ளோம், என்பது என்னை - என்று சொல்லுவது என்ன, இதுநிற்க - இதுகிடக்க, எல்லாம் தாம் - எல்லாப்பொருள்களுமே, இல்லையன்றே - இல்லையாமாறே, பொன்றிடச்செய் வல்லவன் நீ - நசித்திடச் செய்தலில் வல்லவன் ஆகிய நீயே, எம்மைப்படைக்கும் பொற்பு உடையாய் என்னின் - எங்களைப் படைக்கின்ற பொலிவினை யுடையை யென்றால், அது பொருந்திடாதே - அது பொருந்திடாதோ, எ - று.

**18.** பொருந்துசக மனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போதரூபத்
திருந்தபடி யென்றிருப்ப தன்றே யன்றோ
எம்பெருமான் யான்கவலை யெய்தாக் காலம்.

இ - ள். பொருந்து சகம் அனைத்தினையும் - பொருந்திய பிரபஞ்சமெல்லாவற்றையும், பொய் பொய் என்று புகன்றபடி - பொய் பொய் என்று சொன்னபடி, மெய் என்றே - உண்மை யென்றே, போத ரூபத்து - ஞான ரூபத்துடன், இருந்தபடி - இருந்தவண்ணம், என்று இருப்பது - எக்கால மிருப்பது, அன்றே அன்றோ - அக்காலத்திலே யல்லவோ, எம்பெருமான் - எம்பெருமானே, யான் - நான், கவலை எய்தாக் காலம் - துன்பமடையாத காலம், எ - று.

**19.** காலமே காலமொரு மூன்றுங் காட்டும்
காரணமே காரணகா ரியங்க ளில்லாக்
கோலமே யெனைவாவா வென்று கூவிக்
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோ சொல்லாய்.

இ - ள். காலமே - காலமே, காலம் ஒரு மூன்றும் காட்டும் - முக்காலங்களையும் காட்டுகின்ற, காரணமே - காரணமே, காரண காரியங்கள் இல்லா - காரண காரியங்க ளற்ற, கோலமே-உருவே, என்னை - என்னை, வாவா என்று கூவி - வாவா என் றழைத்து, குறைவு அற - குறைவு நீங்க, நின் அருள் கொடுத்தால் - உன்னருளைத் தந்தால், குறைவோ - குறைவாமோ, சொல்லாய் - சொல்வாய், எ - று.

**20.** சொல்லாய தொகுதி யெல்லாங் கடந்துநின்ற
சொரூபானந் தச்சுடரே தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலு மெத்த நன்றே
கரணமுட னுறவு கலக்க மாட்டேன்.

இ - ள். சொல் ஆய தொகுதி யெல்லாம் - சொற்கூட்டத்தையெல்லாம், கடந்து நின்ற-தாண்டி நின்ற, சொரூபானந்தச் சுடரே - சொரூபானந்தச் சோதியே, தொண்டனேனை - அடிமையாகிய என்னை, கல்லாகப் படைத்தாலும் - கல்லாக வகுத்தாலும், மெத்த நன்றே-மிகவும் நல்லதே, நான் - நான், கரணமுடன் - கரணங்களோடு, உறவு கலக்கமாட்டேன் - சிநேகிக்க மாட்டேன், எ - று.

**21.** கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்
கடவுளுனைக் காணவே காய மாதி
புலங்காணா ரானொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய்.

இ - ள். கலங்காத நெஞ்சு உடைய - கலங்கா மனத்தையுடைய, ஞான தீரர் - ஞான தீரர்கள், கடவுள் - கடவுளே, உன்னைக் காணவே - உன்னைக் காணும்பொருட்டே, காயம் ஆதி-உடல் முதலானவைகளின், புலம் காணார் - இடங்காணாதவர்க ளானார்கள், நான் ஒருவன் - யானொருத்தன், ஞானம் பேசி - வாசாஞானம்பேசி, பொய்க்கூடு காத்தது - பொய்யுடலைக் காத்திருந்தது, என்ன புதுமை - என்ன அற்புதம், எ - று.
காயமாதி என்றது உடல் பொருள் ஆவிகளை.

**22.** கண்டிலையோ யான்படும்பா டெல்லா மூன்று
கண்ணிருந்துந் தெரியாதோ கசிந்துள் ளன்பார்
தொண்டரடித் தொண்ட னன்றோ கருணைநீங்காச்
சுத்தபரி பூரணமாஞ் சோதி நாதா.

இ - ள். யான் படும்பாடு எல்லாம் - நான் படும் துன்பத்தை யெல்லாம், மூன்று கண் இருந்தும் - மூன்று கண்கள் உனக்கிருந்தும், கண்டிலையோ - பார்த்திலையோ, தெரியாதோ - அன்றி உன் பூர்ண ஞானத்திற்குக் கோசரியாதோ, கசிந்து - உருகி, உள் அன்பு ஆர் - உள்ளன்பு நிறை

ந்த, தொண்டர் - தொண்டர்களுக்கு, அடித்தொண்டன் அன்றோ - திருவடித் தொண்டனே னல்லவோ, கருணை நீங்கா - கிருபை நீங்காத, சுத்த பரிபூரணம் ஆம் - சுத்த பரிபூர்ணமாகிய, சோதி நாதா - தேஜஸ்ஸை யுடைய இறைவனே, எ - று.

**23.** சோதியா யிருட்பிழம்பைச் சூறை யாடும் [ளும்
தூவெளியே யெனைத் தொடர்ந்து தொடர்ந்தெந்நா
வாதியா நின்றவினைப் பகையைவென்ற
வாழ்வேயிங் குனைப்பிரிந்து மயங்கு கின்றேன்.

இ - ள். சோதியாய் - தேஜஸ்ஸாகி, இருள் பிழம்பை - இருட் கூட்டத்தை, சூறை ஆடும் - கொள்ளையிட்ட, தூவெளியே - பரிசுத்தமான ஆகாயமே, என்னைத் தொடர்ந்து தொடர்ந்து - என்னைப் பற்றிப்பற்றி, எந்நாளும் - எக்காலமும், வாதியாநின்ற - வருத்தா நின்ற, வினைப் பகையை வென்ற - கர்ம சத்ருவைச் செயித்த, வாழ்வே - பெருவாழ்வே, உன்னை பிரிந்து - உன்னைவிட்டு, இங்கு மயங்குகின்றேன் - இவ்விடத்து மயங்கா நின்றேன், எ - று.

**24.** மயக்குறுமென் மனமணுகாப் பாதைகாட்டி
வல்வினையைப் பறித்தனையே வாழ்வே நானென்
செயக்கடவேன் செயலெல்லா நினதே யென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வே றில்லை.

இ - ள். மயக்குறும் - மயங்கச் செய்கின்ற, என் மனம் அணுகா - என் மனம் பொருந்தாத, பாதை காட்டி - வழிகாட்டி, வல் வினையைப் பறித்தனையே - வலிய கர்மங்களை வேரறக் களைந்தாயே, வாழ்வே - பெருவாழ்வே, நான் என் செயக்கடவேன் - யான் என்னசெய்யக் கடவேன், செயல் எல்லாம் - செய்கைகளெல்லாம், நினதே என்று - உனதேயாம் என்று, செங்கை குவிப்பேன் அல்லால் - செவந்த கைகளைக் கூப்புவேனன்றி, செயல் - செய்கை, வேறு இல்லை - மற்றொன்றில்லை, எ - று.

**25.** வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லான்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா.

இ - ள். வேறுபடும் - ஒன்றற்கொன்று வேறுபடுகின்ற, சமயம் எல்லாம் - சமயங்களிலெல்லாம், புகுந்து பார்க்கின் - நுழைந்து பார்த்தால், விளங்கு - விளங்காநின்ற, பரம்பொருளே - பரவஸ்துவே, நின் விளையாட்டு அல்லால் - உன் திருவிளையாட்டேயன்றி, மாறுபடும் கருத்து இல்லை -

மாறுபடும் கருத்து இல்லையாகும், முடிவு இல் - முடிவற்ற, மோனவாரி தியில் - மௌநசாகரத்தில், நதித்திரள்போல் - நதியினம்போல, வயங் கிற்று - விளங்கிற்று, எ - று.

**26.** அம்மாவீ ததிசயந்தா னன்றோ வன்றோ
அகண்டநிலை யாக்கியென்னை யறிவாம் வண்ணம்
சும்மாவே யிருக்கவைத்தா யையா வாங்கே
சுகமயமா யிருப்பதல்லாற் சொல்வா னென்னே.

இ - ள். அம்மா - ஆச்சரியம், ஈது - இது, அதிசயந்தான் அன்றோ அன்றோ - அதிசயமே யல்லவோ அல்லவோ, அகண்ட நிலை ஆக்கி - அக ண்ட நிலையையுண்டாக்கி, என்னை - என்னை, அறிவு ஆம் வண்ணம் - அறி வுமயமாகும்வண்ணம், சும்மாவே இருக்கவைத்தாய் - சும்மாவே யிருக்கும் படி வைத்தனை, ஆங்கே - அவ்விடத்தே, சுகமயமாய் இருப்பது அல்லால்- சுகரூபமாயிருப்பதல்லது, சொல்வான் என்-சொல்லுதலுக் குரியதுயாது.

**27.** என்னேநான் பிறந்துழல வந்த வாறிங்
கெனக் கெனவோர்செயலிலையே யேழையேன்பால்
முன்னேசெய் வினையெனவும் பின்னே வந்து
மூளும்வினை யெனவும்வர முறையே னெந்தாய்.

இ - ள். இங்கு - இவ்விடத்து, நான் பிறந்து உழல - நான் ஜன்மித் துழலும்படி, வந்த ஆறு என் - வந்த பிரகாரம் யாது, எனக்கு என-எனக் கென்று, ஓர்செயல் இல்லையே-ஒருசெயலும் இல்லையே, ஏழையேன்பால்- ஏழையாகிய என்னிடத்து, முன்னே செய்வினை யெனவும் - பூர்வமே செய்தவினை யென்றும், பின்னே வந்து மூளும் வினையெனவும் - பின் வந்து பற்றுகின்ற வினையென்றும், வர - சொல்லப்பட்டு வருகைக்கு, முறை ஏன் - முறைமை யாது, எந்தாய் - எந்தையே, எ - று.

**28.** தாயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமற் றள்ளித் தள்ளிப்
போயான தென்கொலையா வேக தேசம்
பூரணத்துக் குண்டோதான் புகலல் வேண்டும்.

இ - ள். தாய் ஆன - எனக்கு மாத்ருஸ்த்தாநமான, தண் அருளை - தண்ணிய அருளை, நிரம்ப வைத்து - நிறையவைத்து, தமியேனைப் புரவா மல் - தனியேனைக் காவாமல், தள்ளித்தள்ளிப்போய் - தள்ளித் தள்ளிச் சென்று, (அதனால்) ஆனது - உண்டான பிரயோஜனம், என் - யாது, ஐயா - ஐயனே, பூரணத்துக்கு - உனது பூரண உருவத்துக்கு, ஏகதேசம் உண்டோ - ஏகதேசம் உளதோ, புகலல்வேண்டும் - சொல்லவேண் டும், எ - று.

**29.** புகலரிய நின்விளையாட் டென்னே யெந்தாய்
புன்மையறி வுடையவென்னைப் பொருளாப் பண்ணி
இகல்விளைக்கு மலமாயை கன்மத் தூடே
இடருறவுஞ் செய்தனையே யிரக்க மீதோ.

இ - ள். புகல் அரிய - சொல்லுதற்கரிய, நின் விளையாட்டு - உன் திருவிளையாடல், என்னே - யாதே, எந்தாய் - எந்தையே, புன்மை அறிவு உடைய என்னை - அற்பமாகிய அறிவை யுடைய என்னை, பொருள் ஆ பண்ணி-ஒரு பொருளாகச் செய்து, இகல் விளைக்கும்-போர்விளைக்கின்ற, மலமாயை கன்மத்தூடே - மலமாயா கர்மங்களி னிடையே யகப்பட்டு, இடர் உறவும் செய்தனையே - துக்கமடையவும் பண்ணினையே, இரக்கம்- உனக்கு உயிர்களின்மீதுள்ள இரக்கமானது, ஈதோ-இதுதானே, எ-று.

**30.** இரக்கமொடு பொறையீத லறிவா சாரம்
இல்லேனு னல்லோர்க ளீட்டங் கண்டால்
கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்ச மெந்தாய்
கருந்தாதோ வல்லுருக்கோ கரிய கல்லோ.

இ - ள். இரக்கமொடு - இரக்கத்துடன், பொறை - பொறுமை, ஈதல் - கொடை, அறிவு - ஞானம், ஆசாரம் - ஒழுக்கம், இல்லேன்-இல் லாதவனுகிய, நான் - நான், நல்லோர்கள் ஈட்டம் கண்டால் - நல்லோர்க ளுடைய கூட்டத்தைப் பார்த்தால், கரக்கும் - ஒளிக்கின்ற, இயல்பு உடை யேன் - இயற்கையுடையேன், பாழ்நெஞ்சம் - (என்) பாழ்மனமானது, எந்தாய் - எந்தையே, கருந்தாதோ - இரும்போ, வல் உருக்கோ - வலிய உருக்குத்தானே, கரிய கல்லோ - கருங்கல்லோ, எ - று.

---

### பராபரக்கண்ணி.

**1.** சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதல்
பாராதி யாண்ட பதியே பராபரமே.

#### இதன் பொழிப்புரை.

சிறப்பமைந்த தெய்வத்தன்மை பொருந்திய திருவருளென்னும் பூமி முதலாக நிலவுலக முதலாகிய பூமிகளை யாண்டருளிய இறைவனே, எ-று.

திருவருளாம் பூமியென்றதனால், பாராதிகளும் பூமிகளாக்கி யுரைக் கப்பட்டன. நிலவுலக முதலாகிய பூமிகள்-சுவர்க்க, மத்திய, பாதாளங் கள். அன்றி, நிலமுதல் நாதமீருகியமுப்பத்தாறு தத்துவங்களாகிய பூமிக

ளென்னனுமாம். பராபரம் - பெருமையுடையா ரெல்லாருள்ளும் பெருமையுடையோன். பரம் மோக்ஷமாதலால், மோக்ஷப்ரதனென பெரியோன் எனினும் மோக்ஷநிலத்திலுள்ள பரமான்மா எனினுமாம்.

**2.** கண்ணாரக் கண்டோர் கருப்பொருள்கா ணுமலருள்
விண்ணூடிருந்த வின்பவெற்பே பராபரமே.

**பொ - ரை.** கண்ணாரச் சேவித்தோர், பிறவி யென்னும் பொருளைக் காணுதமைந்து நித்தியராய் வாழ்தற்பொருட்டு, கருணுகாசத்தில் நிலைபெற்றிருந்த ஆனந்த மலையே, எ - று.

சலநமற் றிருத்தலால் மலை யென்றூர். "அருணிதி தரவரு மானந்த மலையே" என்றூர் திருவாதவூரடிகளும்.

**3.** சிந்தித்தவெல்லா மென்சிந்தை யறிந்தேயுதவ
வந்தகருணை மழையே பராபரமே.

**பொ - ரை.** கருதிய பொருள்களையெல்லாம் என் கருத்தறிந் தருள்செய்யும்பொருட்டு எழுந்தருளிவந்த தயாவர்ஷமே, எ - று.

எல்லாப் பொருள்களையுங் கொடுக்க வல்லது மழையாதலால், "சிந்தித்தவெல்லாம் என் சிந்தையறிந்தேயுதவ வந்தகருணை மழையே" யென்றூர்.

**4.** ஆராவமுதே யரசே யானந்த வெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே.

**பொ - ரை.** தெவிட்டாத அமிர்தமே, மோக்ஷநிலத்துக் கரசனே, சுகப் பெருக்கா யுண்டாகிய பெருநதியே, மௌனப்ரவாஹமே, எ - று.

அமுது என்றூர் இறவாமைக்குக் காரணமாயிருத்தலால். அரசெனப் பொதுப்படக் கூறினும், மோக்ஷம் அவனுட்சியாதலால் மோக்ஷநிலத்துக் கரசனென் றுரைக்கப்பட்டது.

**5.** ஆரறிவாரென்ன வனந்தமறை யோலமிடும்
பேரறிவே யின்பப்பெருக்கே பராபரமே.

**பொ - ரை.** உன்னை யறியவல்லார் யாவரென்று முடிவில்லனவாகிய வேதங்கள் முழங்குகின்ற பெரிய ஞானமே, ஆநந்தப்ரவாஹமே, எ - று.

பேரறிவு-பரமான்மா. இறைவனைப்போல நித்திய நிர்த்தோஷங்களாயுள்ள வேதங்கள் தாமறியமாட்டாமையால் பிறர் யாரறிய வல்லாரென்னுங் கருத்தை யுட்கொண்டு "அனந்தமறை ஆரறிவாரென்ன வோலமிடும்" என்றூர்.

**6.** உரையிறந்த வன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த வின்பக் கடலே பராபரமே.

**பொ - ரை.** பேச்சற்ற அன்பரது மனத்தின்கண் பேரொளியாய்ப் பெருகிக் கரையில்லாது நிலைபெற்ற சுகக்கடலே, எ - று.

பேச்சற்ற அன்பர் - மௌன நிலையையுடைய அன்பர்.

**7.** எத்திக்குந் தானாகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே.

**பொ - ரை.** எந்தத் திக்கினை யுற்றுநோக்கினும் அந்தத் திக்குகடோறுந் தானேயாய் நிற்றலுமன்றி, என்னிருதயத்துஞ் சுரந்து இனிக்கின்ற இன்பத் தேனே, எ - று.

எத்திக்கும் என்றது பத்துத்திக்கினையும். அவை கிழக்கு முதலிய எட்டுத்திசையும், பூமியும் ஆகாயமும். "பத்துத் திக்கும் பணிநுதற் கட்டிருவாளன்" என்றார் கபிலதேவரும். உள்ளும் புறத்துந் தித்திக்குந் தேனென்றிதனைக் கூறியது நாவொன்றற்கே சுவை பயக்குந் தேனை யொழித்தற்கு.

**8.** திக்கொடு கீழ்மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே பராபரமே.

**பொ - ரை.** எட்டுத்திசைகளோடு, பூமி ஆகாயங்களினும் உன் திருவருள் வியாபித்து நீக்கமற நிறைந்திருக்குந் திறத்தை யறிந்த அறிஞரது கையினிடத்து விளங்குகின்ற நெல்லிப் பழமே, எ - று.

கீழ், மேல் - பண்பாகு பெயர்கள்.

**9.** முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தே யென் னுள்ளத் தெளிவே பராபரமே.

**பொ - ரை.** முத்தே, பவளமே, நெருங்கியபசுமையாகிய பொன்னினொளியே, அறிவே, என்மனத் தெளிவே, எ - று.

நீறணிமேனிய னாதலால் முத்தென்றும், "பவளத் தடங்குன்று" எனவும் "முக்கட் பவளமலை" எனவும் பிறர் கூறுதலானும், இறைவன் திருமேனி செந்நிறமாதலானும் பவளமென்றும், "பொன்பணைத் தன்ன விறை" எனத் திருவாதவூரடிகள் கூறுதலானும், பிறவிடங்களிற் கூறப்படுதலானும் மொய்த்தபசும் பொற்சுடர் என்றும், இங்ஙனம் பிரித்தறிதற்குக் கருவியாகிய அருவுருவா யிருத்தலாற் சித்தென்றும், மனத்தெளிவுக்கு அறிவு கருவியாதலால் என்னுள்ளத் தெளிவே யென்றும் கூறினார். உயர் பொருள்களுள் சிறந்தனவாகிய முத்து, பவளம், பசும்பொன் முதலிய

பிறிதின்கிழமைப் பொருள்களாகவும், அறிவுமுதலிய தற்கிழமைப் பொருள்களாகவும் கூறினாரென்னலுமாம். இரத்தினவகையில் முத்துச் சிறந்தமைபற்றி முதற்கட் கூறப்பட்டது.

**10.** கண்ணே கருத்தே யென்கற்பகமே கண்ணிறைந்த
விண்ணே யானந்த வியப்பே பராபரமே.

**பொ - ரை.** (புறப்பொருளுணர்ச்சிக்குக் கருவியாகிய) நேத்திரமே (அகப்பொருளுணர்ச்சிக்குக் கருவியாகிய) மனமே (எனக்கு எண்ணிய வெண்ணியாங் குதவுதலால்) கற்பகமரமே, என் அறிவு நிறைந்த சிதாகாயமே, ஆனந்தத்தை யுதவுதலாகிய ஆச்சரியத்தை யுடையவனே, எ - று.

**11.** வாக்காய் மனதாய் மனவாக் கிறந்தவர்பால்
தாக்காதே தாக்குந் தனியே பராபரமே.

**பொ - ரை.** வாக்காகி, மனமாகி, வாக்குமனமிறக்கப் பெற்றவரிடத்தில் பொருந்தாது பொருந்தும் தனிமைப்பொருளே, எ - று.

**12.** பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தை சொல்லவந்த மனுவே பராபரமே.

**பொ - ரை.** நோக்கின விடங்களெல்லாம் பராகாயமாகித் தோன்றும் பொருட்டு, எனக்கு ஒருமொழியை யறிவுறுத்தவந்த மாநுஷரூபமே. மநு - மந்திரமாதலால், மந்திரரூபமே யென்னலுமாம்.

**13.** வானந்த மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்க்கவெனக்
கானந்தந் தந்த வரசே பராபரமே.

**பொ - ரை.** ஆகாய முடிவாகவும், பூமிமுடிவாகவும் வைத்து வைத்துப் பார்க்கும்படி, எனக்கின்பங்கொடுத்த அரசனே, எ - று.

அவரோஹணக்ரமமாகவும் ஆரோஹணக்ரமமாகவும் என்பார், வானந்த மண்ணினந்தம் என்றார்.

**14.** அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே யிறையே பராபரமே.

**பொ - ரை.** அன்பை மிகுவித்து என்னரிய வுயிரைக் காக்கவந்த ஆநந்தப் பெருக்கே, இறைவனே, எ - று.

அரிய வுயிர் என்றது மாநுடப்பிறவியை.

**15.** வானமெல்லாங் கொண்ட மௌனமணிப் பெட்டகத்துக்
கானபணி யான வணியே பராபரமே.

**பொ - ரை.** ஆகாயத்தை முழுதுந் தன்னிடத் தடக்கிக்கொண்ட மௌனநிலையாகிய அழகியபெட்டகத்தில் வைத்தற்குரியஆபரணமே, எ-று.

இறைவன் தங்குதற் குரியதாதலால், மௌனநிலையை மணிப்பெட்டக மென்றார்.

**16.** ஓடுமிரு நிதியு மொன்றாகக் கண்டவர்கள்
நாடும்பொருளான நட்பே பராபரமே.

**பொ - ரை.** ஓட்டையும் பெரிய திரவியத்தையும் ஒன்றென நோக்கிய அறிஞர்கள் தேடும்பொருளாகிய நண்பே, எ - று.

" ஓடும் பொன்னும் " என்றார் பிறரும்.

**17.** சித்தநினைவுஞ் செயுஞ் செயலு நீயெனவாழ்
உத்தமர்கட் கான வுறவே பராபரமே.

**பொ - ரை.** மனநினைவும், அந்நினைவின்படி செய்யுஞ் செய்கையும் நீயேயென் றுறுதிகொண்டு வாழ்கின்ற உத்தமர்களுக்குத் தகுதியான சுற்றமே, எ - று.

செய்கை நிகழ்வது நினைவின் வழியாதலால், சித்த நினைவும் செயுஞ் செயலுமென்றார்.

**18.** போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனும்
வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே.

**பொ - ரை.** போதாந்தத்தையுடைய புண்ணியவான்கள், போற்றி, சயபோற்றி, என்று தோத்திரம் பண்ணுகிற வேதாந்தமாகிய வீட்டிலேற்றிய தீபமே, எ - று.

போதாந்தம் - ஞானக்கொழுந்து, வேதாந்த வீட்டில் விளக்கு ஒரு சொல்.

**19.** முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே.

**பொ - ரை.** முத்தர்களுக்கு முடிவிடமாகிய மோக்ஷவீதியில் விளங்குகின்ற உன் திருவடித் தாமரையை வணங்குகின்ற அன்பர்பொருட்டே, சித்தாந்த வீதியி லெழுந்தருளுகிற தெய்வமே, எ - று.

**20.** ஈனந் தருமுடல மென்னதியா னென்பதற
ஆனந்தம் வேண்டி யலந்தேன் பராபரமே.

**பொ - ரை.** இழிவைத் தருகின்ற சரீரத்தை, எனது யான் என மமகரித்தும் அகங்கரித்தும் பேசுதல் அற்றொழிதற்பொருட்டு, உன்னைப்பெறுகையா லுண்டாகிற சுகத்தை விரும்பி, கிடைக்கப்பெறாமையால் துன்பமடைந்தேன், எ - று.

**21.** என்புருகி நெஞ்ச மிளகிக் கரைந்துகரைந்
தன்புருவாய் நிற்க வலந்தேன் பராபரமே.

போ - ரை. எலும்புருகப்பெற்று, மனங்கரைந்து, உருகியுருகி, அன்புருவமாகி நிற்கைக்குத் துன்பமடைந்தேன், எ-று.

வன்மையாகிய என்புருகுத லருமையென்பதுதோன்ற "அலந்தேன்" என்றார்.

**22.** சுத்த வறிவாய்ச் சுகம்பொருந்தி னல்லாலென்
சித்தந் தெளியா தென்செய்வேன் பராபரமே.

போ - ரை. பரிசுத்தமாகிய அறிவுருவாகி, நித்தியாநந்தத்தையடைந்தாலன்றி, என் சித்தம்தெளியாது, இதற்கு யான் என் செய்யக்கடவேன்.

**23.** மாறா வனுபூதி வாய்க்கினல்லா லென்மயக்கம்
தேறாதென் செய்வேன் சிவமே பராபரமே.

போ - ரை. இடையீடில்லாத சுகாநுபவம் கிடைத்தாலன்றி, என் மனமயக்கந் தெளியாது, இதற்கு யான் என்செயக்கடவேன் பரமசிவமே.

சுபம் கிடைத்தாலன்றி மனமயக்கமாகிய அசுபம் தீராதாதலால், சிவமே, மாறாவநுபூதி வாய்க்கினல்லால் என்மனமயக்கந்தேறாது என்றார்.

**24.** தாகமறிந் தின்ப நிட்டை தாராயேலா கெடுவேன்
தேகம் விழுந்திடி னென்செய்வேன் பராபரமே.

போ - ரை. எனக்குண்டா யிருக்கிற மோக்ஷதாகத்தை நீ யுணர்ந்து சுகநிஷ்டையைக் கொடாயாயின், ஐயோ கெடுவேன், இவ்வருமையாகிய மாநுஷ சரீரம் நசித்துவிடின், பின்னர் யான் என்செயக் கடவேன்.

தாகமுண்டாதற்குக் காரணம் தாபத்ரயாக்நியா லுளதாகிய வெப்பம்.

**25.** அப்பாவென் னெய்ப்பில்வைப்பே யாற்றுகிலேன் போற்றி
யென்று, செப்புவதல்லால்வேறென் செய்வேன்பரா
பரமே.

போ - ரை. அப்பனே, எனக்கு உற்றிடத்துதவும் நிக்ஷேபமே, பிறவிவெப்பத்தைச் சகிக்கிலேன், (இதனைத் தணித்தல் வேண்டும்) அதன் பொருட்டு உனக்கு நமஸ்காரம் என்றுவாயினாற் சொல்லுதலன்றி, வேறு என்ன செயற்கரிய செயல்களைச் செய்யவல்லேன், எ - று.

செயற்கரிய செயல்கள் - இயம நியமாதிகள்.

**26.** உற்றறியு மென்னறிவுமுட்கருவிபோற்சவிமாண்
டற்று மின்பந் தந்திலையேயையா பராபரமே.

போ - ரை. (பொறிகளைவாயில்களாகப்) பொருந்திப் புலன்களை யறியு மென்னறிவும் உட்கருவிகள் ஒளிமழுங்கினற்போல ஒளி மழுங்கி அற நசித்தும், இன்னமும் எனக்குச் சுகத்தைக் கொடுத்தாயில்லையே, ஐயனே.

**27.** சொல்லா லடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லா லென்றாக மறுமோ பராபரமே.

போ - ரை. சொல்லச் சுருங்காத ஆநந்த சாகரத்தில் வாய்மடுத்துப் பருகினாலன்றி, எனக்குண்டாயிருக்கிற மோக்ஷதாகம் அற்றொழியுமோ.

**28.** பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

போ - ரை. என்னை முகம் பாராயோ, ஒருகால் பார்த்து என் விய சனத்தைத் தீராயோ, நீ வாய்திறந்து சொல்லுவாயாக, எ - று.

**29.** ஓயாதோ வென்கவலை யுள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.

போ - ரை. என் கவலை யொழியாதோ, என் மனத்தின்கண்ணே இன்பப் பெருக்குப் பெருகிப் பாயாதோ, ஐயனே, சொல்லுவாயாக, எ - று.

**30.** ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங்கனலில் வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே.

போ - ரை. ஓகோ, உன்னைப் பிரிந்தவரது மனம் நெருப்பிலிட்ட பாகுதானோ, அன்றி மெழுகுதானோ, சொல்லுவாயாக, எ - று.

பாகோ மெழுகோ என்றதனால், அவற்றினு மிக்குருகுகின்ற தென் பது கருத்து.

**31.** கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளைப்
பார்த்தவனை னென்னைமுகம் பாராய் பராபரமே.

போ - ரை. நான் நுண்ணிய அறிவு முழுதும் கொள்ளையாகக் கொடுத்து, உன் திருவருட் பேற்றை யெதிர்பார்த்தவன் ஆதலால், என் முகம் பார்த்தருளல் வேண்டும், எ - று."

அறிவைக் கொள்ளைகொடுத்தலாவது சீவபோதத்தைச் சிவபோத முண்ணக்கொடுத்தல்.

**32.** கடலமுதே தேனே யென்கண்ணே கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே.

போ - ரை. பாற்கடலிற் பிறந்த அமிர்தமே, தேனே, என்கண்ணே, என் கவலையானது அநுபவித்து முடிவுபெறாது, ஆதலால், என்னை நீ முகம் பார்த்திரங்கி யருளல் வேண்டும், எ - று.

என்று மிறவாமை பயத்தலால் அமுதே யென்றும், நவிலுந்தோறும் நா மனங்கட்குச் சுவைபயத்தலால் தேனே யென்றும், இது நற்பொருள் இது தீப்பொருள் எனப் பகுத் துணர்த்தலால் கண்ணேயென்றும் கூறினார்.

**33.** உள்ளமறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் பேதைத் தவிப்பேன் பராபரமே.

**போ - ரை.** என் மனக்கருத்தை யுணர்வாய், நான் துன்பமுழத்தலை யுணர்வாய், நீ யென்னை யேற்றருளாது தள்ளிவிடுவையாயின், அறிவிலியாகிய நான் மிகவருந்துவேன், எ - று.

தள்ளிவிடினும் மீட்டு மடையுநெறி யுணராது வருந்துகின்றமையின் ஏழை தவிப்பேன் என்றார்.

**34.** கன்றினுக்குச் சேதாக னிந்திரங்கல் போலவெனக்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே.

**போ - ரை.** இளங்கன்றின்பொருட்டு, ஈன்றணிமையையுடைய பசுவானது கருணையினால் மனமுருகி யிரங்குதல்போல, கருணையையுடைய என் பரமபிதாவே, நீ என்பொருட்டு என்று இரங்கியருள்வாய், எ - று.

கருணை யெந்தாய் என்றமையால், கருணை பசுவிற்குங் கூட்டியுரைக்கப்பட்டது.

**35.** எண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி யேழை
நெஞ்சம்,புண்ணாகச்செய்ததினிப்போதும்பராபரமே.

**போ - ரை.** எண்ணக்கூடாத எண்ணங்களை யெல்லாம் எண்ணியெண்ணி, ஏழையேனது மனமானது, புண்படச்செய்தது, இனியமையும்.

**36.** ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே.

**போ - ரை.** உன்னடிமையாகிய நான், கடலிடைப்பட்ட திரணம் போல, அங்குமிங்குமாக வீணி லலைவது என்ன பாவப்பயன், எ - று.

அங்கும் இங்கும் என்றது, எண்ணரிய பிறவிக ளெடுத்தெடுத்து சுவர்க்க நரகங்களி லுழல்வதை நோக்கி.

**37.** கற்றவறிவாலுனை நான்கண்டவன்போற் கூத்தாடிற்
குற்றமென்றென் னெஞ்சே கொதிக்கும் பராபரமே.

**போ - ரை.** கல்விகற்ற அறிவினால், நான் உன்னைக்கண்டவன் போல நடித்தால், அந்நடித்தல் குற்றமென்று கொண்டு என் மனமே கொதிக்கின்றது, எ - று.

**38.** ஐயோ வுனைக்காண்பா னாசைகொண்ட தத்தனையும்
பொய்யோ வெளியாப் புகலாய் பராபரமே.

பொ - ரை. ஐயோ, உன்னைக் காணும்பொருட்டு நான் ஆசை கொண்டதெல்லாம் பொய்தானோ, பொய்யாயின், வெளிப்படையாகச் சொல்லுவாயாக, எ - று.

**39.** துன்பக்கண் ணீரிற் றுளைந்தேற்குன் னானந்த
வின்பக்கண் ணீர்வருவ தெந்நாள் பராபரமே.

பொ - ரை. துன்பத்தினால் ஒழுகுகின்ற கண்ணீரிற் படிந்த எனக்கு, உனது நிரதிசய சுகத்தினா லுளதாகும் இன்பக்கண்ணீர் ஒழுகுவது எந்தநாளோ, எ - று.

சோகபாஷ்ப மொழிந்து ஆநந்தபாஷ்பம் பொழிவது எந்தநாளோ என்பதாம்.

**40.** வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றுயுளறு
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே.

பொ - ரை. வஞ்சனையையும் பொய்யையும் உள்ளே பொதிந்து வைத்து, பொறாமை யுடையேனாகித் தடுமாறுகின்ற மனத்தையுடைய எனக்கும், நன்மார்க்கமுளதோ, எ - று.

வஞ்சனையையும் பொய்யையும் உள்ளே பொதிந்துவையாது அழுக்காற்றை யொழித்த மனத்தினையுடையோர்க் கன்றி யெனப் பொருள் படுதலால், நெஞ்சனுக்கும் என்னு மும்மை யிறந்தது தழீஇயது. நெறி - முத்தி நெறி. "முத்திநெறி யறியாத மூர்க்கரோடு முயல்வேனை" என்றார் திருவாதவூரடிகளும்.

**41.** பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி யானுமு
மோசம்போனே னன் முறையோ பராபரமே.

பொ - ரை. பாசத்தனை யற்று நின்றவர்போல நடித்தும், நான் மோசம் போனேன், இது முறையோ, எ - று.

உ.A முறையோ என்றது முறையீடாயினுமாம்.

**42.** நன்றறியேன் றீதறியே னானென்று நின்றவனா
ரொன்றறியே னேனழை யென்னே பராபரமே.

பொ - ரை. நன்மையறியேன், தீமையறியேன், நான் என்று அகங்கரித்து நின்றவன் யார் என்றறியேன், ஆதலால் நான் அறிவில்லாதவன், இதற்குக் காரணமென்னோ, எ - று.

**43.** இன்று புதிதன்றே யெளியேன் படுந்துயரம்
ஒன்று மறியாயோ வுரையாய் பராபரமே.

போ - ரை. எளியேன் படுந்துன்பம் இன்று புதிதல்லவே, இதனை நீ சிறிதுமுணர்ந்திலையோ, சொல்வாய், எ - று.

இந்தத் துன்பத்தை ஜந்மபரம்பரையாய்த் துய்த்து வருகின்றே னென்பதுகருத்து.

**44.** எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுயர்
அத்தனையு நீ யறிந்ததன்றோ பராபரமே.

போ - ரை. நான் எடுத்த ஜந்மங்களெத்தனை, அவைகளில் நானநுபவித்த துன்பங்களெத்தனை, அத்தனையும் நீ யறிந்ததல்லவோ, எ - று.

**45.** இந்நாட் சற்று மிரங்கிலையேற் காலன்வரும்
அந்நாட் காக்கவல்லா ரார்காண் பராபரமே.

போ - ரை. இன்று சிறிதும் என் மீதிரக்கஞ் செய்திலையாயின் காலன் வருமென்று, என்னைக் காத்தருளவல்லார் யாவருளர், எ - று.

காண் என்பதை முன்னிலையுரை யசையிடச்சொல்லாகக் கொள்ளாது, நீயே தேடிப்பார் என்னும் பொருளதாகக் கோடலுமாம்.

**46.** உற்றுற்று நாடி யுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கியாளத் தகாதோ பராபரமே.

போ - ரை. உற்றுற்றுப்பார்த்து உன்னைக் காணப் பெறாமையால், மனமருண்ட பாவியேனை, நீ சிறிதிரக்கஞ் செய்தாளத்தகாதோ, எ - று.

**47.** எள்ளளவு நின்னை விட வில்லா வெனைமயக்கில்
தள்ளுதலா லென்னபலன் சாற்றாய் பராபரமே.

போ - ரை. எள்ளளவாயினும் உன்னையன்றி வேறு துணையில்லாத என்னை, மீட்டும் பிறவிமயக்கமாகிய படுபள்ளத்தில் தள்ளுகையால், உனக்குண்டாகும் பயன்யாது, சொல்வாய், எ - று.

**48.** பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்சோ
தேடியெனை யடிமை சேர்த்தாய் பராபரமே.

போ - ரை. உலகின்கண்ணே உன்னைப் பாடிப் படித்துப் பாராட்டி நிற்கவோ, என்னையடிமையாகத் தேடிச்சேர்த்தாய், எ - று.

**49.** சொன்னதைச் சொல்வதல்லாற் சொல்லறவென் சொல்லறுதிக், கென்னத்தைச் சொல்வே னெளியேன் பராபரமே,

போ-ரை. முதியோர்சொன்னதைச் சொல்லுவதன்றி, சொல்லுதலற்றொழிய, என்சொல்முடிவுக்கு என்சொல்ல வல்லேன் ஏழையேன், எ-று.

**50.** சொல்லும் பொருளுமற்றுச் சும்மாவிருப்பதற்கே
அல்லும் பகலுமெனக்காசை பராபரமே.

போ-ரை. சொல்லுஞ் சொல்லும், அச்சொல்லின்பொருளும் ஒழிந்து, சும்மாவிருப்பதற்கே, இரவும்பகலும் எனக் காசையுண்டு, எ-று.

**51.** நேசநிருவிகற்ப நிட்டை யல்லா துன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றே பராபரமே.

போ-ரை. நிருவிகற்ப சமாதியில் நேசமுண்டல்லது, உன்னடியேனுக்குப் பிறிதொன்றின்மேல் ஆசையுண்டோ, இது நீ யுணராததல்லவே, எ-று.

**52.** துச்சனென வேண்டா மித்தொல்லுலகி லல்லல்கண்டால்
அச்சமிக வுடையேனையா பராபரமே.

போ-ரை. என்னை அற்பனென்று நினைத்தல்வேண்டாம், இந்தப் பழைய உலகத்திலுள்ள துன்பங்களைக்கண்டால் அவைகட்கு மிகவும் அஞ்சுதலுடையேன், ஐயனே, எ-று.

படைக்கப்பட்டு நெடுநாளாயினமையால் தொல்லுலகு என்றார்.

**53.** கண்ணுவாரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே.

போ-ரை. என் நேத்திரம் போல்பவரேயாயினும் உன்னைக் கைகூப்பி வணங்காதாராயின், அந்த மண்ணுவார் சிநேகத்தை, நான் ஒரு பொருளாக மதிக்கமாட்டேன், எ-று.

"கரவாதுவந்தீயுங்கண்ணன்னார்" என நட்பிற் சிறந்தோரைப் பெருநாவலர் கூறுதலுங்காண்க.

**54.** கொல்லாவிரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ்சொல்லுவ தென்னிச்சை பராபரமே.

போ-ரை. கொல்லாவிரதமானது பூமண்டல முழுதும் விருத்தியடைய எல்லாருக்கும் அதனேற்றத்தை யெடுத்துச் சொல்லுதற்கே எனக்கு விருப்பமுள்ளது, எ-று.

கு-பூமி. வலயம்-மண்டலம்.

**55.** எத்தாற் பிழைப்பேனோ வெந்தையே நின்னருட்கே
பித்தானேன் மெத்தவுநான் பேதை பராபரமே.

போ - ளை. என் தந்தையே, எந்த வுபாயத்தினால் உஜ்ஜீவிப்பேனோ (அறியேன்) உன்னருட்பேற்றுக்கே பித்தனாயினேன், நான் மிகவும் அறிவிலேன், எ - று.

என்னைக் கைவிடுதல் தக்கதன்று என்பதாம்.

**56.** வாயினாற் பேசா மௌனத்தை வைத்திருந்தும்
தாயிலார் போனான் றளர்ந்தேன் பராபரமே.

போ - ளை. வாயைக்கொண்டு பேசாததாகிய மௌநநிலையை யெனக்குரித்தாக்கி வைத்திருந்தும், தாயில்லாத புதல்வர் தளர்தல்போல நான் தளர்ந்தேன் (இது தகுமோ), எ - று.

**57.** அன்னையிலாச் சேய்போ லலக்கணுற்றேன் கண்ணார
என்னகத்திற் றாய்போ லிருக்கும் பராபரமே.

போ - ளை. தாயிலாப் பிள்ளைபோலத் துயரமடைந்தேன், கண்ணார என்மனத்தில் தாய்போலிருக்கும் பராபரமே, எ - று.

**58.** உற்றுநினைக்கிற் றுயரமுள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றநொந்தே னென்னைமுகம் பார்நீ பராபரமே.

போ - ளை. உற்று நோக்கி யெண்ணினால் துயரமானது உள்ளத்தினுள்ளே, செந்தீயைப்போலப் பற்றியெரிதலால் நொந்தேன், என்னை நீ முகம்பார், எ - று.

உள் - பெயரும் ஏழனுருபும்.

**59.** பொய்யனிவ னென்றுமெள்ளப்போதிப்பார்சொற்கேட்டுக்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே பராபரமே.

போ - ளை. இவன் பொய்யனென்று, பையப்போதிப்பவரது சொல்லைச் செவியேற்று, நீ என்னைக் கைவிடவேண்டாம், என் கண்போல்வானே, எ - று.

**60.** எண்ணமறிந்தே யிளைப்பறிந்தே யேழை யுய்யும்
வண்ணந் திருக்கருணை வையாய் பராபரமே.

போ - ளை. என்னெண்ணத்தை யுணர்ந்து, என் மெலிவையுணர்ந்து ஏழையேன் உய்யுமாறு திருக் கருணை வைத்தல்வேண்டும், எ - று.

**61.** நாட்டாதே யென்னையொன்றி னாட்டியித மகிதம்
காட்டாதே யெல்லாநீ கண்டாய் பராபரமே.

போ - ரை. என்னை ஒருபொருளில் நாட்டவேண்டாம், நாட்டி, அதன் கண்ணுள்ள நன்மை தீமைகளைக்காட்டாதே, எல்லாப்பொருள்களும் நீயே, எ - று.

கண்டாய் - அசை.

**62.** உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளே யுலாவுமென்னை
அன்னைவயிற் றின்னமடைக்காதே பராபரமே.

போ - ரை. உன்னை நினைந்து, உன்னிறைவுக்குள்ளே யுலாவுகின்ற என்னை, இன்னமும் தாய்வயிற்றி லடைக்கவேண்டாம், எ - று.

**63.** பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாறா
வரமெனக்குத் தந்தருளென் வாழ்வே பராபரமே.

போ - ரை. என்னைக் காத்தருளல் உனக்குப் பரம் என்றெண்ணுகின்ற பழக்கத்தையே, கெடாதவரமாக எனக்குத் தந்தருளல் வேண்டும், என் வாழ்ச்சிக்குக் காரணனே, எ - று.

**64.** வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்
சிந்திக்க நின்னதருள் செய்யாய் பராபரமே.

போ - ரை. உன்னை வந்தித்து, மறவாமையைக் கடன்மையாகக் கொண்டு உன்னையே சிந்திக்க, உன்னருள் செய்தல்வேண்டும், எ - று.

**65.** எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே.

போ - ரை. எவ்வகைப்பட்ட சிற்றுயிர்களையும், என்னரிய வுயிர்போல நினைத்து, அவைகட் கிரங்குமாறு, உன் தெய்வத் தன்மையமைந்த அருளாகிய கருணையைச் செய்தல் வேண்டும், எ - று.

எவ்வுயிரும் என்றது ஓரறிவுயிரும் என்றபடி.

**66.** வெட்டவெளிப்பேதையன்யான் வேறுகபடொன்றறியேன்
சிட்டருடன் சேரனந்த தெண்டன் பராபரமே.

போ - ரை. நான் வெளிப்படையாகிய அறிவிலி, வேறு கபட மார்க்கங்களைச் சிறிதுமறிந்திலேன், (ஆதலால் நான் உய்யுமாறு) உன்னடியாருடன் சேர்ப்பாய், (அதன்பொருட்டு) உனக்கு அனேகமான தண்டம் சமர்ப்பிக்கிறேன், எ - று.

**67.** இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே,

போ - ரை. இராப்பகல்க ளற்றவிடத்திருத்தலாகிய ஏகாந்தயோகம் எனக்குண்டாகவும் என்மீது உன் திருக்கருணைவைத்தல் வேண்டும், எ - று.

**68.** மால்காட்டிச் சிந்தைமயங்காம னின்றுசுகக்
கால்காட்டி வாங்காதே கண்டாய் பராபரமே.

போ - ரை. எனக்கு ஆசைகாட்டி, அந்நிலையினின்று நான் மயங்கா வண்ணம் சுகாரம்பஞ் செய்து, நீங்காதே, எ - று.

**69.** எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் றானென்னுந
வைப்பையழி யாநிலையா வையாய் பராபரமே.

போ - ரை. எவ்வகைப்பட்ட பொருள்களும் நீயென்றே நினைத்து நான் என்பது தலையெடாத ஞானபூமியை எனக்கு அழியா நிலையாக்கி வைத்தல்வேண்டும், எ - று.

ஞானபூமி ஏழுவகைப்படும். அவையாவன:—சுபேச்சை, விசாரணை, தநுமாநசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியம் என்பன. இவற்றி னிலக்கணமெல்லாம் பெருநூல்களிற் காண்க, எ - று.

**70.** சும்மாவிருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மாலறிதற் கெளிதோ பராபரமே.

போ - ரை. சும்மா இருப்பதே சுட்டுதலற்ற பூர்ண நிலையென்று, எம்மா லறியப்படுதற் கெளிதாகுமோ, எ - று.

சும்மாவிருத்தல்-அகப்புறக் கருவிக ளலையாதிருத்தல்.

**71.** முன்னொடுபின்பக்க முடியடிநாப்பண்ணறநின்
றன்னொடுநானிற்ப தென்றோ சாற்றாய் பராபரமே.

போ - ரை. முன், பின், இருபாரிசம், முடி, அடி, நடு என்னுமிக் கூறுபாடுகள் அற்றொழியுமாறு, நான் உன்னோடு ஒன்றுபட்டு நிற்பது எந் நாளோ, சொல்வாய், எ - று.

சீவன் சிவத்தோடொன்றுங் காலத்து இக்கூறுபாடுகள் தோன்றாவாதலால் இவ்வாறு கூறினர்.

**72.** மைவ்வண்ணந் தீர்ந்த மௌனிசொன்ன தெவ்வண்ணம்
அவ்வண்ண நிட்டை யருளாய் பராபரமே.

போ - ரை. அஞ்ஞான விருள்நீங்கிய மௌனகுரு சொன்னது எவ்வண்ணமோ, அவ்வண்ணமாகிய நிஷ்டையை அருள்செய்யாய், எ-று.

**73.** வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

போ - ரை. விதையை யாதாரமாகக் கொண்டல்லது எப்பொருளும் விளைதலுண்டோ, இல்லையன்றே, அதுபோல, உன் திருவருளென்கிற ஞானத்தைக்கொண்டல்லது நாங்கள் உளமாவேமோ, சொல்வாய், எ-று.

**74.** ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூக்காத தூக்கமது தூக்கும் பராபரமே.

போ - ரை. அகங்காரம் நீங்கி, உன்விஷய ஞானரூபமான அன்பருக்கே உறங்காவுறக்க மோங்காநிற்கும், எ - று.

" தூங்காமற்றூங்கி " என்றார் பிறரும்.

**75.** சிந்தையவிழ்ந் தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே யின்பநிலை வாய்க்கும் பராபரமே.

போ - ரை. மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து, ஞானமயமாகிய வுன்திருவடி நிழலின்கண் வந்தடைந்தவர்க்கே ஆநந்த நிலைகிடைக்கும், எ - று.

**76.** சொல்லாட வூமரைப்போற் சொல்லிருந்து நீயாகி
னல்லா லெனக்கு முத்தியாமோ பராபரமே.

போ - ரை. பேசாத ஊமரைப்போலப் பேச்சற்று, நான் நீயாயினல்லது, எனக்கு முத்தியுளதாமோ, எ - று.

**77.** பேச்சாகா மோனம் பிறவாமுளைத்ததென்றற்
காச்சாச்சுமேற்பயனுண்டாமோ பராபரமே.

போ - ரை. பேச்சற்ற மோநநிலையானது தோன்றி விளைந்ததென்றற்கேதுவாயிற்று, ஆதலால், இனி அதன் பயனாகிய முத்தியுமெனக்குண்டாகும், ஐயமின்று, எ - று.

**78.** கெட்டியென்றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர் பூரணமாம், தொட்டிலுக்குட் சேய்போற் றுயின்றார் பராபரமே.

போ - ரை. கெட்டிக்காரர் என்று உலகராற் சொல்லப்பட்ட உன் அன்பர், மும்மல சம்பந்தம் நசிக்கப்பெற்று, அயர்ந்து, ஒப்பற்ற பூரணநிலையாகிய தொட்டிலுக்குள்ளே, துணித்தொட்டிலிற்றுயிலுஞ் சிறார் போலத் துயின்றார்கள், எ - று.

**79.** காட்டவருளிருக்கக் காணா திருண்மலத்து
நாட்டாமெனக்குவர னன்றோ பராபரமே.

போ - ரை. காட்டுதற்கு உன் திருவருளிருக்க, அதனை முன்னிட்டுக் காணாமல் இருளுருவாகிய மலநாட்டம் எனக்குளதாதல் நன்மையோ, எ - று.

**80.** எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய் பொறுக்கும்
அத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே.

போ - ரை. எத்தன்மையதாகிய பெருங்குற்றத்தைப்பாலர் செய்தாலும், அதனைத்தாயானவள் பொறுத்துக்கொள்வாள். உன்திருவருளும் (எம்போலியரது குற்றம் பொறுத்தற்கு) அத்தன்மையதல்லவோ, எ-று.

**81.** எத்தனையோ தேர்ந்தாலு மென்னாலே யின்பமுண்டோ
சித்துருவே யின்பச் சிவமே பராபரமே.

போ - ரை. எத்தனை தேர்ச்சியடைந்தாலும் என்னால் எனக்குளதாவதோரின்பமுளதோ, அறிவுருவமே, சுகத்தைத்தருகின்ற பரமசிவமே, எ-று.

**82.** மண்ணொடுவிண் காட்டி மறைந்துமறை யாவருளைக்
கண்ணொடு கண்ணாக வென்றுகாண்பேன்பராபரமே.

போ - ரை. பூமியோடு ஆகாயத்தைக்காட்டி, மறைந்து மறையாதிருக்கிற உன்திருவருளைக் கண்ணோடு கூடிய கண்ணொளிபோல எந்நாள் காணப்பெறுவேன், எ - று.

**83.** பஞ்சரித்து நின்னைப் பலகா லிரந்ததெல்லாம்
அஞ்சலெனும் பொருட்டே யன்றோ பராபரமே.

போ - ரை. என்னிழிதன்மை காட்டிப் பலகாலு முன்னை நானிரந்ததெல்லாம், என்னை அஞ்சாதே யென்று நீ சொல்லியருளற் பொருட்டேயல்லவோ, எ - று.

**84.** எங்கெங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே.

போ - ரை. எவ்வெவ்விடங்களிற் பார்த்தாலும், அவ்வவ்விடங்களில் எவ்வகைப்பட்ட வுயிர்களுள்ளும் அவ்வவ்வுயிர்களா யிருப்பது நீ யல்லவோ, எ - று.

**85.** அனைத்துமாய் நின்றாயே யான்வேறே நின்னை
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் பராபரமே.

போ - ரை. எல்லாப் பொருள்களும் நீயேயாய் நின்றனையே, அங்ஙனமாக, நான் வேறாகி நின்று, உன்னை நினைக்கும் வழியெப்படி, சொல்லாய், எ - று.

**86.** நின்போதத் தாலே நினைப்புமறப்பு மென்றால்
என்போத மெங்கே யியம்பாய் பராபரமே,

போ - ரை. நினைப்பும் மறப்புமாகிய யாவும் உன்போதத்தாலே நிகழ்வனவாயின், என்போத மெங்கேயுளது, சொல்லாய், எ - று.

போதம் - அறிவு.

**87.** ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமன மெல்லாநீ
என்றறிந்தா லெங்கே யியங்கும் பராபரமே.

போ - ரை. ஒன்றை நினைந்தும் ஒன்றை மறந்தும் ஓடாநின்ற மனமானது, எல்லாப் பொருள்களும் நீயேயென்றறிந்ததாயின், எவ்விடத்துச் சஞ்சரிக்கும், எ - று.

**88.** கொழுந்தில் வயிரமெனக் கோதறவுள் ளன்பில்
அழுந்து மவர்க்கே சுகமுண்டாகும் பராபரமே.

போ - ரை. கொழுந்தினிடத்து வயிர மடங்கியிருத்தல்போலக் குற்றம் நீங்க, உள்ளன்பினிடத் தழுந்தியிருப்பவர்க்கே ஆநந்த முண்டாகும், எ - று.

**89.** பற்றும் பயிர்க்குப்படர் கொழுந்து போற்பருவம்
பெற்றவர்க்கே நின்னருடான் பேறும் பராபரமே.

போ - ரை. பற்றியேறும் விளைவுக்குப் படர்கின்ற கொழுந்து போலப் பருவமடைந்தவர்க்கே உன்திருவருள் பயன்படும், எ - று.

**90.** யோகியர்க்கே ஞான மொழுங்காம் பேரன்பான
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே.

போ - ரை. யோகியர்க்கே ஞானமடைதல் உசிதமாகும், பெரிய அன்பினரான மோக்ஷதாக முள்ளவர்களும், முற்பிறப்பில் யோகஞ் சாதித் தடைந்தோராம், எ - று.

**91.** அல்லும் பகலு மறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமைகாண் பராபரமே.

போ - ரை. அல்லும் பகலும் அறிவுருவாகி நின்றவர்கட்கு, சொல்லும், சொல்லினது பொருளும் சுமையாகும், எ - று.

பேசார்களென்பது கருத்து.

**92.** எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க் குனைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ பராபரமே.

போ - ரை. எச்சிலாய் விட்டதென்று பூவையிகழ்ந்த வர்கட்கு, உன்னையர்ச்சித்து வணங்கப் பச்சிலையையுங் கிள்ளல் தகுதியாமோ, எ- று.

எச்சிலென்று பூவையிகழ்தலாவது - வண்டினெச்சிலென்றெள்ளல்.

**93.** அந்தக் கரணமடங்கத் துறப்பதுவே
எந்தத்துறவினுநன் றெந்தாய் பராபரமே.

**பொ - ரை.** மனமாதியந்தக் கரணங்கள் ஒடுங்கும்படி துறத்தலே, எவ்வகைப்பட்ட பொருள்களைத் துறத்தலினும் நன்மையாம் எந்தையே, எ - று.

**94.** தன்னையறிந்தாற் றலைவன்மேற்பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே.

**பொ - ரை.** தன்னை யின்னானென்றுணர்ந்தால், தலைவன்மேற் பற்றுண்டாதலன்றி, மற்றொருபற்று முளதாமோ சொல்லாய், எ - று.

“ தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல், பின்னையத் தலைவன்றானே பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன் ” என்றார் பிறரும்.

**95.** அன்பாற்கரைந்து கண்ணீ ராறுகண்டபுண்ணியருக்
குன்பால்வர வழிதானுண்டோ பராபரமே.

**பொ - ரை.** அன்பினாலுருகி, தமது கண்ணீராற்றைக் கண்ட புண்ணியவான்களுக்கு, உன்னிடத்து வருதற்கு வழியுண்டோ, எ - று.

கண்ணீராறுதடுக்கு மாதலால், வழிதானுண்டோ என்றார்.

**96.** தன்னையறிந்தருளே தாரகமாநிற்பதுவே
உன்னை யறிதற்குபாயம்பராபரமே.

**பொ - ரை.** தன்னையறிந்து, திருவருளை தாரகமாகக்கொண்டு, அத் திருவருள் நிலையில் நிற்றலே, உன்னையறிதற்குரிய உபாயமாகும், எ - று.

**97.** கற்றகலை யாநிலைதான் காணுமோகாண்பவெல்லாம்
அற்ற விடத்தேவெளியாமன்றோ பராபரமே.

**பொ - ரை.** கற்ற கலைகளினுணர்ச்சியாற் பொருணிலை வெளியாமோ; காணப்படுவனவெல்லாம் அற்றொழிந்த விடத்தல்லவோ வெளியாகும், எ - று.

**98.** கண்மூடிக்கண்விழித்துக் காண்பதுண்டோ நின்னருளாம்
விண்மூடினெல்லாம் வெளியாம் பராபரமே.

**பொ - ரை.** கண் மூடியும் கண் விழித்தும் பொருளைக் காணலுண்டோ, நின் திருவருளாகிய ஆகாயங் கவிந்துகொண்டால், யாவும் வெளியாகும், எ - று.

**99.** நேரேநினதருளென் னெஞ்சைக்கவரினென்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே.

போ - ரை. உன்திருவருளானது,நேராக என்மனத்தைக் கவர்ந்து கொண்டால், வேறொரு பொருளையும் பார்க்கமாட்டேன், ஆனந்தத்தையு மடைவேன், எ - று.

**100.** வான்காண வேண்டின் மலையேற லொக்குமுன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம்பராபரமே.

போ - ரை. உன்னை நான் காணும்பொருட்டுப் பாவனை செய்கின்ற பாவனையானது, ஆகாயத்தைக் காணவிரும்பினோன் மலையேறுதலை நிகர்க்கும், எ - று.

பயன்படாதென்பதுகருத்து.

**101.** வாதனைவிட்டுன்னருளின் மன்னினல்லால் வேறுமொரு
சாதனை தானுண்டோநீ சாற்றாய் பராபரமே.

போ - ரை. மூவகை வாசனைகளையும் விட்டு உன்திருவருளினிடத் துப்பொருந்திலன்றி, வீடுபேற்றுக்கு வேறுமொரு சாதனமுமுண்டோ, நீ சொல்லாய், எ - று.

**102.** பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருள்
தாரகத்தைப்பற்றியன்றோசாற்றாய் பராபரமே.

போ - ரை. மண்ணகமும் விண்ணகமும் தமக்குத்தாரகமாகப்பற்றி நிற்பது, உன் திருவருளாகிய தாரகத்தைப் பற்றியல்லவோ சொல்லாய், எ - று.

தாராகம்-ஆதாரம்.

**103.** விளக்குந் தகளியையும் வேறென்னார் நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே.

போ - ரை. உன்னைச் சலனமறச் சீவனென்று சொல்பவர், விளக்கையும் தகளியையும் வெவ்வேறு பொருள்களென்று சொல்லார்கள், எ-று.

**104.** பாராதி நீயாப் பகர்ந்தா லகமெனவும்
ஆராயுஞ் சீவனுநீ யாங்கண் பராபரமே.

போ - ரை. பிருதிவிமுதலியவைகளை நீயாகச்சொல்லுமிடத்து, நாம் என்று ஆராய்கின்ற சீவனும் நீயேயாகும், எ - று.

**105.** பொய்யைப் பொய்யென்றறியும் போதத்துக் காதரவுன்
மெய்யருளே யன்றோ விளம்பாய் பராபரமே.

போ-ரை. பொய்ப்பொருளை உள்ளவாறு பொய்ப்பொருளேயாமென் றறியும் அறிவினுக்கு ஆதரவாயிருப்பது, உன்மெய்யருளே யல்லவோ, சொல்வாயாக, எ - று.

**106.** வருவான்வந்தேனெனல்போன் மன்னியழியுஞ்சகத்தைத்
தெரிவாக வில்லையென்ற நீரம்பராபரமே.

பொ-ரை. நிலையாகக் காணப்பட்டழியுஞ் சகத்தைத் தெளிவாக இல்லை யென்றதீரம், இனிவருவானொருவன் துணிவுபற்றி வந்தே னென்றலை யொக்கும், எ-று.

**107.** மாயா சகமிலையேன் மற்றெனக்கோர் பற்றுமிலை
நீயேநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே.

பொ-ரை. மாயாப் பிரபஞ்சமில்லையாயின், எனக்கு வேறுமொரு பற்றுமில்லையாம், ஆகவே, நீயேநானென்று வந்துநிற்பேன், எ-று.

**108.** வானுதி நீயெனவே வைத்தமறை யென்னையுநீ
தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே.

பொ-ரை. ஆகாயமுதலியவற்றை நீயென்றே சொல்லிவைத்த வேதம் என்னையும் நீயாகவே சொல்லாதோ, நீசொல்வாய், எ-று.

**109.** வெள்ளக் கருணைமத வேழமாநின் னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம் பராபரமே.

பொ-ரை. கருணை மதத்தையுடைய மதயானையாகிய உன்திருவருளுக்கு, என் வஞ்சகத்தையுடைய மனமே கவளமாகும், எ-று.

**110.** வண்டாய்த் துவண்டு மௌனமல ரணைமேற்
கொண்டார்க்கோ வின்பங் கொடுப்பாய் பராபரமே.

பொ-ரை. வண்டுபோலத்துவண்டு, மௌனமாகிய புஷ்ப சயனத் தின்மே லேறினவர்களுக்கேயோ, நீ சுகங்கொடுப்பாய், எ-று.

ஏனையர்க்குக் கொடாயோ வென்பது கருத்து.

**111.** மாயைமுத லாம்வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்தேர்ந்
தாயுமறி வானதுநீ யன்றோ பராபரமே.

பொ-ரை. மாயைமுதலாகிய வினைக்கருவிகளும் நீ, அவைகளாற் றொழிற்பட்டு நிலைபெற்றிருக்கு முயிர்களும்நீ, நிலைபெற்றவுயிர்கள் மாயையைக்கடந்து தெளிந்து ஆராயுமறிவாயிருப்பதும் நீயல்லவோ, எ-று.

**112.** என்னறிவும் யானுமென தென்பதுவு மாமிவைகள்
இன்னவையே யன்றோ நிகழ்த்தாய் பராபரமே.

பொ-ரை. என்னறிவும், நானும், என தென்பதும், ஆகிய இவை யாவும், உன்னுடையனவே யாமன்றோ, சொல்லாய், எ-று.

**113.** பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
யாரறிவார் நானோவறிவேன் பராபரமே.

பொ - ரை. மண்ணுலகமறியாது, விண்ணுலகப்பரப்பறியாது, (அப்படிப்பட்ட) உன்பெருமையை, யாவரறியவல்லார், ஒருவருமில்லை, (அங்ஙனமாக) நானோ அறியவல்லேன், எ - று.

**114.** அண்டமனைத் திலுமாயப்பாலுக் கப்பாலும்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே.

பொ - ரை. எல்லா அண்டங்களுக் குள்ளாகி யிருப்பதுமன்றி, அவற்றிற்குப் புறமான இடங்களையும், பரிபூர்ண வியாப்தியால் ஆக்ரமித்திருக்கின்ற உன்னை, யாவர் அறிந்து கொள்ளவல்லார், எ - று.

**115.** ஒப்புயர் வொன்றின்றி யொலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருணீ கண்டாய் பராபரமே.

பொ - ரை. சமாநாதி காரஹிதமாய் சத்தமற்ற மௌநநிலையாகிய, விருத்தவடிவாகிய மரக்கலத்துக் கேற்ற மேலாகியசரக்கு நீ, எ-று.

**116.** என்போ லெளியவரு மெங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரு முண்டோ பராபரமே.

பொ - ரை. எவ்வெவ்விடங்களில் ஆராய்ந்து பார்த்தாலும், என்னைப்போல எளியவர்களும், உன்னைப்போல வலியவர்களும் உண்டோ.

**117.** பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே
யார்க்குஞ் செயலிலையே யையா பராபரமே.

பொ - ரை. ஆராய்ந்து பார்த்தால், அண்டபிண்டவிரிவெல்லாம் உன்செய்கையின் காரியமாகவே யிருக்கின்றது, வேறொருவர்க்கும் ஒரு செயலுமில்லை, ஐயனே, எ-று.

**118.** ஒன்றே பலவேயுருவே யருவேயோ
என்றே யழைப்பதுன்னை யென்று பராபரமே.

பொ - ரை ஒரு பொருளாயிருப்பவனே, பல பொருள்களாயிருப்பவனே, உருவமாயிருப்பவனே, அருவமாயிருப்பவனே, ஓ வென்று முறையிட்டு உன்னை யழைப்பது என்நாளோ, எ - று.

**119.** செப்புவதெல்லாஞ் செபநான் சிந்திப்ப தெல்லா நின்
ஒப்பிறி யானமென வோர்ந்தேன் பராபரமே.

பொ - ரை. நான் பேசுவனயாவும் உன் செபமெனவும், நான் சிந்திப்பனயாவும் ஒப்பற்ற உன்தியானமெனவும், ஆராய்ந்தறிந்து கொண்டேன், எ - று.

**120.** ஆரிருந் தென்னூர்போ யென்னாமுதா நின்னருளின்
சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே.

பொ - ரை. ஆரிருந்தாலென்னலாபம், ஆர் போனால் என்ன நஷ்டம் (ஒன்றுமில்லை) அரிய அமிர்தமாகிய உன் திருவருளின் பலமிருந்தால் நான் பிழைப்பேன், மங்களகரனே, எ - று.

அமுது பிழைப்பிக்கு மருந்தாதலால், ஆரமுதாநின்னருளின் சீருந்தா லுய்வேன் என்றார்.

**121.** வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சியுனை யடைந்தேனையா பராபரமே.

பொ - ரை. கபடத்தையுடைய இயமனது வேதனைக்கும், வலிய பிறவிவேதனைக்கும் (ஆற்றாது) அஞ்சி, (அவைகளை நீக்கிக் காக்கவல்ல) உன்னைத் தஞ்சமடைந்தேன், ஐயனே, எ - று.

**122.** எந்தப்படி யுன்னிதய மிருந்ததெமக்
கந்தப்படி வருவதன்றோ பராபரமே.

பொ - ரை. உன் திருவுள்ளமெவ்வாறு யிருந்ததோ, அவ்வாறு யன்றோ, எமக்கு இன்ப துன்பங்களுண்டாவது, எ - று.

**123.** எந்தெந்த நாளுமென்னைப்பிரியா தென்னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டவருட் டேவே பராபரமே.

பொ - ரை. எக்காலத்தும் என்னைவிட்டு நீங்காமல், என்னுயிர்க் குயிராய், என் மனத்தினைக் குடியாகக் கொண்டிருந்த, அருட்டெய்வமே, எ - று.

எக்காலத்தும் என்றது இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலத்தை.

**124.** அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சிலுணர்த்து நிறைவே பராபரமே.

பொ - ரை. உன் தொண்டனாகிய, எனக்கு அப்போதைக்கப்போது பயப்படாதே பயப்படாதே யென்று, என் மனத்திலிருந்தறிவிக்கின்ற பரி பூர்ணமே, எ - று.

**125.** என்னையுன்றன் கைக்களித்தார் யாவரென்னை யான்கொடு
த்துப்,பின்னையுன்னாற்பெற்றநலம்பேசேன்பராபரமே.

பொ - ரை. என்னை உன்கையிற் பிடித்துக் கொடுத்தவர்யாவர், என்னை நானே கொடுத்து, பிறகு உன்னால் நானடைந்த பேற்றை எடுத்துப் பேசவலியிலேன், எ - று.

**126.** வாய் பேசா வூமையென வைக்கவென்றோ நீமௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே.

**பொ - ரை.** வாய் பேசாத ஊமை யென்று, கண்டோர்சொல்லும்படி என்னை மௌனநிலையில் வைப்பதற் கென்றுதானோ, நீ மௌனத்தாயாய் வந்து, உன் திருவருளை யெனக்குத் தந்தனை, எ - று.

**127.** தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக் கைம் மாறிடுவேன் பராபரமே.

**பொ - ரை.** அறப் பெரியவுன்னை எனக்குக் கொடுத்து, அறச்சிறிய என்னைத் தடுத் தாட்கொண்ட உன்திருவருளுக்கு என்னால் என்னபயன் எந்தையே, எ - று.

"தந்த துன் றன்னைக் கொண்ட தென் றன்னைச்சங்கராவார் கொலோ சதுரர்" என்றார் திருவாத வூரடிகளும்.

**128.** மார்க்கண்டர்க்காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்னபயங்காண் பராபரமே.

**பொ - ரை.** மார்கண்ட முனிவர் பொருட்டுவந்த இயமன் பட்ட பாட்டை ஆலோசித்துப் பார்த்தால், உன்னடியார்க்கு என்னபயமுண்டு, எ - று.

இமயன் பட்டபாடு-இறைவன் திருவடியா லுதையுண்டு மூர்ச்சித்து விழுந்தமை.

**129.** சுட்டியுணராமற் றுரியநிலை யாய்வெளியில்
விட்டநின்னை யானோ வியப்பேன் பராபரமே.

**பொ - ரை.** ஒன்றை யெதிரிட்டறியாவகை, துரிய நிலையாகிய பரமாகாயத்தில் என்னைக்கொண்டுபோய் விடுத்த வுன்னை, நானோ புகழ வல்லேன், எ - று.

நானோ என்னும் ஓகாரம் எதிர்மறையாதலால் அறிஞர் புகழவல்லார் என்பது கருத்து.

**130.** சூதொன்று மின்றி யென்னைச் சும்மா விருக்கவைத்தாய்
ஈதொன்றும் போதாதோ வின்பம் பராபரமே.

**பொ - ரை.** கபடங்கள் சிறிதுமில்லாமல் என்னைச் சும்மா இருக்கும்படி வைத்தனை, இன்பங் கொடுப்பதாகிய இது ஒன்றுமே எனக்கமையாதோ, எ - று.

**131.** வாயொன்றும் பேசாமௌனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ வின்பம் பராபரமே.

**பொ - ரை.** சிறிதும் வாய் பேசாத மௌனகுருவாகி நீ யெழுந்தருளி, என்னை யாண்டதொன்றுமே எனக்கின்பங்கொடுக்க அமையாதோ, எ - று.

**132.** என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த
தொன்றும் போதாதோ வுரையாய் பராபரமே.

**பொ - ரை.** எக்காலத்தும் நானிருந்தபடிக்கு என்னை யெனக்குத் தந்ததாகிய ஒன்றுமே யமையாதோ, (இன்னும் நீ யெனக்குச் செய்ய வேண்டிய வுதவிகளுமுளவோ) சொல்வாய், எ - று.

என்னை யெனக்களித்த தென்றது, தன்னை விடயங்களுக் கிரையாகாமல் தடுத்து, தன்னைத்தானே யநுபவித்தலாகிய ஆத்மாநுபவத்தை.

**133.** எண்டிசைகீழ் மேலான வெல்லாம் பெருவெளியாக்
கண்டவிடத் தென்னையுநான் கண்டேன் பராபரமே.

**பொ - ரை.** எட்டுத்திசைகளும் பூமியும் ஆகாயமுமாகிய எல்லாம் பெருவெளியாகக் கண்ட இடத்தில், என்னையும் நான் கண்டேன், எ-று.

**134.** பித்தனையே தும்மறியாப் பேதையனை யாண்டவுனக்
கெத்தனைதான் றெண்ட னிடுவேன் பராபரமே.

**பொ - ரை.** பித்தனும் ஒன்றுமறியாத அவிவேகியுமாகிய என்னை யாண்டருளியவுனக்கு, நான் எத்தனை தெண்டன் சமர்ப்பிப்பேன், எ-று.

எத்தனை தெண்டனிட்டாலும் நீ செய்த வுதவிக்குக் கைம்மாறாகா தென்பது கருத்து.

**135.** தாயர்கர்ப்பத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளு
நேயவுனை யாரே நினையார் பராபரமே.

**பொ - ரை.** தாய்வயிற்றினுள்ளும், அந்நபானங்களையும் தந்தாண்ட நேயனே, உன்னை நினையாதவர்யாவரோ (ஒருவருமில்லை), எ - று.

**136.** விரிந்த மனமொடுங்கும் வேளையினு ளூசப்
பரந்த வருள்வாழி பதியே பராபரமே.

**பொ - ரை.** பரந்தமனங்குவியும் வேளையில், நானென்று முந்திவந்து பரந்தவுன் திருவருள்வாழக்கடவது, இறைவனே, எ - று.

**137.** சிந்தனைபோய் நானெனல்போய்த் தேக்கவின்ப மாமழை
வந்துமொழிந் தனைநீ வாழி பராபரமே. [யை

**பொ - ரை.** சிந்தித்தலற்று, நானென்பதற்று, நிறைவையடையும் வண்ணம் வந்து, பெரிதாகிய இன்பமழையைச் சொரிந்தாய், ஆதலால், நீ வாழக்கடவை, எ - று.

**138.** தந்தேனே யோர்வசனந் தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே யென்றனைநீ வாழி பராபரமே.

போ - ளை. ஒரு மொழியைப் போதித்தேனே, போதித்தவண்ணமே சுகரூபமாகிவந்தேனே, என்று திருவாய் மலர்ந்தருளினை, ஆதலால் நீ வாழக்கடவை, எ - று.

**139.** மண்ணும்விண்ணும் வந்து வணங்காவோ நின்னருளைக்
கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற் பராபரமே.

போ - ளை. உன்திருவருளை, மனக்கண்ணிற் பொருந்த வுள்ளே கண்டுய்ந்த அன்பர்களைக் கண்டால், மண்ணுலகும் விண்ணுலகும் வந்து வணங்கமாட்டாவோ, எ - று.

**140.** என்றுங் கருணை பெற்றவின்பத் தபோதனர் சொல்
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லும் பராபரமே.

போ - ளை. உன் திருவருளைப்பெற்ற சுகரூபிகளாகிய தபோநிதிகளுடைய வாய் மொழியானது, எக்காலத்தும், போயின போயின திசைகளிலெல்லாம் செல்லும், எ - று.

**141.** ஆடுவதும் பாடுவது மானந்தமாக நின்னைத்
தேடுவது நின்னன்பர் செய்கை பராபரமே.

போ - ளை. ஆடுதலும் பாடுதலும் சந்தோஷமாக வுன்னைத் தேடித் திரிவதும் உன் தொண்டரது செய்கை, எ - று.

"ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கன் பிலையென் புருகிப்-பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்-சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலிபிணநெஞ்சே-தேடுகின்றிலை தெருவுதோறலறிலை செய்வதொன்றறியேனே" என்றார் திருவாதவூரடிகளும்.

**142.** பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப் பெற்றவர்கட்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய் பராபரமே.

போ - ளை. பொங்கிப்ரவஹித்த உன் தண்ணிய அருளைப் பூர்ணமாகப் பெற்றவர்களுக்கு, சூரியன் கிழக்குத்திக்கில் உதித்தலொழிந்து, எந்தத்திக்கில் உதித்தால் தான் என்னபயம், சொல்வாய், எ - று.

"இங்கிப் பரிசேயெமக் கெங்கோனல் குதியேல் - எங்கெழிலென் ஞாயிறெமக்கு" என்றார் திருவாதவூரடிகளும்.

**143.** பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே.

போ - ளை. பாலகர், பேயர், பித்தர் ஆகிய இவர்களுடைய குணத்தை யடைந்திருப்பதே, ஒழுக்க மிகுந்தஞானிகளுடைய செய்கை, எ-று.

**144.** உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியும்
தொண்டர்விளை யாட்டே சுகங்காண் பராபரமே

போ - ரை. உண்டும் உடுத்தும் பூண்டும் இந்தப் பிரபஞ்சத்தார் போல இவ்விடத்து நடித்துத் திரிகின்ற தொண்டரது லீலையே, எமக்கு இன்பந் தருவதாயிராநின்றது, எ - று.

உண்ணல் அன்னபானாதிகளையெனவும், உடுத்தல் நூலாடைமுதலிய வற்றை யெனவும், பூணல் ஆபரணாதிகளை யெனவும், உரைத்துக்கொள்க.

**145.** கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
எங்கு மொருவழியே யெந்தாய் பராபரமே.

போ - ரை. இராப்பகல்களில்லாமல் சதோதயமாய் நின்ற பேரறி வினையுடையார் கண்ட நெறி, எவ்விடத்தாயினும் ஒருநெறியே, எந்தையே, எ - று.

காட்சி-அறிவு, அது "மாசறுகாட்சியவர்" என்னுந் திருக்குறளானு முணர்க.

**146.** காயநிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ
தூயவருட் பற்றுத் தொடர்வார் பராபரமே.

போ - ரை. சரீரமானது நிலையற்றதென்று அநுபவமாகக் காண்ப வர் உறங்குவார்களோ உறங்கார் (மற்றென்னையெனின்), பரிசுத்தமாகிய திருவருளே பற்றுக் கோடாகக்கொண்டு தொடர்வார், எ - று.

**147.** அப்புமுப்பும் போன்ற வயிக்யபரா னந்தர்தமக்
கொப்புவமை சொல்லவும் வாயுண்டோ பராபரமே.

போ - ரை. நீரும் அதனிடத்துக் கரைந் தொன்றுபட்ட உப்பும் போலச் சிவபோகத் தொன்றுபட்ட மேலான ஆநந்தத்தை யுடையவர் களுக்குச் சமானமாக வுவமித்துச் சொல்லுதற்கும் வாயுண்டோ, எ - று.

**148.** சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்கும்
கொத்தடிமை யான குடிநான் பராபரமே.

போ - ரை. மனந்தெளிந்து சிவரூபமாகிய அறிஞரெல்லாருக்கும், நான்கொத்தடிமையான குடியாவேன், எ - று.

**149.** தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே.

போ - ரை. தம்முயிர்போலவே யெவ்வுருயிருமாமென்றெண்ணி, தண்ணிய அருள் மிகுந்த செவ்விய நடையையுடையவருக்கு, எக்காலத்து ஏவல் செய்யக்கடவேன், எ - று.

**150.** விண்ணுக்கும் விண்ணாகி மேவுமுனக் கியான்பூசை
பண்ணிநிற்கு மாறு பகராய் பராபரமே.

போ - ரை. ஆகாயத்துக்கும் ஆகாயமாகிப் பொருந்துகின்றவனுக்கு நான் பூசை பண்ணி நிற்கும் வழியை எனக்குச்சொல்லியருளாய், எ - று.

**151.** நெஞ்சகமே கோயினினைவே சுகந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.

போ - ரை. என் மனமே கோயிலாகவும், என் சிந்தனையே பரிமள திரவியமாகவும், என்னன்பே திருமஞ்சன நீராகவுங்கொண்டு, யான் செய்யும் பூசையை ஏற்றுக்கொள்ள வாராய், எ - று.

**152.** கெட்டவழி யாணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப் பூசை செய்வார் பராபரமே.

போ - ரை. துர்மார்க்கத்தையுடைய ஆணவப்பேயானது தாழும்படி, மேலாகிய சிஷ்டர்கள், உன்னைப் பூசைசெய்வார்கள், எ - று.

**153.** கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பிற் றேகம் விழுமோ பராபரமே.

போ - ரை. வாயுவைத்தடுத்து மூலநெருப்பைச் சந்திரமண்டலத்தின் மேலெழுப்பினால், இந்தச்சரீரம் பொன்றிவிழுமோ, எ - று.

**154.** பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே.

போ - ரை. பஞ்ச சுத்திபண்ணி, உன்னைப்பாவனை பண்ணிப் பூசை செய்தால், மேலாகிய ஞானம் பிரகாசிக்கும், எ - று.

**155.** அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.

போ - ரை. உன் தொண்டரது திருத்தொண்டைச் செய்வதற்கு என்னையடிமையாக்கி விட்டு விட்டால், ஆநந்த நிலையானது தானே வந்து வாய்க்கும், எ - று.

**156.** மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

போ - ரை. மூர்த்தி தலம் தீர்த்தம் என்னு மிவற்றைக்கிரமமாக ஆரம்பித்தவர்களுக்கு, ஒருமொழி சொல்வதற்கு, சதாசாரியரும் வந்து வாய்ப்பர், எ - று.

**157.** விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே.

பொ - ரை. விரும்பப்பட்ட சரியை முதலாக மெய்ஞ்ஞான மிறுதியாக உள்ள நான்கு பாதங்களும், அரும்பு, மலர், காய், கனிகளைப்போன்றனவல்லவோ, எ - று.

**158.** தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே.

பொ - ரை. நல்லோர், சிவஞானத்தையடையும் பொருட்டு, தானம் தவம் தருமம் என்பவற்றைச் சதாகாலமுஞ் செய்வார்கள், எ - று.

**159.** சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற வாணவப்பேய்க்
கின்னல் வருவதெந்நா ளெந்தாய் பராபரமே.

பொ - ரை. சொன்னதையே சொல்லிப் பதைக்கின்ற ஆணவப்பேய்க்குத் துன்பம் உண்டாவது எக்காலமோ, எந்தையே, எ - று.

துன்பம் உண்டாவது - அழிவுண்டாவது.

**160.** இன்றோ விருவினைவந் தேறியது நானென்றோ
அன்றே விளைந்ததன்றோ வாற்றேன் பராபரமே.

பொ - ரை. இருவினை வந்து ஏறியது இன்றுதானோ, நான் எப்பொழுது உளனாயினேனோ, அப்பொழுதே யுண்டானதல்லவோ, இவ்விருவினைகளுக்கு நான் ஆற்றமாட்டேன், எ - று.

**161.** எண்ணமுந்தா னின்னைவிட வில்லையென்றால் யான்முனமே
பண்ணவினை யேது பகராய் பராபரமே.

பொ - ரை. உன்னையன்றி மனமும் இல்லையாயின், யான் முற்பிறப்புக்களில் பண்ணுதற்குக் கருமமேது, சொல்வாய், எ - று.

**162.** என்னையின்ன தென்றறியா வேழைக்குமா கெடுவேன்
முன்னை வினை கூடன் முறையோ பராபரமே.

பொ - ரை. என்னை இன்னபொருளென் றுணராத அருவிலேற்கும் ஐயோ கெடுவேன், பூர்வகன்மம் வந்து பொருந்துதல் முறையாமோ, எ-று.

**163.** அறியாநான் செய்வினையை யையா நீ கூட்டுங்
குறியே தெனக்குளவு கூறாய் பராபரமே.

பொ - ரை. நன்மை தீமைகளைப் பகுத்துணரா அறியாத நான் செய்யுங்கருமங்களை ஐயனே நீ சேர்க்குங்குறியிடம்யாது? எனக்கு உளவு சொல்லக்கடவாய், எ - று.

**164.** என்னைக் கெடுக்க விசைந்தவிரு வினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ பராபரமே.

பொ - ரை. என்னைக்கெடுக்க வொருப்பட்ட இருவினைப் பிணியைக் கெடுத்தருள உனக்குத் தகாதோ, எ - று.

**165**. வல்லமையே காட்டுகின்ற மாமாயை நாளொருவன்
இல்லையெனி லெங்கே யிருக்கும் பராபரமே.

பொ - ரை. தனது சாமர்த்தியத்தையே காட்டுகின்ற பெரிய மாயையானது, நாளொருவனில்லையாயின், எவ்விடத்திருக்கும், எ - று.

தனது, முழுவல்லமையும் என்னிடத்துக் காட்டுகின்றதென்பதாம்.

**166**. முக்குணத்தா லெல்லா மூளைக்கப் பிரகிருதிக்
கிக்குணத்தை நல்கியதா ரெந்தாய் பராபரமே.

பொ - ரை. முக்குணங்களால் எல்லாப்பொருள்களும் உண்டாகும்படி, மூலப்பகுதிக்கு இந்தக் குண விசேடத்தைக் கொடுத்தது யார்? எந்தையே, எ - று.

**167**. ஆற்றப் படாது துன்பமையவென்று லென்மனது
தேற்றப் படாதினியென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. ஐயனே, துன்பம் என்றால் சகிக்கப்படாததா யிருக்கின்றது, என்மனமானது தெளிவிக்கப்படாததா யிருக்கின்றது, இனி என் செயக்கடவேன், எ - று.

**168**. பூராய மாய்மனதைப் போக்கவறியா மலேயோ
ஆரா யலைந்தே னரசே பராபரமே.

பொ - ரை. வரலாற்றுமுறையாய் மனத்தை நசிப்பிக்க அறியாமல், ஐயோ, நான் யாவனாக என்னை நினைத்து அலைந்தேன், அரசனே, எ - று.

**169**. சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

பொ - ரை. கோபம் நசிக்க அப்பியாசித்தாலும், சித்திகளெல்லாவற்றையும் அடைந்தாலும், மனம் நசிக்கும்படி அப்பியாசியாதவர்களுக்குப் பேச்சிருந் தென்னலாபம், எ - று.

**170**. வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போற் பாழ்த்தமனம்
ஏதுக்குக் கூத்தாடு தெந்தாய் பராபரமே.

பொ - ரை. சண்டைசெய்ய வந்தெதிர்த்த மல்லர்களைப்போல, பாழாகிய மனமானது, என்ன லாபமடையக் கூத்தாடுகின்றது, எந்தையே, எ - று.

**171**. சூதாடு வார்போற் சுழன்றுவண்டு துவண்டுமனம்
வாதாடி னென்னபலன் வாய்க்கும் பராபரமே.

போ - ரை. சூதாடுவோர்களைப்போல, மனந்தளர்ந்து தளர்ந்து, வாதாடினால், அதற்கு என்ன பயனுண்டாகும், எ - று.

**172.** கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்க்
கள்ளமனந் துள்ளுவதென் கண்டோ பராபரமே.

பொ - ரை. கொள்ளித் தேள்கொட்ட, அதனால், பதைக்கின்ற பேய்க் குறங்குபோல, வஞ்சகத்தையுடைய மனமானது துள்ளுவது என்ன கருதியோ, எ - று.

கொள்ளித் தேள் - கொட்டினால் நெருப்புக்கொள்ளிபோல் எரியச் செய்வதாகிய தேள்.

**173.** வந்ததையும் போனதையும்வைத்து வைத்துப் பார்த்திரு
தால், சிந்தையிதமகிதஞ்சேரும் பராபரமே.

போ - ரை. வந்த சமாசாரத்தையும் போன சமாசாரத்தையும் வைத்துவைத்து நோக்கிக்கொண்டிருந்தால், மனமானது நன்மை தீமைகளைப் பொருந்தும், எ - று.

**174.** ஏறுமயிர்ப் பாலமுணர் விந்தவிட யங்கணொருப்
பாறெனவு நன்று வறிந்தேன் பராபரமே.

போ - ரை. அறிவானது, ஏறிநடக்கின்ற மயிரினாற் செய்தவாராதியென்றும், இந்த விடயங்கள் நெறுப்பாறு என்றும், நன்றாகத் தெரிந்து கொண்டேன், எ - று.

இந்த விடயங்கள்-இந்த ஐம்பொறிகளால் அநுபவிக்கப்பட்ட விடங்கள்.

**175.** பொறிவழியே யேழை பொறியா யுழல்வதுநின்
அறிவின் விதித்தவிதி யாமோ பராபரமே.

போ - ரை. ஐம்பொறிகளின் வழியாகி, அறிவற்ற நான், சிற்றணுவாகி யலைவது, உன் சர்வஜ்ஞத்வத்தால் நியமித்த நியமநமாகுமோ, எ-று.

**176.** பாசசா லங்களெல்லாம் பற்றுவிட ஞானவைவாள்
வீசுநா ளெந்நாள் விளம்பாய் பராபரமே.

போ-ரை. பாசக் கூட்டங்களெல்லாம் பற்றறழியும்படி, ஞானமாகிய கூர்வாளை வீசுகின்ற நாள் எந்த நாளோ, சொல்லாய், எ - று.

**177.** எந்த வுடலேனு மெடுத்தவுட னல்லதென்று
சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே.

போ - ரை. எந்தச்சரீரத்தினும் இப்போதெடுத்த இம்மானுட சரீரம் நல்லதென்று சிந்திக்க வந்த என் நற்றிறத்திற்குக் காரணமின்னதென்று சொல்லாய், எ - று.

**178.** பொய்யெல்லா மொன்றாப் பொருத்திவைத்த பொய்யுடலை
மெய்யென்றான் மெய்யாய் விடுமோ பராபரமே.

போ - ரை. பொய்ப்பொருள்களெல்லாவற்றையும் ஒன்றாகத்திரட்டி அவற்றைக்கொண்டு பொருத்திவைத்திருக்கிற பொய்யுடம்பை மெய்ப்பொருளென்று சொன்னால், மெய்ப்பொருளாகிவிடுமோ, எ - று.

**179.** மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பியையோ
நின்னை மறக்கை நெறியோ பராபரமே.

போ - ரை. மின்னலையொத்த பொய்யுடம்பை மெய்யென்றுநம்பி, அந்தோ உன்னை மறந்தொழிதல் எனக்கு நல்ல மார்க்கமாகுமோ, எ - று.

**180.** நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற்
கித்தனைதான் றுன்பமுண்டோ வென்னே பராபரமே.

போ - ரை. நிலைபேறு சிறிதுமில்லாத நீர்க்குமிழிபோன்ற சரீரத்துக்கு இவ்வளவு துக்கங்களுளவாதல் தகுமோ, இது என்ன அநீதி, எ - று.

**181.** தேகமிறு மென்றுசடர் தேம்புவதென் னித்திரையின்
ஊகமறிந் தாற்பயந்தா னுண்டோ பராபரமே.

போ - ரை. உடம்பழியுமென்று அவிவேகிகள் துக்கிப்பது யாதுக்கு? நித்திரைக் காலத்தில் நடக்குஞ் செய்தியை உய்த்துணர்ந்தால், பயமுண்டாமோ, எ - று.

**182.** ஏதைச் சுமையா வெடுப்பா ரெடுத்தவுடல்
சேதமுறின் யாதுபின்னே செல்லும் பராபரமே.

போ - ரை. எடுத்த சரீரம் அழியுமாயின், பிறகு எந்தச் சரீத்தைச் சுமையாக எடுப்பார்கள்; அதன்பின், என்னகாரியம் செல்லும், எ-று.

**183.** தோற்பாவை நாலாட் சுமையாகுஞ் சிவனென் றிங்
கார்ப்பா ரெடுத்த தெவராலே பராபரமே.

போ - ரை. தோலினாற்செய்த பிரதிமையாகிய இந்தவுடம்பு நாலாட் பாரமாகும், சிவனென்றும், இவ்விடத்தில் ஆரவாரத்தோடு எடுக்கப்பட்டது யாவரால், எ - று.

**184.** ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன் பராபரமே.

போ - ரை. உலகத்தை மெய்யென்றே நம்பி நம்பி, நாள்தோறும் என்காலத்தைக் கழித்து என்ன பயனையடைந்தேன், எ - று.

**185.** பொய்யுலக வாழ்க்கைப் புலேச்சேரி வாதனைநின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண் பராபரமே.

போ - ரை. பொய்யுலக வாழ்வாகிய புலைச்சேரியின் வாசனையானது, உன் மெய்யாகிய திருவருட்கடலில் மூழ்கினால் விட்டொழியும்—எ - று.

**186.** நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவிநன்னூல் போதம் பராபரமே.

போ - ரை. ஆகாயத்தி லேறுதற்கு நூலேணியும், நூலின் பொருட்டுப் பருத்தியும் வைப்பவர்போல, கருவி நூல்களும் வீட்டு நூல்களும் அமையும்—எ - று.

**187.** சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்
மன்னுங் கலேஞான மார்க்கம் பராபரமே.

போ - ரை. நிலைபெறுள்ள சாஸ்திர ஞான நெறிகள், மிகச் சிறிய குழந்தைகள் சமைத்த மணற் சோற்றை யொத்துப் பயனற்றனவாகும் — எ - று.

மணற்சோறு உண்ண வுதவாமையால் பயனற்றதாயிற்று; அது போலவே சாஸ்திர ஞானமும் பயனற்றதென்பது கருத்து.

**188.** வாசக ஞானத்தால் வருமோ சுகம்பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே.

போ - ரை. வாசாஞானத்தால் சுகமுண்டாமோ உண்டாகாது; ஆகையால், பாழாகிய வாசா ஞானப் போர் என்றொழியுமோ அறியேன், நீயே அருள் செய்யவேண்டும்—எ - று.

**189.** கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளி
னாட்டமின்றி வாய்பேச நன்றோ பராபரமே.

போ - ரை. கேட்டதையே சொல்லுங் கிளிப்பிள்ளைபோல, உன் திருவருளில் விருப்பமின்றி, வாய் பேசுதல் நன்மையாமோ—எ - று.

**190.** வெளியா யருளில் விரவுமன்பர் தேக
மொளியாய்ப் பிறங்கியது முண்டோ பராபரமே.

போ - ரை. வெளியாகி, உன் திருவருளிற் கலக்கின்ற உன் அன்பர்களுடைய சரீரங்கள், ஒளியாகி விளங்கினது முளதோ—எ - று.

**191.** காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந் தாலுமதை
ஞாலந் தனக்குரையார் நல்லோர் பராபரமே.

போ - ரை. நல்லோர்கள், முக்காலச் செய்திகளையும் தமது கருத்தினால் அறிந்திருப்பினும், அதனை உலகத்தாருக்குச் சொல்லமாட்டார்கள் —எ-று.

**192.** கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே.

**போ - ரை.** கொல்லாமையாகிய விரதமொன்றை மேற்கொண்டவர்களே நல்லவர்கள், அவரையொழிந்த மற்றையோர்கள் யாவரோ அவர் பேர் சொல்ல அறியேன்—எ - று.

பொல்லாரைப் பொல்லாரென்றலும் பாவமாதலால் 'யாரோ அறியேன்' என்றார். இது 'தீயாரைக்காண்பதுவுந் தீதே' என்னும் ஔவை வெண்பாவானும் உணர்க—எ - று.

**193.** இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழி
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே.

**போ - ரை.** பொய்யாகிய காரியத்தை விரும்பி, மனம்போனவழியே போகாதிருத்தல், நல்லோர்களுடைய காரியம்—எ - று.

**194.** ஏதுவந்து மேதொழிந்து மென்னதியா னென்னார்கள்
போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே.

**போ - ரை.** ஞானநிலையைக்கண்ட அறிஞர்கள், எது வந்தாலும் எது போனாலும் அவற்றைப்பற்றி, என்னது யான் என்று மமகரித்தும் அகங்கரித்தும் பேசார்கள்—எ - று.

**195.** ஆயிரஞ் சொன்னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே.

**போ - ரை.** ஆயிரஞ் சொல்லினும், விவேகமில்லாத வஞ்சக மனத்தையுடைய பேயருடன் சேர்ந்தால், அச்சேர்தல் குற்றமேயாம்—எ-று.

**196.** மாய்மயக் கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேயவரு ணிலையி னிற்பார் பராபரமே.

**போ - ரை.** மாயையினா லுண்டாகின்ற மயக்கத்தை நீங்கினவர்கள், வேறொருபொருளை விரும்புவார்களோ விரும்பார்கள். மற்றென்னெனின், அன்பு மயமாகிய திருவருள் நிலையில் நிலைபெற்றிருப்பார்கள்—எ - று.

**197.** நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே.

**போ - ரை.** உறங்குங் காலத்தில் செத்த பிணத்துக்குச் சமானமாயிருக்கிற சரீரத்தின்மேல் விருப்பம் வையாத சுத்தாத்மாக்களே நல்ல துறவினர்—எ - று.

**198.** எந்நெஞ்ச மேனு மிரங்குமே நின்னருட்குக்
கன்னெஞ்சரு முளரோ காட்டாய் பராபரமே.

பொ - ரை. உன் திருவருளின் பொருட்டு, எப்படிப்பட்ட மனமாயினும் உருகும், அவ்வாறு உருகாத கல்லையொத்த வன்மனத்தை யுடையோரும் உளரோ, உளராகார். உளராயின் நீயே காட்டாய்—எ - று.

**199.** மந்தவறி வாகியின்பம் வாயாதிருந் தலைந்தாற்
சிந்தைமயங் காதோவென் செய்வேன் பராபரமே.

பொ - ரை. மந்த ஞானமுடையேனாகி, சுகம் கிடையாமலிருந்து அலைவேனாயின், என் மனம் திகையாதோ. இத்திகைப்பை மாற்றுதற்கு நான் என்ன வுபாயம் செய்யக்கடவேன்—எ - று.

**200.** தேடினேன் றிக்கனைத்துந் தெண்டனிட்டேன் சிந்தை
நைந்து, வாடினே னென்மயக்க மாற்றாய் பராபரமே.

பொ - ரை. உன்னைப் பெறவேண்டித் திசைகளெல்லாவற்றினும் தேடினேன், தேடிக் காணாமையால், திசைநோக்கி நமஸ்கரித்தேன். அவ்வாறு நமஸ்கரித்தும் உன்னைக் காணப்பெறாமையால் மனம் நொந்து வாடினேன். அவ்வாட்டத்தா லுண்டாகிய என் மயக்கத்தை நீக்கி யருளாய்—எ - று.

**201.** மடிமையெனு மொன்றை மறுத்தன்றோ வென்னை
யடிமைகொளல் வேண்டு மரசே பராபரமே.

பொ - ரை. சோம்பலென்னும் ஒருபொருளைத் தடுத்தல்லவோ என்னை யடிமை கொள்ளவேண்டும், ஞானராஜனே—எ - று.

**202.** காலர்பயந் தீரவின்பக் காற்கபய மென்றெழுந்த
மாலைவளர்த் தனையே வாழி பராபரமே.

பொ - ரை. காலதூதர்களுடைய பயமானது நீங்கும்படி, சுகத்தைக் கொடுக்கின்ற உன் திருவடிக்கு அபயம் என்று வாயாற் சொல்லி, மனத்தின்கண் அதிகரித்த ஆசையை விருத்தி யடைவித்தனையே, நீ வாழ்வாயாக—எ - று.

**203.** நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்பதல்லால் வேறுமொன்றைப் பாரேன்பராபரமே.

பொ - ரை. என் மனமானது உன் திருவருளின் பொருட்டு நீர்க்குமிழி போல நின்றழியப் பார்த்தல் செய்வேனல்லது வேறொரு பொருளையும் பாரேன்—எ - று.

**204.** நீர்க்குமிழி போலென் னினைவுவெளி யாய்க்கரையப்
பார்க்குமிட மெல்லாமென் பார்வை பராபரமே.

பொ - ரை. என மனமானது நீர்க்குமிழியையொத்து வெளிப்பட்டு உடனே உன் திருவருள் வெள்ளத்திற் கரைந்து கலக்கும்படி, நோக்குமிடங்கள் தோறும் என் நோக்கம்—எ - று.

**205.** ஆடியோய் பம்பரம்போ லாசையுட னெங்கு முனைத்
தேடியோய் கின்றேனென் செய்வேன் பராபரமே.

போ - ரை. ஆடி ஓய்ந்த பம்பரம்போல, அன்போடு உன்னை எவ்விடத்தும் தேடிக்காணப் பெருமையால், ஓய்கின்றேன், வேறு என்ன காரியம் செய்யக்கடவேன்—எ - று.

**206.** வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கு
நாதாந்த மோனநலமே பராபரமே.

போ - ரை. வேதாந்தமும் சித்தாந்தமும் ஒன்றற்கொன்று வேறு பட்டன வென்று சொல்லாமல் சமரசமாகக் கண்ட அறிஞரது கண்களித்தற் குரிய நாத தத்துவத்தி னிறுதியில் விளங்குகின்ற மௌனசுகமே—எ - று.

**207.** ஆனந்த மானநின்னை யன்றியொன்றை யுன்னாத
மோனந் தமியேற்கு முத்தி பராபரமே.

போ - ரை. சுகரூபமான வுன்னை யல்லது வேறு பொருளை நினையாத மௌனநிலையே, தனியேற்கு மோக்ஷம்—எ - று.

**208.** எதுக்கு முன்னைவிட வில்லையென்று லென்கருத்தைச்
சோதிக்க வேண்டாநான் சொன்னேன் பராபரமே.

போ - ரை. யாதொரு காரியத்துக்கும் உன்னையன்றி எனக்கு வேறு துணை யில்லையென்று நான் விண்ணப்பம் பண்ணிக்கொண்டால், என் மனத்தைச் சோதனைசெய்ய வேண்டாம், நான் சொல்லிவிட்டேன்—எ - று.

**209.** முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோர்
எத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய் பராபரமே.

போ - ரை. முத்திக்காலத்தும் சரீரத்திடத்தில் மூன்று விதமாகிய சித்தியை யடைந்தவர், எத்தனைபேர் என்று அளவிட்டுச் சொல்லுவது, எந்தையே—எ - று.

அளவிடக்கூடா தென்பதாம்.

**210.** நீயன்றி நானார் நினைவாரென் னெஞ்சகமார்
தாயன்றிச் சூலுமுண்டோ சாற்றாய் பராபரமே.

போ - ரை. நீயல்லது நான் யார், எண்ணம் யார், என் மனம் யார், தாயை யன்றிச் சூலு முளதோ, சொல்லாய்—எ - று.

"நானா ரென்னுள்ள மார்ஞானங்களா ரென்னை யாரறிவார்" என்று திருவாதவூரடிகளும் பணித்தார்.

**211.** அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
எங்குமே னேனென்ற தென்னே பராபரமே.

பொ - ரை. தேகமே உனதுருவமாகிய சுகர் அழைக்க, நீ எவ்விடத்தும் ஏன் ஏன் என்றது என்ன ஆச்சரியம்—எ - று.

**212.** கொள்ளைவெள்ளத் தண்ணருண்மேற் கொண்டுசுழித்
தார்த்திழுத்தால், கள்ளமனக் கப்பலெங்கே காணும்
பராபரமே.

பொ - ரை. தண்ணிய உன் திருவருளாகிய பெருவெள்ள மானது மேற்கொண்டு சுழித்து ஒலித்து இழுத்துக்கொண்டு சென்றால், வஞ்சக மனமாகிய மரக்கலமானது எவ்விடத்துத் தோன்றும்—எ - று.

அருட்பெரு வெள்ளத்தில் அழுந்தி விடும் என்பதாம்.

**213.** எக்கலையுங் கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ் சம்மதஞ்
சொல், வக்கணையா லின்பம் வருமோ பராபரமே.

பொ - ரை. எவ்வகைப்பட்ட நூல்களையும் கற்று, அவற்றின் பொருள்களை உள்ளவாறு அறிந்திருக்கின்றோ மென்று அகங்கரித்து, கேட்பவர் யாவர்க்கும் தக்க சமாதானம் சொல்லுகின்ற வக்கணையினால், சுகம் வாய்க்குமோ—எ - று.

உள்ளவாறு உணர்தலாவது - ஐயம் திரிபு அற வுணர்தல், ஐயம் - சந்தேகம். அது குற்றியோ மகனோ என்பது. திரிபு-ஒன்றை யொன்றாக வுணர்தல். அது பழுதையைப் பாம்பென்பது—எ - று.

**214.** கல்லெறியப் பாசி கலைந்துநன்னீர் காணுநல்லோர்
சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும் பராபரமே.

பொ - ரை. கல்லையெறிந்தால், மூடியிருந்த பாசி யானது கலைந்து, அதனால் மூடப்பட்டிருந்த நல்ல நீரானது தோன்றும்; அதுபோல நல்லோர்களுடைய சொற்களின் பொருளை யாராய்ந் தறிந்தால், ஞானம் வந்து வாய்க்கும்—எ - று.

நல்லோர்சொல் ஞானத்தை யுண்டாக்கும் என்பது, "அருளுடையோரைத் தவத்திற் குணத்தி லருளி லன்பில் - இருளறு சொல்லினுங் காணத் தகும்" என்னும் பட்டணத்தடிகள் திருவாக்காலும் இனிதுவிளங்கும்—எ-று.

**215.** நின்னையுணர்ந் தோர்கடமை நிந்தித்த பேயறிஞர்
என்ன கதிபெறுவா ரெந்தாய் பராபரமே.

பொ - ரை. உன்னை யுள்ளவா றுணர்ந்தவர்களை, நிந்தித்த பேயறிவை யுடையோர், என்ன துர்க்கதியை யடைவரோ, எந்தையே—எ - று.

**216.** என்னதியா னென்னலற்றோ ரெங்கிருந்து பார்க்கினுநின்
சன்னிதியா நீபெரிய சாமி பராபரமே.

பொ - ரை. எனது யான் என்று சொல்லுதலாகிய மமகார அகங்காரங்களை யொழித்த அறிஞர், எவ்விடத்து நின்று பார்த்தாலும், அவ்விடங்கள் எல்லாம் உன் சந்நிதியாக அவர்களுக்குத் தோன்றும்; அந்தச் சந்நிதியில் நீயே மேலான தெய்வமாகத் தோன்றுவை—எ - று.

**217.** சோற்றுத் துருத்திச் சுமைசுமப்பக் கண்பிதுங்கக்
*காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே.

பொ - ரை. சோற்றுத் துருத்தியாகிய உடற்சுமையைச் சுமக்கும்பொருட்டு, கண் பிதுங்கும்படி, காற்றைத் தடைப்படுத்தித் திரிந்தேன்—எ - று.

**218.** உள்ளபடி யொன்றை யுரைக்கினவர்க் குள்ளுறவாய்க்
கள்ளமின்றி யன்பாய்க் களிப்பேன் பராபரமே.

பொ - ரை. ஒருபொருளை ஒருவர் உள்ளவாறு சொன்னால், அவர்க்கு உட்சுற்றமாகி, வஞ்சகமில்லாமல் அன்போடு சந்தோஷிப்பேன்—எ - று.

**219.** அடுத்தவியல் பாகவொன்றை யான்பகர்வ தல்லாற்
றொடுத்ததொன்றை யான்வேண்டிச் சொல்லேன்
பராபரமே.

பொ - ரை. தகுந்த இயற்கையாக ஒரு பொருளை நான் சொல்லுவதன்றி, நான் சம்பந்தப்பட்ட ஒன்றைப்பற்றி, பக்ஷபாதமாய் நான் பேசமாட்டேன்—எ - று.

**220.** உள்ளமறி யாதொருவ ரொன்றையுன்னிப் பேசிலையோ
துள்ளியிளங் கன்றாய்த் துடிப்பேன் பராபரமே.

பொ - ரை. என் மனக் கருத்தை யுணராமல், ஒருவர் ஒன்றை நினைத்துப் பேசினாராயின், அந்தோ இளங் கன்றுபோலத் துள்ளித் துடிப்பேன்—எ - று.

**221.** எல்லாரு மின்புற் றிருக்கநினைப் பதுவே
யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

பொ - ரை. யாவரும் சுகம் பெற்றிருக்க நினைப்பதே யன்றி, நான் வேறு பொருளை நினைக்க அறியேன்—எ - று.

**222.** முன்னாண் மெய்ஞ்ஞான முனிவர்தவ மீட்டுதல்போ
லிந்நாளிற் காணவெனக் கிச்சை பராபரமே.

பொ - ரை. முற்காலத்தில் மெய்ஞ்ஞானத்தையுடைய முனிவர் தவப்பொருளைச் சேகரித்தல்போல, இக்காலத்தில் சேகரித்தலைக் காணவேண்டுமென்று எனக்கு விருப்பமுண்டு—எ - று.

**223.** கன்மமென்ப தெல்லாங் கரிசறவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை பராபரமே.

பொ - ரை. கர்மமென்று சொல்லப்பட்டவை யாவும் பற்றற, மெய்ஞ் ஞானமாகிய தர்மநிலையை யடைந்தது, அன்பர் குணம்—எ - று.

**224.** கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற
மண்டியபே ரொளிநீ வாழி பராபரமே.

பொ - ரை. கண்ணுறங்காத என்னறிவி னிடத்தே கண்டு களிக்க மிகவும் விளங்கிய பேரொளி நீயாகையால் நீ வாழக்கடவை—எ - று.

**225.** நானென தன்மையென்று நாடாம னுடைவின்ப
வானுகி நின்றனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. நானென்கிற தன்மையை எப்பொழுதும் விரும்பாமல் உன்னை விரும்ப, சுகவெளியாய்நின்றனையாதலால், நீ வாழக்கடவை—எ-று.

**226.** அகத்தூ டணுவணுவா யண்டமெல்லாந் தானுய்
மகத்தாகி நின்றனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. அணுவுக்குள்ளே யணுவாகி, அண்டங்களெல்லாம் தானே யாகி, மகத்தாகி நின்றனை யாதலால், நீ வாழக்கடவை—எ - று.

**227.** காரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனைநீ வாழி பராபரமே.

பொ - ரை. அந்தகாரத்துக் கிடமாயிருக்கிற கருப்பமாகிய வீட்டின் கண்ணும், என்னிடத்தே அன்புவைத்துக் காப்பாற்றினுய் ஆதலால் நீ வாழக்கடவை—எ - று.

**228.** புரந்தோர்தந் தேசமென்பார் பூமியைப்போ ரா்டி
இறந்தோருந் தம்மதென்பா ரென்னே பராபரமே.

பொ - ரை. பூமியை யாண்டவர்கள், அதனைத் தமது தேசமென்பார்கள், போர் செய்து மடிந்தவர்களும் அதனைத் தமது தேசமென்பார்கள். என்ன அறியாமையின் காரியம் இது—எ - று.

**229.** மூர்த்தியெல்லாம் வாழியெங்கண் மோனகுரு வாழியருள்
வார்த்தையொன்றும் வாழியன்பர் வாழி பராபரமே.

பொ - ரை. மூர்த்திகள் யாவும் வாழ்க, எங்கள் மௌன குரு வாழ்க, அருள் வார்த்தை ஒன்றும் வாழ்க, அன்பர்களும் வாழ்க—எ - று.

**230.** சொல்லும்பொருளுந் தொடரா வருணிறைவிற்
செல்லும்படிக்கருணீ செய்தாய் பராபரமே.

பொ - ரை. சொல்லும், சொற்பொருளும் தொடர்ந்து பற்றக்கூடாத திருவருட்பூர்த்தியில் செல்லும்படிக்கு, நீ யருள் செய்தனை—எ - று.

**231.** இற்றைவரைக் குள்ளாக வெண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்க ளெத்தனைபேர் பேசாய் பராபரமே.

**போ - ரை.** இந்நாளளவுக்குள்ளே, நினைத்தற்கரிய சித்தி முத்திகளை யடைந்தோர்கள் எத்தனைபேர், சொல்வாயாக—எ - று.

**232.** நாடு நகரு நிசானுட்டிய பாளயமு
மீடுசெயு மோமுடிவி லெந்தாய் பராபரமே.

**போ-ரை.** நாடும், நகரமும், அடையாளங் குறித்த பாளயமும் முடிவுக் காலத்தில் பெருமையைக் கொடுக்குமோ, எந்தையே—எ - று.

பாளயம் - படை.

**233.** தேடுந் திரவியமுஞ் சேர்ந்தமணிப் பெட்டகமுங்
கூடவருந் துணையோ கூறாய் பராபரமே.

**போ - ரை.** தேடப்படுகிற திரவியமும், சேர்க்கப்பட்ட ரத்நப்பெட்டகமும் போங்காலத்தில், கூடவரத்தக்க துணைகளோ, சொல்வாய்—எ - று.

**234.** தேடாத தேட்டினரே செங்கைத்துலாக் கோல்போல்
வாடாச்சமநிலையில் வாழ்வார் பராபரமே.

**போ - ரை.** தேடப்படாத திருவருட் செல்வத்தை யுடையவர்களே, வணிகரது செவ்விய கையினிடத்துள்ள துலாக்கோல்போல, வருந்தாத சமநிலையில் வாழ்வார்கள்—எ - று.

**235.** நீராய்க் கசிந்துருகி நெட்டுயிர்த்து நின்றேனைப்
பாராத தென்னோ பகராய் பராபரமே.

**போ - ரை.** நீரைப்போலக் கசிந்துருகி, பெருமூச்சு விட்டு நின்ற என்னை, கடைக்கண் பாராமைக்குக் காரண மென்னையோ, சொல்வாய்—எ - று.

**236.** உள்ளபொரு ளாவியுடன் மூன்று மன்றேதான்
கொள்ளைகொண்ட நீயென் குறைதீர் பராபரமே.

**போ - ரை.** என்னிடத்துள்ள பொருள் உயிர் உடம்பு என்கிற மூன்றையும் அந்நாளே கொள்ளைகொண்ட நீ, அதற்குப் பிரதியாக என்குறைகளைத் தீர்க்கவேண்டும்—எ - று.

**237.** ஆழ்ந்தாயே யிவ்வுலகி லல்லலெல்லாந் தீர்ந்தருளால்
வாழ்ந்தாயே யென்றனைநீ வாழி பராபரமே.

போ - ள. இப்பிரபஞ்ச வாழ்க்கையாகிய கடலில் முழுகினையே, இப்போது பிறவித்துன்பங்களெல்லாம் நீங்கி, என்கருணையினால் வாழ்ந்தனையே, என்று திருவாய் மலர்ந்தருளினையாதலால், நீவாழி, எ - று.

**238.** தாரா வருளையெல்லாந் தந்தெனையு நின்னருளின்
வாராயோ வென்றனை நீ வாழி பராபரமே.

போ-ள. தரக்கூடாத அருள்முழுதும் தந்து, என்னையும், உன் திருவருளினால் வாராயோவென்றுகூவினை, ஆதலால், நீவாழக்கடவை, எ-று.

**239.** ஆசையுன்மீ தல்லா லருளறிய வேறுமொன்றிற்
பாசம்வையே னின்கருணைப் பாங்காற் பராபரமே.

போ-ள. உன்திருவருட்பாங்கினால், உன்மீது ஆசைவைப்பதல்லது உன் திருவருளறிய, மற்றுமொருபொருளில் விருப்பம் வையேன், எ-று.

**240.** ஆதியந்த நீகுருவா யாண்டதல்லா னின்னையன்றிப்
போதனையு முண்டோ புகலாய் பராபரமே.

போ - ள. ஆத்யந்தமாய் நீ குருமூர்த்தமாகிவந்து என்னையாண்டதன்றி, உன்னை யல்லது எனக்கு வேறுமொரு போதனையுமுளதோ, சொல்வாய், எ - று.

**241.** தானாக வந்து தடுத்தாண் டெனையின்ப
வானாகச் செய்தவின்ப வானே பராபரமே.

போ - ள. யாதொரு முயற்சியுமின்றி யிருக்கச் செய்தே உன் பெருங்கருணையே ஹேதுவாக நீ தானே குருமூர்த்தமா யெழுந்தருளி, என்னை விஷயப்ரவணனாய்ப் பிறவித் துன்பங்களுக் காளாகாவகை தடுத்தாண்டு, சுகரூபியாக்கின சுகரூபியே, எ - று.

**242.** பற்றற் றிருக்குநெறி பற்றிற் கடன்மலையுஞ்
சுற்ற நினைக்குமனஞ் சொன்னேன் பராபரமே.

போ - ள. நான்தொடர் பற்றிருத்தற்குக் காரணமாகிய நன்னெறியைத் தொடர்ந்தால், என்மனமானது, கடலினும் மலையினும் சுற்றித்திரிய நினைக்கின்றது. அச்செய்தியை, உன் சந்நிதியில் விண்ணப்பம் பண்ணிக்கொண்டேன், எ - று.

அம்மனத்தைத் தடுத்து என்னையாண்டருளல் வேண்டுமென்பதாம். "திரிகையிலாயிர வெல்லாழி மண்விண்டரு சிரபாத் - திரிகையிலாயிர வாநந்த நாடகிசேரிமகோத் - திரிகையிலாயிர மிக்குமைந்தா செந்திலாயொருகால் - திரிகையிலாயிரக்கோடி சுற்றேடுந் திருத்துளமே" என்றார் பிறரும்.

**243.** படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தை
துடிப்பற்றார்க் கன்றே சுகங்காண் பராபரமே.

போ - ரை. படித்தலுமற்று, கேட்டலுமற்று, ஒன்றைப் பற்றலு மற்று, மனப்பதைப்புமற்று நின்றவர்க் கல்லவோ ஆநந்த முண்டாவது.

**244.** சத்தாகி நின்றோர் சடங்களி லிங்கமென
வைத்தாரு முண்டோவென் வாழ்வே பராபரமே.

போ - ரை. சத்துருவாகி நின்றவர்களுடைய உடம்புகளை, லிங்க ரூபமாக வைத்தவர்களும் உளரோ, என்வாழ்வே, எ - று.

**245.** சித்த நிருவிகற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்
வைத்தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே.

போ - ரை. மனமானது நிருவிகற்ப சமாதியடையப் பெற்றோர் களுடைய சரீரங்கள், தீபத்திலிட்ட கர்ப்பூரம்போலப் பிரகாசிக்கும்.

**246.** ஆதிகா லத்திலெனை யாண்டனையே யிப்பானீ
போதியெனி னெங்கேநான் போவேன் பராபரமே.

போ - ரை. பூர்வகாலத்திலேயே என்னை யாண்டருளினையே. இப் பொழுது நீ யகன்றுபோவென்றால், நான் எங்கே போவேன், எ - று.

நான் சென்றடையக் கடவார் ஒருவரு மில்லை யென்பதாம்.

**247.** நாவழுத்துஞ் சொன்மலரோ நாளுதிக்கும் பொன்மலரோ
தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே.

போ - ரை. அன்பாது நாவினால் வழுத்தப்பட்டுள்ளவாகின்ற சொல் மலர்களோ, நாள்தோறும் அலர்கின்ற அழகிய நால்வகை மலர்களோ, உனக்கு இன்னவை வேண்டுமென்று சொல்வாய், எ - று.

**248.** கன்னறரும் பாகாய்க் கருப்புவட்டாய்க் கற்கண்டா
யின்னமுதா யென்னு ளிருந்தாய் பராபரமே.

போ - ரை. கருப்பஞ் சாற்றாற் காய்ச்சிய பாகுபோன்றும், கருப்பு வெல்லம் போன்றும், கற்கண்டுபோன்றும், இனிய அமிர்தம் போன்றும் என் மனத்தின்கண் ணிருந்தாய், எ - று.

**249.** சிற்பரமே தற்பரமே தெய்வச்சுருதி சொன்ன
அற்புதமே யன்பே யறிவே பராபரமே.

போ - ரை. சிற்பரமே, தற்பரமே, தெய்விகமான வேதங்களால் சொல்லப்பட்ட அற்புதமே, அன்பே, அறிவே, எ - று.

**250.** அறிவிப்பா னீயென்றா லைம்புலன் கடந்த
நெறிநிற்பார் யாரே நிகழ்த்தாய் பராபரமே.

போ - ரை. உள்ளிருந்து உணர்த்துவோன் நீயானால், ஐந்தாசைகளையும் வென்று, அந்தமேலான ஞான நெறியில் நிற்பவர் யாவரோ, நீயே சொல்வாய், எ - று.

ஐந்தாசைகள் - சப்தாதிகள்.

**251.** அந்தக் கரணமெனு மாகாத பேய்களென்னை
வந்து பிடித்தாட்ட வழக்கோ பராபரமே.

போ - ரை. அந்தக்கரணமென்கிற பொல்லாத பேய்கள் வந்து என்னைப் பிடித்தாட்ட வழக்குண்டோ, எ - று.

**252.** ஐவரொடுங் கூடாமலந்தரங்க சேவைதந்த
தெய்வ வறிவே சிவமே பராபரமே.

போ - ரை. ஐவரோடு சேராதவகை, எனக்கு அந்தரங்க சேவையைக் கொடுத்த தெய்விகமான ஞானமே, சிவமே, எ - று.

**253.** அருளாகி நின்றசுக மாகாம லையோ
இருளாகி நிற்க வியல்போ பராபரமே.

போ - ரை. அருள் வடிவமாயிருக்கிற ஆநந்த ரூபமாகாமல், அந்தோ இருளுருவாகி நிற்றல் எனக்குப் பொருத்தமாகுமோ, எ - று.

**254.** அன்பரெல்லா மின்ப மருந்திடவும் யானொருவன்
துன்புறுத லன்றோநீ சொல்லாய் பராபரமே.

பொ - ரை. உன்னடியா ரெல்லாரும் சுகத்தை யநுபவிக்கவும், நானொருவனுமே துக்கத்தையநுபவித்தல் உனக்கழகுதானோ,நீசொல்வாய்.

**255.** சந்ததமு நின்கருணை சாற்றுவதல் லால்வேறு
சிந்தையறி யேனுன்றன் சித்தம் பராபரமே.

போ - ரை. சதாகாலமும் உன் கருணைப்ரபாவத்தை வியந்துரைத்தலன்றி, மற்றொரு காரியத்தைச்சிந்தையாலுஞ் சிந்தித்தறியேன், இதற்கு மேல் உன் திருவுளம், எ - று.

**256.** நானெனக்குளாறு நாட்டத்தா லென்னைவிட்டுப்
போனாலு முன்னைவிட்டுப் போகேன்பராபரமே.

போ - ரை. நான் நான் என்று குழறுகின்ற நோக்கத்தினால், நீயென்னை விட்டு நீங்கினாலும், நான் உன்னைவிட்டு நீங்கேன், எ - று.

**257.** இக்காயம் பொய்யன்றோ ரீட்டத் துனக்கபயம்
புக்காதா ருண்டோ புகலாய் பராபரமே.

போ - ரை. இந்தச் சரீரம் பொய்யென்றவர்களுடைய கூட்டத்துள், உனக்கு அபயம் புகாதாருளரோ, சொல்வாய், எ - று.

**258.** தாணுதல் பூரணமே சாருமிட முண்டுயிரும்
வாணுதியு மொழுங்காய் மன்னும் பராபரமே.

போ - ரை. உயிர்களினும் அவைகளின் தோற்றத்துக்குக் காரண மாகிய ஆகாயமுதலிய பூதங்களினும் கிரமமாக நிலைபெற்றிருக்கும் இறைவனே தானே தாணுதலாகிய உன்பரிபூரண நிலையே எனக்குச் சார்தற்குரிய இடமாயுள்ளது, எ - று.

**259.** உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னுமா னந்த விளக்கே பராபரமே.

போ - ரை. நினைக்கின்ற மனமானது கர்ப்பூரவுருண்டைபோலக் கரைந்து போம்படி, மின்னுகின்ற ஆநந்த தீபமே, எ - று.

**260.** நாட்பட் டலைந்த நடுக்கமெலாந் தீரவுனக்
காட்பட்டுந் துன்பமெனக் காமோ பராபரமே.

போ - ரை. நெடு நாளாயலைந்த நடுக்கங்கள் யாவும் நீங்க, நான் உனக்கு ஆளாகியும், எனக்குத் துன்பங்கள் உண்டாகலாமோ, எ - று.

**261.** பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங்கா திருந்தா
லாவிக் குறுதுணையா ரையா பராபரமே.

போ - ரை. பாவியாகிய நான் படுகின்ற கண்கலக்கத்தைக் கண்டும் நீயிரங்காதிருந்தால், என்னுயிருக்கு உற்றதுணையாவார் யாவரோ, ஐயனே.

**262.** நின்னிறைவே தாரகமாய் நின்றுசுக மெய்தாம
லென்னிறைவே பாவித்தே னென்னே பராபரமே.

போ - ரை. உன்பரிபூரணத்தையே ஆதாரமாகக்கொண்டு நின்று, இன்ப மடையாமல் என் பூரணத்வத்தையே நினைத்தேன், இது என்ன அநர்த்தம், எ - று.

**263.** நின்னைச் சரண்புகுந்தா னீகாக்கல் வேண்டுமல்லா
லென்னைப் புறம்விடுத லென்னே பராபரமே.

போ - ரை. உன்னைச் சரணமடைந்தால் நீ யென்னைக்காக்கவேண்டு மல்லது, என்னை உன் காவலுக்குப் புறத்தில் விடுதல் என்ன அநீதி, எ-று.

**264.** மாறாத துன்பமெல்லாம் வந்துரைத்தா னின்செவியி
லேறாத வாறே தியம்பாய் பராபரமே.

போ - ரை. நீங்காத என் துக்கங்களையெல்லாம் உன் சந்நிதியில் வந்து விண்ணப்பம் பண்ணினால், உன் திருச்செவிக் கேறாதவிதமென் சொல்வாய், எ - று.

**265.** விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறுதுன்பஞ் செய்யவந்த
அஞ்சுபுல வேடருக்கு மாற்றேன் பராபரமே.

போ - ளை. மிகுந்த ஞானத்தின் பெருமையை யெல்லாம் மிக்க துன்பருப்பமாக்கவந்த ஐம்புலன்களாகியவேடர்களுக்கும்ஆற்றமாட்டேன்.

**266.** கன்னங் கரியநிறக் காமாதி ராக்ஷசப்பேய்க்
கென்னையிலக் காகவைத்த தென்னே பராபரமே.

போ - ளை. மிகவும் இருண்ட நிறத்தினையுடைய காமாதிகளாகிய ராக்ஷஸப்பேய்களுக்கு, என்னை லக்ஷ்யமாக வைத்தது என்ன அநியாயம்.

காமாதிகள் - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மத்ஸரம் என்பன. இதனை அரிஷட்வர்க்க மென்பர் வடநூலார்.

**267.** சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சன்மமற
முத்திநெறி கேட்டன் முறைகாண் பராபரமே.

போ - ளை. சித்திமார்க்கத்தைக் கேட்டுக் கொள்ளுதல் உலகமயக்கமாம், பிறவி அற்றொழிதற் பொருட்டு, முக்திமார்க்கத்தைக் கேட்டுக் கொள்ளுதல் தக்க முறைமையாம், எ - று.

**268.** சிந்தை சிதையச் சிதையாத வானந்த
மெந்த வகையாலேவந் தெய்தும் பராபரமே.

போ - ளை. மனம் நசிக்க, நசியாத ஆநந்தமானது, எந்தவிதத்தினால் வந்து எனக்கு லபிக்கும், எ - று.

**269.** கூர்த்தவறி வாலறியக் கூடா தெனக்குரவன்
தேர்த்தபடி தானே தெரிந்தேன் பராபரமே.

போ - ளை. நுண்ணிய அறிவினால் அறியக் கூடாதென்று, ஆசாரியன் தெளிவித்தவண்ணமே தெரிந்துகொண்டேன், எ - று.

**270.** பத்த ரருந்தும் பரமசுகம் யானருந்த
வெத்தனைநாள் செல்லு மியம்பாய் பராபரமே.

போ - ளை. உன்னடியார் அநுபவிக்கின்ற மேலாகிய சுகத்தை நான் அநுபவிக்க எத்தனை நாள் செல்லும், சொல்வாய், எ - று.

**271.** தீரத்தி னாற்றுறவு சேராம லிவ்வுலகிற்
பாரத் தனம்பேசல் பண்போ பராபரமே.

போ - ளை. தைரியத்தினால் துறவுமார்க்கத்தை யடையாமல், இவ்வுலகத்தில் பெருந்தன்மை பேசிக்கொள்ளுதல் குணமாகுமோ, எ - று.

**272.** இந்த வெளியினையுண் டேப்பமிட்ட பேரறிவாந்
தந்தவெளிக்கே வெளியாய்ச் சார்ந்தேன் பராபரமே.

போ - ரை. இந்தப் பூதாகாயத்தையுண்டு ஏப்பமிடும்படி, பெரிதாகிய ஞானகாயத்திற்குநேர், வெளிப்படையாய்ச் சார்ந்தேன், எ - று.

**273.** உணர்த்து முனைநாடா துணர்ந்தவையே நாடி
யிணக்குறுமென் னேழைமைதானென்னேபராபரமே.

போ - ரை. உணர்த்தாநின்ற உன்னை நாடாமல், உணர்த்தப்பட்டவைகளையேநாடி, அவைகளோடு இணங்கிவாழ்கின்ற என்னறிவின்மை தானிருந்தபடியென், எ - று.

**274.** உண்டுபோ லின்று முலகைத் திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபயன் கூறாய் பராபரமே

போ - ரை. இருப்பது போலத் தோன்றி இல்லாததாய் முடிகின்ற உலகத்தை, நிலையுள்ளதென் றுநினைத்து, நானடைந்த பயனைச்சொல்வாய்.

**275.** உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தே னக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன் பராபரமே.

போ - ரை. எல்லாம் உள்ளபடியே நிகழுமென்று ஆராய்ந்தறிந்தேன், அந்த க்ஷணத்திலேயே, வஞ்சகமனமானது போனவழியையுங் கண்டிலேன், எ - று.

**276.** சித்தமவுனஞ் செயல் வாக்கெலா மவுனஞ்
சுத்தமவுன மென்பாற் றோன்றிற் பராபரமே.

போ - ரை. என்னிடத்துச் சுத்தமௌந முளதாயின், என்மனமானது மௌநம், செய்கை வாக்கு எல்லாம் மௌநம், எ - று.

செயல் - காயம். சுத்தமௌந முளதாயின் மநோவாக் காயங்கள் யாவும் மௌநமென்பதாம்.

**277.** எண்ணில்பல கோடியுயி ரெத்தனையோ வத்தனைக்குங்
கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராபரமே.

போ - ரை. எண்ணிறந்த பலகோடிவகைப் பட்ட சீவராசிகள் எத்தனையோ, அத்தனைக்கும், கண்ணாகக் கலந்திருந்த அருட்கண்ணே, எ - று.

**278.** எனக்கினியா ருன்போலு மில்லையென்றால் யானு
முனக்கினியா னாகா வுளவேன் பராபரமே.

போ - ரை. உன்போலும் எனக்கு இனியவர் இல்லையாயின், நானும் உனக்கு இனியவனாகாத உளவுயாது, எ - று.

**279.** அண்டபிண்டங் காணே னகமும் புறமுமொன்றாக்
கண்டவென்னை நீ கலந்த காலம் பராபரமே.

போ - ரை. உள்ளும் புறமும் ஒன்றாகக்கண்ட என்னை நீ கலந்த காலத்தில் அண்டபிண்டங்களைக் கண்டிலேன், எ - று.

**280.** எத்தனையோ கோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலுஞ்
சித்த மிரங்கிலையென் செய்வேன் பராபரமே.

போ - ரை. எத்தனை கோடிவிதமாக எடுத்தெடுத்து முறையிட்டாலும் உன்சித்தமிரங்கவில்லையே, இனி யான் என் செயக்கடவேன், எ - று.

**281.** அன்றந்த நால்வருக்கு மற்புதமா நீயுரைத்த
தொன்றந்த வார்த்தையெனக் குண்டோபராபரமே.

போ - ரை. அந்நாளில் அந்த நால்வருக்கும் ஆச்சரியகரமாக நீ யருளிச்செய்ததாகிய ஒருமொழி எனக்கு முண்டோ, எ - று.

நால்வர்-சநகாதியர்.

**282.** அப்பனென்று யன்னையென்று மாரியனென்றும் முனையே
செப்புவது முன்னிலையின் சீர்காண் பராபரமே.

போ - ரை. தந்தையெனவும், தாய் எனவும், ஆசாரியனெனவும் உன்னையே பலவாறாகச் சொல்லுவதும், உனது நிலையினது சிறப்பாய் முடியும், எ - று.

**283.** கட்டுங் கனமுமந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டுந்தளமோ விளம்பாய் பராபரமே.

போ - ரை. சனக்கட்டும், பெருமையும், அந்த யமபடர்வருங்காலத்தில் அவர்களையெதிர்த்து வெட்டுகின்றபடையாகுமோ சொல்லாய், எ-று.

**284.** பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும் பராபரமே.

போ - ரை. பேசாத மௌநநிலையை யடைந்தாலல்லவோ, உன்னருளாகிய வாசாம கோசரம் கிடைக்கும், எ - று.

வாசாமகோசரம்-வாசா + அகோசரம் எனப்பிரியும். வாக்கினாலறியப்படாதது என்பது பொருள்.

**285.** கற்றாலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலு மின்பமுண்டோ பேசாய் பராபரமே.

போ - ரை. கல்விகற்றாலும், கேள்விகேட்டாலும், சரீரம் நசிக்காத சித்தியடைந்தாலும், சுகமுளதோ, சொல்லாய், எ - று.

காயமழியாத சித்தியைக் காயசித்தியென்பர்.

**286.** கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போ
லண்டமெல்லா நின்னருளே யன்றோ பராபரமே.

போ-ரை. தான்தீண்டின உருவெல்லாவற்றையும் கரைக்கின்ற அஞ்சனம்போல, அண்டங்கள் யாவும் நின்னருளுருவமே யல்லவோ, எ - று.

**287.** தன்செயலா லொன்றுமிலை தானென்று ஞன்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன் பராபரமே.

போ - ரை. என்செயலால் ஒன்று மில்லையென்றால், பாவியாகிய நான், உன் செயலாய் நில்லாத நினைவு என்னை, எ - று.

**288.** கொலைகளவு கட்காமங் கோபம்விட்டா லன்றோ
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே.

போ - ரை. கொலையையும், களவையும், கள்ளுண்டலையும், காமத்தையும், கோபத்தையும், விட்டாலல்லவோ, உன்னருள் மலையிலக்காகக் கிடைக்கும், எ - று.

**289.** தன்னை யறியாது சகந்தனு யிருந்துவிட்டா
லுன்னை யறியவரு ளுண்டோ பராபரமே.

போ - ரை. தன்னை யுணராமல் உலகமே தானுயிருந்துவிட்டால், உன்னை யுணர்தற்குக் கருவியாகிய அருள் உள்ளதோ, எ - று.

**290.** ஒன்றிரண் டென்றுன்ற வுணர்வுகொடுத்துள்ளபடி
யென்றுமென்னை வையா யிறையே பராபரமே.

போ - ரை. ஒன்று இரண்டு என்று நினையாத அறிவைத்தந்து, எக்காலத்தும் உள்ளபடி என்னை வைக்கவேண்டும், இறைவனே, எ - று.

**291.** கருதுமடி யார்களுளங் காணவெளி யாகுந்
துரியநிறை வான சுகமே பராபரமே.

போ - ரை. நினைக்கின்ற அடியார்களுடைய மனமானது காணும்படி வெளியாகின்ற துரிய பூமியில் நிறைந்திருக்கின்ற ஆநந்தமே, எ - று.

**292.** பொய்குவித்த நெஞ்சனருட் பொற்பறிந்து திக்கனைத்துங்
கைகுவித்து நிற்பதெந்தக் காலம் பராபரமே.

போ - ரை. பொய்திரண்ட மனத்தினேன், உன்திருவருளின்மேன்மையை யறிந்து, திசைகளெல்லாவற்றிலும் கைகூப்பி நிற்பது எந்தக் காலமோ, எ - று.

**293.** அத்துவித மான வயிக்ய வனுபவமே
சுத்தநிலை யந்நிலையார் சொல்வார் பராபரமே.

போ - ரை. அத்துவிதமாகிய ஐக்யாநுபவமே சுத்தநிலை, அந்த நிலையின் பெருமையை யாவர் சொல்லவல்லார், எ - று.

**294.** வைத்தசுவ ரலம்பின் மண்போமே மாயையினோர்க்
கெத்தனைபோ தித்துமென்ன மெந்தாய் பராபரமே.

போ - ரை. வைத்தசுவரைக் கழுவினால் மண் போய்விடுமோ, போகாது; அதுபோல, மாயையிலகப்பட் டுழல்வார்க்கு, எவ்வளவு போதித்தாலும் என்ன பிரயோஜநம், எந்தையே, எ - று.

சுவரே மண்ணுதலால், "மண்போமோ" என்றார்.

**295**. பூட்டற்றுத் தேகமற்றுப் போகுமுன்னே நின்னருளைக்
காட்டத் தகாதோவென் கண்ணே பராபரமே.

போ - ரை. பொருத்துக்களற்றுச் சரீரம் அழிவதற்கு முன்னமே, உன்னருளைக் காட்டத்தகாதோ, என்கண்ணே, எ - று.

**296**. சொல்லிற் பதர்களைந்து சொன்முடிவு காணாதார்
நெல்லிற் பதர்போல நிற்பார் பராபரமே.

போ - ரை. சொற்களில் பதராகிய சொற்களை நீக்கி, சொல்லின், முடிவினை யறியாதவர், நெல்லிலுள்ள பதர்போலப் பயனற்றவர்களாய், நிற்பார், எ - று.

சொல்லிற் பதர் - பயனற்றசொல்.

**297**. அழுக்காற்று னெஞ்ச மழுங்கியபுன் மாக்க
ளிழுக்காற்று லின்பநல மெய்தார் பராபரமே.

போ - ரை. பொறாமையால் மனம் வருந்திய கீழ்மக்கள், தமது துர் மார்க்கத்தால் சுகமாகிய நன்மையை யடையார்கள், எ - று.

**298**. தேகாதி பொய்யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு
மோகாதி யுண்டோ மொழியாய் பராபரமே.

போ - ரை. தேகம் முதலியவை பொய்யென்று தெளிந்த உபசாந் தர்களுக்கு மோகம் முதலியவை உளவாமோ, சொல்லாய், எ - று.

தேகாதி யென்றது, தநுகரண புவநபோகங்களை. மோகாதி யென் றது, அரிஷட்வர்க்கத்தை.

**299**. சாதனையெல் லாம்விழத் தற்போதங் காட்டாதோர்
போதனைநீ நல்குவதெப் போதோ பராபரமே.

போ - ரை. சாதநங்களெல்லாம் ஒழிய, தற்போதம் தலையெடுக்காத வகை, ஒருபோதிப்பை எனக்கு நீயருளிச் செய்வது எந்தக்காலமோ.

**300**. ஒன்றுமறி யாவிருளா முள்ளம் படைத்தவெனக்
கென்று கதிவருவ தெந்தாய் பராபரமே.

போ - ரை. ஒன்றையுமுணராத இருளுருவமாகிய மனத்தையுடைய எனக்கு, நற்கதி யுண்டாவது எந்தக்காலம், எந்தையே, எ - று.

**301.** சிந்திக்குந் தோறுமென் னுட் சிற்சுகமா யூற்றாறிப்
புந்திக்கு ணின்றவருட் பொற்பே பராபரமே.

போ - ரை. நினைக்குந்தோறும், என்னுள்ளே, ஞானசுகமாய் ஊற்றுச் சுரந்து, என்புத்திக்குள்ளே நிலைத்திருந்த அருட்பொலிவே, எ - று.

**302.** என்று மடைந்தோர்கட் கிரங்கார் குறிப்பனைத்துங்
கன்றை யுதைகாலி கதைகாண் பராபரமே.

போ - ரை. எக்காலத்தும் தம்மையாசிரயித்தவர்களுக்கு இரங்காதவர்களுடைய நினைவெல்லாம், அணுகும் கன்றை அணுகவொட்டாமல் உதைக்கின்ற பசுக்கூட்டத்தின் கதையை நிகர்க்கும், எ - று.

**303.** குற்றங் குறையக் குணமே விடவருளை
யுற்றவரே யாவிக் குறவாம் பராபரமே.

போ - ரை. தீமைகள் குறைய, நன்மைகள் மேலிட, உன்னருளையடைந்தவர்களே, என்னுத்ம பந்துக்கள், எ - று.

**304.** ஒருரையால் வாய்க்கு முண்மைக் கோரனந்த நூல்கோடி
பேருரையாற் பேசிலென்ன பேறும் பராபரமே.

போ - ரை. ஒரு மொழியாற் கிடைக்கும் உண்மைப் பொருளின் பொருட்டு, ஒப்பற்ற, அளவில்லாத சாத்திரத் தொகுதிகளை, பெரிய வுரைகளோடு படித்தாலும் என்னபயனுண்டாம், எ - று.

**305.** சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலு
மல்லலொழிவ தென்றைக் கையா பராபரமே.

போ - ரை. சொல்லப்பட்ட சமயமார்க்கமாகிய சுற்றுக்குள் அகப்பட்டுச் சுழலாநின்ற துன்பமானது என்னைவிட்டு நீங்குவதுஎன்று,ஐயனே.

**306.** பிடித்ததையே தாபிக்கும் பேராணவத்தை
யடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே.

போ - ரை. தான் பிடித்ததையே திரப்படுத்துகின்ற பெரிய ஆணவத்தை, அடித்துத் துரத்தவல்லவர் யாவர்; ஒருவருமில்லை, எ - று.

**307.** நேசத்தா னின்னை நினைக்கு நினைவுடையார்
ஆசைக் கடலி லழுந்தார் பராபரமே.

போ - ரை. அன்பினல் உன்னை நினைக்கின்ற மனத்தையுடையவர், ஆசையாகிய கடலில் அமிழார், எ - று.

**308.** கள்ளாது கட்டுணவுங் காரியமோ நானொருசொல்
கொள்ளாத தோஷமன்றோ கூறாய் பராபரமே.

பொ - ளை. திருடாமல் கட்டுப்படவும் வேலையோ, நான் ஒரு மொழியைக் கொள்ளாத குற்றமல்லவோ, சொல்லாய், எ - று.

**309.** சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமாய்
நின்றவர்க்கே யானந்த நிட்டை பராபரமே.

பொ - ளை. போன இடமெல்லாம் திருவருளே ஆதாரமாகக் கொண்டு நின்றவர்க்கே, ஆநந்தத்துக்குக் காரணமாகிய நிஷ்டையுள்ளது.

**310.** நீட்சி குறுகலிலா நித்யசுகா ரம்பசக
சாக்ஷியா முன்னைவந்து சார்ந்தேன் பராபரமே.

பொ - ளை. நீட்டலும் குறுக்கலு மில்லாத சாசுவதமாகிய சுகத் தொடக்கத்துக்கு ஹேதுவாகிய லோகசாக்ஷியாயிருக்கிற உன்னை வந்தடைந்தேன், எ - று.

**311.** வானாதி தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ
நானாகி நிற்பதெந்த நாளோ பராபரமே.

பொ - ளை. ஆகாயமுதலிய தத்துவங்களாய் நிலைபெற்று நின்ற சர்வகாரணனே, நீயே நான் ஆகிநிற்பது எந்தக்காலமோ, எ - று.

**312.** காட்டத்திலங்கி கடையவந்த லென்னவுன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே.

பொ - ளை. கடைதலால், விறகினின்று நெருப்புண்டானதுபோல, நினைக்கின்ற நினைவினிடத்துண்டாகிய என்னுயிர்த் துணையே, எ - று.

**313.** நித்திரையாய்த் தானே நினைவயர்ந்தா னித்தநித்தஞ்
செத்தபிழைப் பானதெங்கள் செய்கைபராபரமே.

பொ - ளை. நித்திரைசெய்து தானே நினைவுமறந்தால், நாள்தோறும் எங்கள் செய்கை, செத்தபிழைப்பாய் விட்டது, எ - று.

**314.** இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்றுமனந்
துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே.

பொ - ளை. சுகநிஷ்டையை யடையாமல், மனமானது யாதொரு பொருளினும் சென்றழுந்தித் துக்கமடைதல் வலியபிறவித்துன்பம்.

**315.** பொய்யகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோ
ரையமிலை யையமிலை யையா பராபரமே.

பொ - ளை. பொய் நீங்கும்படி உண்மையாகிய ஞானநிலையைக் கண்டவர்களுக்கு, ஒரு சந்தேகமில்லை ஒருசந்தேகமில்லை, ஐயனே, எ-று.

**316.** மந்திரத்தை யுன்னி மயங்கா தெனக்கினியோர்
தந்திரத்தை வைக்கத் தகாதோ பராபரமே,

பொ - ரை. மந்திரத்தை நினைத்து மயங்காமல், எனக்கு, இனி ஒரு உபாயத்தைக் கற்பிக்கத் தகாதோ, எ - று.

**317**. விண்கருணை பூத்தென்ன மேவியுயிர்க் குயிராய்த்
தண்கருணை தோன்றவரு டாய்நீ பராபரமே.

பொ - ரை. ஆகாயமானது கருணையைப் பூத்தாற்போல, உயிர்க்குயிராய்ப் பொருந்தி, தண்ணிய கிருபைதோன்ற அருள்செய்கின்ற தாய் நீயே.

**318**. தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்றா
னின்மயமா யெல்லா நிகழும் பராபரமே.

பொ-ரை. தன்மயமாய் நின்றநிலைதானே தானாகி நின்றால், எல்லாம் உன்னுருவமாகவே நிகழும், எ - று.

**319**. ஏங்கி யிடையுநெஞ்ச வேழையையீ வாவென்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம் பராபரமே.

பொ - ரை. ஏக்கத்தையடைந்துழைகின்ற மனத்தையுடைய எளியேனை, நீ வாவென்றழைத்துச் சீர்பெறச்செய்வது உன்மீதுள்ள பாரமாகும்.

**320**. ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யா மாணவத்தைப்
பூண்டதென்ன கன்மம் புகலாய் பராபரமே.

பொ - ரை. ஆண்டவனே, உன்னை நீங்காத அடிமைகள் நாங்கள், அப்படியிருக்க, நாங்கள் அகங்காரத்தை ஆபரணமாகப் பூண்டிருப்பதற்குக் காரணம் என்னகர்மமோ சொல்வாய், எ - று.

**321**. எங்கணுநீ யென்றா லிருந்தபடி யெய்தாம
லங்குமிங்கு மென்றலைய லாமோ பராபரமே.

பொ - ரை. எவ்விடத்தும் நீ நிறைந்திருக்கிறாயென்றால், இருந்தபடியே உன்னையடையாமல், அங்குள்ளது இங்குள்ளது என்று அலையவொண்ணுமோ, எ - று.

**322**. கற்குமது வுண்டு களித்ததல்லா னின்னருளி
னிற்குமது தந்ததுண்டோ நீதான் பராபரமே.

பொ - ரை. கல்வியாகிய தேனைப்பருகிக் களித்ததல்லாமல் நீதான் உன்திருவருளில் நிற்றல் என்னும் தேனைக் கொடுத்ததுண்டோ, எ - று.

**323**. அண்டபகி ரண்ட மறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டாற் கதியாம் பராபரமே.

பொ-ரை. அண்ட பகிரண்டங்களெல்லாம் அறியாத உன்னுருவைச் சேவித்தவரைச் சேவித்தால் மோக்ஷமுண்டாகும், எ - று.

**324.** கலக்கமுற நெஞ்சைக் கலக்கித் திரும்பத்
துலக்குபவ னீயலையோ சொல்லாய் பராபரமே.

பொ - ளை. கலக்க மடையும்படி மனத்தைக் கலங்கப்பண்ணி, மறுபடியும் தெளியப்பண்ணுவோன் நீ யல்லவோ, சொல்லாய், எ - று.

**325.** சிந்தையு மென்போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே.

பொ - ளை. மனமும் என்னைப்போலச் செய்கையற்று ஒடுங்கி விட்டால், நேரிட்டதெல்லாம் உன் செயலாகவே பாவித்து வாழ்ந்திருப்பேன்.

**326.** பந்தமெலாந் தீரப் பரஞ்சோதி நீகுருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே.

பொ - ளை. பரஞ்சோதியே, என் பிறவிப்பிணிப்பு அவிழும்படி நீ குரு உருவாய் வந்தவடிவத்தை நான் மறக்கமாட்டேன், எ - று.

**327.** தானந்த மான சகச நிருவிகற்ப
வானந்த நிட்டையரு ளையா பராபரமே.

பொ - ளை. தானே முடிவாயிருந்த சகச நிருவிகற்ப ஆநந்த நிஷ்டையை அருள் செய்யவேண்டும் ஐயனே, எ - று.

**328.** அல்லலெல்லாந் தீர வெனக் கானந்தமாகவொரு
சொல்லையென்பால் வைத்ததையென் சொல்வேன் [பராபரமே.

பொ - ளை. துன்பமெல்லா மொழியும்படி, எனக்கு இன்பமுண்டாக, ஒருமொழியை யெனக்குக் கிருபை செய்ததைப்பற்றி என்சொல்லிப் புகழ்வேன், எ - று.

**329.** சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன் பராபரமே.

பொ - ளை. மன மயக்கந் தீரும்படி, சித்துருவாய் நின்றவுன்னை எனக்குக் கொடுத்த வுனக்கு, நான் என்னையும் கொடுத்தேன். எ - று.

**330.** மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொ - ளை. இருளுருவாகிய மாயாமயக்கமொழிய, நீ குருவடிவாய் எழுந்தருளிவந்து, கைகாட்டவும் சொப்பநங் கண்டேன், எ - று.

கைகாட்டல் - சும்மாவிரு என்று கையமைத்தல்.

**331.** மால்வைத்த சிந்தை மயக்கறவென் சென்னிமிசை
கால்வைக்க வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொ - ளை. ஆசைவைத்த மனமயக்கம் அற, என்சிரசின்மீது உன் திருவடியை வைக்கவும் சொப்பநங்கண்டேன், எ - று.

**332.** மண்ணான மாயையெல்லா மாண்டுவெளியா கவிரு
கண்ணாரா வுங்கனவு கண்டேன் பராபரமே.

போ - ரை. மண்ணாகிய மாயை முழுதும் மடிந்து வெளியாக, இரண்டு கண்களாரக் கனவுகண்டேன், எ - று.

**333.** மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன் பராபரமே.

போ - ரை. பிரபஞ்சமாயையாலே மயங்காமல், உன்கையால், என் கண்ணீரைத் துடைக்கவும் நான் கனவுகண்டேன், எ - று.

**334.** உள்ளதுணரா வுணர்விலிமா பாவியென்றோ
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய் பராபரமே.

போ - ரை. யதார்த்தத்தை யறியாத அறிவில்லாத மஹாபாபியென்று தானே என்னை மெள்ளமெள்ளக் கைசோரவிட்டனை, எ - று.

**335.** எல்லா நினதுசெய லென்றெண்ணு மெண்ணமுநீ
அல்லா லெனக்குளதோ வையா பராபரமே.

போ - ரை. எல்லாம் உன்செயலேயென்று நினைக்கின்ற நினைவும் நீயேயன்றி, எனக்கென்று ஒரு எண்ணமுண்டோ, ஐயனே, எ - று.

**336.** பந்தமயக்கிருக்கப் பற்றொழிந்தே னென்றுளறு
மிந்த மயக்க மெனக்கேன் பராபரமே.

போ - ரை. பிறவிப்பிணிப்பின் மயக்கமிருக்க, பற்றுவிட்டேன் என்று உளறுகின்ற இந்தமயக்கம் எனக்கு ஏன், எ - று.

**337.** காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ யாதினுக்கு, மாட்சியுன தருளே யன்றோ பராபரமே.

போ - ரை. கண்ணையொழியக் காட்சிகள் யாவுமுளவோ, இல்லையே அதுபோல, எல்லாவற்றுக்கும் உன்திருவருளே ஆட்சியாமல்லவோ.

ஆட்சி - உரிமை.

**338.** எட்டுத் திசையுமொன்றா யின்பமாய் நின்றவுன்னை
விட்டுப் பிரியவிடம் வேறோ பராபரமே.

போ - ரை. எட்டுத்திசைகளிலும் ஒன்றாகி இன்பவுருவாய் நிலைபெற்றிருந்த உன்னை விட்டுப் பிரிதற்கு, எனக்கு வேறு இடம் உளதோ.

**339.** பிறியா துயிர்க்குயிராய்ப் பின்னமற வோங்குஞ்
செறிவே யறிவே சிவமே பராபரமே.

போ - ரை. நீங்காமல், உயிர்க்குயிராகி, கண்டிக்கப்படாமல் நின்ற அடர்த்தியே, அறிவே, சிவமே, எ - று.

**340.** ஏதேது சொன்னாலு மெள்ளளவு நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் பராபரமே.

போ - ரை. என்னென்ன சொன்னாலும் எள்ளத்தனையும் நீயிரக்கஞ் செய்யாத கபடம்யாது, எனக்கு உளவுசொல்வாய், எ - று.

**341.** கற்பனையாப் பாடுகின்றேன் கண்ணீருங் கம்பலையும்
சொற்பனத்துங் காணே னென்சொல்வேன் பராபரமே.

போ - ரை. கற்பனையாய்ப் பாடுகின்றேன், கண்ணீரும் கம்பலையும் என்சொப்பனத்திலுங் கண்டிலேன், இந்தத் தீவினையை யென்னென்று சொல்வேன், எ - று.

**342.** வன்பொன்று நீங்கா மனதிறப்ப மாறுப்பே
றன்பொன்றும் போதுமெனக் கையா பராபரமே.

போ-ரை. வன்மையைச் சிறிதும் நீங்காத மனமிறக்க, உன்னிடத்து நீங்காத பேரன்பொன்றுமே எனக்கமையும், ஐயனே, எ - று.

**343.** எதுந் தெரியா வெளியேனை வாவெனநின்
போதநிலை காட்டிற் பொறுதோ பராபரமே.

போ - ரை. ஒன்றுமறியாத எளியேனை வாவென்றழைத்து, உன் ஞானநிலையைக் காட்டினால், அது என்னால் தாங்கமுடியாதோ, எ - று.

**344.** ஓராம லெல்லா மொழிந்தேற்குன் றெய்வவரு
ளாரா திருக்கத் தகுமோ பராபரமே.

போ - ரை. எல்லாவற்றையும் ஆராயாமல் ஒழிந்த எனக்கு, உனது தெய்விகமானகிருபையைச் செய்யாதிருந்தால், அது உனக்குத் தகுமோ.

**345.** மோனந் தருஞான மூட்டியெனக் குவட்டா
வானந்த வாழ்க்கை யருளாய் பராபரமே.

போ - ரை. எனக்கு மோனநிலையைத் தருகின்ற ஞானத்தையுண்டு பண்ணி, தெவிட்டாத இன்பவாழ்க்கையைக் கொடுத்தருளாய், எ - று.

**346.** வாடுமுகங் கண்டென்னை வாடாம லேகாத்த
நீடுங் கருணை நிறைவே பராபரமே.

போ - ரை. வாடுகின்ற முகத்தைப்பார்த்து என்னை வாடாமல் காத்தருளிய பெருங்கருணை நிறைவே, எ - று.

**347.** புந்தியினு னின்னடியைப் போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தை யிறப்போநின் றியானம் பராபரமே.

போ - ரை. உன் திருவடியை மனத்தினால் வணங்குகின்ற மெய்யன்பரது மனவிறப்போ உனது தியானம், எ - று.

**348.** உனக்குவமை யாக்கருணை யுள்ளவரும் வன்மைக்
கெனக்குவமை யானவரு மில்லை பராபரமே.

போ - ரை. கருணையில் உனக்கு உவமையாயுள்ளவரும், வன்மையில் எனக்கு உவமையாயுள்ளவரும் இல்லை, எ - று.

**349.** தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விடத்து
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன் பராபரமே.

போ - ரை. தாயிருந்தும் பிள்ளை தவித்தாற்போல, எவ்விடத்தும் நீயிருந்தும் நான் மனந்தளர்ந்து நின்றேன், எ - று.

**350.** வாயற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பேசிப்
பேயானார்க் கின்பமுண்டோ பேசாய் பராபரமே.

போ-ரை. கிணறு தன்வாயினாலே தூர்ந்தவிதம்போல வாசாஞானம் பேசிப் பேய்கொண்டார்க்குச் சுகமுண்டோ, எ - று.

**351.** பாவமென்று லேதும் பயமின்றிச் செய்யவிந்தச்
சீவனுக்கார் போதந் தெரித்தார் பராபரமே.

போ - ரை. பாவமென்றாலோ சிறிதும் பயமில்லாமல் செய்வதற்கு, இந்தச் சீவனுக்கு ஞானம் போதித்தவர் யாவர், எ - று.

**352.** இன்ப நிருவிகற்ப மின்றேதா வன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது சொன்னேன் பராபரமே.

போ-ரை. இன்பத்தைக் கொடுக்கிற நிருவிகற்பசமாதி நிஷ்டையை இப்பொழுதே கிருபைசெய், அல்லவென்றாலோ, துன்பம் பொறுத்தல் எனக்கு அருமையாகும்.

**353.** கற்குநிலை கற்றூற் கருவியவி ழாதருளாய்
நிற்குநிலை கற்பதுவே நீதம் பராபரமே.

போ - ரை. கற்கத்தகுந்த நிலையைக்கற்றால் கருவிகளொடுங்காது அருளுருவாய் நிற்கும் நிலையைக் கற்பதுவே நீதியாகும், எ - று.

**354.** காச்சச் சுடர்விடும்பாற் கட்டிபோ னின்மலமாய்ப்
பேச்சற் றவரே பிறவார் பராபரமே.

போ - ரை. காய்ச்சுதலால் களிம்பற்று ஒளிவிடுகின்ற பொன்கட்டி போல நிர்மலமாகப் பேச்சற்றிருப்பவரே மீண்டும் பிறவாதவர், எ - று.

**355.** பற்றொழிந்து சிந்தைப் பதைப்பொழிந்து தானே தா
னற்றிருப்ப தென்றைக் கமைப்பாய் பராபரமே.

போ - ரை. இருவகைப் பற்றுமொழிந்து, மனப்பதைப்புமொழிந்து, தானேதான் என்பதுமொழிந்து நிற்றலை, எனக்கு என்றைக்கு அமைப்பாய்.

**356.** உருவெளிதான் வாதவூ ருத்தமர்க்கல் லாலினமுங்
குருவழிநின் றோர்க்குமுண்டோ கூறாய் பராபரமே.

போ - ரை. நீ உருவு வெளிப்பாடாய் எழுந்தருளிவந்தது வாதவூர் உத்தமர்க்கே யன்றி, இன்னமும் குருவின்பணிவிடை வழியில் நின்றவர்க்கும் உண்டோ, சொல்லாய், எ - று.

**357.** தேகமியா தேனுமொரு சித்திபெறச் சீவன்முத்தி
யாகுநெறி நல்லநெறி யையா பராபரமே.

போ - ரை. சரீரம் யாதாயினும் ஒரு சித்தியையடைய, சீவன் முத்தியையடைகின்ற மார்க்கமே நல்லமார்க்கம், ஐயனே, எ - று.

**358.** உலகநெறி போற்சடல மோயவுயிர் முத்தி
யிலகுமெனல் பந்த வியல்போ பராபரமே.

போ ரை. பிரபஞ்சமார்க்கம்போல, உடல்பிரிய, ஆன்மாமுத்திதேகமாய் விளங்குமென்று சொல்லுதல் பிறவிப்பிணிப்பின் சுபாவந்தானோ.

**359.** பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான் மற்றெவர்க்குந்
திரமேது மில்லைநன்றாத் தேர்ந்தேன் பராபரமே.

போ - ரை. பரமாகவும் பரவெளியாகவும் பார்ப்பதல்லது, யாவர்க்கும் வேறு உறுதி சிறிதுமில்லை, அதனை நன்றாகத் தெளிந்துகொண்டேன்.

**360.** தேடுவ னின்னருளைத் தேடுமுன்னே யெய்திநட
மாடுவே னானந்த மாவேன் பாரபரமே.

போ - ரை. உன் திருவருளைத் தேடாநிற்பேன், தேடு முன்னமே, உன் திருவருள் கிடைத்தால், நடனமாடுவேன், இன்பமயமாவேன், எ - று.

**361.** உள்ளங் குழையவுடல் குழைய வுள்ளிருந்த
கள்ளங் குழையவென்று காண்பேன் பராபரமே.

போ - ரை. மனங்குழையவும், சரீரங்குழையவும், மனத்திருந்த வஞ்சகங் குழையவும் என்றைக்குக் காணப்பெறுவேன், எ - று.

**362.** பட்டப் பகல்போலப் பாழ்த்தசிந்தை மாளிலெல்லாம்
வெட்ட வெளியாக விளங்கும் பராபரமே.

போ - ரை. பட்டப் பகல்போலப் பாழாகிய மனமிறந்தால், விரும் புவன வெல்லாம் வெட்டவெளியாக விளங்கும், எ - று.

**363.** பார்க்கவணுப் போற்கிடந்த பாழ்ஞ்சிந்தை மாளினென்னை
யார்க்குச் சரியிடலா மையா பராபரமே.

பொ - ரை. பார்க்குமிடத்து அணுவைப்போல நுண்ணிதாகக்கிடந்த பாழ்மனமான துஇறந்தால்,என்னையாருக்குஉவமைசொல்லலாம்,ஐயனே.

**364.** பாட்டுக்கோ வன்பினுக்கோ பத்திக்கோ வன்பர்தங்க
ணீட்டுக்கெல் லாங்குறுகி நின்றாய் பராபரமே.

பொ - ரை. அன்பர்களுடைய பாடலுக்கு மாத்திரமோ, அன்புக்கு மாத்திரமோ, பத்திக்கு மாத்திரமோ,இவ்வாறு ஒவ்வொன்றுக்குமேயல்ல, அவர்களுடைய நீட்சிக் கெல்லாம் குறுக்கமடைந்து நின்றாய், எ - று.

**365.** முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே.

பொ-ரை. முத்திமுடிவாகிய சர்வகாரணமே, (அந்தமுத்தி) முளைக் கத்தக்க பூமியாயெழுந்த சித்தாந்த மார்க்கத்தின் மேன்மையே, எ - று.

**366.** உன்னு வெளியா யுறங்காத பேருணர்வா
யென்னுயிர்க் குள்ளே யிருந்தாய் பராபரமே.

பொ - ரை. நினைக்கக்கூடாத ஆகாயமாய், உறங்காத பேரறிவாய், என்னுயிருக்குள்ளே யிருந்தாய், எ - று.

**367.** தத்துவமெல் லாமகன்ற தன்மையர்க்குச் சின்மயமா
நித்தமுத்த சுத்த நிறைவே பராபரமே.

பொ - ரை. தத்துவங்களெல்லாம் நீங்கின தன்மையையுடையவர் களுக்கு, ஞானமயமாகிய சாசுவதனே, முத்தனே, சுத்தபூர்ணமே, எ-று.

**368.** உள்ளக் கொதிப்படங்க வுள்ளுள்ளே யானந்த
வெள்ள மலர்க்கருணை வேண்டும் பராபரமே.

பொ - ரை. என்மனக் கொதிப்பு நீங்கும்படி, என்மனத்தினுள்ளே, இன்பவெள்ளத்தில்மலர்கின்றமலராகிய உன்கருணை யெனக்குவேண்டும்.

**369.** என்னைப் புரப்பதரு ளின்கடனு மென்கடனு
மின்னிற் பணியறவே நிற்கை பராபரமே.

பொ - ரை. என்னைக் காப்பது உன்திருவருளுக்குக் கடன்மையாம், உன் திருப்பணியில் மிகுதியும் நிற்கை என் கடன்மையாகும், எ - று.

**370.** தானேயா நன்னிலையைத் தந்தவரு ளானந்த
வானே மனாதீத வாழ்வே பராபரமே.

பொ - ரை. நீதானே யாகின்ற நல்லநிலையை எனக்குக் கொடுத்த அருளானந்த ஆகாயமே, மனத்துக்கெட்டாத வாழ்வே, எ - று.

**371.** மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த நின்னிறைவைக்
கண்ணாரக் கண்டு களித்தேன் பராபரமே.

பொ - ரை. மண்முதலிய பூதங்களையெல்லாம் உள்ளே தங்கும்படி வைத்திருந்த உன் பரிபூர்ண நிலையைக் கண்ணாரக்கண்டு களித்தேன், எ - று.

**372.** அறியாமை யீதென் றறிவித்த வன்றேதான்
பிறியா வருணிலையும் பெற்றேன் பராபரமே.

பொ - ரை. அறியாமையின் சொரூபம் இதுவென்று எனக்கு அறிவிக்க அன்றே, என்னைவிட்டு நீங்காத உன் திருவருளின்கண் யான் நிற்கும் நிலையையும் அடைந்தேன், எ - று.

**373.** தீதெனவு நன்றெனவுந் தேர்ந்துநான் றேர்ந்தபடி
யேது நடக்கவொட்டா தென்னே பராபரமே.

பொ - ரை. இது தீமையென்றும், இது நன்மையென்றும் தெளிந்து, நான் தெளிந்த வண்ணம், நடக்கவொட்டாது, இதற்கு ஏதுவென்ன.

**374.** கண்டவறி வகண்டா காரமென மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முத்தி கொடுப்பாய் பராபரமே.

பொ - ரை. கண்ட காட்சியானது அகண்டரூபமென்று உண்மையறிவிற் கொண்டவர்களுக்கே முத்தியைக் கொடுப்பாய், எ - று.

**375.** ஈறாக வல்வினைநா னென்னுமை யின்பசுகம்
பேறும் படிக்கடிமை பெற்றேன் பராபரமே.

பொ - ரை. வலிய வினைகள் முடிவாகும்படி, நான் என்று அகங்கரியாமல், பேரானந்தமே பிரயோஜன மாகும்படிக்கு, உன் அடிமைத் திறத்தை நானடைந்தேன், எ - று.

**376.** பெற்றா ரனுபூதி பேசாத மோனநிலை
கற்றா ருனைப்பிரியார் கண்டாய் பராபரமே.

பொ - ரை. சுவாநுபூதிநிலையைப் பெற்றவர்களும், பேசாத மௌனநிலையைக் கற்றவர்களும் உன்னைப் பிரியமாட்டார்கள், எ - று.

**377.** நீயேநா னென்று நினைப்பு மறப்புமறத்
தாயே யனையவரு டந்தாய் பராபரமே.

பொ - ரை. நீயே நான் என்று நினைப்பும் மறப்பும் இல்லாதொழியும்படி, தாயினது அருள்போன்ற அருளை எனக்குத் தந்தனை, எ - று.

**378.** சஞ்சலமற் றெல்லாநீ தானென் றுணர்ந்தேனென்
னஞ்சலியுங் கொள்ளா யரசே பராபரமே.

போ - ரை. சலனமற்று, எல்லாப்பொருளும் நீயே யென்றறிந்து கொண்டேன், எனது அஞ்சலியையும் ஏற்றுக்கொள்ள வேண்டும், இறைவனே, எ - று.

**379.** பூதமுத னாதவரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்தோர் வின்பக் கடலே பராபரமே.

போ - ரை. பிருதுவிமுதலாகிய பூதங்கள் முதலாக நாததத்துவம் வரைக்குமாகவுள்ள தத்துவங்களெல்லாம் பொய்யென்றுணர்ந்த மெய்யறிவினையுடையோர் விரும்பின ஆநந்தசாகரமே, எ - று.

**380.** வாக்குமன மொன்றுபட்ட வார்த்தையல்லால் வெவ்
வேறாய்ப், போக்குடைய வார்த்தை பொருந்தேன்
பராபரமே.

போ - ரை. வாக்கும் மனமும் ஒரு தன்மைப்பட்ட வார்த்தையை யன்றி, வெவ்வேறாய்ப் போதனையுடைய வார்த்தையைப் பேச மனம் பொருந்தேன், யான், எ - று.

**381.** வன்மையின்றி யெல்லா மதித்துணர்வாய்க் காகெடுவேன்
தன்மையொன் றுந் தோயாத் தடையோ பராபரமே.

போ - ரை. மனவன்மை யில்லாமல் எல்லாவற்றையும் திருவுளத் தடைத் தறியவல்ல வுனக்கு, என்பால் எழுந்தருள, ஐயோ கெடுவேன் எனக்கு நற்குணம் சிறிதும் பொருந்தாமை தடையாயிற்றோ, எ - று.

**382.** பத்தர்சித்தர் வாழிபரி பக்குவர்கள் வாழிசெங்கோல்
வைத்தவர்கள் வாழிகுரு வாழி பராபரமே.

போ - ரை. பத்தர்களும் சித்தர்களும் வாழ்க, பரிபாக மடைந்தவர்கள் வாழ்க, செங்கோல்பிடித்த அரசர்கள் வாழ்க, ஆசாரியன்வாழ்க, எ-று.

**383.** கல்லாதே னானுங் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே.

போ - ரை. நான் கற்கவேண்டிய வீட்டு நூல்களைக் கல்லாதவனானும், அவற்றைக் கற்று உன்னை யுள்ளபடி யறிந்த மெய்யன்பரது சொல்லைத் துணையாகக்கொண்டு உன்னைப்பற்றினேன், எ - று.

**384.** சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச் சுகங்கொடுத்த
நல்லவர்க்கே கொத்தடிமை நான்காண் பராபரமே.

போ - ரை. பேச்சிறக்கும்படி, நீ சதாசாரியனாய் வெளிப்பட்டு, இன்பங் கொடுத்த நல்ல வார்த்தைக்கே நான் கொத்தடிமை யானேன், எ-று.

**385.** முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே பராபரமே.

போ - ரை. மோக்ஷத்துக்குக் காரணமான மௌனநிலையென்ற கரும்பினிடத்தில், இனிக்கும்படி யுண்டான தேனே, எ - று.

**386.** நித்திரையும் பாழ்த்த நினைவுமற்று நிற்பதுவோ
சுத்தவரு ளிலைநீ சொல்லாய் பராபரமே.

போ - ரை. நித்திரையும் பாழாகிய நினைவும் இறந்து நிற்பதுதானோ பரிசுத்தமான உன்திருவருளில் நிற்கும்நிலை, நீ சொல்லாய், எ - று.

**387.** மண்ணு மறிகடலு மற்றுளவு மெல்லாமுன்
கண்ணி லிருக்கவுநான் கண்டேன் பராபரமே.

போ - ரை. பூமியும், அலைகள் மடங்குகின்ற கடலும், மற்றுமுள்ள பொருள்களும் ஆகிய எல்லாம், உன்திருவரு ளுக்கத்திலிருக்கவும் நான் பார்த்தேன், எ - று.

**388.** பூட்டிவைத்து வஞ்சப் பொறிவழியே யென்றனைநீ
யாட்டுகின்ற தேதோ வறியேன் பராபரமே.

போ - ரை. கட்டிவைத்து, வஞ்சகமான ஐம்பொறிகளின் வழியே என்னை நீ யாட்டுவிப்பதற்குக் காரணம் யாதோ அறியேன், எ - று.

**389.** பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தேன்
உய்யும் வகையு முளதோ பராபரமே.

போ - ரை. பொய்யுணர்ச்சி யுடையேனாய், இந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தேன், எனக்குப் பிழைக்கும் விதமும் உண்டோ, எ - று.

---

## பைங்கிளிக்கண்ணி.

**1.** அந்தமுட னாதியளவாம லென்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ பைங்கிளியே.

போ - ரை. முடிவோடு முதலும் அளவிடப்படாமல், அழகிய மேலான சோதிசொரூபம் என்னறிவினிடத்து விளங்குமோ, சொல்லாய் பசுங்கிளியே, எ - று.

**2.** அகமேவு மண்ணலுக்கென் னல்லலெல்லாஞ் சொல்லிச்
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா பைங்கிளியே.

போ - ரை. என் மனத்தின்கண் பொருந்தியிருக்கிற இறைவனுக்கு, கிளியாகிய நீ போய், என் துன்பத்தையெல்லாம் சொல்லி, எனக்கு இன்பத்தைப் பெற்றுவந்து கொடுப்பாயாக, எ - று.

3. ஆவிக்கு ளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்
பாவிக்குங் கிட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே.

போ - ரை. உயிர்க்குயிர் என்று சொல்லப்படுகிற அற்புத மூர்த்தியாகிய கடவுளது ஞானசுகம், இந்தப்பாவியாகிய எனக்கும் கிடைக்குமோ, நீ சொல்லாய், எ - று.

4. ஆருமறி யாமலெனை யந்தரங்க மாகவந்து
சேரும் படியிறைக்குச் செப்பிவா பைங்கிளியே.

போ - ரை. யாருமறியாத வண்ணம், ரகசியமாய் வந்து என்னை யணையும்படி என் தலைவனுக்கு நீ சொல்லி வருவாயாக, எ - று.

5. ஆறான கண்ணீர்க்கென் னங்கபங்க மானதையுங்
கூறாத தென்னோ குதலைமொழிப் பைங்கிளியே.

போ - ரை. ஆறுபோலப் பெருகிய என்கண்ணீரின் அளவுக்கு, என்தேகம் வருந்தின வருத்தத்தையும் நீ சொல்லாத தென்னையோ, மழலைச் சொல்லையுடைய பசுங்கிளியே, எ - று.

6. இன்பருளா வாடையழுக் கேறுமெமக் கண்ணல்சுத்த
வம்பரமா மாடை யளிப்பானோ பைங்கிளியே.

போ - ரை. ஆடை அழுக்கேறப்பெற்ற எமக்குச் சுகத்தைக் கொடுக்கும் பொருட்டு, எம்மிறைவன், பரிசுத்தமான ஆகாயமாகிய ஆடையைக் கொடுப்பானோ, நீ சொல்லாய், எ - று.

7. உன்னாமெ லொன்றிரண்டென் றோராமல் வீட்டுநெறி
சொன்னார் வரவும்வகை சொல்லாய்நீ பைங்கிளியே.

போ - ரை. நினையாமலும் உன்னை இரண்டு என்று ஆராயாமலும் முத்தி நெறியை யெமக்கறிவுறுத்தின இறைவர், எம்மிடத்தில் வரும்படியாகவும் ஒரு உபாயத்தை நீ சொல்லக்கடவை, எ - று.

8. ஊருமிலார் பேருமிலா ருற்றார்பெற் றாருடனே
யாருமிலா ரென்னை யறிவாரோ பைங்கிளியே.

போ - ரை. தமக்கென ஓர் ஊரில்லாதவர், ஒரு பெயரில்லாதவர், உற்றார் பெற்றாருடனே யாரும் இல்லாதவர், இப்படிப்பட்டவர் என்னை யறியக் கடவரோ, எ - று.

9. ஊரைப்பா ராமலெனக் குள்ளகத்து நாயகனார்
சீரைப்பார்த் தாற்கருணை செய்வாரோ பைங்கிளியே.

போ - ரை. ஊரைநோக்காமல், என் உள்ளத்தின்கண் ணுள்ள இறைவரது சீரைநோக்கினால் கருணைசெய்வரோ, நீ சொல்லாய், எ - று

**10.** என்று விடியு மிறைவாவோ வென்றென்று
நின்ற நிலையெல்லா நிகழ்த்தாய்நீ பைங்கிளியே.

**பொ - ள.** இறைவனே, எமக்கு எக்காலம் விடியும் என்று பலகாற் சொல்லி, நான் விறைந்து நின்றநிலைமுழுதும், இறைவனுக்கு நீ சொல்வாய், எ - று.

**11.** எந்த மடலூடு மெழுதா விறைவடிவைச்
சிந்தை படலாவெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே.

**பொ - ள.** எந்த ஏட்டிலும் எழுதவொண்ணாத எம்மிறைவரது உருவத்தை என் உள்ளமாகிய ஏட்டில் எழுதிச் சேர்ப்பேனோ, எ - று.

**12.** கண்ணுண்மணி போலின்பங்காட்டி யெனைப்பிரிந்த
திண்ணியரு மின்னம் வந்துசேர்வாரோ பைங்கிளியே.

**பொ - ள.** கண்ணினுள்ளிருக்கிற மணிபோல, இன்பம் காட்டி என்னைப்பிரிந்த வன்மனத்தையுடையவரும், இன்னம்வந்து சேர்வாரோ.

**13.** ஏடார் மலர்சூடே னெம்பெருமான் பொன்னடியாம்
வாடாமலர் முடிக்கு வாய்க்குமோ பைங்கிளியே.

**பொ - ள.** இதழ்களோடு கூடிய மலர்களை முடியேன், எம்மிறைவரது திருவடியாகிய வாடாத மலர் எம்முடிக்குக் கிடைக்குமோ, எ-று.

**14.** கல்லேன் மலரென் கனிந்தவன்பே பூசையென்ற
நல்லோர் பொல்லாவெனையுநாடுவரோ பைங்கிளியே.

**பொ - ள.** கல் யாதுக்கு, அதின்மேலிடும் மலர்யாதுக்கு, பழுத்த அன்பே பூசை என்று சொன்ன நல்லோர், பொல்லாதவனாகிய என்னையும் நாடுவாரோ, எ - று.

கல் - கற்சிலை.

**15.** கண்டதனைக் கண்டு கலக்கந் தவிரெனவே
விண்டபெரு மானையுநான் மேவுவனோ பைங்கிளியே.

**பொ - ள.** எல்லாம் படைத்த இறை நிலையைப் பார்த்து மனக்கலக்கத்தை நீங்குவாய் என்று சொன்ன இறைவனையும்யான் இன்னும் ஒருகால் கலக்கப் பெறுவேனோ, எ - று.

**16.** காணாத காட்சி கருத்துவந்து காணாமல்
வீணாள் கழித்து மெலிவேனோ பைங்கிளியே.

**பொ - ள.** காணக் கூடாத இறைவரது காட்சியை மனங்களித்துக் காணப்பெறுமல், எம்முடைய நாட்களை வீணாகக்கழித்துமெலிவேனோ.

**17.** காந்த மிரும்பைக் கவர்ந்திழுத்தா லென்னவருள்
வேந்த னெனையிழுத்து மேவுவனோ பைங்கிளியே.

போ - ரை. இரும்பைக் காந்தமானது பற்றியிழுத்தாற்போல, இருவைக் கரசனாகிய இறைவன் எம்மைப் பற்றியிழுத்துக் கலப்பானோ, எ-று.

**18.** காதலால் வாடினதுங் கண்டனையே யெம்மிறைவர்
போதரவாயின்பம் புசிப்பேனோ பைங்கிளியே.

போ - ரை. நான் ஆசையால் வாடினதையும் பார்த்தாயன்றோ, எம்மிறைவர் வருகையால் இன்பத்தை யநுபவிப்பேனோ, எ - று.

**19.** கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப் பலவடிகொள்
பட்டிருக்கு மின்பமுண்டோசொல்லாய்நீ பைங்கிளியே.

போ - ரை. நெருங்கி, அன்புடையாரது உண்மைமொழியைக்கேளாமல், பல அடிகளை யேய்கின்ற பட்டிக்கடாவை யொத்த எனக்கும் இன்பம் உளதோ, நீ சொல்லாய், எ - று.

**20.** கிட்டூராய் நெஞ்சிற் கிளர்வார் தழுவவென்று
னெட்டூர ராவரவர் நேசமென்னோ பைங்கிளியே.

போ - ரை. சமீபமான ஊரினராய் என்மனத்தில் விளங்குவார், தழுவவேண்டுமென்று நினைத்து முயன்றால், நெடுந்தூரமான ஊரினராய் விடுவார், அவரது நட்பிறந்தவாறு என், எ - று.

**21.** கூறுங் குணமுமில்லாக் கொள்கையினா ரென்கவலை
யாறும் படிக்கு மணைவாரோ பைங்கிளியே.

போ - ரை. ஒருவகுப்பும் குணமும் இல்லாத கொள்கையையுடைய இறைவர், என் துன்பந் தணியும்படி, என்னைத் தழுவுவரோ, எ - று.

**22.** சின்னஞ் சிறியேன்றன் சிந்தைகவர்ந் தாரிறைவர்
தன்னந் தனியே தவிப்பேனோ பைங்கிளியே.

போ - ரை. இறைவர், மிகவும் சிறியேனாகிய எனது மனத்தைக் கவர்ந்துகொண்டார், இனி நான் மிகத்தனியனாயிருந்து தவிப்பேனோ.

**23.** சிந்தைமருவித் தெளிவித் தென்னையாள
வந்தகுருநாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே.

போ - ரை. என்மனத்திற் பொருந்தியிருந்து, அந்த மனத்தைத் தெளியப்படுத்தி, என்னை ஆளவந்த குருநாதனது கிருபை இன்னும் ஒருகால் கிடைக்குமோ, எ - று.

**24.** சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை
யல்லும் பகலு மணைவேனோ பைங்கிளியே.

போ - ரை. பேச்சற்று நின்ற ஆநந்தவடிவத்தையுடைய பெருமானை அல்லும் பகலும் இடையறாமல் தழுவப் பெறுவேனோ, எ - று.

**25.** தற்போதத் தாலே தலைகீழ தாகவைய
னற்போத வின்புவர நாட்செலுமோ பைங்கிளியே.

போ - ளை. தற்போதத்தினால் நான் தலைகீழாய் நடத்தலால், இறைவனது நல்ல ஞானாநந்த மூண்டாக நாள்கள் செல்லுமோ, எ - று.

**26.** தன்னையறியுந் தருணந் தனிற் றலைவ
ரென்னையணை யாதவண்ண மெங்கொளித்தார் பைங்[கிளியே.

போ - ளை. தன்னை நான் அறியுஞ் சமயத்தில், இறைவர், என்னைத் தழுவாத வண்ணம் எவ்விடத்தில் ஒளித்துக்கொண்டார், எ - று.

**27.** தாங்கரியவாசையெலாந் தந்தெனை விட்டின்னருளாம், பாங்கியைச்சேர்ந்தாரிறைக்குப் பண்போசொல் பைங்கிளியே.

போ - ளை. தாங்கக் கூடாத ஆசையை யெல்லாம் கொடுத்து, என்னைவிட்டு, தன் இனிய அருளாகிய தோழியை யணைந்தார். இப்படி செய்வது இவரது இறைமைக் குணமாமோ, சொல்வாய், எ - று.

அருள் - அருட்சத்தி.

**28.** தாவியதோர் மர்க்கடமாந் தன்மைவிட்டே யண்ணலிடத்
தோவியம்போ னிற்கினெனை யுள்குவரோ பைங்கிளியே.

போ - ளை. தாவு மியற்கையுள்ள குரங்குக் குணம் போன்ற குணத்தைவிட்டு, இறைவரிடத்துச் சித்திரம்போல அசைவற நிற்பின், என்னை நினைப்பரோ, எ - று.

**29.** தீராக் கருவழக்கைத் தீர்வைவிட்டங் கென்னையினிப்
பாரேறா தாண்டானைப் பற்றுவனோ பைங்கிளியே.

போ - ளை. ஒழியாத பிறவி வழக்கைத் தீர்த்து, என்னை, இனி அப்பிறவி வழக்கைக் கொண்டு பூமியிற் பிரவேசியாத வண்ணம் என்னை யாண்டருளினவனைச் சென்று பற்றுவேனோ, எ - று.

**30.** தூங்கிவிழித் தென்னபலன் றூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டாலன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே.

போ - ளை. உறங்கி விழித்தலால் என்னபயன், ஒரு பயனுமில்லை ஆதலால், உறங்கா துறங்கி நிற்கும் நெறியைக் கண்டாலல்லவோ பயன் அடைவேன், எ - று.

தூங்காமற் றூங்குதலாவது-நனவிற்சுழுத்தி நிலையையடைந்திருத்தல். "தூங்காமற்றூங்கிச் சுகம்பெறுவதெக்காலம்," என்றார் பட்டணத்தடிகளும்.

**31.** தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
வெல்லையிலா வின்பமய மெய்துவனோ பைங்கிளியே.

போ - ரை. அநாதியாய்த் தொடர்ந்து வருகிற மனோதுக்கங்களை நீக்கி, இடையறாத எல்லையற்ற சுகரூபத்தையடையப் பெறுவேனோ, எ-று.

**32.** நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச்சேர்ந் தின் பணைந்தார்
வன்னெஞ்சத் தாலே நான்வாழ்விழந்தேன் பைங்கிளியே.

போ - ரை. நன்மனத்தை யுடைய அன்பர்களெல்லாம், இறைவரை யணைந்து சுகம்பெற்றார்கள். நானோ வன்மனத்தாலே, பேரானந்த வாழ்க்கையை யிழந்து விட்டேன், எ - று.

**33.** நானே கருதின்வர நாடார் சும்மாவிருந்தாற்
றானே யணைவரவர் தன்மையென்னே பைங்கிளியே.

போ - ரை. நானே நினைத்தால், வரவொருப்படார், சும்மா இருந்தால் தானே வந்து என்னை யணைவர், ஆதலால், அவ்விறைவரது குணமிருந்தவாறென்னை, எ - று.

**34.** நீர்க்குமிழி போன்றவுட னிற்கையிலே சாசுவதஞ்
சேர்க்க வறியாமற் றிகைப்பேனோ பைங்கிளியே.

போ - ரை. நிலையாமையால் நீர்க்குமிழிபோன்ற வுடம்பானது நிற்கும் பொழுதே, நிலையுடைப் பொருளாகிய மோக்ஷ சாம்ராஜ்யத்தைச் சேகரிக்க அறியாமல், திகைப்பேனோ, எ - று.

**35.** நெஞ்சகத்தில் வாழ்வார் நினைக்கின்வே றென்றணையார்
வஞ்சகத்தா ரல்லரவர் மார்க்கமென்னே பைங்கிளியே.

போ - ரை. என் மனத்தின்கண்ணே வாழ்கின்றவர், யான் நினைத்தால், வேறென்று என்னைத் தழுவார், ஆனால், அவர் வஞ்சகத்தை யுடைய ரல்லர், அவரது கொள்கை என்னையோ, எ - று.

**36.** பன்முத்தி ரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ்
சின்முத்திரையரசைச் சேர்வேனோ பைங்கிளியே.

போ - ரை. பலமுத்திரைகளையுடைய சமயங்கள் யாவும் பாழாம்படி, கல்லாலின் அடியிலெழுந் தருளியிருக்கிற சின் முத்திரையையுடைய இறைவனைச் சேர்வேனோ, எ - று.

முத்திரை - குறி.

**37.** பச்சைகண்ட நாட்டிற் பறக்குமுனைப் போற்பறந்தேன்
இச்சையெல்லா மண்ணாற் கியம்பிவா பைங்கிளியே.

போ - ரை. பச்சையாகிய சோலைகாணப்படுகின்ற நாட்டில் பறந்து செல்கின்ற உன்னைப்போல இறைவரையடைய விரைகின்றேன், ஆதலால் என் விருப்பத்தையெல்லாம் இறைவருக்குச்சொல்லித் திரும்பிவருவாயாக.

**38.** பாசபந்தஞ் செய்ததுன்பம் பாராம லெம்மிறைவ
ராசைதந்த துன்பமதற் காற்றேனன் பைங்கிளியே.

**பொ - ரை.** பாசப்பிணிப்பு எனக்குண்டாக்கின துன்பத்தை நோக்காமல், எம்மிறைவர்மேல் வைத்த விருப்பமானது எனக்கு உண்டாக்கின துன்பத்துக்குச் சகியேன் யான், எ - று.

**39.** பாராசை யற்றிரையைப் பற்றறநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே.

**பொ - ரை.** மண்ணாசை நீங்கி, இறைவனைப் பற்றற நான் பற்றிநின்ற வரலாற்றை யெல்லாம் சொல்லிவா, எ - று.

**40.** பேதைப் பருவத்தே பின்றொடர்ந்தென் பக்குவமுஞ்
சோதித்தவண்ணல் வந்துதோய்வாரோ பைங்கிளியே.

**பொ - ரை.** பேதைப் பருவத்திற்றானே பின்தொடர்ந்து, என்பக்குவத்தையும் சோதனைசெய்த இறைவர் வந்து என்னைக்கூடுவரோ, எ - று.

**41.** பைம்பயிரை நாடுமுன்போற் பார்பூத்த பைங்கொடிசேர்
செம்பயிரை நாடித் திகைத்தேனன் பைங்கிளியே.

**பொ - ரை.** பசுமையாகிய பயிரை நாடுகின்ற வுன்னைப்போல, உலகங்களையெல்லாம் ஈன்ற பசியகொடிபோன்ற உமாதேவி சேரப்பெற்ற செம்பயிராகிய சிவபெருமானை நாடி நான் திகைத்தேன், எ - று.

**42.** பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ வெம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே.

**பொ - ரை.** பொய்க் கூடாகிய சரீரத்தைச் சுமந்து புலம்புவேனோ, எம்மிறைவரது உண்மை நிலையாகிய சந்நிதியிற் போய்ச்சொல்லிவா, எ-று.

உண்மைநிலை - அழியாநிலையாகிய சிவபதம்.

**43.** பொய்ப்பணிவேண்டேனைப் பொருட்படுத்தியண்ணலென்
பான், மெய்ப்பணியுந்தத்தொருகான் மேவுவனோ பைங்கிளியே.

**பொ - ரை.** பொய்த் தொண்டை விரும்பாத என்னை ஒரு பொருளாக்கி, இறைவர், தமது மெய்த்தொண்டையும் எனக்குக் கிருபைசெய்து இன்னும் ஒருகால் என்னைக் கூடுவரோ, எ - று.

**44.** மண்ணுறங்கு விண்ணுறங்கு மற்றுளவெ லாமுறங்குங்
கண்ணுறங்கே னெம்மிறைவர் காதலாற் பைங்கிளியே.

**பொ - ரை.** மண்ணுலகம் நித்திரைசெய்யும், விண்ணுலகம் நித்திரை செய்யும், மற்றுமுள்ள உலகங்களும் அவற்றின் கண்ணுள்ள பொருள்

களும் ஆகிய எல்லாரும் நித்திரைசெய்யும், எம்மிறைவர் மீதுவைத்த விருப்பத்தால் நான் ஒருவனுமே கண்ணுறங்காதிருக்கிறேன், எ - று.

**45.** மட்டுப்படாத மயக்கமெல்லாந் தீரவென்னை
வெட்டவெளி வீட்டி லண்ணன் மேவுவனோ பைங்கிளியே.

பொ - ரை. அளவுபடாத மயக்கம் நீங்கும்படி, இறைவர் வெறுவெளியாகிய வீட்டில் என்னைக் கூடுவரோ, எ - று.

**46.** மாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலை வனத்தில்விட்ட பாவமென்னே பைங்கிளியே.

பொ - ரை. ஆசையை விருத்திசெய்து, அவ்வாசைக்கு இருப்பிடமாகிய என்னை வளர்த்து, இறைவர், பலசமய நெறியாகிய பாலை வனத்தில் விட்டதற்குக் காரணமாக நான் செய்த பாவமென்னையோ, எ - று.

**47.** மெய்யினோய் மாற்றவுழ்த மெத்தவுண்டெம் மண்ணறந்த
மையனோய் தீர்க்க மருந்துமுண்டோ பைங்கிளியே.

பொ - ரை. உடம்பின்கண் உண்டாகிற பிணியை நீக்குதற்குறிய மருந்துகள் அநேகமுண்டு, எம்மிறைவர் உண்டாக்கிய ஆசைப்பிணியை நீக்குதற்குரிய மருந்தும் உளதோ, எ - று.

**48.** மேவுபஞ்ச வண்ணமுற்றாய் வீண்சிறையா லல்லலுற்றாய்
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே.

பொ - ரை. பொருந்திய ஐவகை நிறங்களையடைந்தாய், ஆயினும் எங்களால்கூட்டில் அடைக்கப்பட்டிருக்கிற பயனற்ற சிறையினால் துன்பமடைந்தாய், இனி அச்சிறையினின்றும் வெளியில் விடுகின்றேன், உன் விருப்பப்படி சுகமாகப்போய்ப் பாவியாகிய எனது இழிவாகிய நிலையை இறைவருக்குச் சொல்லிவா, எ - று.

**49.** வாய்திறவா வண்ணமெனை வைத்தாண்டார்க் கென்றுயரை
நீதிறவாச் சொல்லி னிசமாங்காண் பைங்கிளியே.

பொ - ரை. வாய்திறவாத வகையாக என்னை மோனநிலையிலிருத்தி ஆண்ட இறைவருக்கு, என் துக்கத்தை, நீ வெளிப்படையாகச் சொன்னால், அவருக்கு நிசமாகும், எ - று.

**50.** வாட்டப் படாத மவுனவின்பங் கையாலே
காட்டிக் கொடுத்தாரைக் காண்பேனோ பைங்கிளியே.

பொ - ரை. வாட்ட மடையாமைக்குக் காரணமாகிய மௌனசுகத்தை, கையற் காட்டிக்கொடுத்தவனை, நான் இன்னுமொருகால் காணப் பெறுவேனோ, எ - று.

**51.** வாராவரவாக வந்தருளுமோ னருக்கென்
பேராசை யெல்லாம் போய்ப்பேசிவா பைங்கிளியே.

**பொ - ளை.** வரப்படாத வரவாக வந்தருளின மோனகுருவுக்கு, எனது பேரவாமுழுதும் நீ சென்று சொல்லிவா, எ - று.

**52.** விண்ணவர்தம்பாலமுதம்வேப்பங்காயாகவென்பாற் [யே.
பண்ணியதெம்மண்ணன் மயல்பார்த்தாயோ பைங்கிளி

பொ - ளை. தேவர்களிடத்துள்ள அமுதமானது எனக்கு வேப்பங் காய்போலக் கைக்கும்படிச் செய்தது எம்மிறைவர் மேல்வைத்த விருப்ப மாம், இதனை நீ பார்த்தாயோ, எ - று.

**53.** விண்ணுள்வளி யடங்கிவேறற்ற தென்னவருட்
கண்ணுளடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளியே.

**பொ - ளை.** ஆகாயத்தின்கண் வாயு அடங்கி வேற்றுமையற்று நின் றாற்போல, நான் இறைவரது அருட்கண்ணில் அடங்கி வேற்றுமையற்று நிற்கவுங் காண்பேனோ, எ - று.

**54.** விண்ணார் நிலவுதவழ் மேடையிலெல் லாருமுற [ளியே.
வண்ணான வீட்டிலென்னை வைத்ததென்னோ பைங்கி

**பொ - ளை.** ஆகாயத்தை யளாவிய சந்திரிகை தவழ்கின்ற மேடை யின் மீது அன்பர் எல்லாரும் இருக்க, என்னொருவனை மாத்திரம், மண் ணாகிய வீட்டில் வைத்ததற்குக் காரணம் யாதோ, எ - று.

நிலவுதவழ் மேடையென்றது, சந்திரமண்டலத்தின் ஒளியாகிய ஆயிரத்தெட்டிதழ்களோடு கூடியகமலத்தை. இது ஆறுதாரங்களுக்கும் மேற்பட்டிருப்பது. இதனை வடநூலார் ஸஹஸ்ரார கமலம் என்பர்.

**55.** உள்ளத்தினுள்ளே யொளித்திருந்தென் கள்ளமெல்லாம்
வள்ளலறிந்தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே.

**பொ-ளை.** மனத்தின்கண் மறைந்திருந்து என் கள்ளத்தையெல்லாம் இறைவர் அறிந்தால், எனக்குப் பேசுதற்கு ஒருவாய் என்பதும் உளதோ.

**56.** ஆகத்தைநீங்கு முன்னேயாவித் துணைவரைநான்
மோகத்தின் வண்ணந்தழுவுவனோ பைங்கிளியே.

**பொ - ளை.** இந்தவுடம்பை விட்டு நீங்குவதற்கு முன்னே, என் னுயிர்த்துணைவரை, நான் என் ஆசைப் பெருக்கத்தின்படி யணையப் பெறுவேனோ, எ - று.

**57.** தானேசு பாவந்தலைப்பட நின்றான்ஞான
வானனவரும் வருவாரோ பைங்கிளியே.

போ - ளை. தான் என்னுஞ் சுபாவமே தலைப்பட்டு நின்றால், ஞானாகாசமே யுருவாக வுடைய இறைவரும் என்னிடத்துக்கு எழுந் தருளுவரோ, எ - று.

**58.** கள்ளத்தலைவ ரவர்கைகாட்டிப் பேசாம
லுள்ளத்தில் வந்தவுபாயமென்னே பைங்கிளியே.

போ - ளை. கள்ள நாயகராகிய அவர், கைகாட்டிப் பேசாமலே, என் மனத்தின்கண் எழுந்தருளின வுபாயம் என்னையோ, எ - று.

வெளிப்படையாய் வார்த்தைசொல்லாமல் கையினால் ஜாடைசெய்த மையாலும் அந்த ஜாடைக்கிணங்கித் தழுவச்சென்றால் அகப்படாமல் விரைந்துவந்து மனத்திலொளித்தமையாலும் இறைவரைக் கள்ளத் தலைவர் என்றார்.

---

## எந்நாட்கண்ணி.

### தெய்வவணக்கம்.

**1.** நீர்பூத்த வேணிநிலவெறிப்ப மன்றாடுங்
கார்பூத்த கண்டனையான் காணுநா ளெந்நாளோ.

போ - ளை. கங்கை தங்கிய சடாபாரத்தில் சந்திரிகை வீசும்படி, அம்பலத்தில் நிருத்தம் செய்கின்ற கருங்கண்டனை, யான் கண்டுகளிக்கும் நாள் எந்தநாளோ, அறியேன், எ - று.

**2.** பொன்னுரு மன்றுண்மணிப் பூவைவிழி வண்டுசுற்றி
மென்னாரமுதி னலமிச்சிப்ப தெந்நாளோ.

போ - ளை. பொற்சபையின்கண் நீலநிறம் பொருந்திய பூவைபோல் வாளாகிய வுமாதேவியின் கண்களாகிய வண்டுகள் சுற்றி மொய்க்கப் பெற்ற என் அரிய அமிர்தம் போன்ற சிவபெருமானது சுகத்தை, யான் விரும்புவது எந்தநாளோ, எ - று.

பூவை - நாகணவாய்ப்புள், (மயினா) இது நிறப்பண்பினாலும் மொழியி னாலும் உவமையாயிற்று.

**3.** நீக்கிமலக் கட்டறுத்துநேரே வெளியிலெம்மைத்
தூக்கிவைக்குத் தாளைத்தொழுதிடுநா ளெந்நாளோ.

போ - ளை. மும்மலக் கட்டை நீக்கியறுத்து, வெள்ளிடையில் நேராக எங்களைத் தூக்கிவைக்கின்ற திருவடிகளை வணங்கும் நாள் எந்த நாளோ, எ - று.

**4.** கருமுகங் காட்டாமலென்றுங் கர்ப்பூரம்வீசுந்
திருமுகமே நோக்கித் திருக்கறுப்ப தெந்நாளோ.

பொ - ரை. பிறவியானது முகங்காட்டா தொழியும்படி என்றும் கர்ப்பூரமணம் வீசுகின்ற இறைவரது திருமுகத்தையே நோக்கி, என்மனோ விகாரங்களையெல்லாம் சேதிப்பது எந்நாளோ, எ - று.

**5.** வெஞ்சேலெனும் விழியார்வேட்கை நஞ்சுக்கஞ்சினரை
யஞ்சேலெனுங் கைக்கபயமென்ப தெந்நாளோ.

பொ - ரை. விருப்பத்தைத்தருகிற சேல் மீன் என்று சொல்லத் தகுந்த கண்களையுடைய மாதரது ஆசையாகிய நஞ்சத்துக்கு அஞ்சினவர்களை, அஞ்சவேண்டாம் என்றமைக்குங்கையினுக்கு, நான் அபயம் என்று சொல்லப் பெறுவது எந்நாளோ, எ - று.

**6.** ஆறுசமயத்து மதுவதுவாய் நின்றிலங்கும்
வீறுபரை திருத்தாண் மேவுநா ளெந்நாளோ.

பொ - ரை. ஆறுசமயங்களுள்ளும், அவ்வச்சமய தெய்வங்களாய் நின்று விளங்குகின்ற, மேலாகிய பராசத்தியினது திருவடியைப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**7.** பச்சை நிறமாய்ச் சிவந்தபாகங் கலந்துலகை
யிச்சையுட னீன்றுளை யாங்காண்ப தெந்நாளோ.

பொ - ரை. பச்சை நிறமுள்ளவளாய், சிவபெருமானது சிவந்த பாகம்கலந்து, உலகங்களை இச்சையோடு பெற்றவுமாதேவியை, நாம் காண்பது எந்நாளோ, எ - று.

**8.** ஆதியந்தங் காட்டாத கண்டிதமாய் நின்றுணர்த்தும்
போதவடிவா மடியைப் போற்றுநா ளெந்நாளோ.

பொ - ரை. முதல்முடிவுகளைக் காட்டாமல், அகண்டாகாரமாய் நின்று அறிவுறுத்துகின்ற ஞானரூபமாகிய பராசத்தியின் திருவடியை வணங்குவது எந்நாளோ, எ - று.

**9.** கங்கைநிலவு சடைக்காட்டானைத் தந்தையெனும் [ளோ.
புங்கவெண் கோட்டானை பதம் புந்திவைப்ப தெந்நா

பொ - ரை. கங்கை நிலைபெற்ற சடாடவியையுடைய சிவபெருமானை, தந்தையென்றழைக்கிற உயர்வாகிய வெண்கொம்பினையுடைய யானைமுகத்தோனாகிய விநாயகக் கடவுளின் திருவடியை எமதுமனத்தில் ஊன்றுவது எந்நாளோ, எ - று.

**10.** அஞ்சுமுகங் காட்டாமலாறு முகங்காட்டவந்த [ளோ.
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்நா

பொ - ரை. நான் அச்சம் தோன்றுகின்ற முகத்தைக் காட்டாமல், தமது ஆறுமுகங்களை யெமக்குக் காட்டவந்த பிள்ளையாருடைய, (அன்

பருக்கு) செவ்விய அடைக்கல ஸ்தானமாகிய திருவடித்தாமரையை எமதுமனத்தில் வைப்பது எந்நாளோ.

**11.** தந்தையிரு தாடுணித்துத் தம்பிரான்றாள் சேர்ந்த
வெந்தையிரு தாளிணைக்கே யின்புறுவ தெந்நாளோ.

**போ - ரை.** தந்தையின் இரண்டு கால்களையும் வெட்டி, இறைவனது திருவடியையடைந்த, எமது தந்தையாகிய சண்டேசுர நாயனாரது திருவடியிணையை யடைந்து இன்பமுறுவது எந்நாளோ, எ - று.

பிராமணகுலதிலகராகிய சண்டேசுரநாயனார் ஓர்நாள் பசுக்களை மேய்க்க ஓட்டிக்கொண்டுபோகும் இடையன் தன்னைமுட்டிய ஓர்பசுவைத் தடியாலடிக்கக்கண்டு, மனம்பொறாது அப்பசுமந்தைக்குரிய அந்தணர்சம்மதம்பெற்று அன்றுமுதல் தாமே அப்பசுக்களை மேய்த்துவந்தனர். அதுமுதல் பசுக்களெல்லாம் பெருகி அதிகமாகப் பால்சொரிய, நாயனார் மனங்களித்துத்தாம்பசுமேய்த்துவந்த மண்ணியாற்றங்கரையில் ஆத்திமரத்தின் கீழ் மணலினால் சிவலிங்கப் பெருமானைப் பிரதிஷ்டை செய்து பசுவின் பாலால் திருமஞ்சனஞ்செய்து துதித்துவந்தனர். இதை உணர்ந்த அவர் தந்தையார் நாயனார் நிலையறியாது, சிறுபிள்ளைத்தன்மையால் பாலைக்கறந்து மணலில் ஊற்றி விடுகிறார் என்றுநினைத்துத்திருமஞ்சனப்பாற்குடங்களைக் காலாலிடறிச் சிந்தினார். அதைக்கண்ட நாயனார் மனம்பொறாமல், அருகிலிருந்த கோலால் அவர் காலிலெறிய, அதுவே மழுவாய்த் தந்தையின் இரண்டுகால்களையுந்தறிக்க, மண்மேல் அலறிவிழுந்தனர். விழுந்ததுகண்டும், நாயனார் மனக்கலக்கமின்றிச் சிவார்ச்சனை புரிந்துகொண்டிருக்க பரமசிவன் ரிஷபவாகனத்தின்மேல் பார்வதி சமேதரா யெழுந்தருளிக் காட்சிகொடுத்தருள, நாயனாரும் சிவபதமடைந்தனர்.

### தருமரபின்வணக்கம்.

**1.** துய்யகர மரலாற் சொல்லாமற் சொன்னவுண்மை
யையனைக்கல்லா லரசையாமணைவ தெந்நாளோ.

**போ-ரை.** பரிசுத்தமாகிய கைத்தாமரையால், சொல்லாமற்சொன்னவுண்மை நிலையையுடைய ஐயனை, கல்லாலினிழலில் எழுந்தருளியிருந்த அரசனை, யாம் அடையப் பெறுவது எந்நாளோ, எ - று.

**2.** சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல
நந்தியடிக்கீழ்க்குடியாய் நாமணைவ தெந்நாளோ.

**போ - ரை.** மனத்துக் கெட்டாத ஞானாநந்தத்தைக் காட்டவல்லனாகிய நந்தியின் திருவடியின் கீழ்க்குடியாய் நாம் அடைவது எந்நாளோ.

3. எந்தைசனற் குமரனாதி யெமையாட் கொள்வான்
வந்ததவத்தி னரைவாழ்த்துநா ளெந்நாளோ.

போ - ளை. எந்தையாகிய சனற்குமாரர் முதலாக, எம்மை ஆட்கொள்ளும்பொருட்டு வந்த தபோநிதிகளைத் துதிப்பது எந்தநாளோ, எ-று.

ஆதி என்றமையால் அவர் மாணாக்கர் சத்தியஞானதரிசநிகளும், அவர் மாணாக்கர் பரஞ்சோதிமுனிவரும் அமையும்.

4. பொய்கண்டார் காணாப்புனித யெனுமத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ.

போ - ளை. பொய்க்காட்சியார் காணாத பரிசுத்த நிலையென்கிற அத்துவித மார்க்கத்தையுடைய, மெய்கண்டதேவரது அருளைப் பொருந்துவது எந்தநாளோ, எ - று.

5. பாதிவிருத் தத்தாலிப்பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ.

போ-ளை. சிவஞானசித்தியாரின் ஓர்விருத்தத்தின் பாதியினாலேயே இந்த வுலகம் பயனற்றதாய்த் தோன்றும்படி, உண்மைஞானத்தைச் சாதித்து நின்ற சகலாகம பண்டிதரென்னும் காரணப் பெயர்பூண்ட அருணந்தி சிவாசாரியரது திருவடியை வணங்குவது எந்தநாளோ, எ - று.

"பாரிலுள்ள நூலெல்லாம் பார்ப்பானேன் சித்தியிலே, ஓர் விருத்தப் பாதிபோதும்" என்னும் மேலோர் வாக்கானுமுணர்க.

6. சிற்றம்பலமன்னுஞ் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநா ளெந்நாளோ.

போ - ளை. சிற்றம்பலத்தில் நிலைபெற்ற ஞானசொரூபராகிய தில்லைநகர்க்கொற்றங்குடி முதல்வர்க்கு ஆசாரியராகிய மறைஞானசம்பந்த சிவாசாரியரைப் புகழ்வது எந்தநாளோ, எ - று.

7. குறைவிலருண் ஞானமுதல் கொற்றங் குடியடிகள்
நறைமலர்த் தாட்கன்புபெற்றுநா மிருப்ப தெந்நாளோ.

போ - ளை. குறைவற்ற அருள்ஞானங்களுக்கு மூலமாகிய கொற்றங்குடியடிகளது தேன்மணங்கட் கிடமாகிய தாமரைமலர்போலுந் திருவடிகட் கன்புசெய்தலைப்பெற்று நாமிருப்பது எந்தநாளோ, எ - று.

கொற்றங் குடியடிகள் உமாபதி சிவாசாரியர். துய்ய என்பது முதல் குறைவிலருள் என்பதீறாகவுள்ள இவ்வேழுபாட்டானும் முறையே, ஸ்ரீ கண்டபரமேச்சுரரையும், நந்திகேச்சுரரையும், சநற்குமாரரையும், சத்திய

ஞாநதரிசநிகளையும், பரஞ்சோதி மாமுநிவரையும், மெய்கண்ட தேவரையும், அருணந்தி சிவாசாரியரையும், மறைஞாநசம்பந்த சிவாசாரியரையும், கொற்றங்குடி உமாபதிசிவாசாரியரையும் துதித்தார். மூன்ரும் பாட்டில், சநற்குமாரரும் ஆதி என்றதனல் சத்தியஞாநதரிசநிகளும், பரஞ்சோதி மாமுநிவரும் அடங்கியிருத்தல் காண்க.

**8.** நாளவங்கள் போகாம னன்னெறியைக் காட்டியெமை
யாளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ.

**போ - ரை.** எம்முடைய வாணுட்கள் வீணுட்களாய்க் கழியாமல் நன்னெறியைக்காட்டி, எங்களை ஆட்கொண்டருளவந்த திருக்கோலங்களுக்கு அன்புவைப்பது எந்தநாளோ, எ - று.

திருக்கோலங்கள் என்றது மற்றை யடியாரை.

**9.** என்னறிவை யுள்ளடக்கி யென்போல் வருமவுனி
தன்னறிவுக் குள்ளேநான் சாருநா ளெந்நாளோ.

**போ - ரை.** என்னறிவை விடயங்களிற் செல்லாது எனக்குள்ளடக்கிக்கொண்டு, என்போல மாநுடவுருக்கொண்டுவந்த மௌநதேசிகனது அறிவுக்குள்ளே நான் பொருந்துவது எந்தநாளோ, எ - று.

**10.** ஆறுவொன்றை நாடினதற் காறுமுண்டா மென்றெமக்குக்
கூறு மவுனியருள் கூடுநா ளெந்நாளோ.

**போ - ரை.** ஆறுசமயங்களுள் ஒன்றை நாடுமிடத்து, அதற்கு வழியுமுண்டாகும் என்று எமக்குச் சொல்லியருளிய மௌநதேசிகனது அருள் கிடைப்பது எந்தநாளோ, எ - று.

எந்தச்சமயமாயினும் அதற்கும் ஒருவழியுண்டென்பது கருத்து.

**11.** நில்லாமனின் றருளை நேரேபா ரென்றவொரு
சொல்லான் மவுனியரு டோற்றுநா ளெந்நாளோ.

**போ - ரை.** நில்லாமல் நின்று, திருவருளை நேராக நோக்கக் கடவையென்ற ஒரு மொழியினுல், மௌநகுருவினது கிருபைவெளிப்படுவது எந்தநாளோ, எ - று.

நில்லாமல் நிற்றலாவது - தானென்று நில்லாமல் திருவருளை முன்னிட்டு நிற்றல்.

**12.** வைதிகமாஞ் சைவ மவுனிமவு னத்தளித்த
மெய்திகழ்ந்தென் னல்லல் விடியுநா ளெந்நாளோ.

பொ - ள். வைதிகமாகிய சைவநெறியையுடைய மௌநகுரு மௌநநிலையினாலுணர்த்திய உண்மைப் பொருள்விளங்கி, என் துன்பங்கள் தொலையும் நாள் எந்நாளோ, எ - று.

**13.** வாக்கு மனமற்ற மவுனிமவு னத்தருளே
தாக்கவுமென் னல்லலெல்லாந் தட்டழிவ தெந்நாளோ.

பொ - ள். சொல்லும் மனமும் அற்றொழிந்த மௌநகுருவினது மௌநநிலையினால், திருவருள்வந்து தாக்கினவளவில், என் துன்பங்கள் முழுதும் நிலைமாறுவது எந்நாளோ, எ - று.

---

அடியார்வணக்கம்.

**1.** வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் றிருஞான
சம்பந் தனையருளாற் சாருநா ளெந்நாளோ.

பொ - ள். வெவ்விய பிறவிக்கட்டை யொழித்து உலகத்தைக் காப்பாற்றுகின்ற இறைவரது திவ்யஞானத்தின்கண் சம்பந்தத்தையுடைமையால் வந்த திருஞான சம்பந்தன் என்னும் திருநாமத்தையுடையவனை, திருவருள் துணையாகக்கொண்டு, அடையும் நாள் எந்நாளோ, எ - று.

**2.** ஏரின் சிவபோக மிங்கிவற்கே யென்னவுழ
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நாளோ.

பொ - ள். அழகிய சிவபோகம் இவ்விடத்தில் இவனுக்கே யுரியதென்றுசொல்ல, உழவாரங்கொண்ட செந்தாமரை மலர்போன்ற திருக்கரங்களையுடைய திருநாவுக்கரசுசுவாமிகளின் திருவடியின்கண் அன்பு வைப்பது எந்நாளோ, எ - று.

உழவாரம் -புல்முதலியவற்றைக்களையுங்கருவி. இவர்சிவாலயங்கள் தோறுஞ்சென்று அவ்விடங்களில் அடர்ந்திருக்கும் புல் முதலிய வற்றைக் களையும்பொருட்டுத் தமது திருக்கரத்தில் இக்கருவியை யுடையராயிருந்தானால், இவரை உழவாரங் கொள்செங்கையர் என்றார்.

**3.** பித்தரிறை யென்றறிந்து பேதைபாற் றூதனுப்பு
வித்த தமிழ்ச் சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ.

பொ - ள். இறைவர் பித்தரென்றறிந்து, பறவையாகிய ஒரு பெண்ணினிடத்தில் தூதாக அனுப்பின, தமிழ்வல்லராகிய சுந்தரமூர்த்திகளின் உண்மை நிலையைப் புகழ்வது எந்நாளோ, எ - று.

**4.** போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூ ராயனன்பைவாஞ் சிப்ப தெந்நாளோ.

போ - ரை. நாட்டார் யாவரும் போதலூர் இன்னதென்றுணரும்படி, புத்தரை வாதில் ஜயித்த திருவாதவூரின்கண் அவதரித்த, ஐயனாகிய மாணிக்கவாசக சுவாமிகளின் அன்பின் நிலையை இச்சிப்பது எந்நாளோ.

போதலூர் - அறிவாகியவூர்.

**5.** ஒட்டுடன்பற் றின்றி யுலகைத் துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ.

போ - ரை. ஒட்டுப்பற்றுக்கள் இல்லாமல் உலகவின்பத்தை விட்டுத் துறந்த, பேரின்பச் செல்வத்தையுடைய, பட்டணத்தார், பத்திரகிரியார் இவர்களுடைய குணத்தையறிவது எந்நாளோ, எ - று.

**6.** கண்டதுபொய் யென்றகண்டா காரசிவ மெய்யெனவே
விண்டசிவ வாக்கியர்தாள் மேவுநா ளெந்நாளோ.

போ - ரை. கண்டது பொய்யென்றும், அகண்டரூபமாகிய சிவம் மெய்யென்றும் சொல்லியருளிய சிவவாக்கியரது திருவடியைப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

கண்டது - காணப்படுவதாகிய பிரபஞ்சம்.

**7.** சக்கர வர்த்தி தவராச யோகியெனு
மிக்கதிரு மூலனருண் மேவுநா ளெந்நாளோ.

போ - ரை. தவத்தையுடைய ராஜயோகிகளுள் சக்கரவர்த்தி யென்று புகழத் தகுந்த, மேலாகிய திருமூலரது அருளைப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**8.** கந்தரனு பூதிபெற்றுக் கந்தரனு பூதிசொன்ன
எந்தையரு ணாடியிருக்குநா ளெந்நாளோ.

போ - ரை. கந்தரது பிரசாதத்தைப்பெற்று, கந்தரநுபூதி யென்னும் பிரபந்தம் செய்தருளின, எமது தந்தையாகிய அருணகிரிநாதரது அருளை நாடியிருக்கும் நாள் எந்நாளோ, எ - று.

**9.** எண்ணரிய சித்தரிமை யோர் முதலான
பண்ணவர்கள் பத்தருள் பாலிப்ப தெந்நாளோ.

போ - ரை. அளவிடுதற்கரிதாகிய சித்தர், தேவர்கள் முதலான மேலோர்கள், பத்தர்கள் ஆகிய எல்லாரும் என்மீது அருள்பாலிப்பது எந்நாளோ, எ - று.

பாலித்தல் - வழங்கல்.

## யாக்கையைப்பழித்தல்.

**1.** சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறுமுடற் [ளோ.
புக்குழலும் வாஞ்சையினிப் போதுமென்ப தெந்நா

**பொ - ரை.** சுக்கிலமும், பலவகையாகிய நீர்களும், பொழிகின்ற மலமும் நாறுகின்ற இந்தச் சரீரத்திற்புகுந்து உழலவேண்டுமென்கிற ஆசையானது இனியமையும் என்று நான்சொல்லுவது எந்தநாளோ, எ-று.

சுக்கிலம் - விந்து. நீர் - உதிரநீர் முதலியன.

**2.** நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய்
பார்க்கு மிடத்திதன்மேற பற்றறுவ தெந்நாளோ.

**பொ - ரை.** உண்மையைப் பார்க்குமிடத்தில், நீர்க்குமிழியானது பூண்கட்டப்பட்டு நின்றாலும், இச்சரீரம் நில்லாது, ஆதலால், இதன் மேலுள்ள பற்றொழிவது எந்தநாளோ, எ - று.

நீர்க்குமிழியினும் நிலையற்றது இந்தச் சரீரமென்பது கருத்து.

**3.** காக்கைநரி செந்நாய்கழு கொருநாள் கூடியுண்டு
தேக்குவிருந்தா முடலைச் சீயென்ப தெந்நாளோ.

**பொ - ரை.** காக்கை, நரி, செந்நாய், கழுகு ஆகிய இவைகள் ஒரு நாள் சேர்ந்து உண்டு ஏப்பமிடுதற்குறிய விருந்தாகின்ற வுடம்பைச் சீயென்று வெறுத்துரைப்பது எந்தநாளோ, எ - று.

**4.** செங்கிருமி யாதிசெனித்த சென்ம பூமியினை
இங்கெனுட லென்னுமிழுக் கொழிவ தெந்நாளோ.

**பொ - ரை.** செவந்த புழுக்கள் முதலியன பிறந்த ஜந்மபூமியை, இவ்விடத்தில், என்னுடம்பென்னுங் குற்றம் நீங்குவது எந்தநாளோ,எ-று.

**5.** தத்துவர் தொண்ணூற்றறுவர் தாமாய் வாழிந்நாட்டைப்
பித்தனெனென்னும் பிதற்றொழிவ தெந்நாளோ.

**பொ - ரை.** தொண்ணூற்றாறு தத்துவங்கள் என்று சொல்லப்பட்டவர்கள் தாமாகவே கூடிவாழ்ந்திருக்கும் இந்தச் சரீரமாகிய நாட்டைப்பித்தனாகிய நான், நான் என்கிற பிதற்றுதல் ஒழிவது எந்தநாளோ, எ - று.

தத்துவங்கள் தொண்ணூற்றாறாவன :—பூதங்கள் :—பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், ஆக ரு. ஞானேந்திரியங்கள் :—சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, கிராணம், ஆக ரு. தன்மாத்திரைகள் :—சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஆக ரு. கருமேந்திரியங்கள்:—வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம், ஆக ரு. அந்தக்கரணங்கள் :—மனம், புத்தி,

அகங்காரம், சித்தம், ஆக ௪. ஆக ஆத்துமதத்துவம், உ௪. இதற்கு ஆத்துமதத்துவமென்றும், அசுத்ததத்துவமென்றும், போக்கிய காண்டமென்றும் பெயர். வித்தியாதத்துவங்கள்:—காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை, ஆக எ. இதற்கு வித்தியாதத்துவமென்றும், சுத்தாசுத்த தத்துவமென்றும், போககாண்டமென்றும்பெயர். சிவதத்துவங்கள்:— சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம், ஆக ரு. இதற்குச் சிவ தத்துவமென்றும், சுத்த தத்துவமென்றும், பிரேரககாண்டமென்றும் பெயர். இவை ௩௬-ம் உண்ணிலைக்கருவிகள்.

பிருதுவியின்கூறு:—மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை, ஆக ரு. அப்புவின்கூறு:—ஓடுநீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை, ஆக ரு. தேயுவின்கூறு:—ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பு, ஆக ரு. வாயுவின்கூறு:—ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல், ஆக ரு. ஆகாசத்தின்கூறு:—காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், ஆக ரு. ஆகப்பூதகாரியம் உரு. தசவாயுக்களாவன:—பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன், ஆக ௧0. தசநாடிகளாவன:—இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருஷன், குகு, சங்கினி, ஆக ௧0. வசனாதிகளாவன:—வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம், ஆக ரு. வாக்குகளாவன:—சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி, ஆக ௪. குணங்களாவன:— சத்துவம், ரசசு, தமசு, ஆக ௩. அகங்காரங்களாவன:—தைசசாகங்காரம், வைகாரிகாகங்காரம், பௌதாதிகாகங்காரம், ஆக ௩. இவை ௬0 - ம் புறநிலைக்கருவிகள்.

**6.** ஊனென்றி நாதனுணர்த்து மதை விட்டறிவே
னென்ற பாவிதலை நாணுநா ளெந்நாளோ.

**பொ-ள்.** இறைவர் உடம்பின் கண்ணே பொருந்தி அறிவிப்பதை மறந்து விட்டு, நான் அறிவேன் என்று சொன்ன பாவியாகிய நான், தலைகுனிவது எந்தநாளோ, எ-று.

**7.** வேலையிலா வேதன்விதித்த விந்த்ர சாலவுடன்
மாலைவியா பார மயக்கொழிவ தெந்நாளோ.

**பொ-ள்.** வேலையற்ற பிரமன் வகுத்த இந்திரசாலம் போன்ற சரீரத் தொகுதிகளின் தொழில் மயக்கம் ஒழிவது எந்தநாளோ, எ-று.

**8.** ஆழ்ந்து நினைக்கி னரோசிகமா மிவ்வுடலில்
வாழ்ந்து பெறும் பேற்றை மதிக்குநா ளெந்நாளோ.

**பொ-ள்.** ஆழ்ந்து நினைத்தால் அருவருப்பாகிய இந்தச் சரீரத்தில் வாழ்ந்து, பெறற்குரிய மோக்ஷலாபத்தை மதிக்கும் நாள் எந்தநாளோ.

**9.** மும்மலச்சே றுனமுழுக் கும்பிபாகமெனு
மிம்மலக்கா யத்து ளிகழ்ச்சி வைப்ப தெந்நாளோ.

**போ-ரை.** மும்மலமாகிய சேற்றினாலுண்டாகிய, முழுக் கும்பீபாகம் என்று சொல்லப்படுகின்ற, இந்த மலசரீரத்தில் வெறுப்பைவைப்பது எந்த நாளோ, எ - று.

கும்பீபாகம்-ஓர்நரகம்.

**10.** நாற்றமிகக் காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தெந்நாளோ.

**போ-ரை.** துர்க்கந்தம் மிகவும் வீசுகிற ஒன்பது வாயில்களுள்ள பசுமையாகிய சோற்றுத் துருத்தியைச் சுமையென்று சொல்லுவது எந்தநாளோ, எ - று.

**11.** உருவிருப்ப வுள்ளே தானூறு மலக்கேணி
அருவருப்பு வாழ்க்கையைக் கண்டஞ்சுநா ளெந்நாளோ.

**போ-ரை.** உருவம் இருந்தபடியேயிருக்க, உள்ளேதானே சுரக்கின்ற மலக்கேணியோடு கூடிய, அருவருப்பாகிய வாழ்வைக் கண்டு அஞ்சும் நாள் எந்தநாளோ, எ - று.

---

மாதரைப்பழித்தல்.

**1.** மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச ளான்மறைத்துப்
பொய்வீசும் வாயார் புலையொழிவ தெந்நாளோ.

**போ-ரை.** தமது சரீரம் வீசுகிற துர்க்கந்தத்தை யெல்லாம், மிக்கமஞ்சளால்மூடி, பொய்மணக்கின்ற வாயினையுடைய மாதரது நீசசம்பந்தத்தை யொழிவது எந்தநாளோ, எ - று.

**2.** திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டிற்
கண்ணிவைப்போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ.

**போ-ரை.** திடமான மனமென்கிற பறவையானது அகப்படும்படி, கூந்தலாகிய காட்டின்கண், கண்ணிவைப்போராகிய மாதரது மாயத்தைக் கடக்கும் நாள் எந்தநாளோ, எ - று.

கண்ணி - வலை, பூமாலை.

**3.** கண்டுமொழி பேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக்
கொண்டுவிடு மானார் பொய்க்கூத்தொழிவ தெந்நாளோ.

**போ-ரை.** பார்த்து, வார்த்தைசொல்லி, கருத்தை யறிந்துகொண்டு எம்மைக் கைவிலையாகக் கொண்டு விடும் மாதர்களுடைய பொய்க் கூத்தைவிட்டு நீங்குவது எந்தநாளோ, எ - று.

4. காமனைவா வென்றிருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாமமறந் தருளை நண்ணுநா ளெந்நாளோ.

போ - ரை. மன்மதனை வாவென்றழைத்து, இருண்ட கண்களாகிய வலைகளைவீசி யகப்படுத்துகிற மாதரது பெயரை மறந்து திருவருளை யடையும் நாள் எந்தநாளோ, எ - று.

5. கண்களில் வெண்பூளை காப்பக் கருமையிட்ட
பெண்கண் மயறப்பிப் பிழைக்கு நாளெந்நாளோ.

போ - ரை. கண்களிலுள்ள வெள்ளிய பூளைமறையும்படி, அக்கண் களுக்குக் கரிய மை யெழுதின பெண்களுடைய மயக்கத்தினின்றும் தப்பிப்பிழைக்கும் நாள் எந்தநாளோ, எ - று.

6. வீங்கித் தளர்ந்து விழுமுலையார்மேல் வீழ்ந்து
தூங்குமதன் சோம்பைத் துடைக்குநா ளெந்நாளோ.

போ - ரை. பருத்துத் தொங்கு மியற்கையுள்ள ஸ்தநங்களையுடைய மாதர்கள்மேல்விழுந்து தூங்குகின்ற, மன்மத சம்பந்தமாகிய சோம்பலைப் போக்கும் நாள் எந்தநாளோ, எ - று.

7. கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின்மாற்றம்
வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ.

போ - ரை. கச்சணிந்த கொங்கைகளையும், கரும்பின் சுவைபோன்ற இன்சொல்லையும் தம்மிடத்து வைத்திருக்கின்ற மாதரது மயக்கத்தை நீங்குவது எந்தநாளோ, எ - று.

8. பச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமயல்
நச்சென் றறிந்தருளை நண்ணுநா ளெந்நாளோ.

போ - ரை. பசுமையாகிய கொங்கைகளால் ஆடவரை மயக்கி வசப் படுத்து மாதரது, பாழாகிய மயக்கம் விஷமென்றுணர்ந்து, திருவருளை யடைவது எந்தநாளோ, எ - று.

9. உந்திச் சுழியா லுளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ.

போ - ரை. நாபியாகிய நீர்ச்சுழியினால் மனத்தைச் சுழித்திழுத்த, பெரிய யானைமத்தகத்தை யொத்த ஸ்தநங்களையுடைய மாதரை மறப்பது எந்தநாளோ, எ - று.

10. தட்டுவைத்த சேலைகொய் சகத்திற் சிந்தையெல்லாங்
கட்டிவைக்கு மாயமின்னார் கட்டழிவ தெந்நாளோ.

பொ - ரை. தட்டுக்களமைந்த சேலையின் கொய்சகத்தில், ஆடவர்க களுடைய மனத்தையெல்லாம் கட்டிவைக்கும் மாயத்தில்வல்ல மாதரது கட்டுக்குலைவது எந்தநாளோ, எ - று.

**11.** ஆழாழி யென்ன வளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவ தெந்நாளோ.

பொ - ரை. ஆழ்ந்த கடல்போல அளவிடப்படாத வஞ்சகமனத்தை யுடைய, பாழான பெண்களுடைய ஆசைப்பற்று விட்டு நீங்குவது எந்த நாளோ, எ - று.

**12.** தூயபனித் திங்கள் சுடுவதெனப் பித்தேற்று
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ.

பொ - ரை. வெண்மையாகிய குளிர்ச்சி பொருந்திய சந்திரன் சுடு கின்றது என்று பித்தேற்றுகிற மாயத்தையுடைய மாதரது மயக்கத்தை ஒழிவது எந்தநாளோ, எ - று.

**13.** ஏழைக் குறும்புசெயு மேந்திழையார் மோகமெனும்
பாழைக் கடந்து பயிராவ தெந்நாளோ.

பொ - ரை. ஏழைக்குறும்பு பண்ணுகின்ற மாதர்களுடைய மோகம் என்கிற பாழ்நிலத்தைத் தாண்டி, நான் விருத்தியடைவது எந்தநாளோ.

**14.** விண்டு மொழிகுளறி வேட்கைமது மொண்டுதருந் [ளோ.
தொண்டியர்கள் கட்கடையிற் சுற்றொழிவ தெந்நா

பொ - ரை. வெளிப்படையாய் மொழிதடுமாறி, ஆசையாகிய கள்ளை மொண்டு தருகின்ற வேசையர்களது கடைக்கண்ணி லகப்பட்டுச் சுழல்வதைவிட்டு நீங்குவது எந்தநாளோ, எ - று.

**15.** மெய்யிற் சிவம்பிறக்க மேவுமின்பம் போன்மாதர்
பொய்யிலின் பின்றென்று பொருந்தாநா ளெந்நாளோ.

பொ - ரை. உண்மையிற் சிவமுண்டாக, அதனாலுண்டாகிற இன் பம்போல, மாதருடைய பொய்யினிடத்தில் இன்பம் இல்லையென்று அதைப் பொருந்தாத நாள் எந்தநாளோ, எ - று.

---

## தத்துவமுறைமை.

**1.** ஐம்பூதத் தாலே யலக்கழிந்த தோஷமற
வெம்பூத நாதனரு ளெய்துநா ளெந்நாளோ.

பொ - ரை. பஞ்சபூதங்களாலாகிய சரீரங்களோடுகூடி அலைந்து வருந்தின தோஷங்கள் நீங்கும்படி, எமது பூதநாதனாகிய சிவபெருமானது அருளையடையும் நாள் எந்தநாளோ, எ - று.

**2.** சத்தமுத லாம்புலனிற் சஞ்சரித்த கள்வரெனும்
பித்தர் பயந்தீர்ந்து பிழைக்குநா ளெந்நாளோ.

**போ-ரை.** சத்தம் முதலாகிய விஷயங்களில் சஞ்சரித்த ஐம்பொறிக் கள்வர் என்கிற பித்தரது பயந்தீர்ந்து உய்யும்நாள் எந்தநாளோ, எ - று.

**3.** நாளும் பொறிவழியை நாடாத வண்ணமெமை
யாளும் பொறியா லருள்வருவ தெந்நாளோ.

**போ - ரை.** நாள்தோறும் பொறிவழியை நாடாவகையாகத் தடுத்து எங்களை ரக்ஷிக்கிற அறிவினுல், திருவருள் உண்டாவது எந்தநாளோ.

**4.** வாக்காதி யானகன்ம மாயைதம்பால் வீண்காலம்
போக்காம லுண்மை பொருந்துநா ளெந்நாளோ.

**போ - ரை.** வாக்குமுதலாகிய கன்மேந்திரியத்தாலுண்டாகிய மாயை யினிடத்தில் வீண்காலம் போக்காமல், உண்மையைப் பொருந்தும் நாள் எந்தநாளோ, எ - று.

**5.** மனமான வானரக்கைம் மாலையா காம
லெனையா ளடிகளடி யெய்துநா ளெந்நாளோ.

**போ - ரை.** மனமென்கிற குரங்கின் கையில் அகப்பட்ட பூமாலை போலாகாமல், என்னை யாள்கின்ற சுவாமிகளுடைய திருவடியை யடையும் நாள் எந்தநாளோ, எ - று.

**6.** வேட்டைப் புலப்புலையர் மேவாத வண்ணமனக்
காட்டைத் திருத்திக் கரைகாண்ப தெந்நாளோ.

**போ - ரை.** வேட்டையாடுகின்ற ஐம்புலப் புலையர் வந்து பொருந் தாதவண்ணம், மனமாகிய காட்டைத் திருத்திக் கரைகாண்பது எந்த நாளோ, எ - று.

**7.** உந்துபிறப் பிறப்பை யுற்றுவிடா தெந்தையருள்
வந்து பிறக்க மனமிறப்ப தெந்நாளோ.

**போ-ரை.** இருவினைகள் செலுத்துகின்ற பிறப்பிறப்புக்களை யடைந் திடாவண்ணம், எமது தந்தையாகிய கடவுளின் அருள்தோன்றும் பொருட்டு மனமிறப்பது எந்தநாளோ, எ - று.

**8.** புத்தியெனுந் துத்திப் பொறியரவின் வாய்த்தேரை
யொத்துவிடா தெந்தையரு ளோங்குநாளெந்நாளோ.

**போ - ரை.** புத்தியென்கிற படப்பொறிகளையுடைய பாம்பினது வாயிற் பட்ட தவளையை யொத்துவிடாமல், எமது தந்தையாகிய கடவு ளின் அருளானது ஓங்கும் நாள் எந்தநாளோ, எ - று.

**9.** ஆங்கார மென்னுமத யானைவாயிற் கரும்பா
யேங்காம லெந்தையரு ளெய்துநா ளென்னாளோ.

**பொ - ரை.** ஆங்காரம் என்கிற மதயானை வாயிற் சிக்கின கரும்பை யொத்து ஏக்கங்கொள்ளாமல், எமது தந்தையாகிய கடவுளின் அருள் வந்து வாய்க்கும் நாள் எந்தநாளோ, எ - று.

**10.** சித்தமெனும் பௌவத் திரைக்கடலில் வாழ்துரும்பாய்
நித்தமலை யாதருளி னிற்குநா ளென்னாளோ.

**பொ - ரை.** சித்தமென்கிற பெரிய அலைகளோடு கூடிய கடலில் வீழ்ந்து அலைகின்ற துரும்புபோல நாள்தோறும் அலையாமல், அருளினது நிலையில் நிற்கும் நாள் எந்தநாளோ, எ - று.

**11.** வித்தியா தத்துவங்க ளேழும் வெருண்டோடச்
சுத்தபர போகத்தைத் துய்க்குநா ளென்னாளோ.

**பொ - ரை.** வித்தியா தத்துவங்கள் ஏழும்வெருண்டு ஓடும்படி, சுத்த பரபோகத்தை யநுபவிக்கும் நாள் எந்தநாளோ, எ - று.

வித்தியாதத்துவங்கள் தொண்ணூற்றாறு தத்துவங்களுள் அடங்கி யிருத்தல் காண்க. சுத்தபரபோகம் - பரிசுத்தமாகிய சிவாநுபவம்.

**12.** சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோ ரைந்துவகைத்
தத்துவத்தை நீங்கியருள் சாருநா ளென்னாளோ.

**பொ - ரை.** சுத்தவித்தை முதலாகவுண்டாகிய ஒரு ஐவகைத் தத்துவங்களையும் கடந்து திருவருளையடையும் நாள் எந்தநாளோ, எ - று.

சுத்தவித்தைமுதலாகிய ஐவகைத் தத்துவங்களாவன. இவற்றையும் ஷை தத்துவங்களுட் காண்க.

**13.** பொல்லாத காமப் புலைத்தொழிலி லென்னறிவு
செல்லாம னன்னெறியிற் சேருநா ளென்னாளோ.

**பொ - ரை.** தீமையாகிய காமம் என்கிற நீசத்தொழிலில் என்னறிவு செல்லாதவகை, நன்மார்க்கத்திற் சேரும் நாள் எந்தநாளோ, எ - று.

**14.** அடிகளடிக் கீழ்க்குடியா யாம்வாழா வண்ணங்
குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ.

**பொ - ரை.** கடவுள் திருவடிக் கீழ்க்குடியாய் நாம் வாழாதவகை, எம்மைக் குடிகெடுக்கு மியல்புள்ள பாழாகிய சோம்பலின் கூறுபாட்டை விட்டு நீங்குவது எந்தநாளோ, எ - று.

**15.** ஆனபுறக் கருவி யாறுபத்து மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புன்முளைப்ப தெந்நாளோ.

**பொ-ரை.** உண்டாயிருக்கிற புறக்கருவிகளறுபதும் மற்றுள்ளனவும் போனவழியினும் அவை மீளாவகையாகப் புல் அடர்ச்சியாய் முளைப்பது எந்தநாளோ, எ - று.

**16.** அந்தகனுக் கெங்குமிரு ளானவா றுவறிவில்
வந்தவிருள் வேலை வடியுநா ளெந்நாளோ.

பொ - ரை. குருடனுக்கு எல்லாவிடத்தும் இருளேயாயிருத்தல் போல, என்னறிவினிடத் துண்டாகிய அஞ்ஞானவிருளாகிய கடல் வற்றுவது எந்நாளோ, எ - று.

**17.** புன்மலத்தைச் சேர்ந்துமல போதம் பொருந்துதல்போய்
நின்மலத்தைச் சேர்ந்துமல நீங்குநா ளெந்நாளோ.

பொ - ரை. அற்பமாகிய மலசம்பந்தத்தையடைந்து மலபோதத்தை யடைவது நீங்கி, நிற்மலத்தன்மையை யடைந்து, மலசம்பந்தம் அற்றொழிவது எந்நாளோ, எ - று.

மலபோதம்-மும்மலசம்பந்தமாகிய ஞானம்.

**18.** கண்டுகண்டுந் தேறுக் கலக்கமெல்லாந் தீர்வண்ணம்
பண்டைவினை வேரைப் பறிக்குநா ளெந்நாளோ.

பொ - ரை. பார்த்துப் பார்த்தும் தெளிவடையாதிருக்கிற மனக்கலக்கமெல்லாம் தீரும்வகை, பழமையாகிய வினைகளின் வேரைப்பறித்தெறிவது எந்நாளோ, எ - று.

**19.** பைங்கூழ் வினைதான் படுசாவி யாகவெமக்
கெங்கோன் கிரணவெயி லெய்துநா ளெந்நாளோ.

பொ - ரை. இருவினையாகியபயிர், மிக்க சாவியாக, எங்களுக்கு எம்மிறைவனது கிரணமாகிய வெயிலானது கிடைக்கும் நாள் எந்நாளோ.

**20.** குறித்தவித மாதியார் கூடும்வினை யெல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணமருள் வந்திடுநா ளெந்நாளோ.

பொ - ரை. நினைத்தவிதம் முதலியவற்றால் வரும்வினைகள் எல்லாவற்றையும் வறுத்த வித்தாகச்செய்யும்வண்ணம் திருவருளுண்டாகும் நாள் எந்நாளோ, எ - று.

வறுத்தவித்து முளையாததுபோல வினைகள் விளையாவென்பது கருத்து.

**21.** சஞ்சிதமே யாதி சரக்கான மூச்சேறும்
வெந்தபொரி யாகவருண் மேவுநா ளெந்நாளோ.

பொ - ரை. சஞ்சிதம் முதலாகிய சரக்குகள் என்கிற மூவகைச் சேறும் வெந்தபொறியாகப் போம்படி, திருவருளைப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

சஞ்சிதம் முதலாகிய என்றது சஞ்சித ஆகாமிய பிராரத்தங்களை.

**22.** தேகமுத னான்காத் திரண்டொன்றாய் நின்றிலகு
மோகமிகு மாயை முடியுநா ளெந்நாளோ.

**போ - ளை.** தேகமுதலாக நால்வகையாய் விரிந்து பிறகு திரண்டு ஏகமாகி நின்று விளங்குகின்ற மோகம் மிகுகின்ற மாயாவிலாசம் முடிவு பெறுவது எந்நாளோ, எ - று.

தேகம் முதலாக என்றது தநுகரண புவனபோகங்களை.

**23.** சத்த முதலாத் தழைத்திங் கெமக்குணர்த் துஞ்
சுத்தமா மாயை தொடக்கறுவ தெந்நாளோ.

**போ - ளை.** சத்தம் முதலாக ஓங்கி, இவ்விடத்தில் எமக்கு அறிவுறுத்துகிற பெரிய சுத்தமாயையின் சம்பந்தம் அற்றொழிவது எந்நாளோ,எ-று.

**24.** எம்மைவினை யையிறையை யெம்பாற் காட்டாது
வம்மை திரோதை யகலுநா ளெந்நாளோ.

**போ - ளை.** எம்மையும், வினைகளையும், இறைவனையும் எம்மிடத்துக் காட்டாது மறைக்கின்ற தாயாகிய திரோதாயிசக்தி என்னைவிட்டு நீங்கப் பெறுவது எந்நாளோ, எ - று.

திரோதாயிசத்தி-மறைக்குஞ்சத்தி.

**25.** நித்திரையாய் வந்து நினைவழிக்குங் கேவலமாஞ்
சத்துருவை வெல்லுஞ் சமர்த்தறிவ தெந்நாளோ.

**போ - ளை.** நித்திரையுருவாய் வந்து நினைவைக் கெடுக்கிற கேவலாவஸ்த்தையாகிய சத்துருவை வெல்லும்படியான சாமர்த்தியத்தை யறிவது எந்நாளோ, எ - று.

கேவலாவஸ்த்தை-மறப்பு.

**26.** சன்னல்பின்ன லான சகலமெனுங் குப்பையிடை
முன்னவன் ஞானக்கனலை மூட்டுநா ளெந்நாளோ.

**போ - ளை.** சன்னல் பின்னலாகக் கிடக்கிற சகலாவஸ்த்தையாகிய குப்பையில், மூலகாரணனாகிய கடவுள் ஞானாக்கினியை மூள்விப்பது எந்நாளோ, எ - று.

**27.** மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா வருளைத் தொடருநா ளெந்நாளோ.

**போ-ளை.** மாயாவிகார மலத்தையொழிக்கின்ற சுத்தாவஸ்த்தையை யடைந்து, அருளைப் பின்பற்றிச் செல்வது எந்தநாளோ, எ - று.

சுத்தாவஸ்த்தையாவன-இருவினையொப்பு, மலபரிபாகம் முதலாயின.

## தன்னுண்மை.

**1.** உடம்பறியு மென்னுமந்த வூழலெல்லாந் தீரத்
திடம்பெறவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

**பொ-ரை.** உடம்பானது உணரும் என்கிற அந்தநரகவேதனைகளெல்லாம் நீங்கும்படி, உறுதியாக எங்களை நாங்கள் தெரிசிப்பது எந்தநாளோ.

**2.** செம்மை யறிவாலறிந்து தேகாதிக் குள்ளிசைந்த
வெம்மைப் புலப்படவே யாமறிவ தெந்நாளோ.

**பொ-ரை.** செவ்விய அறிவினாலறிந்து, தேகாதிகளுக்குள்ளே பொருந்தியிருக்கிற எங்களை வெளிப்படையாய் நாங்கள் அறிவது எந்நாளோ.

**3.** தத்துவமாம் பாழ்த்த சடவுருவைத் தான் சுமந்த
சித்துருவா மெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

**பொ-ரை.** தத்துவமாகிய பாழ்பட்ட சடரூபத்தைத் தாங்கிநிற்கிற சித்துருவாகிய எங்களை நாங்கள் தெரிசிப்பது எந்தநாளோ, எ - று.

**4.** பஞ்சப்பொறியை யுயிரென்னு மந்தப்பஞ்சமறச்
செஞ்செவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

**பொ-ரை.** ஐம்பொறிகளை உயிர் என்கிற அந்தச் சிறுமை நீங்க, செவ்வையாய் எங்களை நாங்கள் தெரிசிப்பது எந்நாளோ, எ - று.

**5.** அந்தக்கரண முயிராமென்ற வந்தரங்க
சிந்தையழிய வெம்மைத் தேர்ந்தறிவ தெந்நாளோ.

**பொ-ரை.** அந்தக்கரணமே உயிர் என்கிற அந்தரங்க சிந்தையானது கெட, எங்களை நாங்கள் தெளிந்தறிவது எந்தநாளோ, எ - று.

**6.** முக்குணத்தைச் சீவனென்னு மூடத்தை விட்டருளா
லக்கணமே யெம்மை யறிந்துகொள்வ தெந்நாளோ.

**பொ-ரை.** முக்குணத்தையே சீவன் என்கிற மூடத்தனத்தை விட்டு, அருளால், அந்தக்ஷணமே எங்களை நாங்கள் அறிந்து கொள்வது எந்தநாளோ, எ - று.

**7.** காலையுயிரென்னுங் கலதிகள் சொற் கேளாமற்
சீலமுட னெம்மைத்தெளிந்து கொள்வதெந்நாளோ.

**பொ-ரை.** காற்றையே சீவனென்கிற மூதேவிகள் சொல்லைக் கேளாமல், நல்லொழுக்கத்தால் எங்களை நாங்கள் தெளிந்து கொள்வது எந்தநாளோ.

**8.** வான்கெடுத்துத் தேடு மதிகேடர் போலவெமை
நாங்கெடுத்துத் தேடாம னன்கறிவ தெந்நாளோ.

**பொ-ரை.** ஆகாயத்தை மறைத்துத்தேடும் அறிவீனர்கள் போல எங்களை நாமே கெடுத்துத் தேடாதிருக்கும்படி, நாங்கள் நன்னெறியை யறிவது எந்தநாளோ, எ - று.

## அருளியல்பு.

**1.** ஈனந்தருநா டிதுநமக்கு வேண்டா மென்
றானந்த நாட்டி லவதரிப்ப தெந்நாளோ.

**பொ - ரை.** இழிவைக் கொடுக்கின்ற தேசமாகிய இது எங்களுக்கு வேண்டியதில்லை யென்று இகழ்ந்து, ஆநந்தத்தைக் கொடுக்கின்ற திருவருளாகிய நாட்டில், அவதரிப்பது எந்நாளோ, எ - று.

**2.** பொய்க்காட்சி யான புவனத்தை விட்டருளா
மெய்க்காட்சி யாம்புவன மேவுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** பொய்ஞ்ஞானமாகிய புவநத்தை நீங்கி, திருவருளாகிய உண்மையறிவென்கிற புவநத்தைப் பொருந்துவது எந்நாளோ, எ - று.

புவநம் - உலகம்.

**3.** ஆதியந்தங் காட்டா மலம்பரம்போ லேநிறைந்த
நீதிலருட் கடலைச் சேருநா ளெந்நாளோ.

**பொ - ரை.** முதலிறுதிகளில்லாமல் ஆகாயம்போல நிறைந்த குற்றமற்ற அருட்கடலையடையும் நாள் எந்நாளோ.

**4.** எட்டுத் திசைக்கீழ் மேலெங்கும் பெருகிவரும்
வெட்டவெளி விண்ணாற்றின் மெய்தோய்வ தெந்நாளோ.

**பொ - ரை.** அஷ்ட திக்குகள், கீழ், மேல் என்கிற எவ்விடத்தும் பெருகிவருகிற வெறு வெளியாகிய ஆகாய கங்கையில் என்சரீரம் படிவது எந்நாளோ, எ - று.

**5.** சூதான மென்று சுருதியெல்லா மோலமிடு
மீதான மானவெற்பை மேவுநா ளெந்நாளோ.

**பொ-ரை.** இரகசியமான இடமென்று வேதங்கள் யாவும் முறையிடுகின்ற, மேலாகிய இடமென்கிற மலையைப் பொருந்துநாள் எந்நாளோ.

**6.** வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்ணருளாய்
வந்து பொழிகின்ற மழைகாண்ப தெந்நாளோ.

**பொ - ரை.** வெந்து, வெப்பம் பொறுக்காமல் வெடிக்கிற என்மன வெப்பம் தணியும்படி, தண்ணிய அருளுருவாய் வந்து சொரிகின்ற மழையைக்காண்பது எந்நாளோ, எ - று.

வெப்பம் தணிவது மழையினலாதலால் இவ்வாறு கூறினர்.

**7.** சூரியர்கள் சந்திரர்க டோன்றாச் சுயஞ்சோதிப்
பூரண தேயத்திற் பொருந்துநா ளெந்நாளோ.

**பொ - ரை.** சூரிய சந்திரர்கள் எதிராக வுதிக்காத சுயஞ்சோதியையுடைய பூரணநாட்டில் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**8.** கன்றுமன வெப்பக் கலக்கமெலாந் தீரவருட்
டென்றல்வந்து வீசுவெளி சேருநா ளெந்நாளோ.

போ - ரை. புழுங்குகிற மனவெப்பத்தினாலுண்டாகிற கலக்கங்கள் யாவும் நீங்கும்படி, அருளாகிய தென்றற் காற்றுவந்து வீசுகிற வெற்றிடத்தைச் சேரும்நாள் எந்நாளோ, எ - று.

**9.** கட்டுநமன் செங்கோல் கடாவடிக்குங் கோலாக
வெட்டவெளிப் பொருளை மேவுநா ளெந்நாளோ.

போ - ரை. பாசத்தாற் பிணிக்கிற இயமனது செங்கோல், எருமைக் கடாவோட்டுங் கோலாகும்படி, வெறு வெளியிற் பொருந்தியிருக்கும் வஸ்துவைப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

எருமைக்கடா - யமநதுவாகநம். இயமனது செங்கோல் என்மீது செல்லாதென்பது கருத்து.

**10.** சாலக் கபாடத் தடைதீர வெம்பெருமா
னோலக்க மண்டபத்து ளோடுநா ளெந்நாளோ.

போ - ரை. மாயாவிலாசக் கதவாகிய தடை நீங்கும்படி, எம்பெருமானது திருவோலக்க மண்டபத்துள்ளே ஓடும்நாள் எந்நாளோ, எ - று.

**11.** விண்ணவன்றா ளென்னும் விரிநிலா மண்டபத்தில்
தண்ணீ ரருந்தித் தளர்வொழிவ தெந்நாளோ.

போ - ரை. கடவுளின் திருவடி என்கிற விரிந்த நிலாமண்டபத்தில், ஆனந்தமாகிய தண்ணீர் பருகி, பிறவித்தளர்ச்சி நீங்குவது எந்நாளோ.

**12.** வெய்யபுவி பார்த்து விழித்திருந்த வல்லலறத்
துய்ய வருளிற் றுயிலுநா ளெந்நாளோ.

போ - ரை. கொடுமையாகிய புவனத்தைப் பார்த்து விழித்திருந்த துன்பம் நீங்கும்படி பரிசுத்தமாகிய திருவருளினிடத்துத் தூங்குவது எந்நாளோ, எ - று.

விழித்திருந்த துன்பம் தூங்கினு லொழியுமாதலால் இவ்வாறு கூறினார்.

**13.** வெய்ய பிறவிவெயில் வெப்பமெலாம் விட்டகல
வையனடிநீழ லணையுநா ளெந்நாளே.

போ - ரை. கொடிய பிறவிவெயிலின் வெப்பமெல்லாம் விட்டொழியும்படி, இறைவனது திருவடி நிழலையடைவது எந்நாளோ, எ - று.

**14.** வார்தைப் பிறவி வளைகடலை நீந்தவையன்
பாதப் புணையிணையைப் பற்றுநா ளெந்நாளோ.

பொ - ரை. வேதனையை யுண்டாக்குகிற பிறவியாகிய வளைந்த கடலை நீந்தும்படி, இறைவனது திருவடியாகிய மரக்கலத்தைப் பற்றும் நாள் என்நாளோ, எ - று.

**15.** ஈனமில்லா மெய்ப்பொருளை யிம்மையிலே காணவெளி
ஞானமெனு மஞ்சனத்தை நான்பெறுவ தென்நாளோ.

பொ - ரை. இழிவற்ற உண்மைப் பொருளை இம்மையிலே பார்க்கும்படி வெளிப்படையாக, அறிவென்னும் அஞ்சநத்தை நான் பெறுவது என்நாளோ, எ - று.

அஞ்சநம்-புதையல் முதலியவற்றைக் கண்டெடுக்கும்படி கண்ணுக்குப் புலப்படுத்துவ தோர் மை.

**16.** எல்லா மிறந்தவிடத் தெந்தை நிறை வாம்வடிவைப்
புல்லாமற் புல்லிப் புணருநா ளென்நாளோ.

பொ - ரை. எல்லாவற்றையுங் கடந்த இடத்தில், எமது தந்தையின் பரிபூர்ணரூபத்தை, பொருந்தாமற் பொருந்தித் தழுவும் நாள் என்நாளோ.

பொருந்தாமற் பொருந்துதல் - தற்போதத்தாலன்றித் திருவருளை முன்னிட்டுப் பொருந்துதல்.

**17.** சடத்துளுயிர்போ லெமக்குத் தானுயிராய் ஞான
நடத்துமுறை கண்டுபணி நாம்விடுவ தென்நாளோ.

பொ - ரை. உடலில் உயிர்போல எங்களுக்கு உயிராகி, ஞானத்தை நடத்து முறைமையைக்கண்டு, நாங்கள் தொழில்களெல்லாவற்றையும் விடுவது என்நாளோ, எ - று.

**18.** எக்கணுமாந் துன்ப விருட்கடலை விட்டருளாம்
மிக்ககரையேறி வெளிப்படுவ தென்நாளோ.

பொ - ரை. எவ்விடத்தும் நிறைந்திருக்கிற துன்பமாகிய இருட்கடலை விட்டு, திருவருளாகிய மேலாகிய கரையிலேறி வெளிப்படுவது என்நாளோ, எ - று.

---

## பொருளியல்பு.

**1.** கைவிளக்கின் பின்னே போய்க் காண்பார்போன் மெய்ஞ்
ஞான, மெய்விளக்கின் பின்னேபோய் மெய்காண்ப
தென்நாளோ.

பொ - ரை. கைவிளக்கின் பின்னே சென்று வேண்டிய பொருளைக் காண்பவர்போல, உண்மைஞானமாகிய மெய்விளக்கின் பின்னேசென்று உண்மைப் பொருளைக் காண்பது என்நாளோ, எ - று.

**2.** கேடில்பசு பாசமெல்லாங் கீழ்ப்படவுந் தானேமே
லோடுஞ் சுகப்பொருளுக் கன்புறுவ தெந்நாளோ.

**பொ - ரை.** அழிவற்ற பசு பாசம் என்கிற எல்லாம் கீழ்ப்படவும் மேலே நடிக்கிற ஆநந்தப்பொருளின் பொருட்டு அன்புபொருந்துவது எந்நாளோ, எ - று.

**3.** ஆணவத்தை நீக்கி யறிவூடே யைவகையாக்
காணவந்தைக் கப்பாலைக் காணுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** ஆணவமலத்தை நீக்கி, அறிவினிடத்தே, ஐந்து வகையாகக்காணப்பட்ட பஞ்சாவஸ்த்தைகளுக்கும் அப்பாற்பட்ட பொருளைக் காண்கின்ற நாள் எந்நாளோ.

பஞ்சாவஸ்த்தைகளாவன - சாக்கிரம், சொப்பநம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன.

**4.** நீக்கப்பிரியா நினைக்க மறக்கக்கூடாப்
போக்குவரவற்ற பொருளணைவ தெந்நாளோ.

**பொ - ரை.** நீக்கவும் நீங்காத, நினைக்கவும் மறக்கவும் கூடாத, போக்குவரவற்றபொருள் வந்து நம்மிடத்துப் பொருந்துவது எந்நாளோ.

**5.** அண்டருக்கு மெய்ப்பில்வைப்பா மாரமுதை யென்னகத்
திற், கண்டுகொண்டு நின்று களிக்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** தேவர்களுக்கும் உற்றிடத் துதவும்பொருளாகிய அரிய அமிர்தத்தை, என்னுள்ளே கண்டுகொண்டு நின்று களிக்கின்ற நாள் எந்நாளோ, எ - று.

**6.** காட்டுந்திருவருளே கண்ணாகக் கொண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** எல்லாப் பொருள்களையும் புலப்படுத்துகின்ற திருவருளே கருவியாகக் கொண்டு மேலாகிய மோக்ஷசுகத்தைக் கொடுக்கின்ற உண்மைப் பொருளையடைவது எந்நாளோ, எ - று.

**7.** நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந்
தானென வுண்மைதனைச் சாருநா ளெந்நாளோ.

**பொ - ரை.** நான் என்கிற அகங்காரகுணம் நழுவப்பெற்று, எவ்வகைப்பட்ட சீவர்களுக்கும் ஆதாரம் தானேயாயிருக்கிற மெய்ப்பொருளையடையும் நாள் எந்நாளோ, எ - று.

**8.** சிந்தை மறந்து திருவருளாய் நிற்பவர்பால்
வந்தபொரு ளெம்மையுந்தான் வாழ்விப்பதெந்நாளோ.

**பொ - ரை.** நினைப்பொழிந்து திருவருள் மயமாய் நிற்கும் அறிஞரிடத்துவந்த பொருள் எங்களையும் வாழ்விக்கும் நாள் எந்நாளோ, எ - று.

**9.** எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கும் வியாபகமா
யுள்ளவொன்றை யுள்ளபடி யோருநா ளெந்நாளோ.

**பொ - ரை.** எள்ளுக்குள்ளே எண்ணெய் வியாபித்திருப்பதுபோல, எவ்விடத்தும் வியாபகமாயுள்ள ஒரு பொருளை உள்ளபடி யறியும் நாள் எந்நாளோ, எ - று.

**10.** அருவுருவமெல்லா மகன்றதுவா யான
பொருளெமக்கு வந்து புலப்படுவ தெந்நாளோ.

**பொ - ரை.** அருவம் உருவம்என்கிற எல்லாம் நீங்கி, அது வென்னும் தற்பதப்பொருளானது, எமக்குவந்து புலப்படுவது எந்நாளோ.

**11.** ஆரணமுங் காணு வகண்டிதா காரபரி
பூரணம் வந்தெம்மைப் பொருந்துநா ளெந்நாளோ.

**பொ - ரை.** வேதங்களும் காணக்கூடாத, அகண்டரூபமான பரிபூரணப்பொருள் வந்து எம்மைப் பொருந்துவது எந்நாளோ, எ - று.

**12.** சத்தொடு சித்தாகித் தயங்கியவா னந்தபரி
சுத்த வகண்டசிவந் தோன்றுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** சத்தும் சித்துமாகி விளங்குகின்ற, ஆநந்த மயமான பரிசுத்தத்தன்மை யுள்ள அகண்டசிவம் வெளிப்படும் நாள் எந்நாளோ, எ-று.

**13.** எங்கெங்கும் பார்த்தாலு மின்புருவாய் நீக்கமின்றித்
தங்கும் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ.

**பொ - ரை.** எவ்வெவ்விடங்களிற் பார்த்தாலும் சுகரூபமாகி நீங்குதலில்லாமல் நிலைபெற்றிருக்கிற ஒப்பற்ற பொருளையடையும்நாள் எந்நாளோ.

**14.** அடிமுடி காட்டாத சுத்த வம்பரமாஞ் சோதிக்
கடுவெளிவந் தென்னைக் கலக்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** முதலிறுதிகளில்லாத சுத்தாகாசமாகிய தேஜோராசியென்கிற கடுவெளிவந்து என்னைப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ-று.
கடுவெளி - வெறுவெளி.

**15.** ஒன்றனையுங் காட்டா வுளத்திருளைச் சூறையிட்டு
நின்றபரஞ் சோதியுட னிற்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** ஒரு பொருளையுந் தோன்ற வொட்டாமல் மறைக்கின்ற மனத் திருளாகிய அஞ்ஞானத்தைச் சூறையாடி நின்ற பரஞ்சோதியோடு சேர்ந்து நிற்கும் நாள் எந்நாளோ, எ - று.

**16.** எந்தச் சமய மிசைந்துமறி வூடறிவாய்
வந்தபொருளே பொருளா வாஞ்சிப்ப தெந்நாளோ.

பொ - ரை. எந்தெந்தசமயங்களோடு இசைந்திருந்தாலும் அறிவுக் கறிவாய்த் தோன்றும் பொருளையே உறுதிப் பொருளாகத் துணிந்து அதனையடைய இச்சிப்பது எந்நாளோ, எ - று.

**17.** எவ்வாறிங் குற்றுணர்ந்தார் யாவரவர் தமக்கே
யவ்வாறாய் நின்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ.

பொ - ரை. இவ்விடத்தில் எவ்வாற்றானும் ஆராய்ந் தறிந்தவர் யாவரோ, அவர்களுக்கு, அவர்கள் விரும்பினவாறேயாகித் தோன்றிய பொருளின்மேல் அன்புவைப்பது எந்நாளோ, எ - று.

**18.** பெண்ணா ணலியெனவும் பேசாம லென்னறிவின்
கண்ணூடே நின்றவொன்றைக் காணுநா ளெந்நாளோ.

பொ - ரை. பெண் ஆண் அலியென்று பேசவொண்ணாமல், என்னறிவினிடத்தே நிலைத்திருந்த ஒரு பொருளைக்காணும் நாள் எந்நாளோ, எ-று. அலி - பேடி.

**19.** நினைப்பு மறப்புமற நின்றபராஞ்சோதி
தனைப்புலமா வென்னறிவிற் சந்திப்ப தெந்நாளோ.

பொ - ரை. நினைத்தலும் மறத்தலும் ஒழியவே, அவ்விடத்து நின்ற பரஞ்சோதியை, வெளிப்படையாய் என்னறிவினிடத்துச் சந்திக்கப் பெறுவது எந்நாளோ, எ - று.

---

## ஆனந்தவியல்பு.

**1.** பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளமுற்று
நீச்சுநிலை காணு மனிற்குநா ளெந்நாளோ.

பொ - ரை. பேச்சுமூச்சற்ற பேரானந்த சாகரத்தை யடைந்து, நீச்சுநிலை தோன்றாமல் நிற்கிற நாள் எந்நாளோ, எ - று.

**2.** சித்தந் தெளிந்தோர் தெளிவிற் றெளிவான
சுத்த சுகக்கடலுட் டோயுநா ளெந்நாளோ.

பொ-ரை. மனந்தெளிந்தவரது தெளிவினிடத்துத் தெளிந்த பொருளான பரிசுத்த இன்பக்கடலுள் மூழ்கும் நாள் எந்நாளோ, எ - று.

**3.** சிற்றின்ப மூண்டூழ் சிதையவனந் தங்கடல்போன்
முற்றின்ப வெள்ளமெமை மூடுநா ளெந்நாளோ.

பொ - ரை. சிற்றின்பத்தை யநுபவித்த ஊழ்வினை கெடும்படி, அநேகம் கடல்களைப்போலப் பெருகுகின்ற இன்பக்கடலானது எங்களை மூடிக்கொள்வது எந்நாளோ, எ - று.

**4.** எல்லையில்பே ரின்பமய மெப்படியென் றோர் தமக்குச்
சொல்லறியா வூமர்கள்போற் சொல்லுநா ளெந்நாளோ.

**போ - ரை.** வரம்பு கடந்த பேராநந்தரூபம் எவ்வாறிருப்பதென்று வினவினோர்க்கு, மறுமொழி சொல்லத் தெரியாத ஊமைகள்போல இங்கிதத்தால் சொல்லும் நாள் எந்நாளோ, எ - று.

இங்கிதம் - குறிப்பு.

**5.** அண்டபண்ட கோடி யனைத்து முகாந்த வெள்ளம்
கொண்டதெனப் பேரின்பங் கூடுநா ளெந்நாளோ.

**போ - ரை.** தேவாண்ட கோடிகளெல்லாம், ஊழிப்பெருக்குக் கவர்ந்தாற்போலப் பேரின்பவெள்ளம் வந்து எம்மைமூடுவது எந்நாளோ, எ-று.

**6.** ஆதியந்த மில்லாத வாதிய நாதியெனுஞ்
சோதியின்பத் தூடே துலையுநா ளெந்நாளோ.

**போ - ரை.** அடிமுடிகளற்ற ஆதி அநாதியென்னும் விவகாரங்களுக்கிடமாயிருக்கிற சுயஞ்சோதியாகிய சுகக்கடலுள் மூழ்குவது எந்நாளோ.

**7.** சாலோக மாதி சவுக்கியமும் விட்டநம்பான்
மேலான ஞானவின்ப மேவுநா ளெந்நாளோ.

**போ-ரை.** சாலோகம் முதலிய சுகங்களையும் வெறுத்து நீங்கின எம்மிடத்து மேலாகிய ஞான சுகம் பொருந்தும் நாள் எந்நாளோ.

சாலோகம் முதலியனவாவன-சாலோகம், சாமீபம், சாரூபம் என்பன.

**8.** தற்பரத்தி னுள்ளேயுஞ் சாலோக மாதியெனும்
பொற்பறிந்தா னந்தம் பொருந்துநா ளெந்நாளோ.

**போ - ரை.** தற்பரப்பொருளினுள்ளும் சாலோகம் முதலியவை யுண்டென்னும் கருத்தை யுணர்ந்து சுகமடைவது எந்நாளோ, எ - று.

**9.** உள்ளத்தி னுள்ளேதா னூறுஞ் சிவானந்த
வெள்ளந் துலைந்து விடாய்தீர்வ தெந்நாளோ.

**போ - ரை.** மனத்தினுள்ளே சுரக்கின்ற சிவாநந்தக் கடலில் முழுகிப் பிறவி வெப்பத்தாலுண்டாகிய விடாய் நீங்கப்பெறுவது எந்நாளோ, எ-று.

**10.** கன்னலுடன் முக்கனியுங் கற்கண்டுஞ் சீனியுமாய்
மன்னுமின்ப வாரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ.

**போ - ரை.** கருப்பஞ் சாற்றுடன் முக்கனிகளும் கற்கண்டும் சீனிச்சர்க்கரையும்போல நிலைபெற்றிருக்கிற ஆநந்தஹேதுவான அரிய அமிர்தத்தை வாய்மடுத்துப் பருகுவது எந்நாளோ, எ - று.

**11.** மண்ணாடு மூன்ற மயக்கமெல்லாந் தீர்ந்திடவும்
விண்ணா டெழுந்தசுக மேவுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** மண்ணுலகத்திற் சுழன்ற மயக்கமெல்லாம் நீங்கும்படி சிதாகாயத்திலுண்டாகிய பேரின்பத்தைப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**12.** கானற் சலம் போன்ற கட்டுழலைப் பொய்தீர
வானமுதவாவி மருவுநா ளெந்நாளோ.

**பொ-ரை.** கானல் நீர்போன்ற உலகப் பொய்நீங்க, மேலாகிய அமிர்த தடாகத்தைப் பொருந்துவது எந்நாளோ, எ - று.

கட்டு உழலை - பிறவியாகிய கட்டில் அகப்பட்டு உழல்வது அதாவது உலகம்.

**13.** தீங்கரும்பென் றூலினியா தின்றூ லினிப்பனபோற்
பாங்குறும்பே ரின்பம் படைக்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** இனிய கரும்பென்று சொன்னால் இனிக்காமல், தின்றால் இனிக்கும் கரும்புகள்போல, அநுபவத்தில் இனிமையைத் தருகிற பேரானந்தத்தைப் படைக்கும் நாள் எந்நாளோ, எ - று.

**14.** புண்ணிய பாவங்கள் பொருந்தாமெய் யன்பரெல்லா
நண்ணிய பேரின்பசுக நாமணைவ தெந்நாளோ.

**பொ - ரை.** புண்ணிய பாவங்களைப் பொருந்தாத மெய்யடியாரெல்லாரும் அடைந்த பேரானந்த சௌக்கியத்தை நாம் அடைவது எந்நாளோ.

---

## அன்புநிலைமை.

**1.** தக்கரவி கண்ட சரோருகம்போ லென்னிதய
மிக்கவருள் கண்டு விகசிப்ப தெந்நாளோ.

**பொ - ரை.** தனக்கிதமாகிய சூரியனைக்கண்ட தாமரைமலர்வது போல, என் இருதயமானது மேலாகிய திருவருளைக் கண்டு மலர்வது எந்நாளோ, எ - று.

**2.** வானமுகில் கண்ட மயூரபக்ஷி போலவையன்
ஞானநடங் கண்டு நடிக்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** ஆகாயத்தில் மேகத்தைக் கண்ட மயில்கள் நடிப்பது போல, இறைவனது ஞான நடனத்தைக்கண்டு நடிப்பது எந்நாளோ, எ-று.

**3.** சந்திரனை நாடுஞ் சகோரபக்ஷி போலறிவில்
வந்தபரஞ் சோதியையாம் வாஞ்சிப்ப தெந்நாளோ.

போ - ரை. சந்திரனையே விரும்புகின்ற சகோரப்பறவைபோல, அறிவினிடத்துத் தோன்றிய பரஞ்சோதியை யாம் விரும்புவது எந்நாளோ.

**4.** குத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்றாட்டுஞ்
சித்தனையென் கண்ணாற் றெரிசிப்ப தெந்நாளோ.

போ - ரை. வஞ்சம் பொதிந்த சரீரமாகிய புற்றினிடத்துள்ள குண்டலி சக்தியாகிய பாம்பொன்றினை யாட்டுகின்ற சித்தனை, என் கண்களாற் சேவிப்பது எந்நாளோ, எ - று.

குண்டலி சத்தி யின்னதென்பதை 85-ம் பக்கத்திற்காண்க.

**5.** அந்தரத்தே நின்றாடு மானந்தக் கூத்தனுக்கென்
சிந்தைதிறை கொடுத்துச் சேவிப்ப தெந்நாளோ.

போ - ரை. சிதாகாயத்தின் கண்ணே நின்று நடிக்கிற ஆநந்தக்கூத்தனுக்கு, என் மனத்தைத் திறையாகக் கொடுத்துச் சேவித்து நிற்பது எந்நாளோ, எ - று.

**6.** கள்ளனிவ னென்றுமெள்ளக் கைவிடுதல் காரியமோ
வள்ளலே யென்று வருந்துநா ளெந்நாளோ.

போ - ரை. இவன் கள்வனென்று மெதுவாகக் கைவிடுதல் உன் காரியமாமோ, உதாரசீலனேயென்று வருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**7.** விண்ணாடர் காணா விமலா பரஞ்சோதி
யண்ணாவா வாவென் றரற்றுநா ளெந்நாளோ.

போ - ரை. தேவர்களும் காணக்கூடாத விமலனே, பரஞ்ஜோதியே, ஐயனே, வரக்கடவை வரக்கடவை யென்று இரையும் நாள் எந்நாளோ.

**8.** ஏதேது செய்தாலு மென்பணிபோய் நின்பணியா
மாதேவா வென்று வருந்துநா ளெந்நாளோ.

போ - ரை. எந்தெந்தத் தொழிலைச் செய்தாலும், என்தொழில் போய் உன் தொழிலாயே முடிகின்றது, ஆதலால், மஹாதேவா, என்னிடத்திற்கு எழுந்தருள்வாயென்று வருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**9.** பண்டுங் காணேனுன் பழம்பொருளே யின்றுமுனைக்
கண்டுங் காணேனெனவுங் கைகுவிப்ப தெந்நாளோ.

போ - ரை. அநாதிவஸ்துவே, உன்னை நான் முன்னுங்கண்டிலேன், இன்றும் கண்டிலேன், என்று சொல்லியும் கைகூப்புவது எந்நாளோ, எ-று.

**10.** பொங்கேத மான புழுக்கமெல்லாந் தீரவின்ப
மெங்கே யெங்கேயென் றிரங்குநா ளெந்நாளோ.

போ - ரை. அதிகரித்த குற்றங்களாலுண்டாகிய மனவருத்தமெல்லாம் நீங்கும்படி, சுகம் எங்கே எங்கே யென்று இரங்கும் நாள் எந்நாளோ,

**11.** கடலின்மடை கண்டதுபோற் கண்ணீரா றூக
உடல்வெதும்பி மூர்ச்சித் துருகுநா ளெந்நாளோ.

பொ - ரை. கடலில் மடைதிறந்தாற்போல, கண்ணீர் ஆறுபோலப் பெருக, சரீரம் வெதும்பி மூர்ச்சித்து, மனம் உருகுகின்ற நாள் எந்நாளோ.

**12.** புலர்ந்தேன் முகஞ்சருகாய்ப் போனேனிற் காண
வலந்தேனென் றேங்கி யழுங்குநா ளெந்நாளோ.

பொ - ரை. முகம்வாடினேன், உடல் சருகாயுலர்ந்தேன், உன்னைச் சேவிக்கும் பொருட்டு அலமந்தேன் என்று சொல்லி, இரங்கிவருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**13.** புண்ணீர்மை யாளர் புலம்புமா போற்புலம்பிக்
கண்ணீருங் கம்பலையுங் காட்டுநா ளெந்நாளோ.

பொ - ரை. தொழுநோயாளர் புலம்புவது போலப்புலம்பி, கண்ணீரையும் கம்பலையையும் காட்டும் நாள் எந்நாளோ, எ - று.

தொழுநோய் - குட்டநோய்.

**14.** போற்றேனென் றாலுமென்னைப் புந்திசெய்யும் வேதனைக்
கிங், காற்றேனாற் றேனென் றரற்றுநா ளெந்நாளோ.

பொ-ரை. உன்னை வணங்கேனாயினும், என்னை என் புத்தி செய்யும் வருத்தத்துக்கு, இவ்விடத்தில், சகியேன் சகியேன் என்று அரற்றும் நாள் எந்நாளோ, எ - று.

**15.** பொய்முடங்கும் பூமிசில பொட்டலறப் பூங்கமலன்
கைமுடங்க நான்சநகக் கட்டறுவ தெந்நாளோ.

பொ - ரை. பொய்தங்கிய உலகம் பொட்டலா யொழியவும், பிரமனது கையானது வேலையற்று முடங்கிக் கிடக்கவும், நான் பிறவிப் பிணிப்பு அறப்பெறுவது எந்நாளோ, எ - று.

பொட்டல்-வெற்றிடம்.

**16.** கற்குணத்தைப் போன்ற வஞ்சக் காரர்கள்கை கோவாமல்
நற்குணத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ.

பொ - ரை. கல்லையொத்தவன்மையை யுடைய வஞ்சனைக் காரர்களுடைய கையைக் கோவாமல், நற்குணத்தாரது கையைக் கோத்துக்கொண்டு நான் திரிவது எந்நாளோ, எ - று.

**17.** துட்டனைமா மாயைச் சுழனீக்கி யந்தரமே
விட்டனையோ வென்று வியக்குநா ளெந்நாளோ.

பொ - ரை. துஷ்டனாகிய என்னைப் பெரிய மாயையாகிய சுழலில் நின்று நீக்கி, சிதாகாயத்தினிடையே விட்டாயோவென்று, உன்னைத் துதிக்கும் நாள் எந்நாளோ, எ - று.

## அன்பர்நெறி.

**1.** அத்துவா வெல்லா மடங்கச்சோ தித்தபடிச்
சித்துருவாய் நின்றோர் தெளிவறிவ தெந்நாளோ.

**பொ - ரை.** அத்துவாக்களை யெல்லாம் முழுதும் சோதித்தவண்ணம் சித்துருவாகி நின்ற அறிஞரது தெளிந்த நிலையைநானுணர்வது எந்நாளோ.

அத்துவாவெல்லாம் என்றது ஆறு அத்துவாக்களை. அவை மந்திரம், பதம், அக்கரம், புவநம், தத்துவம், கலை என்பன.

**2.** மூச்சற்றுச் சிந்தை முயற்சியற்று மூதறிவாய்ப், பேச்சற்
றோர் பெற்றவொன்றைப் பெற்றுடுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** மூச்சற்று, மனத்தின் முயற்சியற்று, பேரறிவையுடைய ராகி, பேச்சற்ற அறிஞர் பெற்ற ஒப்பற்ற முத்தியை நான் பெற்றிடும்நாள் எந்நாளோ, எ - று.

**3.** கோட்டாலை யான குணமிறந்த நிர்க்குணத்தோர்
தேட்டாலே தேடுபொருள் சேருநா ளெந்நாளோ.

**பொ - ரை.** துன்பத்துக் கேதுவான குணமற்ற நிர்க்குணத்தினர் தேடவேண்டு மென்னும் விருப்பத்தால் தேடும் பொருள் நமக்குக் கிடைப்பது எந்நாளோ, எ - று.

**4.** கெடுத்தே பசுத்துவத்தைக் கேடிலா வானந்த
மடுத்தோரடுத்த பொருட் கார்வம்வைப்ப தெந்நாளோ.

**பொ - ரை.** பசுத் தன்மையை யழித்து, அழிவில்லாத ஆநந்தத்தை யடுத்தவர்கள் அடைந்த பொருளை யடைதற் பொருட்டு, அதனிடத்தில் நான் விருப்பம் வைப்பது எந்நாளோ, எ - று.

பசு - சீவன்.

**5.** கற்கண்டா லோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச்
சொற்கண்டா லோடுமன்பர் தோய்வறிவ தெந்நாளோ.

**பொ - ரை.** கல்லைக்கண்டால் ஓடுகிற காகம்போல, பொய்யாகிய மாயச் சொல்லைக்கண்டால் ஓடுகின்ற உன்னன்பரது கூட்டுறவின் நலத்தை நானறிந்து கொள்வது எந்நாளோ, எ - று.

கூட்டுறவு - சம்பந்தம்.

**6.** மெய்த்தகுலங் கல்விபுனை வேடமெல்லா மோடவிட்ட
சித்தரொன்றுஞ் சேராச் செயலறிவ தெந்நாளோ.

**பொ - ரை.** உண்மையாகிய குலம், கல்வி, அலங்கரிக்கப்பட்ட வேடம், இவை யெல்லாம் நீக்கின மனத்தை யுடையோர், ஒன்றிலும் தோயாதிருக்குஞ் செயலை நானுணர்ந்து கொள்வது எந்நாளோ, எ - று.

**7.** குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போத
மற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ.

**பொ - ள.** குற்றத்தை யுண்டாக்குகிற சமயக் கெடுதிகளைக் கெடுத்து, தற்போத மற்றவர்களுக் கென்று அறுதியிடப்பட்ட பொருளின் மேல் யாம் அன்புவைப்பது எந்நாளோ, எ - று.

தற்போதம் - சீவ அறிவு.

**8.** தர்க்கமிட்டுப் பாழாஞ் சமயக் குதர்க்கம்விட்டு
நிற்குமவர் கண்டவழி நேர்பெறுவ தெந்நாளோ.

**பொ-ள.** தர்க்கம் பேசிப்பாழாகிற சமயக் குதர்க்கங்களை யொழிந்து நிற்போர் கண்டமார்க்கத்தின் நேர்மையை யாம் அடைவது எந்நாளோ.

**9.** வீறியவே தாந்தமுதன் மிக்க கலாந்தவரை
யாறுமுணர்ந்தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ.

**பொ - ள.** மேலாகிய வேதாந்தம்முதல் மிகுந்த கலாந்தம் வரைக்குமாகவுள்ள ஆறு அந்தங்களையு முணர்ந்தோர்களுடைய உணர்ச்சியின் பொருட்டு யாம் அன்புவைப்பது எந்நாளோ, எ - று.

வேதாந்த முதலிய ஆறும் 42-ஆம் பக்கத்தில் காண்க.

**10.** கண்டவிட மெல்லாங் கடவுண்மய மென்றறிந்து, கொண்
டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்ப தெந்நாளோ.

**பொ - ள.** பார்த்தவிட மெல்லாம் பரமனுருவமே யென்றுணர்ந்து கொண்ட மனத்தினை யுடையவரது நேசத்தை என்மனத்திற் கொண்டிருப்பது எந்நாளோ, எ - று.

**11.** பாக்கியங்க ளெல்லாம் பழுத்துமனம் பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்குநா ளெந்நாளோ.

**பொ - ள.** எல்லாப் பாக்கியங்களும் பெற்று மனமடங்கினவர்கள் நோக்குகின்ற திருக்கூத்தை நான் நோக்குகின்ற நாள் எந்நாளோ, எ-று.

**12.** எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ.

**பொ - ள.** எந்தவுயிர்களும் தன்னுயிர்போல நினைக்கின்ற தபோதனர்களது செவ்விய வுணர்ச்சியை விரும்பி, அதன்பொருட்டு நான் விருப்பம் வைப்பது எந்நாளோ, எ - று.

* அறிஞநுரை.

**1.** இருநிலனாய்த் தீயாகி யென்றதிருப் பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ தெந்நாளோ.

போ - ரை. "இருநிலனாய்த்தீயாகி" என்று சொன்ன திருப்பாட்டினது பெரிய நிலையைக்கண்டு, அதனிடத்துப் பொருந்தி நான் பேச்சற்று நிற்பது எந்நாளோ, எ - று.

**2.** அற்றவர்கட் கற்றசிவ னாமென்ற வத்துவித
முற்றுமொழி கண்டருளின் மூழ்குநா ளெந்நாளோ.

போ - ரை. "அற்றவர்கட் கற்றசிவனும்" என்று சொன்ன அத்துவிதமுழுச்சொல்லைக் கண்டு, நான் அருட்கடலில்முழுகும்நாள் எந்நாளோ.

**3.** தானென்னை முன்படைத்தா னென்ற தகவுரையை.
நானென்று வுண்மைபெற்று நாமுணர்வ தெந்நாளோ.

போ - ரை. "தானென்னை முன்படைத்தான்" என்று சொன்ன தகுதியான சொல்லின் பொருளை, நான் என்று அகங்கரித்துப் பேசாத வுண்மை நிலையைப் பெற்று யாம் அறிவது எந்நாளோ, எ - று.

**4.** என்னுடைய தோழனுமா யென்றதிருப் பாட்டி
னன்னெறியைக் கண்டுரிமைநாஞ்செய்வ தெந்நாளோ.

போ-ரை. "என்னுடைய தோழனுமாய்" என்று சொன்ன திருப்பாடலின் நன்மார்க்கத்தைக் கண்டு, நாம் அதனிடத்துரிமை பாராட்டுவது எந்நாளோ, எ - று.

**5.** ஆருடனே சேருமறி வென்ற வவ்வுரையைத்
தேரும்படிக் கருடான் சேருநா ளெந்நாளோ.

போ - ரை. "ஆருடனே சேருமறிவு" என்று சொல்லிய அச்சொற்பொருளைத் தெளியும்படிக்கு, திருவருள் என்னைச் சேர்வது எந்நாளோ.

**6.** உன்னிலுன்னு மென்றவுறு மொழியா லென்னிதயந்
தன்னிலுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ.

போ - ரை. "உன்னிலுன்னும்" என்று சொல்லிய மேலாகிய மொழியினால், என்னிருதயத்தில் நினைத்து நன்மார்க்கத்தை யடையும் நாள் எந்நாளோ, எ - று.

**7.** நினைப்பறவே தானினைந்தே னென்றநிலை நாடி
யனைத்துமா மப்பொருளி லாழுநா ளெந்நாளோ.

---

* இந்தப்பதினொன்கு கண்ணிகளிலும் ஆசிரியர் எடுத்துக் காட்டியமேற்கோள்களை, உரையுடன் இப்புத்தக முடிவில் சேர்த்து வெளியிடுவோம்.

போ - ரை. "நினைப்பறவே தானினைந்தேன்" என்று சொல்லிய நிலையை நாடி எல்லாப் பொருளுந் தானேயாய் நின்ற அந்தப் பொருளினிடத்து நான் அழுந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**8.** சென்றுசென் றேயணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாகி
நின்றுவிடு மென்றநெறி நிற்குநா ளெந்நாளோ.

போ - ரை. "சென்று சென்றேயணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாகி நின்று விடும்" என்று சொல்லிய மார்க்கத்தில்யான் நிற்கும் நாள் எந்நாளோ, எ - று.

**9.** ஆதியந்த மில்லா வரியபரஞ் சோதியென்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குநா ளெந்நாளோ.

போ - ரை. "ஆதியந்த மில்லா" அரியபரஞ்சோதி, என்று சொல்லிய நீதிமொழி கண்டு, அப்பொருளாகவே நான் நிற்கும் நாள் எந்நாளோ.

**10.** பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தே னென்ற
நெறியுடையான் சொல்லினிலே நிற்குநா ளெந்நாளோ.

போ - ரை. "பிறிதொன்றி லாசை யின்றிப் பெற்றிருந்தேன்" என்று சொன்ன நெறி யுடையவனது சொல்லில், நான் நிலைநிற்கும் நாள் எந்நாளோ, எ - று.

**11.** திரையற்ற நீர்போற் றெளியவெனத் தேர்ந்த
வுரைபற்றி யுற்றங் கொடுங்குநா ளெந்நாளோ.

போ - ரை. "திரையற்ற நீர்போற்றெளிய" என்று சொல்லித் தெளிவித்த சொல்லைப் பற்றிப் பொருந்தி, அதனிடத்து நான் ஒடுங்கும் நாள் எந்நாளோ, எ - று.

**12.** அறியா வறிவி லவிழ்ந்தேற வென்ற
நெறியா முரையுணர்ந்து நிற்குநா ளெந்நாளோ.

போ - ரை. "அறியாவறிவி லவிழ்ந்தேற" என்று சொல்லிய நல்ல நெறிக் கேதுவாகிய சொற்பொருளை யறிந்து நாம் நிற்கும்நாள் எந்நாளோ.

**13.** எனக்குணீயென்று மியற்கையாப் பின்னு
முனக்குணா னென்ற வுறுதிகொள்வ தெந்நாளோ.

போ-ரை. "எனக்குணீயென்று மியற்கையாப் பின்னுமுனக்குணான்" என்றுசொன்ன உறுதிமொழியை யான் மனங்கொள்வது எந்நாளோ.

**14.** அறிவை யறிவதுவே யாகும் பொருளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ.

போ - ரை. "அறிவை யறிவதுவே யாகும் பொருள்" என்று உறுதியாய்ச் சொன்ன வுண்மை நிலையை யாராய்ந்தறிவது எந்நாளோ, எ - று.

## நிற்குநிலை.

**1.** பண்ணினிசை போலப் பரமன்பா லின்றதிற
மெண்ணியரு ளாகி யிருக்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** பண்ணோடு கூடிய இசைபோல், வேறுபாடில்லாமல் இறைவனிடத்துக் கலந்திருக்குந் திறத்தை யாலோசித்து, நான் அருள் வடிவாகி யிருக்கும் நாள் எந்நாளோ, எ - று.

**2.** அறிவோ டறியாமை யற்றறிவி னூடே
குறியிலறி வுவந்து கூடுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** நினைப்பு மறப்புக்க ளற்ற பரஞானத்தி னிடத்துக் குறியாக, என் அறிவு வந்து சேரும் நாள் எந்நாளோ, எ - று.

**3.** சொல்லான் மனத்தாற் றொடராச் சம்பூரணத்தி
னில்லா நிலையாய் நிலைநிற்ப தெந்நாளோ.

**பொ - ரை.** சொல்லினாலும் மனத்தினாலும் தொடர வொண்ணாத பரிபூர்ண நிலையில், நில்லா நிலையாய், நான் நிலைநிற்பது எந்நாளோ, எ-று.

நில்லாநிலையாய் நிலைநிற்பதாவது-தற்போதத்தை முன்னிடாது திருவருளை முன்னிட்டு நிற்றல்.

**4.** செங்கதிரின் முன்மதியந் தேசடங்கி நின்றிடல்போ
லங்கணனார் தாளி லடங்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** சூரியனுக்கு முன்னே சந்திரன் ஒளிமழுங்கி நின்றிடல் போல, இறைவனது திருவடி நிழலில் நான் அடங்கி நிற்பது எந்நாளோ,

**5.** வானா டடங்கும் வளிபோல வின்புருவாங்
கோனா டடங்குங் குறிப்பறிவ தெந்நாளோ.

**பொ - ரை.** ஆகாயத்தில் அடங்குகின்ற காற்றைப்போல, சுகரூபமாகிய இறைவனிடத்தில் நான் அடங்கும்படியான குறிப்பை யுணர்வது எந்த நாளோ, எ - று.

ஆகாயமும் காற்றும் அபேதமா யிருத்தல்போல இறைவனும் நானும் அபேதமா யிருக்கவேண்டும் என்பதாம்.

**6.** செப்பரிய தண்கருணைச் சிற்சுகனார் பூரணத்தி
லப்பினிடை யுப்பா யணையுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** சொல்லுதற் கரிய தண்ணிய கருணையோடு கூடிய ஞானானந்தத்தையுடைய இறைவனது பரிபூரணநிலையில், நீரிற்கலந்த வுப்புப்போல நான் கலப்பது எந்நாளோ, எ - று.

இறைவற்கு ஞானானந்தங்க ளியல்பாதலால் இவ்வாறு கூறினார். அப்பினிடை யுப்பாய் என்றார் மேற்பாட்டிற்போல அபேதத்தை யுணர்த்தற்கு.

**7.** தூயவறிவான சுகரூப சோதி தன்பாற்
றீயினிரும் பென்னத் திகழுநா ளெந்நாளோ.

போ - ரை. பரிசுத்த அறிவாகிய ஆநந்த ரூபத்தையுடைய தேஜஸி னிடத்தில், நெருப்பில் இரும்பு கலந்தாற்போல நான் கலந்து விளங்குவது எந்நாளோ, எ - று.

**8.** தீதணையாக் கற்பூர தீபமென ஞானகண்ட
சோதியுட னொன்றித் துரிசறுவ தெந்நாளோ.

போ - ரை. கெடுதியணுகாத கர்ப்பூரமும் தீபமும்போல, நான் அகண்டவொளியோடுபொருந்தி, குற்றத்தினின்று நீங்குவது எந்நாளோ.

தீதணையாமை - காற்றுமுதலிய வற்றாற் சலியாமை.

**9.** ஆராருங் காணுக வற்புதனார் பொற்படிக்கீழ்
நீரார் நிழல்போ னிலாவுநா ளெந்நாளோ.

போ - ரை. எவ்வெவரும் காணவொண்ணாத அற்புத மூர்த்தியின் திருவடியின் கீழ், நற்குண மமைந்த நிழல்போல நான் நிலைபெறுவது எந்நாளோ, எ - று.

அற்புதம்-ஆச்சரியகரம்.

**10.** எட்டத் தொலையாத வெந்தைபிரான் சந்நிதியில்
பட்டப் பகல்விளக்காய்ப் பண்புறுவ தெந்நாளோ.

போ-ரை. கலியாணகுணங்கள் மனத்தினால் எட்டமுடியாத எந்தை பெருமானது சந்நிதியில், பட்டப்பகலி லேற்றிய தீபம்போல நான் விளங்குவது எந்நாளோ, எ - று.

பட்டப்பகல் விளக்கு - ஒளிமழுங்கி நிற்றல்போல, இறைவன் சந்நிதியில் நான் ஒளிமழுங்கி நிற்கவேண்டு மென்பதாம்.

**11.** கருப்புவட்டா வாய்மடுத்துக் கண்டார்நாப் போல
விருப்புவட்டா வின்புருவை மேவுநா ளெந்நாளோ.

போ - ரை. கருப்பு வெல்லத்தை வாயினாலுண்டு அதன் சுவையைக் கண்டாரது நாவைப்போல, விருப்புமாறாத சுகரூபத்தை நான் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**12.** அச்சப் புலனாற் சுழலாமற் றண்ணருளா
லுச்சிக் கதிர்ப்படிக மொவ்வுநா ளெந்நாளோ.

போ - ரை. அற்பமாகிய விஷய விருப்பத்தாற் சுழலாமல், தண்ணிய திருவருளால், உச்சிக் காலத்துச் சூரியனுக் கெதிரிலிட்ட படிகத்தை நான் ஒத்திருக்கும் நாள் எந்நாளோ, எ - று.

உச்சிக்கதிர்ப் படிகம் நெருப்பைக்கக்கி அடுத்தபொருள்களைத் தீப்பதுபோல, சப்தாதி விஷயங்களை நான் தீர்க்கவேண்டு மென்பதாம்.

**13.** இம்மா நிலத்தி லிருந்தபடி யேயிருந்து
சும்மா வருளைத் தொடருநா ளெந்நாளோ.

**போ - ளை.** நான் இவ்வுலகத்தில், இருந்தபடியே யிருந்து, சும்மா திருவருளைத் தொடரும் நாள் எந்நாளோ, எ - று.

இருந்தபடியே யிருத்தலாவது - முயற்சியற் றிருத்தல்.

**14.** தானவனுந் தன்மையெய்தித் தண்டமெனை வண்டமெங்கு
ஞானமத யானை நடத்துநா ளெந்நாளோ.

**போ - ளை.** தான் அவனாகிய தன்மையை யடைந்து, உலகமெல்லாம் செல்வழியாகக் கொண்டு, ஞானமாகிய மதயானையை நான்நடத்தும் நாள் எந்நாளோ, எ - று.

தண்டம் - யானைசெல்வழி.

**15.** ஒன்றிரண்டு மில்லதுவா யொன்றிரண்டு முள்ளதுவாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ.

**போ - ளை.** ஒன்றிரண்டென்பன இல்லாததாகி, ஒன்றிரண்டென்பன வுள்ளதாகி, நின்ற சமநிலையை நான் நேரா யடைவது எந்நாளோ.

**16.** பாசமக லாமற் பதியிற் கலவாமன்
மாசில் சமத்து முத்திவாய்க்குநா ளெந்நாளோ.

**போ - ளை.** பாசம் நீங்காமலும் பதியோடு கலக்காமலும் இருக்கிற எனக்கு, குற்றமில்லாத சமநிலையிலுண்டாவதாகிய முத்திகிடைக்கும் நாள் எந்நாளோ, எ - று.

சமநிலை யாவது - இருவினையொப்பு. பாசம்-பசுபதிகளின் ஒற்றுமை கெட அவற்றினிடை நிற்கும் தடை.

**17.** சிற்றறிவு மெள்ளச் சிதைந்தெம்மான் பேரறிவை
யுற்றறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ.

**போ - ளை.** சிற்றுணர்வு மெதுவாக அழியப்பெற்று எம்மிறைவனது பேரறிவைப் பொருந்தி, அறியாத வகையாயறிந்து நான் விருத்தியடையும் நாள் எந்நாளோ, எ - று.

**18.** தந்திரத்தை மந்திரத்தைச் சாரினவையா மறிவென்
றெந்தையுணர் வேவடிவா வெய்துநா ளெந்நாளோ.

**போ - ளை.** தந்திரத்தையும் மந்திரத்தையும் சார்ந்தால் அறிவுக்குக் குற்ற முண்டாகும் என்று, எமது தந்தையாகிய கடவுளின் அறிவே என் உருவாக நான் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**19.** போக்குவர வற்றவெளி போனிறைந்த போதநிலை
நீக்கமறக் கூடி நினைப்பறுவ தெந்நாளோ.

போ - ரை. போக்குவர வில்லாத ஆகாயம் போல நிறைந்த ஞான நிலையை நீங்குத லில்லாமல் சேர்ந்து நான் நினைப்பு அற்றொழிவது எந்நாளோ, எ - று.

**20.** காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்றவந்த
வீண்பாவம் போயதுவாய் மேவுநா ளெந்நாளோ.

போ - ரை. காண்பவனும், காட்டப்படுபொருளும், காட்சியும் ஆகி நின்ற அந்த வீணாகிய நினைப்பு நீங்கி, அதுவாகவே பொருந்தும் நாள் எந்த நாளோ, எ - று.

அது - தற்பதப் பொருளாகிய பரம்.

**21.** வாடாதே நாளுவாய் மாயாதே யெங்கோவை
நாடாதே நாடிநலம் பெறுவ தெந்நாளோ.

போ - ரை. வாடாமலும், நாளுவிதமாய்க் கெடாமலும், எம்மிறைவனை நாடாமல் நாடி, நான் நன்மையைப் பெறுவது எந்நாளோ, எ - று.

**22.** ஆடலையே காட்டியென தாடலொழித் தாண்டான்பொற்
றாடலைமேற் சூடித் தழைக்குநா ளெந்நாளோ.

போ - ரை. தனது நடனத்தைக் காட்டி எனது ஆடலையொழித்து ஆண்டருளிய இறைவனது திருவடியை எனது சிரசின்மேல் தரித்து நான் ஓங்கும் நாள் எந்நாளோ, எ - று.

ஆடலிரண்டனுள் பின்னது மனோசலநம்.

**23.** மேலொடு கீழில்லாத வித்தகனார் தம்முடனே
பாலொடு நீர்போற் கலந்து பண்புறுவ தெந்நாளோ.

போ - ரை. மேலுங் கீழுமில்லாத ஞான சொரூபரோடு, பாலுடன் சேர்ந்த நீர்போலக் கலந்து நான் உயர் குணத்தை யடைவது எந்நாளோ.

பண்பு - ஆநந்த குணம்.

**24.** அறியா தறிந்தெமையா ளண்ணலைநா மாகக்
குறியாத வண்ணங் குறிக்குநா ளெந்நாளோ.

போ - ரை, எம்மை யாண்டருளிய பெரியோனை அறியாம லறிந்து நாமாக நினையாத வண்ணம் நினைக்கும் நாள் எந்நாளோ, எ - று.

**25.** ஓராமன் மந்திரமு முன்னும மம்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநா ளெந்நாளோ.

போ - ரை. ஆராயாமலும், மந்திரத்தை நினையாமலும் நம்மிறைவனைப்பாராமற் பார்த்து நான் அவனோடு பழகும் நாள் எந்நாளோ, எ-று.

**26.** ஊன்பற்று மென்னோ டுறவுபற்றும் பூரணன்பால்
வான்பற்றுங் கண்போன் மருவுநா ளெந்நாளோ.

**போ - ரை.** உடம்பையே யுறுதிப் பொருளாகப் பற்றுகிற என்னுடன் உறவாடுகின்ற பூர்ணனிடத்து ஆகாயத்தைப் பற்றுகிற கண்போல நான் பொருந்தும் நாள் எந்தநாளோ, எ - று.

**27.** ஆண்டான் மௌனியளித்த வறிவா லறிவைத்
தூண்டாமற் றூண்டித் துலங்குநா ளெந்நாளோ.

**போ - ரை.** ஆண்டவனாகிய மௌநி கொடுத்தருளிய அறிவாகிய தூண்டுகோலால் என்னறிவாகிய தீபத்தைத் தூண்டமால் தூண்டி நான் விளங்கும் நாள் எந்தநாளோ, எ - று.

**28.** ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ.

**போ - ரை.** நான் ஆணவத்துடன் இரண்டறக் கலந்தாற்போல மெய்ஞ்ஞானத்தையுடைய இறைவனுடன் இரண்டறக் கலக்கும் நாள் எந்தநாளோ, எ - று.

அத்துவிதம் - அபேதம்.

---

நிலைபிரிந்தோர் கூடுதற்குபாயம்.

**1.** கன்மநெறி தப்பிற் கடுநரகென் றெந்நாளு
நன்மைதரு ஞானநெறி நாணணைவ தெந்நாளோ.

**போ - ரை.** செய் கருமங்கள் வழி தவறினால், தவறினவர்களுக்குக் கடுமையான நரகங்களுளவாமென்று நினைத்து, எக்காலமும் நலத்தையே கொடுக்கிற ஞானமார்க்கத்தை நான் அடைவது எந்தநாளோ, எ - று.

**2.** ஞானநெறி தானே நழுவிடினு முப்பதத்து
ளானமுத்தி நல்குமென வன்புறுவ தெந்நாளோ.

**போ - ரை.** ஞானமார்க்க மொன்றுமே நழுவி விட்டாலும், மற்ற மூன்று பாதங்களால் சீவர்களுக் கிதமாகிய முத்தி கிடைக்குமென்று, அவற்றில் அன்பு மிகுவது எந்தநாளோ, எ - று.

முப்பதம் - சரியை கிரியை யோகங்கள். இவை யுண்டாயிருப்பின், ஞானமும் சோபாநக் கிரமமாய் கைகூடு மென்பதாம். சோபானம் - படி.

**3.** பன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சொன்மார்க்கங் கண்டு துலங்குநா ளெந்நாளோ.

பொ - ரை. பலவழிகளாகிய பல அடிபட்டவனாகிய நானும், ஒரு சொல்வழியைக் கண்டு விளங்கும் நாள் எந்நாளோ, எ - று.

ஒரு சொன்மார்க்கம் - ஒருமொழியால் உண்டாகும் நன்னெறி. அதாவது ஞானநெறி.

**4.** அத்துவித மென்ற வன்னியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடருநா ளெந்நாளோ.

பொ - ரை. அத்துவிதம் என்கிற வேறு சொல்லைக் கண்டறிந்து, சுத்த சிவத்தைப் பற்றும் நாள் எந்நாளோ, எ - று.

இதுவரையில் துவிதநெறியி லிருந்தேனென்பது கருத்து. சுத்த சிவம் - பரிசுத்தமாகிய பரம்பொருள்.

**5.** கேட்டன் முதலான்காலே கேடிலா நாற்பதமும்
வாட்டமற வெனக்கு வாய்க்குநா ளெந்நாளோ.

பொ - ரை. கேட்டல் முதலாகிய நான்கினும், கெடுதி யில்லாத நான்கு பதங்களும் துன்பமற எனக்குக் கிடைக்கும் நாள் எந்நாளோ.

கேட்டல்முதல் நான்காவன—கேட்டல், சிந்தித்தல், தெளிதல், சுவாநுபவம் என்பன.

**6.** என்னதியா னென்பதற வெவ்விடமு மென்னுசான்
சன்னிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ.

பொ - ரை. எனது யான் என்பது அற்றொழியும்படி, எவ்விடத்தையும் எனது குருநாதன் சந்நிதியாகக்கண்டு நான் நிஷ்டை சாதிப்பது எந்தநாளோ, எ - று.

**7.** நாம்பிரம மென்று நடுவேயொன் றுண்டாமா
றேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநா ளெந்நாளோ.

பொ - ரை. நாமே பிரமம் என்று சொன்னால் நடுவே ஒன்று உண்டாகுமாதலால் எல்லாம்ஒன்றாய் நிறைந்துவிளங்குவது எந்தநாளோ,எ-று.

ஒன்று - அகங்காரம்.

**8.** முச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ.

பொ - ரை. மூன்றுலோகம் முதலாக முற்றும், அகண்டரூப சச்சிதாநந்த சிவமே யென்பது எந்தநாளோ, எ - று.

மூன்று லோகங்களாவன - சுவர்க்கம், மத்தியம், பாதாளம் எனபன

**9.** எவ்வடிவும் பூரணமா மெந்தையுரு வென்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே யடங்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** எவ்வுருவமும், பூரணமாகிய எந்தையின் உருவமே யென்றிசைந்த அவ்வுருவத்துக் குள்ளே நான் ஒடுங்கும் நாள் எந்நாளோ.

**10.** சிந்தித்த தெல்லாஞ் சிவபூ ரணமாக
வந்தித்து வாழ்த்தி வணங்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** நான் நினைத்ததெல்லாம் சிவத்தின்து பூர்ணநிலையாகக் கொண்டு அதனைத் துதித்து வாழ்த்தி வணங்குகிற நாள் எந்நாளோ.

**11.** தாங்கியபார் விண்ணூடு தானே ஞானக்கினியா
யோங்கு மியோகவுணர் வுற்றிடுநா ளெந்நாளோ.

**பொ - ரை.** சேடனால் சுமக்கப்பட்ட பூமி, மேலுலகு முதலியன, தனக்குத்தானே ஞானக்கினியாய்த் தழைக்கிற யோகவுணர்ச்சி எனக்குப் பொருந்தும் நாள் எந்நாளோ, எ - று.

**12.** ஆசனமூர்த் தங்களற வகண்டா காரசிவ
பூசைசெய வாசை பொருந்துநா ளெந்நாளோ.

**பொ - ரை.** ஆசனமும் மூர்த்தங்களும் இல்லாதொழிய அகண்டா காரமாகிய சிவபூசைசெய்ய எனக்கு விருப்பமுண்டாகும்நாள் எந்நாளோ.

**13.** அஞ்செழுத்தி னுண்மை யதுவான வப்பொருளை
நெஞ்சழுத்தி யொன்றுகி நிற்குநா ளெந்நாளோ.

**பொ - ரை.** பஞ்சாக்ஷரத்தின் உண்மையாகிய அந்தப்பொருளை நான் என் மனத்திற் பதித்து அதனோடு ஒன்றுகி நிற்கும் நாள் எந்நாளோ.

**14.** அவ்வுயிர்போ லெவ்வுயிரு மானபிரான் றன்னடிமை
யெவ்வுயிரு மென்றுபணி யாஞ்செய்வ தெந்நாளோ.

**பொ - ரை.** அகரவுயிர் மற்றெல்லாவெழுத்தும் தானேயாய் நிற்றல் போல, எவ்வுயிரும் தானேயான இறைவனது அடிமைகளே எல்லாவுயிர் களுமென்று துணிந்து, யாம் அவன் பணிவிடை செய்வது எந்நாளோ.

அகரவுயிர் எல்லாவெழுத்துக்களிலும் வியாபித்து நிற்றல்போல, இறைவன் எல்லா வுயிர்களிலும் வியாபித்திருக்கிறு னென்பதாம்.

**15.** தேசிகர் கோனை திறன்மவுனி நந்தமக்கு
வாசி கொடுக்க மகிழுநா ளெந்நாளோ.

**பொ - ள.** குருராஜனை வெற்றிபொருந்திய மௌநி நமக்கு வாசி கொடுக்க நாம் மகிழ்ச்சி யடைவது எந்தநாளோ, எ - று.

வாசி - குதிரை, மேன்மை. வாசிகொடுத்தல் - வாயுதாரணை கைகூடச்செய்தல்.

**16.** குருலிங்க சங்கமமாக் கொண்டதிரு மேனி
யருண்மயமென் றன்புற் றருள்பெறுவ தெந்நாளோ.

**பொ - ள.** குருலிங்க சங்கமங்களாகக் கொண்ட திருமேனிகள் அருள்வடிவே யென்று நிச்சயித்து அவற்றின்கண் அன்பு மிகுந்து, திருவருளைப் பெறுவது எந்தநாளோ, எ - று.

குரு - ஆசாரியன், லிங்கம் - விக்கிரக ரூபமாகிய சிவம், சங்கமம் - பத்தர் குழாம்.

---

### காண்பேனோவென்கண்ணி.

**1.** சிந்திக்குந் தோறுந் தெவிட்டா வமுதேயென்
புந்திக்கு ணீதான் பொருந்திடவுங் காண்பேனோ.

**பொ - ள.** நினைக்குந்தோறும் தெவிட்டாத அமிர்தமே, என் புத்திக்குள்ளே நீவந்து பொருந்தி யிருக்கவும் நான் காணப் பெறுவேனோ.

**2.** கேவலத்தி னான்கிடந்து கீழ்ப்படா தின்பவருட்
காவலன்பா லொன்றிக் கலந்திடவுங் காண்பேனோ.

**பொ - ள.** கேவலாவத்தையில் நான்கிடந்து தாழ்வடையாத வண்ணம், சுகத்தைத் தருகிற அருளிறையி னிடத்திற் கலந் தொன்றாகவும் காணப் பெறுவேனோ, எ - று.

கேவலம் - மறப்பு.

**3.** தூரியங் கடந்தவொன்றே தூவெளியாய் நின்ற
பெரியநிறைவேயுனைநான் பெற்றிடவுங் காண்பேனோ.

**பொ - ள.** தூரியபதத்தைக் கடந்த ஒப்பற்ற பொருளே, பரிசுத்தாகாயமாய் நின்ற பெரிய பூரணமே, உன்னைநான் பெறவும் காண்பேனோ.

துரியபதம் 4-ஆம் பக்கத்திற் காண்க.

**4.** மாசற்ற வன்பர்நெஞ்சே மாறாத பெட்டகமாத்
தேசுற்ற மாமணிநின் றேசினையுங் காண்பேனோ.

**பொ - ள.** குற்றமில்லாத அன்பர்மனமே நீங்காத பெட்டியாகக் கொண்டு, அதனிடத்துத் தங்கிய ஒளிமிகுந்த மாணிக்கமே, உன்னொளியையும் நான் காணப் பெறுவேனோ, எ - று.

**5.** மாயா விகார மலமகல வெந்தைபிரா
னேயானு பூதி நிலைபெறவுங் காண்பேனோ.

போ - ளை. மாயா விகாரமாகிய மலினம் நீங்கும்படி எந்தை பெருமானது நேயானுபூதி நிலையை யடையவுங் காண்பேனோ, எ - று.

நேயம் - அன்பு. அநுபூதி-அநுபவம்.

**6.** பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே
மெய்யநினை மெய்யெனவே மெய்யுடனே காண்பேனோ.

போ - ளை. பொய் யுலகமும், பொய் யுறவினரும், பொய் யுடம்பும் பொய்யென்று நிச்சயித்து, மெய்யனே, உன்னை மெய்யென்று துணிந்து, இந்தச் சரீரத்தோடும் உன்னைக் காண்பேனோ, எ - று.

**7.** வாலற்ற பட்டமென மாயா மனப்படலங்
காலற்று வீழவுமுக் கண்ணுடையாய் காண்பேனோ.

போ - ளை. வாலற்றுவிழுந்த காற்றாடிபோல, மாயையாகிய மனோமாலிந்யம் அடியற்று விழுந்திடவும், மூன்று கண்களை யுடையவனே, நான் காண்பேனோ, எ - று.

மனோமாலிந்யம் - மனக்களங்கம்.

**8.** உள்ளும் புறம்பு மொருபடித்தாய் நின்றுசுகங்
கொள்ளும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ.

போ - ளை. உள்ளிலும் வெளியிலும் ஒருதன்மையாய் நின்று, சுகமடையும்படிக்கு, இறைவனே, நீ என்னைச் சேரவும் காண்பேனோ, எ-று.

**9.** காட்டுகின்ற முக்கட் கரும்பே கனியேயென்
ஆட்டமெல்லாந் தீரவுன தாடலையுங் காண்பேனோ.

போ - ளை. தோன்றுகின்ற முக்கட்கரும்பே, கனியே, என் ஆடல் எல்லாம் நீங்கும்படி, உனது ஆடலையும் காண்பேனோ, எ - று.

கண் - கணு.

**10.** தூங்காமற் றூங்கிச் சுகப்பெருமா னின்னிறைவி
னீங்காம னிற்கு நிலைபெறவுங் காண்பேனோ.

போ - ளை. சிவபெருமானே, உறங்காதுறங்கி, உன் பரிபூர்ண நிலையில் நான் நீங்காது நிற்கிற நிலையை யடையவும் காண்பேனோ, எ - று.

**11.** வாதவூ ராளிதனை வான்கருணை யால்விழுங்கும்
போதவூ ரேறேநின் பொன்னடியுங் காண்பேனோ.

போ - ளை. திருவாதவூரடிகளை மிகுந்த கிருபையினால் விழுங்கிய ஞானதேசத்துக் கிறைவனே, உன் திருவடியையும் காண்பேனோ, எ-று.

விழுங்கியது - சிதம்பரத்தில் தன்னோடு கலக்கச்செய்தது.

**12.** சாட்டையிலாப் பம்பரம்போ லாடுஞ் சடசால
நாட்டாமற வெந்தைசுத்த ஞானவெளி காண்பேனோ.

பொ-ரை. சாட்டையில்லாத பம்பரம்போல, ஆடுகிற சரீரத்தொகுதியின் விருப்பமொழிய, எமது தந்தையின், சுத்த ஞானகாயத்தைக் காண்பேனோ, எ - று.

சாட்டையில்லாப் பம்பரம்போலாடுஞ் சடசாலம் என்றது, சாட்டையின் வேகம் அடங்கி யாடும் பம்பரம்போல ஞானப்பொலிவின்றிச் சஞ்சரிக்கிற சரீரத் தொகுதியை.

**13.** மன்றாடும் வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக்
குன்றேநின் றாட்கீழ்க் குடிபெறவுங் காண்பேனோ.

பொ - ரை. அம்பலத்தில் நடிக்கின்ற எமது வாழ்க்கையே, மரகதம் சேர்ந்த மாணிக்க மலையே, உன் திருவடியின்கீழ்க் குடியாயிருக்கவும் காண்பேனோ, எ - று.

மரகதம் - உமாதேவி. மாணிக்கக் குன்று - சிவபெருமான்.

**14.** பொய்யென் றறிந்துமெமைப் போகவொட்டா தையவிந்த
வையங் கனமயக்க மாற்றிடவுங் காண்பேனோ.

பொ - ரை. ஐயனே, இந்தவுலகத்தின் பெரியமயக்கம் உலகத்தைப் பொய்யென் றுணர்ந்தும், எங்களை மேற்கதிக்குப் போகவொட்டாது, ஆகையால், இதனை நீக்கிடவும் காண்பேனோ, எ - று.

**15.** தாயினுநல்ல தயாளுவே நின்னை யுன்னித்
தீயின்மெழு கொத்துருகுஞ் சிந்தைவரக் காண்பேனோ.

பொ - ரை. தாயைப்பார்க்கிலும் நல்ல தயாளுவே, உன்னை நினைத்து நெருப்பிலிட்ட மெழுகைப்போல வுருகாநின்ற மனம் எனக்குண்டாகவும் காண்பேனோ, எ - று.

**16.** என்செயினுமென்பெறினு மென்னிறைவா வேழையன்யா
னின்செயலென் றுன்னு நினைவுவரக் காண்பேனோ.

பொ-ரை. என்னசெய்தாலும், அச்செயலுக் கேற்ற என்ன அடைந்தாலும் என் தலைவனே, அறிவிலேனாகிய நான், அவற்றை யெல்லாம் உன்செயலென்று நினைக்கிற நினைவு எனக்குண்டாகக் காண்பேனோ, எ-று.

**17.** எள்ளத் தனையு மிரக்கமிலா வன்பாவி
யுள்ளத்து மெந்தை யுலாவிடவுங் காண்பேனோ.

பொ - ரை. எள்ளளவாயினும் இரக்க மில்லாத வலிய பாவியாகிய எனது மனத்தினும் எமது தந்தை உலாவிடவும் காண்பேனோ, எ - று.

**18.** வஞ்சகத்துக் காலயமாம் வல்வினையே னுங்கெடுவே
னெஞ்சகத்தி லையாநீ நேர்பெறவுங் காண்பேனோ.

பொ - ரை. வஞ்சனைகளுக்கு ஆலயமாகிய வலிய வினைகளை யுடையேன், ஐயோ கெடுவேன், எனது நெஞ்சினுள், ஐயனே, நீ நேராக வரப் பெறவும் காண்பேனோ, எ - று.

**19.** தொல்லைப் பிறவித்துயர் கெடவுமெந்தை பிரான்
மல்லற் கருணைவழங் கிடவுங் காண்பேனோ.

பொ-ரை. பழமையாகிய பிறவித்துன்பம் கெட்டொழியவும் எந்தை பெருமான், தனது வளமாகிய கருணையை யருள்செய்யவும் காண்பேனோ.

**20.** வாளாருங் கண்ணார் மயற்கடலிலாழ்ந் தேன்சற்
றாளாக வெந்தை யருள்செயவுங் காண்பேனோ.

பொ-ரை. வாள்போன்ற கண்களையுடைய மாதரது ஆசைக் கடலில் அழுந்தினேன், அடியேன், உன் திருவடிக்கு அடிமையாகும்படி நீ கிருபை செய்யவும் காண்பேனோ, எ - று.

**21.** பஞ்சாய்ப் பறக்குநெஞ்சப் பாவியைநீ கூவியையா
அஞ்சாதே யென்றின்னருள் செயவுங் காண்பேனோ.

பொ - ரை. பஞ்சுபோலப் பறக்கின்ற மனத்தையுடைய பாவியேனை நீ வலிய அழைத்து, ஐயனே, அகப்படாதே யென்று, உன் இனிய கிருபை செய்யவும் காண்பேனோ, எ - று.

**22.** ஆடுகறங் காகியலமந் துழன்று மனம்
வாடுமெனை யையாநீ வாவெனவுங் காண்பேனோ.

பொ - ரை. சுழலாநின்ற காற்றாடியை யொத்து அலைந்துழன்று மனம் வாடுகின்ற என்னை, ஐயனே, நீ வாவென்றழைக்கவும் காண்பேனோ.

**23.** சிட்டர்க் கெளிய சிவனேயோ தீவினையேன்
மட்டற்ற வாசை மயக்கறவுங் காண்பேனோ.

பொ - ரை. அடியார்க் கெளியனாகிய சிவபெருமானே, ஓ, தீவினையேனாகிய நான், எல்லை யில்லாத ஆசையின் மயக்கமற் றொழியவும் காண்பேனோ, எ - று.

**24.** உண்ணின் றுணர்த்து முலைப்பிலா வொன்றேநின்
தண்ணென்ற சாந்தவருள் சார்ந்திடவும் காண்பேனோ.

பொ - ரை. எனக்குள்ளே யிருந்தறிவிக்கிற அழிவற்ற தனிப்பொருளே, உன் குளிர்ந்த சாந்தத்தோடு கூடிய அருளைச் சார்ந்திடவும் காண்பேனோ, எ - று.

**25.** ஓடுங் கருத்தொடுங்க வுள்ளுணர்வு தோன்றநினைக்
கூடும்படிக் கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ.

போ - ரை. பலவழிகளாக வோடுகின்ற மனமொடுங்கவும், உள்ளுணர்வு தோன்றவும், உன்னைக் கூடும்படிக்கு, இறைவனே, நீகூட்டவும் காண்பேனோ, எ - று.

**26.** வாக்கான் மனத்தான் மதிப்பரியாய் நின்னருளை
நோக்காம னோக்கிநிற்கு நுண்ணறிவு காண்பேனோ.

போ - ரை. வாக்கினாலும் மனத்தினாலும் மதித்துணர அரியவனே, உன்னருளைப் பாராமற் பார்க்கின்ற நுண்ணிய அறிவும் எனக்குண்டாகக் காண்பேனோ, எ - று.

**27.** இவ்வுடம்பு நீங்குமுனே யெந்தாய்கே ளின்னருளா
மவ்வுடம்புக் குள்ளே யவதரிக்கக் காண்பேனோ.

போ - ரை. நான் இந்தச்சரீரம் விடுமுன்னே, எந்தையே, கேட்பாயாக, உன்னருளாகிய அந்தவுடம்புக் குள்ளே பிறக்கவும் காண்பேனோ.

அவ்வுடம்புக்குள்ளே யவதரித்தல் - அவ்வுடம்பி லொன்றுதல்.

**28.** நித்தமா யொன்றாய் நிறஞ்சனமாய் நிர்க்குணமாஞ்
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனோ.

போ - ரை. நித்தியமாயும், ஒன்றாயும், நிரஞ்சனமாயும், நிர்க்குணமாயு மிருக்கிற சுத்தவெளியாகிய நீ வெளிப்படையாய் என்னெதிரே தோன்றவுங் காண்பேனோ, எ - று.

நிரஞ்சநம் - களங்கமின்மை.

**29.** கண்ணிறைந்த மோனக்கருத்தே யென்கண்ணே யென்
னுண்ணிறைந்த மாயை யொழிந்திடவுங் காண்பேனோ.

போ - ரை. கண்களில் நிறைந்த மோனக்கருத்தே, என்கண்ணே, என்மனத்தில் நிறைந்த மாயையானது நீங்கிடவும் நான் காண்பேனோ.

**30.** அத்தா விமலா வருளாளா வானந்த
சித்தாவெனக் குனருள் செய்திடவுங் காண்பேனோ.

போ - ரை. அத்தனே, விமலனே, அருளாளனே, ஆநந்த சித்தனே, எனக்கு உன்கிருபை செய்யவும் நான் காண்பேனோ, எ - று.

**31.** வீணேபிறந் திறந்து வேசற்றே னாசையறக்
காணே னிறைநின் கருணைபெறக் காண்பேனோ.

போ - ரை. பயனின்றியே பிறந்தும் இறந்தும் விடாய்த்தேன், ஆசையொழியக் காண்கிலேன், சிறிதேனும் உன் கருணையை நான்பெறக் காண்பேனோ, எ - று.

**32.** சட்டையொத்த விவ்வுடலைத் தள்ளுமுன்னே நான்சகச
நிட்டையைப் பெற்றையா நிருவிகற்பங் காண்பேனோ.

போ - ரை. சட்டைபோன்ற இந்தச் சரீரத்தைக் கீழே வீழ்த்து முன்னே, நான் சகச நிஷ்டையை யடைந்து, ஐயனே நிருவிகற்ப சமாதியையுங் காண்பேனோ, எ - று.

சகச நிஷ்டை - சதாநிஷ்ட்டை. நிருவிகற்பம்-வேறுபாடற்றது.

**33.** எல்லாந் தெரியுமிறைவா வென்னல்ல லெல்லாஞ்
சொல்லா முனீதான் றெருத்திரங்கக் காண்பேனோ.

போ - ரை. எல்லவற்றையு மறிகின்ற இறைவனே, என் துன்பத்தையெல்லாம் சொல்லா முன்னே, அளவுபடுத்தி நீயே யிரங்கியருளக் காண்பேனோ.

**34.** அண்டபகி ரண்ட மனைத்து மொரு படித்தாக்
கண்டவர்கள் கண்ட திருக் காட்சியையுங் காண்பேனோ.

பொ - ரை. அண்ட பகிரண்டங்க ளெல்லாம் ஒரு தன்மையதாகக் கண்டவர்கள் கண்ட உன் திருக் காட்சியையுங் காண்பேனோ, எ - று.

காட்சி - தரிசனம்.

**35.** ஊனிருந்த காயமுடனிருப்ப வெந்தை நின்பால்
வானிருந்த தென்னவுநான் வந்திருக்கக் காண்பேனோ.

போ - ரை. மாமிசம்பொருந்திய சரீரத்தோடிருக்கச் செய்தே, எந்தையே, உன்னிடத்து மேன்மை யமைந்திருத்தல்போல நான் வந்து உன்னிடத் தமைந்திருக்கவும் காண்பேனோ, எ - று.

**36.** தினையத் தனையுந் தெளிவறியாப் பாவியே
னினைவிற் பரம்பொருணீ நேர்பெறவுங் காண்பேனோ.

போ - ரை. தினையளவாயினும் தெளிவில்லாத பாவியேனது நினைவின்கண் பரம்பொருளாகிய நீ, நேர்படவுங் காண்பேனோ, எ - று.

**37.** துன்பமெனுந் திட்டனைத்துஞ் சூறையிட வையாவே
யின்ப வெள்ளம் வந்திங் கெதிர்ப்படவுங் காண்பேனோ.

போ - ரை. துக்கமென்கிற மேடுகளை யெல்லாம் வாரிக்கொண்டு போம்படி, ஐயனே, சுகப்பெருக்கு வந்து இவ்விடத்தில் எதிர்ப்படவும் நான் காண்பேனோ, எ - று.

## ஆகாதோவென்கண்ணி.

1. கல்லாத நெஞ்சங் கரைந்துருக வெத்தொழிற்கும்
வல்லாய் நின்னின்பம் வழங்கினு லாகாதோ.

பொ-ரை. கல்லாத மனமானது கரைந் துருகும்படி, எத்தொழிலி னும் வல்லவனே, உன் சுகத்தை எனக்குக் கொடுத்தால் ஆகாதோ, எ-று.

2. என்னை யறியவெனக் கறிவாய் நின்றருணின்
றன்னை யறிந்தின்பநலஞ் சாரவைத்தா லாகாதோ.

பொ-ரை. என்னையின்னுனென்று நான் அறியும்பொருட்டு, எனக் கறிவாகி நின்றருளிய உன்னை யறிந்து, இன்ப நலத்தை நான் சேரவைத்தா லாகாதோ, எ-று.

3. பொய்ம்மயமே யான புலைதீர வெந்தையின்ப
மெய்ம்மயம் வந்தென்னை விழுங்கவைத்தா லாகாதோ.

பொ-ரை. பொய் யுருவமான குற்றம் நீங்க, எந்தையே, உனது மெய்யுருவம் வந்து என்னை விழுங்கச் செய்தால் ஆகாதோ, எ-று.

4. மட்டிலாச் சிற்சுகமாம் வாழ்வேநின் னின்பமயம்
சிட்டர்போல் யானருந்தித் தேக்கவைத்தா லாகாதோ.

பொ-ரை. எல்லையில்லாத ஞான சுகமாகிய வாழ்க்கையே, உனது ஆனந்த ரூபத்தை, உன்னன்பர்போல நான் அனுபவித்துத் தேக்கும்படிச் செய்தால் ஆகாதோ, எ-று.

5. அத்தாநின் பொற்றாளடிக்கே யனு தினமும்
பித்தாக்கி யின்பம் பெருகவைத்தா லாகாதோ.

பொ-ரை. ஐயனே, உன் திருவடியின் கீழிருத்தற்கே, நாள்தோறும் பித்தேறச்செய்து, எனக்குச் சுகம் பெருகவைத்தால் ஆகாதோ, எ-று.

6. மெல்லியலார் மோகவிழற் கிறைப்பே னையாநின்
னெல்லை யிலானந்த நலமிச்சித்தா லாகாதோ.

பொ-ரை. மாதர்களுடைய மோகமாகிய விழற்புல்லைப் பயிராக்கும் பொருட்டு என்னறிவாகிய நீரை இறைப்பவனுகிய நான், ஐயனே, உனது எல்லையில்லாத இன்பநலத்தை விரும்பினுல் ஆகாதோ, எ-று.

7. சுட்டழகா யெண்ணுமனஞ் சூறையிட்டானந் தமயக்
கட்டழகா நின்னைக் கலக்கவைத்தா லாகாதோ.

பொ - ளை. சுட்டுதலையே அழகாக நினைக்கிற மனத்தைச் சூறையாடி, ஆநந்த ரூபமாகிய கட்டழகனே, நான் உன்னைக் கலக்கவைத்தால் ஆகாதோ, எ - று.

சுட்டு என்பதின் விவரத்தை 300-ஆம் பக்கத்திற் காண்க.

**8.** சோதியே நந்தாச் சுகவடிவே தூவெளியே
ஆதியே நின்னையறிய வைத்தா லாகாதோ.

பொ - ளை. சோதியே, கெடாத இன்புருவமே, பரிசுத்தாகாயமே, முதலே, நான் உன்னை யுணரவைத்தால் ஆகாதோ, எ - று.

**9.** நேசஞ் சிறிதுமிலே னின்பலனே நின்னடிக்கே
வாசஞ் செயவிரங்கி வாவென்று லாகாதோ.

பொ - ளை. அன்பு சிறிதுமில்லேன், நிர்மலனே, உன் திருவடியின் கீழே வசிக்கும்படி இரங்கியருளி, என்னை வாவென்றழைத்தால் ஆகாதோ:

**10.** என்னறிவுக் குள்ளே யிருந்ததுபோ லையாவே
நின்னறிவு ணின்னுடன்யா னிற்கவைத்தா லாகாதோ.

பொ - ளை. என்னுணர்வுக் குள்ளே நீ யிருந்ததுபோல, ஐயனே, உன்னுணர்வுக்குள்ளே உன்னோடு நான் ஒன்றி நிற்கும்படிச் செய்தால் ஆகாதோ, எ - று.

**11.** ஆதிப் பிரானேயென் னல்ல லிருளகலச்
சோதி ப்ரகாச மயந் தோன்றுவித்தா லாகாதோ.

பொ - ளை. ஆதிப்பெருமானே, எனது துன்பத்திற்குக் காரணமான அஞ்ஞானவிருள் நீங்கும்படி, சுயஞ்சோதி சொரூபம் எனக்குத் தோன்றும்படிச் செய்தால் ஆகாதோ, எ - று.

**12.** ஆசைச் சுழற்கடலி லாழாம லையாநின்
நேசப் புணைத்தா ணிறுத்தினு லாகாதோ.

பொ - ளை. ஆசையாகிய சுழல்களையுடைய பிறவிக்கடலில் அழுந்தாமல், ஐயனே, நேசித்தற்குரிய உன் திருவடியாகிய மரக்கலத்தை நானடைய நிறுத்தினால் ஆகாதோ, எ - று.

**13.** பாசநிகளங்க ளெல்லாம் பஞ்சாகச் செஞ்செவே
யீசவெனை வாவென் றிரங்கினு லாகாதோ.

பொ - ளை. பாசவிலங்குகளெல்லாம் செவ்வே பஞ்சாய்ப் பறக்க ஈசனே, என்னை வாவென்றழைத்து இரங்கி யருளினால் ஆகாதோ, எ-று.

**14.** ஓயாவுள்ளன்பா யுருகிவாய் விட்டரற்றிச்
சேயாகியெந்தைநின்னைச் சேரவைத்தா லாகாதோ.

போ - ரை. இடையறாத உள்ளன்பையுடையேனாய், மனங் கரைந்து, வாய்திறந்தலறி, குழந்தை போன்று, எந்தையே, உன்னைநான் சேரும்படிச் செய்தால் ஆகாதோ, எ - று.

**15.** ஆதியாம் வாழ்வா யகண்டிதமாய் நின்றபரஞ்
சோதிநீயென்னைத் தொழும்பனென்று லாகாதோ.

போ - ரை. முதல்வாழ்வாகி, பிரிக்கப் படாததாகி நின்ற மேலாகிய சோதியே, நீ என்னை உன் தொண்டன் என்றால் ஆகாதோ, எ - று.

**16.** விண்ணாரக்கண்ட விழிபோற்பரஞ்சோதி
கண்ணாரநின்னிறைவைக் காணவைத்தா லாகாதோ.

போ-ரை. ஆகாயத்தை நிறையப்பார்த்த கண்போல, பரஞ்சோதியே என் கண்ணார உனது பரிபூரண வியாபகத்தை நான் காணவைத்தால் ஆகாதோ, எ - று.

**17.** சேராமற்சேர்ந்து நின்றுசின்மயனே நின்மயத்தை
பாராமற்பாரெனநீ பக்ஷம்வைத்தா லாகாதோ.

போ - ரை. கூடாமல் கூடிநின்று, உன்னுருவத்தை நோக்காமல் நோக்கென்று, ஞானசொரூபனே, நீ என்மீது பக்ஷம்வைத்தால் ஆகாதோ.

**18.** கண்ணாடிபோலவெல்லாங் காட்டுந்திருவருளை
உண்ணாடியையா வுருகவைத்தா லாகாதோ.

போ - ரை. எல்லாப்பொருள்களையும் கண்ணாடி காட்டுவதுபோலக் காட்டுகிற திருவருளை, ஐயனே, நான் என்மனதால் நோக்கி யுருகச் செய்தால் ஆகாதோ, எ - று.

**19.** மூலவிருள்கால்வாங்க மூதறிவுதோன்றவருட்
கோலம்வெளியாகவெந்தை கூடுவித்தா லாகாதோ.

போ - ரை. பிறவிக்கு மூலமாகிய அஞ்ஞானவிருள் வேரற்றுப் போகவும், பேரறிவுண்டாகவும், திருவருட்கோலம் வெளிப்படவும், எந்தையே, நீ சேர்வித்தால் ஆகாதோ, எ - று.

**20.** சாற்றரியவின்பவெள்ளந் தாக்குமதினீழ்மூழ்க்கி
ஆற்றமுறுமென்னவதி லுண்மைசொன்னலாகாதோ.

போ - ரை. சொல்லரிய இன்பப் பெருக்குத் தோற்றுவதில் நீ தோன்றினல், ஊற்றமுண்டாமென்று எனக்கு அதின்உண்மை வெளியிட்டால் ஆகாதோ, எ - று.

ஊற்றம் - கெடுதி. நான் என்று விவகரிக்க வேண்டியதை நீயெனக் கூறினர். சிவாநந்தத்தை யெதிரிட்டறிதல் கூடாதென்பது கருத்து.

**21.** கையுங்குவித்திரண்டு கண்ணருவிபெய்யவரு
ஐயநின்றாட்கீழே யடிமைநின்று லாகாதோ.

போ - ரை. கைகளையுங்கூப்பி இரண்டுகண்களும் அருவிகள்போல நீரைப்பொழிய அருள் செய்கின்ற ஐயனே, உன் திருவடியின் கீழே அடியேன் நின்றால் ஆகாதோ, எ - று.

---

## இல்லையோவென்கண்ணி.

**1.** ஏதுந்தெரியா தெனைமறைத்த வல்லிருளை
நாதநீக்கவொரு ஞானவிளக் கில்லையோ.

போ - ரை. யாதொரு பொருளும் தோன்றவொட்டாமல் என்னை மறைத்த வலிய அஞ்ஞானவிருளை, நாதனே, நீ விலக்குதற்கு உன்னிடத்தில் ஒப்பற்ற ஞானதீபம் இல்லையோ, எ - று.

**2.** பணியற்று நின்று பதைப்பறவென் கண்ணுண்
மணியொத்த சோதியின்ப வாரியெனக் கில்லையோ.

போ-ரை. தொழில்கள் யாவு மொழித்துநின்று சலநமற, என் கண் மணிபோன்ற சோதியே, இன்பப்பெருக்கு எனக்குக்கிடைப்பதில்லையோ.

**3.** எம்மா லறிவதறவெம் பெருமான் யாதுமின்றிச்
சும்மா விருக்கவொரு சூத்திரந்தா னில்லையோ.

போ - ரை. எம்பெருமானே, எங்களால் அறியப்படுத லொழிந்து யாதொரு முயற்சியு மில்லாமல் சும்மா இருக்கும்படி ஒரு உபாயந்தா னில்லையோ, எ - று.

**4.** நாய்க்குங் கடையானே ஞதாநின்னின்பமயம்
வாய்க்கும் படியினியோர் மந்திரந்தா னில்லையோ.

போ - ரை. நாயகனே, அடியேன் நாயினும் இழிந்தவன் ஆனேன், உன் சுகரூபம் எனக்குக் கிடைக்கும்படி ஒரு மந்திரமுமில்லையோ, எ - று

5. ஊனாகநிற்கு முணர்வை மறந்தையாநீ
தானாக நிற்கவொரு தந்திரந்தா னில்லையோ.

பொ-ரை. ஐயனே, உடம்பே நானாகநினைக்கின்ற ஞானத்தை மறந்து நான் நீயேயாகி நிற்பதற்கு ஒரு உபாயமாயினு மில்லையோ, எ - று.

6. அல்லும்பகலு மகண்டவடிவே யுனைநான்
புல்லும்படி எனக்கோர் போதனைதா னில்லையோ.

பொ - ரை. அகண்டரூபமே, இரவினும் பகலினும் நீக்கமில்லாமல் உன்னை நான் தழுவும்படி எனக்கு ஓர் போதிப்பும் இல்லையோ, எ - று.

---

## வேண்டாவோவென்கண்ணி.

1. கண்டவடி வெல்லாநின் காட்சியென்றே கைகுவித்துப்
பண்டுமின்று நின்றவென்னைப் பார்த்திரங்கவேண்டாவோ.

பொ - ரை. கண்ட வுருவங்கள் யாவும் உன் தரிசனமேயென்று கைகூப்பி முன்னும் இப்போதும் அந்த நிலையிலே நின்ற என்னைப்பார்த்து இரங்கியருள வேண்டாவோ, எ - று.

2. வாதனையோடாடு மனப்பாம்பு மாயவொரு
போதனைதந்தையா புலப்படுத்த வேண்டாவோ.

பொ - ரை. ஐயனே, விஷயவாசனையோடு கூடி யாடுகின்ற மனமென்னும் சர்ப்பம் மடிய எனக்குஉன் திருமந்திரத்தைப்போதித்து அதனை எனக்கு அறிவுறுத்த வேண்டாவோ, எ - று.

3. தன்னையறியத் தனியறிவாய் நின்றருளு
நின்னையறிந் தென்னறிவை நீங்கிநிற்க வேண்டாவோ.

பொ - ரை. தன்னை யறியும்பொருட்டு ஒப்பற்ற அறிவாய் நின்றருள் செய்கிற உன்னை யறிந்து, என்னறிவை யொழித்து நிற்கவேண்டாவோ.

4. அள்ளக்குறையா வகண்டிதானந்தமென்னும்
வெள்ளமெனக்கையா வெளிப்படுத்த வேண்டாவோ.

பொ-ரை. முகக்கக்குறையாத அகண்டாநந்தமென்கிற வெள்ளத்தை, ஐயனே, எனக்கு வெளிப்படுத்த வேண்டாவோ, எ - று.

அகண்ட ஆநந்தம் - அளவுபடுத்தப் படாத இன்பம்.

**5.** அண்டனே யண்ட ரமுதேயென் னாருயிரே
தொண்டனேற்கின்பந் தொருத்திரங்க வேண்டவோ.

**போ - ளா.** தேவனே, தேவாமிர்தமே, என் அரியவுயிரே, உன் தொழும்பனாகிய எனக்கு இன்பங்கொடுத்து இரங்கவேண்டாவோ, எ - று.

**6.** பாராதேநின்று பதையாதேசும்மாதான்
வாராவெனவும் வழிகாட்ட வேண்டாவோ.

**போ - ளா.** எதிரிட்டுப்பாராதே, நின்றுதுடியாதே, சும்மாவருவாய், என்று நீ எனக்கு முத்தி னெறியைக் காட்ட வேண்டாவோ, எ - று.

---

நல்லறிவேயென்கண்ணி.

**1.** எண்ணிறைந்தமேன்மைமடைத்தெவ்வுயிர்க்குமவ்வுயிராய்க்
கண்ணிறைந்தசோதியைநாங் காணவா நல்லறிவே.

**போ - ளா.** அன்பரது மனோரதங்களெல்லாம் நிறைந்த மேன்மையைப் பொருந்தி, எவ்வகைப்பட்ட ஜீவராசிகளுக்கும் அவ்வவ்வுயிர்களாய், அவற்றின் கண் நிறைந்து நிற்கிற ஒளியை, யாம்பார்க்க எனது நற்புத்தியே, நீ வருவாயாக, எ - று.

**2.** சித்தானநாமென் சடத்தைநாமென்னவென்றுஞ்
சத்தானவுண்மைதனைச் சாரவா நல்லறிவே.

**போ - ளா.** சித்தாகிய நாம், சடத்தை நாம் என்று சொல்லுவதற்குக் காரணம்யாது என்று(விசாரித்து அதனையொழித்து) எக்காலத்தும்சத்தாயிருக்கிற உண்மைப் பொருளையடைய நல்லறிவே நீ வருவாயாக, எ - று.

**3.** அங்கு மிங்கு மெங்குநிறை யற்புதனார் பொற்பறிந்து
பங்கயத்துள் வண்டாய்ப் பயன்பெறவா நல்லறிவே.

**போ - ளா.** அவ்விடத்தும் இவ்விடத்தும் எவ்விடத்தும் நிறைந்திருக்கிற அற்புதமூர்த்தியின் மேன்மையையறிந்து, தாமரைமலரில் வண்டுபோலப் பயனடைய நற்புத்தியே நீ வருவாயாக, எ - று.

**4.** கான்றசோறென்னவிந்தக் காசினிவாழ்வத்தனையுந்
தோன்றவருள் வெளியிற் றோன்றவா நல்லறிவே.

**போ - ளா.** கக்கின சோறுபோல, இந்தவுலகவாழ்க்கை முழுதும் அருவருப்பாய்த் தோன்றும்படி திருவருளாகிய வெளியின்கண் தோன்றுமாறு நற்புத்தியே நீ வருவாயாக, எ - று.

---

## பலவகைக்கண்ணி.

**1.** என்னரசே கேட்டிலையோ வென்செயலோ வேதுமில்லை
தன்னரசு நாடாகித் தத்துவங் கூத்தாடியதே.

**போ - ரை.** என்னிறைவனே, என்தொழிலென்பது சிறிதுமில்லை, தத்துவங்கள் யாவும் என்னுடம்பைத் தன்னரசுநாடாகக்கொண்டு நடனஞ் செய்ததை நீ கேட்டறிந்தா யில்லையோ, எ - று.

**2.** பண்டொருகா லின்பாற் பழக்கமுண்டோ வெந்தைநினைக்
கண்டொருகாற் போற்றக் கருத்துங் கருதியதே.

**போ - ரை.** எந்தையே ஒருகால் உன்னைக்கண்டு வணங்க என்மனம் நினைந்தது, அதனால், பூர்வம் ஒருகால் உன்னிடத்தில் அதற்குப்பழக்க முண்டோ நீ சொல்லாய், எ - று.

### வேறு.

**3.** கண்டனவே காணுமன்றிக் காணுவோ காணுவென்
கொண்டறிவே னெந்தைநினைக் கூடுங் குறிப்பினையே.

**போ - ரை.** பார்த்தனவே தோன்றுவ தன்றிப் பார்க்காதனவோ தோன்று, அங்ஙனமாக, எந்தையே, உன்னையடையும் நிதானத்தை இது வரையில் அறியாத நான் இப்போது யாது கொண்டறியக்கடவேன், எ-று.

**4.** கல்லா லடியில்வளர் கற்பகமே யென்னளவோ
பொல்லா வினைக்குப் பொருத்தந்தான் சொல்லாயே.

**போ - ரை.** கல்லாலின் மூலத்தில் தழைத்த கற்பகத்தருவே, பொல்லாத வினைகளுக்கு என்னிடந்தான் பொருத்தமோ, வேறிடமில்லையோ நீ சொல்லாய், எ - று.

**5.** தப்பிதமொன் றின்றியது தானாகி நிற்கவுண்மை
செப்பியது மல்லாலென் சென்னியது தொட்டனையே.

**போ - ரை.** தவறு ஒன்றுமில்லாமல், அதுவே தானாகி நிற்கும்படி, எனக்கு ஒரு உண்மை மொழி சொன்னது மல்லாமல் குருவடிவாய் வந்து என் சிரசையுந் தீண்டினையே, எ - று.

சிரசைத் தீண்டுதலை ஹஸ்தமஸ்தக சம்யோகம் என்பவர் வடநூலர்.

### வேறு.

**6.** மாசான னெஞ்சனிவன் வஞ்சனென்றோ வாய்திறந்து
பேசா மௌனம் பெருமான் படைத்ததுவே.

**போ - ரை.** மலினமுள்ள மனதை யுடையவனாகிய இவன் வஞ்சகன் என்று தானோ, எம்பெருமானே, நீ பேசாமையாகிய மௌனநிலையை யடைந்தது, எ - று.

**7.** கற்பதெல்லாங் கற்றேழுக் கண்ணுடையாய் நின்பணியாய்
நிற்பது கற்றன்றோ நிருவிகற்ப மாவதுவே.

**போ - ரை.** மூன்றுகண்களை யுடையவனே, கற்கவேண்டு மவற்றை யெல்லாங் கற்றுளோம் ஆயினும் உன் பணியின்கண் நிற்பதைக் கற்றா லன்றோ நிருவிற்கப மடைவது, எ - று.

**8.** முன்னளவில் கன்ம முயன்றா னிவனென்றோ
வென்னளவி லெந்தா யிரங்கா திருந்ததுவே.

**போ - ரை.** இவன் முற்காலத்தில் அளவற்ற தீவினைகளை முயன்று செய்தான் என்று திருவுளம்பற்றியோ என்னிடத்தில் இரக்கஞ்செய்யா திருந்தது, எந்தையே, எ - று.

வே று.

**9.** நெஞ்சகம் வேறாகி நினைக்கூட வெண்ணுகின்ற
வஞ்சகனுக் கின்பமெந்தாய் வாய்க்குமா றெவ்வாறே.

**போ-ரை.** மனம் வேறுபட்டு, உன்னைக் கலக்க எண்ணுகிற வஞ்சக னாகிய எனக்கு, எந்தையே இன்பங் கிடைக்கும்வழி யெப்படி, எ - று.

மனம் வேறுபடாதிருப்பி னன்றோ இன்பங் கிடைக்கும் என்பது கருத்து.

வே று.

**10.** பள்ளங்க டோறும் பறந்தபுனல் போலுலகி
லுள்ளம் பரந்தா லுடையாயென் செய்வேனே.

**போ - ரை.** உடையவனே, பள்ளத்தாக்குகளி லெல்லாம் பரவிய நீர்போல உலக வியாபாரத்தின்கண் என் மனம் பரவினால் உன் திருவரு ளுதவியின்றி நான் யாது செய்வேன், எ - று.

**11.** முன்னினைக்கப் பின்மறைக்கு மூடவிரு ளாகெடுவே
னென்னினைக்க வென்மறக்க வெந்தை பெருமானே.

**போ - ரை.** எந்தைபெருமானே, முன்னே நினைத்தால் அதனை உடனே மறைக்கிறது மூடத்தன்மையாகிய அஞ்ஞானவிருள். ஆதலால், நான் எந்தகாரியத்தை நினைப்பேன் என்ன காரியத்தை மறப்பேன், எ - று.

**12.** வல்லசுரா போறுநின் வான்கருணை யென்னிடத்தே
யில்லாதே போனா லெவ்வண்ண முய்வேனே,

பொ - ரை. சர்வ வல்லமையுள்ளவனே, மௌநநிலையை யுடைய வனே, உனது மேலான கருணை என்னிடத்தில்லா தொழிந்தால்; நான் எவ்வாறு பிழைப்பேன், எ - று.

வான் கருணை - மேகம்போலக் கைம்மாறு கருதாத கருணை என்றலும் பொருந்தும்.

வேறு.

**13.** வாக்குமனமு மவுனமுற வெந்தை நின்னை
நோக்கு மவுனமிந்த நூலறிவி லுண்டாமோ.

பொ - ரை. எந்தையே, வாக்கும் மனமும் மௌநநிலையை யடையும்படி உன்னையே நோக்கிநிற்கிற மௌநநிலையானது, இந்தச் சாஸ்திரஞானத்தினா லுண்டாகுமோ, எ - று.

அநுபவ ஞானத்தா லுண்டாகு மென்பது கருத்து.

**14.** ஒன்றாய்ப் பலவா யுலகமெங்குந் தானேயாய்
நின்றாயை யாவென்னை நீ நீங்கற் கெளிதாமோ.

பொ - ரை. ஐயனே, உலக முழுதினும், ஒன்றாயும் பலவாயும் நீயேயாகி நின்றனை, ஆதலால், நீ என்னை நீங்குதற்கு எளிதாகுமோ, எ - று.

நீங்கின், உனது சருவ வியாபகத்துக்குப் பழுதாமென்பது கருத்து.

**15.** ஆவித்துணையே யருமருந்தே யென்றனைநீ
கூவியழைத்தின்பங் கொடுத்தாற் குறைவாமோ.

பொ - ரை. உயிர்த்துணையே, அரிய தேவாமிர்தமே, என்னை நீ கூவிய அழைத்து, இன்பத்தைத் தந்தால் உனக்குக் குறையுண்டாகுமோ, எ-று.

**16.** எத்தனையோ நின்விளையாட் டெந்தாய்கே ளிவ்வளவென்
றத்தனையு மென்னா லறியுந் தரமாமோ.

பொ - ரை. எந்தையே, கேட்பாயாக, உன் திருவிளையாடல்கள் எவ்வளவோ வுள்ளன, அவ்வளவும், இத்தனையென்று என்னால் அறியப்படும் தரத்தனவோ, எ - று.

**17.** தேடுவார் தேடுஞ் சிவனேயோ நின்றிருத்தாள்
கூடுவான் பட்டதுயர் கூறற் கெளிதாமோ.

பொ - ரை. தேடுதற்குரியரால் தேடப்படுகிற சிவனே, ஓ, உன் திருவடியைக் கூடுவதற்கு நான் பட்ட துன்பம் சொல்லுவதற்கு எளிதாகுமோ.

தேடுவார் - இருவினையொப்பும் மலபரிபாகமும் கைவந்தவர்.

வேறு.

**18.** பற்றினதைப் பற்றுமெந்தாய் பற்றுவிட்டாற் கேவலத்தி
லுற்றுவிடு நெஞ்சமுனை யொன்றிநிற்ப தெப்படியோ.

போ - ரை. எந்தையே, என்மனமானது, பிடித்ததையே பிடிக்கும், பிடிப்பைவிட்டால், கேவலாவஸ்தையைப் பொருந்தும், இவைகளை யொழிந்து, அம்மனமானது உன்னைப் பொருந்தி நிற்பது எவ்வாறோ, எ - று.

**19.** ஒப்பிலா வொன்றே நின்னுண்மையொன்றுங் காட்டாமற்
பொய்ப்புவியைமெய்போற் புதுக்கிவைத்த தென்னேயோ.

போ - ரை. ஒப்பற்ற ஒருபொருளே, உன்னுண்மை நிலையைச் சிறிதுங் காட்டாமல், பொய் யுலகத்தை மெய்போலப் புதுக்கிவைத்தது என்னையோ, எ - று.

**20.** காலால் வழிநடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ.

போ - ரை. காலைக்கொண்டு வழிநடவும் காலத்தில், கண்ணுண்டானாற்போல, என்னறிவினிடத்தே தோன்றி அறிவுருவாய்நிற்கமாட்டாயோ.

**21.** தன்னரசு நாடாஞ் சடசால பூமிதனி
லென்னரசே யென்னை யிறையாக நாட்டினையோ.

போ - ரை. என்னிறைவனே, தன்னரசு நாடாகிய சடசால பூமியின்மேல், என்னை யிறைவனாக்கி வைத்தனையோ, எ - று.

என்னையிறையாக்கி வைத்தனையோ என்றது, என்னைச் சடசாலத்துள் தலைவனாக்கிவைத்தாயோ என்றபடி. சடசாலம்-அசித்துப் பொருள்களின் கூட்டம்.

வேறு.

**22.** திங்க ளமுதா நின்றிருவாக்கை விட்டரசே
பொங்கு விடமனைய பொய்ந்நூல் புலம்புவனே.

போ - ரை. சந்திரனிடத்துள்ள அமுதம் போன்ற உனது திருவாக்கை விட்டு, இறைவனே அதிகரித்த விஷத்தை யொத்த பொய்ச்சாத்திரங்களைக்கற்றுப் புலம்புவேனே, எ - று.

திங்கள்-இறைவனது திருமுக மண்டலத்துக்கு உவமம். திங்களமுது-சந்திரனை யணிந்த அமுதமயனே என இறைவனை விளிப்பினுமாம்.

**23.** உன்னவுன்ன வென்னையெடுத்துள் விழுங்குநின்னிறைவை
யின்னமின்னங் காணும லெந்தாய் சுழல்வேனே.

பொ - ரை. நினைக்க நினைக்க, என்னையெடுத்து உள்ளேபொருந்த விழுங்குகிற உன் பூர்ணநிலையை இன்னமுங் காணாமல், எந்தையே, சுழல் வேனே, எ - று.

**24.** ஆரா வமுதனைய வானந்த வாரியென்பாற்
றூரா மலையாநீ தள்ளிவிட வந்ததென்னே.

பொ - ரை. ஐயனே, தெவிட்டாத அமுதம்போன்ற ஆநந்த சாக ரத்தை எனக்குக் கொடுக்காமல், நீ என்னைத் தள்ளிவிடும்படி நேரிட்ட தற்குக் காரணம் யாதோ, எ - று.

---

நின்றநிலை.

**1.** நின்றநிலையேநிலையாவைத்தானந்த
நிலைதானேநிருவிகற்பநிலையுமாகி
என்றுமழியாதவின்பவெள்ளந்தேக்கி
இருக்கவெனைத்தொடர்ந்துதொடர்ந்திழுக்குமந்தோ.

பொ - ரை. நான் நின்ற நிலையையே நன்னிலையாகவைத்த ஆநந்த நிலையே, நிருவிகற்ப நிலையுமாகி, எக்காலத்தும் அழியாத சுகவெள்ளத்தைத் தேக்கெறிந் திருக்கும்படி, என்னைப் பற்றிப்பற்றி யிழுக்கின்றது, எ - று.

**2.** இருக்காதிமறைமுடிவுஞ்சிவாகமாதி
இதயமுங்கைகாட்டெனவேயிதயத்துள்ளே
ஒருக்காலேயுணர்ந்தவர்கட்கெக்காலுந்தான்
ஒழியாதவின்ப வெள்ளமுளவாநிற்கும்.

பொ - ரை. இருக்குமுதலிய வேதாந்தப்பொருளும், சிவாகமம் முத லானவைகளுடைய கருத்துப்பொருளும், கை காட்டு என்றே, ஒருமிக்க அறிந்த அறிஞருக்கு, எக்காலத்தும் நீங்காத ஆநந்தப் பெருக்குப் பெருகா நிற்கும், எ - று.

கைகாட்டு - கையமைத்தல்.

**3.** கற்றதுங்கேட்டதுந்தானேயேதுக்காகக்
கடபடமென்றுருட்டுதற்கோகல்லாலெம்மான்
குற்றமறக்கைகாட்டுங்கருத்தைக்கண்டு
குணங்குறியற்றின்பநிட்டைகூடவன்றோ.

போ - ரை. கற்ற கல்வியும் கேட்ட கேள்வியும் எதன் பொருட்டு, கடம் என்றும் படம் என்றும் தர்க்கம் பேசிப் பிதற்றுதற்குத் தானோ, கல் லாலினிழலி லெழுந்தருளிய எம்பெருமான், நமது பிழைக ளெல்லாம் ஒருங்கே நசிக்கும்படி, கைகாட்டின கருத்தை யுணர்ந்து, குணங்குறிகளை நீங்கி, சுக நிஷ்டையை யடைதற் கல்லவோ, எ - று.

---

## பாடுகின்றபனுவல்.

**1.** பாடுகின்ற பனுவலோர்க, டேடுகின்ற செல்வமே
நாடுகின்ற ஞானமன்றி, லாடுகின்ற வழகனே.

போ-ரை. பாடப்பட்ட சாஸ்திரஞான முள்ளவர்கள், அந்த ஞான த்துக்குப் பயன் நீ யாதலால், அவர்களால் தேடப்படுகிற செல்வமே, யாவ வரும் விரும்புகின்ற சிற்சபையில் நிருத்தஞ் செய்கின்ற அழகனே, எ-று.

**2.** அத்தனென்ற நின்னையே, பத்திசெய்து பனுவலால்
பித்தனின்று பேசவே, வைத்த தென்னவாரமே.

போ-ரை. எல்லாருக்கும் பரம பிதாவாகிய உன்னையே பத்தி பண்ணி, பித்தனாகிய நான், நூல்களாற் புகழ்ந்து பேசும்படி என்னை வைத்ததற் குக் காரணம் என்ன அன்பின் மிகுதியோ, அறிகிலேன், எ - று.

**3.** சிந்தையன்பு சேரவே, நைந்துநின்னை நாடினேன்
வந்துவந்து வின்பமே, தந்திரங்கு தானுமே.

போ - ரை. மனத்தின்கண் அன்பு மிக, அது காரணமாக, நைந்து, உன்னை விரும்பினேன், ஆதலால், சிவனே, என்னிடத்துப் பலமுறை வந்து, சுகம் தந்து, இரங்கி யருளல் வேண்டும்.

**4.** அண்டரண்டம் யாவுநீ, கொண்டுநின்ற கோலமே
தொண்டர்கண்டுசொரிகணீர், கண்டநெஞ்சுகரையுமே.

போ - ரை. அண்டங்களி லுள்ளவர்களும், அவர்களுக் கிருப்பிட மாகிய அண்டங்களும் ஆகிய எல்லாம் நீ கொண்டு நின்றகோலமே யாகத் தொழும்பர்கள் கண்டு, ஆநந்த மிகுதியால் பொழியாநின்ற கண்ணீரைக் கண்ட என் மனம் உருகா நிற்கும், எ - று.

**5.** அன்னைபோலவருண்மிகுத்து, மன்னுஞானவரதனே
என்னையேயெனக்களித்த, நின்னையானுநினைவனே.

போ-ரை. தாய்போலக் கிருபை மிகுந்து நிலைபெற்றிருக்கிற ஞானக் கொடையாளனே, என்னையே எனக்குக் கிருபைசெய்த வுன்னை நானும், நினைக்கக்கடவேன், எ - று.

என்னை யென்றது ஆன்மாவை.

---

## ஆநந்தக்களிப்பு.

**1.** ஆதியநாதியுமாகி-எனக்கானந்தமாயறிவாய்நின் றிலங்குஞ், சோதிமௌனியாய்த்தோன்றி - அவன், சொல்லாதவார்த்தையைச்சொன்னாண்டிதோழி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். ஆதி அநாதியும் ஆகி-எல்லாவற்றிற்கும் தான்முதலாகி தனக்கொரு முதலில்லாததாகி, எனக்கு - என்னளவிலும், ஆநந்தம் ஆய்-சுகத்தைக் கொடுப்பவனாகி, நின்று இலங்கும் - நின்று விளங்குகின்ற, சோதி-தேஜோராசியாகிய இறைவன், மௌநியாய்த் தோன்றி-மௌந தேசிகனாயெழுந்தருளி, அவன் - அவ்விறைவன், சொல்லாத வார்த்தையை - வாயினாற் சொல்லக் கூடாத வார்த்தையை, சொன்னாண்டி - கைகாட்டினால் உணர்த்தினானேடி, தோழி - ஹேசகீ, சங்கர, எ - று.

**2.** சொன்னசொல்லேதென்றுசொல்வேன்-என்னைச்சூதாய்த் தனிக்கவேசும்மாவிருத்தி, முன்னிலை யேதுமில்லாதே-சுக, முற்றச்செய்தேயென்னைப் பற்றிக்கொண்டாண்டி — சங்கர சங்கர சம்பு.

இ - ள். சொன்னசொல் - சொன்ன சொல்லை, ஏது என்று சொல்வேன்-யாதென்று சொல்லுவேன், என்னை - அடியேனை, சூது ஆய் - கபடமாக, தனிக்க-தனிமையாக, சும்மா இருத்தி-சும்மா இருக்கச்செய்து, முன்னிலை ஏதும் இல்லாதே-முன்னிலைச் சுட்டொன்று மில்லாமலே, சுகம் முற்றச்செய்து - ஆநந்தம் மேலிடச்செய்து, என்னைப்பற்றிக் கொண்டாண்டி - என்னைக் கவர்ந்து கொண்டானேடி, சங்கர, எ - று.

**3.** பற்றியபற்றறவுள்ளே - தன்னைப்பற்றச்சொன்னான் பற்றிப் பார்த்தவிடத்தே, பெற்றதையேதென்றுசொல்வேன் - சற்றும், பேசாதகாரியம்பேசினான்தோழி—சங்கர சங்கரசம்பு.

இ - ள். பற்றிய பற்று அற - பற்றின பற்றுக்கள் இல்லாமல், உள்ளே - உள்ளேதானே, தன்னைப்பற்றச் சொன்னான்-தன்னையே ஆதாரமாகப் பற்றும்படி சொல்லினான், பற்றிப்பார்த்த இடத்து - அவ்வாறு பற்றி நோக்கினவிடத்தில், பெற்றதை - நான் அடைந்த பேற்றை, ஏது என்று சொல்வேன் - யாதென்று சொல்லமாட்டுவேன், சற்றும் - சிறிதும், பேசாத - பேசத்தகாத, காரியம் - காரியத்தை, பேசினான் - பேசினன், தோழி - ஹேசகீ, சங்கர, எ - று.

4. பேசாவிடும்பைகள்பேசிச்-சுத்தப் பேயங்கமாகிப்பிதற்றித் திரிந்தேன், ஆசாபிசாசைத்துரத்தி - ஐய, னடியிணைக்கீழே யடக்கிக்கொண்டாண்டி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். பேசா இடும்பைகள்பேசி - பேசத்தகாத துன்பத்துக்கேதுவான வார்த்தைகளைப் பேசி, சுத்தப் பேய் அங்கம் ஆகி - சுத்தப் பேயுடம்பாகி, பிதற்றித் திரிந்தேன்-உளரித் திரிந்தேன், (அப்படி யிருக்கும்போது) ஆசாபிசாசைத் துறத்தி-ஆசையாகிய பேயையோட்டி, ஐயன்-இறைவன், அடியிணைக்கீழே-தன் திருவடியிணையின் கீழே, அடக்கிக்கொண்டாண்டி-ஒடுக்கிக் கொண்டானேடி, சங்கர, எ - று.

5. அடக்கிப்புலனைப்பிரித்தே-அவ ஞகியமேனியிலன்பைவளர்த்தேன், மடக்கிக்கொண்டானென்னைத்தன்னுட்-சற்றும், வாய்பேசா வண்ணமரபுஞ் செய்தாண்டி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். அடக்கி - ஒடுக்கி, புலனைப்பிரித்து-ஐம்புலன்களை வேறுபிரித்து, அவன் ஆகிய மேனியில் - அவனது ஹிதமான திருமேனியின்கண், அன்பை வளர்த்தேன் - அன்பைப் பெருக்கினேன், (அப்படி பெருக்கினவுடனே) என்னை - அடியேனை, தன்னுள் மடக்கிக்கொண்டான் - தனக்குள்ளே யொடுக்கிக்கொண்டு, சற்றும்-சிறிதும், வாய்பேசாவண்ணம்-வாய் பேசாதவகை, மரபும் செய்தாண்டி-உபாயத்தையும் செய்தானேடி, சங்கர.

6. மரபைக்கெடுத்தனன்கெட்டேன்-இத்தைவாய்விட்டுச்சொல்லிடின்வாழ்வெனக்கில்லை, கரவுபுருஷனுமல்லன் - என்னைக், காக்குந்தலைமைக்கடவுள்காண்மின்னே—சங்கர சங்கர சம்பு.

இ-ள். மரபைக்கெடுத்தனன்-முறைமையையழித்தான், கெட்டேன்-ஆகெடுவேன், இத்தை - இதனை, வாய்விட்டுச் சொல்லிடின் - வாய்திறந்து சொன்னால், எனக்கு வாழ்வு இல்லை - எனக்குச் சுகவாழ்க்கை யில்லையாகும்; கரவு புருஷனும் அல்லன் - (அவன்) சோரநாயகனும் அல்லன், (மற்றென்னெனின்) என்னைக் காக்கும் - என்னைக் காக்கின்ற, தலைமைக் கடவுள் - முதன்மையை யுடைய தெய்வமே யாவன், சங்கர, எ - று.

7. கடலின்மடைவிண்டதென்ன-இரு கண்களுநடமானந்தக்கண்ணீர்சொரிய, உடலும்புளகிதமாக-என, துள்ளமுருகவுபாயஞ்செய்தாண்டி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். கடலின் மடைவிண்டது என்ன - கடலின் மடைதிறந் தாற்போல, இரு கண்களும் - இரண்டு கண்களும், ஆநந்தக் கண்ணீர் சொரிய-இன்பக்கண்ணீரைப் பொழியவும், உடலும் புளகிதம் ஆக-உடம் பும் புளகமரும்பவும், எனது உள்ளம் உருக - என்மன முருகவும், உபாயம் செய்தாண்டி - உபாயம் பண்ணினுனேடி, சங்கர, எ - று.

**8.** உள்ளதுமில்லதுமாய்முன் - னுணர்வதுவாயுன் னுளங்கண்ட தெல்லாம், தள்ளெனச்சொல்லி யென்னையன் - என்னைத், தானுக்கிக்கொண்டசமர்த்தைப்பார் தோழி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். உள்ளதும் இல்லதும் ஆய் - உள்பொருளும் இல்பொருளு மாகி, முன் உணர்வது ஆய் - எதிரே கண்டறியத் தக்கபொருளுமாகி, உன் உள்ளம் கண்டது எல்லாம் - உன்மனத்திருல் பார்க்கப்பட்ட பொருள்க ளெல்லாவற்றையும், தள் எனச் சொல்லி - தள்ளென்றுசொல்லி, என் ஐயன் - என்னிறைவன், என்னை - அடியேனை, தான் ஆக்கிக்கொண்ட - தானேயாகச் செய்து கொண்ட, சமர்த்தைப் பார் - வல்லமையைப் பார், தோழி - ஹேசகி, சங்கர, எ - று.

**9.** பாராதிபூத நீயல்லை- உன்னிப் பாரிந்திரி யங்கரணநீயல்லை, யாராயுணர்வுநீயென்ருன் - ஐய, னன்பாயுரைத்த சொல்லா னந்தந்தோழி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். பார் ஆதி பூதம் - பிருதுவி முதலிய பஞ்ச பூதங்களும், நீ அல்லை - நீயாகாய், உன்னிப்பார் - யோசித்துப்பார், இந்திரியம் - இந்திரி யங்களும், கரணம் - கரணங்களும், நீ அல்லை-நீயாகாய், ஆராய் - (இவற்றை யெல்லாம்) ஆராய்ந்தறிகின்ற, உணர்வு - அறிவே, நீ என்ருன் - நீயென்று சொல்லினன், ஐயன் - இறைவன், அன்பாய் உரைத்தசொல்-அன்போடு சொன்ன சொல், ஆநந்தம் - இன்பமா யிருக்கிறது, தோழி, எ - று.

**10.** அன்பருக்கன்பானமெய்யன் - ஐய னுனந்தமோனனருட் குருநாதன், தன்பாதஞ்சென்னியில்வைத்தான் - என்னைத் தானறிந்தேன்மனந்தானிறந்தேனே—சங்கர சங்கர சம்பு.

இ - ள். அன்பருக்கு - தன்னிடத் தன்புள்ளாரிடத்து, அன்பு ஆன மெய்யன் - அன்பு செய்கிற வுண்மையன், ஐயன் - தலைவன், ஆநந்தமோ னன் - இன்பத்துக்காரணமாகிய மௌனநிலையினன், அருள் குருநாதன்- கிருபையுள்ள குருதேசிகன், தன்பாதம் சென்னியில் வைத்தான் - தன் திருவடியை என் சிரசின்மீது சூட்டினுன், (சூட்டவே) என்னைத் தானறிந் தேன் - என்னை நானறிந்துகொண்டேன், ( அறிந்து கொள்ளவே) மனம் தான் இறந்தேன் - மனமிறக்கப் பெற்றேன், எ - று.

**11.** இறப்பும் பிறப்பும்பொருந்த-எனக்,கெவ்வணம்வந்ததென் றெண்ணியான்பார்க்கில், மறப்புநினைப்புமாய் நின்ற-வஞ்ச, மாயாமனத்தால் வளர்ந்ததுதோழி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். இறப்பும் பிறப்பும் பொருந்த - சாதலும் பிறத்தலும் என்னை யடைய, எனக்கு எவ்வண்ணம் வந்தது என்று - எனக்கு எப்படி யுண்டாயினவென்று, யான் எண்ணிப்பார்க்கில் - நான் ஆலோசித்துப் பார்க்குமிடத்தில், மறப்பும் நினைப்பும் ஆய் நின்ற - கேவலசகலரூபமாய் நின்ற, வஞ்சம் மாயாமனத்தால் - வஞ்சனையுள்ளதும் மாயாகாரியமுமாகிய மனத்தினால், வளர்ந்தது - விருத்தியடைந்தது, தோழி, எ - று.

**12.** மனமேதகல் லாலெனக்கன்றோ-தெய்வ, மௌனகுருவாகி வந்துகைகாட்டி, எனதாம் பணியறமாற்றி - அவ, னின்னருள் வெள்ளத் திருத்திவைத்தாண்டி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். எனக்கு - அடியேனுக்கு, மனது - மனம், கல்லால் அன்றோ - கல்லினால் சமைக்கபபட்டிருப்ப தல்லவோ, (அப்படியிருக்க) தெய்வம் - தெய்வத்தன்மையமைந்த, மௌனகுருஆகி - மௌனதேசிகனாகி, வந்து - எழுந்தருளி, கைகாட்டி-கைக்குறிகாட்டி, எனது ஆம்பணி-எனதாகியசெயலை, அறமாற்றி-முற்றுமில்லாமல்நீக்கி, அவன் - அவ்விறைவனது, இன் அருள் வெள்ளத்து - இனிய அருட்கடலில், இருத்திவைத்தாண்டி- அமிழ்த்திவைத்தானேடீ, சங்கர, எ - று.

**13.** அருளா லெவையும் பாரென்றான் - அத்தை, யறியாதே சுட்டியென் னறிவாலே பார்த்தேன், இருளான பொருள் கண்டதல்லால்- கண்ட, வென்னையும் கண்டில னென்னேடி தோழி—சக்கர சங்கர சம்பு.

இ - ள். அருளால் - திருவருளை முன்னிட்டு, எவையும் - எப்பொருளையும், பார் என்றான் - நோக்கென்று சொன்னான், அத்தை அறியாதே - அதனுண்மையை யுணராமலே, என்னறிவாலே சுட்டிப் பார்த்தேன்-என்னறிவினால் எதிரிட்டு நோக்கினேன், (நோக்கினவிடத்து) இருளான பொருள்-இருள் என்கிற பதார்த்தத்தை, கண்டது அல்லால் - பார்த்ததேயன்றி, கண்ட-(அவ்விருளைப்) பார்த்த, என்னையும் கண்டிலன்-என்னையும் அவ்விடத்துப்பார்த்திலேன், என்னேடி-இது என்ன புதுமையேடி, எ-று.

**14.** என்னையுந் தன்னையும் வேறா-உள்ளத், தெண்ணாதவண்ணமிரண்டற நிற்கச், சொன்னது போமொரு சொல்லே- அந்தச், சொல்லால்விளைந்த சுகத்தையென் சொல்வேன்- சங்கர சங்கர சம்பு.

இ - ள். என்னையும் தன்னையும் வேறு ஆ - என்னையும் தன்னையும் வெவ்வேருக, உள்ளத்து எண்ணுதவண்ணம் - மனத்தில் நினையாதவகை, இரண்டு அறநிற்க-இரண்டென்பதற்றொழிய நிற்கும்படி, சொன்னதுமோ- சொன்னமொழியுமோ, ஒரு சொல்லே-ஒருமொழியே, அந்தச்சொல்லால் - அந்த ஒரு மொழியினுல், விளைந்த - உண்டாகிய, சுகத்தை - இன்பத்தை, என்சொல்வேன் - என்னென்றுரைக்கேன், எ - று.

**15** விளையுஞ் சிவானந்த பூமி-அந்த, வெட்டவெளி நண்ணித் துட்டவிருளாங், கலையைக் களைந்துபின் பார்த்தேன்- ஐயன், கலையன்றி வேருென்றுங் கண்டிலன்தோழி— சங்கர சங்கர சம்பு.

இ - ள். விளையும் -(இன்பம்) விளையத்தக்க, சிவானந்தபூமி - சிவா நந்தபூமியாகிய, அந்த வெட்டவெளி நண்ணி - அந்த வெறு வெளியைப் பொருந்தி, துட்ட இருள் ஆம்-கெட்ட இருள் என்கிற, கலையைக்களைந்து- கலையைப்பறித்தெறிந்து, பின்பார்த்தேன்-பிறகு நோக்கினேன், (நோக்கின விடத்தில்) ஐயன் கலை அன்றி - இறைவனது அழகையேயன்றி, வேறு ஒன்றும் கண்டிலன் - வேருெருபொருளையும் கண்டிலேன், தோழி, எ-று.

**16.** கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை-இரு, காண்காண நீங்க வுங்கண்டோந் துயிருென், கொண்டார்போற் போனுலும் போகும் - இதிற் குணமேது நலமேது கூருய்நீதோழி— சங்கர சங்கர சம்பு.

இ - ள். உயிர்வாழ்க்கை - (உடம்பின்கண்) உயிர்வாழ்ந்திருக்கும் வாழ்க்கையானது, கண்டார்நகைப்பு - பார்த்தோர் நகைத்தற் கிடமாம், (ஏனெனின்) இருகண்காண - நம்முடைய இருகண்களும் பார்க்க, நீங்க வும் கண்டோம் -(உயிர் உடம்பைவிட்டு) நீங்கிப்போகவும் பார்த்தோம், துயில் கொண்டார்போல் போனுலும்போகும் - உறங்குவார்போலிருந்து நீங்கினும் நீங்கும், இதில்-இவ்வுயிர்வாழ்க்கையில், குணம் ஏது - நல்லநீர் மையாது, நலம் ஏது-நன்மையாது, நீ கூருய்-நீசொல்லாய், தோழி.

**17.** நலமேது மறியாத வென்னைச் சுத்த, நாதாந்தமோனமா நாட்டந்தந்தேசஞ், சலமேது மில்லாம லெல்லாம் - வல் லான், ருளாலென் றலைமீது தாக்கிருன்தோழி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். நலம் ஏதும் அறியாத என்னை - நன்மைசிறிது முணராத என்னை, சுத்தம் - பரிசுத்தமாகிய, நாதாந்தமோனம் ஆம் - நாதமுடிவென் கிறமோன நிலையாகிய, நாட்டம் தந்து - நோக்கத்தைக் கொடுத்து, சஞ் சலம் ஏதும் இல்லாமல் - சலகம் சிறிதுமில்லாமல், எல்லாம் வல்லான் -

சர்வசக்தனாகிய இறைவன், தாளால் - தன்திருவடியால், என்தலை மீது தாக்கினான் - என் சிரத்தின்மேல் பரிசித்தான், தோழி, எ - று.

தாளால் தாக்கினான் என்றது - திருவடி தீக்ஷையை.

**18.** தாக்குநல் லானந்தசோதி-அணு, தன்னிற்சிறிய வென்னைத் தன்னருளாற், போக்குவரவற்றிருக்குஞ் - சுத்த, பூரண மாக்கினான் புதுமைகாண்மின்னே—சங்கர சங்கர சம்பு.

இ - ள். தாக்கும் - பரிசிக்கிற, நல் - சிறந்த, ஆநந்தம் - இன்பஹேது வாகிய, சோதி - ஒளியுருவாகிய கடவுள், அணுதன்னிற் சிறிய என்னை - அணுவினுஞ் சிறியேனாகிய என்னை, தன் அருளால் - தன்கிருபையினால், போக்குவரவு அற்றிருக்கும்-போதல் வருதல் என்பவையற்றிருக்கிற, சுத்த பூரணம் ஆக்கினான் - முழுப்பூர்ணநிலையிலிருக்கப் பண்ணினான், புதுமை- ஆச்சரியம், மின்னே - பெண்ணே, எ - று.

**19.** ஆக்கியளித்துத் துடைக்குந் - தொழி, லத்தனை வைத்து மெள் ளத்தனையேனுந், தாக்கற நிற்குஞ்சமர்த்தன்-உள்ள, சாக்ஷியைச் சிந்திக்கத் தக்கதுதோழி—சங்கரசங்கரசம்பு.

இ - ள். ஆக்கி - சிருஷ்டிசெய்து, அளித்து - காத்து, துடைக்கும்- அழிக்கிற, தொழில் அத்தனை வைத்தும்-தொழிலனைத்தும் தன்னிடத்தில் வைத்திருந்தும், எள் அத்தனையேனும் - எள்ளளவாயினும், தாக்கு அற நிற்கும் சமர்த்தன் - (அவற்றோடு) பற்று அறநிற்கும் சாமர்த்தியமுடைய வன், உள்ள - அவன் இருக்கிற, சாக்ஷியை - சர்வசாட்சிரூபத்தை, சிந்திக்கத்தக்கது - நினைக்கத்தக்கது, தோழி, எ - று.

தாக்கு - சம்பந்தம்.

**20.** சிந்தை பிறந்தது மாங்கே-அந்தச், சிந்தையிறந்து தெளிந் ததுமாங்கே, எந்தநிலைகளுமாங்கே - கண்ட, யான்றானிர ண்டற் றிருந்ததுமாங்கே—சங்கர சங்கர சம்பு.

இ - ள். சிந்தை பிறந்ததும் ஆங்கே - மனம் பிறந்ததும் அவ்விட த்தே, அந்தச் சிந்தை-அந்தமனம், இறந்து தெளிந்ததும் ஆங்கே - நசிக்க என்னறிவு தெளிவடைந்ததும் அவ்விடத்தே, எந்தநிலைகளும் ஆங்கே - எந்த நிலைமைகளும் அவ்விடத்தே, கண்ட - பார்த்த, யான்தான் - நான் தான், இரண்டு அற்று இருந்ததும் ஆங்கே - இரண்டொழிந்து நின்றதும் அவ்விடத்தே, எ - று.

**21.** ஆங்கென்று மீங்கென்று முண்டோ-சச்சி, தானந்தசோதி யகண்டவடிவாய், ஓங்கிநிறைந்தது கண்டாற் - பின்னை, ரொன்றென் றிரண்டென் றுரைத்திடலாமோ—சங்கர சங்கர சம்பு.

இ - ள். ஆங்கு என்றும் ஈங்கு என்றும் உண்டோ - அவ்விடத்தென்றும் இவ்விடத்தென்றுமுளதோ, சச்சிதாநந்த சோதி - சச்சிதாநந்த வொளி, அகண்டவடிவாய்-அகண்டரூபமாகி, ஓங்கிநிறைந்தது கண்டால்- உயர்ந்து பரிபூர்ணமாகியிருப்பதைப் பார்த்தால், பின்னர் - அதன் பிறகு, ஒன்று என்று - ஒன்றென்றும், இரண்டு என்று - இரண்டு என்றும், உரைத்திடலாமோ - சொல்லலாமோ, எ - று.

**22.** என்று மழியுமிக் காயம் - இத்தை, யேதுக்குமெய்யென் றிருந்தீ ருலகீர், ஒன்றுமறியாத நீரோ - யம, னோலைவந் தாற்சொல்ல வுத்தரமுண்டோ—சங்கர சங்கர சம்பு.

இ - ள். இக்காயம் - இந்தச்சரீரம், என்றும் அழியும் - எப்பொழுதும் அழிந்து போகுமியல் புடையதேயாம், இத்தை - இதனை, ஏதுக்கு-என்ன காரணமாக, மெய்யென்று இருந்தீர் - உண்மை யென்று நினைத்திருந்தீர் கள், உலகீர் - உலகத்தாரே, ஒன்றும் அறியாதநீரோ - ஒன்றையுமுணராத நீங்களோ, யமன் ஓலைவந்தால் - யமனது ஓலைவந்ததானால், சொல்ல- அதற்குவகைசொல்ல, உத்தரம் உண்டோ - மறுமொழியுள்ளதோ.

**23.** உண்டோ நமைப்போல வஞ்சர்-மல, மூறித்ததும்பு முட லைமெய்யென்று, கொண்டோ பிழைப்பதிங் கையோ - அருட், கோலத்தை மெய்யென்று கொள்ளவேண்டாவோ - சங்கர சங்கர சம்பு.

இ - ள். நம்மைப்போலவஞ்சர் உண்டோ - நம்மைப் போல வஞ்சகர்கள் உளரோ, மலம் ஊறி ததும்பும் - மலஞ் சுரந்து துளும்புகிற, உடலை- சரீரத்தை, மெய்யென்று கொண்டோ - உண்மையென்று கொண்டு தானோ, இங்குபிழைப்பது - இவ்விடத்துப்பிழைப்பது, ஐயோ-அந்தோ, அருட்கோலத்தை - திருவருட்கோலத்தை, மெய்யென்று கொள்ளவேண்டாவோ - உண்மையென்று கொள்ளவேண்டாவோ, எ - று.

**24.** வேண்டா விருப்பும் வெறுப்பும்-அந்த, வில்லங் கத்தாலே விளையுஞ் சனனம், ஆண்டா னுரைத்த படியே-சற்று, மசையாதிருந்துகொள் ளறிவாகிநெஞ்சே—சங்கர சங்கர சம்பு.

இ - ள். விருப்பும் வெறுப்பும் - ஆசையும் நிராசையும், வேண்டா- வேண்டப்படா, அந்த வில்லங்கத்தாலே-அந்த அநர்த்தத்தினாலே, சநநம் விளையும் - பிறவியுண்டாகும், (ஆதலால் அவைகளைவிடுத்து) ஆண்டான் உரைத்தபடியே - ஆண்டவன் சொன்னவண்ணமாகவே, சற்றும் - சிறிதும், அசையாது - சலிக்காமல், அறிவு ஆகி இருந்துகொள் - அறிவுருவமாகியிருந்து கொள்ளாய், நெஞ்சே - மனமே, எ - று.

**25.** அறிவாரு மில்லையோ வையோ-என்னை, யாரென்றறியாத வங்கதேசத்தில், வரிதேகாமத்தீவிற் சிக்கி-உள்ள, வான் பொரு டோற்கவோ வந்தேனுன் தோழி—சங்கர சங்கர சம்பு.

இ-ள். அறிவாரும் இல்லையோ - உணர்வாரும் இல்லையோ, ஐயோ-அந்தோ, என்னை - என்னை, யார் என்று அறியாத - யாவரென்றுணராத, அங்கதேசத்தில்-சரீரமாகிய தேசத்தில், வறிதே-பயனில்லாமலே, காமத்தீவில் சிக்கி - காமமாகிய தீபத்திலகப்பட்டு, உள்ள - என்னிடத்திலுள்ள, வான்பொருள் - மேலாகிய ஞானநிதியை, தோற்கவோ - இழக்கவோ, நான்வந்தேன் - யான்வந்தேன், தோழி, எ - று.

**26.** வந்தவரவை மறந்து - மிக்க, மாதர்பொன்பூமி மயக்கத்திலாழும், இந்தமயக்கை யறுக்க - எனக், கெந்தைமெய்ஞ்ஞான வெழில்வாள் கொடுத்தான்—சங்கர சங்கர சம்பு.

இ - ள். வந்தவரவைமறந்து - வந்த வரத்தை மறந்து, மிக்க - மிகுதியாகிய, மாதர் - மாதருடையவும், பொன் - பொன்னினுடையவும், பூமி - பூமியினுடையவும், மயக்கத்தில் - மயக்கமாகிய கடலில், ஆழும் - அழுந்துகிற, இந்தமயக்கை அறுக்க - இந்த மயக்கத்தைச் சேதிக்க, எனக்கு - என்றனுக்கு, எந்தை-எந்தையாகிய இறைவன், மெய்ஞ்ஞானம்-உண்மைஞானமாகிய, எழில்வாள் - அழகியவாளை, கொடுத்தான் - தந்தருளினான், எ - று.

**27.** வாளாருங் கண்ணியர் மோகம் - யம, வாதைக்கனலை வளர்க்குமெய் யென்றே, வேளானவனு மெய்விட்டான் - என்னின், மிக்கோர் துறக்கை விதியன்றோ தோழி—சங்கர சங்கர சம்பு.

இ - ள். வாள் ஆரும் கண்ணியர் - வாள்போலும் கண்களையுடைய மாதரது, மோகம் - ஆசையானது, யமவாதை - யமவேதனையென்கிற, கனலை - அக்கினியை, வளர்க்கும் - விருத்திபண்ணும், மெய்யென்றே - இது சத்தியமென்றே, வேள் ஆனவனும் - மன்மதனும், மெய்விட்டான் என்னின் - சரீரத்தை விட்டான் என்னுமிடத்து, மிக்கோர் - மேலோர், துறக்கை-அதனை விடுதல், விதி அன்றோ-விதியல்லவோ, தோழி, எ-று.

**28.** விதிக்கும் பிரபஞ்ச மெல்லாஞ்- சுத்த, வெயின்மஞ்ச ளென்னவே வேதாகமங்கள், மதிக்கு மதனை மதியார்-அவர், மார்க்கந் துன்மார்க்கஞ் சன்மார்க்கமோ மானே—சங்கர சங்கர சம்பு.

இ - ள். விதிக்கும் - சிருஷ்டிக்கப்படுகிற, பிரபஞ்சம் எல்லாம் - பிரபஞ்சமுழுதும், சுத்தவெயில் மஞ்சள் என்னவே - கடுவெயிலிலிட்ட மஞ்சளென்றே, வேதாகமங்கள் - வேதம் ஆகமம் என்னுமிவைகள், மதிக்கும் அதனை - மதிப்பதை, மதியார் - மதியாதவர்களாகிய, அவர் - அவர்களுடைய, மார்க்கம் - நெறியானது, துன்மார்க்கம் - தீ நெறியே யாம், சன்மார்க்கமோ - நன்னெறியாமோ (நீ சொல்லாய்), மானே - பெண்ணே, எ - று.

வெயிலில் இட்ட மஞ்சள் சிறிதும் ஒளிசெய்யாதுபோல, இவர் தீ நெறியும் விளங்காதென்பதாம்.

**29.** துன்மார்க்க மாதர் மயக்கம் - மனத், தூயற்குப் பற்றாது சொன்னேன் சனகன், தன்மார்க்க நீதிதிட்டாந்தம் - அவ ன், றனந்தமான சதானந்த னன்றோ - சங்கர சங்கர சம்பு.

இ - ள். துன்மார்க்கம் - தீநெறியையுடைய, மாதர்மயக்கம் - பெண் கள்மையல், மனம் தூயற்கு - மனத்தூய்மையுடையோரை, பற்றாது - தொடராது, சொன்னேன் - சொல்லிவிட்டேன், (இதற்கு) சனகன்தன் - ஜநகமஹாராஜனது, நீதிமார்க்கம் - நீதிநெறியே, திட்டாந்தம் - திருஷ் டாந்தமாகும், அவன் தான் - அவன்றான், அந்தம்ஆன - முடிவான, சதாநந் தன் அன்றோ - இடையறாத இன்பத்தை யுடையவனல்லவா, எ - று.

சுகர் முதலியோரது சந்தேகத்தை நீக்கினவனாதலால், சநகனை இல் லறஞானியற்றிற் சிறந்தவனாக மதித்தெடுத் துரைத்தார்.

**30.** அன்றென்று மாமென்று முண்டோ - உனக், கானந்தம் வேண்டி னறிவாகிச் சற்றே, நின்றாற் றெரியு மெனவே - மறை, நீதியெம் மாதி நிகழ்த்தினன் றோழி - சங்கர சங்கர சம்பு.

இ - ள். அன்று என்றும் - அல்லவென்றும், ஆம் என்றும் - ஆகு மென்றும், உண்டோ - உளதோ, உனக்கு ஆநந்தம் வேண்டின் - உனக்கு இன்பம் வேண்டியிருந்தால், அறிவு ஆகி - அறிவுருவமாகி, சற்றே நின்றால் - சற்று நிற்பையாயின், தெரியும் எனவே - தெரியலாமென்றே, மறைநீதி - வேதநீதிகளை, எம்ஆதி - எமது முதல்வன், நிகழ்த்தினன் - எனக்குச் சொன் னன், தோழி - ஹேசகீ, சங்கர, எ - று.

### அகவல்.

திருவருண் ஞானஞ் சிறந்தருள் கொழிக்குங்
குருவடி வான குறைவிலா நிறைவே
நின்ற வொன்றே நின்மல வடிவே
குன்றுப் பொருளே குணப்பெருங்கடலே
ஆதியு மந்தமு மானந்த மயமாஞ்
சோதியே சத்தே தொலைவிலா முதலே
சீர்மலி தெய்வத் திருவருளதனாற்
பார்முத லண்டப் பரப்பெலா நிறுவி
அண்டச முதலா மெண்டரு நால்வகை
எழு பிறவியிற் றுழா தோங்கும்
அனந்த யோனியி னினப்பெற மல்க
அணுமுத லசல மான வாக்கையுங்
கணமுத லளவிற் கற்ப காலமுங்
கன்மைப் பகுதித் தொன்மைக் கீடா
இமைப்பொழு தேனுந் தமக்கென வறிவிலா
ஏழை யுயிர்த் திரள் வாழ வமைத்தனை
எவ்வுடலெடுத்தா ரவ்வுடல் வாழ்க்கை
இன்ப மெனவே துன்பமிலை யெனப்
பிரியா வண்ண முரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலு மமைத்திட்
டேக மின்றியே தேக நானென
அறிவு போலறி யாமை யியக்கிக்
காலமுங் கன்மனமும் கட்டுங் காட்டியே
மேலு நரகமு மேதகு சுவர்க்கமும்
மாலற வகுத்தனை யேலும் வண்ணம்
அமையாக் காதலிற் சமய கோடி
அறம்பொரு ளாதி திரம்படு நிலையிற்
குருவா யுணர்த்தி யொருவர்போ லனைவருந்
தத்த நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்
நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை யெங்குமாகிச்
சமயாதீதத் தன்மை யாகி
இமையோர்முதலியயாவருமுனிவருந்
தம்மைக் கொடுத்திட் டெம்மை யாளென
ஏசற் றிருக்க மாசற்ற ஞான
நலமுங் காட்டினை ஞானமி லேற்கு
நிலையுங் காட்டுதி னின்னருட் கடனே.

இ - ள். திருவருள் ஞானம் சிறந்து - திருவருள் ஞானம் மிகுந்து,
அருள்பொழிக்கும் - அருளைப் பொழிகின்ற, குருவடிவான - குருமூர்த்த
மாயெழுந்தருளிய, குறைவு இல்லாநிறைவே - குறைவற்ற பரிபூரணமே,
நின்ற ஒன்றே - அழியாத ஒருபொருளே, நின்மல வடிவே - மலமற்ற
உருவே, குன்றாப்பொருளே - ஒருகாலும் குறையாத வஸ்துவே, பெரு
குணக்கடலே - பெரிதாகிய நற்குணக்கடலே, ஆதியும் அந்தமும் - முதலி
னும் இறுதியினும், ஆனந்தமயம் ஆம் - இன்பவுருவான, சோதியே - தே
ஜோராசியே, சத்தே - உண்மையே, தொலைவு இல்லாமுதலே - அழி
தல் இல்லாத முதற்பொருளே, சீர்மலி - சிறப்புமிக்க, தெய்வம் - தெய்
வத்தன்மையுள்ள, திருவருளதனால் - திருவருளினால், பார்முதல் - பூமி
முதலாகிய, அண்டப்பரப்பு எல்லாம் - அகண்ட விஸ்தீரணத்தை யெல்
லாம், நிறுவி-நிலைபெறுத்தி, அண்டசம் முதலாம் - அண்டஜம்முதலாகிய,
எண்தரும்-எண்ணலளவையைத்தந்த, நால்வகை - நான்குவகையாகத்தோ
ன்றுவனவாகிய, ஏழுபிறவியில் - ஏழுபிறப்பில், தாழாது - தங்கியிராமல்,
ஓங்கும் - அதிகரித்த, அநந்தயோனியின் - முடிவற்றயோனிகளின், இனம்
பெறமல்க - இனத்தையடையவும் நிறையவும், கணம்முதல் அளவின்-
க்ஷணம்முதலாகிய அளவினைக்கொண்ட, கற்பகாலமும் - கற்பகாலத்தள
வும், கன்மப்பகுதி - வினைப்பகுதியின், தொன்மைக்கு ஈடா - பழமைக்
கேற்ப, இமைப்பொழுதேனும் - இமைப்பொழுதாயினும், தமக்கு என -
தமக்கென்று, அறிவு இல்லா - சுய அறிவில்லாத, ஏழை உயிர்த்திரள் -
ஏழைகளயாகிய ஜீவராசிகள், வாழ - வாழும்படி, அமைத்தனை-அமைத்
திருக்கிறாய், எவ்வுடல் எடுத்தார் - எந்தச் சரீரத்தை யெடுத்தவர்கள்,
அவ்வுடல் வாழ்க்கை - அவ்வுடலோடு கூடி வாழும் வாழ்க்கையை, இன்
பம்எனவே - சுகமென்று நினைத்தே, துன்பம் இல்லையென - துக்கமில்லை
யென்று, பிரியாவண்ணம் - நீங்காவகை, உரிமையின் வளர்க்க - உரிமை
யோடுவளர்க்க, ஆதரவாக - ஆதரவாய், காதலும் அமைத்திட்டு -
ஆசையையும் அமைத்து, ஊகம் இன்றியே - யுக்தியில்லாமலே, தேகம்
நான் என - சரீரம் நான் என்று, அறிவுபோல் - ஞானத்தைப்போல,
அறியாமை இயக்கி - அஞ்ஞானத்தை விளங்கப்பண்ணி, காலமும் -
காலப்பாகுபாட்டையும், கன்மமும் - வினைப்பாகுபாட்டையும், கட்டும் -
அவற்றிற்குரிய நியமத்தையும், காட்டி-காண்பித்து, மேலும் - இன்னமும்,
நரகமும் - (அவற்றின்பயனுருவாயமைந்த) நரக விசேடங்களையும், மேதகு
சுவர்க்கமும் - மேன்மைபொருந்திய சுவர்க்க விசேடத்தையும், ஏலும்
வண்ணம் - பொருந்தும்வகை, மால் அறவகுத்தனை - மயக்கமறவகுத்தரு
ளினை, அமையாகாதலின் - அடங்காத ஆசையையுடைய, சமயகோடி -
சமயத்தொகுதிகளின் உண்மையையும், அறம்பொருள் ஆதி - தர்மார்த்

தம் முதலியவைகளையும், நிறம்படுநிலையின் - உறுதியாகிய நிலைமையால், குருவாயுணர்த்தி - ஆசாரியனுகிவந்து அறிவுறுத்தி, ஒருவர்போல் - ஒரு வரைப்போல, அனைவரும் - எல்லாரும், தத்தம் நிலையே - தங்கள் தங்கள் நிலைகளே, முத்திமுடிவுஎன - முத்திமுடிவென்று, வாததர்க்கமும் - தர்க்க வாதங்களும், போதநூல்களும்-அறிவுநூல்களும், நிறைவிற்காட்டி-பூர்ண மாகக்காட்டி, குறைவு இன்றிவயங்க - குறைவறவிளங்கும்படி, அங்கங்கு நின்றனை - அவ்வவ்விடங்களில் நின்றாய், எங்கும்ஆகி - எவ்விடத்தும் வியாபித்து, சமயாதீதத்தன்மையாகி-சமயாதீத குணத்தையுடையையாகி, இமையோர்முதல் யாவரும் - தேவர்முதலான யாவரும், முனிவரும் - முனிவர்களும், தம்மைக்கொடுத்திட்டு - தங்களைச் சமர்ப்பித்து, எம்மை ஆள் என - எங்களையாள வேண்டுமென்று, ஏசற்றிருக்க - இளைத்திருக்க, (அவர்களுக்கு) மாசு அற்ற - குற்றமற்ற, ஞானநலமும் காட்டினை-ஞான நிலையாகிய நன்மையையும் காட்டினாய், ஞானம் இல்லேனுக்கு - ஞானமில் லாதவனாகிய எனக்கு, நிலையும் - என்பரிபாகத்துக்குத்தக்க நிலையையும், காட்டுதல் - காட்டியருளுதல், நின்அருள்கடன் - உன் திருவருளுக்குக் கடன்மையாகும், எ - று.

---

வண்ணம்.

அருவென் பனவுமன்றி உருவென் பனவுமன்றி
அகமும் புறமுமன்றி முறைபிற ழாது
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப விமலம தாகி
அசலம் பெறவுயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபலமென்று ளறிவினர் காண
ஞானவெளியிடைமேவுமுயிராய், (௧)

இ - ள். அருவென்பனவும் அன்றி - அருவங்கள் என்று சொல்லப் படுவனவும் அல்லாமல், உருஎன்பனவும் அன்றி - உருவங்கள் என்று சொல்லப்படுவனவும் அல்லாமல், அகமும் புறமும் அன்றி - உள்ளும் வெளியும் அல்லாமல், முறைபிறழாது - கிரமம் தப்பாமல், குறியும் குண மும் அன்றி - இன்ன அடையாளம் இன்னகுணம் என்பதுமில்லாமல், நிறைவும் குறைவும் அன்றி - நிறைதலும் குறைதலுமில்லாமல், மறை - வேதங்கள், ஒன்று என விளம்ப - ஒருபொருளென்று சொல்ல, விமலம் ஆகி - நிர்மலமாகி, அசலம்பெற உயர்ந்து - சலனமில்லாமல ஓங்கி, விபு லம்பெறவளர்ந்து - விசாலமுண்டாகவளர்ந்து, சபலம் சபலம் என்று-நன் மையாகியபேறு நன்மையாகியபேறு என்று, உள் - நினைக்கின்ற, அறிவி

னர் - அறிஞர்கள், காண - காணும்படி, ஞானவெளிஇடை-சிதாகாயத்தினிடத்தில், மேவும்-பொருந்துகின்ற, உயிர் ஆய் - பிராணனாகி, எ - று.

அனலொன் றிடவெரிந்து புகைமண் டிடுவதன்று
புனலொன் றிடவமிழ்ந்து மடிவில தூதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் படுவதன்று
சமர்கொண் டழிவதன்றொ ரியல்பின தாகும்
அவனென் பதுவுமன்றி அவளென் பதுவுமன்றி
அதுவென் பதுவுமன்றி எழில்கொடு லாவும்
ஆருநிலையறியாதபடியே, (உ)

இ - ள். அனல் ஒன்றிட - நெருப்புப்பற்ற, எரிந்து - எரியாநின்று, புகைமண்டிடுவது அன்று - புகைமிகுவது அல்ல, புனல் ஒன்றிட - நீர் பெருக, அமிழ்ந்து - அதனுள்ளழுந்தி, மடிவு இல்லது - அழிதல் இல்லாதது, ஊதை சருவும்பொழுது-காற்று வீசும்பொழுது, உயர்ந்து - மேலெழுந்து, சலனம்படுவது அன்று - அசைவுண்டாவது அல்ல, சமர்கொண்டு அழிவது அன்று - யுத்தத்தினால் அழிவது அல்ல, ஒரு இயல்பினது ஆகும்-ஒரு இயற்கையுள்ளதாகும், அவன் என்பதுவும் அன்றி-அவன் என்பதுவும் அல்லாமல், அவள் என்பதும் அன்றி-அவளென்பதுவுமல்லாமல், அது என்பதுவும் அன்றி - அது என்பதுவும் அல்லாமல், ஆரும் - எவரும், நிலை அறியாதபடி - நிலைமையை அறியாவண்ணம், எழில்கொடு - அழகு கொண்டு, உலாவும் - சஞ்சரிக்கும், எ - று.

இருளென் பதுவுமன்றி ஒளியென் பதுவுமன்றி
எவையுந் தனுளடங்க வொருமுத லாகும்
உளதென் பதுவுமன்றி இலதென் பதுவுமன்றி
உலகந் தொழவிருந்த வயன்முத லோர்கள்
எவருங் கவலைகொண்டு சமயங்களில் விழுந்து
சுழலும் பொழுதிரங்கி அருள்செயு மாறு
கூறரியசகமாயையறவே, (௩)

இ - ள். இருள் என்பதும் அன்றி - இருள் என்பதும் அல்லாமல், ஒளிஎன்பதும் அன்றி - ஒளிஎன்பதும் அல்லாமல், எவையும் - எவ்வகைப்பட்ட பொருள்களும், தன் உள் அடங்க - தன்னுள்ளே ஒடுங்க, ஒரு முதல் ஆகும் - ஒப்பற்றமுதற்பொருள் ஆகும், உளது என்பதுவும் அன்றி-உள்ளது என்பதும் அல்லாமல், இலது என்பதுவும் அன்றி - இல்லது என்பதும் அல்லாமல், உலகம்தொழ இருந்த - உலகங்களெல்லாம் வணங்கும்படி இருந்த, அயன்முதலோர்கள் - பிரமன்முதலானோர்கள், எவரும் - யா

வரும், கவலைகொண்டு - துன்பங்கொண்டு, சமயங்களில் விழுந்து - சமய நெறிகளாகிய குழிகளில் வீழ்ந்து, சுழலும்பொழுது - சுற்றும்போது, இரங்கி - இரக்கஞ்செய்து, அருள்செயும் ஆறு-கிருபைபண்ணும் வகை, கூறு அரிய - சொல்லுதற்கரிய, சகம்மாயை - பிரபஞ்ச மாயையானது, அற - நீங்கும்படி.

எனதென் பதையிகழ்ந்த அறிவின் றிரளினின்று
மறிவொன் றெனவிளங்கு முபயம தாக
அறியுந் தரமுமன்று பிறியுந் தரமுமன்று
அசரஞ் சரமிரண்டி னொருபடி யாகி
எதுசந் ததநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் களசுபங்கொள் சுகவடி வாகும்
யாதுபரமதைநாடியறிநீ, (௪)

இ - ள். எனது என்பதை இகழ்ந்த - எனது என்னும் மமகாரத்தை வெறுத்த, அறிவின் திரளில் நின்றும் - அறிவின் கூட்டத்தில் நின்றும், அறிவுஒன்று என - ஞானம் ஒன்றேஎன்று, விளங்கும் - பிரகாசிக்கின்ற, உபயம் அது ஆக - இரண்டாக, அறியும் தரமும் அன்று - அறியும் தன்மையையுடையதும் அல்ல, பிறியும் தரமும் அன்று - நீங்கும் தன்மையையுடையதும் அல்ல, அசரம் சரம் இரண்டின் - அசரம்சரம் என்னும் இரண்டனுள்ளும், ஒருபடியாகி - ஒரு தன்மைத்தாகி, சந்ததம் - சதாகாலமும், நிறைந்தது - நிறைந்திருப்பது, எது - எந்தப்பொருள், சிந்தனை இறந்தது எது - மனம் இறந்தபொருள் எது, மங்கள சுபம்கொள் - மிகுந்த சுபத்தைக்கொண்ட, சுகவடிவு ஆகும் - ஆனந்தரூபமாகிறது, யாது - எது (இப்படிப்பட்ட குணங்களை யுடையதாகிய) யாது - எது, பரம் - பரம் பொருளோ, அதை - அந்தப்பொருளை, நீ நாடி அறி - நீ விரும்பி உணரக் கடவாய்.

பருவங் குலவுகின்ற மடமங்கை யர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து கெடுநினை வாகி
வலையின் புடைமறிந்த மறியென் றவசமுண்டு
வசனந் திரமுமின்றி அவரித ழூறல்
பருகுந் தொழிலிணங்கி யிரவும் பகலுமின்சொல்
பருகும் படிதுணிந்து குழலழ காக
மாலைவகைபல்சூடியுடனே, (ரு)

இ - ள். பருவம் குலவுகின்ற-மங்கைப் பருவத்தினால் விளங்குகிற, மடமங்கையர் தொடங்கு-இளம் பெண்கள் ஆரம்பிக்கின்ற, கபடந்தனில் விழுந்து - வஞ்சக மார்க்கத்தில் விழுந்து, கெடுநினைவு ஆகி-கெட்ட எண்

ணத்தையுடையையாகி, வலையின் புடைமறிந்த - வலையினிடத்தகப்படுத்தப்பட்ட, மறிஎன்று - மான்போன்று, அவசமுண்டு - பரவசப்பட்டு, வசநம்திரமும் இன்றி - மொழியில் உறுதியில்லாமல், அவர்-அந்தப்பெண்களுடைய, இதழ் ஊறல் - அதராமிர்தத்தை, பருகுந்தொழில் - உண்ணுந்தொழிலுக்கு, இணங்கி - இசைந்து, இரவும் பகலும் - அல்லும் பகலும், இன்சொல் - அவரது மதுரவசநாமிர்தத்தை, பருகும்படி துணிந்து- பானம் பண்ணநிச்சயித்து, குழல் அழகு ஆக-அவரது கூந்தலுக்கு அழகுண்டாம்படி, பலமாலைவகை சூடி - பலமலர்மாலை வகைகளைத் தரித்து, உடனே - உடனே, எ - று.

பதுமந் தனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று கலிலென வாடுஞ்
சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டை கண்முழங்கும்
ஒலிநன் றெனமகிழ்ந்து செவிகொள நாசி
பசுமஞ் சளின்வியந்த மணமுந் திடமுகந்து
பவமிஞ் சிடவிறைஞ்சி வரிசையி னூடு
காலின்மிசைமுடிசூடிமயலாய், (௬)

இ - ள். பதுமம் தனையிசைந்த - தாமரையரும்பை யொத்த, முலை என்று - ஸ்தநமென்று, அதை உகந்து-அதனை விரும்பி, வரிவண்டு என - ரேகைகளையுடைய வண்டுபோல, உழன்று - அதைச் சூழ்ந்து அலைந்து, கலில் என ஆடும் - கலில் என்று ஒலிக்கும்படி அசைந்தாடுகிற, சிறுகிண் கிணி - சிறியகிண்கிணிகளும், சிலம்பு - சிலம்புகளும், புனை - அலங்கரிக்கப்பட்ட, தண்டைகள்-தண்டைகளும், முழங்கும்-சத்திக்கிற, ஒலி-தொனி, நன்று என - அழகிதென்று, மகிழ்ந்து - களிகூர்ந்து, செவிகொள - செவியேற்க, நாசி - மூக்கானது, பசுமஞ்சளின் - பசுமையாகிய மஞ்சளினது, வியந்த - புகழத்தக்க, மணமும் - பரிமளத்தையும், திடம்-அதின் உறுதியையும், உகந்து - விரும்பி, பவம் மிஞ்சிட-பாவம் அதிகரிக்க, இறைஞ்சி-வணங்கி, வரிசையினூடு - வரிசையாய், காலின்மிசை - அவர்களுடைய காலின்மீது, முடிசூடி - சிரம் வைத்து, மயல் ஆய் - மயக்கம் கொண்டு, எ - று.

மருளுந் தெருளும்வந்து கதியென் பதைமறந்து
மதனன் சதிபொங்க விரணமதான
அளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று பரவசமாகி
மறுவுந் தொழின்மிகுந்து தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த படிமதி சோர
வானரமதெனமேனிதிரையாய், (௭)

இ - ள். மருளும் தெருளும்வந்து - மயக்கமும் தெளிவுமுண்டாகி, கதியென்பதைமறந்து - நற்கதியென்பதை மறந்து, மதநன்சலதிபொங்க - காமக்கடல்பொங்க, இரணமதான - ரணமாகிய, அளிபுண்தன்னை - அளிந்தபுண்ணை, வளைந்து-சூழ்ந்து, விரல்கொண்டு - விரலினால், உற அளைந்து - மிகவும்பரிசித்து, சுரதம் இது - புணர்ச்சியாகிய இது, சுகம்என்று - இன்பமென்று, பரவசம் ஆகி - பரவசப்பட்டு, மருவும் தொழில்மிகுந்து - புணருந்தொழில் அதிகப்பட்டு, தினமும் தினமும்-நாள்தோறும், விஞ்சிவளரும் - மிஞ்சிவிருத்தியடைகின்ற, பிறை - சந்திரன், குறைந்தபடி - கலைகுறைந்தாற்போல, மதிசோர - அறிவு சோர்வடைய, மேனி - சரீரம், வானரம் என - குரங்கின் சரீரம் என்னலாம்படி, திரை ஆய் - திரைந்து.

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரலுஞ் செயலழிந்து ளிருமலு மாகி
அனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று சரியென நாடி
மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து
கலகஞ் செயவிருண்ட யமன்வரும் வேளை
ஏதுதுணைபழிகாரமனமே. (அ)

இ-ள். வயதும்பட-வயசும் முதிர்ந்துவர, பிணியும் - (அடங்கிக்கிடந்த) வியாதிகளும், எழுந்து-மேலெழுந்து, திமிதிமி என்று வரலும்-திமிதிமியென்று உற்சாகத்தோடு வருதலும், செயல் அழிந்து - செய்கையற்று, உள் - உள்ளே, இருமலும் ஆகி - இருமலும் உண்டாகி, அன்னமும் செல்லுதல் இன்றி - அன்னமிறங்குதலும் இல்லாமல், விழியும் சுடர்கள் இன்று-கண்களும் ஒளியுடையன அல்ல, முகமும் களைகள் இன்று - முகத்திலும் அழகில்லை, சரியெனநாடி - முடிவுதானென்று ஆலோசித்து, மனை-மனைவியும், இன்பு உற இருந்த இனமும் - சுகமுண்டானபோது அநுபவிக்க இருந்த சுற்றமும், குலைகுலைந்து-கட்டுக்குலைந்து, கலகம்செய்ய - பேரொலிசெய்ய, இருண்டயமன் - கருநிறத்தையுடைய கூற்றுவன், வரும்வேளை - நம்மைநாடிவருங்காலத்தில், துணை ஏது-நமக்குத்துணையாய் நின்று காக்கக்கடவது யாது, பழிகாரமனமே-எனக்குப்பழியையுண்டாக்குகிறநெஞ்சமே, எ-று.

தாயுமானசுவாமிகள்பாடல்

மூலமும் உரையும்

முற்றிற்று.

உ

# அருள்வாக்கிய அகவல்.

இஃது தாயுமானசுவாமிகளுடைய

மாணாக்கராகிய

**அருளையரென்பவர்**

மேற்படி சுவாமிகளைத் துதிசெய்தது.

---

திருவளர் கருணைச் சிவானந்த பூரண
மொருவரு மறியா வொருதனிச் சித்து
நவந்தரு பேதமாய் நாடக நடித்துற்
பவந்தனை நீக்கிப் பரிந்தருள் பராபரங்
கண்ணுங் கருத்துங் கதிரொளி போல
நண்ணிட வெனக்கு நல்கிய நன்மை
யொன்றாய்ப் பலவா யொப்பிலா மோனக்
குன்றாய் நிறைந்த குணப்பெருங் குன்ற
மண்ணையும் புனலையும் வளியையுங் கனலையும்
விண்ணையும் படைத்த வித்திலா வித்து
பந்த மனைத்தையும் பாழ்பட நூறியென்
சிந்தையுட் புகுந்த செழுஞ்சுடர்ச் சோதி
விள்ளொணா ஞானம் விளங்கிய மேலோர்
கொள்ளைகொண் டுண்ணக் குறைவிலா நிறைவு
தாட்டா மரைமலர்த் தாணினைப் பவர்க்குக்
காட்டா வின்பங் காட்டிய கதிநிலை
வாக்கான் மனத்தான் மதித்திட வரிதென
நோக்கா திருக்க நோக்கிய நோக்க
மாதியா யறிவா யகண்டமா யகண்ட
சோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம்
பரவெளி தன்னிற் பதிந்தவென் னுளத்தின்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளஞ்
சுட்டுக் கடங்காச் சோதி யடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை
யெல்லைக் கடங்கா வேகப் பெருவெளி
தில்லைப் பொதுவிற் றிருநடத் தெய்வம்
வாதவூ ரெந்தையை வரிசையாய் விழுங்கும்

போதவூர் மேவு கர்ப்பூர விளக்கு
சுகரை யகண்டத் தூவெளி யெல்லாந்
திகழவே காட்டுஞ் சின்மய சாக்ஷி
செழுந்தமி ழப்பரைச் சிவலிங்க மாகி
விழுங்கிய ஞான வித்தக வேழ
மெழிறரு பட்டினத் திறைவரை யென்று
மழிவிலா விலிங்க மாக்கிய வாதி
சாந்த பூமி தண்ணருள் வெள்ள
மார்ந்த நீழ லசையாக் ககனம்
பரவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சி
யிரவுபக லற்ற வேகாந்தக் காட்சி
யாட்சிபோ லிருக்கு மகிலந் தனக்குச்
சாக்ஷியா யிருக்குந் தாரகத் தனிமுத
லாணும் பெண்ணு மலியுமல் லாததோர்
தாணுவாய் நின்ற சத்தாந் தனிச்சுட
ரெள்ளு மெண்ணெயு மெப்படி யப்படி
யுள்ளும் புறம்பு முலாவிய வொருபொரு
ளளவிலா மதந்தொறு மவரவர் பொருளென
வுளநிறைந் திருக்கு மொருபொற் பணிதி
துள்ளு மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளு மோனவாள் கொடுத்திடு மரசு
பெரிய பேறு பேசாப் பெருமை
யரிய வரிமை யளவிலா வளவு
துரிய நிறைவு தோன்று வதீதம்
விரியுநல் லன்பு விளைத்திடும் விளைவு
தீராப் பிணியாஞ் செனன மறுக்க
வாரா வரவாய் வந்த சஞ்சீவி
யாலைக் கரும்புபா லமுதக் கட்டிநீள்
சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி
பாங்குறு மாங்கனி பாறேன் சருக்கரை
யோங்குகற் கண்டுசேர்த் தொன்றாய்க் கூட்டி
யருந்திய ரசமென வறிஞர் சமாதியிற்
பொருந்திய விம்பம் பொழிசிற்சு கோதய
மெங்கணு நிறைந்த வியல்பினை யெனக்குச்
செங்கையால் விளங்கத் தெரித்தமெய்த் தேசிகன்
தன்னையறி வித்துத் தற்பர மாகி

யென்னுளத் திருந்தரு ளேக நாயக
னடிமுடி யில்லா வரும்பொரு டனக்கு
முடியடி யிதுவென மொழிந்திடு முதல்வன்
மெய்யலான் மற்றவை மெய்யல வெல்லாம்
பொய்யென வறியெனப் புன்னகை புரிந்தோ
னருளும் பொருளு மபேதமா யிருந்து
மிருதிற னென்னு மியலுமுண் டென்றே
னருளுனக் குண்டே லருளும் வெளிப்படும்
பொருண்மயந் தானே பொருந்துமென் றுரைத்தோன்
சத்தசத் திரண்டு தன்மையுந் தானே
யொத்தலாற் சதசத் துனக்கென வுரைத்தோ
ணுணவ மருவிடி னருளுறு தென்னக்
காணரு நேர்மையாற் காணவே யுரைத்தோன்
சென்மமுள் ளளவுந் தீரா திழுக்கும்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ள
லுளதில தெனவு முறுதலான் மாயை
வளமிள தெனவும் வகுத்தினி துரைத்தோ
னில்லறத் திருந்து மிதய மடக்கிய
வல்லவன் றானே மகாயோகி யென்றோன்
துறவறத் திருந்துஞ் சூழ்மனக் குரங்கொன்
றறவகை யறியா னஞ்ஞானி யென்றோ
னிறவா மனந்தா னிறக்க வுணர்த்திப்
பிறவா வரந்தரும் பேரறி வாள
னத்தன தருளா லனைத்தையு மியக்குஞ்
சுத்தமா மாயையின் றோற்றமென் றுரைத்தோ
னிருண்மல மகல விசைந்தி லழுத்தும்
பொருளருட் டிரோதைப் பொற்பெனப் புகன்றோன்
வீறு சிவமுதல் விளப்பிய படியே
யாறு மனுதியென் றறிஞருக் குரைப்போன்
கொல்லா விரதங் குவலயத் தோர்க்க
ளெல்லாம் பெறுமினென் றியம்பிய தயாநிதி
தருமமுந் தானமுந் தவமும் புரிபவர்க்
குரிமையா யவரோ டுறவு கலப்பவன்
றன்னுயிர் போலத் தரணியின் மருவிய
மன்னுயி ரனைத்தையும் வளர்த்திடும் வேந்தன்
களவுஞ் சனைகள்செய் கருமிக டமக்குந்

தெளிவுவர் துறவருள் செய்திடுந் திறத்தோன்
தான்பெறும் பேறு சகமெலாம் பெறவே
வான்பெருங் கருணை வழங்கிய மாரி
தஞ்சமென் றடைந்த தாபதர் தம்மை
யஞ்சலென் றருளு மறிஞர் சிகாமணி
சிவகோ டிகளுஞ் சித்தர்கோ டிகளும்
யாவரும் புகழ யாவையு முணர்ந்தோன்
யானென தென்ற விறைவனெம் பெருமான்
றானவ னாகிய தலைவனெங் கோமா
னருண கிரியார்க் காறு முகன்சொலும்
பொருணல மல்லது பொருளென மதியான்
பூத முதலாப் பொலிந்திடு நாத
பேதமுங் கடந்த பெருந்தகை மூர்த்தி
மூலா தாரமும் முதலா யுள்ள
மேலா தாரமும் வெறுவெளி கண்டவன்
மண்டல மூன்றினு மன்னிய வுருவினுங்
கண்டவை யத்திலுங் கடவுளாய் நின்றோன்
பகர்சம யந்தொறும் பரமே யிருந்து
சுகநடம் புரியுந் தொழிலெனச் சொன்னோன்
பேதவ பேத பேதா பேத
போத மிதுவெனப் புகன்றிடும் புண்ணிய
னதுநா னெனவே யாற்றிடு மனுபவஞ்
சதுர்வே தாந்தத் தன்மையென் றுரைத்தோ
னல்லும் பகலு மறிவா ரோர்க்குச்
சொல்லும் பொருளுஞ் சுமையெனச் சொன்னோன்
சுதனே குருவாஞ் சுவாமிநா யகற்கெனி
னதிக மெய்ஞ்ஞான மல்லவோ வென்றோ
னேசயோ கத்துரு நிருபரெல் லாந்தொழு
மிராஜயோ கத்திறை யிராஜயோ கத்தான்
பொறுமை தெளிவு புனித வாசார
மறுவிலா வண்மை வார மியற்கை
தண்ணமர் சாந்தத் தயங்கிய கீர்த்தி
யெண்ணென் கலைபயி லிணையிலாக் கல்வி
நல்ல விரக்க நடுநிலை சத்திய
மில்லை யென்னு மெலவர்க்குந் தருங்கொடை
நற்குண னெல்லா நண்ணிய பெருந்தகை

சிற்குண வாரி திருவருட் செல்வன்
கரமே லெடுத்துக் கருத்துற வணங்கிப்
பரமே யுனக்குப் பரமெனப் பகர்ந்தோ
ஞலடி மேவு மாசினை யடுத்தே
சீல்மெய்ஞ் ஞானந் தெளிந்தன னென்னவுஞ்
சித்த மௌனி திடசித்த மாக
வைத்த நிலையின் வளர்ந்தன னெனவு
மூலன் மரபின் முளைத்த மௌனிதன்
பாலன்யா னெனவும் பரிவொடும் பகர்ந்தோன்
வடமொழி யியற்கையின் மகிமையை யுணர்ந்து
திடமுற முப்பொருட் டிறத்தையுந் தெளிந்து
கண்டமு தென்னக் கனிசர மென்னத்
தண்டமிழ் மாரி தன்னைப் பொழிந்து
சித்தியு முத்தியுஞ் சிறந்தருள் கொழிக்கு
நித்திய நிரஞ்சன நிராலம்ப நிறைவைப்
பாடியு நாடியும் பணிந்தெழுந் தன்பா
லாடியு மரற்றியு மகங்குழை வெய்தியு
முடலங் குழைய வுரோமஞ் சிலிர்ப்ப
படபடென் றுள்ளம் பதைத்துப் பதைத்துப்
பாங்குறு நெட்டுயிர்ப் பாகிப் பரதவித்
தேங்கி யேங்கி யிரங்கி யிரங்கி
யோய்ந்த பம்பரம்போ லொடுங்கியே சிறிது
மேய்ந்த விழிக ளிமைப்பது மின்றிச்
சோர்ந்து சோர்ந்து துவண்டு துவண்டுமெய்
யார்ந்த வன்போ டவசமுற் றடிக்கடி
யுண்ணடுக் குறவே யுருகியே சற்றுத்
தண்ணம[illegible] மொழியுந் தழுதழுத் திடவே
யுள்ளும் புறம்பு மொருமித் துருகி
வெள்ள நீர்போல் விழிநீர் பெருக்கிக்
கன்று பசுவைக் கருதிக் கதறிச்
சென்றுசென் றோடித் திகைப்பது போல
வென்புநெக் குடைய விருகரங் குவித்துப்
புன்புலால் யாக்கை பொருந்தா தினியென
வுணர்ந்துணர்ந் தன்பா யுவகையேற் கொண்டினிக்
கணம்பிரி யேனெனக் கருதியே குறித்துத்
திருவுரு வெல்லாந் திருநீ றிலங்க

விருகர நளின மியன்முடி குவித்துப்
பூரண சந்திரன் போலொளி காட்டுங்
காரண வதனங் கவின்குறு வெயர்வுற
விளநிலா வெனவே யிலங்கிய சிறுநகை
தளதள வென்னத் தயங்கி யெழில்பெற
வித்தன்மை யெல்லா மிசைந்து மிவனருள்
சித்தெனச் சிவகதி தேர்ந்தவ ருரைப்பப்
பாத்திர மாடப் பரிவுட னுடிச்
சாத்திரங் காட்டித் தயவுசெய் தருளும்
வல்லவ னெனவே மன்னுயிர்க் காக
வெல்லையி லன்ப னிவனென விளங்கி
யீனவுலகத் தியற்கை பொய் யென்றே
ஞானநூன் மெய்யென நவின்றினி திரங்கிக்
கேவல சகலங் கீழ்ப்பட மேலாய்
மேவருஞ் சுத்த மெய்யினை நல்க
வருளே யுருவுகொண் டவனியில் வந்த
பொருளே யிவனெனப் பொலிந்திடும் புனிதன்
சைவஞ் சிவனுடன் சம்பந்த மென்பது
மெய்வளர் ஞானம் விளக்குமென் றிசைத்தோன்
கதிர்விழி யொளியுறக் கலத்தல்சித் தாந்த
விதிமுறை யாமென விளம்பிய மேலோன்
முடிவினி லாகம முறைமையி னுண்மையை
யடியரைக் குறித்துரைத் தருளிய வண்ணல்
சிதம்பர நேர்மை திறமா வுரைத்திறை
பதம்பர வெனப்பகர் பரமமெய்ஞ் ஞானி
முத்திபஞ் சாக்கர முறைமையி லயிக்கியஞ்
சத்திய மிதுவெனச் சார்ந்தவர்க் குரைத்தோ
னஞ்செழுத் துள்ளே யனைத்தையுங் காட்டியென்
னெஞ்செழுத் தியகுரு நீதி மாதவ
னெல்லா நிறைந்த விறைவன் செயலெனக்
கல்லா வெனக்குங் கருணைசெய் கடவுள்
குருவரு ளாலே கூடுவ தல்லாற்
றிருவரு ளுறுதெனத் தெரிந்திட வுரைத்தோன்
குருவுரு வருளெனக் கொண்டபின் குறையாப்
பொருண்மய மாமெனப் புகன்றிடு போத
னெந்தமூர்த் திகளையு மெழிற்குரு வடிவெனச்

சிந்தையிற் றியக்கறத் தேர்ந்தவர்க் குறைத்தோன்
சதாசிவ மென்றபேர் தான்படைத் ததுதா
னதாவதே பொருளென் றெடுத்தெடுத் துரைத்தோன்
கல்லானை கன்னல் கவர்ந்திடச் செய்தவ
னெல்லாம் வல்லசித் தெம்மிறை யென்றே
னெவ்வுயிர் தோறு மிறைமே வியதிறஞ்
செவ்விய பிரம்படி செப்பிடு மென்றே
னெவ்வண் மெவரெவ ரிசைத்தன ரவரவர்க்
கவ்வண மாவனெம் மானென வறைந்தோ
னொருபாண னுக்கே யொருசிவ னட்படின்
வருமடி யார்திறம் வழுத்தொணா தென்றோன்
சிவனடி யாரைச் சிவனெனக் காண்பவ
னெவனவன் சிவனே யென்றெடுத் துரைத்தோன்
விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்
கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோ
னிருசொல் லுரையா தியானின்ப மெய்த
வொருசொல் லுரைத்த வுயர்குண பூதர
னத்துவா மார்க்க மாறையு மகற்றித்
தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன்
றிருமகண் மருவிய திகழ்வள மறைசையில்
வருளுணர் வாளன் மருளிலா மனத்தா
னெண்ணிய வெண்ணமெல் லாந்தெரிந் தெனக்குத்
தண்ணருள் செய்தவன் குருவு மானவ
னொருமொழி பகர்ந்த வுதவியா லவன்ற
னிருபத முப்போ திறைஞ்சிவாழ்த் துவனே.

முற்றிற்று.

உ

சிவமயம்.

## தாயுமான சுவாமிகள்.

# திருப்பாடலகராதி.